



# கம்ப மலர்



கில இலங்கைக் கம்பன் கழகம் 15ஆம் ஆண்டு நிறைவு மலர்; 1980-1995

*" உருப்பளிங்கு போல்வாள் எம் உள்ளத்தினுள்ளே
இருப்பளிங்கு வாராதிடர்"*



எண்ணிய சகாத்த மெண்ணூற் றேழின் மேல் சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்ப நாடன்
பண்ணிய இராம காதை பங்குனி அத்த நாளில்
கண்ணிய அரங்கர் முன்னே கவியரங் கேற்றி னானே!

உம்பரோடு இம்பர்காறும், உலகம் ஓர் ஏழும் ஏழும்,
'எம் பெருமான்' என்று ஏத்தி, இறைஞ்சி நின்று, ஏவல் செய்ய,
தம்பியரோடும், தானும், தருமமும், தரணி காத்தான்
அம்பரத்து அனந்தர் நீங்கி, அயோத்தியில் வந்த வள்ளல்.



திரு. க. சிவராமலிங்கம், அமரர் இ. மகாதேவன் (தேவன் - யாழ்ப்பாணம்), வித்துவான் சி. ஆறுமுகம், வித்துவான் க. ந. வேலன்.



கம்பன் கழகங்களின்
பிதாமகர், அமரர் கம்பனடிப்பொடி
சா. க.கணேசன். காரைக்குடி



கம்ப கலாநிதி'
அமரர் பேராசிரியர்
இரா. இராதாகிருஷ்ணன். திருச்சி



'கம்ப வாணர்'
அமரர். புலவர் அ. அருணகிரி
பாண்டிச்சேரி.



வித்துவசிரோமணி பிரம்மஸ்ரீ சி. கணேசையரவர்களின் தலைமாணாக்கர்,
பேராசான், இலக்கண வித்தகர். இ. நமசிவாய தேசிகர் அவர்கள்

# சமர்ப்பணம்

எமை வாழ்விக்கும் தெய்வங்கள்,

திரு. க. சிவராமலிங்கம் (B.A.Madras)
வித்துவான். க.ந.வேலன்
அமரர். வித்துவான். சி. ஆறுமுகம்
அமரர். இ. மகாதேவா (தேவன் யாழ்ப்பாணம்)
அமரர். 'கம்பனடிப்பொடி' சா. கணேசன்
அமரர். 'கம்பகலாநிதி' பேராசிரியர்
இரா. இராதாகிருஷ்ணன்
அமரர். 'கம்பவாணர்', புலவர் அ. அருணகிரி
பேராசான், இலக்கணவித்தகர். இ. நமசிவாய தேசிகர்

**ஆகியோர் திருவடிகளுக்கு
இம்மலரைக்**

**காணிக்கையாக்குகிறோம்**



# பதினைந்து ஆண்டுகளாய்ப் பாரம் சுமந்தவர்கள்



| | | |
|---|---|---|
| தி.திருநத்தகுமார்<br>தலைவர் | க. குமாரதாசன்<br>செயலர் | Dr. கு. ஸ்ரீஇரத்தினகுமார்<br>பொருளாளர் |

# இனிச் சுமக்கும் இளவல்கள்



| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ.பிரசாந்தன்<br>அமைப்பாளர் | த.ஜெயசிலன்<br>பொருளாளர் | ச.மணிமாறன்<br>செயலர் | த. சிவசங்கர்<br>தலைவர் |

# தலைவரின் செய்தி



"அலகிலா விளையாட்டுடையார், அவர் தலைவர்"
படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலையும் செய்யும்
கடவுளைத் தலைவன் என்றான் கம்பன்.
அக் கம்பன் பெயரால் கழகம் அமைத்த நாளை எண்ணிப் பார்க்கிறேன்.
இடம்– தனியார் கல்வி நிறுவனம். பாடம்– இரசாயனம்.
ஏலவே, இராமாயணம் பிடித்துப்போனதால் இரசாயனம் பிடிக்காமற்போயிற்று.
அதனால், மூலகங்களை விட்டுக் கம்பனின் மூலங்களை ஆராய்வது வழக்கமாயிற்று.
ஒரு நாள் உறுதியாய் முடிவு செய்தோம் படிப்பதாய் அல்ல, கம்பனைப்பிடிப்பதாய்.
"கம்பன் கழகம் ஆரம்பிப்போம்"
நண்பர் கூட்டத்தில் ஜெயராஜ் கூற்று ஒருமித்து அங்கீகரிக்கப்பட்டது.
கழகம் என்றால் தலைவன் வேண்டுமே
"யார் தலைவன்? கேள்வி பிறக்கிறது.
"ஏன் எனக்குத் தகுதியில்லையா?" நானே என்னைப் பிரேரிக்கிறேன்.
சற்று நேரம் மௌனம்.
"சரி இருந்து விட்டுப் போ"– இது ஜெயராஜ்.
மற்றவர்களிடமும் மறுப்பில்லை– என்று தான் இருந்தது? நான் தலைவனானேன்.
முத் தொழிலை முழுமையாகச் செய்யும் கடவுளும் தலைவன்.
எத்தொழிலையும் முழுமையாய்ச் செய்ய இயலாத நானும் தலைவன்.
அந்தத் தலைவனும் அலகிலா விளையாட்டுடையவன். இந்தத் தலைவனும்.........?
விளையாட்டிரண்டினதும் வேற்றுமையை எண்ண "விளையாட்டின்" விளையாட்டு வியப்படைய வைக்கிறது.
அவ்விளையாட்டைத் தொடங்கி, பதினைந்து ஆண்டுகள் நிறைவுற்றதாம். மீண்டும் வியப்பு.
இப்பதினைந்தாண்டு கழக வளர்ச்சியை நினைக்க.......... பெருமிதமாய் இருக்கிறது.
இத்தனை பெருமையும் எப்படிச் சாத்தியமாயிற்று?
கூடினோம், குதூகலித்தோம், மோதினோம், முரண்பட்டோம்.
ஆனாலும், இத்தனை உணர்ச்சிகளினதும் ஊடுபொருளாய் அன்பு இருந்தது.
அதனால் நம் நட்பு இளகுவதற்குப் பதிலாய் இறுகிற்று.
'அகனமர் காதலால்' ஐந்தாய் ஆறாய் அளவற்று விரிந்தது.
கழகம் குடும்பமாயிற்று. நாங்கள் உறவானோம்.
அதனால், ஊடலும் கூடலும் உயர்வுக்கே வழி செய்தன.
மற்றவர் பெருமையைத் தன் பெருமையாய்க் கருத அனைவரும் பழகிக்கொண்டோம்.
வெற்றி வந்த போது எல்லோரும் பெருமிதம் கொண்டோம். தோல்விக்கு எல்லோரும் வருந்தினோம்.
இரண்டுமே பழகிப் போயிற்று.
வெற்றி ஆணவத்திற்குப் பதிலாய் நிதானம் தந்தது.
தோல்வி சோர்வுக்குப் பதிலாய் ஊக்கம் தந்தது.
நல்லோர் நமைச்சூழ்ந்து நயன் தூக்கினர்.
தெய்வம் நிழல் செய்தது.
பதினைந்தாண்டுகள் நின்றோம்– வென்றோம்.
இன்று புதல்வராலும் பொலியும் நிலை.
"சுமையை இனி நம்மிடம் கொடுங்கள்"– பலத்தோடு இளைய தலைமுறை தோள்தட்டிக் கேட்கிறது.
இதைவிட என்ன வேண்டும்?
"ஒன்று பட்டால் உண்டு வாழ்வு"– இது கம்பனோடு, கழகமும் கற்றுத்தந்த பாடம்.
நமக்குத் துணை நின்றாற் போல் இவ்விளைய தலைமுறைக்குந் துணை நில்லுங்கள்.
உங்கள் திருவடிகளில் விண்ணப்பிக்கிறேன்.
உணர்ச்சிகள் நீண்டதால் உரையும் நீண்டு விட்டது.
விடைபெறட்டுமா?
"இன்பமே எந்நாளுந் துன்பமில்லை"

*தங்களன்பன்,*
*தி. திருநந்தகுமார்.*
தலைவர், அகில இலங்கைக் கம்பன் கழகம்.

# செயலாளரின் செய்தி



பெரியோர்களுக்கு,
என் வணக்கம்.
நேற்றுப் போல் இருக்கிறது,
கம்பன் கழகத்தை ஆரம்பித்தது.
15 ஆண்டுகள் பறந்து விட்டன.
விளையாடித் திரிந்த நாங்கள்
கம்பன் கழகத்தை அமைத்தபோது
"உங்களுக்குக் கம்பனைப் பற்றி என்ன தெரியும்?"
என வித்துவான் ஆறுமுகம் அவர்கள் கேட்டது இப்போதும் என் காதில் ஒலிக்கிறது.
கம்பன் கழகச் செயலர் பதவி என்னிடம்.
காரைக்குடியில் கம்பனடிப்பொடி சா. கணேசனவர்கள் செயலர்;
புதுச்சேரியில் கம்பவாணர் அருணகிரி அவர்கள் செயலர்;
திருச்சியில் கம்பகலாநிதி இரா. இராதாகிருஷ்ணன் அவர்கள் செயலர்;
இங்கு நான் செயலர்.
ஆன்றோர் வரிசையிலே நானும். – எனக்கே சிரிப்பாக இருக்கிறது.
நல்லார் இணக்கம் தந்த நற்பயன்.
பெரியவர்களை வணங்கியதால் வந்த பேறு.
கழக வரலாற்றில் எனக்கும் ஒரு முக்கிய இடம் என எண்ணும் போது
பெருமையாய் இருக்கிறது.
எம்மை நல்வழிப்படுத்திய பெரியோரை வணங்குகிறேன்.
கம்பனை வாழ்விக்க நாம்யார்.
கம்பனல்லவா நம்மை வாழ்விக்கிறான்.
நீங்கள் காட்டிய அன்பும் ஆதரவும், எம்மைப் பலசாலிகளாக்கி, கல்லும் முள்ளும் நிறைந்த இந்தப் பதினைந்தாண்டுப் பாதையை ராஜநடை போட்டுக் கடக்க வைத்தன; வைக்கும்.
நன்றியைச் செயலிற் காட்டுவோம்.
தங்கள் அன்பு என்றும் நின்று நிலைக்கப் பிரார்த்திக்கிறேன்.
வேறென்ன?
வணக்கம்.!

**க. குமாரதாசன்**
செயலாளர்,
அகில இலங்கைக் கம்பன் கழகம்

# பொருளாளரின் செய்தி



வணக்கம்,

நான் அதிர்ஷ்டசாலி;

தமிழரின் சொத்தான கம்பனின், சொத்துக்களைப்
பேணும் பெரும்பாக்கியம் எனக்குக் கிடைத்ததால்.
இந்த "அன்னையின் மடியில் தவழ்ந்த பேற்றினாற்
கிடைத்த பேறு இது."

கல்லூரி நட்பால் கம்பனின் தொண்டு கைவந்தது.

நான் கம்பனைக் கற்றவனல் லன், ஆனாற் காதலிப்பவன்.

நாம் விளையாட்டாய்த் தொடங்கிய பணி இன்று விருட்சமாய் விரிந்து நிற்கிறது.
இவ் விருட்சத்தின் வேர்களில் ஒன்றாய் நானும் கருதப்படுகிறேன் என்றால் அது என் முன்வினைப் பயன்.

கம்பனுக்குச் சடையப்ப வள்ளல் வாய்த்தாற்போல் நம்கழகத்திற்கும்
பெருவள்ளல் திரு. குமி. மா. தவயோகராஜா அவர்கள் வாய்த்ததனால்
என் பணி மிகச்சுலபமாயிற்று.

உள்ளத்தால் ஓங்கிய அவ்வொப்புரவாளரை உள்ளளவும் நினைப்போம்.
அவர் நன்மைக்காய் என்றும் நாம் வணங்கி நிற்கின்றோம்.
முன் இப்பொருளாளர்ப் பதவியை வகித்து எனக்கு வழிவிட்ட நண்பன் மாணிக்கவாசகரை
இவ்வேளை நன்றியோடு நினைக்கிறேன்.

கம்பன் பணிக்காக இதுவரை,

பொற்குவை ஈந்தோர்
காசுகள் தந்தோர்
வாய்ச்சொல் அருளினோர்
அனைவரையும் வணங்குகிறேன்.

கை கொடுத்து எம்மைத் தலை நிமிர்த்தினீர்கள்.
பயன் தூக்காது செய்த உதவியின் நயன் தூக்க நானார்?
நன்றி!

கு. ஸ்ரீ இரத்தினகுமார்
பொருளாளர்,
அகில இலங்கைக் கம்பன் கழகம்

# பதிப்புரை



இராமகதையை என்றுமுள தென்தமிழில் இயம்பிஇசை கொண்டவன் கம்பன். அவன் தன்புகழைத் தமிழின் புகழாக்கியவன். இன, மத பேதங்கடந்து 'உலகம் யாவையும்' உளம் கொண்டு பாடியவன்; அதனால் உலகை வென்றவன். இலங்கை மட்டும் என்ன விதிலக்கா?

கம்பராமாயணத்தை இரசிக்கின்றதொரு புலமைப் பாரம்பரியம் இந்த இலங்கை மண்ணுக்கு உண்டு. முன்னைக்காலத்தில் அரசகேசரி, வித்துவசிரோமணி முதலானோரூடு அது புலப்பட்டது; பின்னைக் காலத்தில் பண்டிதமணி முதலானோரிடத்தில். இன்று அது எல்லையற்று விரிகிறது.

அத்தகைய அந்தப் புலமைப் பாரம்பரியத்தின் திரட்சிதான் அகில இலங்கைக் கம்பன் கழகம். அதற்கும் வயது பதினைந்தாகிவிட்டது.

அந்த மகிழ்ச்சியில் விரிகிறது இந்த மலர்.

இன்றுதான் மலரினும், இது ஐந்தாண்டுகளுக்கு முன்னரே அரும்பி விட்டது – கழகத்தின் பத்தாண்டு நிறைவின் நிமித்தம். பேராசிரியர் சண்முகதாஸ் தலைமையில் நிறுவப்பட்ட மலர்க்குழுவின் பணியில் அரும்பி, முகையாகி, போதாகி, மலரத்தயாரான போதிலும் அன்றைய சூழ்நிலை அதற்கு இடந்தரவில்லை. இன்று தான் போது விரிதற்குரிய பொழுது வந்தது போலும்!

ஆறுதலாய் மலர்ந்தாலும் அழகாய் மலர்ந்திருக்கிறது, ஆறு இதழ்களோடும் அவற்றுட் பொதிந்து நிறைதேன் பிலிற்றும் கந்த மகரந்தங்களோடும்.

நயப்பியல், ஆய்வியல், ஒப்பியல், கவியியல், ஆக்கவியல், பதிவியல் என்பன இக்கம்பமலரின் ஆறு இதழ்கள்– கம்பராமாயணத்துக் காண்டங்கள் போல. இந்த ஒப்புமை தெய்வாதீனம்!

கம்பனை நயந்து எழுதிய கட்டுரைகள் கொண்ட நயப்பியல் ஏனையவற்றிலும் பெரிது – கம்பனை நயப்போர் தொகை போல. ஆய்வியலில் உள்ளவை, ஆய்வு ரீதியானவை. ஒப்பியலில் இருப்பவை கம்பனோடு பிற புலவரை ஒப்பிட்டு நோக்கியவை. அவையும் ஒரு வகையில் ஆய்வேனும் சிறப்பு வகையால் தனியே தொகுக்கப்பட்டன. அவ்வாறே நயப்பியற் கட்டுரைகளிலும் ஆய்வு நோக்கு இருக்கும். ஆய்வியற் கட்டுரையிலும் நயப்பு இயல்பு இருக்கும். அவ்வவற்றின் 'மிகைநாடி'ப் பகுத்தோம். பிறவும் அவ்வாறே.

கவி இயலில் உள்ளவை, பழைய புதிய கவிஞர்களின் படைப்புக்கள் – கம்பன் சம்பந்தமானவை. மிகப்பழைய இதிகாசமான இராமாயணம் மிகப்புதிய சிந்தனைகளுக்கும் இடமளிப்பது. பல எழுத்தாளர்களதும் கவிஞர்களதும் ஆக்கங்கள் இராமாயணத் தளத்தில் எழுந்துள்ளன – வேறு வேறு தன்மைகளோடு. வகைமாதிரிக்குச் சிலவற்றை 'ஆக்கஇய'லாய்த் தந்துள்ளோம். பதிவியல்ஒன்றே கழகம் சம்பந்தமானது. கழகவரலாற்றுப் பதிவாய் அது அமையும்.

இம்மலரில் உள்ள ஆக்கங்கள் சில வேறு வேறு நூல்களிலிருந்தும்,சஞ்சிகைகளிலிருந்தும் தொகுக்கப்பட்டன. ஏனையவை இதற்கென்றே எழுதப்பட்டவை.

ஐந்து ஆண்டுகளுக்கு முன்னே எழுதியவர் சிலர் இன்று அமரராயும்விட்டனர்; அவர்க்கு எம் அஞ்சலிகள்!

ஆக்கங்களைத் தொகுக்கும் பணியைத் தலைமேற் கொண்டு செய்து முடித்தவர் கல்வயற் கவிஞர். அச்சுப் பணியின் போதும் பிரதிகளை ஒப்பு நோக்கித்துணை செய்தார். அப்பணியில் கூடநின்றவர் பண்டிதர் மன்னவன் கந்தப்பு, செல்வன் என். சசிகரன்.

மலரின் அழகுக்கு அழகுசேர்ப்பது அதன்புற இதழ், அமைத்து உதவியவர் திரு. ஞானம். திருவாளர்கள் க. சிவஞானம், பூ. ஸ்ரீதர்சிங் ஆகியோர் உதவிகள் காலத்தாற் செய்தவை. அவ்வாறே இம்மலரை அச்சேற்றித் தந்த யுனி ஆட்ஸ் நிறுவன உரிமையாளர் திரு. பொன். விமலேந்திரனும். அவர் தம் முகமலர்ச்சியில் மலர்ந்தது இம்மலர். இவர் எல்லாம் கம்பன் குடும்பத்தார்; இவர்க்கு நன்றி சொல்ல நான் ஆர்?

மலர்ப்பணியைத் தம்பணியாய்க் கருதிச் செய்த அச்சக ஊழியர்க்கு என்றும் எம் அன்பும் நன்றியும்!

புற இதழை அலங்கரிக்கும் சித்திரம் ஓவியச்செல்வர் மணியன் செல்வனுடைய கைவண்ணம்; அவர்க்கு எம் விநயமும் நன்றியும்!

ஆக்கங்கள் தந்தோர், அரும்பொருள் தந்தோர், அனைவர்க்கும் நன்றிகள்!

க. இரகுபரன்
பதிப்பாசிரியர்.

# தொகுப்பாசிரியர் உரை



தமிழ் இலக்கிய வரலாற்றிலே சோழர் காலத்தைப் பொற்காலம் என்பர் ஆய்வாளர். அக்காலத்துள் தங்கக் கலசமா, தந்தக் கோபுரமா எனத் தடுமாறுமாறு அழகு நலன் விளங்க இராமாயணத்தைத் தமிழிலே தந்தவன் கம்பன். இந்தக் கவிதாமேதையின் செழுமை மிகு விழுமியங்கள் அவன்தந்த அழகொழுகு கவிதை களுக்குள் விளைந்த வண்ணமிருக்கின்றன. அந்த விளைவயல்களுள் ஒன்று தான் அகில இலங்கைக் கம்பன் கழகம்.

இவ்வாண்டு இவ்வயல் எம்மைப் பொறுத்தவரை அதீதவிளைச்சல் கண்டிருக்கிற தென்று சொல்லலாம் போலத்தோன்றுகிறது.

கடந்த பதினைந்து ஆண்டுகளாக இந்தக் கழக வயலைப் புழுதி பறக்க உழுது நிறக்க எருவிட்டுப்பண்படுத்தி மணி விளைச்சல் காண வியர்வை சிந்தி உழைத்த இளைஞர்கள் பல்வேறு தாக்கங்களையும் எதிர்கொண்டு பண்பட்ட சான்றோர் துணை தந்த அரவணைப்பால் தடைகளைத் தூக்கியெறிந்து செயலாற்றிவரும் செம்மை நலம் மெய் சிலிர்க்க வைக்கிறது. அவற்றையே பலமாகவும் ஏற்றுச் செழித்திருக்கிறது இந்தக் கழனி.

பதினைந்து ஆண்டுகளை நிறைவு செய்யும் இவ்வேளை இந்த மணிமலர் வேலையைப் பொறுப்பேற்றுத் தொகுக்கும் பணியைக் கழகம் சிறியேனிடம் ஒப்படைத்திருக்கின்றது. இவ்வரிய பாக்கியத்தை எனக்கு நல்கிய கழத்திற்கு எனது பணிவான நன்றியையும் மகிழ்ச்சியையும் யான் முதற் கண்தெரிவித்துக் கொள்கின்றேன்.

பல்வேறு துறைசார்ந்த அறிஞர் பெருமக்கள் ஆக்கங்கள் இம்மலரில் இடம் பெறுகின்றன. மானுடம் வென்ற மகத்துவத்தை இன்னும் எத்தனை கோடி காலம் எமது தலைமுறைகள் கற்றாலும் மேன்மேலும் பண்படுத்தக்கூடிய நன்மையையும் அறிவையும் தரவல்ல அறிவியல் விழுமியங்களையும் கூட கம்பன் இந்த இராமாயணத்தினுள்ளே பதுக்கியுள்ளான்.

இதனைத் தேடுவதும், தேடி எடுத்தவற்றை மக்களுக்குக் கொடுக்க முனைவதும் கூட ஒரு முடிவிலாத நீண்டபயணம். மானுடத்தை வாழவைக்க வேண்டிய நாளையபணிக்கு அணி செய்யும் மணிகளைச் சேர்த்துப் பயனை எல்லோரும் சேர்ந்து அனுபவிக்க ஆவன செய்யவேண்டியது முக்கிய கடமையே.

இம்மலரை அணி செய்யும் ஆக்கங்கள் கூட இதனையே மறைமுகமாகவோ – நேர்முகமாகவோ வற்புறுத்தி வழிப்படுத்துகின்றன எனலாம். செம்மைநலம் தரவல்ல சிந்தனைகள் என்றும் மனிதனுக்குத்தேவையே. கால வளர்ச்சிக்கேற்ற தேடலைக் கம்பன் இராமாயணத்தினூடாக நாம் எவ்வளவுக்கு முயன்று தேடுகின்றோமோ அவ்வளவுக்குப் பெற்றுக் கொள்ளத்தக்க முறையில்தந்துள்ளான் என்பதற்கு இம்மலர் சான்றுபகரும்.

***வணக்கம்***

*கல்வயல் வே. குமாரசாமி*

# இம்மலரை மலரச் செய்தோர்



**திரு. ஈ. சரவணபவன்**
உதயன் நிறுவனம், யாழ்ப்பாணம்.

**திரு. பூ. ஸ்ரீதரசிங்**
பூபாலசிங்கம் புத்தகசாலை,கொழும்பு. 11

**திரு. பூ. ராஜன்**
பூபாலசிங்கம் புத்தகசாலை, யாழ்ப்பாணம்.

**திரு. ம. சந்திரபோஸ்**
"போஸ்கோ", யாழ்ப்பாணம்.

**திரு. அ. நாகரத்தினம்**
குகன் ஸ்ருடியோ, பருத்தித்துறை

**திரு. க. சிவஞானம்**
பூரணி ஜுவலர்ஸ், கொழும்பு.

**திரு. ப. தயாபரன்**
சிவசக்தி ஸ்ரோர்ஸ், நெல்லியடி.

**திரு. K. மனோகரரூபன்**
மனோகரன் & வெற்றிவேல் என்ஜினியர்ஸ் & கொன்றாக்டர்ஸ்.

**திரு. இ. பாலசுந்தரம்**
பாமினி என்ஜினியறிங் & கொன்றாக்டர்ஸ், யாழ்ப்பாணம்.

**திரு. ஆ. ஜீவரத்தினம்**
'ஆறுமுகம் சிற்பாலயம்', திருநெல்வேலி.

**திரு. கா. மு. இ. தர்மராஜா**
கலட்டி, யாழ்ப்பாணம்

**திரு. சி. தியாகராஜா**
S.T.R. பிலிம்ஸ், கொழும்பு.

**திரு. S. சோதிநாதன்**
ஓசானிக் இம்பெக்ஸ் கொழும்பு. 11

**திரு. இ. திருவாதிரை**
திருப்பதி ஸ்ரோர்ஸ், கொழும்பு.

**திரு. V.K. ராஜரட்ணம்**
ஏ.மு. ராஜரட்ணம் & சன்ஸ், கொழும்பு/யாழ்ப்பாணம்.

**திரு. S. சிவகுமாரன்**
TEXCO நிறுவனம், கொழும்பு

**திரு. ஈ. மயூரநாதன்**
ஞானா ரேட் சென்டர், கொழும்பு.

**திரு. S. ஞானா**
B+G நிறுவனம், கொழும்பு.

**திரு. புஷ்பயோகேந்திரன்**
வெங்கடேஸ்வரா & கோ கொழும்பு.11



# நுழைவாயில்

கம்பன்.

அவன் தமிழர்களுக்குக் கிடைத்த அட்சய பாத்திரம்.

அள்ளி அள்ளி நம்முன்னோர்கள் தேவைக்கதிகமாக எடுத்த பின்பும் நமக்கும் புதிதாகத் தருகிறான்.

அவன் நம் இனம் செய்த தவம்.

விடுவிக்க விடுவிக்க எல்லையின்றி விரிந்து வியப்புத் தருவது கம்ப சூத்திரம்.

கம்பக் கடலில் எத்தனை எடுத்தாலும் முத்துக்கள் முடிவதில்லை.

'கல்வியிற் பெரியன் கம்பன்' - ஆம், வள்ளுவன் போன்ற தெய்வப் புலவரைப் பார்த்த பின்பும் கம்பன் பற்றிய நம் முன்னோரின் கணிப்பு இது.

கம்பனைக் கற்கக் கற்க, இவ்வார்த்தையின் உண்மை வானளவு விரிவதைக் காணலாம்.

எத்துணை ஆழமாகப் போனாலும் அதனினும் ஆழங்காட்டி நம்மனோர்க்கு அறிவின் எல்லையாய்க்காட்சி தருகிறான் கம்பக் கவி.

தனக்குக் காலத்தால் ம்ந்தியபிந்திய புலவர்களின் கருத்துக்களைத்

தன் காவியத்துள் அடக்கிக் காலங் கடந்து நிற்கிறான் கம்பக் கடவுள்.

அவனை மதவாதியாக, வர்க்கசார்பாளனாக, இன்னும் பலவாக இனங்கண்டு குறைசொல்பவர்களும் இல்லாமலில்லை.

குடையால் தம்மை மறைத்து, சூரியன் தம்குடைக்குள் அடக்கமெனக் கூறிக் குதூகலிக்கும் பேதைமையாளர் செயல் கண்டு நாணி நகைத்து நிற்பர் அறிவோர்.

கடவுளை மறுக்கவே ஆளிருக்கும் இவ்வுலகில் கம்பனை மறுக்கவா ஆளிராது?

தம் சொத்தைப் பேணாத அவர்தம் பேதைமைத் தொழில் கண்டு வீணாக வருந்திப் பயனில்லை.

இருளோடு மோதுவதை விட வெளிச்சத்தை வெளிக்கொணர்வது நன்றல்லவா?

நம் தமிழ்ச்சாதி, அணையாத கம்பவிளக்கை யார்சொல்லியும் கைவிடப் போவதில்லை.

கம்பனைப் போற்றுவதாவது கல்வியைப் போற்றுவதே.

கம்பனைப் போற்றுவதாவது கவிதையைப் போற்றுவதே.

நம் இனம் பொலியப் போற்றுவோம்.

கம்பன் வாழ்க, கம்பன் புகழ் வாழ்க, கன்னித் தமிழ் வாழ்க.

*- அகில இலங்கைக் கம்பன் கழகத்தார்*

ஞானம். சங்கானை.

# எதனை விரும்புகிறோமோ அது தோன்றுகிறது

தமிழ்நாட்டு வீரர்களுக்கும் கவிகளுக்கும், லோகோபகாரிகளுக்கும் இதுவரை எவ்விதமான திருவிழாவையும் காணவில்லை. பூர்வீக மகான்களின் ஞாபகத்தைத் தீவிரமாக, பக்தியுடன் வளர்க்காத நாட்டில் புதிய மகான்கள் பிறக்க வழியில்லை.

தப்பித் தவறி ஓரிருவர் தோன்றினாலும் அவர்களுக்குத் தக்க மதிப்பு இராது. பண்டைக் காலத்து சக்திமான்களை வியப்பதும், அவர்களுடைய தொழிற்பெருமையை உலகறிய முழக்குவதும், கூடியவரை பின்பற்ற முயல்வதும் ஆகிய பழக்கமே இல்லாத ஜனங்கள் புதிய சக்திமான்களை என்ன வகையிலே கணிப்பார்கள்.

எதனை விரும்புகிறோமோ அது தோன்றுகிறது, எதை ஆதரிக்கிறோமோ அது வளர்ச்சி பெறுகிறது. பேணாத பண்டம் அழிந்துபோகும். பழக்கத்தில் இல்லாத திறமை இழந்துவிடப்படும். அறிவுடையோரையும், லோகோபகாரியையும், வீரரையும், கொண்டாடாத தேசத்தில் அறிவும், லோகோபகாரமும், வீரமும் மங்கிப்போகும். தமிழ்நாட்டில் இப்போது "புதிய உயிர்" தோன்றியிருப்பதால், நாம் இவ்விஷயத்தில் தமோ குணஞ் செலுத்தாமல் கம்பன், இளங்கோ, திருவள்ளுவர் முதலிய மகாகவிகளுக்கு ஞாபகச்சிலைகளும் வருஷோத்ஸவங்களும் ஏற்பாடு செய்ய வேண்டும்.

பண்டித சபைகளையும், பொதுஜன ஆரவாரங்களையும் கோலாஹலமாக நடத்தி எல்லா வர்ணத்தாரும் எல்லா மதஸ்தரும் சேர்ந்தால், சந்தோஷமும் அறிவுப் பயனும் உள்ள மாண்பும் பெற இடமுண்டாகும். மத பேதங்கள் பாராட்ட இடமில்லாத திருவிழாக்கள் தமிழ்நாட்டில் எவ்வளவு அவசியமென்பதை ஒவ்வொரு அறிவாளியும் எளிதாக ஊகித்துக் கொள்ளலாம்.

*– மகாகவி பாரதி*

# பாசுரப்படி இராமாயணம்

## "வியாக்கியான சக்கரவர்த்தி" பெரியவாச்சான்பிள்ளை

*ஆழ்வார் திருப்பாசுரங்களுக்கு வியாக்கியானஞ் செய்தவர்களுள் தலை சிறந்தவராகப் போற்றப்படுவர், ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை. அவர் 'வியாக்கியானச் சக்கரவர்த்தி'. ஆழ்வார் பாசுர அடிகளினாலேயே 'இராமகாதை' அமையுமாறு அவரால் ஆக்கப்பட்டதே இப்பாசுரப்படி இராமாயணம். அது இம்மலரின் முன்நின்று தெய்விகம் சேர்ப்பதாய் அமையட்டும் .*

திரு மடந்தை, மண் மடந்தை இருபாலும் திகழ,
நலம் அந்தம் இல்லது ஓர் நாட்டில்,
அந்தம் இல் பேரின்பத்து அடியரோடு, ஏழ் உலகும்
தனிக் கோல் செல்ல, வீற்றிருக்கும்,
அயர்வு அறும் அமரர்கள் அதிபதியான அணி ஆர்
பொழில் சூழ் அரங்க நகர் அப்பன்,
அலை நீர்க் கடலுள் அழுந்தும் நாவாய்போல் ஆவார் ஆர்
துணை என்று துளங்கும் நல் அமரர் துயர் தீர,
வல் அரக்கர் வாழ் இலங்கை பாழ்படுக்க எண்ணி; மண்
உலகத்தோர் உய்ய, அயோத்தி என்னும் அணி நகரத்து
வெங் கதிரோன் குலத்துக்கு ஓர் விளக்காய்;
கௌசலை தன் குல மதலையாய்; தயரதன்தன்
மகனாய்த்தோன்றி; குணம் திகழ் கொண்டல் ஆய்;
மந்திரம் கொள் மறை முனிவன் வேள்வி காக்க நடந்து
வந்து; தனை எதிர்த்த தாடகைதன் உரம் கீண்டு; வல்
அரக்கர் உயிர் உண்டு; கல்லைப் பெண் ஆக்கி;
கார் ஆர் திண் சிலை இறுத்து; மைதிலியை மணம்
புணர்ந்து; இரு பத்து ஒருகால் அரசு களை கட்டமழுவாளி
வெவ் வரி நல் சிலை வாங்கி வெற்றி கொண்டு,
அவன் தவத்தை முற்றும் செற்று; அம் பொன் நெடுமணி
மாட அயோத்தி எய்தி; அரி அணைமேல் மன்னன்
ஆவான் நிற்க:
கொங்கை வன் கூனி சொல் கொண்ட கொடிய கைகேயி
வரம் வேண்ட, அக்கடிய சொல் கேட்டு மலக்கிய மா
மனத்தனன் ஆய், மன்னவனும் மறாது ஒழிய,
குலக்குமரா! காடு உறையப்போ' என்று விடை கொடுப்ப,
இந் நிலத்தை வேண்டாது ஈன்று எடுத்த தாயரையும்,
இராச்சியமும் ஆங்கு ஒழிந்து;
மைவாய களிறு ஒழிந்து; மா ஒழிந்து; தேர் ஒழிந்து;
கலன் அணியாதே; காமர் எழில் விழல் உடுத்து;
அங்கங்கள் அழகு மாறி; மான் அமரும் மென் நோக்கி
வைதேவி இன் துணையா;
இளங்கோவும் வாளும் வில்லும் கொண்டு பின் செல்ல;
கலையும் கரியும் பரிமாவும் திரியும் கானம் கடந்து போய்;
பத்தி உடைக் குகன் கடத்த, கங்கைதன்னைக் கடந்து;
வனம் போய்ப் புக்கு; காயோடு நீடு கனி உண்டு;
வியன் கான மரத்தின் நீழல், கல் அணைமேல், கண்
துயின்று, சித்திரகூடத்து இருப்ப;
தயரதன் தான், 'நின் மகன் மேல் பழி விளைத்திட்டு,
என்னையும் நீள் வானில் போக்க, என் பெற்றாய்?
கைகேசி! நானும் வானகமே போகின்றேன்' என்று,
வான் ஏற, தேன் அமரும் பொழில் சாரல் சித்திரகூடத்து,
ஆனை, புரவி, தேரொடு, கால் ஆள் அணிகொண்ட
சேனை, சுமந்திரன், வசிட்டருடன் பரத நம்பி பணிய
தம்பிக்கு மரவடியை வான்பணையம் வைத்து;
குவலயத் துங்கக் கரியும், பரியும், இராச்சியமும் எங்கும்
பரதற்கு அருளி; விடை கொடுத்து;
திரு உடைய திசைக்கருமம் திருத்தப்போய்;
தண்டகாரணியம் புகுந்து:
மறை முனிவர்க்கு 'அஞ்சேல்மின்' என்று அருள்
கொடுத்து; வெங் கண் விறல் விராதன் உக, வில்
குனித்து; வண் தமிழ் மாமுனி கொடுத்த வரி வில் வாங்கி;
புலர்ந்து எழுந்த காமத்தால், சீதைக்கு நேர் ஆவன்'
என்ன, பொன் நிறம் கொண்ட சுடு சினத்த சூர்ப்பணகி
கொடி மூக்கும் காது இரண்டும்
கூர் ஆர்ந்த வாளால் ஈரா விடுத்து;
கரனோடு தூடணன் தன் உயிரை வாங்கி;
அவள் கதறி, தலையில் அம் கை வைத்து,
மலை இலங்கை ஓடிப் புக;
கொடுமையின் கடு விசை அரக்கன், அலை
மலிவேல்கணாளை அகல்விப்பான்,
ஓர் உரு ஆய மானை அமைத்து,
செங்கல் பொடிக்கூறை, சிற்றெயிற்று,

முற்றல் மூங்கில் மூன்று தண்டத்தன் ஆய், வஞ்சித்து, இலைக் குரம்பில் தனி இருப்பில் கனி வாய்த் திருவினைப் பிரித்து; நீள் கடல் சூழ் இலங்கையில் அரக்கர் குடிக்கு நஞ்சு ஆகக் கொண்டு போய்,
வம்பு உலாம் கடி காவில் சிறையா வைக்க;
அயோத்தியர் கோன் மாய மான் மாயச் செற்று;
அலை மலி வேல் கண்ணாளை அகன்று, தளர்வு எய்தி;
சடாயுவை வைகுந்தத்து ஏற்றி;
கங்குலும் பகலும் கண் துயில் இல்லாக் கானகம்படி உலாவி உலாவி; கணை ஒன்றினால் கவந்தனை மடித்து; சவரி தந்த கனி உவந்து:

வன மருவு கவி அரசன் காதல் கொண்டு; மரா மரம் ஏழ் எய்து; உருத்து எழு வாலி மார்பில் ஒரு கணை உருவ ஓட்டி; கருத்துடைத் தம்பிக்கு இன்பக் கதிர்முடி அரசு அளித்து; வானரக்கோனுடன் இருந்து, வைதேகி தனைத்தேட விடுத்த திசைக் கருமம் திருத்த, திறல் விளங்கு மாருதியும் மாயோன் தூது உரைத்தல் செப்ப:
சீர் ஆரும் திறல் அனுமன் மா கடலைக் கடந்து ஏறி, மும் மதில் நீள் இலங்கை புக்கு,
கடி காவில் வார் ஆரும் முலை மடவாள் வைதேவி தனைக் கண்டு, நின் அடியேன் விண்ணப்பம் கேட்டருளாய். அயோத்தி தனில் ஓர் இடவகையில் எல்லியம் போது இனிது இருத்தல்,
மல்லிகை மா மாலை கொண்டு அங்கு ஆர்த்ததும்;
கலக்கிய மா மனத்தனள் ஆய்க் கைகேசி வரம் வேண்ட, மலக்கிய மா மனத்தனன் ஆய் மன்னவனும் மறாது ஒழிய,
'குலக்குமரா! காடு உறையப்போ' என்று விடை கொடுப்ப, இலக்குமணன் தன்னொடும் அங்கு ஏகியதும்; கங்கை தன்னில் கூர் அந்த வேல் வலவன் குகனோடு சீர் அணிந்த தோழமை கொண்டதுவும்; சித்திரகூடத்து இருப்பப் பரதநம்பி பணிந்ததுவும்; சிறு காக்கை முலை தீண்டி மூவுலகும் திரிந்து ஓடி, 'வித்தகனே! இராமா! ஓ நின் அபயம்' என்ன, அத்திரமே அதன் கண்ணை அறுத்ததுவும்; பொன் ஒத்தமான் ஒன்று புகுந்து, இனிது விளையாட, நின் அன்பின் வழிநின்று, சிலை பிடித்து, எம்பிரான் ஏக,
பின்னே அங்கு இலக்குமணன் பிரிந்ததுவும்;
அயோத்தியர் கோன் உரைத்த அடையாளம், ஈது அவன் கை மோதிரமே' என்று அடையாளம் தெரிந்து உரைக்க, மலர்க்குழலாள் சீதையும் வில் இறுத்தான் மோதிரம் கொண்டு, 'அனுமான்! அடையாளம் ஒக்கும்' என்று உச்சிமேல் வைத்து உகக்க, திறல் விளங்கு மாருதியும் இலங்கையர் கோன் மாக்கடிகாவை இறுத்து,
காதல் மக்களும் சுற்றமும் கொன்று, கடி இலங்கை மலங்க எரித்து, அரக்கர் – கோன் சினம் அழித்து, மீண்டு, அன்பினால் அயோத்தியர் கோன் தளிர் புரையும் அடி இணைபணிய:

கான எண்கும் குரங்கும் முசுவும் படையா,
கொடியோன் இலங்கைப் புகல் உற்று;
அலை ஆர் கடற்கரை வீற்றிருந்து; செல்வ விபீடணற்கு நல்லன் ஆய்;
விரி நீர் இலங்கை அருளி; சரண்புக்க குரை கடலை அடல் அம்பால் மறுக எய்து;
கொல்லை விலங்கு பணி செய்ய,
மலையால் அணை கட்டி; மறு கரை ஏறி; இலங்கை பொடி ஆக, சிலை மலை செஞ்சரங்கள் செல உய்த்து; கும்பனோடு நிகும்பனும்பட,
இந்திரசித்து அழிய, கும்பகர்ணன் பட, அரக்கர் ஆவிமாள, அரக்கர் கூத்தர்போலக் குழமணிதூரம் ஆட, இலங்கை மன்னன் முடி ஒருவதும், தோள் இருபதும் போய் உதிர, சிலை வளைத்து;
சர மழை பொழிந்து; கரம் துணித்து;
வென்றி கொண்ட செருக்களத்துக் கடிக் கமல நான் முகனும், கண்மூன்றத்தானும்,
எண்மர், பதினொருவர், ஈர்அறுவர், ஓர்இருவர்,
மற்றும் உள்ள வானவர் மலர்மழை பொழிந்து, மணி முடி பணிதர, அடி இணை வணங்க, கோலத்திரு மா மகளோடு, செல்வ விபீடணன்
வானரக்கோனுடன் இலங்கு மணி நெடுந்தேர் ஏறி;
சீர் அணிந்த குகனோடு கூடி; அங்கண் நெடு மதில் புடைசூழ் அயோத்தி எய்தி; நல் நீர் ஆடி;
பொங்கு இள ஆடை அரையில் சாத்தி;
திருச்செய்ய முடியும், ஆரமும், குழையும் முதலா மேதகு மேதகு பல்கலன் அணிந்து; சூட்டு நன் மாலைகள் அணிந்து; பரதனும், தம்பி சத்துருக்கனனும், இலக்குமனும், இரவும் நன் பகலும், ஆட்செய்ய, வடிவு இணை இல்லாச் சங்கு தங்கு முன் கை நங்கை மலர்க்குழலாள் சீதையும், தானும் கோப்புடைய சீரிய சிங்காசனத்து இருந்து;
ஏழ் உலகும் தனிக் கோல் செல்ல

வாழ்வித்தருளினார்.

# கம்ப மலர்

# கம்ப மலர்

## நயப்பியல்

# கண்ணன் சொன்னான் கம்பனும் சொன்னான்

## ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள்

ஆத்மாதான் எல்லாவற்றுக்கும் ஆதாரம். ஆனால் அதுவே அவற்றை கடந்திருக்கிறது என்றால் அதெப்படி என்று தோன்றுகிறது: குழப்பமாயிருக்கிறது. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கீதையில் இம்மாதிரி பலதினுசாகக் குழப்பிக் குழப்பி, பிறகு ஒரேடியாகத் தெள்ளத்தெளிவாகப் பண்ணிவிடுவார்.

" நான் எல்லாப் பொருட்களிலும் இருக்கிறேன். எல்லாப் பொருட்களும் என்னிடம் இருக்கின்றன" என்று கீதையில் ஓரிடத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் கூறுகிறார். எல்லாப் பொருட்களும் இவரிடம் இருக்கின்றன என்றால் இவர்தான் அவற்றுக்கெல்லாம் ஆதாரமான ஆத்மா என்றாகும். ஆனால், எல்லாப் பொருட்களிலும் இவர் இருக்கிறார் என்றால் அவைதான் இவருக்கு ஆதாரம் என்று ஆகுமே! இதில் எது சரி என்று குழப்பம் ஏற்படலாம்.

ஸ்வாமி அல்லது ஆத்மாவே எல்லாவற்றிற்கும் ஆதாரம் என்பதுதான் சரி. அவர் எல்லாவற்றுள்ளும் இருக்கிறார் என்பதால் அவை இவரைத் தாங்குகின்றன என்று ஆகாது. இவரால் தான் அவற்றுக்கு உருவமும் உயிரும். இவர் இல்லாமல் அவை இல்லை. எனவே அவை இவருக்கு ஆதாரமல்ல, இவர்தான் சகலத்தையும் ஆட்டிப்படைப்பவர். இதை ஸ்ரீ கிருஷ்ணபகவானே தெளிவாகச் சொல்கிறார்.

" பொம்மலாட்டப் பொம்மை மாதிரித்தான் சகல பிராணிகளும்; உள்ளேயிருந்து ஈசுவரனே அவற்றை ஆட்டிவைத்துக் கொண்டிருக்கிறான்." என்கிறார்.

இப்படிக் குழப்பத்தை தெளிவு செய்யும் பகவான் அதே கீதையில் மறுபடியும் குழப்பம் செய்கிறார். 'எல்லாப் பொருட்களிலும் நான் இருக்கிறேன் எல்லாப் பொருட்களும் என்னிடம் உள்ளன' என்று கூறுபவரே, ' என்னிடத்தில் ஒரு பொருளும் இல்லை, நானும் ஒரு பொருளிலும் இல்லை' என்கிறார். இங்கே ஆத்மா எல்லாவற்றையும் கடந்தது என்று தத்துவம் பேசப்படுகிறது.

" இது என்ன குழப்புகிறாயே" என்றால் " நான் எல்லோருக்கும் விளங்குவதில்லை அதுதான் என் யோகமாயை" என்று ஒரு போடு போடுகிறார்.

இது என்ன உபதேசம் வேண்டிக்கிடக்கிறது? ஒன்றும் புரியவில்லையே! என்று தோன்றுகிறதா? நன்கு ஆலோசித்துப் பார்த்தால் குழப்பத்துக்குத் தெளிவு காணலாம். ' நான் ஒருவருக்கும் விளங்க மாட்டேன்' என்று பகவான் சொல்லியிருந்தால், " ஆயிரம் பேர் இருந்தால் ஆயிரம் பேருக்கு விளங்க மாட்டேன்." என்று அர்த்தமாகும். ஆனால் அப்படியின்றி, ' நான் எல்லோருக்கும் விளங்க மாட்டேன்' என்றால் ' ஆயிரம் பேரில் 999 பேருக்கு விளங்காமல் இருந்தாலும் இருக்கலாம். ஒருவனுக்காவது விளங்குவேன்' என்றுதான் பொருள். பகவான் எல்லோருக்கும் விளங்க மாட்டேன் என்றாரேயன்றி ஒருவருக்கும் விளங்க மாட்டேன் என்று சொல்லவில்லை. அப்படியானால் அவரும் சிலருக்கு விளங்குகிறார் என்றாகிறது.

அந்த சிலர் யார்? இவர் சொன்ன யோகமாயையால் பாதிக்கப்படாத ஞானிகள். பகவான் முரண்பாடாகப் பேசியது போலத் தோன்றுவதற்கு இத்தகைய ஞானிகளே விளக்கம் தந்து தெளிவு செய்வார்கள்.

தெருவிலே ஒரு பூ மாலை கிடக்கிறது. அரை இருட்டு; எவனோ அந்தப் பக்கம் வந்தவன் அதை மிதித்து விட்டு " ஐயோ பாம்பு, பாம்பு !" என்று பயத்தால் கத்துகிறான். மாலையாக இருப்பதும் பாம்பாக இருப்பதும் ஒன்றுதான். இது மாலைதான் என்று தெரிந்தவுடன் அவனுக்குப் பாம்பு இல்லை என்று தெரிந்து விடுகிறது. ஆனால் முதலில் பாம்புக்கு ஆதாரமாக இருந்தது என்ன? மாலைதான். மாலையைப்

பாம்பு என எண்ணுவதுபோல், அஞ்ஞானிகள் ஒன்றேயான பிரம்மத்தைப் பலவான பிரபஞ்சமாகப் பார்த்து மயங்குகிறார்கள். இந்தப் பிரபஞ்சத்துக்கு ஆதாரம் பிரம்மம்தான்.

பாம்பு என்று அலறுபவனுக்குப் பாம்பு மாலையைத் தனக்குள் விழுங்கி விட்டது. அவன் பார்வையில் ஆதாரமாக இருப்பது பாம்பு. அஞ்ஞானம் நீங்கி, ' இது மாலை தான்' என்று உணர்ந்து கொண்டவனுக்கு மாலை பாம்பைத் தன்னுள் மறைத்து விடுகிறது. மாலைதான் ஆதாரமாகத் தெரிகிறது.

- மாயையினால் மூடப்பட்டுப் பிரபஞ்சத்தைச் சத்தியம் என்று பார்த்தாலும், பிரபஞ்சத்துக்கு ஆதாரமாக இருந்து தாங்குபவன் ஈசுவரன் தான்.

பிரபஞ்சத்தோற்றத்தை ஞானத்தினால் விளக்கியவனுக்கு ஈசுவரனே எல்லாமாய், தானுமாய்த் தோன்றுகிறான். ஈசுவரனைத்தவிர வெறும் தோற்றமாகக்கூடப்பிரபஞ்சம் என்று எதுவுமே ஞானியின் நிர்விகல்ப ஸமாதியில் இருக்கிறது. பிரபஞ்சம் என்று ஒன்று இல்லாதபோது அது ஈசுவனிடத்தில் இருப்பதாகவோ, அல்லது ஈசுவரன் அதனுள் இருப்பதாகவோ சொல்வதும் அபத்தம் தானே? அஞ்ஞான தசையில் உடம்பு, பிராணன், மனசு, அறிவு என்றெல்லாம் தெரிகின்றன. ஞானம் வந்தால் ஆத்மானந்தம் புரிகிறபோது இது எதுவுமே இல்லைதான். இது எல்லாவற்றையும் கடந்துதான் அந்த நிலை வருகிறது. இதனால்தான் ஸ்ரீ கிருஷ்ணபகவான் முடிந்த முடிவான ஞானநிலையில் நின்று, என்னிடத்திலும் பொருட்கள் இல்லை, நானும் பொருட்களிடத்தில் இல்லை என்று கூறிவிட்டார். எவனோ அஞ்ஞானி மாலையைப் பாம்பாக நினைத்தான் என்பதால் உண்மையிலேயே ஒரு பாம்பு மாலைக்குள் இருந்ததாகவோ அல்லது பாம்புக்குள் மாலை இருந்ததாகவோ சொல்லலாமா?

கம்பர் சுந்தரகாண்டத்தில் இதைத்தான் சொல்கிறார்.

*"அலங்கலில் தோன்றும் பொய்ம்மை*
*அரவு எனப்பூதம் ஐந்தும்*
*விலங்கிய விகாரப்பாட்டின்*
*வேறுபாடுற்ற வீக்கம்*
*கலங்குவதெவரைக் கண்டால்*
*அவர் என்பார் கைவிலேந்தி*
*இலங்கையில் பொருதார் அன்றே*
*மறைகளுக்கிறுதி யாவார்."*

அலங்கல் என்றால் மாலை. அரவு என்றால் பாம்பு. அலங்களில் தோன்றும் பொய்ம்மை அரவு–மாலையில் தோன்றும் பாம்பு என்ற பொய்யான எண்ணம். இது போலப் பஞ்சபூதங்கள் ஒன்று சேர்ந்து பொய்யான பிரபஞ்சம் என்ற வீக்கமாகி மயக்குகிறதே, அது யாரைக்கண்டால் விலகிப்போய் மாலையான ஈசுவரன் மட்டும் தெரியுமோ? அவர்தான் ராமச்சந்திர மூர்த்தி என்கிறார்.

பரம வைஷ்ணவரான கம்பர் பரமாத்ம ஸ்வரூபத்தை இப்படி ஸ்வச்சமான அத்வைத பாஷையில் சொல்கிறார்.

---

*: வானதி பதிப்பகம்*

*மற்று ஒரு தவமும் வேண்டா ; மணி மதில் இலங்கை மூதூர்*
*செற்றவன் விசயப் பாடல் தெளிந்து, அதில் ஒன்றுதன்னைக்*
*கற்றவர், கேட்போர், நெஞ்சில் கருதுவோர், இவர்கள் பார்மேல்*
*உற்று அரசு ஆள்வார்; பின்னம் உம்பராய் வீட்டில் சேர்வார்.*

*வென்றி சேர் இலங்கையானை வென்ற மால் வீரம் ஓத*
*நின்ற ராமாயணத்தில் நிகழ்ந்திடு கதைகள் தம்மில்*
*ஒன்றினைப் படித்தோர் தாமும், உரைத்திடக் கேட்டோர் தாமும்,*
*'நன்று இது' என்றோர்தாமும், நரகம் அது எய்திடாரே.*

# அரச தர்மத்தின் ஒரு சிகரம்

ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாத தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் (நல்லை ஆதீனக் குருமுதல்வர்)

அரசியற் படலத்திலே குலமுறையாக வந்த பெருமை பேசப்படவில்லை பிரமாண்டமான அரண்மனைகூட வருணிக்கப்படவில்லை. கொலுமண்டபம், அரியணை இவை கூட வருணிக்கப்படவில்லை. அரச ஆடம்பரங்களோ, அதிகார படாடோபங்களோ, கூறப்படவில்லை. ஆட்சி முறைக்கு இன்றியமையாத அறிவும், அருள் முதலான குணங்களும், தசரதன் சந்நிதியிலே, "நான் என்ன பணி செய்யவேண்டும்?" என்று கேட்டு நின்றனவாம். கம்பன் முன் கவிதைகள் பணி கேட்டு நிற்பதுபோல், சில சந்தர்ப்பங்களில் அரச ஆடம்பரங்களில் அரச தர்மம் மறைந்து போகின்றது; மறந்தும் போகின்றது. அரசர்களும், இராசதந்திரிகளும் அரச தர்மத்தை மறந்து செயல் படும் சந்தர்ப்பம் உருவாகின்றது. ஆனால் தசரதனோ, அரச குணங்கலெல்லாம் தனக்குப் பணி செய்ய, தான் மக்களுக்குப் பணிசெய்து வருகின்றானாம். தசரதன் ஆட்சி செய்யவில்லை! பணி செய்கின்றான். இது தான் இந்த மன்னனின் மாட்சி என்றான் கம்பன்.

இந்த மாட்சியை, அன்புப் பணியை கம்பனின் கவிதை வாயிலாகப் பாருங்கள்:

**தாய் ஒக்கும் அன்பின்; தவம் ஒக்கும் நலம்பயப்பின்;**
**சேய் ஒக்கும் முன் நின்று ஒரு செல்கதி உய்க்கும் நீரால்;**
**நோய் ஒக்கும் என்னின் மருந்து ஒக்கும் நுணங்கு கேள்வி**
**ஆயப் புகுங்கால் அறி(வு) ஒக்கும் எவர்க்கும் அன்னான்;**

அன்பின் சிகரமல்லவா தாயன்பு. குழந்தைக்கு தாய் எப்படியெல்லாம்பணி செய்கிறாள்! எத்தகைய தியாகங்களை அனாயாசமாகச் செய்கிறாள். அதுபோல் மக்களுக்குத் தசரத மன்னன் அன்புப் பணி செய்கிறானாம்.

இதனால் மக்களை மன்னன் குழந்தையாகவோ, மைனராகவோ மதித்துவிட்டான் என்று எண்ணலாகாது. அப்படி எண்ணலாகாது என்று எச்சரிப்பது போல் அமைந்திருக்கிறது. "மன்னன் மகன் போல் இருக்கிறான் சனங்களுக்கு" என்று கிடக்கும் செய்யுட் பகுதி, ஏன்? மக்கள் சொல்லுவதற்குரிய நற்கெதியில் செலுத்திக் கொண்டிப்பதால்" என்றான் கம்பன்.

இப்படித் தாயாகவும் சேயாகவும் அமைந்து பணி செய்யும் அரசாங்கம் – மக்கள் செய்த தவமாகவும் அமைந்துமேலும் மேலும் நலம் செய்து கொண்டிருக்கிறதாம். ஆம்! மக்களுக்கு நலம்செய்யும் அரசாங்கம் மந்திரத்தாலோ, தந்திரத்தாலோ, வாய்வீச்சினாலோ வந்து விழும் கனி போன்றதன்று. மக்கள் செய்த **தவப்பயன்**தான், தவக்கனிதான்.

இந்த அரசாங்கத்திலே அரசன் அறிவுக்குச் **சமானமாக** விளங்குகின்றான். மக்களிடம் வேற்றுமையுணர்வு இல்லாமலே அவன் விளங்குவது ஒரு முக்கிய காரணம், ஆதலால் கோசல நாடு அறிவுப் பெருங் கோயிலாகவும், அறப்பெருங்கோயிலாகவும் தழைத்து ஓங்குகின்றது.

இந்த ஆட்சி முறையின் சிறப்பை எல்லாம் ஒரே சூத்திரத்தில் அடக்கிக் கூறுவது போல தசரத மன்னனைக் கம்பன்;

"உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்"

என்று வர்ணிக்கின்றான். " மன்னுயிரெல்லாம் தன்னுயிர் போலப் பாதுகாக்கின்றானாம் மன்னன்." அப்படிச் சொல்வது போதாதாம். தசரதனது ஆட்சி முறையின் மாட்சியை உள்ளபடி உணர்த்துவதற்கு, மன்னுயிரையே தன்னுயிர் போல் பாதுகாக்கின்றானாம் தசரதன். இவனுக்கு மன்னுயிரே உயிர். மன்னுயிரைத் தாங்கும் உடம்பாகவே தன்னை மதிக்கின்றானாம்.

மன்னனும், குடிகளும், உடம்பும், உயிரும் போல் இருக்க வேண்டும் என்பது தமிழ் நாட்டின் பழையகொள்கை.

மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம் (உயிர்த்தே – உயிராக உடையது) என்பது சங்கப் புலவர் வாக்கு. கம்பனுக்குச் சுமார் ஆயிரம் வருடங்களுக்கு முன் வழங்கி வந்த அரசியல் கொள்கை இது.

"மன்னனை உயிராக உடையது உலகம்" என்ற இந்தக் கொள்கை, கள்ளம் கபடமற்ற பழைய காலங்களில் நல்ல கொள்கையாகத்தான் இருந்தது. ஆனால் பிற்காலத்திலே, அரசர்கள் "உயிராகிய எங்களைத் தாங்குவதே உடம்பாகிய மக்களின் கடமை" என்று எண்ணியிருக்கலாம். உயிரைக் காப்பாற்றுவதற்குச் சில சந்தர்ப்பங்களிலே உடம்பின் ஒரு பகுதியைச் சுட்டாவது ரண வைத்தியர்கள் சிகிச்சை செய்வது போல், அரசாங்கத்தைக் காப்பாற்றவும் இக் கொள்கை இடம் தரக்கூடும். இது கொடுங்கோலர்கட்குக் கொண்டாட்டமல்லவா?

எனவே, அரசாங்கம் உயிர், மக்கள் சமூகம் உடம்பு என்ற பழைய கொள்கையை கம்பன் சிறிது மாற்றி விடுகின்றான். "மக்கட் சமூகமே உயிர் அரசாங்கம் உடம்பு" என்று மாற்றிக் குடிகளின் நலத்தையே பிரதானமாக்கிக் காட்டுகின்றான்; "உயிரெல்லாம் உறைவதோர் உடம்பு" என்று கம்ப சூத்திரத்திலே!

"உடம்புகளிலெல்லாம் உறைவது ஓர் உயிர்"

அதாவது உடம்புகள் பல; உயிர் ஒன்று என்பது அத்வைத வேதாந்தம். உடம்பு ஒன்று, உயிர்கள் பல என்பது கம்பனின் அரசியல் வேதாந்தம்.

# கம்பராமாயணத்து ஒரு செய்யுட்குக் கூறப்படும் சிறப்புப் பொருள்

– வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் –

ஒரு மொழிக்குச் சிறப்பு, அம்மொழியிலுள்ள நூல்களினாலேயே யென்பது யாவரும் உடன்படும் பொருளாகும். பலருடைய மனத்தையும் கவருந் தன்மை வாய்ந்திருப்பது தான் நூல்கட்கு ஏற்றது. நம் தமிழ் மொழியில் பல நூல்களிருப்பினும் எப்படிப் பட்டவருடைய மனத்தையும் கவரும் வல்லமை வாய்ந்தவை திருக்குறளும் கம்ப ராமாயணமுமே என்றால், இதனை மறுத்துரைப்பவர் எவரும் இராரென்பது திண்ணம்.

யாவர்க்கும் உதவும் முறையில் அறம் முதலிய மூன்றையும் எடுத்தோதுவதால், திருக்குறள் பலமொழியாளராலும் போற்றப்பட்டுத் தத்தம் மொழியிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. அந்நூலிற் கூறப்படும் பொருள் உலகியலுக்கு ஏற்றனவாதலாலும், மொழிபெயக்குமிடத்துச் சுவை கெடுதலென்பது நேராதாகையாலும், அதனை அங்ஙனம் பலமொழிகளில் மொழிபெயர்த்தல் இயலுவதாயிற்று, கம்ப ராமாயணமென்னும் பெருங் காப்பியமோ, எங்குஞ் சுவை ததும்புவதால் அந்தச் சுவை கெடாது மொழிபெயர்த்ல் இயலாதென்ற காரணத்தாலேயே பலராலும் போற்றப்படினும் பல மொழிகளில் மொழிபெயர்க்கப்படவில்லை.

ஆயினும், இந்நூல் கற்றோர் இதயத்தைக் கரைவிக்குந் தன்மைய தென்பது கண்கூடாகக் கண்ட பொருள். தமிழ் மொழியிற் பேசும்போது பொருளுணர வல்லராய்ப் பிறமொழியிற் புலமை வாய்ந்தோரிடத்து, இந்தக் கம்ப ராமாயணத்து ஒரு பாடலைச் சொல்லிச் சொற்பொருளைச் சொல்லுமிடத்தும் அவர்கள் நெஞ்சை அந்தப் பாடல் கொள்ளை கொண்டுவிடுகின்ற தென்பதும் கரதலாகமலமாகும். ஆங்கிலங் கற்றுப் புலமை வாய்ந்தோரும் இந்தக் கம்ப ராமாயணத்தைக் கற்று, ஷேக்ஸ்பியர், மில்டன் முதலியோர் நூல்களினும் இதில் மிகவும் ஈடுபடுவதனாலும், தமிழ் மொழியேயறிந்தோர் இதன் மேம்பாட்டை நன்றுணரலாம். நாமே 'நம்முடையது நன்று' என்று பாராட்டுவதைவிடப் பிறர் பாராட்டுவதன்றோ மேம்பாடு விளைப்பது ! இது நிற்க.

கல்வியற் பெரியன் கம்பனென்று கூறுமாறு தலைசிறந்து விளங்குங் கவிஞர் பெருமானால் திருவாய் மலர்ந்தருளப் பெற்ற இந்த மாபெருங் காப்பியம் இயற்றிய நாள் முதல் அறிஞர் பலராலும் போற்றப்பட்டுப் பெருங் குழுவில் தத்தம் பேரறிவுக்கு ஏற்றவாறு ஆங்காங்கு அரும்பொருள் விரித்துச் சொற்பொழிவு நிகழ்த்தி வரம்பெற்றுள்ளது.

இந்த முறையிலே இந்தக் கம்பராமாயணத்து அயோத்தியா காண்டத்தில் ஒரு செய்யுளுக்குச் சிறப்புறப் பொருள் விரிக்கப்படுவதை ஈண்டுக் காட்டுவோம். இப் பொருளைப் பற்றி அறிஞர் ஆராய்ந்து கொள்வராக.

அப்பாடல் வருமாறு

*அருப்பேந்திய கரசத்துணை யமுதேந்திய மதமா*
*மருப்பேந்திய வெனலாமுலை மழையேந்திய குழலாள்*
*கருப்பேந்திர முதலாயின கண்டாளிடர் காணாள்*
*பொருப்பேந்திய தோளானொடு விளையாடினள் போனாள்*

இச் செய்யுளில் மூன்றாம் அடியில் கருப்பேந்திரம் என்பதற்குச் சாதாரணமாகக் கரும்பாலை யென்று பொருள் கூறகின்றனர். யானும் அயோத்தியா காண்டத்தின் உரையில் இங்ஙனமே எழுதியுள்ளேன். இதற்கு இவ்வாறு பொருள் கூறுவதைவிட்டு, ' கர்ப்பேந்த்ரஸ் ஸிம்ஹபக்ஷவக:' (கர்ப்பேந்திரமென்பது சிங்கத்தை யுண்ணவல்ல தொரு விலங்கு) என்று கொண்டால், விலங்குகளுக் கெல்லாந் தலைவனாகிய சிங்கத்தையும் கொன்று உண்ணவல்ல விலங்கு முதலிய கொடிய விலங்குகளைக் கண்டவிடத்தும், சீதாபிராட்டி,

மலையையொத்த மாண்பமைந்த தோளின் வலிமையைக் கொண்டவனான ஸ்ரீ ராமபிரானோடும் கானகத்துச் செல்வதால், மனத்தில் அச்சத்தினால் துன்புறுதலென்பது இல்லாமல், அச்சமற்று விளையாடுபவளாய்ச் சென்றாளென்று பொருள்பட்டு இச்செய்யுள் சிறப்புறுதல் காண்க. ஸ்ரீ வால்மீகி பகவான், 'கஜம்வா வீக்ஷ்ய ஸிம்ஹம்வா வ்யாக்ரம்வா வநமா ரிதா நரஹாரயதி ஸந்த்ராஸம்– பாஹூ ராமஸ்யஸம் ரிதா' என்றார். இதன் பொருள்: 'இராமபிரானுடைய தோளை அரணாகக் கொண்ட சீதை வனத்தையடைந்திருந்த போதிலும் யானையையேனும் சிங்கத்தையேனும் புலியையேனும் பார்த்து அச்சத்தை ஏறிட்டுக்கொள்வது மில்லை' என்பது. அச்சத்தை ஏறிட்டுக் கொள்ளாமைக்குக் காரணம் இராமனுடைய தோள்வலியைத் தனக்கு அரணாகக் கொண்டமையே யென்று இந்த ஸ்லோகத்தில் அருளிச்செய்திருத்தல் நோக்குக. இவ்வண்ணம் ஸ்ரீ வான்மீகி பகவான் அருளிச் செய்திருப்பதை ஸ்ரீ கம்பநாட்டாழ்வார் மனத்துட்கொண்டு, இன்னும் நயம்படக் கூறக் கருதியவராய், சீதாபிராட்டி இராமபிரானுடைய தோள்வலியை யண்டைகொண்டு நிற்றலால் அச்சமாகிய இடரைக் கொள்ளவில்லை யென்பதனோடு நிற்கவில்லை. காட்டில் திரியும் கொடுவிலங்குகளைக் காண்பது ஒரு வினோதமாகவும் அப்பிராட்டிக்கு இருந்தது என்ற கருத்துப்பட,

***கருப்பேந்திரம் முதலாயின கண்டாளிடர்***
***காணாள்***
***பொருப்பேந்திய தோளானோடு விளையாடினள்***
***போனாள்***

என்றார். இவ்வகையாக, நம் கவிஞர் பெருமான் ஸ்ரீ வால்மீகியினும் நயம்பட உரைத்துப் போவதைக் கம்ப ராமாயணத்துப் பலவிடத்தும் காணலாம்.

---

*நன்றி: கம்பன் கவிதை நவயுகம் பிரசுராலயம்*

*வடகலை, தென் கலை, வடுகு, கன்னடம்,*
*இடம் உள பாடை யாது ஒன்றின் ஆயினும்,*
*திடம் உள ரகு குலத்து இராமன்தன் கதை*
*அடைவுடன் கேட்பவர் அமரர் ஆவரே.*

*இத் தலத்தின் இராமாவதாரமே*
*பத்திசெய்து, பரிவுடன் கேட்பரேல்,*
*புத்திரர்த் தரும்; புண்ணியமும் தரும்;*
*அத் தலத்தில் அவன் பதம் எய்துமே.*

# கம்பனும் உவமவலங்காரமும்

வித்துவான்-
ஸ்ரீ-சி-கணேசையர்

கம்பன், பொருள்கட்கேற்ப உவமைகளை எடுத்துக் காட்டிப் படிப்போரெவரும் அப்பொருள்களை நேரேகண் டாற்போலக் கண்டு சுவைக்குமாறு காண்பித்துப் பாக்களை இயற்றுந்திறமும், ஒருவமையையே இடத்துக் கேற்பப் பொதுத்தன்மைகளை வேறுபடுத்திப் பலவேறு வகையாக ஆளுந்திறமும் எவராலும் போற்றப்படத் தக்கனவாம்.

உவமைகளெல்லாம் பொருள்களைப் புலப்படுத்தற்கே ஆளப்படுவன எனத் தொல்காப்பிய உரையாசிரியரு ளொருவராகிய பேராசிரியரும் கூறுவர். தொல்காப் பியரும், உவமவியலைப் பொருளதிகாரத்துக் கூறியதும் இக்கருத்துநோக்கியே.

சங்கச்சான்றோர்கள், தஞ்செய்யுள்களிலே பொருள் களை அவற்றினியல்புகளை எடுத்துக்கூறிக் காட்ட லோடு, பெரும்பாலும் உவமைகளைக்கூறியும் காட்டுவர். ஆதலிற் பொருள்களைப் புலப்படுத்தற்கு உவமையும் சிறந்ததென்பது எவரும் அறியத்தக்க தொன்றாம். அத்தகைய உவமையென்னும் அலங்காரத்தை, மேற்கூறியவாறு கம்பன் ஆளுந்திறத்தை இங்கே காட்டுதும்.

இராமனுக்கும் சீதைக்கும் விவாகம் நடந்தபோது, இராமனும் சீதையும் அக்கினியை வலம்வந்தார்கள். வந்தபோது இராமன் முன்செல்லச் சீதை அவனைத் தொடர்ந்து பின்னே சென்றாள். சென்றபோது, சீதையின் நினைவுமுழுதும் இராமனிடத்தே பதிந்து கிடந்தமையாலும் நாணினாலும் அவள் உயிரில்லாத ஒருடல் நடந்து போவதுபோலவே சென்றாள். அவ்வாறு சென்ற சீதையின் இயல்பை அவ்வாறே காட்டவிரும்பிய கம்பன், இராமனுக்கு உயிரையும் சீதைக்கு உடலையும் உவமையாக்கி, அவ்விருவரும் உயிரும் உடலும்போலத் தோன்றுமாறு,

*இடம்படு தோளவ னோடியை வேள்வி*
*தொடங்கிய செங்கனல் சூழ்வரு போதின்*
*மடம்படு சிந்தையண் மாறு பிறப்பில்*
*உடம்புயி ரைத்தொடர் பான்மையை யொத்தாள்.*

என்று கூறினான்.

மறுபிறப்பிலே உயிரே உடலைத் தொடர்வதாயினும், வெற்றுடல்போலச் செல்வதாலும், கற்புடைப் பெண்டிர்க்குக் கணவரே உயிராதலானும், சீதையையே உடலாகக் காட்டவேண்டுமாதலின் அவ்வுவமையை மாற்றி, உடம்புயிரைத் தொடர்பான்மையை யொத்தாள் என்றான் என்க. இஃது இல்பொருளுவமை. இதனால் தன்னுயிர் முன்னேசெல்லத் தான் பின்னேசென்ற ஒருடல் போலச் சீதையைத் தோன்றவைத்தமை காண்க.

இன்னும், இராமன் எய்த அம்பினாலே உயிரிழந்து கிடந்த வாலியைநோக்கி, அவன் மனைவியாகிய தாரை யென்பாள் புலம்பும் போது, அவன் உயிரிழத்தற்குக் காரணமாய்நின்ற விதியை விளித்து, 'விதியாகிய தெய்வமே! என் கணவனும் யானும் உயிரும் உடலும் போல வாழ்ந்திருந்தோம். இப்பொழுது என்னுயிராகிய கணவனைப் பிரித்துவிட்டாய். உயிர்போனால் உடல் உய்ய மாட்டாமைபோல யானும் உய்யமாட்டேன்' என்று தன் நாயகனை உயிராகவும் தன்னை அவ்வுயிரைப் பிரிந்த உடலாகவும் குறித்துப் புலம்புகின்றாள். அவ்வியல்பினைக் காட்டப்புகுந்த கம்பன், அவ்வுவமையை இடத்துக்கேற்ப மாற்றி வேற்றுப்பொருளாக வைத்து,

*துயரா லேதொலை யாத வென்னையும்*
*பயிரா யோபகை யாத பண்பினோய்*
*செயிர்தீ ராய்விதி யான தெய்வமே!*
*உயிர்போ னாலுட லாரு முய்வரோ.*

என்று கூறுதல் காண்க.

இங்கே கம்பன் தாரையாகிய உடலுக்கு வாலியை உயிராகத் தோன்றவைத்தற்கே அவ்வுடலுயிர்களை வேற்றுப்பொருளாக வைத்து, அத் தாரைகூற்றாகக் கூறினான் என்க.

இன்னும், ஒரு தலைவன் தலைவியோடு செல்லும் போது, அவளன்பைப் பரிசோதிக்குமாறு , பக்கத்திலுள்ள குருக்கத்திக்கொடிகள் அடர்ந்து படர்ந்த ஒரு மரச் சூழலுக்குள்ளே மறைந்துநின்றான். நிற்பச் சட்டெனத் தன் கணவனைக் காணாத அம்மாது, முன் சிறிதும் அவனைப் பிரிந்தறியாதவளாதலால், சரீரம் பதைப்புற்று மனஞ்சுழன்று அவனை அங்குமிங்குமாகத் தேடித் திரிந்தாள். அவ்வாறு தன் நாயகனைத் தளர்ச்சியோடு தேடித் திரிந்த அவணிலைமையைப் புலப்படுத்துமாறு, கம்பன் பொதுத்தன்மையாய் நின்ற வினைகளை , உடல்வினையும் அவள்வினையுமாக்கி,

*மயில்போல் வருவாள் மனங்காணிய காதன் மன்னன்*
*செயிர்தீர் மலர்க்காவி னொர்மாதவிச் சூழல்சேரப்*
*பயில்வா ளிறைபண்டு பிரிந்தறி யாள்பதைத்தாள்*
*உயிர்நாடி யொல்கு முடல்போ லலமந் துழன்றாள்.*

என்று கூறுதல் காண்க.

இங்கே கம்பன், உயிர்நாடியொல்கு முடல்போல் என நாடலையும் ஒல்கலையும் உடல்வினையாக்கிக் கூறியது தலைவனை உயிராகவும் தலைவியை அவ்வுயிரின் உடலாகவும் காட்டற்கென்க. நிற்க.

'உடம்புயிரைத் தொடர்பான்மையை யொத்தாள்' என்ற கம்பன், அவ்வுவமையை மாற்றி,

*ஓடி வந்தனன் சாலையின் சோலையி னுதவுந்*
*தோடி வர்ந்தபூஞ் சுரிகுழ லாடனைக் காணான்*
*கூடு தன்னுடை யதுபிரிந் தாருயிர் குறியா*
*நேடி வந்தது கண்டில தாமென நின்றான்.*

என்னும் பாட்டில் 'உயிர் உடலைநாடி வந்ததுபோல்' எனக் கூறுதல் காண்க.

இச்செய்யுளில், சீதையைப் பிரிந்து மாரீசனாகிய மானைத் தொடர்ந்துசென்ற இராமன், மீண்டுவந்து அவளைக் காணாதவனாய், உயிர் தன்னுடைய உடலைப் பிரிந்து போய்ப்பின், அதனைக் கருதித் தேடிவந்து காணாதுநின்றதுபோல நின்றான்: எனப், பொதுத் தன்மையாய் நின்ற வினைகளை உடலின்மேலும் இராமன்மேலும் ஏற்றிக்கூறியது, சீதையை உடலாகவும் இராமனை அவ்வுடலின் உயிராகவும் காட்டற்கென்க.

இன்னும், இந்திரசித்து விடுத்த பிரமாத்திரத்தினாலே அறிவிழந்து, மயங்கிக்கிடந்த தம்பியாகிய இலக்குவனை, இராமன் கண்டு மயங்கிவீழ்ந்து அறிவற்றுக் கிடப்ப, அவனை இறந்தான் எனக் கருதிய அரக்கர்சிலர் சென்று, 'இராமனும் இறந்துவிட்டான்' என்று இராவணனுக்குச் சொல்ல, அவர்கள் சொல்லை உண்மை என நம்பிய இராவணன் மகிழ்ந்து, சீதையை விமானத்திலேற்றிக் கொண்டுபோய் இராமனிறந்து கிடப்பதைக் காட்டுமாறு இராக்கத மகளிர்க்குக் ' டளையிட, அவன் கட்டளைப் படி இராக்கதமகளிரும் சீதையை விமானத்திலேற்றிக் கொண்டுபோய் மயங்கிக்கிடக்கும் இராமனைக் காட்ட, அவளும் அவனைக் கண்டு உண்மையாக இறந்தான் எனக்கருதிப் புலம்பித் தானும் விமானத்தினின்றுங் கீழே வீழ்ந்து இறக்கக்கருதினாள். அப்போது அவள்கருத்தை அறிந்த திரிசடை என்பாள், 'இராமன் மயங்கிக்கிடக்கின் றானேயன்றி உண்மையாக இறந்தானல்லன்' என்று காரணங்காட்டித் தெளிவிப்ப, அதனால் சிறிது தெளிவடைந்த சீதை, இராமன் மயக்கந் தீர்ந்து எழுதலைப் பார்க்குங்கருத்தளாய் அவனைநோக்கியபடி நின்றாள். நிற்ப, அவளை அங்குநின்றும் மீளக் கொண்டுபோகக் கருதிய இராக்கதமகளிர், அவளுக்கு இராமனைவிட்டுப்போக மனமின்றாகவும், அவள் கீழேகுதித்துவிடாதபடி அவளை இருகரங்களாலும் இறுகப்பற்றிக்கொண்டு வலிந்து விமானத்தைத் திருப்பிக் கொண்டுபோனார்கள். அவ்வாறு அவளை வலிந்து கொண்டுபோன அவர்களினியல்பைக் காட்டவிரும்பிய கம்பன், அம்முகத்தானே இராமனை ஒருயிராகவும் சீதையை அவ்வுயிரினுடலாகவும் தோன்ற வைக்குமாறு,

*தையலை யிராமன் மேனி தைத்தவேற் றடங்க ணாளைக்*
*கைகளிற் பற்றிக் கொண்டார் விமானத்தைக் கடாவு கின்றார்*
*மெய்யுயி ருலகத் தாக விதியையும் வலிந்து விண்மேற்*
*பொய்யுடல் கொண்டு செல்லு நமனுடைத் தூதர் போன்றார்.*

எனக் கூறுதல் காண்க.

இதனுள், உயிர் பூமியிலேகிடப்ப விட்டு, அவ்வுயிரி னின்றும் வலிந்துபிரித்து உடலைக்கொண்டுபோகும் மூடர்களான இயம தூதுவர்களைப்போல, இராமன் பூமியிலே கிடப்ப (மயக்கநீங்கி எழுகின்றானோ என்று அவனையே உற்றுநோக்கிநின்ற) சீதையை, அவனை நோக்கி நிற்கவிடாதபடி இராக்கதமகளிர் வலிந்து பிரித்துக் கொண்டுபோனார்கள் : எனக் கம்பன் மிகச் சுவைநயம்பெற உவமைபுணர்த்தி அவர்கள் கொண்டு போன இயல்பைக் காட்டிய சாதுரியம் பெரிதும் போற்றப் படத்தக்கதொன்றாம்.

இங்ஙனமே, தசரதனது இறப்பை இராமன் சொல்லக் கேட்ட சடாயு தனதுநண்பனாகிய அத்தசரதனது பிரிவைக் குறித்துப் புலம்பியபோது,

*தயிருடைக்கு மத்தென்ன வுலகைநலி சம்பரனைத் தடிந்த வந்நாள்*
*அயிர்கிடக்குங் கடல்வலயத் தயலறிய நீயுடனா னாவி யென்று*
*செயிர்கிடத்தல் செய்யாத திருமனத்தாய் செப்பினாய் திறம்பா*
*நின்சொல்*
*உயிர்கிடக்க வுடலைவிசும் பேற்றினா ருணர்விறந்த கூற்றி னாரே.*

என்று தன்னை உயிராகவும் தசரதனை உடலாகவும் வைத்து நண்பின்பெருமைகூறிப் புலம்பியதாகக் கூறுங் காலும், உயிர்கிடக்க உடலை விசும்பேற்றியது கூற்றின் அறியாமையாகும் எனக் கூற்றின் மேல் அறியாமையை யேற்றிக் கூறி நகையாடல் எத்துணை இன்பந் தருவதாகும்.

இனி; ஒருபொருளின்செயலுக்கு முன்காட்டிய உவமையை மறவாமல் ஞாபகத்தில் வைத்திருந்து, பின்னும் அப்பொருளின் மறுதலைச்செயலுக்கும் அவ்வுவமையையே ஏற்ப எடுத்தாளுந் திறமும் கம்பன் பாலமைந்துள்ளதென்பதையும் இங்கே காட்டுதும்.

இராமன் தம்பியும் தானும் தசரதனைப் பிரிந்து, விசுவாமித்திரனோடு சென்றபோது, விசுவாமித்திரன் பின்னே அவ்விராமன் சென்றமைக்கு "மன்ன னின்னுயிர் வழிக்கொண்டாலென" எனத் தசரதனுயிரை உவமைபுணர்த்திய கம்பன், அவ்வுவமையை மறவாமல், தசரதன் மிதிலைக்குச்சென்றபோது, அவனை எதிர் கொள்ளவந்த இராமனது வருகைக்கும் உவமையாக்கி,

*காவியுங் குவளையுங் கடியகா யாவுமொத்*
*தோவியஞ் சவிகெடப் பொலிவதோ ருருவொடே*
*தேவருந் தொழுகழற் சிறுவன்முன் பிரிவதோர்*
*ஆவிவந் தென்னவந் தரசன்மா டணுகினான்.*

என வினையை மாற்றிக் கூறுதல் காண்க. அங்ஙனங் கூறிய கம்பனுடைய ஞாபகசத்தி மிகவும் புகழத்தக்க தொன்றாம்.

---

*நன்றி "செந்தமிழ்" 1941*

*இறு வரம்பில் 'இராம' என்றோர், உம்பர்*
*நிறுவர் என்பது நிச்சயம்; ஆதலால்,*
*மறு இல் மாக்கதை கேட்பவர் வைகுந்தம்*
*பெறுவர் என்பது பேசவும் வேண்டுமோ?*

*அன்னதானம், அகில நல் தானங்கள்,*
*கன்னி தானம், கபிலையின் தானமே,*
*சொன்ன தானப் பலன் எனச் சொல்லுவார்-*
*மன் இராமன் கதை மறவார்க்குஅரோ.*

# கம்பன் ஒரு பெருங்கடல்

## தமிழ்ப்பேரறிஞர் - தனிநாயக அடிகள்

நம் தமிழ் இலக்கிய நூல்களைப் பெருங் கடல்களாகக் கூறுவது நம் மரபாகும். தொல்காப்பியப் பெருங்கடல்போல் கம்பநாடனின் தொடர்நிலைச் செய்யுளும் ஒரு பெருங்கடலாகும். ஆண்டில் வளர வளர, நம் இலக்கியச் செல்வங்களைப் படிக்கப்படிக்கத் தமிழரின் பண்பாட்டுச் சின்னங்களைச் செல்லும் நாடுகள் தோறுங் காணக் காணத் தமிழ் மகன் எத்துணைப் பெருஞ் சொத்துக்களுக்கு உரிமையாளனாகப் பிறக்கின்றான் என்பது வர வர இன்னுந் தெளிவாகிக் கொண்டு வருகின்றது. நினைக்குங்கால் தமிழை நம் தாய்மொழியாகத்தந்த இறைவனுக்கு நாம் எத்துணை நன்றி செலுத்துதல் வேண்டும். நாம் சீனராகப் பிறந்திருத்தல் கூடும்: அமெரிக்கராகப் பிறந்திருத்தல் கூடும். ஐரோப்பியராகப் பிறந்திருத்தல் கூடும். இவ்வாறிருக்க இத்தமிழ் திருநாட்டில் பிறவி பெற்றுத் தமிழ் மொழியின் தித்திக்கும் இன்னிசையை நம் நாவின் நரம்புகளால் மீட்டி இன்புற்றுவரும் பெரும் பேற்றினைப் பெற்றுள்ளோமே, இதுவே தோன்றாத்துணை நமக்கு அருளிய பேரரும் பேறாகும்.

தமிழ் மொழிக்கும் தமிழ் இலக்கியத்திற்கும் உள்ள தனிப்பெருஞ் சிறப்புக்களில் பல்வேறு சமய இலக்கியங் களுக்குத் தமிழ் தாய்மொழியாக இருத்தல் உலகில் வேறெந்த மொழிக்கும் இல்லாத தனிச்சிறப்பு, சமஸ்கிருத மொழி கீழ்த்திசை சமயங்களுக்குப் பொது மொழியாக ஒரு காலம் விளங்கிற்று. அவ்வாறே இலத்தீன் மொழி மேற்றிசை மறைகளுக்கு ஒரு காலம் பொது மொழியாக அமைந்துள்ளது. ஆனால் இலத்தீன் மொழியில் இந்து சமயம், புத்தசமயம் போன்ற சமயங்களைப் பற்றிய இலக்கிய நூல்கள் இல்லை. சமஸ்கிருதத்தில் கிறிஸ்துவின் திருமறை பற்றிய இலக்கிய நூல்கள் அரிது. தமிழிலோ கத்தோலிக்கரும் புரோடஸ்டாண்டரும், புத்தரும், சமணரும், சைவரும், வைணவரும், மகமதியரும் இலக்கிய உரிமை பாராட்டும் பான்மைகண்டு களிப்புறாத தமிழனும் உண்டோ! முத்தமிழ் முழங்கும் சிலப்பதிகாரத் தையும், புத்தம் போற்றும் மணிமேகலையையும், சமணத்தைச் சாற்றும் சீவகசிந்தாமணியையும், சிவனடியார் சிந்திக்கும் பெரிய புராணத்தையும், வைணவர் வணங்கும் கம்பர் இராமாயணத்தையும், மகமதியர் மதிக்கும் சீறாப்புராணத் தையும் கத்தோலிக்கர் கற்கும் தேம்பாவணியையும், புரோடஸ்டாண்டர் பாராட்டும் இரட்சணிய யாத்திரிகத் தையும் தமிழ் மக்கள் அனைவரும் தம் பொதுச் செல்வமாகவும் கருதுகின்றனரன்றோ இப்பரந்த விரிந்த மனப்பான்மை தமிழ் நாட்டில் எந்நாளும் நிலையாக இருக்க வேண்டும். நம் காப்பியங்கள் சமயச் சார்புடையனவாயும், தமிழர் இவற்றை இலக்கியக் கண்ணால் நோக்கிப் படித்து, இன்புற்றுப் பெரும்வாழ்வு பெறுதல் அவர் கடமையாகும்.

இலக்கியம் தனிப்பட்ட கலையன்று, இலக்கியம் ஏனைய கவின் கலைகளுடன் பண்பாட்டின் துறைகளுடன் நெருங்கிய தொடர்புள்ளது. எனவே இலக்கியத்தில் ஈடுபடுங்கால் ஏனைய தமிழ்க் கலைகளிலும் ஈடுபடுதல் வேண்டும். கம்பரின் கவிச்சுவையில் ஈடுபடும் நாம், ஓவியக்கலையிலும், கட்டிடக்கலையிலும், சிற்பக்கலையிலும், நாட்டியக் கலையிலும் ஈடுபடுவோமாயின் நம் நாட்டின் பண்பாடு வளரும் என்பது திண்ணம்.

சென்ற நூற்றாண்டில் வாழ்ந்து வந்த தமிழ் மக்கள் தமிழ்ப் பண்பாட்டின் பெருமையை முற்றிலும் உணர்ந்திலர். அக்காலத்தில் நம் சங்க இலக்கியங்கள் பதிப்பிக்கப்பெறவில்லை; நம் காப்பியங்களின் அச்சுப்படிகள் அருகியே இருந்தன; தமிழ்க் கல்வியும் இந்த நூற்றாண்டில் பரவியதுபோல் பரவியிருக்கவில்லை. இந்நூற்றாண்டில் எதிர்பாராத இடங்களில் தமிழ் மக்களின் பண்டைக்காலப் பெருமைக்குச் சான்றுகள் தோன்றுகின்றன. இம்மறுமலர்ச்சியின் நூற்றாண்டில் எங்கும் தமிழ் முழக்கம் பிறக்குங் கால் நம்முடைய

கடமைகள் யாவை? Goethe என்பார் செப்பினார். "What thou has received from thy fathers, acquire it a new if thou wouldst possess it"

"நும்முன்னோர் நுமக்களித்த செல்வத்தை, நீவிர் நழுவவிடாது காப்பாற்ற வேண்டுமாயின் அதனை மீண்டும் பெறுவதற்கு புதுப்பிக்க முயல்வீராக"– தமிழ்ச் செல்வங்கள் அனைத்யைும் நாம் மீண்டும் பெறுவதற்கு முயல வேண்டும். நம் பிதிர்ச் சொத்துக்கள் யாவையென்று உணர்தல் நம் கடமை. பல்கோடி செல்வமுள்ள மக்கள் சிலர் தம் செல்வம் எங்கெங்கெல்லாம் உள்ளது என்று அறியாது வாழ்கின்றனர். அவர்களுடைய செயலாளரே அதனைக் காப்பாற்றி வருகின்றனர். நாம் அவ்வாறு பிறர்க்கு மேல் அக்கடமையைச் சுமப்பது பொருத்தமன்று. நாமே அச்செல்வங்களையும், அச்செல்வங்கள் உள்ள இடங்களையும் அறிந்திருத்தல் வேண்டும்.

நாம் இவற்றை அறிவதுடன் இவற்றைப் புதுப்பித்தும் பெருக்கியும் உலகிற்கும் நம்பின்வருவோர்க்கும் ஈதல் பிறிதொரு கடமையாகும். 1954–ஆம் ஆண்டு நான் ஐரோப்பாவிற்குச் சென்றிருந்தக்கால், அங்குள்ள நூல் நிலையங்களில் அந்துப்பட்டதாகக் கருதப்பெற்ற ஏட்டுப்பிரதிகள் சிலவற்றையும் அச்சுப்பிரதிகள் சிலவற்றையும் கண்டுள்ளேன். தைலாண்டுக்கு நான்கு திங்களுக்கு முன் சென்றிருந்த பொழுது, பேராசிரியர் மீனாட்சி சுந்தரனார் அந்நாட்டில் திருவெம்பாவைத் திருநாளைக் கொண்டாடுகின்றனர் எனக் கூறக்கேட்டிருந்தேனாதலால், அதனைப் பற்றி ஆராய்ந்து வந்தேன். அறிஞர் ஒருவரின் உதவியைக் கொண்டு அங்குள்ள பிராமணர் வழிபடும் கோயிலுக்குச் சென்று அவர்கள் "தாய்" மன்னரின் பட்டச் சடங்கிலும் திருவெம்பாவைத் திருநாளில் பாடும் தமிழ்ச் செய்யுட்களைப் பாடுமாறு கேட்டேன். அப்பொழுது தமிழை அறியாதிருந்தும் மரபொன்றைக் காப்பதற்காகத், தாம் அறிந்த எழுத்து வடிவத்தில் வரைந்த ஏடுகளிலிருந்து, என் மெய்சிலிர்க்க பிராமணத் தலைவர் படித்தார்.

***" ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும், வாட்டங்கண்
மாதே வளருதியோ? வன் செவியோ நின் செவிதான்"***

***" ஏசும் இடம் ஈதோ, விண்ணோர்கள் ஏத்துதற்குக்
கூச மலர்ப்பாதந் தந்தருள வந்தருளுந்
தேசன், சிவலோகன், தில்லைச்சிற் றம்பலத்துள்
ஈசனார்க் கன்பார்யாம் ஆர், ஏல்ஓர் எம்பாவாய்"***

இவ்விரு எடுத்துக்காட்டுக்களால் தமிழ்த் தொண்டாற்றுவதற்கு எத்துணைப் பரந்த உலகம் உண்டு என்பதும் இப்பரந்த உலகை ஆராய்வன சிறந்த தொண்டாகும் என்பதும் அறிஞர்க்கு நன்கு புலனாகும். ஒவ்வொரு தமிழ் மகனும் தன்னால் இயன்ற மட்டும் தான்பெற்ற செல்வம் இவ்வையகம் பெறுக எனும் குறிக்கோளோடு தொண்டாற்றுவதே சிறப்பு.

***"சென்றிடுவீர் எட்டுத்திக்கும்– கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்"***

என்றார் பாரதியார். பண்டைக்காலத் தமிழ் மகன் "சென்றிடுவீர் எட்டுத்திக்கும் கலைச் செல்வங்கள் யாவையும் அங்கு சேர்த்திடுவீர்" எனும் மனப்பான்மையுடன் திரை கடலோடித் தமிழ்ப் பண்பாட்டை நிலை நாட்டினான். அவன் சென்ற நாடுகளில் நல்கிய செல்வங்களையும் நாம் எட்டுத் திக்குகளிலிருந்தும் இங்கு கொணர்ந்து மீண்டும் சேர்க்கும் காலம் வந்துள்ளது.

தமிழ்நாடு பெற்ற இத்தகைய செல்வங்களுள் கம்பர்தரும் இராமாயணம் செல்வத்துட் செல்வம். ஆங்கில அறிஞர் Carlyle என்பார் Shakespeare பற்றி எழுதுங்கால் ஆங்கிலம் பேசும் மக்களை இணைக்கும் ஒரு குடை, ஆங்கில அரசன்றி Shakespeare அரசனேயென்று கூறியுள்ளார். ஆங்கில அரசு மறைந்த பின்னும் Shakespeare மன்னன் தன் ஆட்சியை ஆங்கில நாடு தொடங்கி New Zealand மட்டும் நிகழ்த்துவாரெனப் பெருமையுடன் Carlyle குறிப்பிட்டார்.

Shakespeare க்கு இப்பட்டத்தைச் சூட்டியும்கூட, அவரை King Shakespeare, Emperor Shakespeare என்று நாம் அடைகொடுத்துப் பேசுவதில்லை. ஆனால் "கவிச் சக்கரவர்த்தி கம்பன்" என்று பல நூற்றாண்டுகளாகத் தமிழ் மக்கள் வழங்கி வருகின்றனர். கம்பன் தன் கவித்திறத்தால் பொதுமக்களிடமிருந்து கவர்ந்து கொண்ட பட்டமே இது. தமிழ் மக்கள் கம்பனைச் சுவைக்கும் பான்மைக்கு இப்பட்டமே சாலும் சான்றாகும்.

கம்பனின் பேரரசு தமிழ் உயிரோடிருக்கு மட்டும் நிலைக்கும் என்பதற்கு ஐயமில்லை. அப்பேரரசு எங்ஙனம் பரவியது எங்ஙனம் நிலைபெற்றது என்று ஆராய்வதற்கு "கம்பன் தரும் இராமாயணமும் தமிழ்நாடும்" என்ற பெரியதோர் ஆராய்ச்சி வேண்டியதாக இருக்கின்றது.

இத்தொடர்நிலைச் செய்யுளின் கவித்திறமே இதற்கு இடராயிற்று. இக்கவியைச் சுவைத்த மாந்தர் இதனை நெட்டுருச் செய்தனர். ஏடுகள் பலவற்றிலும் எழுதினர். நாடகமாக நடித்தனர். சொற்பொழிவுகளாகக் கதையைப்பெருக்கினர்; நினைவு சோர்வுற்றபொழுது தம் சொந்த அடிகளையும் விருத்தப்பாக்களையும் சேர்த்தனர். ' மன்னன் உயிர்த்தே மலர்தலையுலகம்' என்றவாறு கம்பன் தமிழ் நாட்டின் உயிராதலால் தன் உயிரை ஒருவாறு இழந்தான். செருகுகவிகள் பாடபேதங்கள், ஏட்டுப்பிரதிகள் மல்கிக்கிடப்பதற்கு தமிழ் மக்கள் கம்பனைச் சக்கரவர்த்தியாக ஏற்றுக் கொண்டதே காரணமாகும்.

கம்பனுடைய அரசு தமிழன் சென்ற நாடுகளிலெல்லாம் நிலைநாட்டப் பெற்றுள்ளது. கம்பனே அறியாத நாடுகளிலும் அவன் அரசு பரவியுள்ளது.

பல படலங்களில் வால்மீகி வானரர்ளைப் பிரித்துச்சீதையைத் தேடும்படி அனுப்பும் செய்தியை தென்திசையொழிய ஏனைய திசைகளைப்பற்றி, கம்பன் ஒரு பாட்டில் சுருக்கமாகவும் விரைவாகவும், கூறுகிறான்.

***குடதிசைக்கண், சுடேணன்; குபேரன் வாழ்***
***வடதிசைக்கண், சதவலி; வாசவன்***
***மிடல்திசைக்கண், வினதன்; விறல் தரு***
***படையொடு உற்றுப் படர்க' எனப் பன்னினான்.***

வால்மீகியின் இலங்கை நாமறிந்த இலங்கை என்று கூறவது எளிதன்று; கம்பனின் இலங்கையோ, ஈழத்திருநாட்டில்தான் இருப்பதாகக் கருதினர் புலவர் என்பதற்கு சான்றுகள் உண்டு. எனவே அங்கு அனுமான் செல்ல வேண்டிய வழியை அழகுறு சொல்லோவியங்களாக வரைகின்றான் கம்பன். தமிழ்நாட்டின் எல்லைகளை " வடவேங்கடம் தென்குமரி" என்று கேட்ட நாம் இச்செய்யுளையும் கேட்டு மகிழாதிருப்பது எங்ஙனம்:

***வடசொற்கும் தென்சொற்கும் வரம்பிற்றாய்***
***நான்மறையும் மற்றை நூலும்***
***இடைசொற்ற பொருட்கெல்லாம் எல்லையதாய்***
***நல்லறத்துக் கீறாய் வேறு***
***புடைசுற்றுந் துணையின்றிப் புகழ் பொதிந்த***
***மெய்யே போற் பூத்து நின்ற***
***அடைசுற்றும் தண்சார லோங்கியவேங்***
***கடத்திற்சென் றடைதிர் மாதோ.***

தென்னாட்டை விரிவாக விளம்பிய கம்பன், வால்மீகி கூறும் ஏனைய இடங்களைப் பெயரிட்டிலன். வால்மீகி கூறும் நாடுகளில் சாவகம் போன்ற இடங்களையும் சேர்த்துள்ளார். `Yavadirpam saptarajyo posobhytam,Swarnarupa yakam" வால்மீகி பெயரிட்டும் கம்பன் பெயரிடாத நாடுகளிற்கூட கம்பனின் காப்பியமே ஒரு காலம் பெரிதும் போற்றப்பட்டு வந்தது.

கிழக்கு நாடுகளிலும் தென் கிழக்கு நாடுகளிலும் தமிழ் மக்கள் நிகழ்த்திய வரலாற்றை இதுகாறும் ஒருவரேனும் ஆராய்ந்து அறிந்ததில்லை. பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் இத்துறையில் மேல்நாட்டறிஞர் இயற்றிய பல நூல்களைக் கொண்டு தென்னிந்தியப் பண்போடு பர்மா, தைலாண்டு, கம்போதியா, மலாயா, இந்தோனீசியா, போர்னியோ ஆகிய நாடுகளில் பரவியதற்குக் கிடைத்த சான்றுகளைத் திறம்படத் தொகுத்துள்ளார். ஆயினும் இத்துறையில் இன்னும் பலர் ஆராய்ச்சி நிகழ்த்துவதற்குப் பரந்த இடமுண்டு, சுமத்திராவில் சேர சோழ பாண்டியர் எனப்படும் வகுப்பினர் வாழ்ந்து வருகின்றனர். சாவகத்திலும் பாலியிலும் நடைபெறும் நாட்டியமும் நாடகமும் தமிழ்நாட்டின் நாட்டிய நாடகக் கலையுடன் நெருங்கிய தொடர்புள்ளன. அந்நாடுகளிலுள்ள சிற்பங்களும், இன்றும் நடைபெறும் நாடகங்களும் கம்பனின் இராமாயணத்தைத் தழுவுவன. அங்கோர் வாட்டு, அங்கோர் தொம்மிலும், பொரோபுதூரிலும் காணப்படும் இராமாயணக்கதையின் சிற்பங்கள் வால்மீகியைத் தழுவாதது பற்றி அறிஞர் உடன்படுகின்றனர். கம்பனை இச்சிற்பங்கள் தழுவக்கூடும் எனக் கருதுகின்றனர் அறிஞர்; ஆயினும் இவற்றை நேரிற் பார்த்து இத்துறையை ஆராய்ந்த தமிழ் அறிஞர் ஒருவரும் இலர்.

கம்பனின் அரசு எதிர்பாராத இடங்களில் பரவியுள்ளது. தைலாண்டு நாட்டுக்கு நான் சென்றக்கால் அங்கு தமிழ் பரவியதற்கு ''திருவெம்பாவை''த் திருநாளையும் செய்யுளையும் ஒழிய இன்னும் சான்றுகள் பலவற்றை அறியவந்தேன். தைலாண்டுத் தொடர்பால் "தங்கம்" என்ற சொல் தமிழ் வழக்கில் வந்துள்ளது. சீனத்திலும் தையிலும் "தங்கம்" என்றே பொன்னைக் குறிக்கின்றனர். தைமொழியில் மரக்கலத்தைக் ''கப்பலென்றும்'' குதிரையை ''மா'' வென்றும் கூறுகின்றனர். அவர்கள் சொற்கள் பெரும்பாலும் தமிழைத் தழுவி "ஐ" "அம்" உருபுகளை ஏற்ற விகுதிகளைக் கொண்டவை. "மாலை"யை வடமொழி போல் "மாலா" என்று கூறாது "மலாய்" என்றே கூறி

வருகின்றனர். தைலாண்டில் அறிஞர் ஒருவருடன் தை இராமாயணத்தைப்பற்றி வினவினேன். அவர் பெயர் ''அனுமான்'' (இப்பெயர் வடமொழிச்சொல் "அனுமானத்தின்" திரிபுவென பின்னர் அறியவந்தேன்) ''தை இராமாயணம் 50 விழுக்காடு தமிழ் இராமாயணத்தைத் தழுவியதே" என்று குறிப்பிட்டார். பாட்டுடையப் பாத்திரங்களில் பெயரும் ("குபேரன்", ''சுமன்தன்'', ''மாயன்'', ''தேவன்'', சீவன் என்றே ஒலிக்கின்றன) தை இராமாயணத்தில் அனுமானுக்கு ஐந்து மனைவியர் உண்டு. ஒரு மனைவி இராவணனின் மகளாகிய மீன் தெய்வம்.

நம் தமிழ்நாட்டிலுள்ள இளம் அறிஞர் ஒருவரேனும் தை மொழியைக் கற்றுத் தமிழ் மக்கள் அக் காலத்தில் தாம் தொடர்பு கொண்ட மக்களுக்குப் பண்பையும் கலையையும் காவியத்தையும் நல்கின முறைகளையும் துறைகளையும் ஆராய்தல் எத்துணைச் சிறந்த ஆராய்ச்சியாகும். நம் பல்கலைக்கழகங்கள் கீழ்த்திசை நாடுகளுக்கு அறிஞர் சிலரை அனுப்பி, ஒருவர் சீனத்தையும், வேறெருவர் மலேயையும், இன்னொருவர் இந்தோனேசிய மொழியையும் கற்று ஆராய்ச்சியில் ஈடுபடச் செய்வதால்தான் தமிழ் நாட்டிற்கும் தமிழ் மக்களுக்கும் புத்துணர்ச்சியை அளிக்ககூடும். இன்று தாழ்ந்திருக்கும் தமிழன் தன் பண்டைப் பெருமையை அறிந்தேனும் புதுவாழ்வில் ஈடுபட இத்தகைய கல்வி உறுதிணையாகும். சங்க கால இலக்கியங்களைப் பதிப்பித்துப் பரப்பியதால் தோன்றிய இலக்கிய மறுமலர்ச்சி போல் நம்வரலாற்று ஆராய்ச்சியும், கலை ஆராய்ச்சியும் ஏனைய துறைகளிலும் மலர்ச்சியை உண்டாக்கின என்பதை வலியுறுத்தவும் வேண்டுமோ.!

கம்பனுடைய காலத்தை வரையறுத்துச் சொல்வதற்கு கம்பராமாயணத்தில் அகச்சான்று புறச்சான்றுகளையும் நாம் இதுகாறும் நன்றாக ஆராயவில்லை. கம்பனின் செய்யுட்களை ஆராயும் பொழுது சிலவேளையில் தோன்றும் சொற்களும் சொற்றொடர்களும் அவர் காலத்தின் அடையாளங் களைக் காட்டுகின்றன. சிங்கம் தாங்கும் தூண்களையும், அகழி சூழ்ந்த வெளிநகர் இடைநகர் உள்நகர்களையும் கம்பன் பாடும்பொழுது அவர் பல்லவர் சிற்ப முறைகளில் ஈடுபட்டவர்கள் என்பதும் புலனாகக்கூடும். மேலும் வெளிநாடுகளில் கம்பராமாயணம் பரவிய காலமும், அந்நாடுகளில் கம்பராமாயண நிகழ்ச்சிகள் செதுக்கப்பெற்ற காலமும் கம்பனின் காலத்தை ஒருவாறு சுட்டத்தக்கன என்பது ஒருதலை. தைலாண்டில் தங்கியகாலை தமிழனுக்கு ஏனைய தென்கிழக்கு நாடுகளில் வழங்கும் Kling எனும் சொல்லையே வழங்குகின்றனர். ஆனால் " தமிழ்" என்ற சொல்லும் தை மொழியிலுண்டு, அதனைத் ''தமின்'' என்று ஒலிக்கின்றனர். "தமின்" என்ற சொல்லிற்குப் பொருள் யாதென்று வினவினால் அங்குள்ள பாமர மக்களும் ''கொடியவன்'', ''கொடூரமானவன்'' என்று பொருள் கூறுவர். பல்கலைக்கழகப் பேராசிரியர் "தமின்" என்ற சொல்லிற்கு "a relentless man" என்று பொருள் கூறினார். இன்னுமொருவர் "barbarous man" என்றார். வேறொரு ஆங்கிலம் அறிந்த தொழிலாளன் கூறினான் By " தமின்" " I understand a indian who is cruel and hard" நமக்கு இனிமையையும், சீரையும் சிறப்பையும் குறிக்கும் இச்செசால் தைலாண்டில் இத்தகைய பொருளைச் சோழர் காலத்தில் பெற்றதாகத் தெரிய வருகிறது. பத்தாம் நூற்றாண்டிலும் அதன் பின்னும் சோழர் இலங்கை மீது படையெடுத்த காலத்தில், அங்குள்ள புத்த குருக்கள் தைலாண்டிற்குச் சென்று சோழரின் படைகள் நிகழ்த்திய கொடுஞ் செயல்களைக் கூறி இப்பொருளை 'தமின்' என்ற சொல்லிற்குத் தைலாந்தர் அளிக்கக் காரணமாக இருந்தனர்.

தைலாண்டில் பரவிய தமிழ்ப் பண்பாடு பத்தாம் நூற்றாண்டிற்கு முன்னமே பரவியிருத்தல் வேண்டுமென்று துணிவது பொருத்தமுடைய தென்பதற்கு இன்னும் வேறு சான்றுகளால் வலியுறுத்தப்படுதல் வேண்டும்.

கம்பனின் காலம் பக்தியின் காலமென்பதற்கோ ஐயமில்லை. இராமரின் வரலாறு புறநானூறு, அகநானூறு, சிலப்பதிகாரம் ஆகிய இலக்கியங்களில் மேற்கொள் காட்டப்பெற்று இருப்பினும் பக்தி வெள்ளம் தமிழ்நாட்டில் பெருக்கெடுத்த காலத்திலே அவ்வரலாறும் பக்திக்குத் தித்திக்கும் பொருளாயிற்று. பல நூற்றாண்டுகளாக மக்களின் உள்ளங்களில் குடியிருந்த இராமரை, கம்பன் வால்மீகி அறியாத உணர்ச்சிகளுடன் பாடினான். இராமன் மக்களுக்கு எடுத்துக்காட்டாக விளங்குவதுடன், மக்களை மீட்க வந்த திருமாலு மாகின்றார். தமக்கென வாழாப்பிறர்குரியாளன் எனும் தமிழ்ப் பண்பாட்டின் உயர்ந்த சிறப்பை இராமர் தம் வாழ்க்கையிலும் மொழிகளிலும் காட்டுகின்றார்.

***ஆவுக்காயினு மந்தணர்க் காயினும்***
***யாவர்க்காயினு மெளியவர்க் காயினும்***
***சாவப்பெற்றவரே தகை வானுரை***
***தேவர்க் குந்தொழுந் தேவர்களாகுவார்***

"தவமெலாங் கொள்க" எனும் தியாகமும் மனப்பான்மையும் எத்துணைச் சிறப்பாகக் புலப்படுத்தப் பட்டுள்ளது. இறைவணக்கமும் இறைவழிபாடும் இறையன்புமே தமிழ் மக்களுடைய மிகவும் உயர்ந்த செல்வங்கள். இவற்றை உருவாக்கிக் காட்டும் காப்பியமே இராமாயணம். நாத்திகம் நம் மக்களின் இயல்பிற்கு அப்பால் நடனம் புரியும் ஒரு கொள்கை. இக்காரணம் பற்றியே இறைவன் மாட்சி குன்றக்கூறும் புத்தமும் சமணமும் தமிழ்நாட்டில் நிலைபெற்றில.

யான் இளைஞனாகக் கல்வி கற்ற பொழுது ஒரு சிறிது ஹோமரையும் வெர்ஜிலையும் கற்றேன்; ஆங்கிலம் படித்தக்கால் ஏதோ மில்டனையும் shakespeare ஐயும் கற்றேன்; இத்தாலிய நாட்டில் குருமடக் கல்வியில் ஈடுபட்டபொழுது ஒருசிறிது தாந்தேயையும் தச்சோவையும் கற்றேன்; பிரஞ்சு மொழியுடன் தொடர்புவைத்தக்கால் Chamon de Roland ஐப் புரட்டிப் பார்த்தேன்; போர்த்துக்கீசிய மொழியைச் சிறிது கற்று Camoes cila Os Husiades எனும் காப்பியத்தைப் படித்துப் பார்த்தேன் எனினும்

*"யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்*
*வள்ளுவர்போல் இளங்கோவைப்போல்*
*பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை*
*உண்மை; வெறும் புகழ்ச்சி யில்லை"*

கம்பராமாயணமும் கீழ்நாட்டாரும் மேல்நாட்டாரும் வகுத்த பெருங்காப்பியத்தின் இலக்கணங்களை நன்றாகப் புலப்படுத்துகின்றது. தண்டியின் இலக்கணமும் Aristootle இன் இலக்கணமும் நம் காப்பியத்தில் இலக்கியம் காண்கின்றன. பண்டைக் காலத்து Beowulf, Chamson de Roland, வால்மீகியார் வரைந்த (heroic epic) வீரகாப்பியப் பண்பு கம்பராமாயணத்திலுண்டு: வீரத்தையும் வீரனையும் வீரமுறையில் காட்டுவதே வீரகாப்பியம்; தன்நிகரில்லாத தலைவனை மக்களுக்கு எடுத்துக் காட்டாகக் காட்டுவது வீர காப்பியம். (Authentic epic) அல்லது இயற்கைக் காப்பியம் என்பது மக்கள் தலைமுறை தலைமுறையாகப் பாடிவந்த பொருளையும் சொல்லையுங் கொண்டு இயற்றப்பெற்ற காப்பியம். ஹோமருடைய இலிபடும் odynesy உம் கிரேக்க மக்கள் பாடிவந்த பொருள் பற்றி எழுந்த காப்பியங்கள். புலவர் தம் திறமையால் நாட்டுப் பாடல்களையும் அவற்றின் சொற்றொடர்களையும் பயன்படுத்தியுள்ளார். இயற்கைக் காப்பியம் மக்களால் ஏட்டில் படித்ததன்று, காதால் கேட்டின்புறத் தக்கது. கம்பரும் தம் காப்பியத்தில் தமிழ் நாட்டில் இராம சரித்திரத்தைப்பாடும் பல செய்யுட்களைச் சேர்த்திருக்க வேண்டும். அவர் காப்பியம் பாடிக்கேட்கத் தக்கது; செவியால் நுகரத்தக்கது. Literay epic எனும் இலக்கியக் காப்பியம், திருத்தமாகப் புலவரால் படித்துச் சிந்தித்து அனுபவிக்கத்தக்கது. Vergil, Milton போன்றவருடைய காப்பியம் இலக்கியக்காப்பியம்: கம்பன் காப்பியமும் திருத்தமாக அமைக்கப்பெற்ற காப்பியம் தான். ஏனைய உலகக் காப்பிய ஆசிரியருடன் கம்பனை ஒப்புநோக்கிப்படிப்பதால் கம்பனுடைய பெருமையும் ஏனையோருடைய பெருமையுந்தோன்றும். மேலும் கம்பன் தமிழ் இலக்கியத்தின் வரலாற்றைப் பிரிக்கும் ஒரு பெருங் கடல், கம்பனின் காப்பியத்தில், அவர் முன்னோர் மொழியையும் பொருளையும் பொன்னே போல் போற்றியுள்ளார். அவர் பின்வந்த இலக்கிய ஆசிரியருக்கு அவரே பெருங்களஞ்சியமும் ஆசானுமானார். தாந்தே வெர்ஜிலைக் கண்டதும் " The seimaestri" நீவிர் என் ஆசானென்றும் அழைக்கின்றார். கம்பன் தமிழ்நாட்டின் ஆசான், கம்பனும் வள்ளுவனும், கம்பனும் இளங்கோவும், கம்பனும் சேக்கிழாரும், கம்பனும் நால்வரும் இன்னோரன்ன பொருள்பற்றி ஆராய்வது தமிழ் ஆராய்ச்சியில் புதிய முறைகளையும் வழிகளையும் காட்டும் என்பது ஒருதலை. C.M. Bowra என்பார் எழுதிய " From Virgil to, Milton' எனும் நூலைப்போல் நம் காப்பியங்களைப் பற்றிய நூல்கள் நமக்கு வேண்டும்.

florence மாநகரில் ஒரு கோயிலுண்டு. அங்குள்ள தாந்தேயைப் பற்றிய ஓவியமொன்று என் நினைவிற்கு வருகின்றது. Florence நகர் இருள் சூழ்ந்து கிடக்கும் வேளையில் தாந்தே தம் நூலை விரித்துக் காட்டுகின்றார். அவ்வேளையில் அந்நூலிலிருந்து செல்லும் ஒளியால் நகர் புத்துயிர் பெறுகின்றது. கம்பர் தரும் இராமாயணம் அத்தகைய ஓர் ஒளிப்பிழம்பு, அதனால் தமிழ்நாடு புத்துயிர் பெறுதல் வேண்டும். அப் புத்துயிர் பெறுவதற்கு நம் அறிஞர் விளக்கத்திற்குப் புதுவிளக்கம் அளித்தல் வேண்டும்.

---

"கம்பன் இசைத்த கவியெலாம் நான் காருகர் தீட்டும் உருஎலாம் நான் இம்பர் வியக்கின்ற மாடகூடம் எழில் நகர் கோபுரம் யாவுமே நான்! "

—மகாகவி பாரதியார்

---

*நன்றி கோவைக்கம்பன் கழக கம்பன் மலர் 1982*

# தன்னிப்போர்

பி. ஸ்ரீ. ஆச்சாரியா

இலைகளில்லாமல் உலர்ந்துபோன மூங்கில்களும், உடல் பிளந்து பேய் நிற்பதுபோல நிற்கும் வைரம் பாய்ந்த கள்ளி மரங்களும் தாம் காணப்படுகின்றன, அந்தக் காட்டிலே. நிலமோ, ஈரப்பசை முழுவதையும் உறிஞ்சி விட்டுச் சூரியன் உமிழ்ந்த சக்கைபோலக் காண்கிறது. அந்த வெப்பத்தை வருணிக்க நாவும் கூசுகிறதாம், 'வெந்து போவோமே!' யென்று. 'ஏக வெங்கனல் அரசிருந்த' அதாவது, அக்கினி தேவனே ஏகபோக ஆட்சி நடத்துகிறானன்று சொல்லும் படியிருந்த அந்தப் பாலைவனத்திலே அடி வைக்கிறார்கள், விசுவாமித்திர இராமலட்சுமணர் மூவரும்.

அயோத்தியைக் கடந்து, சரயு நதியைத் தாண்டி, அன்று இரவு ஒரு சோலையிலே தங்கி, மறுநாள் நடுப்பகலில் பாலைவனத்தையடைந்ததும், இராமன் முனிவரை நோக்கி, 'சக்கர வர்த்தியின் இராஜ்ஜியத்தில், ஒரு பகுதி இப்படி அழிந்து போனதற்குக் காரண மென்ன?' என்று ஆச்சரியத்தோடு கேட்டான். அதற்கு உத்தரமாக விசுவாமித்திரர் ஒரு கொடிய இராட்சஸியின் கதையைச் சொன்னார்.
சொல்லி,

*"சூடக அர(வு)உறழ் சூலக் கையினள்,*
*காடுறை வாழ்க்கையள், கண்ணின் காண்பரேல்*
*ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்!*
*தாடகை யென்ப(து)அச் சழக்கி நாமமே"*

(சூடகம் – கைவளை; கங்கணம். அரவு – பாம்பு. உறழ் – பொருந்திய. உறை – வசிக்கிற. அவாவும் – ஆசைப்படும். சழக்கி – குற்றவாளி.)

என்று, பேர்வழியை வருணித்து, அந்தப் பெயரையும் குறிப்பிட்டார்.

விஷப்பாம்பைக் கங்கணமாக அணிந்திருப்பதே, அரக்கியின் விஷம் போன்ற நெஞ்சுக்கும் சங்கற்பத்திற்கும் ஓர் அறிகுறி. அவள் கையும் பாம்பு போலிருக்கிறதாம். அந்தக் கையிலுள்ள பயங்கரமான சூலாயுதமும் பாம்பு போல் ஒடுங்கி, நீண்ட உடலும் விரித்த படம் போன்ற தலையும் உடையது. தான் பாழாக்கிய அந்தப் பிரதேசத்திலேதான் அந்தக் குற்றவாளி வசிக்கிறாளென்றும் முனிவர் தெரிவிக்கிறார். இராமனைப் பார்த்துக்கொண்டே பேசிக்கொண்டிருந்தவர், அந்தப் பயங்கரியின் வரலாறு சொல்லிப் பெயரையும் சொல்வதற்கு முன்னமே, இராமனுடைய திவ்ய சௌந்தரியத்தில் ஈடுபட்டு, 'கண்ணில் காண்பரேல் ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்!' என்று அவனை ஆசைதீர அழைக்கிறார். புருஷோத்தமனான இராமனுடைய பேரழகு விசுவாமித்திரரின் கண்ணையும் கருத்தையும் அடிக்கடி வசீகரித்துவிடுகிறதென்று ஊகிக்கலாம். இராம சௌந்தரியம் தசரதனை வசீகரித்ததுபோல், இந்த ஞானத் தந்தையையும் வசீகரிக்கிறது. 'காதலித்த உருவாகி அறம் வளர்க்கும்' தெய்விக அழகல்லவா?

'தாடகை ஒருத்தியே இப்படி நாட்டின் வளத்தையும் வனப்பையும் அழித்தாளா?' என்று அந்த அழகனுள்ளத்திலே ஒரு சந்தேகம் தோன்றக் கூடுமல்லவா? அந்தச் சந்தேகத்தையும் எதிர்பார்த்தவர் போல் பேசினார் முனிவர்:

*"உளப் பரும் பிணிப்பறா உலோபம் ஒன்றுமே*
*அளப்பருங் குணங்களை அழிக்கு மாறுபோல்,*
*கிளப்பருங் கொடுமைய அரக்கி, கேடிலா*
*வளப்பெரு மருதவைப்(பு) அழித்து மாற்றினாள்."*

(உளப்பெரும் பிணிப்பு– உள்ளத்தின் பெரிய பந்தம். அறா–நீங்காத. கிளப்பரு – சொல்லமுடியாத வளப்பெருமருதவைப்பு – வளம்பொருந்திய பெரிய மருதநிலம். மருதம் – வயல்களும் வயல்கள் சூழ்ந்த இடமும். கைவரை – துதிக்கையுடைய மலைபோன்ற யானை. கேளா – கேட்டு. ஐவரை – (இங்கே) பஞ்சேந்திரியங்களை. வரை – மலை. மைவரை – கரிய மலை.)

இராமனுக்கு விசுவாமித்திரர் அருகேயிருந்த ஒரு மலையைச் சுட்டிக் காட்டி, 'இந்த மலைதான் அவள் இருப்பது!' என்று சொன்னார். அப்படிச் சொல்லி முடிப்பதற்கு முன்பே, ஒரு கரிய மலை தங்களுக்கு எதிரே நடந்து வருவதுபோலத் தோன்றியதாம் அம்மூவருக்கும். பிறகு அது 'எரிமலைதானோ?' என்று பிரமிக்கும்படி நெருப்பைக் கக்கிக்கொண்டு வந்தது! ஆம், அந்த 'மாமிச பர்வதம்' தான் தாடகை!

அப்படிக் கரிய மலை போன்ற உடலோடும், செம்பட்டை மயிரோடும், கோபக்கினியோடும் வந்தவள், அம்மூவரையும் கண்களில் நெருப்புப் பொறிகள் பறக்கப் புருவம் நுனி துடிக்க விழித்துப் பார்த்தாள். என்ன கோரமான வாயும் பல்லும்! என்ன விழி! என்ன விழிப்பு!

*"இறைக்கடை துடித்தபுரு வத்தள்,*
*எயிறு என்னும்*
*பிறைக்கடை பிறக்கிட*
*மடித்த பில வாயள்,*
*மறக்கடை அரக்கி, வட வைக்*
*கனல் இரண்டாய்*
*நிறைக்கடல் முளைத்தென*
*நெருப்பெழ விழித்தாள்."*

[இறை – சிறிது. கடை – நுனி. எயிறு – பல்; (இங்கே) கோரப்பல். பிறை – இளஞ் சந்திரன். கடை – கடைவாய். பிறக்கிட – வெளியே விளங்கும்படி. பிலம் – குகை. மறக்கடை – பாவத்தின் முடிவு. வடவைக் கனல் – வடவாமுகாக்கினி. நிறைக்கடல் – நிறைவுள்ள கடல்.]

கோரப் பற்கள் பிறைச்சந்திரர்களைப்போல் கடைவாயில் வெளியே தெரியும்படி மடித்துக் கொண்டிருந்தாள். அந்தக் குகை போன்ற வாயை. கரிய கடலிலே வடவாமுகாக்கினி இரு கூறாகித் தோன்றி ஜொலித்து எரிவது போல் சிவந்து விளங்கின கண்கள், அந்த முகத்திலே! பாவத்தின் சிகரமே அப்படி வந்து நின்றதாம். பாடிப்பாடிப் பாருங்கள். இதன் வல்லோசை எவ்வளவு நன்றாகப் படம் பிடித்துக் காட்டுகிறது, தாடகையின் வலிய கொடிய தோற்றத்தையும் குணஞ் செயல்களையும் என்று.

வருகையும் பார்வையுமே இப்படியென்றால், இந்த அரக்கியின் ஆரவாரத்தையும் அட்டகாசத்தையும் என்ன வென்று சொல்வது?

*"ஆர்த்து அவரை நோக்கி நகைசெய்து*
*எவரும் அஞ்சக்*
*கூர்த்தநுதி முத்தலை அயிற்கொடிய*
*கூற்றைப்*
*பார்த்து எயிறு தின்று, பகுவாய்முறை*
*திறந்து ஓர்*
*வார்த்தை உரை செய்தனள் இடிக்கும்*
*மழை அன்னாள்!"*

[ஆர்த்து – ஆரவாரஞ்செய்து. கூர்த்த நுதி – கூர்மையான நுனி. அயில் – சூலம். படு – பிளவுபட்ட. முழை – குகை. மழை – மேகம்.]

*"கடக்கரும் வலத்து எனது காவல்இது;*
*யாவும்*
*கெடக்கரு அறுத்தனென்! இனிச்சுவை*
*கிடக்கும்*
*விடக்கு அரிது எனக்கருதியோ?*
*விதிகொடு உந்தப்'*
*படக்கருதியோ? பகர்மின் வந்தபரிசு'*
*– என்றாள்.*

[கடக்க அருவலம் – (எவராலும்) கடக்க முடியாத பலத்தையுடைய. விடக்கு – மாமிசம். கொடு – கொண்டு. உந்த – பிடித்துத்தள்ள. பட – நாசமடைய. பரிசு – விதம்.]

தாடகை ஆரவாரஞ் செய்துகொண்டு இம் மூவரையும் நோக்கி ஒரு சிரிப்புச் சிரித்தாளாம். அந்தச் சிரிப்பிலேதான் என்ன இகழ்ச்சி! பிறகு, சூலாயுதம் என்னும் அந்தக் கொடிய யமனை ஒரு பார்வை பார்த்தாளாம், 'அவர்களுடைய உயிரை உனக்கு விருந் தாக்குவேன்!' என்று அதை உத்ஸாகப்படுத்துவது போலே. அப்பால் பற்களைக் கடித்து, வாயைக் குகைபோல் திறந்து, இடிக்குரலில் பேசத் தொடங் கினாள்.

தாடகையின் பேச்சென்றால், எப்படியிருக்குமோ? என்று நினைக்கிறோம். கேளுங்கள். 'இது என்

இராஜ்ஜியமாயிற்றே!' என்கிறாள். இந்த இராஜ்ஜியத்தைத் தான் எவ்வளவு அழகாய்க் காவல் செய்கிறாள். இந்த அரசி! 'யாவும் கெடக்கரு அறுத்தனென்!' என்று பெருமை பாராட்டுகிறாள். கருவும் இல்லாதபடி உயிர்களை அழித்த இந்த 'மகராசி'யின் மாட்சியே மாட்சி! அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்! 'சுவையுள்ள மாமிசம் இனிமேல் எனக்கு இங்கே கிடைக்காது என்பது உங்களுக்கு எப்படித் தெரிந்ததோ? எனக்கு உணவு தர வேணுமென்று உடம்பை அருமையாக வளர்த்துக் கொண்டு வந்திருக் கிறீர்களே! உங்கள் கருணையே கருணை! உங்கள் தியாகமே தியாகம்! உங்கள் புத்தியே புத்தி!' என்று பரிகசிக்கிறாள். 'அன்றி, விதியே – ஆம், என் அதிர்ஷ்டமும் உங்கள் துரதிர்ஷ்டமுமாகிய விதிதான் – பிடர் பிடித்துத் தள்ள வந்தீர்களோ? சொல்லுங்கள்' என்று பயமுறுத்துகிறாள், பாலைவன ராணி.

இப்படியெல்லாம் உறுமிக் காலால் நிலத்தை உதைத்துக்கொண்டு, 'சூலத்தை இவர்கள் மார்பிலே எறிவே' னென்று தீர்மானித்துவிட்டாள். அவளைக் கொல்ல வேண்டுமென்ற விசுவாமித்திரர் கருத்தை இராமன் அறிந்திருந்தும், அம்பு தொடுத்தானில்லை. தங்கள் உயிருக்கே ஆபத்தான செயலை அவள் செய்யத் தொடங்கியிருந்தும், தற்காப்பைக் குறித்தும் யோசித் தானில்லை. 'பெண்ணென மனத்திடை பெருந்தகை நினைந்தான்.'

இராமன் கருத்தை விசுவாமித்திரரும் ஊகித் தறிந்து, 'தாடகையையும் பெண்ணென்று எண்ணு வதோ?' என்ற கருத்து அமைய,

*"தீதென்று உள்ளவை யாவையும்*
*செய்து, எமைக்*
*கோதென்று உண்டிலள்; இத்தனை*
*யே குறை!*
*யாதென்று எண்ணுவது இக்கொடி*
*யாளையும்?*
*மாதென்று எண்ணுவதோ? மணிப்*
*பூணினாய்!"*

[கோது – சக்கை. பூண் – ஆபரணம்.] என்றார்.

தீதென்று உள்ள எல்லாவற்றையும் செய்து உயிர்களையெல்லாம் வதைக்கிறவளென்று முனிவரும் சொன்னார்: 'உயிர்க்குலத்தைக் கருவறுத்து வருகிறேன்!' என்று தாடகையும் பெருமையாகச் சொல்லிக் கொண்டாள். எனினும், இராமன் உள்ளத்தில் இவ்விஷ யமாய் ஒரு சந்தேகம் தோன்றக் கூடுமேயென்று விசுவாமித்திரர் எண்ணினாராம். 'ஜீவஹிம்ஸையே தொழிலாகக் கொண்டவள் இந்த முனிவரைத் தின்னாமல் விட்டுவிட்டாளே!' என்று நினைக்க லாமல்லவா? அந்தச் சந்தேகத்தை எதிர் பார்த்துத்தான், 'எமைக்கோதென்று உண்டிலள்: இத்தனையே குறை!' என்று சொன்னார் முனிவர். தவமும் யாகமும் செய்து வற்றிப்போய் எலும்பும் தோலுமாயிருக்கிறாரல்லவா?' எனவே, 'இந்த உடம்பு சாரமற்ற சக்கை!' என்றுதான் தின்னாமல் விட்டு வைத்தாளாம். இதனால்தான் இவரைப் போன்ற முனிசிரேஷ்டர்கள் பிழைத்திருக்கிறார்களாம். 'இப்படிப்பட்ட பேர்வழியைப் பூதம், பேய், துஷ்ட மிருகம் முதலிய வர்க்கங்களில் எந்த வகுப்பிலே சேர்த்து எண்ணுவது?' என்பது தெரியவில்லை. வேறு எந்த இனத்தில் சேர்த்தாலும் , தாய்க்குலமாகிய பெண் குலத்தில் மட்டும் சேர்ப்பது தகாது, தகாது என்கிறார் விசுவாமித்திரர்.

பிறகு யமனைக்காட்டிலும் தாடகை கொடியவள் என்றார் முனிவர்.

*"சாற்றுநாள் அற்ற(து)' என்று தருமம்*
*பார்த்(து)*
*ஏற்றும் விண்ணென்ப(து) அன்றி, இவளைப்*
*போல்*
*நாற்றம் கேட்டலும் தின்ன நயப்பதோர்*
*கூற்றும் உண்டுகொல்? கூற்(று) உறழ்*
*வேலினாய்!"*

[சாற்றும் நாள் – (ஊழ்வினையின்படி) விதித்துள்ள ஆயுள்நாள். நாற்றம் – வாசனை. உண்டுகொல் – உண்டோ. கூற்றுறழ் – யமனைப் போன்ற.]

யமனைக் கொடியவனென்று உலகம் சொல்லுகிற தல்லவா? அவனோ ஆயுள் முடிந்தவர்களைப் பார்த்துத் தானே கொண்டு போகிறான். ஆகவே, அவன் தருமம் பார்க்கிறவன்; தருமராஜா. இந்தப் புதிய யமனுக்கோ அப்படிப்பட்ட கவலையே கிடையாது. ஆயுளையும் பார்க்க மாட்டாள்; அறத்தையும் பார்க்கமாட்டாள். வாசனையை மோப்பம் பிடித்து அறிந்துகொண்டாலே போதும். இல்லை; 'நாற்றம் கேட்டலும்' தின்ன விரும்புகிறாளாம். 'நரவாசனை வீசுகிறது!' என்று யாராவது சொல்லக் கேட்டாலும் போதுமாம். உடனே ருசி பார்க்கக் கிளம்பிவிடுகிறாள்! என்கிறார் விசுவாமித்திரர்.

கடைசியாக முனிவர், தாம் தருமம் பார்த்தே பேசுவதாகக் கூறினார்:

*"ஈறில் நல்லறம் பார்த்திசைத் தேன்; இவட்*
*சீறி நின்றிது செப்புகின் றேனலேன்;*
*ஆறி நின்ற(து) அருளன்(று); அரக்கியைக்*
*கோறி' யென்றெதிர் அந்தணன் கூறினான்"*

[ஈறில் – முடிவில்லாத. இவட்சீறி – இவளைச் சீறி. கோறி – கொல்வாயாக. அந்தணன் – ஜீவகாருண்ய மூர்த்தியான விசுவாமித்திரர்.]

'தருமம் என்னும் சட்டப் புத்தகத்தைப் பார்த்துத் தான் இவளுக்கு மரண தண்டனை விதிக்கிறேன்' என்றார்.

'என்னுடைய மனநிலை ஒரு நீதிபதியின் மனநிலைதான்; எனக்கு இவள்மேல் கோபம் கிடையாது' என்கிறார். 'இதைக் குறித்துப் பொறுமையோடு பின்னால் பார்த்துக்கொள்வோமென்று நீ நினைத்தால், அது அருளாகாது!' என்றும் இராமனுக்கு எச்சரிக்கை செய்துவிடுகிறார். 'ஆறி நின்றது அருளன்று' என்று கூறுவதைக் கவனியுங்கள். ஏன்? 'இனிமேல் அரக்கி செய்யும் கொலைகளுக்கெல்லாம் நீ பொறுப்பாளி!' என்கிறார். 'தாடகையைக் கொல்லவேணும். இப்போதே கொல்ல வேணும்; தயங்காமல் கொல்லவேணும்; இதுதான் அருள்! அதுவே இவளுக்கும் அருள் செய்வதாகும். ஏனென்றால், இவள் பாவச் சுமையை ஒழிப்பதற்கு வேறு வழியே கிடையாது' என்கிறார் விசுவாமித்திரர். இப்படிச் சொல்லும் முனிவரை, உயிர்களுக்கு அருள் பூண்டொழுகும் அந்தணனென்று பாராட்டுகிறான் கவிஞன்!

இந்த வாதத்திற்கு இராமன் என்ன பதில் சொல்லுகிறான்? 'மெய்ய! நின் உரை வேதமெனக் கொடு செய்கை யன்றோ, அறம் செயுமாறென்றான்! மெய்யைக் குறித்தும் அருளைக் குறித்தும் எத்தனையோ சோதனைகளைச் செய்து பார்த்த நிபுணர் விசுவாமித்திரர். எனவே, 'உம்முடைய வார்த்தையை வேதமென்று கொண்டு செய்வதுதான் அறம் செய்யும் முறை' என்று ஒப்புக்கொள்ளுகிறான் இராமன்.

இப்படி ஒப்புக்கொண்டும் பளிச்சென்று தாடகைமேல் அம்பு போடவில்லையாம். அவள் தான் போர் தொடங்குகிறாள், அவன் கருத்தை ஊகித்துக்கொண்டு.

*"கங்கைத் தீம்புனல் நாடன் கருத்தையும்.*
*மங்கைத் தீஅனை யாளும் மனக்கொளாச்*
*செங்கைச் சூலவெந் தீயினைத் தீயதன்*
*வெங்கண் தீயொடு மேற்செல வீசினாள்."*

கங்கைத் தீம்புனல் நாடன் – இராமன். மனக்கொளா – மனத்திலே கொண்டு. வெந்தீ – கொடிய நெருப்பு. தீய – கொடிய. வெங்கண் – கொடிய கண்கள்.

பெண் வடிவம் கொண்ட தீயென்கிறான், தாடகையைக் கவிஞன். இவள் கண்ணிலும் தீ; கையிலும் தீ! கண்ணிலே கோபத்தீ; கையிலே அழலும் சூலமாகிய தீ. தானும் தீயைப் போல அழன்றுகொண்டே, சூலாயுத மென்ற தீயைக் கண்களில் வீசும் கோபத்தீயோடு இராமன் மேலே செல்லும்படி வீசினாள்.

இப்போதுதான் இராமன் அம்பைத் தொடுக்கிறா னாம். ஆனால், அவளைக் கொல்வதற்காக அல்ல; தற் காப்பிற்காகத்தான்.

*"மாலும் அக்கணம் வாளியைத் தொட்டதும்,*
*கோல விற்கால் குனித்ததும் கண்டிலர்;*
*கால னைப்பறித் துக்கடி யாள்விட்ட*
*சூலம் இற்றன துண்டங்கள் கண்டனர்."*

[மால் – விஷ்ணுவின் அவதாரமான இராமன். வாளி – பாணம். கோல வில் – அழகிய வில். குனித்ததும் – வளைத்ததும். கடியாள் – கொடியவள்.]

இராமன் பாணத்தைத் தொட்டதையும், வில்லை வளைத்ததையும் ஒருவரும் பார்க்க வில்லையாம். தாடகை மட்டுமல்ல; இலட்சுமணனும் விசுவாமித்திரருங்கூடப் பார்க்க முடியவில்லையாம். அவ்வளவு விரைவாக அந்தச் செயல்கள் நிகழ்ந்தன. தாடகை வீசின சூலம் அறு பட்டதும், அந்தத் துண்டுகளைத்தான் பார்த்தார்களாம்.

சூலத்தை யிழந்த தாடகை கற்களை யெடுத்து வீசினாள்.

*"அல்லின் மாரி அனைய நிறத்தவள்,*
*சொல்லு மாத்திரை யிற்கடல் தூர்ப்ப ஓர்*
*கல்லின் மாரியைக் கைவகுத் தாள்; அது*
*வில்லின் மாரியின் வீரன் விலக்கினான்."*

[அல் – இருள். மாரி – மழை. மாத்திரையில் – அளவிலே. வகுத்தாள் – எடுத்துப் பொழிந்தாள்.]

தாடகை கற்களை மழையாகப் பொழிந்தாளாம். அந்தக் கல்மழையை இராமன் வில் மழையாகிய

அம்புகளால் தடுத்துவிட்டான். இனிமேல் இவளால் முனிசிரேஷ்டருக்கு ஆபத்து விளையக்கூடுமென்று தெரிந்து,

*"சொல்லொக்கும் கடிய வேகச்*
*சுடுசரம், கரிய செம்மல்*
*அல்லொக்கும் நிறத்தி னாள்மேல்*
*விடுதலும், வயிரக் குன்றக்*
*கல்லொக்கும் நெஞ்சில் தங்காது*
*அப்புறம் கழன்று, கல்லாப்*
*புல்லர்க்கு நல்லோர் சொன்ன*
*பொருளெனப் போயிற் றன்றே!"*

[சரம் – அம்பு. புல்லர் – மூடர்.]

கல்லாத கீழ்மக்களுக்கு நல்லவர்கள் சொன்ன பொருள் போலே போய்விட்டதாம் இராம பாணமும், தாடகை நெஞ்சிலே தங்காமல். தான் பாழாக்கிய பாலைவனத்தைக்காட்டிலும் பாழ்பட்டிருந்த அந்த நெஞ்சை, 'வயிரக் குன்றக் கல் ஒக்கும் நெஞ்சு' என்று வருணிக்கிறான். அந்த வனத்திலே அவள் தங்கியிருந்த கல்மலையைக்காட்டிலும் எவ்வளவோ கடினமாயிருந்த தாம், அந்தப் பாவி நெஞ்சு.

இராம பாணத்தையோ 'சொல் ஒக்கும் கடிய வேகச் சுடுசரம்' என்று வருணிக்கிறான். யாருடைய சொல்? விசுவாமித்திரரைப் போன்ற மகரிஷிகளின் சாபச் சொல்லா? கம்பனைப் போன்ற மகாகவிகளின் – நெருப்பைக் கக்கும் – சொல்தானா?

தாடகை அலறிக்கொண்டே மடிந்து விழுந்தாள். இந்தப் போரைக் 'காகுத்தன் கன்னிப் போர்' என்கிறான் கவிஞன். இராவணன்பாட்டி, வலிமையிலும் கொடுமையிலும் ஒருங்கே முற்ற மூத்து முதிர்ந்திருந்தாள். அந்த இராட்சஸ சக்கரவர்த்தியின் விநாச காலத்தைக் காட்டும் உற்பாதமாக அவனது வெற்றிக்கொடி அற்று விழுந்தது போலிருந்ததாம் அந்த வீழ்ச்சி.

வில்லை முரித்துச் சீதையை மணஞ்செய்து கொள்ளப்போகு 'கைவண்ணம்' இப்படிப் பட்டதென்று இந்தக் கன்னிப்போர் முன் கூட்டியே ஒருவாறு அறிவிக்கிறது.

---

*நன்றி கம்பன் மணிமலர் – 1982 காரைக்குடி கம்பன் கழகம்*

'ஆதி "அரி ஓம் நம" நராயணர் திருக் கதை
அறிந்து, அனுதினம் பரவுவோர்,
நீதி அனுபோக நெறி நின்று, நெடுநாள் அதின்
இறந்து, சகதண்டம் முழுதுக்கு
ஆதிபர்களாய் அரசு செய்து, உளம் நினைத்தது
கிடைத்து, அருள் பொறுத்து, முடிவில்
சோதி வடிவு ஆய், அழிவு இல் முத்தி பெறுவார்' என
உரைத்த, சுருதித் தொகைகளே.

# கம்பரும் தமிழரும்




ஒரு விசயத்தில் ஆங்கிலேயரைப்போல் யோகக்காரர் உலகத்திலே கிடையாது. அவர்களுடைய பாஷையானது உலகம் எங்குமே பரவி இருக்கிறது. சாமானியமாக எல்லாத் தேசத்தாரும் அனுபவிக்கும்படி ஆங்கிலத்தில் ஏதோ ஒரு புஸ்தகம் எழுதிவிட்டால், அதை வாசித்தவர்களை லக்ஷம் லக்ஷமாகக் கணக்குச் செய்யவேண்டியிருக்கிறது. வாசிக்கிறவர்கள் உலகத்தில் முக்குமுடைகள் எங்கெல்லாமோ இருந்துகொண்டு புஸ்தகத்தைப் பற்றி அப்படியும் இப்படியுமாகப் பேசி அனுபவிப்பார்கள். ஒரு புஸ்தகம் எத்தனை எத்தனை பேரை எல்லாமோ ஒன்றுசேர்த்து ஒரு மனப்பாங்குக்குக் கொண்டுவந்துவிடுகிறது. இது ஆங்கில பாஷைக்கும் அதற்குரிய ஆங்கிலேயருக்கும் பெரிய யோகம்.

ஆனால், யோகத்தில் யோகம் என்னவென்றால் முந்நூறு வருஷத்துக்கு முன் எழுதிய புஸ்தகத்தை, அதுவும் தலைசிறந்த கவியை, ஆங்கிலேயர் எல்லாரும் நெடுகிலும் தக்க முறையில் பாராட்டி அனுபவித்து வருகிறார்கள் என்பதுதான். ஷேக்ஸ்பியர் என்றால் தெரியாத ஆங்கிலேயன் கிடையாது. கல்வி பயின்றவனோ ஷேக்ஸ்பியரைத் தன் வாழ்க்கையோடு ஒட்டிய அங்கமாக எண்ணுகிறான். கவிஞனை இப்படி ஏகோபித்துப் பாராட்டி வருவதால், நூலுக்குச் சரியான சக்தி ஏற்படுகிறது, பயிலுகிறவர்களுக்கும் அறிவும் உணர்ச்சியும் எவ்வளவோ உயர்ந்துவிடுகின்றன.

ஷேக்ஸ்பியர் ஆங்கிலத்தில் தலைசிறந்த கவி என்பதுபற்றி விவாதிக்க மனுஷர்களே கிடையாது. ஷேக்ஸ்பியர்தான் உலகத்திலே சிறந்த கவி என்று ஆங்கிலேயர் சொல்லத் தயங்குவதில்லை. அயர்லாந்து, ஸ்காட்லாந்து தேசத்தார், தங்களுக்கு விரோதமான இங்கிலாந்து தேசத்தான் ஷேக்ஸ்பியர் என்று ஒதுக்குவதில்லை. சமய வேற்றுமை பற்றி விரோதிப்பதும் இல்லை. ஏதோ விதிவசத்தால், ஷேக்ஸ்பியர் தமிழ்நாட்டில் தமிழ்க் கவிஞனாகப் பிறக்க நேர்ந்திருந்தால் அவர் பாடு பெரும்பாடாகத்தான் போயிருக்கும். ஷேக்ஸ்பியர் தப்பி விட்டார். கம்பராலோ தப்ப முடியவில்லை. தமிழ்நாட்டில் வந்து பிறக்க நேர்ந்துவிட்டது.

ஆயிர வருஷமாகவே தமிழர்கள் அவர்மேல் இல்லாத பழியெல்லாம் சுமத்தப் பார்த்திருக்கிறார்கள். கட்டின கதைகளுக்குக் கணக்கில்லை. கம்பருக்கு அம்பிகாபதி என்று மகனொருவன் இருந்தானாம். ராஜா மகளை இச்சித்து, உண்ட வீட்டுக்கு ரண்டகம் செய்தானாம். கம்பரோ ராஜா மகனைக் கொன்றாராம்.

சேர அரசனோடு சரிசமானமாக இருந்து கொண்டு சகல மரியாதைகளுக்கும் ஆளானவராய் இருந்தாராம். இருக்கும்போது அவருக்கு உயர்ந்த ஜாதிப் பிறப்பு ஒன்றும் கிடையாது என்று ருஜு ஆய்விட்டதாகக் கதை கட்டி விட்டார்கள் அந்தக் காலத்துப் புலவர்கள்.

பிற்காலத்துப் புலவர்களோ, ஜாதியை மாற்ற வேண்டி, பழைய சாற்றுகவி ஒன்றிலுள்ள பாடத்தையே மாற்றத் தலைப்பட்டார்கள்.

இராமாயணத்தைக் கம்பர் திருவெண்ணெய் நல்லூரில் வைத்து அரங்கேற்றியபோது ஒரு புலவர் சம்பிரதாயத்தை ஒட்டிச் சாற்றுகவிகள் மூன்று எழுதி வாசித்தார். கம்பர் செல்வந்தராகப் பலருக்கும் கொடை கொடுத்து, வள்ளல் என்று சொல்லும் படியாகத் திருவழுந்தூரில் வாழ்ந்து வந்தார் என்று

புலவர் பாடியிருக்கிறார்.

*"சீரணி சோழ நாட்டுத்*
*திருவழுந் தூரில் வாழ்வோன்*
*காரணிக் கொடையான் கம்பன்*
*தமிழினாற் கவிசெய் தானே"*

முதல் அடியில் 'திருவழுந்தூரில் வாழ்வோன்' என்பது, இயல்பான வார்த்தை. அதைத் 'திருவழுந்தூரு வச்சன்' என்று பிற்காலத்தில் மாற்றியிருக்கிறார்கள். இரண்டாவது சாற்று கவியிலும் 'வள்ளல்' என்று மறுபடியும் புகழ்ச்சியாகப் பாடியிருக்கிறார். திருவழுந்தூருக்குப் பக்கத்தில் இருந்திருக்கக்கூடிய ஒரு கிராம வட்டம் கம்பருக்குரியதாய் அவர் பெயராலே 'கம்ப நாடு' என்று வழங்கப்பட்டிருக்க வேண்டும். இதைக் குறித்து, 'கம்ப நாடுடைய வள்ளல்' என்று சொல்லுவதும் இயல்புதானே! இப்படி எல்லாம் அந்தஸ்துள்ள ஒருவரைப் புகழ்ந்து பாட வந்தவர், 'உவச்சன்' என்று சொல்லியிருப்பாரா? சொல்ல அவசியந்தான் உண்டா?

ஆரோ ஒருவர், வேண்டுமென்றோ அல்லது எழுத்தை வாசிப்பதில் ஏற்பட்ட கஷ்டத்தினாலோ பாடத்தை மாற்றிவிட்டார். இந்தப் பிழைபட்ட பாடத்தை இறுகப் பிடித்துக் கொண்டு ஜாதி நிர்ணய ஆராய்ச்சியில் புகுந்து விட்டார்கள் புலவர்கள். சேரனுடைய சமஸ்தான வித்துவான்களோ பூர்வ காலத்தில் பாடத்தை வேறுவிதமாகத் 'திருவழுந்தூ ரம்பட்டன்' என்று கூசாமல் மாற்றியிருப்பார்கள். ஜாதியைக் குறிக்க அவர்களுக்கு அவ்வளவு ஆத்திரம்.

கம்பர் எந்த ஜாதியாய் இருந்தாலும் நமக்குக் கவலையில்லை. உலகத்தில் தலைசிறந்த ஜாதியைச் சேர்ந்தவர் அவர் என்பது உண்மை. அதாவது கவிச்சக்கரவர்த்தி – ஜாதி. காளிதாஸர், டாகூர், ஷேக்ஸ்பியர், ஹோமர் – இவர்களுடைய ஜாதி தான் கம்பர் ஜாதி. இதற்கு மேலான ஜாதி இருக்க முடியாது.

தற்காலத்து ஆசிரியர்கள், ஜாதியின் தாரதம்மியத்தைப் பாராட்டுவதனால் அவ்வளவாகக் கம்பருக்குக் குறைவு ஏற்பட்டுவிடாது என்று கருதி, வேறொரு வகையில் வேலை செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள். மேலே குறித்த சாற்றுகவிகளில், முதல் செய்யுளில் கம்பரை இன்னார் என்று சொல்லிவிட்டு, இரண்டாவது செய்யுளில் கவியின் சிறப்பைக் 'கவிச்சக்கரவர்த்தி', 'நரருக் கமுதம் ஈந்தான்' என்று சொல்லுகிறார். கடைசிச் செய்யுளான மூன்றாவது செய்யுளில் அந்தக் காலத்து வழக்கின்படியும் தற்காலத்து வழக்கின்படியுமே அரங்கேற்றிய நாள், நக்ஷத்திரம், இடம், சபையோர் எல்லாவற்றையும் பற்றி ஒரு குறிப்புக் கொடுத்தார்.

*"எண்ணிய சகாத்தம் எண்ணூற் றேழில்"*
அரங்கேற்றினான் என்றார்.

எண்ணூற்றேழாவது சகாப்த வருஷம் என்றால் கி.பி. 885 என்றாகும். அதாவது 9வது நூற்றாண்டு கம்பர் காலம் என்று ஏற்படும். இப்படி 9–ஆவது நூற்றாண்டு என்று, செய்யுளை வைத்துக்கொண்டு சொல்லுவதில் யாதொரு கஷ்டமும் இல்லை. ஆனாலும் சிலர் ஏதோ கஷ்டம் அடைந்து 'எண்ணூற்றேழு' என்பதற்கு 'எண்ணுகிற நூற்றேழு' என்று பொருள் செய்து, அதற்கு ஆயிரத்தைச் சேர்த்து, ஆயிரத்து நூற்றேழு என்பதாகக் கணக்கிட்டுக் கம்பரைப் பன்னிரண்டாவது நூற்றாண்டுக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள். * கம்பர் காலை இன்னும் இறுகப் பிடித்து இழுத்து இருபதாவது நூற்றாண்டுக்கே கொண்டுவந்துவிட்டாலும் நமக்குக் கவலை இல்லை.

மேலே குறித்த ஜாதி நிர்ணயம், கால நிர்ணயம் எல்லாம் ஒன்றை மாத்திரம் தெளிவாகக் காட்டுகிறது. தமிழர்களாகிய நம்மவர் ஜாதி வெறிக்கும் மதவெறிக்கும் உள்ளாகி, யாரையும், ஆயிரம் வருஷத்துக்கு முன்னிருந்த மகா கவியையும் தூற்றுவதற்கு முன் வருவார்கள்; அதற்காக ஏட்டைக் கெடுப்பார்கள்; பாட்டைக் கெடுப்பார்கள்.

மேலே சொன்ன விஷயங்களைப்பற்றிப் பேசாமலே விட்டுவிடலாம்; அவை நூலின் பெருமையைப் பாதிப்பன அல்லத்தான். ஆனால் சென்ற சில வருஷங்களாகச் சிலர் கம்பரிடத்திலும் அவர் செய்த ராமாயணத்திலும் வேண்டாத ஒரு பகைமையை உண்டாக்கிக் கொண்டு, போன போன இடங்களில் எல்லாம் பிரசாரம் செய்யத் தலைப்பட்டிருக்கிறார்கள்; எழுதவும் ஆரம்பித்

திருக்கிறார்கள். இந்தப் பிரசாரத்தின் ஆர்ப் பாட்டத்தினால் எதிர்த்துச் சொல்லுவதற்கு மனமில்லாமல் அறிவாளிகளும் பொறுப்பாளி களுங்கூட அங்கீகரித்த முறையில் ஒத்துப்பாடி விடுகிறார்கள். சாமானிய ஜனங்கள் என்ன செய்யக்கூடும்? 'ரொம்பப் படித்தவர்களே இப்படி எல்லாம் சொல்லுகிறார்கள். உண்மைதான் போலிருக்கிறது!' என்று நம்ப ஆரம்பித்து விடுகிறார்கள். இப்பேர்ப்பட்ட விளையாட்டும் வினையமும் நாளடைவில் சரித்திர உண்மைகளாக ஆகிவிடுகின்றன. இந்த வேண்டாத விபத்துக்கள் விளையாமல், பரவாமல் இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் மேலே சொன்ன விஷயங்களைப்பற்றிக் குறிப்பிட நேர்ந்தது. அதுவும் மனமில்லாமல்தான் குறிப்பிட நேர்ந்தது. மேல் நாட்டில் இத்தகைய பிரசாரங்கள் நடந்தால் கேலிக்கிடமாகும்; இங்கோ மதிப்புக்கிடமாய் விடுகிறது. இது நம்முடைய ஜாதக பலன்; வேறென்ன?

பொதுவாகப் பண்டைக் காலத்துப் புலவர்கள் சம்பந்தமாக ஜாதி நிர்ணயம், கால நிர்ணயம் செய்வது கஷ்டந்தான். வள்ளுவரைப்பற்றியும் மாணிக்கவாசகரைப்பற்றியும், காரைக்கால் அம்மையாரைப்பற்றியும், பொய்கை ஆழ்வாரைப் பற்றியும் சரித்திரக் குறிப்பு ஒன்றுமே கிடையாது. கிடையாமல் போனால் என்ன? அவர்கள் எழுதிய பாடல்களை விடவா வேறொரு புறம்பான குறிப்பு, அவர்கள் இதயத்தோடு நம் இதயத்தை ஒட்டச் செய்து விடும்!

கம்பர் சம்பந்தமாகச் சரித்திரக் குறிப்புகள் (மேலே குறித்த சாற்றுகவிகள் தவிர) அவ்வளவாக ஒன்றுமே இல்லை. மற்றக் கதைகள் கவிகள் எல்லாம் நேரான வார்த்தைகள் என்று எடுத்துக்கொள்ளக் கூடியவை அல்ல. ஏதோ அவ்வக்காலத்தில் உள்ள புலவர்களும் மற்ற ஜனங்களும் கம்பருடைய பாடல்களில் பெருமையையும் நயத்தையும் பற்றி வின்னியாச முறையில் சொன்னவைகளே ஒழிய வேறில்லை. ஔவை, புகழேந்தி, ஒட்டக்கூத்தர், கம்பர் எல்லாரும் ஒரே காலத்தில் இருந்ததாகக் கற்பித்துக்கொண்டு பிள்ளைகளை 'டிரில்' வாங்குகிற மாதிரி, 'உட்காருங்கள், எழுந்திருங்கள், ஒன்று, இரண்டு, மூன்று!' என்றெல்லாம் 'டிரில்' வாங்கிக் கதை கட்டியிருக்கிறார்கள். இவைகளை வைத்துக்கொண்டு பிற்காலத்துப் புலவர்கள் ஆராய்ச்சியில் புகுந்துவிடுவார்கள் என்று தெரிந்திருந்தால் முன்னோர்கள் அவ்வாறு கதை கட்டி விளையாடி இருக்க மாட்டார்கள்.

இப்படி எல்லாம் ஊன்றிப் பார்ப்பதில் கம்பரைப்பற்றிச் சரித்திரம் இல்லாமல் போய் விடுகிறதே என்று வருத்தப்படவேண்டியதில்லை. உண்மையில் மகாகவியின் சரித்திரம் அவர் பாடல்களின்தான் கிடக்கிறது. கம்பர் வெகு விரிவாகவே தம்மைப்பற்றிய சரித்திரம் எழுதி வைத்திருக்கிறார் என்று சொல்லலாம். கம்ப ராமாயணத்தில் அவருடைய செய்யுளான ஒவ்வொன்றும் அவருடைய உண்மையான அனுபவத்தை–இதய பாவத்தை–பளிங்கில் வைத்துக் காட்டின மாதிரி காட்டுகிறது. இதை விடச் சிறந்த சரித்திரக் குறிப்பு ஒரு கவிக்கு இருக்க முடியாது.

ஆகவே, நாம் அறிய முயலவேண்டியன வெல்லாம் கம்பருடைய இதயம். இந்தப் பூமியையும் பேரண்டத்தையுமே தன்னுள்ளே வட்டமிட்டு ஓடச் செய்து அனுபவிக்கக்கூடிய அவ்வளவு விசாலமானது அந்த இதயம்.

*"வேதங்கள் அறைகின்ற,*
*உலகெங்கும் விரிந்தன, உன்*
*பாதங்கள் இவை, என்னில்*
*படிவங்கள் எப்படியோ!"*

என்று கடவுளின் முடிவில்லாத வியாபகத்தை அளந்து காட்டுகிறார். தமிழர்களுக்கு ஆயுள் முழுதுமே ஊடாடித் திரிந்து களிப்பதற்கு ஓர் உண்மை உலகம், அதாவது பாவ உலகம் கிடைத்திருக்கிறது. ஷேக்ஸ்பியரின் இதய உலகத்தை ஆங்கில மக்கள் ஏகோபித்து அனுபவிக்கிற மாதிரி, கம்பரது இதய உலகத்தைத் தமிழர் ஏகோபித்து அனுபவிப்பார்கள் என்பது ஏற்பட்டுவிட்டால், நமக்குக் கிடைக்கக்கூடிய உல்லாச உயர்தர வாழ்க்கை மாதிரி வேறு யாருக்கும் கிட்டாது என்று சொல்லலாம். இதற்கு ஒப்பாகச் சொல்ல வேண்டும் என்றால் கிரேக்க பாஷை வழக்கில் இருந்த போது ஹோமர் பாடிய கவியைப் பாடிப்பாடி கிரேக்கர்கள் – மேதாவிகள் முதல் சாமானிய பெண்டுகள் வரை – அனுபவித்து வந்ததைத்தான்

சொல்லலாம். இது மிகையல்ல. கம்பர் அவ்வளவு எளிமையோடும், ஆடவர் பெண்டிர் எல்லாருடைய இதயத்தைத் தட்டும்படியான அவ்வளவு தெளிவான பாவத்தோடும் கவிகளைப் பாடியிருக்கிறார். அவருக்கும் நமக்கும் ஆயிரம் வருஷம் இடையே கிடப்பதால் அங்கொரு வார்த்தை இங்கொரு வார்த்தை நம்முடைய வழக்கோடு ஒட்டாமல் இருக்கலாம். மற்றப்படி பாஷை, வீட்டு பாஷையே. கம்பராமாயணத்தை ஆர, அமர பாவத்தை அழுத்திப் பாடினால் யாருமே அறிந்தனுபவிக்க முடியும் என்பது நம்மில் பலரும் கண்கூடாகக் கண்டதே.

ஆனாலும், கம்பராமாயண புஸ்தகத்தை இப்போது இருக்கிறபடி வாசித்து அனுபவிப்பது கஷ்டமான காரியமே. சந்திகளையும் சீரையும் சேர்த்து அச்சிட்டிருப்பதால் வாசிப்பது யாருக்குமே கஷ்டம். சாமானிய மக்களுக்கு முடியவே முடியாது. இந்தக் கஷ்டத்தை ஒருவாறு இனி நிவர்த்தி செய்து கொள்ளலாம். பழைய காலத்துப் பிடிவாதக் காரர்களான சந்திப் புலவர்கள் காலம் போய் விட்டது. 'பற்றேய்த்து வா – காற்றுட்டுத் தா–காறள்ளாடுது – பாறருவாருண் டோ – முட்டைத்துவிட்டது என்று எழுதியும் பேசியும் வந்த காலம் போய்விட்டது. சந்தி பிரித்து, சீர் பிரித்து, செய்யுள்களை எழுதலாம், அது தமிழருக்குத் துரோகம் அல்ல என்று துணிந்து சொல்ல ஆரம்பித்துவிட்டார்கள். ஆகவே ஒரு கஷ்டம் எளிதில் நீங்கிவிடும்.

தமிழ் நூல்களில் பாடம் எத்தனையோ விதத்தில் சிதைந்து கிடக்கிறது. ஆனால், கம்பராமாயணத்தில் பாடம் சிதைந்து கிடக்கிறமாதிரி வேறொன்றிலும் பார்க்கமுடியாது. சில பாடங்களில் சீருக்குச் சீர் பாட பேதம். பாட பேதங்களைக் குறித்த எந்த பதிப்பைப் பார்த்தாலும் அது தெரிய வரும். கண்ணை எடுத்துக் காதில் வைத்திருக்கும்; மூக்கில் வைத்திருக்கும்அப்படியே காதை எடுத்து இடுப்பிலும் காலை வாங்கித் தோளிலும் தொங்கவிட்டிருக்கும். ஆப்பரேஷன் செய்து உருவம் ஆக்குவதென்றால் எளிதா? 'போதும், போதும் கம்பராமாயணம் போதும்' என்று தோன்றிவிடும். பழைய ஏடுகள் ஒரு வகையில் வழி காட்டலாமே ஒழியப் பூரணமாகத் திருப்தி கொடுத்த பாடாக இல்லை. யூகித்து யூகித்து ரொம்பவும் சிரமப்பட்டுத்தான் பாடங்களைக் கண்டுபிடித்துத் திருத்த வேண்டியிருக்கிறது.

பாட பேதங்கள், அதாவது பார்த்து எழுதுவதில் ஏற்பட்ட பிழைகள் இருந்துவிட்டுப் போகட்டும். கம்பர் பாடாத கவிகளை ஏட்டில் புகுத்தியிருக்கிறார்களே! அதுவும் எத்தனை எத்தனையோ! இதனால் பாத்திரங்களும் கட்டங்களும் உருக்குலைந்து போயிருக்கிறதைப் பார்த்தால் ஏதோ கம்பர்மேல் துவேஷம் கொண்ட புலவர்கள் நெடுகிலும் ஆயிர வருஷமாகச் செய்து வந்த அக்கிரமம் என்று சொல்லத் தோன்றும். இந்தச் செருகு கவிகளையும் சேர்த்து ஒரு கட்டத்தை வாசித்துப் பார்த்தால் கம்பரானவர் கவி அல்லர் என்று மாத்திரம் தோன்றாது, பைத்திய ஆஸ்பத்திரியில் வைத்துப் பந்தோபஸ்துச் செய்ய வேண்டிய ஆசாமி என்றே தோன்றும். செருகு கவிகளை அறவே களைந்து விட்டுப் படித்தாலொழியக் கம்பரை உணர்ந்தோம் என்று சொல்ல முடியாது. இந்த விஷயத்தில் பேரம் பண்ணிக்கொண்டிருந்தால் கம்பருக்குத் துரோகம் செய்கிறோம் என்று தான் ஏற்படும். கம்பருடைய இதய பாவங்களையும், ஓசை தாளம் ஆகிய இசைப் பண்புகளையும், கை லாகவங்களையும் பார்த்தனுபவித்த சாதனம் உடையவர்கள் செருகு கவிகளைக் கண்டு பிடித்து ஒதுக்கிவிடலாம். இது ஒருவாறு சித்தியாவதுதான். கம்பரது கவி ஒவ்வொன்றிலும் இருக்கிறது இவர் முத்திரை. ஷேக்ஸ்பியர் கவிகளில் முத்திரையிருக்கிறது என்று சொல்லுகிறார்கள். மகாகவிகள் எல்லோரிடத்திலுமே முத்திரை என்று சொல்லக்கூடிய தனித்த ஒரு அனுபவ தத்துவம் உண்டு. கம்பருடைய தனித்த அனுபவ தத்துவம் ஒரு செய்யுளில் இல்லை என்றால் அந்தச் செய்யுளைத் தள்ளிவிடுவதற்கு யோசிக்கவே கூடாது. வைர உட்டாணிகளால் செய்த பதக்கத்தின் இடையே காசுக்கு நாலாக வாங்குகிற கண்ணாடித் தரிப்பு இருந்துவிட்டால், அவைகளை உடனே பிடுங்கி எறிய வேண்டியதுதானே முறை. அல்லாத பக்ஷம் குறுணி வந்து கோட்டையைக் கெடுத்தது என்றபடி பதக்கமே தரிப்புப் பதக்கமாய்ப் போய்விடும். செருகு கவிகளோடு சேர்ந்திருப்பதால் கம்பராமாயணமும் இந்தச் சிக்கலான நிலையில்தான் இருக்கிறது.

பாட பேதம் போகட்டும்; செருகு கவி போகட்டும். அவைகளைத் திருத்திக் கொள்ளலாம். களைந்துகொள்ளலாம். ஆனால், கவிகளில் எத்தனையோ விடுபட்டிருக்கின்றன. நம்மால் அவைகளை நிரப்ப முடியாது. அதற்குத் தெய்வீக

சக்தியல்லவா வேண்டும். போனது போனதாகத்தான் முடிந்துவிட்டது. இந்த நஷ்டத்தை இவ்வளவென்று கணக்கிட்டுச் சொல்ல முடியாது. இந்த நஷ்டத்துக்கும் முத்தொள்ளாயிரம் இரண்டாயிரத்தறு நூறு தொலைந்து போனதற்கும் தமிழ் மக்கள் என்றென்றும் துக்கம் கொண்டாட வேண்டியது தான். ஒருகால், முத்தொள்ளாயிர ஏடு கிடைத்தாலும் கிடைக்கலாம்; குக்கிராமம் எதிலாவது இறப்பில் செருகிக் கிடக்கலாம்; வெளியாகியும் விடலாம். கம்பராமாயணம் சம்பந்தமாக அவ்வித நம்பிக்கை வைக்க இடமே இல்லை.

இப்படியாகப் பாடல்கள் தொலைந்து போன போதிலும் மிஞ்சியுள்ள பாடல்கள் ஆயிரக் கணக்காகவே இருந்தாலும் ஒவ்வொரு செய்யுளுமே பட்டம் பட்டமாகத் திருப்பிப் பார்த்து அனுபவித்துக் கொண்டே இருக்கக் கூடிய தனி இசைத்தமிழ்க் கவியாக (மேல் நாட்டார் 'லிரிக்' என்பார்கள்) இருப்பதாலும் கவிகளெல்லாம் ஆயுள் நாள் முழுதுமே பாடியும் பாடக் கேட்டும் அனுபவிக்கக்கூடி யவைதாம். இவை தமிழருக்கு நிலையான செல்வம்தான்.

கம்பராமாயணம் பற்றிய விவரந்தெரியாத சிலர், அது வால்மீகி ராமாயணத்தின் மொழி பெயர்ப்புத்தானே என்று அடிக்கடி கேள்வி கேட்கப் பார்க்கலாம். வால்மீகி ராமாயணத்தின் மொழி பெயர்ப்பையும் கம்பராமாயணத்தையும் எடுத்துக் கொள்ளலாம். ஒப்பிட்டுப் பார்த்தால் ஏதோ ராமர், சீதை, இலக்குவன், பரதன் என்றெல்லாம் இரண்டிலும் வரும். குணாதிசயங்களை நோக்குவோமானால் இனம் கண்டு பிடிக்க முடியாதபடி அவ்வளவு வித்தியாசமாய் இருக்கும். வால்மீகியின் சீதை வேறு, கம்பரது சீதை வேறு. அப்படியேதான் ராமர், பரதன் எல்லோருமே. கட்டங்களை வகுக்கும்போது கம்பர் தம் இஷ்டம்போல் பாத்திரங்களின் பாவங்களுக்குத் தெளிவும் வேகமும் உண்டாகும்படி மாற்றி வகுத்துக்கொள்கிறார். முக்கியமாகப் பாத்திரங்கள் பேசும்போது தமிழுக்குரிய தனியான தொனியோடு பேசுவார்கள். அவர்களுடைய பேச்சுக்கென்றே, பாவத்துக்கென்றே சொல்லையும் தாளத்தையும் செய்யுள் உறுப்புகளையும் தமிழ்த் தெய்வம் ஆதியில் வகுத்ததோ என்று சொல்லத் தோன்றும். உதாரணமாக, அனுமாருடைய உயர்ந்த உருவத்தையும் சக்தியையும் பார்த்துச் சீதை வியக்கிறாள். 'என்னைக் கண்டுபிடிக்க நீ ஒருவன் இல்லாது போயிருந்தால் இராமருடைய அருளை யார் அறியப் போகிறார்கள்? அவருக்குப் புகழ் ஏது? கிடையாதுதான். ஆனால் உன்னுடைய பராக்கிரமம் முழுதும் தெரிய வேண்டுமானால் இந்த இலங்கை ஏழு கடலுக்கும் அப்பால் இருந்திருக்க வேண்டாமா' என்கிறாள்.

*"ஆழி நெடுங்கை ஆண் தகைதன்*
*அருளும் புகழும் அழிவின்றி,*
*ஊழி பலவும் நிலைநிறுத்தற் (கு)*
*ஒருவன் நீயே உளையானாய்;*
*பாழி நெடுந்தோள் வீரா! நின்*
*பெருமைக் கேற்ப பகைஇலங்கை*
*ஏழு கடற்கும் அப்புறத்த(து)*
*ஆகா திருந்தது இழிபன்றோ?"*

இந்தச் செய்யுளைப் பாடப்பாட, அதாவது ஆர அமர பாவத்தையொட்டிப் பாடப்பாட, என்ன தோன்றும்! சீதை பேசுவதற்கென்றே சொல், இசை, எதுகை மோனைகளைத் தமிழ்த் தெய்உவம் அமைத்ததாகத்தான் தோன்றும்.

இந்த மாதிரிப் பாடல்கள் ஆயிரக்கணக்காக அல்லவா இருக்கின்றன! அவை தமிழ்மக்கள் பூமியில் தோன்றிய ஆதிகாலத்திலிருந்தே அவர்கள் மனத்தில் எழுந்த உணர்ச்சி, தத்துவங்கள் எல்லாமே நிறைந்து பரிமளிக்கிற பாடல்கள். ஷேக்ஸ்பியரை ஆங்கிலேயர் ஏகோபித்து அனுபவிக்கிறதுபோல நாமும் ஒன்று பட்டுக் கம்பர் பாடல்களைத் தமிழ் வழங்கும் நாடெங்கும் தீவகம் எங்குமே பாடி அனுபவிப்போமானால் தமிழுலகம் வானுலகமாக மாறாதா!

'கம்பராம் புலவரைக் கருத்திருத்துவாம்'

---

நன்றி : 'கம்பன் மணிமலர்' – 1982 காரைக்குடி கம்பன் கழகம்.

# கவிஞனைப் போற்றிய கவிஞன்



கம்பன் அடிப்பொடி

தமிழகத்திற் பிறந்த கவிகளுள் மகாகவி பாரதி ஒரு தனிப்பெருமையுடையவன். தன்னேர் இல்லாத தத்துவப் புலவன். இது முற்றிலும் உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை. கம்பன் வாக்கிற்கூறினால், " இவன் கல்லாத கலையும் வேதக் கடலும் உலகத்து எங்கும் இல்லை" என்னலாம்.

நாடு, மொழி, சமுதாயம், சமயம், தத்துவம், அரசியல், காதல், வீரம், அன்பு, அறம், நாட்டு விடுதலை, ஆன்ம விடுதலை, சர்வதேசியம், சமரசம், சமத்வம், ஆன்மநேய ஒருமைப்பாடு முதலான எல்லாத் துறைகளிலும் கருத்தைச் செலுத்திக் கவிதை பொழிந்த கார்மேகம் பாரதியே! நல்லனவற்றை நாவார வாழ்த்துவதைப் போலவே அல்லனவற்றை அகங்கொடுத்துச் சாடியுள்ளான். எங்கெல்லாம் மக்கள் வீறுகொண்டெழுந்து விடுதலைக்குப் போராடினும் அவர்களையெல்லாம் வாழ்த்தி மகிழ்ந்திருக்கின்றான்.

கவி, கவிதை, செய்யுள், பாட்டு, காப்பியம், வசன கவிதை, கட்டுரை கதை முதலியவற்றில் காணும் எளிமையும், தெளிவும், உணர்ச்சியும், சுவையும், எல்லாம் பாரதியின் பெருமைக்குக் கட்டியங் கூறுவனவாம்.

கம்பனைப்போல், வள்ளுவன்போல், உலகெலாம் ஒன்று; உலக மக்கள் யாவரும் ஒரு குலம்; காக்கை குருவி முதல் எல்லாம் நம்ஜாதி என்றெல்லாம் ஆன்ம நேய ஒருமைப்பாட்டு அத்வைதியாக மிளிர்கிறான், பாரதி.

சாதி பேதம், மத வேற்றுமை, ஆண்–பெண் உயர்வு தாழ்வு, ஆண்டான் அடிமை நிலை முதலிய கேடுகளை எல்லாம் சுட்டுப் பொசுக்கி விட்டு,

***" எல்லாரும் ஓர்குலம்; எல்லாரும் ஓர்இனம்;***
***எல்லாரும் இந்திய மக்கள்;***
***எல்லாரும் ஓர்நிறை; எல்லாரும் ஓர்விலை;***
***எல்லாரும் இந்நாட்டு மன்னர்"***

என்று வெற்றி முரசு கொட்டுகிறான்.

இப்படி எல்லாத் துறைகளிலும் ஆழ்ந்து அறமுரைத்த அற்புதக் கவிஞன் மகாகவி பாரதியே. அவனையன்றி மற்றொரு கவிஞனைக் காணலும் காட்டலும் அரிதே!

கம்பனை வள்ளுவனை இளங்கோவை காளிதாசனை தாயுமானவனைப் பாராட்டிப் பாரதி வியந்து பாடுவதை நாம் அறிவோம். ஆனால், அவர்களுள் எல்லாம் கம்பனைப் பாராட்டியதே அளவாலும் முறையாலும் அதிகமாகும். காரணம், கம்பன் அருளிய இராமகாதைக் காப்பியம், அவன் கவிதா சந்நதம் பாரதியைப் பெரிதும் ஈர்த்திருக்கிறது.

கம்பனுடைய புரட்சிகரமான நோக்கும், கதை நடத்தும் போக்கும், பரந்துபட்ட பேரறிவும், கையாளும் உத்திகளும், ஓசை நயமும், ஒப்பற்ற பாத்திரங்களை அற்புதமாய்ச் செயல் படச் செய்யும் நேர்த்தியும் வேத உபநிடதக் கருத்துகளை வெளிப்படுத்தும் கீர்த்தியும், வள்ளுவத்தைப் பிழிந்து வடித்து வைக்கும் பெற்றியும் கலையெலாம் வல்ல பாரதியின் உள்ளத்தைக் கவர்ந்ததில் வியப்பொன்றுமில்லை.

கம்பன் கையாண்ட உத்தியையும், அவன் பொருளை உணர்த்தும் முறைகளையும் பாரதியின் படைப்புகளில் மணக்கக் காண்கிறோம்.

***" சொல்லடா 'ஹரி என்ற கடவுள் எங்கே?***
***சொல்!" என்று ஹிரணியன்தான் உறுமிக் கேட்க***
***நல்லதொரு மகன்சொல்வான்– " தூணில் உள்ளான்***
***நாரா யணன்துரும்பில் உள்ளான்" என்றான்.***
***வல்லபெரும் கடவுள் இலா அணுஒன்றில்லை***
***மகாசக்தி இல்லாத வஸ்து இல்லை!"***

என்று மகாகவி பாடும்போது கவிச்சக்கரவர்த்

தியின் ஹிரண்யன் வதைப்படல நினைவுதான் அவன் உள்ளத்தில் இருந்திருக்க வேண்டும்.

*"காதலிலே இன்பம் எய்திக் களித்து நின்றால்
கனமான மன்னவர்போர் எண்ணு வாரோ?"*

என்று பாடும்போது கவிச்சக்கரவர்த்தியின்,

*"யாரொடும் பகைகொள்ளிலன் என்றபின்
போரொடுங்கும்; புகழ் ஒடுங்காது"*

என்னும் அடிகளே மகாகவியின் மனத்தில் தோன்றியிருக்க வேண்டும்.

இனி, மகாகவி பாரதி கவிச்சக்கரவர்த்தி கம்பனை நேரடியாகவே போற்றி மகிழும் இடங்களைப் பார்ப்போம்.

*"கல்வி சிறந்த தமிழ்நாடு'*

என்று தமிழ்நாட்டின் கல்விச் செழிப்பை எடுத்தோதியதும், உடனே, மகாகவியான நினைவில் நல்ல பல்விதமாயின சாத்திரத்தின் மணத்தை நுகர்ந்து களிக்கும் பருணிதனான கம்பன் தோன்றியது இயல்பேயன்றோ? எனவே அடுத்து,

*"புகழ்க் கம்பன் பிறந்த தமிழ்நாடு"*

என்னும் சொற்கள் உதிர்கின்றன.

*"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல்
இனிதாவது எங்கும் காணோம்"*

என்று பெருமிதத்தோடு பாடித் தமிழ்மொழியின் எழில் உணர்த்தும் மகாகவி,

*"யாம்அறிந்த புலவரிலே கம்பனைப்போல்,
வள்ளுவன்போல், இளங்கோ வைப்போல்,
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததிலை;
உண்மை! வெறும் புகழ்ச்சி இல்லை"*

என்று காரணமும் காட்டுகிறான்.

இங்கே ஓர் ஐயம் ஏற்படலாம். மூன்று பேரைக் கூறி இவர்க்கு நிகர் எங்கும் இல்லை என்றால், "இவர்களுள் ஒருவருக்கு மற்றவர் நிகர்தானே?" என்ற வினா எழுதல் இயல்பே. ஆனால் கவிஞனின் மதிப்பீட்டை நாம் நன்கு புரிந்துகொள்ள வேண்டும்.

கவிஞன் காட்டிய மூவரும் வெவ்வேறு வகையில் தனிப் பெருமையுடையவர்கள். கம்பன் பெருங்காப்பியம் படைத்தவன். வள்ளுவன் நல்லறம் பாடியவன்; இளங்கோ வரலாற்றுக் காப்பியம் வடித்தவன். எனவே, மூவரும் மேற்கொண்ட துறைகள் முற்றிலும் வேறு வேறானவை. ஆகவே, அந்த ஒரு சொற்றொடரை மூன்று சொற்றொடர்களாகப் பிரித்துப் பொருள் கொள்ள வேண்டும்.

1. *"யாம்அறிந்த புலவரிலே கம்பனைப் போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை."*

2. *"யாம்அறிந்த புலவரிலே வள்ளுவன் போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்த தில்லை"*

3. *"யாம்அறிந்த புலவரிலே இளங்கோ வைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை."*

இப்படிப் பிரித்துப் பொருள் கொண்டால் சிக்கல் தீர்ந்து தெளிவு கிடைத்துவிடும் இல்லையா?

கம்பன்பால் பாரதி எல்லையில்லாத பெருமதிப்புக் கொண்டிருக்கிறான். ஒரு கவிஞனுக்கு வேண்டிய எல்லாத் தகுதிகளும் கம்பனிடம் ஒளிருவதாக உணர்கிறான். இத்தனை கலைகளையும் எப்படித்தான் கற்றுத் தேர்ந்து, தெளிந்து, சுவை பிலிற்ற வடித்தளிக்க முடிந்ததோ என்று பாரதி வியந்து மகிழ்ந்திருக்கிறான். ஆம்; பற்பல கலைகளையும் கற்றுத் தேர்ந்த ஒரு மகாகவி தானே மற்றொரு கவிஞனை அளவிட முடியும்? அங்ஙனம் அளவிட்டபோது ஏற்பட்ட வியப்பே,

*"கம்பன் என்றொரு மானிடன்!"*

என்ற கவிதையில் மலர்ந்துள்ளது போலும்!

கம்பனின் கவிதாசந்நதத்தை எத்துணையள வுக்குப் போற்றி மகிழ்ந்திருக்கிறான் என்பது அவன் வாக்கில் மலர்ந்த,

*"கன்னனோடு கொடை போயிற்று; உயர்கம்ப
நாடனுடன் கவிதை போயிற்று"*

என்னும் அடிகளால் தெளிவாகப் புலப்படுகிறது. இறைவன் கூற்றாகச் சில செந்துறைகளைப் பொழிகிறான் மகாகவி. சர்வாண்டங்களும், சர்வகோடி

ஜீவர்களும் நானே! அனைத்தையும் ஆக்கியவனும் அவற்றை நிலைதடுமாறாமல் இயக்குபவனும் நானே என உணர்த்துகிறான். அவற்றின் மூலமாக அப்படி "எல்லாம் நானே!" என்ற பேசுகிற பரம்பொருள் மகாகவியின் வாக்கில்,

***"கம்பன் இசைத்த கவிஎலாம் நான்"***

என்று காட்டுகிறது.

காட்டுதற்கு அருமையான ஒரு தனிப் பொருள் கடவுள் என்பர் ஆன்றோர்.

***"இப்படியன் இந்நிறத்தன்;***
***இவ்வண்ணத்தன்***
***இவன் இறைவன் என்று எழுதிக்***
***காட்டொணாதே!"***

என்று, பேரருட் பெருஞானியாகிய அப்பர் அடிகளே கூறுவார். அவற்றையெல்லாம் முழுதுணர்ந்தவன் மகாகவி பாரதி. அவன் கம்பனில் ஆழங்காற்பட்டவன். கம்பனுடைய பேராற்றலில், பெரும்புலமையில் மனம் பறி கொடுத்தவன். மகாகவியின் சீரிய புலமை, கவிச்சக்கரவர்த்தியின் சிறந்த முயற்சியை வாயாரப் பாடுகிறது.

***"எல்லை ஒன்று இன்மை எனும்பொருள் அதனைக்***
***கம்பன் குறிகளால் காட்டிட முயலும்***
***முயற்சியைக் கருதியும் முன்புநான் தமிழச்***
***சாதியை அமரத் தன்மைவாய்ந் ததுஎன்று***
***உறுதிகொண் டிருந்தேன்!"***

என்னும் அடிகளிலே மகாகவியின் வியப்பும் வேட்கையும், ஏன் ஒரு திருப்தியுமே பளிச்சிடு கின்றதன்றோ?

---

*நன்றி : 'கம்பன் மணிமலர்', காரைக்குடி கம்பன் கழகம் – 1982..*

*வான் வளம் சுரக்க! நீதி மனு நெறிமுறை எந் நாளும்*
*தான் வளர்ந்திடுக! நல்லோர்தம் கிளை தழைத்து வாழ்க!*
*தேன் வளர்ந்து அறாத மாலைத் தெசரத ராமன் செய்கை*
*யான் அளந்து அறிந்த பாடல் இடையறாது ஒளிர்க, எங்கும்!*

# உள்ளம் குளிர்ந்தது

பேராசிரியர். மு. வரதராசன்



ஒரு குழந்தை கொதிக்கும் நீரிலே கை வைத்து அலறியது; பதைத்தது. பெற்றோர் ஓடி வந்து சேர்ந்தனர்; செய்வன செய்தனர். ஒரு மணி நேரம் கழித்து குழந்தையின் அழுகை ஓய்ந்தது. இன்னும் சிறிது நேரம் கழித்து விம்மலும் நின்றது. அன்று ஆடவேண்டிய ஆடல்களும் பாடவேண்டிய பாடல்களும் குறித்த நேரத்தில் தொடங்கவில்லை. ஆனால் குழந்தையின் ஆடலும் பாடலும் நிற்றலும் கூடுமோ? அழுகையும் விம்மலும் நின்ற பின்னர், சிறிது நேரம் கழித்து ஆடல் பாடல் நிகழ்ந்தன. குழந்தையின் விளையாட்டில் ஒழுங்கு உண்டு; காரண காரியத் தொடர்ச்சி உண்டு; உலகை ஓம்பும் ஒப்புரவு உண்டு. ஆனால் ஆடம்பரம் இல்லை; அச்சம் இல்லை; அல்லல் இல்லை; அன்று அந்தக் குழந்தை விளையாடிய போது முந்தின நாள் விளையாட்டை நினைத்தது. அதனைத் தொடர்ந்து ஆட எண்ணியது. அது என்ன விளையாட்டு? தண்ணீர்ப் பானையிலிருந்து தண்ணீரை மொண்டு மொண்டு அங்கும் இங்கும் எங்குமாக ஒழுங்காக நிரப்புதலாகும். அதன் பொருட்டுக் குழந்தை கையாண்ட கருவி தேங்காய் ஓடு ( கொட்டாங்கச்சி). அந்த ஆட்டத்தை நினைந்த குழந்தை அந்தக் கருவியைத் தேடிக் கையில் எடுத்துக்கொண்டது; தண்ணீர்ப் பானையருகே சென்றது; தண்ணீரைக் கண்டது. கண் அஞ்ச, கை பின் வாங்கிற்று. வருத்தத்தோடு வந்தது. கொதித்த நீரால் பதைத்த துன்பம் குழந்தையின் உள்ளத்தில் அல்லலைப் புகுத்தியது. நீரின் இயல்பு தண்மை என்ற இயற்கை யமைப்பைச் செயற்கை வகையால் மாற்றியது உலகம்; நீர்க்கு வெம்மை ஏற்றிக் குழந்தை மனத்தில் அச்சத்தைப் புகுத்தியது.

அந்த இளஞ் செல்வத்தை அணுகிக் கேட்கும் துணிவு நம்மிடம் இருந்து, அதற்கு ஏற்றவாறு விடை பகரும் தெளிவு அக் குழந்தையினிடம் இருந்தால், நாம் என்ன கேட்போம்? அது என்ன சொல்லும்? 'தண்ணீரைக் கண்டு ஏன் வருந்தினாய்?' என்று கேட்டால் 'தண்ணீரா? அதனை நம்பவே முடியாது; அது கையைச் சுடும்' என்ற கருத்தை, அகராதியும் இலக்கணமும் இன்னும் எழுதப்பெறாத அழகிய மழலை மொழியினால் வெளிப்படுத்தும்.

குழந்தையின் மனத்தைத் தாயினிடத்தும் காண்கின்றோம். " தலைவரா? அவரை நம்பவே முடியாது; அவர் நம்மைப் பிரிவார்" என்று அந்தத் தாய் உரைக்கின்றாள். தலைவனைத் தலைவி நம்பவில்லை. குடும்பத் தலைவர்க்கிடையே இந்த நிலை ஏற்படுகின்றது. " உன்னை விட்டுப் பிரியேன்; பிரிந்தால் உயிர் வாழேன்" என்று அன்பின் மிகுதியால் ஒரு காலத்திற் பிறந்த சொற்கள் வாழ்க்கையில் உண்மையாகவே நின்றன. ஆனால் பொருளீட்டல் காரணமாக, அரசியல் காரணமாக, தலைவன் பிரிய நேர்ந்தது; பிரிந்தான். பிரிந்து செல்ல அவன் மனமும் இடந்தரவில்லை; தலைவியும் இசையவில்லை. ஆயினும் பிரிவு நேர்ந்தது. தலைவியின் நம்பிக்கை குலைந்தது. தலைவன் அன்பு மிக்கவன் என்று வாழ்ந்த தலைவியின் நெஞ்சு வெம்பியது. நீரின் தண்மையை நம்பி விளையாடிய குழந்தை ஒருநாள் கொதிப்பை உணர்ந்து வாடியதன்றோ? தண்ணீரின் தண்மையில் நம்பிக்கை இழந்ததன்றோ? இனி எவ்வாறு நம்புவது" என்று சோர்கின்றாள் தலைவி.

***அரிதரோ தேற்றம் அறிவுடையார் கண்ணும்***
***பிரி(வு) ஓர் இடத்துண்மை யான்.***

(திருக்குறள்,1153)

என்று திருவள்ளுவர் அத்தலைவியின் மனநிலையைப் புலப்படுத்துகின்றார். ஒருமுறை நிகழ்ந்த பிரிவு அவள் நெஞ்சை நடுக்குறச் செய்கின்றது. அறிவுடையர் தாம்! ஆயினும் நம்புவது, தேறுவது, எங்ஙனம்? என்று பெருமூச்செறிகின்றாள்.

இளங்குழந்தை இனி உறுதியோடிருந்து தண்ணீர்ப்பானை விளையாட்டைக் கைவிடப்

போவதில்லை. ஆனால் அன்று உற்ற துன்பமோ கொடிது! தலைவியும் தலைவனைத் தேறாமல் வாழ்நாளெல்லாம் கவலையுறப் போவதில்லை; தலைவன் மீண்டதும் குடும்பத் தலைமைப் பொறுப்பைப் பெரு மகிழ்ச்சியுடன் ஏற்பாள். ஆனால் அன்று தலைவன் பிரிந்தபோது அவள் உற்ற துன்பம் மறக்க முடியாதது? அன்று இருந்த மனநிலையே திருவள்ளுவர் விளக்குவது. அதனை விளக்குவதற்கே அகநானூற்றில் இருநூறுபாட்டு இடம் பெற்றுள்ளன. அவற்றில் உள்ள முதற் பொருளும் கருப்பொருளும் எளிதில் படித்தறியலாம்; ஆனால் அவற்றைக் கடந்து மனநிலையை உணர்தல் அருமையே. அதுதான் பாட்டின் உரிமையாய் வாழ்க்கையின் பொருளாக உள்ள உரிப்பொருள். அதனைக் கலைஞரே உணரவல்லவர். கல்வியிற் பெரியவராய கம்பர் அதனை நன்கு உணர்ந்தவர்.

நெடுந்தொகை குறுந்தொகை முதலாய வாழ்க்கை நூல்களில் பிரிவு பாலை என வழங்கப்படும். தமிழ்ச் சான்றோர் வாழ்க்கையால் நிலம் பகுத்தனரோ, நிலத்தால் வாழ்க்கை வகுத்தனரோ, அறியோம். நிலத்திற்கும் வாழ்க்கைக்கும் உள்ள தொடர்பை நன்கு தெளிந்த அக்காலக் கலைஞர் பிரிவைப் பாலை என்றனர். கதிரவன் வெம்மையால் இயல்பு இழந்த காடும் மலையும், கடுவேனிலும் பாலையின் நிலமும் காலமுமாவன. இயற்கை திரிந்த விலங்கு மரம் முதலியன பாலைநிலத்தன. இவையே முதற்பொருளும் கருப்பொருளும் என்பன. கம்பர் கருத்தில் பாலை என்றதும் பிரிந்து வருந்தும் மனமே முன்னிற்கின்றது; உரிப்பொருளே உருக்கொள்கின்றது. வெம்மையால் வேறுபட்ட நிலத்தை எடுத்துக் கூறப்புகும் கம்பரின் கற்பனை யுலகில் நிலம் சுடுவதன் முன்னம் நெஞ்சம் சுடுகின்றது.

*பிரியலென் என்ற சொல்தாம்*
*மறந்தனர் கொல்லோ*

(அகநானூறு, –1)

*அரிதரோ தேற்றம் அறிவுடையார் கண்ணும்*
*பிரிவு ஓர் இடத்துண்மை யான்*

(திருக்குறள், 1153)

என்று வருந்தும் மனத்தின் வெப்பமே அவர் தம் பாலைப் பாடலில் சிறந்து விளங்குவது.

கம்பர் காட்டும் பாலைநிலம் ஒன்று. அதில் மரங்கள் இருந்தன. ஆனால் அவை எந்நிலையில் இருந்தன? கிளைகள் வெந்திருந்தன என்கிறார் புலவர். கதிரவன் வெம்மையைக் காட்ட அது போதாது. அந்நிலத்தின் மேற்புறத்திருந்தவை காய்ந்தழிந்த நிலையோடு, நிலத்தின் உட்புறத்திருந்த கிழங்குகளும் வெந்தன என்கின்றார். மரத்தின் உறுப்புக்களில் முதலில் வாடுவது தளிர்; இறுதிவரையில் தாங்கி நின்று முடிவாக வாடுவது வேர். வேர்களும் வெந்திருந்தனவாம். மேலும் வெம்மையின் மிகுதி புலப்படுத்துகின்றார். கிழங்கும் வேரும் அழிவதற்குக் காரணமாகச் சூரியன் வெப்பத்தை வாங்கிக் காத்த நிலமும் தீய்ந்ததாம். இவ்வளவிலும் புலவர் முயற்சி நிற்கவில்லை. நெஞ்சின் நிலையினையே எல்லையாக்கிக் காட்டுகின்றார். நினைக்கும் நெஞ்சும் தீய்ந்துபோம் என்கின்றார்.

*சினையும் மூலமும் வேரும்வெந் திருநிலம்*
*தீய்ந்து*
*நினையும் நெஞ்சமும் சுடுவதோர் நெடுஞ்சுரம்.*

(கம்ப. அயோத்தியா. சித்திர.)

கம்பர் கண்ட தலைவர் சென்று சேரும் பாலையைக் குறித்துவரும் பாடற் பகுதி இது. இந்தப் பாலையைப் பற்றி இதற்கு முன்னரே பேச்சு நிகழ்ந்துள்ளது. இராமன் பிரியத் துணிந்தான்; அதைத் தன் துணைவிக்கு உரைத்தான்; "நீ வருந்தலை நீங்குவென் யான்" என்றான். அச்சொல் தலைவிக்குத் தீய வெஞ்சொல்லாக இருந்தது. அச்சொல் முன்னர்ச் செவியை எட்டிற்று. பின்னர் நெஞ்சைச் சுடும். நெஞ்சினுள் புகாமல் செவியை எட்டிய அளவிலேயே பாலையைப்பற்றிய சொல் செவியைச் சுட்டதாம்.

*நீவ ருந்தலை நீங்குவென் யானென்ற*
*தீய வெஞ்சொல் செவிசுட தேம்புவாள்.*

( அயோத்தியா. நகர் நீங்கு)

சீதை மனநிலை என்ன? அந்தத் தலைவியின் மனம் சினையும் மூலமும் வேரும் வேகும் வெம்மையைப் பொருட்படுத்தவில்லை; நிலமும் தீய்ந்துபோம் கொடுமையைப் பொருட்படுத்தவில்லை.. " ஊழி அருக்கனும் எரியும் என்பது யாண்டையது?" என்று கேள்வி வருகின்றது. பிரிவு என்பதன் வெம்மையின் முன்னே இவையெல்லாம் தண்மை பெறுகின்றனவாம்!

*நின், பிரிவினும் சுடுமோ பெருங்காடு?*

என்ற மறுமொழியே அவள் மனநிலையை விளக்குகின்றது. கம்பர் சீதையாக இருந்து கண்ட நிலை இது. பாலை நிலத்தைவிடப் பாலைவாழ்க்கை சுடுமாம்

மிகச் சுடுமாம்.

அந்தப் பாலைநிலத்தையே புலவர் தம் நிலையில் இருந்தும் காண்கிறார். அப்போது அவர் கூறுவது என்ன? பாலைநிலம் பாலைவாழ்க்கைபோல் கொதிக்கின்றதாம். அரசியல் காரணமாகச் சென்ற தலைவரைப் பிரிந்து வருந்தும் மகளிர் மனம்போல் கொதிக்கின்றதாம்.

***பந்த ருட்புரை பாசறைப் பொருள்வயின் பருவம்***
***தந்த கேள்வரை உயிருறத் தழுவினர் பிரிந்த***
***கந்த ஓதியர் சிந்தையிற் கொதிப்பது அவ்வனமே.***
(அயோத்தியா. சித்திர.)

அந்தக் கொடிய பாலை குளிர்ச்சி பெற்று மாறும் நிலையைப் பாடும் வாய்ப்பும் பெறுகின்றார் கம்பர். அப்போதும் மனநிலையையே நோக்குகின்றார். கொதிக்கும் மனம் குளிரும் நிலையைக் காட்டுகின்றார். தலைவரைப் பிரிந்த தலைவியர் அவர் மீண்டபோது உள்ளம் குளிர்வர் அல்லரோ? அப்போது குளிர்ந்த உள்ளம்போல் வனம் குளிர்ந்தது என்கின்றார். உரிப்பொருள் உணர்ந்த உணர்வின் பயனே இப்பாட்டு.

***கந்த ஓதியர் சிந்தையின் கொதிப்ப(து) அக்***
***கழலோர்***
***வந்த போ(து) அவர் மனம்எனக் குளிர்ந்த (து)***
***அவ்வனமே!***

---

*நன்றி : 'கம்பன் கவி அமுதம்' – சென்னைக் கம்பன் கழகம்.*

*இராகவன் கதையில், ஒரு கவிதன்னில்*
*ஏக பாதத்தினை உரைப்போர்,*
*பராவ அரும் மலரோன் உலகினில், அவனும்*
*பல் முறை வழுத்த, வீற்றிருந்து,*
*புராதன மறையும் அண்டர் பொன் பதமும்*
*பொன்றும் நாள் அதனினும், பொன்றா*
*அரா-அணை அமலன் உலகு எனும் பரம*
*பதத்தினை அடைகுவர் அன்றே.*

# நெஞ்சினால் பிழைப்பிலாள்

இலக்கியகலாநிதி, பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை

***' .......மழைவண்ணத் தண்ணலே உன் கைவண்ணம் அங்குக்கண்டேன்; கால்வண்ணம் இங்குக்கண்டேன்.'***

ஸ்ரீராமனுடைய திருக்கை வண்ணம் இருந்த படியை உலகம் மைவண்ணத் தரக்கி போரிலே கண்டது. மைவண்ணத் தரக்கி–தாடகை

***'உலையுருவக் கனல் உமிழ்கட் டாடகைதன் உரம் உருவி***
***மலையுருவி மரம் உருவி மண் உருவிற்றொருவாளி,***

வாளி–அம்பு. இது ஸ்ரீ ராமபிரானின் கை வண்ணம்.

நித்திய கன்னிகையாகிய அகலிகையின் கற்பின் திண்மையை உலக ஐயத்தைப் பொடி செய்து காட்டியது ஸ்ரீ ராமபிரானின் கால் வண்ணம்.

ஆகவே,

***'..........இனி இந்த உலகுக்கெல்லாம் உய்வண்ணம் அன்றி மற்றோர் துயர்வண்ணம் உறுவதுண்டோ'*** என்று முனீந்திரரான விசுவாமித்திரர் இருகரங்களையும் உயரத் தூக்கி மொழிவாராயினார்.

***' இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம் '***

அகலிகையின் சம்பவம் நிகழ்ந்தபடி இவ்வாறாகத்தானிருக்கும். அகலிகை போல்வார் மறுவில்கற்பின் வாணுதல்கள். அவர்களின் தூய இயல்பைக் கற்பனை செய்வதற்கு மலபந்தர்களாகிய நமது புலமை எம்மாத்திரம்!

கற்புத் தெய்வமாகிய அகலிகையைத் தரிசனஞ் செய்த புனிதர்களாகிய மூவரும் அத்தெய்வத்தின் அகமகிழ்வைப் பெற்றுக் கொண்டு அப்பால் நடக் கின்றார்கள். அகலிகையின் கணவரான கௌதம முனிவரின் ஆசிரமந் தோன்றுகின்றது.

***அருந்தவன் உறையுள் தன்னை***
***அனையவர் அணுக லோடும்***
***விருந்தினர் தம்மைக் காண***
***உவகையால் வியந்த நெஞ்சன்***
***பரிந்தெதிர் கொண்டு புக்குக்***
***கடன்முறை பழுதுறாமற்***
***புரிந்தபின் காதி செம்மல்***
***புனிதமா தவனை நோக்கி***

எய்துதற் கரிய விருந்தினர் மூவர் தமது ஆசிரமத்துக்கு எய்தியதைக் கௌதமர் காணுகிறார். மழைமுகிலைக் கண்ட மயில் போல கௌதமர் மனம் வியந்து வியந்து விரிகின்றது. சந்திரோதயத்தைக் கண்ட சமுத்திர அலைபோல உவகை அலை மேலெழுந்து முகத்தை விகசித்து, ஒளிவீசுகின்றது. அன்பைச் சொரிந்து அவர்களை எதிர்கொண்டு உபசரிக்கின்றார் கௌதமர். அப்பொழுது காதி மகாராஜாவின் புத்திரரும் இராஜ ரிஷியுமான விசுவாமித்திரர் புனித மாதவராகிய கௌதமரை நோக்கி,

***அஞ்சன வண்ணத் தான் தன்***
***அடித்துகள் கதுவாமுன்னம்***
***வஞ்சிபோ லிடையாள் முன்னை***
***வண்ணத்த ளாகி நின்றாள்***
***நெஞ்சினாற் பிழைப்பிலாளை நீ அழைத் திடுக***

என்றார். அகலிகை ' வஞ்சிபோல் இடையாள்'; கொடிபோன்ற இடையையுடையவள் மாத்திர மன்றி எக்காலத்திலாயினும் ஒழுகலாற்றில் இடையீடு படாத வள்– இடையாதவள். அப்படிப்பட்ட அகலிகை

***'முன்னம் முன்னை வண்ணத்தளாகி நின்றாள்'*** உலகம் தன்னை ஐயுற்றுத் தெளிவடைய முன்னமே,

ஸ்ரீராமன் அவளை அணுகுதற்கு முன்னமே, இந்திரன் அணுகியபோதே பெண்மையின் வண்ணம் எவ் வண்ணமோ அவ்வண்ணமாகவே நிற்கின்றாள். பின்னையொரு வண்ணம் முன்னையொரு வண்ணம் என்பதின்றி, முன்னை வண்ணமே வண்ணமாக என்றும் ஒருவண்ணமாய் நிற்கின்றாள் அகலிகை. அகலிகையின் தூயகற்பு வண்ணத்துக்கும், அஞ்சன வண்ணனாகிய ஸ்ரீராமனின் அடித்துகள் வண்ணத் துக்கும், எவ்வண்ணமான தொடர்பும் இல்லை என்றே நினைக்க வேண்டும். இருவகை வண்ணத்துக்குந் தொடர்பு கற்பனை செய்வதானால் அது காகத்துக்கும் பனம் பழத்துக்கும் உள்ள தொடர்பாய் இருக்கும் போலும்! அடித்துகள் கதுவாமுன்னமே அகலிகை முன்னை வண்ணத்தளாகியே நிற்கின்றாள். அவள் என்றும் அப்படியே நிற்பாள். அவள் வண்ணத்தில் விகாரம் என்பது என்றும் இல்லாதது. அகலிகை

***நெஞ்சினாற் பிழைப்பு இலாள்!***

மனசினாலே பிழைத்தல் இல்லாதவள் அகலிகை. மனசாற் பிழையாமை தானே அறம்; ***மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்,*** என்பது தெய்வப் புலமை. அகலிகை ஒருவனைப்பற்றி ஒரகத் திருப்பவள். அவள் நெஞ்சினாற் குடி கொண்டிருப் பவனை ***'ஒருவன் என்னும் ஒருவன் காண்க'*** என்கின்றது திருவாசகம். நெஞ்சினாற் பிழைத்தல் இல்லாமையாகிய அறத்தில் நின்றவள் அகலிகை. அதனால் இலாள்– இல்லுக்குரியவள் –அவளே. இல்ஆள் – இலாள். நெஞ்சினாற் பிழைப்பு இலாள் எவளோ அவளே இலாள். அஃதாவது இல்லாள் வீட்டுக்குரியவள். ஆகையினாலே அந்த உத்தமியை உலகம் ஐயத்தின் நீங்கி உய்யும் வண்ணம் இதோ,

***' அழைத்திடுக'***

என்று கௌதமருக்கு விசுவாமித்திரர் கூறுவார் ஆயினார்.

***'அழைத்திடுக'***

என்ற வார்த்தை கௌதமரிடங் கூறக்கூடிய தொன்றன்று. அகலிகையின் தூய்மையைக் கௌதமர் அறியாதவர் அல்லர். அப்படியிருந்தும் விசுமாமித்திரர் வாயில் அவ் வார்த்தை அவதரித்திருக்கின்றது.

இனி எதிர்காலத்திலே, வண்ணான் ஒருவனின் வார்த்தையினாலே, நித்திய கன்னிகைகளின் வரிசையிற் சேர்ந்த கற்புத் தெய்வமாகிய சீதாபிராட்டி யிடம் அறியாமையாகிய உலகம் ஐயுறும். அப்படி ஐயுறுகின்ற உலகம் ஒரு நாளைக்குத் தெளிவும் அடையும்.

***ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்***
***வானம் நணிய துடைத்து***

என்பது தேவர் குறள்.

'ஓ ராமனே' அறியாமையாகிய உலகு தெளி வடைகிற காலத்திலே இந்த உலகம் உய்யும் வண்ணம் உன்னை வந்தடையும். கற்புத்தெய்வத்தை அழைக்க வேண்டிய சந்தர்ப்பத்தில், கௌதமர் போல நீயும் '

***'அழைத்திடுக'***

என்று கௌதமருக்குக் கூறும் முகமாக ஸ்ரீராமனுக்குக் கூறியதூஉமாம்; அப்படியுமன்று, கற்புத் தெய்வங்களின் மகிமையைக் கௌதமரிலும் ஸ்ரீ ராமனிலும் வைத்து இந்த உலகத்துக்குக் கூறியதாம் எனினுமாம். உலகம் கற்பினியல்புணர்ந்து உய்யும் வண்ணமே விசுவாமித்திரர் வாயில்

***' அழைத்திடுக'***

என்ற வார்த்தை உதயஞ்செய்திருக்கிறது.

***'என்ன'***

என்றிங்ஙனம் கௌதமரை நோக்கும் முகமாக ***'கஞ்சமா முனிவன் அன்ன முனிவனுங் கருத்துட் கொண்டான்'.***
கஞ்சமா முனிவன் – பிரமதேவன்.

பிரமதேவன் போன்று முக்காலமும் உணர்ந்த கௌதமர், என்ற வார்த்தை விசுவாமித்திரர் வாக்கிற் பிறந்த இரகசியத்தைச் சிந்திப்பார் ஆயினார்.

***' கருத்துட் கொண்டான்'***

அகலிகையின் பிழைப்பு இல்லாத தூய்மையைச் சிந்தித்து, அகலிகை தம்மை வந்து அணுக வேண்டும் என்று கருத்துக் கொள்வார் ஆயினார். அந்தக் கணமே, அகலிகை அந்த ஆசிரமத்துக்கு 'விளக்கம்' ஆயினாள்.

***' குணங்களா லுயர்ந்த வள்ளல்***
***கோதமன் கமலத்தாள்கள்***
***வணங்கினன் வலங்கொண் டேத்தி***
***மாசறு கற்பின் மிக்க***
***அணங்கினை அவன்கை ஈந்து***

*ஆண்டு அருந்த வனோடும் வாச*
*மணங்கிளர் சோலை நீங்கி*
*மணிமதிற் கிடக்கை கண்டார்'*

வள்ளல்— ஸ்ரீராமன்; அணங்கு – அகலிகை. கற்புத் தெய்வம் என்றபடி. அகலிகையின் கற்பு ' மாசறு கற்பு' அஃதாவது பரிபூரண கற்பு – மிக்க மாசறு கற்பு, ஒப்புச் சொல்லமுடியாத கற்பு. ஒருவன் என்கின்ற ஒருவனைப் பற்றி நிற்கின்ற கற்பு, அவனையன்றித் தீண்டாத கற்பு அது. கன்னிமை அழியாத கற்பு என்றவாறு.

மணமகளை, மணமகன் கையில் ஈவது போல அகலிகை நித்திய கன்னிகை ஆதலின் வள்ளலாகிய ஸ்ரீராமன் அணங்காகிய அகலிகையை கௌதமர் கையில் ஈந்தான். வள்ளல் ஒருவன் ஒன்றை வலிந்து தக்கார்க்கு ஈயும் போது ஏற்போர் நிலையும் ஈந்த பொருளின் பெருந்தகையும் சிந்திக்கத்தக்கவை. அகலிகையின் பெருந்தகைமையால் ஏற்போராகிய கௌதமருக்குக் குறை நேராமல் உலக ஐயத்தின் வழி கௌதமர் நின்றமையைக் காட்டுதற்குக் குணங்களாலுயர்ந்த சான்றோனாகிய வள்ளல் கௌதமருடைய கமலம் போன்ற தாள்களை வணங்கி வலங்கொண்டு ஏத்தி, அணங்கை அவர் கையில் ஈந்தான்.

*'பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னும்*
*திண்மையுண் டாகப் பெறின்'*

என்பது மீண்டும் மீண்டும் ஞாபகஞ் செய்யத்தக்கது. உலகம் ஐயுறும்போது தானும் ஐயுற்று அதன் வழிச்சென்று தெளிவு செய்தலே முறை. ஐயத்துக்கிடஞ் செய்யாது தெளிவிக்க முயன்றால் உலகம் ' திரிபு' என்கின்ற மயக்கத்தில் மூழ்கிவிடும். அதனால் கௌதமர் தாமும் ஐயுற்றார் போன்று உலகத்தை

*' ஐயத்தி னீங்கித் தெளிய'* வைத்தார்.

இவ்வாறு தெளிவு பிறக்குமானால் இந்த உலகத்துக்கு உய்வண்ண மன்றித் துயர்வண்ணம் ஏது?

ஸ்ரீராமன் உள்ளிட்ட மூவரும் அகலிகை தரிசனம் – அகலிகையைக் கௌதமர் கையில் ஈந்தது – ஆகிய நிகழ்ச்சி நல்ல சுபமங்கல நிமித்தமாக
*'மணிமதிற் கிடக்கை கண்டார்'.*

மிதிலை நகரின் மதில் தோன்றுகின்றது. அதனைக் காணுகின்றார்கள்.

---

*நன்றி : தினகரன், 22-04-1956, ஞாயிறு*

*இனைய நல் காதை முற்றும் எழுதினோர், வியந்தோர், கற்றோர்,*
*அனையதுதன்னைச் சொல்வோர்க்கு அரும் பொருள் கொடுத்துக் கேட்போர்,*
*கனை கடல் புடவி மீது காவலர்க்கு அரசு ஆய் வாழ்ந்து,*
*வினையம் அது அறுத்து, மேல் ஆம் விண்ணவன் பதத்தில் சேர்வார்.*

*நாடிய பொருள் கைகூடும்; ஞானமும் புகழும உணடாம;*
*வீடு இயல் வழி அது ஆக்கும்; வேரி அம் கமலை நோக்கும்;-*
*நீடிய அரக்கர் சேனை நீறுபட்டு அழிய, வாகை*
*சூடிய சிலை இராமன் தோள் வலி கூறுவோர்க்கே.*

# மிதிலைக் காட்சி

**பேராசிரியர் ரா.பி. சேதுப்பிள்ளை**

**மா**லைப் பொழுதில் மெல்லிய தென்றல் மிதிலைமாநகரில் வீசுகின்றது. மாடங்களில் அமைந்த மணிப் பூங்கொடிகள் அசைந்தாடுகின்றன. அரச வீதியின் இருமருங்கும் வரிசையின் விளங்கிய வீடுகளினின்றும் எழுந்த வீணையொலி வானின் வழியே தவழ்ந்து வருகின்றது. முத்துப்போற் பூத்து, மரகதம்போற் காய்த்து, பவளபோற் பழுத்து இலங்கும் கமுகு மரத்திற் கட்டிய ஊஞ்சலில் பருவ மங்கையர் பாடி ஆடுகின்றார். பூஞ்சோலைகளில் பளிங்கு போன்ற பந்துகளை வீசிப் பிடித்துப் பாவையர் விளையாடுகின்றார். அரங்குகளில் நடனமாதர் கைவழி நயனம் செல்லக் கண்வழி மனமும் செல்லக் களிநடம் புரிகின்றார். இத்தகைய இன்பம் நிறைந்த அணிவீதியில் கோமுனிவர் முன்னே செல்கின்றார். மஞ்செனத் திரண்ட மேனியும் கஞ்சமொத் தலர்ந்த கண்களும் வாய்ந்த இராமன் அவர் பின்னே செல்கின்றான். பொன் மேனி வாய்ந்த இலக்குவன் அவன் பின்னே போகின்றான்.

## 1

அப்பெரு வீதியில் அமைந்த கன்னிமாடத்தின் மேடையிலே மிதிலை மன்னன் மகளாய சீதை மெல்லிய பூங்காற்றின் இனிமையை நுகர்ந்து இன்புறுகின்றாள். அருகே அமைந்த அழகிய துறையில் அன்னம் பெடையோடு ஆடக் கண்டு களிக்கின்றாள். அந்நிலையில் கன்னிமாடத்தின் மருங்கே செல்லும் கமலக்கண்ணன் மேடையிலே இலங்கும் மின்னொளியை நோக்குகின்றான். பருவமங்கையும் எதிர் நோக்குகின்றாள். இருவர் கண்நோக்கும் இசைகின்றன; காமனும் ஒரு சரம் கருத்துற எய்கின்றான். பருகிய நோக்கெனும் பாசத்தாற் பிணிப்புற்ற இராமன், காதலை மனத்திற் கரந்து, வீதியின் வழியே சென்று மறைகின்றான்.

சீதையின் கண்வழிப் புகுந்த காதல் நோய் பாலுறுபிரை யெனப் பரவுகின்றது. வீதிவாய்க் கண்ட வீரனது கோலத்தைத் தன் உள்ளத்தில் அழகொழுக எழுதிப் பார்க்கின்றாள். காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலையில் மலரும் மையல் நோயால் நையலுறுகின்றாள். அகத்தில் நிறைந்து நின்ற அஞ்சன வண்ணத்தை அந்திமாலையிற் கண்டு நெஞ்சம் தளர்கின்றாள். இராப் பொழுதில் எங்கும் அமைதி நிலவுகின்றது. உறக்கமின்றி வாடி வருந்துகின்றாள். அருகிருந்த சோலையில் ஓர் அன்றிற் பறவை அரற்றுகின்றது. துணையின் பிரிவாற்றாது அரற்றிய பறவையின் குரல் சீதையின் காதலைக் கிளருகின்றது. அப்போது மங்கை அக் குரலெழுந்த திசையை நோக்கி,

*'வெளிநின் றவரோ போய்மறைந்தார்*
*விலக்க ஒருவர் தமைக்காணேன்*
*எளியள் பெண் என் றிரங்காதே*
*எல்லி யாமத் திருளூடே*
*ஒளியம் பெய்யும் மன்மதனார்*
*உனக்கிம் மாய முரைத்தாரோ*
*அளியன் செய்த தீவினையே*
*அன்றி லாகி வந்தாயோ!'*

என்று பழிக்கின்றாள். அந்நிலையில் வெண்திங்கள் வானத்திற் கதிர் வீசி எழுகின்றது. சீதையின் காதல் மேன்மேலும் பொங்குகின்றது. கரு நெருப்பாய்த் தோன்றிய இருளின் இடையே எழுந்த வெண்ணெருப்பே என்று வெம்மை விளைத்த விண்மதியை வெறுக்கின்றாள். அடியுண்ட மயில் போல் அமளியிற் குழைந்து விழுகின்றாள். இராப் பொழுது இவ்வாறு கழித்தொழிகின்றது. காலையில் எழுந்த கதிரவன் ஒளியால் கன்னிமாடத்தினருகே அமைந்த பொய்கையில் செங்கமலங்கள் இதழ் விரிந்து மலர்கின்றன. இரவு முழுவதும் கண்ணுறங்காது வருந்திய சீதை சிறிது களைப்பாறுமாறு அக் கமலப் பொய்கையின் அருகே செல்கின்றாள். ஆண்டு மலர்ந்து நின்ற செந்தாமரை மலர்களில் தன் காதலனது கண்ணின் நிறத்தைக் காண்கின்றாள். அம்மலர்களைச் சூழ்ந்து படர்ந்திருந்த தாமரை யிலைக்ளில் தன் அன்பனது மேனியின் நிறத்தைக் காண்கின்றாள். கண்ணுளே நின்ற காதலனது கண்ணின் நிறமும்

மேனியின் வண்ணமும் காட்டி ஒருவாறு மனவாட்டம் தீர்த்த கமலப் பொய்கையை நோக்கி,

*'பெண்இவண் உற்ற தென்னும்*
*பெருமையால் அருமையான*
*வண்ணமும் இலைகளாலே*
*காட்டலால் வாட்டந் தீர்ந்தேன்*
*தண்ணறுங் கமலங் காள்! என்*
*தனிர்நிற முண்டகண்ணின்*
*உண்ணிறம் காட்டி நீர் என்*
*உயிர்தர உலாவினிரே!'*

என்று முறையிடுகின்றாள்.

## 2

மிதிலை மாநகர் வீதியில் நடந்து சென்ற மூவரும் மன்னன் மாளிகையை அடைந்து தனித்தனியே கண்ணுறங்கச் செல்கின்றார்கள். கன்னிமாடத்திற் கண்ட மயிலுடைச் சாயலாளை மனத்திடை வைத்த நம்பியின் கண்ணிலும் கருத்திலும் அக் கன்னியே இலங்குகின்றாள். யாரும் யாவையும் இனி துறங்கும் இராப்பொழுது முழுவதும் நெடுந் துயரால் நலிகின்றான். அவன் காணும் பொருளெலாம் அவள் பொன்னுருவாகின்றன. அந்நிலையில் நம்பியின் உள்ளத்தில் ஓர் ஐயம் பிறக்கின்றது. மாடத்திற் கண்ட மங்கை தான் காதலித்தற்குரிய கன்னியோ அல்லளோ என்று திகைக்கின்றான். அல்லளாயின் எல்லையற்ற தன் காதல் என்னாகும் என் றேங்குகின்றான். சிறிது சிந்தனையில் ஆழ்கின்றான். 'என் உள்ளம் நல்வழியிற் செல்லுமே யல்லாது அல்வழியிற் செல்லாது. ஆதலால் என் மனம் பற்றிய மங்கை யான் காதலித்தற்குரிய கன்னியேயாதல் வேண்டும்' என்று தடுமாறும் உள்ளத்தைக் தேற்றுகின்றான். பொழுது புலர்ந்ததும் முனிவரும் மைந்தரும் நீராடி நியமம் முடித்து மிதிலை மன்னனது வேள்விச் சாலையை அடைகின்றார்கள்.

தன் வேள்வியைச் சிறப்பிக்க வந்த தவமுனிவனை மிதிலை மன்னன் உரிய முறையில் வரவேற்கின்றான். மூவரும் முறையாக அமர்ந்த பின்னர் மைந்தர் இருவரையும் மன்னன் மனமகிழ்ந்து பார்க்கின்றான். அவர் முகத்தின் அழகினைக் கண்ணால் முகந்து பருகுகின்றான். அவர் யாரென்று முனிவரிடம் வினயமாக வினவுகின்றான். 'அரசே, இவர் விருந்தினர்; உன் வேள்வி காண வந்தார்; வில்லும் காண்பார்; பெருந்தகைமைத் தசரதன் தன் புதல்வர்' என முனிவர் மாற்ற முரைக்கின்றார். அவர் கருத்தறிந்த மன்னன் அகமகிழ்ந்து சீதையின் மணவில்லை எடுத்துவரப் பணிக்கின்றான். மலைபோன்ற வில் மைந்தர் முன்னே வருகின்றது. அவ்வில்லின் தன்மையையும் அதனை வளைக்கும் திறலோன் அடையும் பரிசின் பெருமையையும் சதானந்த முனிவன் விரித்துரைத்து,

*' அன்றுமுதல் இன்றளவும்*
*ஆரும்அந்தச் சிலையருகு*
*சென்றுமிலர் போயொளித்தார்*
*தேர்வேந்தர் திரிந்துமிலர்*
*என்றுமினி மணமுமிலை*
*என்றிருந்தேம் இவனேற்றின்*

*நன்றுமலர்க் குழற்சீதை நலம்பழுதா காது'*

என்கின்றான். எல்லாமறிந்து கோமுனிவர் சடைமுடி துளக்கி இராமன் திருமுகத்தை நோக்குகின்றார். குறிப்பிற் குறிப்புணரும் வீரன், முனிவர் நினைந்தவெல்லாம் நினைந்து, நெடுஞ்சிலையை அனைவரும் அசைவற்றுக் கண்ணிமையாது நோக்குகின்றார். மலையெனக் கிடந்த சிலையை வீரன் மாலை போல் எடுக்கக் காண்கின்றார். இற்ற பேரோசை கேட்கின்றார். மாநிலம் நடுங்க முறிந்து விழுந்த சிலை கண்டு மண்ணவர் கண்மாரி பொழிகின்றார். விண்ணவர் பூமாரி சொரிகின்றார்.

## 3

மணவில்லை வீரன் இறுத்தான் என்னும் செய்தியைச் சீதையிடம் அறிவிக்குமாறு நீலமாலை யென்னும் தோழி விரைந்தோடிச் செல்கின்றாள். ஆடையும் அணிகளும் அலைந்து குலையக் கன்னிமாடத்தை யடைந்த நீலமாலை, வழக்கம் போல் அடிபணிந்து அடங்கி நில்லாது, அளவிறந்த மகிழ்ச்சியால் ஆடுகின்றாள்.; பாடுகின்றாள். மதுவுண்டவள் போல் களித்தாடும் மாலையை நோக்கி, 'சுந்தரி, என்ன நிகழ்ந்தது, சொல்!' எனச் சீதை வினவுகின்றாள். வில்லொடிந்த செய்தியை நேராகக் கூறாது, நீலமாலை நெடுங்கதை நிகழ்த்துகின்றாள். 'மாதரசி, தசரதன் என்னும் பெயர் வாய்ந்த மன்னன் ஒருவன் உள்ளான்; அவன் கரி, பரி, தேர், காலாள் என்னும் நால்வகைச் சேனையுடையான்; சிறந்த கல்வி கேள்வியுடையான்: நீதிவழுவாத நிருபன். மாரி போல் வழங்கும் வள்ளல். அன்னவன் மைந்தன் அனங்கனையும் வெல்லும் அழகுடையான்; மரா மரம் போல் வலிய தோளுடையான்; திருமாலின் குறியுடையான். இராமன் என்னும் பெயருடையான். அவன் தம்பியோடும் முனிவரோடும் நம் பதி வந்தெய்தினான். திரிபுரமெரித்த புனிதன் எடுத்த வரிசிலையைக் காண விரும்பினான். வில்லை எடுத்து வருமாறு நம் மன்னன் பணித்தான். அது வந்தடைந்தது. முன் பழகியவன் போல் நொடிப் பொழுதில் அதனை எடுத்தான். வளைத்தான். கண்டோர் நடுங்குற வரிசிலை முறிந்து வீழ்ந்தது!' என்று சொல்லி முடிக்கின்றாள்.

இவ்வாறு நீலமாலை நெடுங்கதை நிகழ்த்தும் பொழுது சீதையின் மனம் ஊசலாடுகின்றது. முனிவனோடும் தம்பியோடும் போந்த தசரத ராமன் மணவில்லை இறுத்தான் என்று நீலமாலை கூறுகின்றாள். 'வில்லை வளைக்கும் திறல் வாய்ந்த வீரனுக்கு என்னை மணஞ்செய்து கொடுப்பதாக வாய்மை தவறாத மன்னன் வாக்களித்துள்ளான். இன்று வில்லை யிறுத்த வீரன் நான் வீதிவாய்க் கண்டு காதலித்த தலைமகனோ? அன்றி வேறொருவனோ? முனிவனோடு வந்த மேக வண்ணன், தாமரைக் கண்ணன், சிலையை ஒடித்தான் என்று தோழி கூறினாள். ஆம், நான் கண்ட காதலனே அவன்!' என்று உள்ளம் தேறி உடல் பூரிக்கின்றாள். 'ஒரு கால் இவ் அடையாளம் எல்லாம் அமைந்த வேறொரு வீரன் வில்லை ஒடித்திருப்பானோ? அவன் வேறு, இவன் வேறு என்றால் என் செய்வேன்? நான் வீதியிற் கண்ட காதலனும் வில்லை யொடித்த வீரனும் ஒருவனே யெனில் அவனை மணம் புரிவேன்; இன்றேல் ஆவி துறப்பேன்!' என்று உறுதி கொள்கின்றாள்.

## 4

வில்லை யொடித்தமையால் மிதிலை மன்னன் மங்கையை மணத்தற்குரியனாய இராமன் மாளிகையில் விருந்தினனாயிருக்கின்றான். மணமகனாக அனைவராலும் மதிக்கப்படுகின்றான். எனினும் அவன் உள்ளம் அமைதியுறவில்லை; வில்லிறுத்ததன் பயனாகப் பெற்ற மங்கை, மேடையிலே கண்ட மாதோ, அல்லலோ என்னும் ஐயத்தால் அலமருகின்றது. அம் மங்கையை நேராகக் கண்டாலன்றி ஐயம் தீருமாறில்லை எனக் கருதி அவ்வேளையை எதிர்பார்க்கின்றான். திருமணத்தைச் சிறப்பித்தற்குரிய அரசரும் பிறரும் மிதிலையில் வந்து நிறைகின்றார்கள். தசரத மன்னன், மிதிலையர்கோன் அழைப்பிற்கிணங்க, நால்வகைச் சேனையோடும் உற்றார் உறவினரோடும் எழுந்து வருகின்றான். கோசலநாட்டு வேந்தனை மிதிலை வேந்தன் அன்புடன் வரவேற்கின்றான். இருபெரு வேந்தரும், குறுநில மன்னரும், அருந்தவ முனிவரும் அரச சபையில் நிறைத்திருக்கிறார்கள். சீதையை அலங்கரித்துச் சபைக்கு அழைத்துவருமாறு மிதிலை மன்னன் பணிக்கின்றான். இயற்கை யழகு வாய்ந்த சீதையை நல்லணிகளால் அழகு செய்து தோழியர் அழைத்து வருகின்றார்கள். அன்னமும் அரம்மையரும் நாண அழகுற நடந்து சீதை மணி மன்றத்தினுள்ளே வருகின்றாள். அங்கு நிறைந்திருந்த மாந்தர் விழித்த கண்ணிமையாது நோக்குகின்றார். வில்லை யிறுத்த வீரன் மங்கையைக் காண்கின்றான். தான் முன்னமே கண்டு காதலித்த கன்னியே அவள் என்றறிந்து உளங் குளிர்ந்து விம்முகின்றான். திருமகளுக்குரிய திருமாலே தலைமகனாக வந்தான் என்று வசிட்டமா முனிவர் வாயார வாழ்த்துகின்றார். 'நலமெலாம் ஒருங்கேயமைந்த இந்நங்கை பரிசென்றால் இராமன் இச்சிலையை மட்டுமோ ஒடிப்பான்? ஏழு மலையையும் தகர்ப்பானே!' என்று கோசிக முனிவர் இறுமாந்திருக்கின்றார். அங்கிருந்த குறுநில மன்னர் முதலாயினோர் கைகூப்பித் தொழுகின்றார்கள். சீதை அழகுற நடந்து தாதை யருகில் இட்ட தனியாசனத்தில் அமர்கின்றாள்.

மன்றத்தின் நடுவே யமர்ந்தும் சீதையின் மனத்தில் நிகழ்ந்த ஐயம் தீரவில்லை. வில்லிறுத்த வீரனை நேராகக் கண்டு ஐயத்தை அகற்ற ஆசைப்படுகின்றாள். அவ் வாசையை நாணம் இடைநின்று தடைசெய்கின்றது. கண்ணெடுத்துப் பார்க்குமாறு உந்தும் காதலைப் பெண்மைக்குரிய நாணம் எதிர்த்து அடக்குகின்றது. ஆசையும் அழிவுறாது பெண்மையும் வசையுறாது கடைக்கண்ணால் நோக்குதல் சாலும் என்றெண்ணுகின்றாள். நடந்து வருகையில் நிலை குலைந்திருந்த கை வளைகளைத் திருத்தத் தலைப்படுகின்றாள். சீதையின் திருமுகச் செவ்வியை நோக்கியிருந்த கண்களெல்லாம் அவள் கை வளை வரிசையில் ஈடுபடுகின்றன. அந்நிலையில் எதிரே இருந்த இராமனைக் கடைக்கண்ணால் கண்டு இன்புறுகின்றாள். கன்னி மாடத்தின் மேடையிலே நின்று கண்ட காதலனே வில்லை யொடித்த வீரன் என்று தெளிகின்றாள். கண் வழிப்புகுந்த தன் கருத்தில் உறைந்த காதலன் வடிவத்தைத் தன்னெதிரே அமர்ந்திருந்த இராமனிடம் கண்டு களிக்கின்றாள். இத்தகைய காதலர் இருவருக்கும் மறுநாட் காலையில் திருமணம் நிகழ்கின்றது.

மிதிலைக் காட்சியென்னும் காதலர் காட்சியில் கம்பர் அமைத்துள்ள நாடகக் கூறுகள் யாவருக்கும் நன்கு விளங்கும். உருவிலும் திருவிலும் ஒத்த தலைமகனும் தலைமகளும் ஊழ்வினைப் பயனால் ஒருவரை யொருவர் எதிர்ப்பட்டுக் காதலுறுதலும், அம் மையலை மனத்திலடக்கி நையலுறுதலும், பின்பு அதனை யறிந்த பெற்றோர் காதலர் இருவருக்கும் திருமணம் முடித்தலும் தமிழ்நாட்டுப் பழைய மணமுறையாகும். இன்னும் ஓர் ஆடவனைக் காட்சியாற் காதலுற்ற பின்னர் மற்றொருவனை மனத்திலும் தீண்டாத மாட்சி நிறையமைந்த மங்கையர்க்குரியதாகும். அறநெறி திறம்பாத அருங்காதலை மங்கையர் உயிரினும் உயர்வாகப் போற்றுவர். இத்தகைய அறநெறிக்குச் சான்றாக நின்ற சீதையின் காதலை ஓர் களவியல் நாடகமாக அமைத்தருளிய கம்பர் கவித்திறம் அறிந்து போற்றத் தக்கதாகும்.

---

*நன்றி: 'கம்பன் கவிதை' – நவயுகப்பிரசுராலயம்.*

# காப்பியத்துள் ஒரு காப்பியம்



பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தன்

கம்ப நாடனின் இராமகாதை ஒரு பெருங்காப்பியமாகும். ஆனால் அந்தப் பெருங்காப்பியத்தின் உள்ளே ஒரு சிறு காப்பியத்தை அப் பெருமகன் அமைத்துக் காட்டுகிறான். சிறுகாப்பியம் என்னும் பொழுது அதன் அளவைத்தான் குறிக்கிறோமே தவிரத் தரத்தையன்று. 176 பாடல்கள் மட்டுமே கொண்ட சிறுகாப்பியம் இரணியன் வதைப்படலம் என்ற பேருடன் இராம காதையுள் அடங்கி நிற்கின்றது. ஒரு காப்பியத்துக்குரிய அனைத்து இலக்கணங்களும் கொண்டது இரணியன்வதை, ஆறு, மாலை, மருதம் முதலியவற்றின் வருணனை முதலிய பகுதிகள் இன்மையாலும் இதனைக் காப்பியம் என்று கூறலாமா என்று சிலர் ஐயங்கொள்ள இடம் உண்டு. ஆனால் இப்பகுதிகள் காப்பியத்தின் இன்றியமையா உறுப்புக்கள் ஆகமாட்டா. இவை அனைத்தும் இல்லாமலும் ஒரு காப்பியத்தை அமைக்க முடியும் என்று காட்டியதே கம்ப நாடனின் தனித்துவமாகும். இவை அனைத்தும் இருந்தும் பல, காப்பியம் என்று பெயர் கூறப்பட்டிருந்தும் காப்பியச் சிறப்பில்லாமல் மங்குவதைக் காண முடிகின்றதல்லவா? ஐஞ் சிறுகாப்பியங்கள் என்ற பட்டத்துடன் உலவிவரும் நூல்களைப்பார்த்தால் மேலே கூறிய உண்மை தெற்றெனப் புலப்படும்.

ஒரு பெருங்காப்பியத்தினுள் ஒரு சிறு காப்பியத்தை அமைப்பது அவ்வளவு எளிதானதன்று. தக்க இடமாக இல்லாவிட்டால் அச்சிறுகாப்பியமும் முந்திரிக்கொட்டை போலத் துருத்திக்கொண்டிருக்கும். தக்க இடம் கண்டு அமைப்பதுடன் பெருங் காப்பியத்துடன் சிறுகாப்பியத்திற்குள்ள உறவு முறை நன்கு அமையவேண்டும். இயல்பான ஒட்டல் இல்லாவிட்டாலும் சிறுகாப்பியம் தனித்துத் தொங்குவதுடன் தாய்க் காப்பியத்தின் சிறப்பையும் குறைத்துவிடும். இத்தகைய இன்னல்களைக் கடந்து கம்ப நாடன் தன்னுடைய இராமகாதையில் இரணியன் வதை என்ற சிறுகாப்பியத்தை அமைத்துள்ளான். இலக்கியத்திறனாய்வில் தலை நின்றவரான வ.வே.சு. ஐயர் கம்பராமாயணம் முழுவதும் அழிந்துவிட்டாலும், இரணியன் வதைப்படலம் மட்டும் எஞ்சி இருப்பின் அதுவே, கம்பனை உலக மகாகவிகளுள் ஒருவனாக ஆக்கப் போதுமானது என்று கூறியுள்ளார்.

இராமகாதை, அறம் வெல்லும் பாவம் தோற்கும் என்ற உண்மையை நிலை நாட்டப்பாடப்பெற்றது. மேலும் கம்ப நாடனுடைய கடவுட் கொள்கையை வெளிப் படுத்தவும் இந்நூல் பெரிதும் பயன்படுகிறது. கடவுள் மனிதனாகப் பிறந்த கதையைக் கூற வந்தாலும், வந்தவன் யார் என்பதை அறிந்துகொள்ளாதவர்கட்குக் கடவுளின் இலக்கணத்தை வலியுறுத்த வேண்டிய தேவை ஏற்படத் தானே செய்யும். அம்மாதிரிநேரங்களில் கவியரசன் கடவுட் கொள்கையை விரிக்க வேண்டிய இன்றியமையாமை உண்டு.

இராமகாதைப்பாத்திரங்களுள் கடவுள் உணர்வு பெறாதவர்கள் பலருண்டு. ஆனால் இவ்வறிவு பெறாதவர் அனைவருக்கும் இதனைப் புகட்டுதல் இயலாதகாரியம். எவ்வளவு கூறினாலும் புரிந்து கொள்ளும் அளவிற்கு அறிவு வளர்ச்சியும் கல்வி வளர்ச்சியும் பெறாத தாடகை, அதிகாயன் போன்றவர்களும் இக்கதையில் உண்டு. அறிந்து கொள்ளக்கூடிய அறிவு வளர்ச்சியும் கல்வி ஞானமும் உடைய இராவணன், இரணியன் போன்றவர்களும் இக் கதையில் உண்டு. கவிஞன் கூற வேண்டிய மூலப்பொருளாகிய கடவுள் தத்துவத்தை எங்கே கூறினால் அது சிறப்படையும் என்பதை நன்கு அறிந்து கொண்டு, அதற்கேற்ற நிலைக்களத்தையும் ஏற்படுத்திக் கொண்டு தகுந்த இடத்தில் தகுந்த முறையில் கூறினால் தான் அவன் தலையாய கவிஞனாவான். இந்த அடிப்படையில் நோக்கினால்தான் கம்ப நாடனின் இரணியன் வதைச் சிறப்புப் புலப்படும். கதைப் போக்கிற்கு இப்பகுதி தேவையில்லை. மூல நூலில் இது இடம் பெறவும் இல்லை. என்றாலும் கவிஞன் இதனை

இடையே புகுத்துகிறான்.

எத்துணை நியாயங்களைத் தருக்க ரீதியாகக் கூறினும், இராவணன் வீடணனுடைய வாதங்கட்குச் செவி சாய்ப்பதாக இல்லை. ஆயிரம்மறைப் பொருள் உணர்ந்து அறிவு அமைந்தவன் இராவணன். எனவே அவனிடம் தருக்க ரீதியாகப் பேசினால் பயன்படும் என்ற கருத்தில் வீடணன் பேசுகிறான். இராவணன் தான் பெற்றுள்ள வரபலம் முழுத்தன்மை வாய்ந்தது என்ற முடிவுடன் இருப்பவன். எனவே அவனுடைய வரங்களி லுள்ள குறைகளை எடுத்துக்காட்டுவதன் மூலம் அவனைத் திருத்திவிடலாம் என வீடணன் நினைத்ததில் தவறு இல்லை. விலங்குகளிடம் தோல்வி ஏற்படக்கூடாது மனிதர்களிடம் தோல்விவரக் கூடாது. என்பவை இராவணனுடைய வரங்களில் இடம் பெறவில்லை என்பதை நினைவூட்டியதுடன், இவ்விரண்டு இடங்களிலும் இராவணன் தோற்றதை நினைவூட்டு கிறான். வாலி, கார்த்த வீரியன் என்ற இருவரும் இராவணனை வென்றவர்கள். ஆனால், இராவணன் இந்த இரண்டு வாதங்களையும் உதறிவிடுகிறான்.

எனவே, இராவணனுடைய போக்கைக் கண்டு திகிலடைந்த வீடணன் இரணியனைப்பற்றிப் பேசுகிறான். இராவணன் வீடணனின் அறிவுரைகளை ஒதுக்கியது எந்த நம்பிக்கையில்? சீதையை விடுவதுண்டோ இருபது திண்டோள் உண்டால் என்றும், என்னையே நோக்கி நான்இந்நெடும்பகை தேடிக் கொண்டேன் என்றும் அவன் கூறுவது எந்த அடிப் படையில்? தன்னுடைய வரபலம், தவவலிமை, உடல்வலி என்பனவற்றைப்பற்றி அவன் கொண்டிருந்த நம்பிக் கையே அவனுடைய அலட்சிய பாவத்திற்குக் காரண மாகும். இதனை நன்கு அறிந்து கொண்டான் கூர்த்த மதியுடைய வீடணன். அவன் அறிந்த வழிகள் அனைத் தையும் மேற்கொண்டும் இராவணன் மனத்தை மாற்ற முடியவில்லை. மேலே கூறப்பெற்ற நம்பிக்கையின் காரணமாக இராவணன் செய்கின்ற பெருந்தவறு யாது? பகைவனைக் குறைத்து மதிப்பிடும் பெருத்தவற்றைச் செய்துவிட்டான். கொச்சை மானுடர் என்று பேசிவிட்டான்.

இப்பொழுது வீடணன் செய்யத்தக்கது யாது? இதேபோன்ற மற்றொரு வீரன் வரலாற்றை எடுத்துக் கூறினால், ஒருவேளை இராவணன் மனந்திருந்தவுங் கூடும் என்று வீடணன் நினைக்கிறான். கொச்சை மானுடர் என்று இராம இலக்குவரை எள்ளி நகையாடுகின்ற இராவணன் கூட இரணியனை எள்ளி நகையாடத் துணியமாட்டான் அல்லனோ? எனவேதான் இரணியன் வரலாற்றை வீடணன் இந்தச் சந்தர்ப்பத்தில் கூறுவதாக, கம்பன் கதைப்போக்கை அமைக்கிறான். இவ்வாறு சூழ்நிலையையும், சந்தர்ப்பத்தையும் ஏற்படுத்தி விட்டமையின் இரணியன் வதையை இடைப்பிறவரல் (Anachronism) என்றோ கதைப்போக்கில் ஒட்டாமல் தொங்குகிறது என்றோ திறனாய்வாளர்யாரும் கூறமுன்வரார். மூலக்கதையுடன் இக்கதை நன்கு இணைந்து ( Integrated) முழுத்தன்மையுடன் விளங்குவதைக் காண்கிறோம்.

'இரணியன் வதை' என்ற இச்சிறு காப்பியம் இரண்டு குறிக்கோள்களை நிறைவேற்றக்காணலாம். இராவணனுக்கு அறிவூட்டத் தோன்றிய இக்கதையின் முற்பகுதி இரணியனுடைய தவவலி, உடல் வலி, வரவலி ஆகியவற்றைக் கூறுகிறது. அவனுடைய அன்றாட வாழ்க்கையைச் சித்திரிக்கின்ற விதமே அவனுடன் ஒப்பிட்டால் இராவணன் சாதாரண மனிதன் என்று நினைக்குமாறு செய்கிறது. பல்லாயிரம் இராவணர்கள் கூடினாலும் ஒரு இரணியனுக்கு ஈடாகமாட்டார்கள் என்ற கருத்துப் படிப்பவர் உள்ளத்திலேயே தோன்றுகிறது என்றால் இதனைக் கேட்கும் இராவணன் மனத்தில் தோன்றாமலா இருக்கும்?

எல்லாவகை வலிமைகளிலும் இராவணன் இரணியனுக்கு ஒரு சிறிதும் ஒப்பாகமாட்டான் என்று கூறியபிறகு இராவணனிடம் உள்ள குறை இரணியனிடம் இல்லை என்பதைக் குறிப்பாகக் காட்டுகிறான் வீடணன். இராவணன், இரணியன் இருவரும் அகங்கார வடிவினர்; இருவருமே பகையைக் குறைத்து மதிப்பிடும் தவற்றைச் செய்தனர்; இருவருமே அறத்தை மறந்தனர். என்றாலும், இருவருக்கும் இடையே உள்ள மலைபோன்ற வேற்று மையையும் வீடணன் காட்டுகிறான். இரணியன் எல்லையற்ற அகங்காரத்தால் அழிந்தானே தவிர, இராவணனைப்போல அதீத காமத்திற்கு இடங்கொடுக்கவே இல்லை. இன்னுங் கூறப்போனால், காமத்தை வென்றவன் இரணியன் என்ற கருத்தையும் குறிப்பாகக் கூறுகிறான் வீடணன். மகன் பிரகலாதனிடம் பேசுகின்றபொழுது இரணியன்' அடே! நீ தூணிலும் நான்கூறும் சொல்லிலும் உள்ளான் என்று எந்த அரியைக் கூறுகிறாயோ அந்த அரியைத் தோளோடு தாளும் இற்றுவிழ வெட்டிவிட்டு, பின்னர் உன்னையும் கொன்றபிறகு என் வாளினையாவது வணங்குவேனே தவிர, ஊடலைத் தணிக்கக்கூட மகளிர் காலில் விழுந்து வணங்காதவனாகிய யான் இந்த அரியையா வணங்குவேன் என்று எதிர்பார்க்கின்றாய்?' என்ற பொருளில்

*" கேள் ! இது; நீயுங் காணக்*
*கிளர்ந்ததோள் அரியின் கேழ்இல்*
*தோளோடு தாளும் நீக்கி,*
*நின்னையுந் துணித்துப் பின்என்*
*வாளினைத் தொழுவது அல்லால்*
*வணங்குதல் மகளிர் ஊடல்*
*நாளினும் உளதோ? என்னா*
*அண்டங்கள் நடுங்க நக்கான்" (146)*

என்று பேசுகிறான் இரணியன். இதனை ஒரு காரணத்துடன் எடுத்துக் கூறுகிறான் வீடணன். ஆட்டிப் படைக்கும் காமத்திற்காகத் தன் சுய கௌரவத்தையும் விட்டுச் சீதையின் காலில் விழுந்து கெஞ்சும் இராவணன் எங்கே? ஊடற்காலத்திலும் மகளிரை வணங்கமாட்டேன் என்று கூறும் இரணியன் எங்கே? அகங்காரத்தால், தான் உயர்ந்தவன் என எண்ணும் இராவணனுக்கு உண்மையான அகங்காரம் எத்தகையது என்பதை வீடணன் எடுத்துக்காட்டுகிறான். எல்லாவகையிலும் இரணியன் இராவணனினும் மேம்பட்டவன் என்பதை, பல்வேறு சான்றுகள், நியாயங்கள் என்பவற்றுடன் எடுத்துக்காட்டிவிட்டான் வீடணன்.

இனி அவன் செய்ய வேண்டிய செயல் மற்றொன்று உண்டு. எந்த வீரனும் செய்யக் கூடாத தவறாகும் அது. அந்தத் தவற்றைச் செய்து விட்ட எந்த வீரனும் அதனால் ஏற்படும் விளைவிலிருந்து தப்ப முடியாது. அந்தத் தவறு யாதெனில், பகைவனுடைய வலிமையைக் குறைத்து மதிப்பிடுவதாகும். இராவணனினும் பன்மடங்கு மேம்பட்டவனாகிய இரணியன் கூட இத்தவற்றைச் செய்து அதற்குரிய தண்டனையைப் பெற்றுவிட்டான் என்று கூறு முகத்தால் இராவணனுக்கும் அந் நிலைதான் ஏற்படும் என்பதை எடுத்துக் காட்டுகிறான் வீடணன்.

இந்த அருமையான சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு இருவருக்கும் பகைவனாக வந்தவன் யார் என்பதைக் கூற வீடணன் துணிந்து விட்டான். தானே அதனைக் கூறுவதைவிடத் தன் கதாபாத்திரமாகிய பிரகலாதனைப் பயன்படுத்திக் கொள்கிறான். இருவருக்கும் பகைவனாக வந்தவன் முழு முதற் பொருளாவான். அந்தப் பொருளை அறிவது யாருக்கும் இயலாத ஒரு காரியமாகும். எனவே அப்பொருளின் இயல்பை முழுவதுமாக அறிந்து கூறுதல் யாருக்கும் இயலாத ஒன்று. அறிவில் மேம்பட்டவர்கள் அறிவின் துணைகொண்டே இறைப்பொருளை அறிய முற்படுவர். " ஞானத்தால் தொழுவார் சில ஞானிகள்" என்பது அப்பர் பெருமான் வாக்கு.

அறிவில் மேம்பட்டவனாகிய இரணியனுக்கு அறிவின் துணை கொண்டே இறைப் பொருளை அறிய வழி வகுக்கின்றான் பிரகலாதன்.

*" அளவையான் அளப்ப அரிது;*
*அறிவின் அப்புறத்து*
*உள; ஐயா! உபநிடதங்கள் ஓதுறு*
*கிளவி ஆர் பொருள்களால்*
*கிளத்துறாதவன்"* (62)

என்று கூறிய பிரகலாதன் ஏகம் சத்..... என்ற தத்துவத்தை விளக்கப் புகுந்து

*" மூவகை உலகும் ஆய் குணங்கள்*
*மூன்றும் ஆய்*
*யாவையும் எவரும் ஆய் எண் இல்*
*வேறுபட்டு*
*ஓவல் இல் ஒரு நிலை ஒருவன் செய்வினை*
*தேவரும் முனிவரும் உணரத் தேயுமோ?*
(63)

என்றும்

*" கருமமும், கருமத்தின் பயனும்,*
*கண்ணிய*
*தருமுதல் தலைவனும், தானும்,*
*ஆனவன்"* (64)

என்றும் உபநிடத அடிப்படையில் இறை இலக்கணம் கூறுகிறான். அடுத்து இன்னுஞ் சற்று ஆழமாகச் சென்று பேச முற்படுகிறான்.

*" காலமும் கருவியும்*
*இடனும் ஆய், கடைப்*
*பால் அமை பயனும் ஆய்,*
*பயன் துய்ப்பானும் ஆய்*
*சீலமும் அவை தரும்*
*திருவுமாய், உளன்*
*ஆலமும் வித்தும் ஒத்து*
*அடங்கும் தன்மையான் "*

என்றும் (75)

*" ஓம் எனும் ஓர் எழுத்து அதனின்*
*உள் உயிர்*
*ஆம் அவன் அறிவினுக்கு அறிவும்*
*ஆயினான்"*

என்றும் கூறுவது ஆராய்ந்து அறிதற்குரியது.

இத்துணை அளவு இறை இலக்கணம் பேசுகிறானே கவிச்சக்ரவர்த்தி! இக் கருத்துக்கள் அவனாகப் படைத்துக் கொண்டவையா என்று ஆராய்ந்தால், இந்நாட்டின் மிகப் பழமையான சொத்து அது என்பது நன்குவிளங்கும்! தெளியாத மறை நிலங்கள் தெளிந்தாமன்றே! என்று வேதாந்த தேசிகரால் பாராட்டப்படும் நாலாயிரப் பிரபந்தத்தின் உயிர்நாடி என்று கருதத்தக்க திருவாய்மொழியில்,

*'சீர்மை கொள்வீடு, சுவர்க்கம் நரகு ஒரு*
*ஈர்மை கொள் தேவர்கள் நடுவா மற்று*
*எப்பொருட்கும்*
*வேர்முதலாய் வித்தாய்ப் பரந்துநின்ற*
*கார்முகில்போல்கண்ணன்* என்றும் (8–10)

*திடவிசும்பு எரிவளி*
*நீர்நிலம் இவை மிசை*
*படர்பொருள் முழுவதுமாய்*
*அவை அவை தொறும்*
*உடல் மிசை உயிரெனக்*
*கரந்து எங்கும் பரந்துளன்* (1–7)

என்றும் கூறியதோடு அமையாது,

*உளன் எனில் உளன் அவன்*
*உருவம் இவ்உருவுகள்*
*உளன் அலன் எனில் அவன்*
*அருவம் இவ் அருவுகள்*
*உளன் என இலன் என*
*இவை குணம் உடைமையில்*
*உளன் இரு தகைமையோடு*
*ஒழிவிலன் பரந்தே* (1–9)

என்றும் கூறிச்செல்கிறார் வேதம் தமிழ் செய்த மாறன் சடகோபன்.

இந்நுண்ணிய கருத்தைக் கூறிய பிரகலாதன் இறுதியாக சாதாரண மனிதனும் அறியத்தக்க வகையில் இறை இலக்கணம் பேச முற்படுகிறான்.

*மூன்று அவன் குணங்கள் செய்கை*
*மூன்று அவன் உருவம் மூன்று*
*மூன்று கண், சுடர்கொள் சோதி*
*மூன்று அவன் உலகம் மூன்று*
*தோன்றலும் இடையும் ஈறும்*
*தோன்றிய பொருள்கட்கு எல்லாம்*
*சான்று அவன்; இதுவே வேத*
*முடிவு; இது சரதம்* (122)

என்று கூறியதுடன் அமையாது,

*சாணினும் உளன்; ஓர் தன்மை*
*அணுவினைச் சதகூறுஇட்ட*
*கோணினும் உளன் நீ சொன்ன*
*சொல்லினும் உளன்* (124)

என்று கூறிமுடிக்கிறான். இந்த இரணியன் கதை இல்லாமல் இத்துணைத்தத்துவக் கருத்துக்களைக் கம்ப நாடனே கூறி இருப்பினும் அது படித்து இன்புறுதற்கு முடியாத நீதிநூலாக முடிந்திருக்கும். மிக உயர்ந்த தத்துவ நூல்களும் விளக்குதற்குக் கடினம் என்று கருதுகின்ற கருத்துக்களை அனாயாசமாகக் கவிச்சக்கரவர்த்தி கூறிவிடுகிறான். கதையின் இடையில் சருக்கரை தடவிய மாத்திரையாக இவை அமைக்கப்பட்டிருத்தலின், யாவரும் இதனைப் படித்து மகிழவும் ஓரளவு இத்தத்துவங்களைப்புரிந்து கொள்ளவும் கவிச் சக்கரவர்த்தி வழி செய்துவிட்டான்.

ஒரே கல்லில் ஒன்பது மாங்காய் அடிப்பதுபோல, இராவணன் வீழ்ச்சி, உறுதி என்பதை வீடணன் மட்டுமல்லாமல், இராவணனை ஒழிந்த அனைவரும் அறிந்து கொள்ளுமாறு செய்து விட்டதுதான் காப்பியத்தில் ஒருங்கு இணைந்த இணைப்பு என்று கூறுகிறோம்.

---

*நன்றி : 'கம்பன் விழா மலர்' –1979, திருச்சிராப்பள்ளிக் கம்பன் கழகம்.*




# கம்பர் கவிநயம்

பேராசான் 'இலக்கணவித்தகர்' இ. நமசிவாய தேசிகர்

கல்வியிற் பெரியன் கம்பன், அவன் ஒரு கவிச் சக்கரவர்த்தி, எனச் சிறு வயதிலேயே கற்பதனாலும்,

*" இம்பர் நாட்டிற் செல்வம் எல்லாம்*
*எய்தி அரசாண் டிருந்தாலும்*
*உம்பர் நாட்டிற் கற்பகக்கா*
*ஓங்கு நீழல் இருந்தாலும்*
*செம்பொன் மேரு அனையபுயத்*
*திறல் சேர் இராமன் திருக்கதையில்*
*கம்ப நாடன் கவிதையிற் போல்*
*கற்றோர்க் கிதயம் களியாதே"*

என்பது முதலிய பெரியோர் வாக்குக்களைக் கேட்டு இம்மையில் செல்வநிறைவுள்ள அரசனாயிருந்து பெறும் இன்பத்திலும், சுவர்க்கத்தில் இந்திரனாயிருந்து பெறும் இன்பத்திலும், கம்பன் கவிதைகளைக் கற்பதனாலாம் இன்பம் பெரிது என்பது முதலிய அவர் கவிதைச் சிறப்புக்களை அறிவதனாலும், தமிழ் கற்பவரில் சிறுவர் முதல் பெரியோரீறாகிய யாவரும் இராமாயணம் கற்பதில் பெருவிருப்புக் கொள்கின்றனர். முப்பத்திரண்டு அங்கலட்சணங்களும், செல்வச் சிறப்பால் ஆடை, அணி முதலிய புறஅலங்காரங்களும், அகத்து எண்ணங்களைப் புறத்தே காட்டும் முகக்குறிப்பும் வாய்ந்த மங்கை நல்லாள் ஒருத்தியை முற்றத் துறந்த முனிவர் முதல் யாவரும் விரும்புமாறு போல, செய்யுளுக்குரிய எல்லா லட்சணங்களும், சொல்லணி, பொருளணியாகிய புற அலங்காரங்களும், புலவன்தான் சொல்லக் கருதின வற்றுள் சொல்லால் உணர்த்தியவை போக, எஞ்சியவற்றைக் கற்போன் கருதிக் கொள்ளும்படி, செய்யுளிற் காட்டும் செய்யுட் குறிப்பும் வாய்ந்த ( கம்பன்) கவிதைகளை யாவரும் விரும்புவதில் வியப் பொன்றுமில்லை. கம்பன் விஷயங்களைக் கூறும் நெறி தனித்தன்மை வாய்ந்தது. அவனுக்கு நிகர் அவனே. செய்யுளில் சொல் பொருளை உணர்த்த, பொருள் பயனை உணர்த்தல் வேண்டும். செய்யுளுக்குப் பொருள் உயிர், பயன் உயிருக்குயிர். திருவருட் செல்வராகிய குமரகுருபரசுவாமிகள் "பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும் பயனும்" என்பர். கம்பர் கவிகள் பயன் பொருந்தியவை என்பதை அதனைக் கற்றவர் நன்கு உணர்வர். இராமாயணம் ஒரு பாற்கடல் அதனைப் பெரு முயற்சியின்றிப் படித்த மாத்திரத்திலேயே அது இனிக்கும். அறிவு கொண்டு கடைந்தால் அமிர்தம் பெறலாம். அதன் இனிமை பற்றிச் சொல்ல வேண்டு வதில்லை. அறிவு கொண்டு ஆழச் சிந்தித்துணரும் பெரியவர்கள் தாம் அனுபவித்த இன்பத்தினை, பேச்சு மூலமோ, எழுத்து மூலமோ வெளிப்படுத்தும் போது நாம் அதனை அறிந்து இன்புறலாம். அல்லது அங்ஙனம் உணர்ந்தும் இன்புறலாம். எங்ஙனம் உணர்ந்தாலும் அவ்வின்பத்தின் எல்லை காணுதல் அரிது. நற்கவிகளின் இயல்பு அது. ஆன்றோர் நவில் தொறும் நூல் நயம் போலும் என்பர்.

உணவுச் சுவைகள் ஆறனுள் ஒவ்வொன் றனையும் எல்லாரும் விரும்புதல் அரிது. சுவை உணர்வு மக்கள் தோறும் வேறுபடும். விருந்துண்ணவருபவர் ஒவ்வொருவரும் விரும்பும் சுவையை விருந்து கொடுப்பவன் அறிதல் இயலாது. கேட்டறிதலும் கூடாது. ஆதலால் விருந்து கொடுப்பவர் அறு சுவைகளும் அமைந்த உணவு வகைகளைச் செய்து அளிப்பர். இவ்வழக்கம் அறிந்தோ அறியாமலோ எம் தமிழரிடமுண்டு. அதுபோல் கம்பனும் நவரசங்களும், பிறவாறு சொல்லப்படும் சுவைகளும் ஆகிய எல்லாம் நிரம்ப, எமக்கு இராமாயணத்தை ஆக்கித் தந்திருக்கின்றான். அதனைக் கற்று, எவரும் தாம் விரும்பிய சுவைகளை அனுபவித்து இன்புறலாம். அக்கவிகள் எல்லாமே சுவையுடையன என்று கருதினாலும், என் அறிவிற் கெட்டியவரையில் நான் சுவைத்த சிலகவிகளில் மூன்றனை எடுத்து, இப்போதைய என்னறிவிற் கெட்டியவரையில் நயம் காட்ட முயல்கின்றேன். இதன்முன் கூறியபடி, கவிநயம் முழுவதும் காட்ட எவர்க்கும் முடியாதாகலின், மேலோர் மேலும் சிந்தித்து நயப்பர்.

***" மன்னவன் பணியன்றாகின் நும்பணி மறுப்பனோ என்***
***பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்ற தன்றோ***
***என்னினி யுறுதி அப்பால் இப்பணிதலை மேற்கொண்டேன்***
***மின்னொளிர் கானம் இன்றே போகின்றேன் விடையும்***
***கொண்டேன் "***

என்பது எடுத்துக் கொண்ட கவி.

இராமன் தந்தையின் வேண்டுதலால் முடி சூடுதலுக்கு ஆயத்தனாகிய சமயத்தில் கைகேயி அவனை விரைந்தழைக்கின்றாள். அழைத்து, இராமா அரசரும் உனது தந்தையுமாகிய தசரதர் உனக்கிட்ட கட்டளை ஒன்று உண்டு. அது பரதன் முடிசூட, நீ பதினான்கு வருடம் காட்டிற் சென்று கடுத்தவம் புரிதல் வேண்டுமென்பது. இது நீ தவறாது மேற்கொள்ள வேண்டிய அரச கட்டளை என்கிறாள். அது இராமனுக்கு அளவில்லாத மகிழ்ச்சியைத் தருகின்றது. விஷ்ணுவே அரக்கரை அழித்துத் தேவர் முதலியோரைக் காக்க, இராமனாக அவதரித்தார் என்பதை அக்காலத்தார் யாவரும் அறிவர். இராமாயணத்தில் பல இடத்தில் இதற்குச் சான்று காணலாம். அங்ஙனமாக, இராமன் இதனை அறிந்திருந்தான் என்பதைக் கூற வேண்டிய தில்லை. அறிந்திருந்தும் அரக்கரை அழித்தற்குரிய காலம் வராமையாலும், தான் அவதரித்த மனித வாழ்க்கைக்கேற்ற ஒழுக்கினை மேற் கொண்டு மனிதருக்கு முன் மாதிரி காட்ட வேண்டுதலினாலும் அதனை மறந்தவன் போன்று ஒழுகியவனுக்கு, தனது அவதார நோக்கம் நிறை வேறுதற்குரிய காலம் வந்தது என்று அறிந்த போது, எவ்வளவு மகிழ்ச்சி யுண்டாகுமென்பது சிந்தித்துணர வேண்டியது. இவ்வுள்ளுணர்ச்சி உள்ளவன் இராச்சிய பாரத்தை ஏற்க விரும்புவானா? வைகுந்த வாழ்வைத் துறந்து வந்தவனுக்கு மண்ணுலக அரசவாழ்வு ஒரு பொருளாகுமா? அவனிவ்விடத்துப் பெற்ற மகிழ்ச்சியைக் கம்பன், கைகேயியின் வாசகத்தை உணரக் கேட்ட இராமனது முகம் முன்னென்று மில்லாதவாறு அழகாக மலர்ந்த தென்றும், வண்டியிற் பூட்டிய காளையை அவிழ்த்து விட்டால் அது எவ்வளவு மகிழுமோ, அவ்வளவு அவன் மகிழ்ந்தான் என்றும் கூறி விளக்குவர். கம்பனின் இந்தக் கூற்றுக்கள் வெறும் கற்பனைகளல்ல. வாய்மையானவையே என்பது மேற் கூறியவற்றால் இனிது விளங்கும்.

இங்ஙனம் மகிழ்ந்தவன் கைகேயிக்குக் கூறுகின்றான். அம்மா இப்பணி " மன்னவன் பணி அன்றாகின் நும்பணி மறுப்பனோ" – அரசகட்டளை யாகாது நீங்களிட்ட கட்டளையானாலும் நான் மறுப்பேனா? முன்னறி தெய்வம் எனப்படும் அன்னையாகிய உங்களின் கட்டளை தெய்வகட்டளை ஆகுமன்றோ! என்பின்னவன் பெற்ற செல்வம், அடியனேன் பெற்ற தன்றோ– என் தம்பி பெற்ற இந்த அரச செல்வம் அடியவனாகிய யான் பெற்றதாகும் அல்லவா! இதில் தம்பி என்னாது என்தம்பி என்றதனால் பரதனோடு தனக்குள்ள தொடர்பையும், அன்பையும் வெளிப்படுத்துகின்றான். அரசகட்டளையால் பரதன் அரசனாகி விட்டான். ஆதலால், ஏனையோர் எல்லாம் அவனுக்குக் கீழ்ப்பட்டவர்களே யாதலின், தன்னை அடியேன் என்று குறிப்பிட்டு, தான் அக்கட்டளையை மெய்யாவே ஏற்றுக் கொண்டான் என்பதை வெளிப் படுத்துகின்றான். தன்னைப் போல நற்குணங்க ளெல்லாம் நிறைந்த பரதனும், தானும் இருவராகாது, அன்பினால் ஒன்றுபட்டு ஒருவரே யாகலின் அவன் பெற்ற செல்வத்தைத் தான் பெற்ற செல்வமாகுமென்று மெய்ம்மையே பேசுகின்றான். 'அன்றோ' எனக்கூறி அதனை உறுதிப்படுத்துகின்றான். இவ்வளவும் அவன் தன்னை மனிதனாக நோக்கி உலகியலொழுக்கம் காட்டக் கூறியவை.

இனி, தெய்வநோக்கில் பேசுகிறான். அப்பால் இனி உறுதி என் – இங்ஙனம் நான் உலகியலை நோக்கி வாழ்ந்ததன் பின், என் அவதார நோக்கத்திற்கு உதவியாக, தங்கள் கட்டளையினால் தக்க தருணங் கிடைத்த இப்பொழுது காடேகுதல் போல எனக்கு நன்மை தருவது வேறு என்ன? ஒன்றுமேயில்லை. " இப் பணி தலைமேற்கொண்டேன்" – ஆதலால் காடேகுதலாகிய இக்கட்டளையை மேலானதாக ஏற்றுக் கொண்டேன். இங்கு மேற்கொண்டேன் என்று அமையாது, தலைமேற் கொண்டேன் எனக் கூறி, அதனை மேலானதாக உவந்து ஏற்றுக் கொண்டமையைப் புலப்படுத்துதலைக் காணலாம். " மின்னொளிர் கானம்" – அம்மா! நீங்கள் கட்டளை இடும்போது, நான் செல்ல இருக்குங் காட்டை, "பூழி வெங்கானம்" என்று, மிகக் கொடிய இடமாகக் குறிப்பிட்டீர்கள். நீங்கள் அது குறித்து வருத்தப்பட வேண்டாம். அது நல்ல காடம்மா; அது மின் ஒளிர் கானம். அக்காட்டில் ஞானம் மிக்க அருந்தவர் பலர் பரந்து இருத்தலால் எங்கும் ஞான ஒளி மின்னலைப் போல் விளங்கிக் கொண்டு இருக்கிறது. ஆதலால் எனக்கு அங்கே போக மிகவிருப்பமாக இருக்கிறது. நீங்கள் வருந்தவேண்டாம். ஒரு சூழ் நிலையில் என்னை முடிசூடப் பணித்த என் தந்தை மற்றொரு சூழ்நிலையில் காடேகப் பணித்தார். இன்னுமொரு சூழ்நிலையில் காடு போக வேண்டாமென்று பணிக்கவும் கூடும். அவருக்கு அத்தனை அன்பு என்மேல் இருக்கிறது. அங்ஙனம் நிகழின் என் அவதார நோக்கத்திற்குப் பெருந் தடையாகும். அது தடையுறாவண்ணம் விரைந்து நான்

காடேகுதல் வேண்டும் ஆதலால், இன்றே போகின்றேன் – நான் அவ்வினிய காட்டுக்கு இன்றைக்கே போகின்றேன். விடையும் கொண்டேன் –இன்றைய முடிவுக்கு, இன்னும் நேரமிருத்தலின், அதற்கிடையில் காடேக வேண்டாமென்ற கட்டளை வரவும் கூடும் என்பதால் நான் இப்போதே செல்ல வேண்டும்; ஆதலால் விடையுங் கொண்டேன்– தங்களை; நான் சென்று வருகின்றேன், என விடை கேட்கவும், தாங்கள் போய்வா, என விடை தரவும், சில கணமாவது செல்லுமாதலின், அச்சில கணக் கழிவையும் நான் விரும்பவில்லை. தாங்கள் என்மேற் கொண்டபற்றினால் போய்வா, என விடை தருவீர்களென்பதை நான் நிச்சயம் அறிவேன். ஆதலால் நீங்கள் அதனைத் தந்ததாகக் கொண்டேன். வருகின்றேன் எனக் கூறிக் கொண்டே அவன் விரைந்து செல்கின்றான்.

இனி, முதல் இரண்டடிக் கருத்தையும், இராமன் மனித நோக்கில் கூறியதாகக் கொள்ளாது தெய்வ நோக்கில் கூறியதாகக் கொண்டு இது இராச கட்டளை அன்று, ஆனால் உம் கட்டளை. எனினும், நீங்கள் அன்னையாகிய தெய்வம் ஆதலின் அதனை நான் மறுக்க மாட்டேன். என் தம்பி அரச செல்வம் பெற்று விட்டான் என்று நீங்கள் மகிழ்தற்கு இடமில்லை. அவன் பெற இருக்கின்ற செல்வம், இப்போது நான் பெற்றதாய தவச் செல்வந்தான். அதனை இருந்து பாருங்கள். எனப் பொருள் கூறி நயப்பதுமுண்டு.

இனி எடுத்துக் கொண்ட கவி

***"சான்ற வராக, தன்குரவ ராக, தாய்***
***போன்றவ ராக, மெய்ப் புதல்வ ராக, தான்***
***தேன்தரு மலருளான் சிறுவ செய்வனென்***
***றேன்றபின் அவ்வுரை மறுக்கும் ஈட்டதோ"***

என்பது.

கங்கைக் கரை சென்று பரதன் இராமனை அடைந்து, அவனை நாட்டிலே வந்து அரசாளுமாறு பலவாறு நியாயம் காட்டி வேண்டியும், இராமன் தக்க நியாயங்களால் பரதனின் வேண்டுகைக்கு இயையாது மறுப்புரைத்த போது, வசிட்டமுனிவர், இராமா யான் உனக்குப் பல வித்தைகளையும் கற்பித்த குரு; குருவின் ஆணையை மறுத்தலாகாது; இது என் ஆணை; நீ மறுத்துரையாது ஏற்று, மகிழ்வொடு வந்து உனக்குரிய நாட்டை ஆள்வாயாக, என்கின்றார். தசரதன் இராமனின் உடலுக்குந் தந்தை; தான் அவ்விராமனின் அறிவுக்குத் தந்தை: உடலுக்குத்தந்தையிலும் அறிவுக்குத் தந்தை பெரியவன். ஆனபடியால் இராமன் தன் ஆணையை ஏற்க வேண்டுமென்பது, வசிட்டர் கருத்து. இராமன் இதனை மறுக்கவே முடியாது என்று பெருமிதப் படுகின்றார் வசிட்டர். இராமன் அவர் கருத்தை மறுத்துரைத்த உரையே இங்குக் காட்டிய கவி.

இதில் இராமன் வசிட்டருக்கு, எடுத்த உடனேயே தலையடி கொடுக்கின்றான். அவரை அவன், 'சிறுவ' என்று விளிக்கின்றான். வசிட்டர் திகைக்கின்றார். வசிட்டரே நீர் எனக்குக் காலத்தால் மூத்தவரும் அல்லீர்; அறிவால் மூத்தவரும் அல்லீர்; எனக்கு நீர் எப்பொழுதும் சிறுவனே. இதனை நீரும் அறிந்திருக்கின்றீர் அல்லவா? நீர் மலருளானாகிய பிரமனுக்கு மகனாகிய சிறுவன்; யான் உம் தந்தைக்குத் தந்தையாகிய வயதிற் பெரியவன். நான் விஷ்ணு – கடவுள். இப்பொழுது சொல்லும், நீர் எனக்கு அறிவிற் பெரியவரா? சிறுவனே தான். அறம் உரைத்தவனும் நானே, எனக்கன்றி வேறு யாருக்கு அறம் நின்ற நிலை தெரியும். யான் சொன்னன, செய்தன கொண்டு, அறம் இது வென உணருவதன்றி என் சொல், செயல்களில் அறம் இல்லையோ? உண்டோ? என ஆராயவும், இல்லையெனத் தீர்மானிக்கவும், உமக்கு மாத்திரமன்று மற்று யாருக்கும் தகுதி இல்லையே. நான் சீதையை முதலில் நோக்கிய போது, என் கண் நோக்கியதால் சீதை, கன்னியேதான் என்று தீர்மானித்துக்காட்டி, என் உறுப்புக்கள் கூட, அறத்தையே செய்யும் என்பதை அறிவித்தேனே, அதனை நீர் அறியவில்லையா? என் உடலுறுப்புக்களன்றி, எனது அம்பு கூட அறனன்றிச் செய்யாது என்பதைப் பிற்காலத்தில் அறிவீர். இங்ஙனமிருக்க, நீர் எனக்கு ஆணையிடலாமா? என்று கேட்கின்றான். வசிட்டர் அதிர்ச்சி அடைகிறார். ஒன்றும் பேசாமல் நிற்கின்றார். இன்னும் கேளும் என்று இராமன் தொடர்கின்றான். மலரிடத்தே தேன் இருக்கிறது; மலர் அத்தேனை, அதன் மணம் நோக்கித் தன்னிடம் வந்த வண்டுகளுக்கீந்து, அவ்வண்டுகள் மூலம் மகரந்தச் சேர்க்கை பெற்றுக் கருத்தரித்தலாகிய தன் கருக்கை நிறைவேற்றிக் கொள்கின்றது. அம் மலரை இருக்கையாகக் கொண்டவன் பிரமன்; ஆதலால் அவனுக்கும் அந்த இயல்புண்டு. நீர்பிரமனின் மகன் ஆதலால் உமக்கும் அந்த இயல்புண்டு. ஆதலால் நீர் உமது இனிய சொற் சாதுரியத்தைக் கொண்டு என்னை உம் வசப்படுத்தி, அயோத்திக்கு மீள அழைப்பதாகிய உம் கருத்தை நிறைவேற்ற நினைக்கின்றீர். அது எவ்வளவு அறம்புறமானதென்பதைக் காட்டுகின்றேன். கவனமாகக் கேளுமென்று பின்னுங் கூறுகின்றான்.

தன்னை ஒன்று செய்யும்படி கேட்பவர், பெரியோராக இருந்தாலென்ன தன் குருவாக இருந்தாலென்ன, தாய் போன்றவராக இருந்தாலென்ன

தன் புத்திரராகத்தான் இருந்தாலென்ன, ஒருவன் அதைச் செய்வேனென்று ஏற்றுக் கொண்டால், பின் அதனை யார்தான் தடுத்தாலும் செய்தே தீரவேண்டும். இதுதான் அறம் நின்ற நிலை, என் தந்தையும், அரசருமாயுள்ளவர் காடு செல் என்று கட்டளை இட, அதனை நான் செய்வதாக ஒத்துக் கொண்டேன். அதன்பின் செல்லலாகாது என்று, யார் கட்டளை இட்டாலும், செய்வேன் என்று ஒத்துக் கொண்டதனைச் செய்யாது விடுவது அறமன்று. தந்தை கட்டளையிட்டு நான் அதனை ஏற்கமுன் நீர் கட்டளையிட்டிருந்தாலும் உம் கட்டளையை ஏற்றுச் செய்தல் அறமாகும் என்று விளக்கம் கூறுகின்றான். இந்த இடத்தில் புட்கரனோடு சூதாட ஒத்துக் கொண்ட நளமகாராசனுக்கு, மந்திரிகள் சூதாடுவது தீதென்று எத்தனையோ காரணங்கள் கூறிய விடத்தும், அதனை நளன் விளங்கிக் கொண்ட இடத்தும், அவன் "தீது வருக. நலம் வருக சிந்தையால், சூது பொர இசைந்து சொல்லினோம்; யாதும் விலக்கலீர் நீர்" என்று மறுத்துச் சூதாடியதும், சோழன் ஒருவன் பசுக்கன்றைத் தேர்ச்சில்லால் நெரித்துக் கொன்ற தன் மகனை மதி மந்திரிகள் நன்காராய்ந்து, அப்பாவத்தைப் பிராயச்சித்தத்தினால் நீக்கலாமென்று கூறியும் அதனைக் கேளாது, தானும் தேர்ச்சில்லால் தன்மகனை நெரித்துக் கொன்றதும், அதுவே அறம் என்று ஏற்றுச் சிவபெருமான் அருள் செய்ததும், அவன் மனுநீதி கண்ட சோழன் எனச் சிறப்பிக்கப்பட்டதும் நினைவு கூரத்தக்கன.

மேல், எடுத்துக் கொண்ட கவி :

***" சுற்றத்தார் தேவரொடுந் தொழநின்ற***
***கோசலையைத் தொழுது நோக்கி***
***வெற்றித்தார்க் குரிசிலிவர் ஆரென்று குகன்***
***வினவ வேந்தர் வைகும்***
***முற்றத்தான் முதல்தேவி மூவுலகும்***
***ஈன்றானை முன்னீன்றானைப்***
***பெற்றத்தால் பெற்ற பயன் யான்பிறத்தலால்***
***துறந்த பெரியாள் என்றான்"***

என்பது.

கங்கையைக் கடக்க, பரதன் முதலியோர் குகனின் ஓடங்களில் ஏறிச்செல்கின்றனர். அப்பொழுது குகன், ஒரு பெரியவளை கூட வந்து சுற்றத்தவர் தொழுதலையும், (இராமன் காட்டுக்குப் போகின்றான், இனி எங்கள் துயர் தீருமென்று மகிழ்ந்திருந்த தேவர்கள் பரதன் இராமனை மீள அழைத்து வரச் செல்வதையறிந்து என்ன நடக்குமோ? என ஐயுற்று, அதனை அறிவோமென்று வந்து, வானத்துத் தோன்றியவர்கள்) அத்தேவர்களும் அவளைத் தொழுதலையும் கண்டு ஒருபோது இவர் கோசலையாக இருக்கலாமோ என்று குறிப்பாலுணர்ந்தானானாலும் தெளிய விசாரித்தறிவோம் என்று எண்ணி தானும் அவளைத் தொழுது கொண்டே நோக்கி, பரதனை வெற்றித்தார்க்குரிசில் என அழைக்கின்றான். ( குரிசில் என்ற இயல்பு விளியால் பரதன் குகனுக்குக் கிட்ட இருக்கிறான் என்பது தெரிகிறது). இதுவரை யுத்தத்தில் யாரையும் வென்றிலாதவனும், இத் துக்கநிலையில் மாலை அணிந்திருக்க மாட்டாதவனுமாகிய பரதனை வெற்றிமாலை சூடிய மேலோய் என அழைக்கிறான். அவன் கருத்தில் பரதன் யுத்த வெற்றி பெற்றான் என்பதில்லை. " ஆயிரம் இராமர் நின்கேள் ஆவரோ தெரியின் அம்மா" என்றதனாலும் மன்புகழ் பெருமை நுங்கள் மரபினோர் புகழ்களெல்லாம், உன் புகழாக்கிக் கொண்டாய் உயர் குணத்துரவுத்தோளாய்" என்ற தனாலும், பரதன் உத்தமனும், வீரனுமாகிய இராம முதலியோரையும் புகழாலும் பெருங்குணத்தாலும் வென்றவன். என்ற கருத்துள்ளது என்று தெரிகிறது. இன்னும் வெற்றி மாலை என்பதற்கு, அவன் வெற்றியைக்குறிக்கும் மாலை என்று கருத்துக் கொண்டிலன். வெற்றியாகிய மாலை என்று கருத்துக் கொண்டான் என்றும் தெரிகிறது. இங்ஙனம் விளித்தவன் இவர் யார் என்று வினவுகிறான். (இவர் என்ற சுட்டினால், கோசலையும் கிட்ட இருக்கிறாள் என்பது தெரிகிறது). இருவரும் கிட்ட இருப்பதால் அவன் மெல்லென பேசினான் என்பதும் கையால் தொழுது கொண்டு நோக்கி என்பதனால் கையாற் சுட்டிற்றிலன் என்பதும், இங்ஙனமான அவனது பயபத்தி நிலையில் அவனது நோக்கு மென்னோக்கு என்பதும், அம்மென் நோக்கினாற் சுட்டினான் என்பதும் தெரிகின்றன. இவர் யார் என்ற சொற்றொடரே பயபத்தி நிலையைக் காட்டுகிறது.

இங்ஙனம் வினவிய குகனுக்குப் பரதன் விடை கூறுகின்றான். ஒருபெரியவள் என்பதே அவன் விடை. ஏன் பெரியாள் என்பதை விளக்குகின்றான்; தனக்குத் திறை செலுத்தவும் பிற காரணங்களுக்குமாகத் தன்னிடம் வந்த அரசர்களின் மிகுதியால் அவர்களுக்கு அவனைக் காணத் தருணங் கிடைப்பது அரிதாகையால் அவர்கள் அவனது அரமனை முற்றத்துக் காத்திருக்க வேண்டியுள்ளது. அதுவும் நாட்கணக்கில் (வைகும் என்ற சொல்லால் இது பெறப்படுகிறது) அந்த முற்றத்தான் ஒரு சக்கரவர்த்தி என்பதும் அச் சக்கரவரத்தி யார் என்பதும் இங்குக் கூறியவாற்றால்

உனக்கு இனிது விளங்கும். அவரது பெயரைச் சொல்லவும் தகுதியற்ற பாவிநான். இப்பெரியாள் அச்சக்கரவர்த்தியின் மனைவி; அதிலும் முதல் மனைவி என்று பரதன் கூறியதும் குகனுக்கு அப்பெரியாளைச் சுற்றத்தவர் தொழுவதற்குக் காரணம் தெரிகிறது. பின்னும் பரதன் கூறுகின்றான். மூன்றுலகத்தையும் படைத்தலால் பிரமன் அம்மூன்றுலகத்திலும் பெரியவன். அவனை மகனாகப் பெற்றதால் விஷ்ணு அவனிற் பெரியவன் அவ்விஷ்ணுவின் அவதாரமான இராமனைப் பெற்றவர் இவர். ஆதலின் இவள், தமக்கு ஒப்பில்லாத பெரியாள் என்று கூறியதும் குகனுக்கு அப் பெரியாளைத் தேவர் தொழுகின்ற காரணமும் தெரிகிறது. சோகமே உருவமான பரதனுக்கு, எதனைச் செய்யும் போதும், சொல்லும் போதும், எண்ணும் போதும் தான் ஒரு பாவி என்ற எண்ணம் நெஞ்சத்தில் நிலைத்திருந்தலால், அந்நினைவு இந்நோக்கில் மேலெழ, மேலுங் கூறுகின்றான்; இராமனை மகனாகப் பெற்றதனாலே தான் அடைந்த பெருஞ் செல்வத்தைப் பாவியாகிய நான் பிறந்ததனால் வேண்டாமென்று விட்ட பெரியவள் என்கிறான். கோசலைக்கு வருத்தம் இராமன் காட்டுக்குப் போவதுதான். அரச செல்வத்தைப் பரதன் பெறுதலால் அவனிடத்தும் இராமனிடத்தும் ஒரேவித அன்புடைய கோசலைக்கு மகிழ்ச்சியே யன்றித் துன்பமில்லை. எனினும் பரதன் நெஞ்சில் அது பெரும் பாவமாகக் தெரிகிறது. கோசலை கருத்தில் அவள் செல்வத்தை அதன் நிலையாமை உணர்ந்து தானே விட்டவளன்றி இழந்தவள் அல்லள். இக்கருத்து, பிறத்தலாலிழந்த என்னாது, ''பிறத்தலால் துறந்த'' என்றதனாற் பெறப்படும். நிலையாமை உணர்ச்சி யானது ஞானவாயில் ஆதலால், அங்ஙனம் அதனை உணர்ந்தவள் மிகப் பெரியவளே என செல்வம் யான் பிறத்தலால் துறந்த என்ற இக் கூற்றும், அவள் பெரியவள் என்பதை விளக்க வந்ததாகக் கொள்ளக் கிடத்தல் காண்க. இதனால் குகனுக்கு அப்பெரியாள் எய்திநின்ற துறவுநிலையும் விளங்குகின்றது. அவள் மூவாராலும் தொழத்தக்காள் என்பதும் விளங்குகிறது.

நான்முற் கூறியவாறு இம் மூன்று கவிகளும் தான் இராமாயணத்தில் நயமானவை என்றாவது இக்கவிகளின் நயமெல்லாம் இங்குக் கூறியவாற்றால் அமைந்து விட்டன என்றாவது கருதுகின்றேன் அல்லேன் என்பதைத் தெரிவித்து, தமிழார்வ முள்ளவர்கள், இராமாயணத்தை நயந் தெரிந்து கற்றுப் பயன்பெற வேண்டும் என வேண்டி இச் சிறு கட்டுரையை நிறைவு செய்கின்றேன்.

*நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே;*
*தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே;*
*சென்மமும் மரணமும் இன்றித் தீருமே-*
*இம்மையே இ'ராம' என்று இரண்டு எழுத்தினால்.*

*ஓர் ஆயிரம் மகம் புரி பயனை உய்க்குமே;*
*நராதிபர் செல்வமும் புகழும்நல்குமே,*
*விராய் எனும் பவங்களை வேர் அறுக்குமே-*
*'இராம' என்று ஒரு மொழி இயம்பும் காலையே.*

# கம்பசித்தாந்தக் கடவுட் கோட்பாடு

பண்டிதர். மு. கந்தையா



உலகம், உயிர், கடவுள் என்ற முக்கூட்டின் விளைவு வாழ்வியல். உலகம் உண்டோ இல்லையோ?. உண்டெனில் அதன் இருப்பு என்ன மாதிரி? இது ஒரு விசாரணை. உண்டென்றால் உண்டு தான் இப்போ காணப்படுகிறது போல் அது எப்போதும் நிலையாயிருக்கும் என்பர் சிலர். இல்லை இது அழிந்து தோன்றும். அழிவென்றால் இல்லாமற் போதல் அல்ல. தன் காரிய நிலையில் இருந்து காரண நிலைக்கு ஒடுங்குதல். தோன்றுதல் என்றால் முன் இல்லாத காரிய ரூபத்திற்கு வருதல். இங்ஙனம் காரண நிலையிலும் காரியநிலையிலும் மாறி மாறி இருத்தலால் அதுபற்றி உலகம் உள்ளதா என்பர் சிலர். அப்படி எல்லாம் இருக்கமுடியாது. அது உள்பொருளல்ல. உள்ளது போல் தோன்றும் அளவல்லது வேறில்லை. வெட்ட வெளியில் தூரக் கண்ணுக்குக் கானல் நீர் தோன்றுவது போல என்பர் சிலர். அந்திவேளையில் கயிறு அரவாய்த் தோன்றுவது போல என்றும் சொல்வர். மேலும் மாலை மயக்கத்தில் பூமாலை பாம்பாய்த் தோன்றுதல் போல என்றும் சொல்வர். இவைகள் மூலம் உலகம் இருக்கிறது எனக் காணும் காட்சி மயக்கக் காட்சி என நிறுவுவது அவர்கள் குறிக்கோள்.

அது பொருந்தாது அவை மயக்கக் காட்சிகளல்ல; உண்மைக் காட்சிகளே, என்பதற்கு நிரூபணமுண்டு. கானலும் கயிற்றரவும் மாலைப்பாம்பும் தோன்றுஞ் சூழ்நிலைக் கேற்ப அவை உள்ளனவே. வேனிற் காலமல்லாத மற்றைக் காலத்தில் நண்பகலல்லாத மற்ற வேளையில் வெட்டவெளியல்லாத மற்றிடங்களில் கானல் தோன்றுவதில்லை. அந்தி வேளை அல்லாத மற்றவேளையிற் கயிற்றளவு தோன்றுவதில்லை. மாலையிருள் கவ்வுதற்கு முன்னே பின்னே மாலைப்பாம்பு தோன்றுவதில்லை. இவை காரண காரிய ரீதியான நிகழ்ச்சிகள். வேனிற் காலத்துச் சூரியனின் வெப்பக் கதிர்கள் நிலத்திற் பட்டுப் பிரதிபலிக்கையில் பவன மண்டலத்தில் எழும் அசைவு, நீரலையாய்த் தோன்றுகின்றது. அந்திவேளைச் சூரியனின் மங்கலொளி கயிற்றிற்பட்டுப் பிரதி பலிக்கையில் எழும் பளபளப்பான ஒளி பாம்பு வடிவாய்த் தோன்றுகிறது. மாலைக்கால இருளிடத்தும் தன்மயமான ஒருவித ஒளி உண்டு. அதனுதவியால் தான் ஒருவித இருளிலும் கண் பொருள்களை மாற்றுக் காட்சியாகக் காண்கிறது. அவ்வொளி பூமாலையிற் பட்டுப் பிரதி பலித்தலால், அரவுருவம் தோன்றுகிறது. ஆதலாற் கானற் காட்சி, கயிற்றரவுக்காட்சி, மாலைப்பாம்புக் காட்சிகள் இல்லாதவையல்ல; உள்ளவையே. அது போல் உலகத் தோற்றமும் இல்லாததைக் கண்ட தோற்றமல்ல, உள்ளதைக் கண்ட தோற்றமே.

இனி உலகந் தோற்றுதற்கு அவற்றை உவமையாக்குதலில் வேறுந் தவறுண்டென்பதற்கு நியாயமுண்டு. கானல் நீர் தாகத்துக்குதவுவதில்லை. கயிற்றரவோ மாலைப்பாம்போ எப்போதாவது யாரையாவது தீண்டியதாகவில்லை. அவை போல உலகுமெனில் அது ஒருவிதத்திலும் உயிரைப் பாதிக்காதிருக்க வேண்டும். இங்கு நிலைமை நேரெதிர். உலகப் பொருள்கள் ஒரோவொரு வேளையல்ல ஒவ்வொர் கணமுமே இன்பம் துன்பம் மயக்கம் என்ற வகைகளில் உயிரைப் பாதிக்கின்றன. இப்படி நிகழும் பாதிப்புக்கள் மயமாயல்லது வாழ்க்கை அநுபவம் என ஒன்று இருப்பதாயில்லையே. உலகம் உண்மையில் உள்ளது அதனால் தான் அது பாதிப்பதாயிருக்கிறது. அவை காட்சிக்கு மட்டும் உள்ளவை. இது காட்சிக்கும் செயற்பாட்டுக்கும் உள்ளது என்பது வித்தியாசம். இது இங்ஙனமாக,

இராமாயண சுந்தர காண்டக் காப்புச் செய்யுளில், உலகத் தோற்றத்தைக் குறிப்பிடுகையில் 'அலங்கவில் தோன்றும் பொய்ம்மை அரவு என' என்று கம்பருந் சொல்லியிருக்கிறார் தான். ஆனால் அவர் அதைத் தம் கருத்தாகக் கொண்டு கூறியிருக்கவில்லை. அங்கு அதை அடுத்து வருந்தொடர் அதற்கு அத்தாட்சியாகும் என்னை?

**பூதபேதம்**

**விலங்கிய**

**விகாரப்பாட்டின்**

**வேறுபாடுற்ற**

**வீக்கம்**

என இவ்வாறு காரணத்திலிருந்து நாலு படியிறங்கி வந்து விளைந்த ஒரு காரியமாகவே உலகைக் காட்டுகிறார் கம்பர். இக்கிரமத்திற் படிக்குப்படி நின்று நின்றுணர்ந்து தெளிய வேண்டியது இவ்விஷயம். இப்படிமுறையில் ஊன்றி நோக்க உலகம் உள்பொருளாதல் வெளி. பூதபேதம் ; பூதம்– ஆகியது; தான் ஒடுங்கியிருந்தகாரண நிலையிலிருந்து மீள ஆகியது. பேதம் – பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்ற பேதங்களுள்ளது. அதாவது ஐம்பூதம் விலங்கிய மாறுபட்ட பிருதிவித் தன்மை அப்புத்தன்மை முதலிய சுய தன்மைகள் மாறுபட்ட விகாரப்பாட்டின் விகாரங் காரணமாக வேறுபாடுற்ற – நெல், புல், பொன், மணி, மலை, நதி என வெவ்வேறுற்ற வீக்கம், பொம்மல், பொருமல், பருமை உலகத்தின் யதார்த்தம் எதுவோ அதுதான் இது.

பஞ்சபூத விகாரப்பாட்டின் அமைந்தது உலகம். கம்பரின் பஞ்சபத நெறிப்பாட்டின் அமைந்தது உலகுண்மை. ‘ஐந்தின் வகை தெரிவான் கட்டே உலகு’ – தமிழ் மறை, உலகு –உலகுண்மை.

பென்னம் பெரிய பண்டங்கள் மட்டுமல்ல சின்னஞ் சிறிய அணுவும் கூட உண்ணும் அரிசி, பருகும் நீர் ஆகியன கூட பதபே தம் விலங்கிய விகாரப்பாட்டின் வேறுபாடுற்ற வீக்கமே தான். இருந்தும் அரிசியில் ஐம்பூதம் என்றாற் சிரிக்கத்தான் வரும். அவ்வளவுக்கு விஞ்ஞானக் காட்சிக்குத் தானும் இனங் குணந் தோன்றாதவாறு விலங்கி விகாரப்பட்டுப் போயிருக்கிறது அரிசி. அல்லாவிட்டால் விஞ்ஞானச் செயற்கையரிசி எப்பவோ விற்பனைக்கு வந்திருக்குமே. ஆனால் விஞ்ஞானக் காட்சிக்குத் தோன்றாவிடினும் மெய்ஞ்ஞானக் காட்சியில் இவ்வமைப்பிரகசியம் விளங்க ஒருவாய்பாடுண்டு $1/2 + 1/8 + 1/8 + 1/8 + 1/8 = 1$ இதற்குப் பஞ்சீகரண விதி என்று பெயர். அதாவது எல்லாப் பூதங்களின் சேர்க்கையும் எல்லாப் பொருளினும் உண்டேனும் வெவ்வேறுபட்ட பொருள் தொகுதிகளில் ஒவ்வொர் பூதக்கூறு பாதி இடம்பெறும். மற்றைய நான்கும் மீதியைத் தம்முட் சமபங்காக ஏற்கும். இதன்படி பூமியில் தோன்றுவனவற்றில் பிருதிவிக்கூறு பாதி; நீரின் தோன்றுவனவற்றில் அப்புவின் கூறுபாதி; இப்படி இப்படியே இந்த அமைவு.

இவற்றுக்குள்ளே எத்தனை எத்தனையோ செயற்பாடுகளின் அமைதி பதிவிருக்கின்றது. அதற்கிணங்க இவையெல்லாம் – இவ்வீக்கமெல்லாம் செயற்கை விளைவுகளான காரியங்கள். கருத்தா ஒருவனிருக்காமற் காரியமொன்றிருக்காது. ‘செய்வோனின்றிச் செய்வினையில்லை. ஆதலின் இவ்வுலகம் செய்வோனை உடைத்து’ என்பது சிவஞான போதம், இப்பொருட்கள் தம்பாட்டில் செயற்பட்டிப்படி வருமோ எனில், அதற்கு வேண்டும் அறிவுணர்வற்ற சடங்கள் இவை. நம்போன்ற மனிதர் அறிவாற்றலால் இவை கூடுமோ எனில் கையை விரித்துவிட வேண்டி ஆகும். எத்தனையோ உலகுகளில் எத்தனையோ கோடி விதங்களாகவுள்ள அத்தனையையும் படைக்க அத்தனைக்கு வீறும் விறலுமான அறிவாற்றலுள்ள ஒன்று வேண்டுமே அதுதான் இறைஎன்று சொல்லும் வேதம். கம்பர் காட்டும் ‘சிற்குணத்த’ ரும் தமது ஞானக்காட்சியிற் கண்டுரைப்பது அதனையே.

இறையென்ற அக்கருத்தாவின் உலகப் பொருளுற்பத்திக்கு இடைநிலையான கருவிகளா யுள்ளனவும் பல. அவற்றுளொன்று சூரியன். சூரியன் உணவுப் பொருள் விளைவுக்கு ஒருவகையிலுதவுங் கருவி; கருவியாயிருந்து உணவை விளைப்பதுமட்டில் சூரியன் அமைந்து விடுவதில்லை. அதன் சக்தியே அடுப்பில் உஷ்ணமாயிருந்து உணவைச் சமைப்பதுடன் வயிற்றில் ஜடராக்கினியாயிருந்து அதைச் சமிக்கச் செய்து கொண்டுமிருக்கிறது. அதற்கு இந்த இயல்பு வந்தது அதற்கும் கர்த்தாவாகிய இறைவனால் இந்த இயல்பு அவர் சொந்தம். அதனால் அவரும் உலகப் பொருள்களைப் படைக்குமளவில் அமைந்து விடுவதில்லை. இறைவனே தன் சக்திமயமாய் உயிரோடுடனிருந்து அநுபவிப்பித்தும் வருகிறான். இந்த இறை உபகாரம் பேசப்படுகிறது கம்பரின் அயோத்தியா காண்டக் காப்புச் செய்யுளில்,

*“வானின் றிழிந்து வரம்பிகந்த*
*மாபூதத்தின் வைப்பெங்கும்*
*ஊனும் உயிரும் உணர்வும் போல்*
*உள்ளும் புறமும் உளனென்ப”.*

உடம்பில் உயிர் அத்துவிதம் ; உயிரில் உணர்வு அத்துவிதம். இதே ரீதியான அத்துவிதப் பாங்கில் இறைவன் அகவுலகிலும் புறவுலகிலும் பொருந்தியுள்ளான் என்பது விளக்கம். இதற்கு ஏகப்பட்டகம் உயிருக்கு அநுபவ மூட்டுதலே ; இறை உயிர் தொடர்பில் அதியுயர் இரகசியம் இந்த அத்துவிதம். இத்தகும் இறைவன் உண்மை முன்னர் சுந்தரகாண்டச் செய்யுளில் வைத்தே கண்டோம். அதில் வந்த வீக்கம் நினைவிருக்கட்டும். அந்த வீக்கம்

*‘கலங்குவதெவரைக் கண்டால் அவரென்பர்’*

அதாவது அந்த வீக்கம் – இறைவனாலேயே

படைக்கப்பட்டு இறைவனாலேயே ஊட்டப்பட்டு வரும் வீக்கம் – அவற்றில் விம்மும் அநுபவம்– எவரைக் கண்டாற் கலங்குமோ அவர் தான் இறைவன் என்பர் – என்பது. இதன் விளக்கமாவது:–

குறித்த பூத விகார வீக்கத்தை இறைவன் விளைத்தது தன் பொருட்டல்ல, உயிர்ப் பொருட்டு. உயிர்க்கும் தன்சார்பிலான வினைப் போகந்தீரும் நோக்கில் ஒரு நெடுங்காலத்துக்கு இவ்வீக்கபலன்களை உண்டாக வேண்டிய நியமமுண்டு. அதற்காக இறைவனும் உயிருடன் அத்துவிதமாயிருந்து உயிர்க்குத் தெரியாமலேயிருந்து ஊட்டிக் கொண்டிருப்பான். இது முன்னுங் கண்டது. உண்ட சுவை தெவிட்டாமல் உயிரும் உண்டு கொண்டேயிருக்கும். எனினும், எதற்கும் ஓர் எல்லையுண்டு என்றதற் கேற்ப உயிர்க்கும் போக வேட்கையில் வெறுப்புத் தோன்றும் ஒரு கட்டம் அதன் விதிப்பிரகாரம் வந்தாகும். அந்நிலையை வைராக்கியம், இரு வினையொப்பு என்றெல்லாஞ் சொல்வார்கள். அந்நிலை ஆனதுமே உள்மறைந்திருந் தூட்டியவர் வெளிப்படுவார். வெளிப்படவே அதுவரை உயிர்க்கிருந்த போகாநுபவக் கட்டமைப்புக் கலங்கும். நிலைகுலைந்து போயொழியும் – என்பது.

இது முற்றிலும் உயிர்சார்பானது. கவிதைத் தேவை அதை இறை சார்பில் வைத்து எவர் தரிசனத்தில் அவை நிலை குலையுமோ அவரே இறைவன் என இறையிலட்சணமாக வடித்துள்ளது.

இங்கு நாம் அறிய வருவதைக் கணக்கெடுத்தால், உலகம் உள்பொருள், இந்த உலகம் பூதவிகார வீக்கமாகயிருத்தலால் அத்தொழிற்கு இன்றியமையாத இறையும் உள்பொருள். படைப்போன் என்ற அளவிலன்றி ஊனும் உயிரும் உணர்வும் போல் உயிருடன் அத்து விதமாயிருந்து ஊட்டுவோனும் இறைவனே, உயிருக்கு வினை போக அநுபவ நாட்டம் விட்டுக் கொடுக்குந் தருணங் கண்டு, தானாக நேர்பட்டு அதன் போகாநுபவ கட்டமைப்புகளை நிலை குலைப்பவனும் இறைவன். இவ்வகையில் அகவாழ்வு பரவாழ்வு இரண்டிலும் உயிருக்கு இன்றியமையாததாயிருத்தல் இறையி லட்சணம் என்றாகும். இதனால் அறியக் கிடப்பது.

அவனருளா லல்லது ஆவதொன்றில்லை. 'அருளால் அலது எக்கணுமிலேன் எந்தைபிரனிரே'– அப்பர் சுவாமிகள் அருளிச் செயல். அவளன்றி ஊர்புகுமாறறியேனே – திருமூலர் வாய்மொழி, ஊர்; இரண்டுருந்தான். உடலோடு கூடியிருந்து வசிக்கும் ஊர் அதாவது இறைவன் தரிசனப்படுமளவும் இருந்த ஊர் அதன் மேற் செல்லுமூர். இவ்வூர்ப்பேறும் அருளாலன்றி இல்லை. அவ்வூர்ப் பேறும் அருளாலன்றியில்லை. இரண்டுக்கும் மரபுப் பெயர் இகலோகம், பரலோகம்; பூலோகம், சிவலோகம் என்றும் ஆம்.

அகிலப் பிரசித்தமான பாரத தத்துவ ஞானத்தின் சாராமிர்த சங்கிரகம் இது. இந்த நம்பிக்கையே இந்துக்கள் வாழ்க்கைத் தேரின் அச்சாணி. இதற்கு ஆஸ்திகம் என்று பெயர். ஆஸ்திகக் கவி கம்பர்.

ஆயின், அலங்கலில் அரவுப் பொய்ம்மையை உள்ளதாகிய உலகிற் சார்த்துதல் ஆஸ்திக மல்லவே, அதையுமேன் தொடுத்தார் கம்பர் என்றெழலாம் ஒரு ஆசங்கை. அதை அவர் சுயகருத்தாகக் கொண்டு கூறவில்லை என இதற்கு முன் சொல்லியுள்ளதிலும் ஒரு ஆசங்கை யெழலாம். சுயகருத்தல்லாததை அவர் ஏன் சொல்ல வேண்டும் என்பது அது. விளக்கம் வருமாறு:

தத்துவ உண்மைகளை உணர்விக்கும் பாரம்பரியம் அது. ஒரு உண்மையைத் தெரிவிக்கையில் அதன் எதிர் நிலைக்கருத்தாக அறியப்பட்ட ஒன்றை முதலிற் சொல்லி அதை நிராகரிக்கும் முறையில் சொல்ல உள்ளதன் யதார்த்தத்தை உணர வைத்துப் பின்பே அதை நேராகச் சொல்வது தத்துவ சாஸ்திர மரபு. இந்திய தத்துவ சாஸ்திரங்களிற் பிரமசூத்திரம் முதலாகச் சங்கற்ப நிராகரணமீறாக அம்முறையே பின்பற்றப்பட்டுள்ளது. இவற்றில் முதற் கூறும் எதிர்நிலைக் கருத்துப் பூர்வபக்கம், முடிவிற் கூறும் சுயகருத்து சுவபக்கம் எனப்படும். இங்கு, கம்பரின் 'அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவு' பூர்வபக்கம், 'பூத மைந்தின் விலங்கிய விகாரப்பாட்டின் வேறுபாடுற்ற வீக்கம்' சுவபக்கம். கம்பர் அப்படிப் பிரிவு புலப்படத் தெரித்துக் காட்டவில்லையே யெனின், அது தத்தவ சாஸ்திர நூல்களுக்குரிய பண்பு. இலக்கியத்துக்கு அது உரிய பண்பல்ல. இலக்கியத்துக்கு உரிய பண்பு இரசனை, இரசனையைத் தூண்டும் இலக்கிய சாதனங்களிலொன்று உய்த்துணர வைத்தல். உய்த்துணர வேண்டுமிடங்களில் அதைத் தொட்டுவிடும் பொருத்தமான ஏதேனுமொன்று இருந்தாகும். அப்பணியில் இங்கு இடம் பெறுவது 'என'. என – என்றும், சிலர் பேசத்தக்கதாக என்றெடுத்துக் கொண்டாற் போதும்.

'கம்பன் வம்பன்' என்பதும் பிரசித்தம். இழி பொருளிலல்ல உயர்பொருளில். வம்பு – புதுமை; கம்பராமாயணத்தை இடங்கொண்டுள்ள பல வேறு வம்புகளில் இதுவும் ஒருவகை வம்பு. எது? இவ்விருவேறுண்மைகளின் தாரதம்மியத்தை உணர வைத்தல் மட்டுமல்ல மறுக்க வேண்டியதை உடன்பட்டது போலவுந் தோன்றக் காட்டி மறுக்கிறதாகக் காட்டாமல் மறுத்தே விடுதல் என்க.

# இராமாயணத்தில் இரு பெரும் உத்தமர்

பண்டிதர் - மட்டுவில் - ச - பொன்னுத்துரை

இராம காதையில் ஈடிணையற்றோர் இருவர் உளர். அவர்களின் செயற்பாடுகள் அளவிட முடியாதவை. அவை சொல்லால் வடித்துக் காட்ட முடியாதவை. உள்ளத்தால் உணர்தொறும் உணர்தொறும் உருக்கி நெஞ்சை நெகிழ்த்துவன.

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம். பரதனுடன் இதன் பொருளை வைத்து நோக்குக. "ஈன்றாள் பசி காண்பாளாயினும் செய்யற்க சான்றோர் பழிக்கும் வினை" இதற்கிலக்கியமாயமைந்தவனே பரதன். தாய் சொல்லை மீறி விட்டான். சான்றோருள்ளத்தில் நிலைத்து நிற்கின்றான். வசிட்டர் சொற்கூடக் காதில் ஏறவில்லை. சுமந்திரன் முதலாம் மூத்தோர் சொல்லும் பயனளித்தில. கேகய நாட்டிலிருந்து வருகின்றனர் பரத சத்துருக்கினர். பண்டென்றும் காணாத காட்சிகள் அவனுக்குத் தென்படுகின்றன. பெற்ற தாயிடம் அறியத் துடிக்கின்றான். அவளின் மொழிகள் ஆறுதலைத் தருமெனக் கருதினான் போலும். தாயிடம் வினவிய வினாவுக்கு எதிர்பார்க்க முடியாத வேகத்தில் விடை வருகின்றது. " வாக்கினால் வரந்தரக் கொண்டு மைந்தனைப் போக்கினேன் வனத்திடைப் போக்கிப் பாருனக்கு ஆக்கினேன் அவனது பொறுக்க லாமையால் நீக்கினான் தன்னுயிர் நேமி வேந்து" என்பது அவ்விடை. பரதன் எதனைக் கேட்க விரும்பாதவனாயிருந்தானோ அதன் உச்சிக் கட்டத்தைக் கேட்கலாயினான். அவனுள்ளம் குமுறிக் கொதித்தெழுந்தது. அந்நிலையில் அவன் யாது கூறுகின்றான்.

***"மாளவும் உளனொரு மன்னன் வன்சொலால்***
***மீளவும் உளனொரு வீரன் மேயபார்***
***ஆளவும் உளனொரு பரதன் ஆயினான்***
***கோளலது அறநெறி குறையுண்டாகுமோ"***

இஃது அவனது உள்ளக் கொதிப்பின் வெளிப்பாடு.

தந்தையின் ஈமக்கடன்கள் சத்துருக்கினனால் முடிக்கப்படுகின்றன. முடித்ததும் அரசின்றி நாடிருக்கும் நிலைமையை மாற்றியமைக்கச் சிந்திக்கப்படுகிறது. "தஞ்சம் இவ்வுலகை நீ தாங்குவாய்" என்று வசிட்டர் பரதனிடம் மொழிகின்றார். பரதன் நஞ்சினை உண்பது ஒத்த துன்பத்தில் ஆழ்ந்து விடுகின்றான். உடல் நடுங்குகின்றது. வசிட்டர் சொல்லைத் தாயின் சொல்லொடும் ஒப்புநோக்கி உணர்ச்சிவசப்படுகின்றான். பழியெனில் உலகுடன் பெறினும் கொள்ளலர். இந்தத் தரும சொரூபியை இராம காதையில் ஒப்புநோக்கிட எவருமே இணையாகார். பரதனின் தருமம் எத்தகையது என்பதைச் சிந்திக்க உள்ளம் சிலிர்க்குமன்றோ. இந்நிலையில் அறத்தைக் காப்பதற்கு இராமன் பாலேகி அவனை அழைத்து வருவதே செய்யத் தக்கது என உணர்ந்து உரைக்கிறான் பரதன். அதனை வரவேற்றனர் அனைவரும். படைகள் பரிவாரங்கள் குதூகலித்தெழுகின்றன.

படைகள் பரிவாரங்கள் புடைசூழ இராம பிரானைக் காணச் செல்கின்றான் பரதன். கங்கைக் கரை தென்படுகின்றது. குகனின் சந்தேகப் பார்வை பரதன் மீது விழுகின்றது. தனது தவறான பார்வையை விரைவில் குகன் உணர்ந்து அளவளாவுகின்றான். "எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு" எனப் பரதனை மட்டிடுதல் நோக்கத்தக்கது. குகனின் உள்ளம் துளிர்க்கு மளவிற்குப் பரதன் காட்சி யளிக்கின்றான். இத்தகைய பரதனுடன் உரையாடல் தொடங்கி " ஐயனே நீ ஈண்டு வந்த காரணம் யாதோ" என்று எழும்பிய வினா குகனின் உள்ளத் துளிர்ப்புக்கு உரமூட்டி வளர்த்து விட்டது. இதற்கு வரும் பதில் எப்படியிருக்குமென்பது குகனை அலைத்துக் கொண்டிருந்தது. பதிலோ குகனைத் திடுக்கிடச் செய்து விட்டது. " எந்தை உலகை எனக்களித்து எங்கள் குல தருமத்தினின்றும் வழுவி விட்டார். எந்தையின் பழியை நீக்க நாட்டு ஆட்சிக்குரிய

மன்னனைக் கொண்டு போக வந்தேன்'' என்பது அவன் பதில். அளவு கடந்த இராமபத்தன், இருவருள்ளத்தையும் ஒப்பு நோக்கி ஆராய்கிறான். ஆய்வின் முடிவில் '' ஆயிரம் இராமர் நின் கேழ் ஆவரோ தெரியினம்மா'' என ஆர்ப்பரித் தாடுகின்றான் அவன். பரதன் குகனுடன் உள்ளத்தால் ஒன்றி விட்டான். ஒன்றிய பரதனை இராமபிரானிடம் குகன் அழைத்துச் செல்கிறான்.

முன்பே கைகேயியின் வார்த்தைகளால் இலக்குமணன் கைகேயிமாட்டன்றிப் பரதன் பாலும் ஆறாத மனக் கொதிப்புடனிருந்தான். இப்பொழுது படை பரிவாரங்களுடன் வருவது அவனது மனக் கொதிப்பினைப் பலமடங்காகக் கூட்டிவிட்டது. எரிமலையெனக் கொதித்தெழுகின்றான் இலக்கு மணன். ''விதிக்கு விதியாகும் என்வில்லின் பெருமை காண்டி '' என இராமன் வனமேகிய காலை வையத்தை அழிக்க முயன்றது போல வனத்திடை வந்தும் படையெடுத்து வருகின்ற பரதனை அவன் படையுடன் அழித்து முடித்து விடுவதாகச் சபதம் செய்கின்றான். இத்தகைய இலக்குமணனைச் சாந்தப்படுத்துகிறார் இராமர். தம்பியைப் போரில் வென்றோ உன் சினத்தைத் தீர்க்கப் போகின்றாய். இலக்குமணா நீ மிகுந்த வீரன் என்பதில் சந்தேகமே இல்லை. நினைத்தால் இந்த உலகத்தையே அழிக்கவும் உன்னால் முடியும். ஆனால் அத்தகைய நிலைமைக்கு இப்பொழுது என்ன அவசியம் ஏற்பட்டுவிட்டது. பரதன் என்னைச் சந்திக்கவே வருகின்றான் என்று சிந்திப்பதை விட்டு அவன் பகைகொண்டு வருகிறான் என நீ ஏன் நினைக்க வேண்டும். பரதன் அறக்கடவுள் அல்லவா?. செம்மைப் பண்பு சிதைவடையாமற் காக்கும் மூல வேரல்லாவா அவன். சற்றுப் பொறுத்திருந்து காண்குதி. ''சேணுயர் தருமத்தின் தேவை செம்மையின் ஆணியை அன்னது நினைக்க லாகுமோ'' என இராபிரான் கூறுவதாகக் கம்பன் பரதனைப் பற்றிக் கூறுமிடங்களில் தருமத்தின் சொரூப மென்றும் செம்மைக்கு நிலைக்கள மென்றும் கூறுவதிலிருந்து பரதனின் பெருமையை இவ்வளவு என்று எடுத்துக் கூற முடியுமா ?.

இந்நிலையில் பரதனுடைய பரிவுடனாகிய உருவம் தெளிவாகத் தெரிந்து விட்டது. படைகள் பரிவாரங்கள் தொலைவிலே நின்றுவிட்டன. இருவரும் இராமனை அண்மித்து விட்டது கண்டு உணர்ச்சி உயிரைக் கவ்விக் கொள்ள ஓடோடி வருகின்றார்கள். ''தொழுத கையினன் துவண்ட மேனியன் அழுத கண்ணினன் அவலம் ஈதென எழுதிய படிவம் ஒத்து எய்துவான் தன்னை முழுதுணர் சிந்தையான் முடிய நோக்கினான்''. எனக் கம்பர் காட்டிய வடிவம் உள்ளத்தை நெக்கி உருக வைக்கின்றதன்றோ! அவரிருவரும் வருகின்ற கோலம் இராம இலக்குமணர் இருவருடைய உள்ளத்தையும் உருக்கி விடுகின்றது. இலட்சுமணனன் சற்று முந்திய மனநிலையையும் இப்பொழுதுள்ள நிலையையும் கூர்ந்து நோக்குக. இந்த நிலையை இராமன் தவறவிடவில்லை. '' தம்பீ இலக்குமணா! பரதன் படையெடுத்து வருவதைப் பார்'' என நகையும் அழுகையும் அவலமும் கலந்து தோன்றும் முகத்துடன் கூறுகின்றான். பரதனுடைய உடம்பு வாடிய கொடியெனத் துவண்டு விட்டது. கண்கள் அழுதழுது ஒளி மங்கி விட்டன. ''அவலம் ஈதென எழுதிய படிவம் ஒத்து எய்துவான்'' என கம்பர் அவனது தோற்றத்தை அவலமாகவே உருவகித்து விட்டார். இவற்றால் பரதன் பெருமைகள் எங்ஙனம் உயர்ந் தோங்கி நிற்கின்றன என அறியலாம். இது கண்ட இலக்குவன் பரதனை

*'' வைதெழும் சொல்லொடும்*
*சினத்தொடும் உணர்வு சோர்தர*
*வில்லொடும் கண்ணீர் நிலத்து வீழ''*

நின்ற நிலை, பரதனை எத்தகையன் என உணர்த்தும் உரைகல்லாக்கி விட்டது. சினம் மட்டுமன்று, உணர்ச்சியே இழந்து விட்டது. நிலத்தை விட்டுக் கையிலே நெடும் பொழுது கவினொடு தோன்றும் வீரவில்லும் விழுந்து விட்டது. கண்ணீர் நிலத்தை நனைத்துவிட்டது. இலக்குமணனின் கோபா வேசத்தையும் மறுபடி அவனது உணர்ச்சி யிழந்து அசையாது நிற்கும் நிலையையும் மலையின் சிகரமும் கடலின் அடியுமாகக் காட்டியவாற்றால் பரதனின் பெருமை வானத்தையும் வையத்தையும் அளந்து நின்றதைக் கம்பசித்திரம் காட்டிய திறமைதான் என்னே'! இராம பிரான் காட்டுக்குச் சென்றவர் அங்கேயிருக்கப் பரதன் வீட்டிலேயே வாழ எண்ணி யிருந்தால் இராமாயண சரித்திரம் வேறான திசையில் சென்றிருக்கும். செயல்கள் எல்லாவற் றுக்கும் இறைவனின் நியதி ஒன்றுண்டு. அந்த ஈஸ்வர சங்கற்பந்தான் ஜீவராசிகளின் வாழ்வை நெறிப் படுத்துகின்றது. தீமை என எண்ணப்படுபவை எல்லாம் தீமைபயப்பன ஆகா. நன்மை பயப்பன வுமுண்டு. அங்ஙனமே நன்மை எனத் தோன்றுவன எல்லாம் நன்மை பயப்பன ஆகா. தீமை பயத்தலையும் காணலாம். இவற்றை இராமாயணத்தில் நோக்கு வோம்.

இராம பிரானின் பட்டாபிஷேகத்திற் கான சகல ஏற்பாடுகளும் முடிந்துவிட்டன. பலவேறு இடங் களுக்கும் அழைப்புக்கள் சென்றுவிட்டன. சகோதரரான பரத சத்துருக்கினர் கேகய நாட்டி லிருப்பதால் அவர்களுக்கும் அழைப்பு அனுப்பியிருக்க வேண்டும். அவர்கள் வந்திருந்தால் கைகேயி வரம் வேண்டல் மாறியிருக்கும். பட்டாபிஷேகம் இராம பிரானுக்கு நடந்திருக்கலாம். உடன் பிறந்த சகோதரரை நினைக்காமலே, அழைப்பு அனுப்பாமலே, அவர்களுடைய சமுகத்தையும் சிந்திக்காமலே நடந்தேறியவை நடந்தேறிவிட்டன. பரத சத்துருக்கினர் இருந்திருந்தால் இராமர் காடேகல், பரதன் நாடாளும் வரம் வேண்டல், தசரதன் உயிர் நீத்தல் நிகழ்ந்திருக்க மாட்டா. எனவே இராம சரிதம் இங்ஙனம் விரிவடைய விருத்தலின் பரதன் அவ்விடமில்லா திருக்க நேர்ந்தமை ஈஸ்வர சங்கற்பம் போலும். நூலாசிரியர்கள் சிந்தையிலும் இவை இடம் பெறாமற் போனமை சிந்திப்பதற்குரியவை. எனவே இராமாயண சரிதம் இராமர் காடேகல், இராவணன் சீதையைக் கொண்டேகல், இராம இராவண யுத்தம் நிகழ்வதற்குப் பரதனின் பங்களிப்பு முதன்மையான தென்பதும் சிந்திக்கப்பட வேண்டியது. கைகேயி வேண்டிய வரம் அந்த நேரத்தில் தீமையான தொன்றாகப் புலப்பட்டது. " அரக்கர் பாவமும் அல்லவரியற்றிய அறமும் துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழிமடமான்" எனக்கம்பர் கூறிய நல்லருள் துறந்த செயல் இராமாவதார நிகழ்ச்சிக்காரணத்திற்கு வழிவகுத்த வாற்றால் அது நன்மை பயந்த தென்றே கொள்ளல் வேண்டும். பரதனின் பெருமை மலையிடைத் தீபமாக விளங்குதற்கு கைகேயியுடைய. வரமும் காரணமாயிற்று.

இங்ஙனம் கூறியவற்றால் இராமாயண சரிதத்தில் இராமபிரானின் அவதார நிகழ்ச்சிகளுக்குப் பரதனின் முக்கிய பங்களிப்பு எவர்க்கு மில்லாத அளவுக்கு இருந்த தென்பதும், பரதன் தாயுரை மறுத்துச் சான்றோர் பழிக்கும் செயலுக்காளாகாது அறத்தின் வழி வாழ்வதற்காத்தன்னை முற்றாக அர்ப்பணித்து நடந்ததும் இராமபிரானுடைய உண்மையான அன்புக்கும் மதிப்புக்கும் உரியவனாக இருந்ததும் புலனாகும்.

இராமாயணத்தில் இராமபிரான் காடேகியது தொட்டு முக்கிய நிகழ்ச்சிகள் தொடருகின்றன. அதிலும் மாருதியின் சந்திப்பின் பின்னர் பல அரிய நிலைப்பாடுகளைச் சந்திக்கின்றோம். சீதையைத் தேடி மீட்பதற்குச் சுக்கிரீவன் உதவியை நாடுகின்றனர். அன்ன வேளையில் இராமலட்சுமணரை யாரென அறிந்து கொள்ளச் சுக்கிரீவன் குழுவினுளிருந்து ஒரு வீரன் புறப்படுகின்றான். அவனை இராமலக்குமணர் சந்திக்கின்றனர். சந்தித்த இராமலக்குமணரை நோக்கி " கவ்வையின்றாக நும்வரவு" என்றான் அவ்வீரன். அதனைச் செவிமடுத்த இராமபிரான் " நீ யார்?" என வினாவினார். அவ்வினாவுக்கு வந்தவிடை இராம பிரானை மகிழ்ச்சிக்கடலுக்குள் ஆழ்த்தி விட்டது. அவ்விடைதான் யாது? " மஞ்செனத்திரண்ட கோல மேனிய, மகளிர்க்கெல்லாம் நஞ்செனத் தகையவாகி நளிரிரும்பனிக்குத் தேம்பாக் கஞ்சமொத் தலர்ந்த செய்ய கண்ண ! யான் காற்றின் வேந்தற்கு அஞ்சனை வயிற்றில் வந்தேன் நாமமும் அநுமனென்பேன்" " எரிகதிர்ப் பருதிச் செல்வன் செம்மலுக்கு ஏவல் செய்வேன் அனையான் ஏவ வினவிய வந்தேன்" எனப் பணிவுடன் உரைத்ததே அது. அநுமனின் ஆற்றல், உயர்ந்த கல்வித்திறன், அறிவு, அமைதி, பண்பு எல்லாமே ஒருங்கே ஒப்பற்று நிற்பதைக் கண்டு களிபேருவகை கொண்டான் இராமபிரான். சுக்கிரீவன் கூட்டத்தாருடன் இராம பிரான் இணைந்து கொண்டு தமது தேவையைப் பெற்றுக் கொள்கின்றார்.

சீதையைத் தேடி வருமாறு வானரப்படைகள் எல்லாத் திசையும் செல்கின்றன. சாம்பவான் ஏவற்படி அஞ்சனை புதல்வன் இலங்கை நோக்கிச் செல்கின் றான். சீதை இருந்த பஞ்சவடிப் பர்ண சாலையை அசோகவனத்திடை காண்கின்றான் அநுமன். அரக்கியர் பல்லாயிரவர் காவலினூடு மாற்றாத ஆடையும் மாசடைந்த மேனியுமுடைய சீதையைக் கண்ணுற்றான். சீதையின் ஊன் உறக்கமற்ற நிலையையும் கண்ணீர்ப் பெருக்குடன் சிறையிருந்த கோலத்தையும் கண்ட அநுமன் ஆனந்த சாகரத்தில் நீந்தினான். சீதையின் தூய்மை, இராமபிரானை நோக்கியாற்றும் தவம் அவளின் இயல்பை எடுத்துக் காட்டின. ஆனந்த மிகுதியால் அவன் வாயில் அலர்ந்தது அருமைப் பாட்டொன்று.

***" பேண நோற்றது மனைப் பிறவி பெண்மை போல்***
***நாண நோற்றுயர்ந்தது நங்கை தோன்றலால்***
***மாண நோற்றீண்டிவள் இருந்த வாறெலாம்***
***காண நோற்றிலன் அவன் கமலக் கண்களால்"***

என்பது அப்பாட்டு. அரக்கியர் கண்ணயர்ந்து உறங்கும் வேளை கண்டு சீதை முன்பு அநுமன் தோன்றினான். துவண்டு நின்று தொழுதான்.

சீதைக்கு இராமதூதன் என்று தன்னை அறிமுகஞ் செய்தான். சீதை உள்ளம் தெளிந்திலது. அவளின் ஐயப்பாட்டை நீக்க எண்ணி, தலைவன் சொன்ன அடையாள மொழிகளைத் தெரியச் செய்தான். அநுமன் இராமதூதனே என்பதை அடையாளங்கள் மூலம் தெளிந்து கொண்டாள்.

இராவணன் மாயமானை அனுப்பி இராம லக்குமணரை வேற்றிடம் அனுப்பியது தொடக்கம் பர்ணசாலையுடன் பெயர்த் தெடுத்துவந்து தன்னைச் சிறைவைத்துத் துன்புறுத்துவது இறுதியாக அனைத்தையும் எடுத்துரைத்தாள். " இவையியற்றிய நீண்ட சாலையொடு நிலை நின்றது காண்டி ஐய மெய்யுணர் கண்களால்" என்னும் வார்த்தைகளால் சீதையின் துன்பநிலை, தூய்மைநிலை அநுமன் கருத்தில் ஆழமாகப் பதிந்தது. ஐம்பொறியும் அடக்கிய அநுமனுடன் சீதை செல்ல ஒருப்படவில்லை. அவனின் திடசித்தம் சிந்திக்கற்பாலது. அநுமனுடன் சீதை சென்றுவிட்டால் இராம இராவணயுத்த நிலை எதுவாகும்? மூக்கு அரிபட்டு அவலநிலை யுற்ற சூர்ப்பணகையின் கால்கோள் முடிவு என்னாகும்? கைகேயியின் மனத்தை மாற்றிய மந்தரையின் சூழ்ச்சியாலாகிய போர்க்கருவின் நிலைதான் எவ்வாறாகும்? சீதையின் மாசற்ற மாண்பு பிரதிபலிப்பதெங்ஙனம்? அந்நெறியால் இராமபிரானை அடைய விரும்பாத சீதை வறிதே யிருந்தாளுமல்லள். இன்னு மீண்டொருதிங்களிருப்பல் வந்திலனே யெனில் கங்கையாற்றங்கரைக்குக் கடன் செய்யச் சொல்வாய் எனக் காலக்கெடு கொடுத்து அனுப்பும் உரைத் திறம் சீதையின் மகிமையை விளக்குவது.

சீதையின் உரைகளை எடுத்துக் கொண்டு செல்லும் அநுமனை மீண்டும் நோக்குவோம். சீதையைக் கண்டதும் தன்னை உணர வைத்ததும் சீதையுடன் உரையாடிய திறன்களும் அநுமன் ஒருவனுக்கே ஏற்பட்ட நிகழ்ச்சிகள். அநுமன் இவற்றிடைப் பெற்ற அநுபவங்கள், செயல்திறமைகள் இலங்காபுரியை அழித்தசெயல், இராவணாதி அரக்கர் கைப்படா திருந்த திறமை அநுமான் ஒருவற்கே யுரிய தனிச் சிறப்புக் களாகும். தேடுதற்குச் சென்ற எவர்க்கும் கிட்டாத இச்சிறப்புக்கள் அநுமானின் இயற்கையாற்றல், மதிநுட்பத்தைக் கண்டு உணர்த்துவனவன்றோ. இவை மட்டுமல்ல. சீதையைத் தேடிக் கண்ட பெரும் மகிழ்ச்சிக் கூற்றுக்களுடன் பெருங்கடல் கடந்து இராமபிரானிடம் செல்கின்றான்.

இராமனது நீக்கருந்துயரத்தையும் இதயத் திலிருந்த ஐயங்களையும் அகற்றிய ஒரேயொரு உத்தமன் அநுமனேயாவன். சீதையை இழந்து கவலைக் கடலில் அமிழ்ந்தியிருந்த இராமனுக்கு மனங்குளிர மகிழ்ச்சி பூக்க அருமருந்தன்ன புதினத் தைக் கொண்டு வந்த செம்மலின் உதவியை வேறு யார்தான் செய்தார். "கண்டனென் கற்பினுக் கணி யைக் கண்களால் தெண்டிரை அலை கடலிலங்கைத் தென்னகர் அண்டர்நாயக இனித் துறத்தி ஐயமும் பண்டுள துயருமென" க் கூறி ஆறுதல் அளித்துச் செயற்கரிய செய்த அநுமனை இராமன் மனதார நேசித்தான். காலை யென்றும் மாலை யென்றும் காண வொண்ணாத அசோக மரச் சோலையில் இலக்கு மணன் கையால் இழைத்த பர்ணசாலையில் அருந்தவச் செல்வி இருந்தாள் என்று அழகுற மொழிந்து நின்றான் அநுமன். பஞ்சவடிப் பர்ண சாலையில் சீதை இருந்தாளேயன்றி அரக்கர் நிலத்தில் அடியெடுத்து வைத்தாளில்லை யென்று சீதையின் பதிவிரதா தர்மத்தைப் படம் பிடித்துக் காட்டியுள்ளான். சீதையைச் சிறைப்படுத்திய இராவணனையும் அநுமன் வாளா விட்டு வைக்க வில்லை. இராம பிரானின் தீரச்செயல்களில் ஒருபங்கு அநுமானால் நிகழ்த்தப் பட்டு வந்ததனை அறிந்து இராமன் உளம் பூரித்தது.

விபீஷணன் இராமபிரானிடம் சரணடைந்த போது அநுமன் மொழிக்கு அமைய அவனை ஏற்றுக் கொண்ட இராமன் விபீஷணனால் அறிந்து கொண்ட உண்மைகள் பல. அநுமனின் தீரச் செயல்களை அவனே எடுத்து மொழியாது அமைதி காத்தனன். அதனை இராமபிரானுக்குத் தெரிவுறுத்திய நிகழ்ச்சி விபீஷணனால் நேர்ந்த தொன்றாகும். தூதனாக வந்த அநுமனால், அழிபடாத இலங்கை அடியோடு அழிந்து மயானக் காட்சியாக மாறியதையும் அரக்கர் கூட்டம் அழிந்து பாழானதனையும் நேரிற் கண்டதாக விபீஷணன் கூறியவாற்றால் அநுமனின் மதிப்பிட முடியாத வீரச் செயல்களை இராமன் உணர்கின்றான். இராவணனது வரபலம் புயபலம் சேனாபலங்கள் எவராலும் அழிக்க முடியாதன என்று இராவணன் புகழினை உயர்த்திக் கூறி அத்தகையவனை, அவனது அரண்களை அவனது சேனையைத் தனித்து நின்று திடீரென அநுமன் அழித்தொழித்தான் என்ற அதீதச் செயல்களை மனமாரப் புகழ்ந்தான் விபீஷணன்.

இராமபிரான் சீதையைக் கவர்ந்த இராவணனையோ அவனது அதர்மச் செயலையோ அநீதியையோ அழித்து முடித்துக்கட்ட வேண்டியவன். அத்தகைய இராமனது செயலைச் சேனாபலம் எதுவுமின்றிக் கேட்பார் எவருமின்றி அநுமன் தனித்து நின்று செய்தானெனில் இராம பக்தியின் முதிர்ச்சிதான் என்ன? இத்தகையதொரு செயலை

இராம சரிதத்திலேனும் வேறெங் கேனும் யார் தான் செய்தார்கள். 'சொல்லாமற் செய்வர் பெரியர்' இங்ஙனம் செய்த செயல்களால் இராமனது துணைவருள் அநுமனுக்கு ஈடிணையுடையார் யார்தானுளர்?

இராவணனாற் கொண்டு செல்லப்பட்ட சீதையை மீட்டெடுப்பதிலும் இராவணனது அதர்மச் செயலுக்குத் தகுந்த பாடத்தைத் தனியே நின்று நடாத்தியதோடமையாது தனது வீரச் செயல்களை எடுத்து மொழியாது அமைதி காத்த பெருமையிலும் ஒரு வழியும் காணாது துன்பக் கடலில் அமிழ்ந்திக் கொண்டிருந்த சீதைக்கு அமைதி ஆறுதல் அளித்து உயிர் வாழ உதவிய வகையிலும் இராம பிரானின் அவதார நோக்கங்கட்கு இறுதிவரை உதவிய வகையிலும் அநுமன் இராமபிரானுக்கு இன்னுயிர்த் துணைவன் ஆயினான்.

முடிபாக இராமபிரான் அநுமனை நோக்கிக் கூறியவற்றை உரைப்பின் அநுமனின் முழுத் திறமைக்கும் முடிவைத்தாற் போன்றமையு மாதலின் அதனையுங் கூறி அமைவேம். " வீரனே பகைவர் ஒன்று கூட்டிய படைகளை அரைப்பங்கிற்கு மேலே கொன்று குவித்தனை. இலங்காபுரியை எரியூட்டி அழித்து முடித்தனை. யான் இனி அங்கு செய்யக் கிடந்த காரியம்யாதோ. சீதையை நீ சிறை மீட்டு வந்து சேர்த்திருப்பின் வந்த காரியம் முற்றுப் பெற்றிருக்கும். அவ்வாறு நீ செய்யும் திறனிருந்தும் செய்யாது விட்டது எனது வெறும் வில்வித்தையை உங்கட் கெல்லாம் காட்டுதற்காகவே போலும். இலங்கையை அடைந்து விட்டோம். இனி நாம் செயக்கிடந்தவற்றைச் செய்து முடித்தாலும் அவை யெல்லாம் உன் செயல்கள் போலப் பெருமைக் குரியன ஆகுமா? ஆகவேமாட்டாது. பெரும்படையுடன் வந்த நாம் நின்செயலின் மேலாக என்ன காரியத்தைச் செய்யப் போகின்றோம். எனது செல்வமே உருக்கொண்டு வந்த உத்தமனே இதுவரை என்னிடமமைந்த ஆற்றலையும் பகைவனான இராவணனது வலிமையையும் ஒருங்கே உனதாக்கிக் கொண்டனை. இத்தகைய உனக்கு இனிப் பிரமபதம்தான் நான் அளிக்கத் தக்கது. அதனை நீ பெற்றுக் கொண்டாய் என அறிவாயாக" என்பது இராமபிரானின் அதி உந்நதமான கருத்துப் பொதிந்த வாசகங்களாகும். இராமபிரானை அரசு கட்டிலேற்றி அரசனாகக் கண்ட பரதனும் சீதையை மீட்டு அசுர சங்காரத்தை நடாத்தி முடிக்கப் பெரும் பங்களிப்புச் செய்த அநுமனும் இராமபிரானின் உந்நதமான இருபெருந் துணைவர் என்பது மறுக்க, மறக்க முடியாத முடிவு அல்லவா?

*இம்பர் நாட்டில் செல்வம் எல்லாம் எய்தி, அரசு ஆண்டு இருந்தாலும்,*
*உம்பர் நாட்டில் கற்பகக் கா ஓங்கும் நீழல் இருந்தாலும்,*
*செம்பொன்மேரு அனைய புயத் திறல் சேர் இராமன் திருக் கதையில்*
*கம்பநாடன் கவிதையில்போல், கற்றோர்க்கு இதயம் களியாதே.*

*நாரதன் கருப்பஞ் சாறாய், நல்ல வான்மீகன் பாகாய்,*
*சீர் அணி போதன் வட்டாய், செய்தனன்; காளிதாசன்,*
*பார் அமுது அருந்தப் பஞ்சதாரையாய்ச் செய்தான்; கம்பன்*
*வாரம் ஆம் இராமகாதை வளம் முறை திருத்தினானே.*

# நயம் மிகள்



பேராசிரியர்: இரா. இராதாகிருஷ்ணன்

இராம காதையிலே மூன்று அரசுகள் வருகின்றன. ஒன்று கோசல அரசு; இன்னொன்று கிஷ்கிந்தை யரசு; மற்றையது இலங்கை அரசு, எனினும் இராம காதையில் இலங்கையைப் போன்ற அழகான நகரம் இருந்ததேயில்லை. கம்பன் காவியத்திலுள்ள இலங்கையில் வீடுகள் யாவும் பொன்மயமானவை.

சீதையைத் தேடிக் கடல் தாண்டி அநுமான் பவள மலையிலே வந்து குதித்தான். குதித்த நேரம் மாலை நேரம்; மஞ்சள் வெயில் பரவுகின்ற நேரம்; அந்த மஞ்சள் வெயிலிலே இலங்கையைப் பார்க்கின்றான் அவன். இலங்கையிலுள்ள மாடங்கள் பொன்னாலே செய்யப்பட்டு, நவமணிகள் பதிக்கப்பட்டு இருக்கின்றன.

***பொன்கொண் டிழைத்த மதியைக் கொடு பதித்த***- உற்றுப் பார்த்தான் அநுமான். அந்த ஒளியில் அவன் கண், ஒளி மழுங்கி விட்டது. மின்னலைக் கொண்டு செய்து வெயிலை வைத்துப் பதித்திருக்கிறதோ என்று ஆச்சரியப்பட்டான்.

***மின்கொண் டிழைத்த வெயிலைக் கொடு சமைத்த*** அநுமன் நன்றாக உற்றுப் பார்த்தான், அவன் கண், மேலும் ஒளி மழுங்கியது. " எதனாலே செய்து எதைவைத்துப் பதித்திருக்கிறார்கள் என்பது புரியவில்லையே" என்றான்.

***"என்கொண் டிழைத்த எனத் தெரிகிலாத***
***வன்கொண்டல் விட்டு மதிமுட்டுவன மாடம்."***

என்றான். ' மதிமுட்டுவன மாடம்' என்பது சிலேடை. அந்த மாடத்தில் வந்து சந்திரன் முட்டுகிறது என்பது ஒரு பொருள் இன்னொரு பொருள், "என் அறிவு இந்த மாடத்தைப் பார்த்து முட்டுப் படுகிறதே" என்பது.

அறிவுள்ளவனாகிய அநுமனாலேயே எதையெதைக் கொண்டு இந்த மாடங்களை அமைத்திருக்கிறார்கள் என்பதைப் புரிந்து கொள்ள முடியாத அளவுக்குச் செல்வத்தோடு இருந்தது இலங்கை.

அந்த இலங்கையில் அநுமன் கண்ட இன்னொரு காட்சி:-

ஏழடுக்கு மாளிகை; நிலாமுற்றம்; மாலை நேரத்தில் அதைப் பெருக்குகிறார்கள். பெருக்குபவர்கள் யாவரும் இலங்கை நாட்டுப் பெண்கள் இல்லை. தேவலோகத்துப் பெண்களுக்கே அந்த வேலை.

விளக்குமாறு எது?

கார்மேகத்திலே தோன்றுகின்ற மின்னற் கொடியைப் பறித்து, இழுத்து, மடக்கி, அடுக்கிய விளக்குமாற்றால் பெருக்குகிறார்கள்.

***மாகாரின் மின்கொடி மடக்கினர் அடுக்கி***
***மீகாரம் எங்கணும் நறுந்துகள் விளக்கி***
***ஆகாய கங்கையினை அங்கையினில் அள்ளி***
***பாகாய செஞ்சொலவர் வீசபடு காரம்***

தேவலோகத்துப் பெண்கள் ஆகாய கங்கையை அப்படியே கையில் எடுத்துத் தெளிக்கிறார்கள்; பெருக்கிறார்கள்.

இலங்கையில் தோட்டிகள் தலைவன் வாயு, குப்பைகள் தரையிலே விழுவதன் முன்னமே ஏந்த வேண்டியது அவன் வேலை.

இலங்கையிலே குப்பை எது?

அரக்க அரக்கியர் விரைந்து செல்கையில் ஒருவர் மேனியில் ஒருவர் மேனி இடித்து, அவர்கள்

அணிந்து கொண்டிருக்கிற ஆபரணங்களிலிருந்து முத்தும் மணியும் உதிர்கின்றன. இலங்கையில் உள்ள குப்பை அவைதாம்.

*நறை மலர்த் தாதும் தேனும் நளிர்நெடு மகுடகோடி*
*முறைமுறை அறையச் சிந்தி முரிந்து உகும் மணியும் முத்தும்*
*தறையிடை உகாதவண்ணம் தாங்கினள் தழுவி வாங்கி*
*திறைதொறும் தொடர்ந்து நின்று சமீரணன் துடைப்ப மன்னோ.*

சமீரணன்– வாயுதேவன்.

இத்தகைய இலங்கைக்கு அரசன் இராவணன்;

*வாரணம் பொருத மார்பும் வரையினை எடுத்த தோளும்*
*நாரத முனிவற்கு ஏற்ப நயம்பட உரைத்த நாவும்*
*தாரணி மௌலி பத்தும் சங்கரன் கொடுத்த வாளும்*

*முக்கோடி வாழ்நாளும், முயன்றுடைய*
*பெருந்தவமும், முதல்வன் முந்நாள்*
*'எக்கோடி யாராலும் வெலப்படாய்'*
*எனக் கொடுத்த வரமும், ஏனைத்*
*திக்கோடும் உலகனைத்தும் செருக்கடந்த*
*புயவலியும்........................*

உடையவன் அவன். அந்த இராவணனின் மனைவி மண்டோதரி. அவள் தன் கணவனை நினைந்ததே இல்லை என்கிறான் கம்பன்; ஏன்? மறந்ததில்லை ஆகையால் நினைந்ததில்லை.

*நினைந்ததும் மறந்ததும் இலாத நெஞ்சினாள்*

இத்தகைய தொரு தொடரைக் கம்பன் சீதைக்கே சொன்னதில்லை. என்ன காரணம்? ஏகபத்தினி விரதனாகிய இராமனுக்கு மனைவியாக வாழ்ந்து கற்போடிருந்த சீதையை விட காமுகனாகிய இராவணனுக்கு மனைவியாக இருந்து அதே அளவு கற்போடிருந்த மண்டோதரி பெருமைமிக்கவள் என்று கம்பன் நினைத்திருக்கிறான்.

இலங்கையருள் இராமனைப் பரம்பொருள் என்று தெரிந்து கொண்ட பெருமை மண்டோதரிக்குத்தான் உரியது. வீடணன் கூட உணர்ந்தானில்லை. அத்தகைய நுண்ணுணர்வினள் மண்டோதரி. அத்தகைய நுண்ணுணர்வு அவளுக்கு வாய்த்ததன் காரணம் அவளது கற்பின் சிறப்பே. இராவணன் சீதையைக் கொணர்ந்து அசோக வனத்திலே எப்பொழுது சிறை வைத்தானோ அப்பொழுதே அழிவு வந்து விட்டது. என்பது அவள் உள்ளுணர்வுக்குத் தெரிந்து விட்டது.

இராவணனுக்கு அழிவு வந்து விட்டது என்று உணர்ந்தாள். இராவணனை அழிக்கக்கூடியவன் பரம்பொருளாகத் தான் இருக்கவேண்டும் என்று தெரிந்தவள் அவள். எனவே இராமன் பரம்பொருள் என்பதை அந்தக் கணத்திலேயே உறுதி செய்து கொண்டாள்.

இதை அவள் இராவணனிடம் சொல்லியிருக்கலாமே; ஏன் சொல்லவில்லை. காரணம், இராவணனிடம் போய் இராமனே பரம் பொருள் என்று சொல்லியிருந்தால், "அதை நீ எங்ஙனம் அறிவாய்" என்று கேட்பான் அவன். அதை அவளால் நிறுவ முடியாது. உள்ளுணர்ச்சிக்குத் தெரிந்ததை நிறுவிக் காட்டுவது எங்ஙனம்? அந்த நிலையில் அவள் இராமன் பரம் பொருள் என்று புரிந்து கொண்ட காரணத்தால், வரப்போகிற அழிவை மனத்திலே தேக்கிக் கொண்டு ஞானம் வாய்க்கப் பெற்று மௌனியாகிப் போனாள்; 'மோனம் என்பது ஞான வரம்பு'.

இராவணனுக்கு வந்து விட்ட இந்த அழிவை இனிமேல் நீக்க முடியாது என்பதை அறிந்து கொண்டு, தன் மனதுக்குள்ளே நிறைவு கொண்டு, ஞானியாகி, மௌனியாகி விட்டாள் அவள். இதனால்தான் கடைசி வரையில் இராவணனிடத்தில் " நீ சீதையைக் கவர்ந்து கொண்டு வந்தது தவறு" என்று அவள் வாதம் புரியவேயில்லை. இராமாயணத்திலேயே பேச்சற்றுப் போன ஒப்பற்ற ஞான மௌனி அவள் தான்.

இராமன் பரம் பொருள் என்று அவள் அறிந்திருந்தாள் என்பது எமக்கு எவ்வாறு தெரிய வருகிறது? மாண்டு கிடக்கும் இராவணன் மேல் அவள் வீழ்ந்து புலம்பும் புலம்பலிலே தெரிகிறது.

*ஆரா அமுதாய் அலை கடலில் கண் வளரும்*
*நாராயணன் என்று இருப்பேன் இராமனை நான்;*
*ஓராதே கொண்டு அகன்றாய், உத்தமனார் தேவிதனை;*
*பாராயோ, நின்னுடைய மார்பு அகலம் பட்ட எலாம்?*

இப்பாடலின் கடைசி அடி மிக உருக்கமானது. "இராவணா உன் மார்பு இந்தப் பாடு பட்டிருக்கிறதே" 'மார்பகலம்' என்றாள்; மார்பு எனினும் அகலம் எனினும் ஒக்கும். இராவணன் மார்பு மிக அகன்றது. அத்தகைய மார்பிலே இராமன் அம்பு துளைத்திருக்கிறதே இது விதியோ என்று கேட்கிறாள் மண்டோதரி. இந்த மார்பு

நான் அணைப்பதற்குரியது. எனக்குரிய இந்த மார்பிலே இராமன் அம்பு படுவதற்கு என்ன உரிமை" என்பது அதன் தொனி. ஆனால் பட்டு விட்டதே! ஏன் பட்டது தெரியுமா? சீதையிடம் நீ ஆசை வைத்தாய்; அதனால் உன் மார்பிலே படுவதற்கு உரிய உரிமை அந்த இராமன் அம்புக்கு வந்து விட்டது.

*"பாராயோ நின்னுடைய மார்பு அகலம் பட்ட எலாம்*
மண்டோதரி இராமனை
*'ஆரா அமுதாய் அலைகடலில் கண்வளரும் நாராயணன்'*
*என்பதை அன்றே உணர்ந்து கொண்டாள்.*

பிற்காலத்திலேதான் இராமன் பரம்பொருள் என்பதை வீடணன் அறிந்து கொண்டான். அதுவும் அநுமன் கூறியே. வீடணன் அவையிலே கூறியபடியால் தான் கும்பகர்ணனுக்குத் தெரியும்; இராமன் பரம் பொருள் என்பது. போர்க்களத்திலே போய்ப் பார்த்த பின்னர்தான் இந்திர சித்தன் அதை அறிந்து கொண்டான். இராவணனும் கடைசிநாட் போரிலேதான் அதை அறிந்து கொண்டான்.

*'சிவனோ? அல்லன்; நான் முகன் அல்லன்; திருமாலாம்*
*அவனோ? அல்லன்; மெய்வரம் எல்லாம் அடுகின்றான்;*
*தவனோ என்னின், செய்து முடிக்கும் தரன் அல்லன்;*
*இவனோ தான் அவ்வேத முதல் காரணன்?' என்றான்.*

இவர்கள் எல்லாரையும் விட முதன் முதலில் இராமன் பரம்பொருள் என்பதை தன் உள்ளுணர்வினால் அறிந்து கொண்ட பெருமைக்கு உரியவளாகிறாள் மண்டோதரி.

* * *

அநுமன் சீதையைத் தேடிக் கொண்டு வருகிறான். எல்லா இடத்தும் தேடினான் . மண்டோதரி உறங்குகின்ற அந்த புரத்துக்கும் வந்தான். தூரத்தே நின்று பார்த்தான். மண்டோதரியை 'இவள் சீதையோ' என ஐயுற்றான். (உமாதேவி, சீதை, மண்டோதரி மூவரும் உருவ ஒற்றுமை உடையவர்கள் என்பது சாஸ்திரம்) இராவணன் அந்தபுரத்திலே சீதை இருப்பாள் என்று நினைத்த அநுமானுடைய அறிவை என்னென்பது!

நவவியாகரண பண்டிதனாகிய கதிரோன் முன் சென்று, கலையனைத்தும் உணர்ந்தவ' னாகிய அநுமன், இராவணனன் அந்தப் புரத்திலே சீதை இருப்பாள் என்று கருதினான் என்றால் அது அநுமன் தவறில்லை. மண்டோதரியின் பெருமையே அது. எல்லையில்லாத அறிவுடைய அநுமனையே ஐயப்படும் படியாகச் செய்தது மண்டோதரியின் பெருமை; கற்புப் பெருமை அநுமனையே மயங்கச் செய்து விட்டது.அருகிலே சென்றான்; பார்த்தான்; "இவள் சீதை இல்லை; நினைந்தது மிகை" என்றான். ஏனெனில் இராமன் சொல்லிய

*இலக்கணங்களும் சில உள; எனினும்,*
*எல்லைசென்று உறுகில்லா*
*அலக்கண் எய்துவது அணியது உண்டு.*
*என்று, எடுத்து அறைகுவது இவள் யாக்கை.*

இராமன் சீதை பற்றிக் கூறிய இலக்கணங் களிலிருந்து இவள் வேறுபடுகிறாள்.

*மலர்க் கருங்குழல் சோர்ந்து, வாய் வெரீஇ,*
*சில மாற்றங்கள் பறைகின்றாள்;*
*உலக்கும் இங்கு இவள் கணவனும் ; அழிவும்,*
*இவ் வியன் நகர்க்கு உளது;"*

இவள் கூந்தல் பிரிந்திருக்கிறது; உறக்கத்திலே வாய் பிதற்றுகிறாள்; ஆகவே இவள் கணவன் விரைவில் அழியப் போகிறான்,எனவே இவள் சீதையாக இருக்க முடியாது என்று தன் அறிவு கொண்டு அநுமானிக்க வேண்டியவனாயினான் அநுமன்.

(அசோக வனத்திலிருந்த காலத்திலும் சீதையின் கூந்தல் பிரியவில்லை என்பதை ஒரு சடையாகிய குழலாள் என்ற கம்பன் வாக்கிற் காண்க.)

* * * *

இந்திரசித்தன் இறந்துபட்டுக் கிடக்கிறான். அவனது தலை அற்ற உடல் மீது விழுந்து புலம்புகின்றாள் மண்டோதரி. அவள் புலம்பலை நோக்குமுன் வேறொரு புலம்பலை நோக்குவோம். அந்த வேறொரு புலம்பல் தானிய மாலையுடையது. தானியமாலை இராவணனுடைய இன்னொரு மனைவி. அவள் மகன் அதிகாயன் இறந்து போனான். தாய் தானியமாலை புலம்புகின்றாள் . புலம்பும் போது இராவணனை நோக்கி, " பேதையாகிய நீ காமம் கொண்டாய்; அறிவில்லாமல் இன்னொருவன்

மனைவிமேல் ஆசைவைத்தாய் , இன்னொரு முறை நீ திக்கு விஜயம் போவாயா? அதிகாயன் போய் விட்டான்; மிச்சம் இருக்கிறவன் மண்டோதரி மகன் இந்திரசித்தன் ஒருத்தன் தான். அறிவுடையவர்கள் சொன்ன உரைகளைக் கேளாமல் எல்லாரையும் அழித்து விட்டாயே" என்று இராவணனை இகழ்ந்துரைத்தாள்.

இப்போ மண்டோதரி புலம்புகின்றாள்; இந்திரசித்தன் மாண்டு கிடப்பது கண்டு இந்திரசித்தன் பெருமை எல்லாம் சொல்லிப் புலம்புகின்றாள். அவள் புலம்பலைத் தானியமாலை புலம்பலுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். தன்பிள்ளைஇறந்து பட்ட நிலையிலும் அவன் இறப்புக்குக் காரணனான இராவணனைக் கோபித்தாளில்லை. மாறாக அந்த நிலையிலும் இராவணனுக்காகவே அழுதாள். " இந்திரசித்தனே நான் அஞ்சுகின்றேன் இறந்துபட்ட என்மகனே உன்னுடைய இறப்பைக் கண்டு பெரிதும் அஞ்சுகிள்றேன். நீ இறந்துபட்டாயே என்று வருந்தவில்லை; என் கணவனாகிய இராவணனும் இப்படித்தானே ஆகப்போகிறான் என்று வருந்துகிறாள்.

*' பஞ்சு எரி உற்றது என்ன*
*அரக்கர் தம் பரவை எல்லாம்*
*வெஞ்சின மனிதர் கொல்ல*
*வினிந்ததே; மீண்டது இல்லை;*
*அஞ்சினேன் அஞ்சினேன் அச்*
*சீதை என்று அமுதால் செய்த*
*நஞ்சினால் இலங்கை வேந்தன்*
*நாளை இத்தகையன் அன்றோ?"*

ஆற்றல் மிக்க தன் மூத்த பிள்ளை இறந்து போக அதற்காக வருந்தாமல் தன் கணவனை எண்ணி வருந்துகின்றாள் அந்த ஒப்பற்ற கற்பரசி

* * * *

இராவணன் இறந்து போனான் அவன் உடல் மீது விழுந்து புலம்புகிறாள் மண்டோதரி,

*" வெள் எருக்கஞ் சடை முடியான் வெற்புஎடுத்த*
*திருமேனி மேலும் கீழும்*
*என் இருக்கும் இடன்இன்றி உயிர் இருக்கும்*
*இடன் நாடி இழைத்தவாறோ?*
*"கள் இருக்கும் மலர்க் கூந்தல் சானகியை*
*மனச் சிறையில் கரந்த காதல்*
*உன் இருக்கும்" எனக் கருதி உடல் புகுந்து*
*தடவியதோ ஒருவன் வாளி?"*

இராவணன் உடம்பைத் திருமேனி என்கிறாள் அவள். அயலான் மனைவியை விரும்பியவனாகிய இந்த இராவணன் உடலைத் திருமேனி என்கிறாளே. ஆண்டவன் மேனி ஒன்றைத்தானே திருமேனி என்பது. மண்டோதரி தன் கணவனைத் தெய்வமாகக் கருதினாள். **'வெள் எருக்கம் சடைமுடியான் வெற்பெடுத்த திருமேனி** ' கயிலாயத்தைப் பெயர்த்தெடுத்த திருமேனி அது கயிலாயத்தைப் பெயர்ந்தெடுக்கிற காலத்திலே என்ன வலிமை காட்டினானோ அதற்கு நேர் மாறான மென்மை மண்டோதரியைத் தாங்குகிற காலத்திற் காட்டியிருப்பான். அந்த வெற்பெடுத்த திருமேனியைப் பார்க்கிறாள். பார்த்து நினைக்கிறாள் ," என் கணவன் இறந்து போக எனக்குப் பூ இல்லாமற் போய்விட்டது. சிவபெருமானேநீ நிரந்தரமாகவே பூச்சூடியிருக்கிறாய் ; வெள் எருக்கம் பூவை நிரந்தரமாகவே வைத்திருக்கிறாய். உன் பக்தனாகிய என் கணவன் இறந்து போக நான் பூ இல்லாமல் போனேன் உனக்கு மாத்திரம் என்னபூ?"என்பது அந்த நினைப்பு.
"என்கணவன் திருமேனியை

*என் இருக்கும் இடமின்றி உயிர்இருக்கும்*
*இடம் நாடி இழைத்தவாறோ'*

என ஏங்கினாள். தகாத காமம் கொண்ட தன் கணவனாகிய இராவணனை இகழாது அவன் மேனியைத் திருமேனி என்றாள்; ;அதுமட்டுமா, சீதையைக் "கள்ளிருக்கும் மலர்க் கூந்தல் சானகி" என்றாள். சீதையைக் கூட ஏசவில்லை தேனிருக்கின்ற மலர்களைச் சூடியகூந்தலையுடைய சானகி என்று பாராட்டினாள். தான் பூவை இழந்தாலும் அந்தச் சீதையை நித்திய சுமங்கலி என்று பாராட்டுகின்றாள் -இராவணனையும் அவள் இகழவில்லை; சீதையையும் இகழவில்லை.

*கள் இருக்கும் மலர்க்கூந்தல் சானகியை*
*மனச்சிறையில் கரந்த காதல்*
*உன் இருக்கும் எனக்கருதி உடல் புகுந்து*
*தடவியதோ ஒருவன் வாளி?*

'வாளி தடவியதோ ' என்றாள். இராமன் அம்பு இராவணன் உடலில் பாய்ந்து குத்தியது என்று சொல்ல அவளுக்கு மனம் வரவில்லை. இராவணன் உடம்பைத் தன் கையாலே தான் எவ்வாறு தடவுவளோ அதுபோலத் தடவியது என்றாள். இராவணன் மேல் அவளுக்கிருந்த

அன்பு அத்தனை.

தேவர்கள் தவம் எப்படிப் பலித்தது?
இராவண வதம் எப்படி நிறைவுற்றது?

*'காந்தையருக்கு அணி அனைய சானகியார்*
*பேர் அழகும் அவர்தம் கற்பும்*
*ஏந்து புயத்து இராவணனார் காதலும் அச்*
*சூர்ப்பணகை இழந்த மூக்கும்*
*வேந்தர் பிரான் தயரதனார் பணியதனால்*
*வெங்கானில் விரதம் பூண்டு*
*போந்ததுவும் கடைமுறையே புரந்தரனார்*
*பெருந்தவமாய் போயிற்று அம்மா'*

என்ற புலம்பினாள் மண்டோதரி. பொன்மயமான அவன் மார்பினைத் தன் மெல்லிய கைகளால் தழுவினாள். இராவண னைத் தனி நின்று அழைத்தாள். பெருமூச்செ றிந்தாள். அவள் உயிர் நீங்கியது.

*என்று அழைத்தனள் ஏங்கி எழுந்து அவன்*
*பொன் தழைத்த பொரு அரு மார்பினைத்*
*தன் தழைக் கைகளால் தழுவி தனி*
*நின்று அழைத்து உயிர்த்தாள், உயிர்நீங்கினாள்*

இராமாயணத்திலே கணவனோடு உயிர் துறந்த ஒப்பற்ற கற்பரசி மண்டோதரி ஒருத்திதான். அவள் வீழ்ந்து கிடக்கிற இராவணன் உடலை தன் தழைக்கைகளால் தழுவி, தனி நின்று அழைத்தாள். அதாவது ஒரு பெண் இன்பப் பெருக்கிலே தன் கணவனைத் தனிமையிலே உரிமையோடு ஒரு பேர் சொல்லிக் கூப்பிடுவதுண்டு. மண்டோதரி இப்போது அந்தப் பேரைச் சொல்லிக் கூப்பிட்டாள். தழுவி தனி நின்றழைத்தாள் என்பதற்கு அவ்வாறு தான் பொருள் கொள்ள வேண்டும்.

கணவனோடு உயிர் துறக்கும் பெண்கள் தம் கணவனோடு கலப்பதாகவே உணருகிறார்கள். 'மணிமேகலையில்' ஆதிரை என்பவள் தன் கணவனாகிய சாதுவன் இறந்து போனது கண்டு நெருப்பிலேவீழ்கிறாள்.

*படுத்த பாயல் உடுத்த கூறை*
*ஆடிய சாந்தம் சூடிய மலர்*

மலர் அணிந்து கொண்டு, சந்தனம் பூசிக் கொண்டு , திலமிட்டுக் கொண்டு அவனோடு படுக்கின்ற படுக்கையோடே போய் நெருப்பில் விழுகிறாள். கணவனோடு கலப்பது போன்ற உணர்ச்சி! அது போலத்தான் இங்கு மண்டோதரியும்,

*பொன் தழைத்த பொரு அரு மார்பினைத்*
*தன் தழைக்கைகளால் தழுவி, தனி*
*நின்று அழைத்து உயிர்த்தாள் உயிர் நீங்கினாள்.*

*ஆதவன் புதல்வன், முத்தி அறிவினை அளிக்கும் ஐயன்,*
*போதவன் இராம காதை புகன்றருள் புனிதன், மண்மேல்*
*கோது அவம் சற்றும் இல்லான், கொண்டல் மால்தன்னை ஒப்பான்,*
*மா தவன் கம்பன் செம் பொன் மலர்அடி தொழுது வாழ்வாம்.*

*ஆ வின் கொடைச் சகரர் ஆ யிரத்து நூறு ஒழித்து,*
*தேவன் திருவழுந்தூர் நல் நாட்டு, மூவலூர்ச்*
*சீர் ஆர் குணாதித்தன் சேய் அமையப் பாடினான்*
*கார் ஆர் காகுத்தன் கதை.*

# புத்திர சோகம்

க.சிவராமலிங்கபிள்ளை B.A

மக்கட் பேற்றின் சிறப்பை, அதுவும் சான்றோராக வளர்ந்து புகழ் ஈட்டிய மக்களால் தாம் பெறும் இன்பத்தையும் பெருமிதத்தையும், சங்ககாலம் தொடக்கம் அனுபவித்து மகிழ்ந்த இனம் தமிழ் இனம். வேறு எந்த இனமும் தமிழ் இனத்தைப் போல, நன்மக்கட் பேற்றை ஒரு வரமாகக் கொண்டதில்லை என்றே 'கூறலாம். ஏன் தெய்வத்தைக் கூடக் குழந்தையைக்கிப் பிள்ளைத்தமிழ் பாடிய இனம் தமிழினமே. எனவே தமிழ்ப் புலவர்கள் நன்மக்கட் பேற்றைச் சொல்ல வாய்ப்புக்கிடைத்த போதெல்லாம் கவித்துவத்தின் உச்சிக்குச் சென்றுவிடுவதைக் கண்டு உணர்ந்து மகிழ முடிகிறது.

தமிழ் இலக்கியப் பரப்பிலே இப்பண்பு பரந்து காணப்பட்ட போதிலும், கம்பனிலே இது ஒரு தனித்துவமான இடத்தைப் பெற்று நிற்பதையும் கற்கும் போதெல்லாம் இனிப்பதையும் இலக்கியச் சுவைஞர்கள் உணர்கிறார்கள்.

புலவன் உருவாக்கி உலவவிடும் பாத்திரங்கள், வாழ்ந்தவையா, இல்லைக் கற்பனையா என்ற ஆய்வைவிட்டு, புலவனின் படைப்பில், படைப்பாளி எத்தனை விழுக்காடு தானாகிநின்று படைத்திருக்கிறான் என்பதை உணர்ந்து துய்த்தலே பொருத்தமான இலக்கிய நயவுணர்வாக இருக்கமுடியும் என்பது எனது கருத்து. இந்த வகையில் கம்பனின் பாத்திரப் படைப்புக்கள் தான் கலந்த படைப்பாக, கற்பவர்களையும், தம்மை மறந்து அப்பாத்திரங்களே ஆகிச் சிரிக்கவும், அழவும், சிந்திக்கவும் வைக்கும் தன்மை வேறு எங்கும் காணமுடியாத வொன்றாம். இதனை முற்றுணர்ந்த ஆங்கிலப் பேரறிஞர் மகாகனம் சிறீனிவாச சாஸ்திரிகள் ''மீண்டும் பிறந்தால்'' என்று எழுதிவைத்தார்கள்.

இனி, கம்பனில் புத்திர சோகம் பல இடங்களிற் காணப்பட்ட போதிலும், இரு இடங்களை மட்டும் – நெஞ்சை அள்ளி நிற்கும் இரு இடங்களை மட்டும் – சிந்திக்கலாம். ஒன்று "கம்பன் காட்டும் புத்திரனின் சோகம்: மற்றையது கம்பன் காட்டும் "புத்திரனால் சோகம்".

''புத்திரனின் சோகம்'' என்று சிந்திக்கும் போது, ''தாயுரை கொண்டு தாதையீந்த தரணி தன்னை – தீவினை என்ன நீத்து", "முடித்தவார் சடையோடு முனிவர் தூசு உடுத்து" – "முறையின் நீங்கி, முழுநிலம் கொள்கிலேன் இறைவன் கொள்கிலன் ஆம் எனின், யாண்டு எலாம் உறைவன் கானத்து ஒருங்கு உடனே" என்ற முடிவோடு, காட்டில் இராமனைக் கண்ட தம்பி பரதன் வாயிலாக "உரிய மெய்ந் நிறுவிப் போய், உம்பரான் தசரதன்" என்பதை இராமன் கேட்டபோது, கோமகன் நிலையைக் கம்பன் காட்டும் சொல் ஓவியம் இலக்கியப்பரப்பில் இமயச் சிகரத்தில் ஒன்றாக நிற்கிறது.

இராமன் அவதார புருடன்தான்; அறத்தின் நாயகன் தான். ஆனால் கம்பன், இப்பாத்திரத்தை எமக்காகவே உருவாக்கி – தந்தையின் தயவையும், தனயனின் தனிக்காதலையும் காட்டுகிறான். தெய்வத்திரு நிரம்பிய செம்மல் இராமனுக்கு யாக்கை நிலையாமை கூடவா தெரியவில்லை? என்று கேட்பதை மறந்து நாமும் இராமனே ஆகிவிடுகிறோம்.

*"நந்தா விளக்கு அனைய நாயகனே!*
*நானிலத்தோர்*
*தந்தாய்! தனி அறத்தின் தாயே! தயா*
*நிலையே!*

*எந்தாய்! இகல் வேந்தர் ஏறே! இறந்தனையே!*
*அந்தோ! இனி, வாய்மைக்கு ஆர் உளரே*
*மற்று"*

என்று கம்பன் கதறி எம்மையும் கதறவைக்கின்றான். குற்றமில்லாத வேள்வி செய்து, நோன்பின் முடிவாம் இறைவன்பால் என்னை பெற்றது உன் "இன் உயிர் போய் நீங்கவோ?" என்ற சொற்களால் தயரதனின் தன்னிகரற்ற தன்மையை, பின் நோக்கிச்சிந்திக்க வைக்கிறான் கம்பன். "இரப்போர் கடலை ஈந்தே கடந்த" வண்மையையும், கடக்க வேண்டிய தெவ்வர் பகையை, "காய்ந்தே கடந்த" – வென்றியையும், "வேசியர் உள்ளமும் ஒரு வழி ஓட" நின்ற செங்கோலின் செம்மைப்பாட்டையுமல்லவா சிந்திக்கவைக்கிறான் புலவன்! தசரதனின் மறைவு மன்னர்பால் கிடக்க வேண்டிய மாண்புகள் அத்தனையையும் உடன் கொண்டு போய் விட்டதே என்று கம்பன் காட்டும் அவலம், அவலத்தின் உச்சியைத் தொட்டு நிற்கிறது.

*"வண்மையும் மானமும் மேல் வானவர்க்கும்*
*போர்க்கிலாத்*
*திண்மையும், செங்கோல் நெறியும், திறம்பாத*
*உண்மையும், எல்லாம் உடனே கொண்டு*
*ஏகினையே!"*

என்று இராமனைப் புலம்பவைத்துத் தயரதனின்பால் இராமனுக்கிருந்த தனி அன்பை, காதலை எடுத்து இயம்பி எம்மையும் இராமர்களாக்கி உலகை உய்விக்க ஆசைப்படும் புலவனை நினைத்துப் பெருமை கொள்ளலாம் அன்றோ?

அடுத்து – புத்திரனால் சோகம் என்ற கோணத்தில் சிந்திக்கும் போது மேகநாதனின் இழப்பால் தன்னை இழந்து நின்று தவிக்கும் இலங்கை வேந்தனே நினைவுக்கு வருகிறான். புத்திர சோகம் சோகங்களின் சிகரம். 'கடந்த ஞானியரும் கடப்பரோ மக்கள் மேல் காதல்' என்ற வரிகள் தெரிந்த ஒன்று தான். ஆனால் இங்கு ஒழுக்க நெறிதவறிய கயவனுக்கு கூட, கடக்க முடியாதது மக்கள்மேற் காதல், என்று காட்டும் கம்பன் பெரும் புலமை, கற்றோர் நெஞ்சை விட்டு நீங்காத ஒன்றாம்.

இக்காட்சியை, சொல்லோவியமாக்கும் போது தன்மகன் அம்பிகாபதியை நினைந்திருக்கலாம் கம்பன் என்று எண்ணத்தோன்றுகிறது. இக்காட்சி அவலத்தின் அவலம் என்றே சொல்லலாம். (Tragedy of Tragedies).

இந்திரசித்தன் சாதாரணமான ஒருமகனா? மேகத்தினை மிக்கு நின்று மேகநாதன் ஆனவன். இந்திரனை ஐராவதத்தோடு தூக்கி வீசி இந்திரசித்தனானவன்.

*"வீரர் என்பார்கட்கு எல்லாம் முன் நிற்கும் வீரர் வீரன்"*

என்று தேவர் போற்றித் "தெய்வப் பொற் பூ" சொரிந்து போற்றி மாவீரன். "இவனோடும் எஞ்சும் ஆண் தொழில் ஆற்றல்" என்று இலக்குவனே வியக்கும் அளவிக்கு வீரம் விழைத்த தனிமகன். இவற்றோடு இவன் பெருமை முடிந்ததா? இல்லை. ஆற்றல் ஒரு புறம். அறிவு மறுபுறம் என்றில்லாமல் பேரறிவாளனாகவும் அல்லவா இந்திரசித்தன் காட்டப்படுகிறான்.

இலக்குவன் பாணங்களால் உடல் செந்நீர் தோயத் தந்தை முன் தோன்றினான். போர்க்கள நிலையைத் தந்தை உணரவைக்கிறான். அரசியல் சாணக்கியத்தையும் மிக லாவகமாக.

"சூழ் வினை மாயம் எல்லாம் உம்பியே துடைக்க" தான் அப்படித் திரும்பி வரவேண்டிய நிலையை விளக்குகிறான். தெய்வப் படைக் கலங்களும் செயல் இழந்தன என்பதை... "நெடிய மால் படை நின்றானை வலம் செய்து போயிற்று" என்று பேசினான். அப்பா!

*"குலம் செய்த பாவத்தாலே கொடும் பகை தேடிக் கொண்டாய்"*

என்று இடித்தும் சொன்னான். இவற்றால் தன் அறிவுடமையையும் காட்டிய அறிஞன் இந்திரசித்தன். இவன் ஏன் செத்தான்? எதற்காகச் செத்தான்? இவன் இறப்பு, கற்பகதரு நீழல் களித்திருக்கும் தேவரையும், "இந்திரசித்தன் பொன் தோள் இற்று இடைவிழுந்தது என்றால் எந்திரம்

அனைய வாழ்க்கை இனிச் சிலர் உகந்து என்?" என்று பேச வைத்தது என்று கம்பன் கூறுவது கண்டு இன்புறப் பாலதாகும்.

"எல்லியும் கழித்தி" என்று எரிந்து விழுந்த தந்தையைப் பார்த்து, "சொன்ன உறுதியைப் பொறுத்தி" என்றும், தன்முடிவின் பின்னாகுதல் "நல்லவா காண்டி" என்றும் கூறி "கண்ணின் நீர் கலுழ"ப் போனான் போர்க்களம். சூலங் கொண்டு நின்றானை, இலக்குவன் பிறைமுக வாளி கொண்டு தலை அறுத்தான்! என்ன தர்மமோ?

செய்தி கேட்டான் இராவணன். பத்துத்தலையும் பத்துவிதமாகப் புலம்பின. அந்தோ! இராவணனுக்காகக் கம்பன் புலம்புவதைவிட யார் தான் புலம்பினர்! இன்று சிலர் இராவணனுக்காக வக்காலத்துவாங்கி நிற்கின்றனர். ஆனால் கம்பனை உணர்ந்தவர்கள், இராவணனுக்காக இரங்கக் கம்பன் ஒருவனால் தான் முடிந்தது. பிறர் எல்லாம் வெறும் "வக்காலத்தர்"களே என்று முடிப்பர். "ஐயனே!" என்றது ஒருதலை, நான் என்ன செய்வேன்! என்றது ஒரு தலை. நான் இனி உய்வனோ? என்றது ஒருதலை. மும்மூர்த்திகளையும் வென்ற உன் வீரம் காட்டிலை, என்றது ஒரு தலை. எல்லை இல் ஆற்றலாய் உன்னையும் கூற்றம் கொண்டதோ?" எனும் ஒருதலை இப்படித் தலைபத்தும் தடுமாறச் செருக்களம் புகுந்தான் தசக்கிரீவன். சிலையொடு கிடந்த இந்திரசித்தன் கையைக் கண்டான். மலை போன்றவலியதன் மார்பில் தழுவினான். கழுத்திலே சுற்றினான் தலையிலே வைத்தான். கண்ணில் ஒற்றினான். மோந்து, மோந்து உருகினான். இச்செயல்களால் இந்திரசித்தனின் குழந்தைப்பருவத்தைத் துய்த்து மகிழ்ந்த நிலையை எம்முன் நிறுத்துகிறான் கம்பன்.

*"பின் கருங்கடல் கண்டென மெய்கண்டான்"*

கடலே மூடிப் போக, கண்ணீர்க்கடல் செய்தான் இராவணன். என்ன பயன்? அருமை மகன் தலை காணமுடியவில்லை! யாருக்கு? திக்குயானைகளைத் திகைக்க வைத்தவன். தேவரை ஏவல் கொண்டவன். "கதிரவன் ஒளி புகாது, கறங்கு கால் புகாது மறலி மறம்புகாது" ஆட்சி புரிந்தவன். இத்தனை அவலத்துக்கும் காரணம் தான் என்ன? சிந்திக்கிறான் இராவணன். எம்மைச் சிந்திக்க வைக்கிறான் புலவன். இராவணனின் சுடலை ஞானம்" பேசுகிறது. "மகனே! இந்திரன் செல்வம் எல்லாம் என் செல்வமாக்கினேன். நினைத்ததை எல்லாம் முடித்தேன். ஆனால் இன்று, எனக்கு நீ வைக்க வேண்டிய கொள்ளியை, ஏங்கி, ஏங்கி உனக்கு நான் வைக்க நிற்கிறேன். எல்லாம் ஒருத்தி காரணமாக என்று புலம்புகிறான். உன் தலையைக் கொண்டு போனவர்கள் இன்னும் உயிரோடு இருக்கிறார்கள். நானும் இருக்கிறேன் என்னே என் வீரம்" என்று சாம்புகின்றான்

*"சினத்தொடும் கொற்றம் முற்ற,*
*இந்திரன் செல்வம் மேவ*
*நினைத்தது முடித்து நின்றேன்;*
*நேரிழை ஒருத்தி நீரால்,*
*எனக்கு நீ செய்யத்தக்க*
*கடன் எலாம் ஏங்கி ஏங்கி,*
*உனக்கு நான் செய்வதானேன்!*
*என்னின் யார் உலகத்தது உள்ளார்!*

இது இராவணன் புலம்பலா? இல்லை கம்பனின் புலம்பலா?

புலமையின் குறிக்கோள் கதிரவன் ஒளி என நின்று நெறிகாட்டி வாழ்விக்கும் கம்பன் கவித்துவம் என்றும் இன்பம் தருவதாக.

# கம்பநாடன் கவிதையிற்போல் கற்றோர்க்கு இதயம் களியாதே



சிவத்தமிழ்ச் செல்வி தங்கம்மா அப்பாக்குட்டி

*"இம்பர் நாட்டிற் செல்வமெல்லாம் எய்தி
அரசாண்டிருந்தாலும்
உம்பர் நாட்டிற் கற்பகக் கா ஓங்கும் நீழல்
இருந்தாலும்
செம்பொன் மேரு அனைய புயத் திறல் சேர்
இராமன் திருக்கதையில்
கம்ப நாடன் கவிதையிற் போல் கற்றோர்க் கிதயம்
களியாதே"*

உலகப் பெரும் இலக்கியங்களில் ஒன்றெனக் கொள்ளத்தக்கது கம்பராமாயணம். உயர் தமிழ்ச் செம்மொழியாகிய தமிழ்மொழியின் தலைசிறந்த இலக்கியமும் இதுவேயாகும். இந்நூலின் கண் அமைந்து விளங்கும் கதைப் போக்கிலும் பார்க்க, கவிதைப் போக்கு அனைவரது உள்ளத்தையும் கவர்ந்து நிற்பது கண்கூடு. இதனாலேயே

*" யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல்
வள்ளுவர் போல் இளங்கோவைப் போல்
பூமிதனில் யாங்கணுமே கண்டதில்லை
உண்மைவெறும் புகழ்ச்சியில்லை"*

என்று போற்றினார் பாரதியார். தமிழர்கள் ஒவ்வொருவரும் தமது வாழ்விலே கடைப்பிடிக்க வேண்டிய நீதி, அறம், சத்தியம், தியாகம், ஒழுக்கம் என்பனவற்றை மேற்காட்டிய இலக்கியங்கள் மிகத்திறம்பட எடுத்துக் காட்டுகின்றன என்பதை அனைவரும் அறிவர்.

வடமொழியிலுள்ள வான்மீகி இராமாயணத்தைத் தழுவி எழுந்ததே கம்பராமாயணம். ஆனால் தமிழ்ப் பண்பாட்டையும் மரபையும் பேணியே சிறந்த காவியமாகத் தந்திருக்கிறான் கம்பன். ஒரு கவிஞன் அல்லது அறிஞன் சிந்தித்து ஒரு சிந்தனையைப் படைக்க வேண்டிய அவசியம் ஏன் ஏற்படுகிறது என்பதை நாம் முதலில் ஆராயவேண்டும். வெறும் புலமையினால் மட்டும் ஓர் இலக்கியம் தோன்றினால் அதை வியந்து போற்ற முடியாது. வெறும் பக்தியினாலும் பாசத்தினாலும் கவிதைகள் தோன்றினாலும் அதை வியந்து பாராட்ட முடியாது. சமுத்தாயத்தின் சென்ற காலநிலை, நிகழ்காலநிலை, எதிர்காலநிலை என்பவற்றைப் புரிந்து கொண்டு குறையை நிறைவாக்கிச் சமுதாய மலர்ச்சிக்கு வழிகாட்டும் இலக்கியங்களைப் படைக்க வேண்டும். இந்த வகையிலே கம்பன் சிறப்பிடம் பெறுகிறான். கடவுட் கொள்கையிலும் சமுதாயரீதியிலும், ஆட்சித் துறையிலும், குடும்ப வாழ்க்கையிலும் சிறந்த பல கருத்துக்களை இராமாயணம் நமக்குத் தருகிறது. எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னெழுந்த இராமாயணத்தில் இவை குறிப்பிடப்பட்டிருந்தாலும் இன்றும் நமக்கு ஒப்பமுடிந்த கருத்துக்கள் பலவற்றை அது உதவுகின்றது. கருத்துவழி வள்ளுவர் பெற்ற மாபெருங் கவிஞர் கம்பர். வள்ளுவர் வலியுறுத்திய தமிழ் நாகரிகத்தைப் பேணியே கம்பன் இராமாயணத்தைப் பாடியுள்ளான். இராமாயணம் முழுவதிலும் கம்பனால் வலியுறுத்தப்பட்டது "அறமே வெல்லும்" என்னும் சுலோகமாகும். இதனை இராமபிரான் மூலமும் அறத்தை மறந்தால் கேடு என்பதை இராவணன் மூலமும், பெண்ணறமே பெருமையுடையது என்பதைச் சீதாபிராட்டியார் மூலமும், செஞ்சோற்றுக் கடன் என்ற அறத்தைக் கும்பகர்ணன் மூலமும், தூது செல்லும் அறத்தை அநுமான் மூலமும், நட்பெனும் அறத்தை குகன் மூலமும் காட்டியுள்ளான். இவ்விடயங்கள் சமூக நலனை விரும்பும் மக்களுக்கு அரியதோர் விருந்தாக அமைகின்றன.

எண்ணத்தையும் சிந்தனையையும் ஒழுங்கு படுத்தி அவற்றைச் சுவையூட்டத் தக்கவகையில் சொல்லுவது தான் இலக்கிய மரபு. சமுதாயத்தின் கருத்துப் புரட்சியை ஏற்படுத்திச் சிந்தையைத் தூண்டி விடுவதுதான் இலக்கியத்தின் விழுமிய பயன். வெறும் புலமையும் பக்தியும் கவிதை படைக்கும் தன்மையும் இருந்து விட்டால் மாத்திரம் இலக்கியம் தோன்றிவிட முடியாது. மற்றும் இலக்கிய கர்த்தா தான் வாழ்ந்த காலச் சமுதாயத்தின் நடைமுறைகளை ஆழமாகப் புரிந்து கொண்டு அவற்றை நிறைவுபடுத்தும் முகமாகப் பயன்படுத்தும் சாதனமாக இலக்கியத்தை அமைக்க

வேண்டும். அப்படியான நிறைவான இலக்கியங்களையே எக்காலமும் வரவேற்கும். அப்படியானதொரு இலக்கியம் தான் இராமாயணம் என்பதற்கு ஐயமில்லை.

ஏறக்குறைய எண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட இலக்கியம் கம்பராமாயணம். ஆனால் இன்றுவரை பல எதிர்ப்புக்களின் மத்தியிலும் வீறுநடை போட்டுக் கொண்டு இவ்விலக்கியம் திகழ்கிறது. அதற்குக் காரணம் பயனுள்ள பரந்த உயர்ந்த குறிக்கோளுடனே கம்பரால் பாடப்பட்டமையே ஆகும். பேராசிரியர் முத்துசிவன் என்பவர் கம்பனைப் போற்றிய இடத்தில் ' என் தெய்வம்' என்று பாராட்டுகின்றார்.

*" செம்பொருள் விளக்கம் தந்து,*
*திருவரும் நெறியைக் காட்டி,*
*இன்பநற் காதை மூலம்*
*யாவரும் வியக்குமாறு,*
*அம்புவி தனிலே கவர்க்க*
*ஆட்சியை அமைத்து விட்ட*
*கம்பன் என் தெய்வம் ஐயா!*
*கம்பன் என் தெய்வம் ஐயா!*

என்பது அவர் பாராட்டாகும்.

பாடல் என்பதற்குக் கவி என்று மற்றொரு பெயர் உண்டு. கருத்துக்களை கவித்திருப்பதனால் இப்பெயர் ஏற்பட்டது என்பர். வெறும் சொல்லும் பொருளும் சேர்ந்து விட்டால் அது கவியாகாது. கவிஞனுடைய மனக்கருத்தைச் சொல்லூடாகவும், பொருளூடாகவும் வெளிக் கொணர்ந்து விளக்குவதே உண்மைக் கவியாகும். நதியையும் நற்றமிழ்க் கவியையும் ஓரிடத்தில் ஒப்பிட்டுக் காட்டுகிறான் கம்பன்.

*" புவியினுக்கு அணியாய்,*
*ஆன்ற பொருள் தந்து புலத்திற்றாகி*
*அவிஅகத் துறைகள் தாங்கி,*
*ஐந்திணை நெறி அளாவி*
*சவிஉறத் தெளிந்து, தண்ணென்று*
*ஒழுக்கமும் தழுவிச் சான்றோர்*
*கவி எனக் கிடந்த கோதா*
*வரியினை வீரர் கண்டார்"*

கோதாவரி நதிக்கு உவமையாகச் சான்றோர் கவியைக் கூறிய கம்பனுடைய கவிதைகளனைத்தும் இவ்வுவமைக் குப் பொருத்தமானவையே என்பது வெள்ளிடைமலை.

## கம்பன் காட்டிய கடவுட் கொள்கை

பிற்காலச் சோழர் அரசாண்ட காலமே கம்பனுடைய காலம். திருமுறைகளும், நாலாயிரத் திவ்யப் பிரபந்தமும் மக்களிடையே நல்வரவைப் பெற்ற காலமும் இதுவேயாகும். சைவசம்பிரதாயமும் வைணவ சம்பிரதாயமும் ஒன்றாகப் போற்றப்பட்ட சிறப்பும் இக்காலத்திற்கு உண்டு. கம்பனுக்கு முன் தோன்றிய புலவர்கள் தமது படைப்புகளுக்குக் காப்புப் பாடல்கள் பாடும் பொழுது இந்து மக்கள் வழிபடும் பலபல தனிப்பட்ட தெய்வங்களைப் போற்றிப் பாடினர். ஆனால் கம்பராமாயணக் காப்புச் செய்யுளை நோக்கும் போது அந்த முதலாவது பாடல் சைவ வைணவ ஒருமைப் பாட்டைக் காட்டி நாமமும் வடிவமும் அற்ற அந்தப் பரம்பொருளே முத்தொழிலுக்கும் அதிகாரி என்பதை விளக்கியுள்ளான்.

*" உலகம் யாவையும் தாமுள வாக்கலும்*
*நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா*
*அலகிலா விளையாட்டுடை யாரவர்*
*தலைவர் அன்னவர்க்கே சரண்நாங்களே"*

மேலும் இறைவனுடைய பரிபூரணமான நிலையை எடுத்துக் காட்டும் சைவசித்தாந்தம் கூறும் சொரூப லட்சணம் விளக்கப்படுகிறது. அதாவது வேதங்கள் போற்றி நிற்கும் திருவடிகள்; அண்டசராசரங்கள் அடங்கி நிற்கும் திருவடிகள்; பஞ்சபூதங்கள் நிறைந்து நிற்கும் திருவுருவம்; என்றெல்லாம் பாடிக் காட்டிய ஒருபாடலை இங்கே காணலாம்.

*" வேதங்கள் அறைகின்ற*
*உலகெங்கும் விரிந்தன உன்*
*பாதங்கள் இவை என்னில்*
*படிவங்கள் எப்படியோ!*
*ஓதங்கொள் கடலன்றி*
*ஒன்றினொடு ஒன்றொவ்வாப்*
*பூதங்கள் தொறும் உறைந்தால்*
*அவையுன்னைப் பொறுக்குமோ!"*

மேகங்கள் வெண்ணிறமாகக் காட்சியளிப்பது திருநீறு அணிந்த சிவபெருமானை நினைப்பூட்டு வதென்றும் அவை கடல் நீரைப் பருகிச் சூல்கொண்ட பின் திருமாலைப் போலக் கருநிறமாகக் காட்சி தருவதாயும் எடுத்துக் காட்டிப் பாடுவதும் நதிகள் பலவாக இருந்தாலும் அவை ஓடி ஒரே சமுத்திரத்திலேயே சங்கமிப்பது போல பலபல சமயங்களும் இறைவன் ஒருவனையே அடையும் மார்க்கத்தை உணர்த்துகின்றன என்பதையும் சமரசக் கோட்பாட்டோடு காட்டுகின்றான் கம்பன். மற்றோரிடத்தில் பிரகலாதன் இரணியனுக்கு இறைவனைப் பற்றி எடுத்துக் கூறும் பாடலைக் காணலாம்.

*" சாணினும் உளன். ஓர்தன் மை*
*அணுவினைச் சதகூறிட்ட*
*கோணினும் உளன், மாமேருக்*
*குன்றினும்உளன், இந்நின்ற*
*தூணினும் உளன், நீ சொன்ன*
*சொல்லினும் உளன், இத்தன்மை*
*காணுதி விரைவின் என்றான்*
*நன்றெனக் கனகன் நக்கான் "*

இவ்வாறு கம்பராமாயணத்தில் காட்டப்பட்ட கடவுட் கொள்கையானது வைணவ சம்பிரதாயத்தையோ அல்லது சைவசம்பிரதாயத்தையோ தழுவி அமையாமல் கம்பனுடைய இராமபக்தியையும் இராமபிரானிடத்திலேயே அனைத்தையும் காணுகின்ற பக்தி உணர்வையும் நாம் காண வைக்கிறது. இதனாலேயே கம்பராமாயணம் எழுந்த காலத்திற்குப் பின்பு இராமபக்தி இயக்கம் நாடெங்கும் ஏற்பட்டு இராமபிரானுக்குத் தனிப்பட்ட கோயில்களும் அமைக்கப்பட்டன என்பதை வரலாற்றிலே காணுகின்றோம்.

## சமுதாய ரீதியிலே கம்பன் கருத்து

அடுத்து சமுதாய ரீதியிலே கம்பனுடைய கவிதைகள் உணர்த்தும் கருத்துக்களைக் கவனிப்போம். உலகமே ஒன்று என்று கருதுகிற உள்ளம் கம்பனுடைய உள்ளம். திருக்குறள், புறநானூறு, திருமந்திரம் முதலிய நூல்கள் ஒருகுல உணர்ச்சியை வற்புறுத்தியிருந்த நேரத்திலும் சமுதாயத்திலும் அவை நடைமுறையில் அனுட்டிக்கப் பட்டதாகக் காணவில்லை. இந்தக் குறையைக் கண்ட கம்பன், அதனை இராமன் வாயிலாக வெளிப்படுத்தி நிவர்த்தி செய்தான். இராமன் அயோத்தியை ஆண்ட மாமன்னனின் திருமகன். இனத்தால் வேறுபட்ட குகனையும் குலத்தால் வேறுபட்ட விபீடணனையும் இடத்தால் வேறுபட்ட சுக்கிரீவனையும் தன் தம்பிகளாக ஏற்றுக் கொண்டமையை இனிய தமிழில் கம்பன் விளக்கிப் பாடியுள்ளான். இராமன் விபீஷணனைப் பார்த்து 'இன்று முதல் நீயும் என் சகோதரன். உன்னைச் சேர்த்து நாம் எழுவராகி விட்டோம்' என்றான்.

*" குகனொடும் ஐவர் ஆனோம்*
*முன்பு, பின்குன்று சூழ்வான்*
*மகனொடும் அறுவர் ஆனோம்*
*எம்முறை அன்பின் வந்த*
*அகன் அமர் காதல் ஐய*
*நின்னொடும் எழுவர் ஆனோம்*
*புகல் அருங் கானந்தந்து*
*புதல்வராற் பொலிந்தான் நுந்தை "*

கோசல நாட்டில் எல்லோரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தியிருந்தனர். கள்வர்கள் இன்மையால் அங்கு காவலுமில்லை. வறியவர்கள் இல்லாமையால் அங்கே வள்ளல்களுமில்லை.

*"கள்வாரிலாமைப் பொருள் காவலுமில்லை யாவும்*
*கொள்வா ரிலாமைக் கொடுப்பார்களுமில்லை*
*மன்னோ!* என்று பாடி ஒரு நாட்டின் நிறைவு எப்படி அமைய வேண்டுமென்று காட்டுகின்றான்.

அண்ணன் தம்பியரிடத்திலே போட்டியும் பூசலும் ஏற்படுவதை இன்று நாம் காண்கிறோம். ஆனால் இராமாயணம் சகோதர ஒற்றுமையை மிகுவித்துக் காட்டுகிறது. அதன் மூலம் சமூக வளர்ச்சிக்கும் ஒற்றுமைக்கும் புத்துயிர் அளிக்கிறது. ஆழிசூழ் உலக மெல்லாவற்றையும் பரதனுக்கு ஆட்சி செயக் கொடுத்து இராமன் சடாமுடிதாங்கிக் காட்டுக்குச் செல்ல வேண்டும் என்று கேட்கிறாள் கைகேயி. இதனை இராமனுக்கு நேரேயே கூறிவிட்டாள். இராமன் இதனைக் கேட்டவுடன் அளித்த பதில் யாது? பாருங்கள்.

*" மன்னவன் பணியன்றாகில்*
*நும்பனி மறுப்ப னோவென்*
*பின்னவன் பெற்ற செல்வம்*
*அடியனேன் பெற்ற தன்றோ*
*என்னினி உறுதி அப்பால்*
*இப்பணி தலைமேற் கொண்டேன்*
*மின்னொளிர் கான மின்றே*
*போகின்றேன் விடையுங் கொண்டேன் "*

இராமன் மாத்திரமன்று பரதன், இலக்குமணன் அத்தனை பேரும் சகோதர ஒற்றுமையில் மேம்பட்டவர்களே. அரக்கர்கள் மத்தியிலேயும் இதனைக் காண முடிகிறது. கும்பகர்ணன் போர்க்களத்திலே நின்று விபீடணனுக்குச் சொல்கிறான். 'தம்பியரின்றி மாண்டு கிடப்பனோ தமையன் மண்மேல்' அறத்துக்கு மாறாய் அண்ணன் நடக்கிறான் என்று அறிந்தும் சகோதர பாசத்தால் மாற்றான் பக்கம் சாராது தன்னுயிரையே அண்ணனுக்காக விட்டு விடுகிறான் கும்பகர்ணன். இன்னும் குருபக்தி, நன்றிமறவாமை, ஈகை, பெற்றோருக்குக் கீழ்ப்படிதல் முதலாய பண்புகளையும் இராமாயணத்திற் சிறப்பாகக் காணலாம்.

## கம்பன் காட்டிய ஆட்சித்துறை

*" வையம் மன்னுயி ராகஅம் மன்னுயிர்*
*உய்யத் தாங்கும் உடலன்ன மன்னனுக்*
*கைய மின்றி அறங்கட வாதருள்*
*மெய்யின் நின்றபின் வேள்வியும்*
*வேண்டுமோ "*

சங்க காலத்தில் மன்னனை மக்களின் உயிராக வைத்துப் பாடினர் புலவர். ' நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்' என்று கூறுகிறது புறநானூறு. இக்கருத்தை மாற்றிப் புதுமை செய்த பெருமை கம்பனுக்குண்டு. மன்னன் ஒரு நாட்டுக்கு மாறி மாறி வருவான். அரசாங்கமும் மாறி மாறி வருவதியல்பே. அதனால் மன்னனை உயிராகக் கொள்ளாது உடம்பாகக் காட்டுகிறான் கம்பன். மன்னுயிரை ஓம்பாவிட்டால் மன்னனுக்குச் செயலில்லையென்பதைக் காட்டவே மற்றோரிடத்தில் 'உயிரெல்லாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்' என்றும் கூறப்பட்டுள்ளது. மக்கள் சக்தி மிக வலிமையானது என்பதை விளக்கவே ' புற்றுடைய காடெல்லாம் நாடாகிப்போம்' என்று பாடுகிறார். இராமன் காட்டுக்குப் போக ஆயத்தமானான். நாட்டு மக்கள் பொங்கி எழுந்து எதிர்ப்புக் காட்டினர். வருங்காலத்தில் நாடு காடாகும். அதற்கு மாறாகக் காடு நாடாகும்' என்று ஆர்ப்பரித்தனர் மக்கள். எனவே மக்கள் சக்தியினால் இவ்வாறு ஆக்க முடியும் என்பதையே கம்பன் வலியுறுத்திக் காட்டுகிறான். நாட்டின் நல்லாட்சிக்கு வழிகாட்டுபவர்கள் அமைச்சர்களே! கோசல நாட்டு அமைச்சர்கள் எப்படிப்பட்டவர்கள்?

*" தம்முயிர்க் குறுதி யெண்ணார்*
*தலைமகன் வெகுண்ட போதும்*
*வெம்மையைத் தாங்கி நீதி*
*விடாதுநின் றுரைக்கும் வீரர்*
*செம்மையில் திறம்பல் செய்யாத்*
*தேற்றத் தார்தெரியுங் காலம்*
*மும்மையு முணரவல்லார்*
*ஒருமையே மொழியும் நீரார்"*

உயிரை ஒரு பொருளாக ஓம்பாது மானத்தையே பேணுவரென்பதையும் தலைவனுக்கு இதங்கூறி வழிமொழியாது இடித்துரைத்து நன்னெறி காட்டு பவர்களென்பதையும் சிறந்த தீர்க்கதரிசிகளென் பதையும் கற்க வேண்டியவற்றைத் துறைபோகக் கற்றவர்களென்பதையும் கோசலநாட்டு ஆட்சித் துறையில் வைத்து விளக்குகிறான் கம்பன். அதே நேரத்தில் இராவணனுடைய அழிவுக்கு அமைச்சர்களே காரணமாக அமைந்தனர் என்பதைக் காட்டவும் அவன் தவறவில்லை. சீதை அசோக வனத்திலே இராவணனை நோக்கி " இராவணா! உனது நாட்டிலே உன்னை இடித்துரைக்கும் அமைச்சர்கள் இல்லை. நீ எண்ணியதையே அவர்களும் எண்ணுகிறார்கள். இதனால் உனக்கு அழிவேயன்றி ஆக்கம் வரப்போவதில்லை. இது நிச்சயம்'! என்று கூறுகிறாள். அரசியல் துறையார் கம்பனுடைய இந்தக் கருத்துக்களைச் சிந்திக்க வேண்டும். இராவணனைப் பார்ப்போம். ' வாரணம் பொருத மார்பன்; வரையினை யெடுத்த தோளன்; நாரத முனிவரோடு இசைவாது புரிந்தவன்; பெருந்தவம் புரிந்து வரம் பெற்றவன்; திருநீறு பூசிய மேனியன்; ஆனால், இத்தனை பெருமையும் அவனுடைய ஒழுக்கக் கேடொன்றினால் அழிந்து விடுகிறது. மாற்றான் மனைவியை இச்சித்த பெரும் பாதகச் செயலுக்கு அவன் ஆளாகிறான். சமுதாய ஒழுக்கத்தின் மீது மோதினால் அறம் அவனைச் சும்மா விடுமா? அவனை வாழச்செய்த அறமே திரும்ப அவனை வீழச் செய்கிறது. நாம் எத்துணை நல்லவர்களாகவும் வல்லவர்களாகவும் வாழ்ந்தாலும் மற்றொருவருடைய வாழ்க்கைக்குள் புகுந்து கேடு விளைவிப்போமானால் அறம் எம்மையே கொன்று விடும். இதனையே இராவணனுடைய வாழ்க்கை மூலம் எடுத்துக் காட்டுகிறான் கம்பன்.

### குடும்ப வாழ்க்கை பற்றிய கம்பன் கருத்து

*" பெருந்தடங்கண் பிறைநுதலார்க் கெல்லாம்*
*பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்*
*வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும்*
*விருந்து மன்றி விளைவன யாவையே"*

கோசல நாட்டுப் பெண்களின் இல்லற மேன்மையை இப்பாடலின் மூலம் தெளிய வைக்கிறான். சிறப்பாகச் சீதாபிராட்டியாரைச் சிறந்த ஒரு குடும்பத் தலைவியாகவும், கற்புக்கடன் பூண்ட தெய்வமாகவும் பல இடங்களில் சித்திரித்துக் காட்டப்படுகிறது. இன்பத்திலும் பார்க்க துன்பத்தில்தான் உண்மையான பண்புகளைக் காணமுடியும். இராமபிரான் காட்டுக்குப் போகப் புறப்பட்ட நேரம் மிகச் சோதனையான நேரம்; தான் திரும்பி வரும் வரை வருந்தாதிருக்கும்படி சீதைக்கு ஆறுதல் கூறவருகின்றான் இராமன். ஆனால் சீதையின் கண்கள் கலங்குகின்றன. காட்டுக்குப் போகின்றாரே என்ற கலக்கமுமல்ல. முடியாட்சியை இழந்து விட்டாரே என்ற துயருமல்ல. பின்னை ஏன் கலக்கம் ஏற்பட்டதென்றால் "நீ வருந்தாதே" என்று கூறிய இராமனின் வார்த்தை யினாலேயே இக்கலக்கம் ஏற்பட்டதேயன்றி வேறில்லை. காடு சுடும் என்று காரணங்காட்டிய போதும் 'நின் பிரிவினுஞ் சுடுமோ பெருங்காடு' என்று வினாவி நிற்கின்றாள் சீதை. இன்பத்திலேயன்றி துன்பத்திலும் தன் கணவனோடு ஒன்றுபட்டு நின்று அனுபவித்து நன்மனையாளுக்குரிய கடமைகளைப் பேணி நிற்பதைச் சீதையின் வனவாசத்தில் காணமுடிகிறது.

காட்டிலே ஒருநாள் சூரியோதய நேரம். கண்விழித்த சீதை இராமன் முகத்தைக் கண்டு தன்முகம் மலர்ந்து நோக்கும் சிறப்பையும் பின்வரும் பாடல் காட்டுகிறது. கல்லும் முள்ளும் நிறைந்த காட்டின்

வெப்பையும் நோக்காது இராமபிரானோடு இணை பிரியாது இருக்கக் கிடைத்த தன்மை அவள் முகத்தை மலர வைக்கிறது.

*" செஞ்செவே சேற்றில் தோன்றும்*
*தாமரை, தேரில் தோன்றும்*
*வெஞ்சுடர்ச் செல்வன் மேனி*
*நோக்கின விரிந்த; வேறோர்*
*அஞ்சன ஞாயிறன்ன*
*ஐயனை நோக்கிச் செய்ய*
*வஞ்சிவாழ் வதன மென்னும்*
*தாமரை மலர்ந்ததன்றே"*

இது வனவாசத்திலிருந்த சீதையின் நிறைவு நிலை. கற்புள்ள மனைவியென்பாள் ஒரு பிறப்பிலன்று, ஏழு பிறப்பிலும் தமது கணவருடைய தொடர்பு நீடிக்க வேண்டுமென்று விரும்புவாள். இங்கே சீதையும் அந்த நிலையை அனுமனிடம் ' மீண்டு வந்து பிறந்து தன்மேனியைத் தீண்டலாவதோர் தீவினைதீர் வரம் வேண்டினாள் தொழுதென்று விளம்புவாய்' என்றும் 'இங்கு வந்திலனே யெனில் யாணர் நீர்க்கங்கை யாற்றங்கரை யடியேற்குத் தன் செங்கையாற் கடன் செய்கென்று செப்புவாய்' என்றும் எடுத்துக் கூறுகிறாள். மறுபிறவியிலும் கணவனையே சேர வேண்டுமென்றும் விரும்புகின்றாள் சீதையெனில் அவளின் கற்பின் திறனை என்னென்றியம் புவது! ஆண்கள் ஏகபத்தினி விரதத்தை மேற்கொள்ள வேண்டும் என்ற கருத்தையும் இராமாயணத்திற் சிறப்பாக ஆசிரியர் காட்டுவது வரவேற்கத்தக்கது.

கற்பு நலஞ் சான்ற பெண்களால் தாம் பிறந்த குலம், புகுந்தகுலம் யாவும் மேன்மை யடையுமன்றோ. அனுமன் இராமபிரானைப் பார்த்துச் சீதையின் சீரிய பண்பினால் ஏற்பட்ட சிறப்புகளை விளக்குகிறான்.

*' உன்குலம் உன்ன தாக்கி*
*உயர் புகழ்க் கொருத்தியாய*
*தன்குலந் தன்ன தாக்கித்*
*தன்னையித் தனிமை செய்தான்*
*வன்குலம் கூற்றுக் கீந்து*
*வானவர் குலத்தை வாழ்வித்து*
*என்குல மெனக்குத் தந்தாள்*
*என்பெருந் தெய்வமையா!*

என்று அனுமனால் தெய்வமாகப் போற்றப்பட்ட பெருமை சீதைக்குண்டு.

தம் பிள்ளையிலும் பார்க்க மாற்றார் பிள்ளையைப் போற்றுகின்ற தன்மை தாய்மார்களிடத்தில் அமைந்திருக்க வேண்டும். இதனைக் கோசலை யிடத்தில் வைத்து அருமையாகக் காட்டுகிறான் கம்பன். பரதனே முடி சூடுவான்; நான் காட்டுக்குப் போவேன்; இது தந்தையின் கட்டளை' என்று இராமன் கூறிய போது, கோசலையின் நிலையையும் பேச்சையும் கவனிப்போம்.

*" முறைமை யன்றென்ப தொன்றுண்டு*
*மும்மையின்*
*நிறைகுணத்தவன் நின்னினும் நல்லனால்*
*குறைவி லனெனக் கூறினாள் நால்வர்க்கும்*
*மறுவி லன்பினில் வேற்றுமை மாற்றினாள்"*

பரதனைப் புகழ்ந்து பேசும் பண்பும் உள்ளதை உள்ளபடி எடுத்துக் கூறுவதன் திறனும் கோசலை யிடத்திலே நாம் காணக்கிடக்கின்றன. இன்னும் மண்டோதரியை எடுத்துக் கொண்டாலும் அவள் கற்பு நலமும் அழகுநலமும் ஒருங்கே வாய்க்கப் பெற்றவள் என்பதை நாம் காணலாம். மகன் இந்திரசித்து இறந்த போது கலங்கிக் கண்ணீர் வடித்து இராவணனுக்கும் இம்முடிவு வருமோ என ஏங்கினாள். பின்பு இராவணன் இறந்த போது போர்க்களத்தே சென்று அவன் மார்பில் வீழ்ந்து அலறி உடன் கட்டையேறினாள்.

மண்டோதரியின் தெய்வக் கற்பு மிகமிகப் போற்றுதற்குரியது.

ஒரு நாட்டின் அரசியல், பண்பாடு என்பவற்றைப் பற்றிய உயர்ந்த நோக்கு கவிஞர்களிடத்தே அமைய வேண்டும். இதே வகையில் கம்பன் மகத்தான இலக்கியப் பணியையேயாற்றியுள்ளான். நாட்டிலே ஒருகுல உணர்ச்சி, பொருள்வாய்ப்பு, ஒழுக்கம், அறந்தழுவிய அரசியல், சகோதர ஒற்றுமை, நிறைகாக்குங்காப்பு, கற்பின் திண்மை ஆகியன இடம் பெற வேண்டும் என்பதையே தனது காவியம் வாயிலாக வலியுறுத்தியுள்ளான். இவற்றைப் படித்துச் சுவைத்து பயன்பெறுவதோடு அகில இலங்கைக் கம்பன் கழகத்தினருக்கு எமது வாழ்த்தையும் பாராட்டையும் கூறி நிற்போமாக.

*" மறையவர் வாழி வேத*
*மனுநெறி வாழி நன்னூல்*
*முறைசெயும் அரசர் திங்கள்*
*மும்மழை வாழிமெய்மை*
*இறையவன் இராமன் வாழி*
*இக்கதை கேட்போர்வாழி*
*அறைபுகழ்ச் சடையன் வாழி*
*அரும்புகழ் அனுமன்வாழி"*

# புகழைப் புதுக்கினான்

தம்பவாணர் - அ - அருணகிரி

கம்பன் காவியத்துள் வரும் பாத்திரங்களில், கும்பகர்ணன் ஒப்புயர்வற்றவன். அவனைத் 'தூங்குமூஞ்சி' என்று சிலர் தூற்றுவார்கள்; 'செஞ்சோற்றுக் கடன் கழித்த செம்மல்' என்று பலர் போற்றுவார்கள். திருமால் துயில் உணர்ந்து எழுந்தால் அரக்கர்கள் அழிவார்கள். கும்பகர்ணன் துயில் உணர்ந்து எழுந்தால் அமரர்கள் அழிவார்கள். தேவர்கள் இன்றுவரை வாழ்வதற்குக் காரணம் கும்பகர்ணன் பெரும்பொழுதைத் தூக்கத்தில் கழித்தது தான்.

கும்பகர்ணன் கூற்றுவனையும் ஆடல் கொண்டவன்; இந்திரனைப் போரில் வென்றவன்; இந்திரன் ஏறிவந்த ஐராவதயானையைப்பற்றி இழுத்துக் கரகரவென்று சுழற்றியவன்; ஐராவதத்தின் நான்கு தந்தங்களையும் இரண்டு கைகளாலும் பற்றிப் பறித்துக் கொண்டு மலையொன்று மதங் கொண்டு திரிவது போன்று சாரி திரிந்தவன். மூன்று உலகங்களையும் வென்றமைக்கு அடையாளமாக, முத்தலை வடிவான வன்னெடுஞ் சூலத்தை வலக்கையில் ஏந்தியவன். காற்றினும் கடிது ஒடும் வலிய கால்களையுடையவன்; காற்றையும் தீயையும் சேர்த்துப் பிடித்துப் பிசைந்து சாறு எடுக்கும் ஆற்றல் வாய்ந்த கைகளையுடையவன்; கடலிலே குளித்து, இமயக் கல்லிலே கால் தேய்ப்பவன்; உலகளந்த நெடுமாலைப் போன்று விண்ணளவு ஓங்கி உயர்ந்த உருவமுடையவன்; ஊனும் உதிரமும் உண்டு உண்டு படர்ந்து பருத்த உடலுடையவன். அவனுடைய தோளொடு தோள் செலத் தொடர்ந்து நோக்குறின் நாள் பல கழியும். ஆறு நூறு சகடத்து அடிசிலையும், நூறு நூறு குடங்கள் கள்ளினையும் நொடிப் பொழுதில் நுங்கி விடுவான். சிங்கத்தின் மாமிசம் கிடைத்து விட்டால் போதும், பிணம் போன்று சிரிப்பில்லாத முகத்தில், சிரிப்புச் சிறிதே அரும்பும்.

கும்பகர்ணனை அவனுடைய உருவத்தைக் கொண்டும், உணவைக் கொண்டும் மதிப்பிட்டு விடுதல் கூடாது. உள்ளத்தைக் கொண்டு மதிப்பிடுதல் வேண்டும். அவனது உள்ளம் அறத்தை நன்கு உணர்ந்திருந்தது. நீதியால் வந்ததொரு நெடுந்தரும நெறியும், சாதியால் வந்த சிறுநெறியும் அவனுக்குத் தெரியும். நீதியும் சாதியும் அவனுடைய உள்ளத்தில் மோதும் போது, சாதிப் பக்கமே சாய்ந்து விடுவான். தான் பிறந்த புலத்தியர் குலத்தின் புகழ் குன்றி விடக் கூடாது என்பதே அவனது நோக்கம். மேலும் செய்த நன்றியை மறக்கக்கூடாது என்பதே அவனது குறிக்கோள். அவனுடைய மூச்சு ஒவ்வொன்றும் "புகழ்! புகழ்!" என்றே ஊதிக்கொண்டிருக்கும். புகழுக்காகவே வாழ்ந்து, புகழுக்காகவே உயிர் விடுத்த மாவீரன் கும்பகர்ணன்.

இராவணன் சீதையை எடுத்து வந்து அசோகவனத்தில் சிறைவைத்த பின், இராமதூதனாகிய அனுமனால், இலங்கை எரியூட்டப்படுகிறது. எரியுண்ட இலங்கையை 'மயன்' என்ற தேவதச்சனைக் கொண்டு புதுப்பித்த இராவணன், அடுத்துச் செய்ய வேண்டுவன பற்றி மந்திராலோசனை நடத்துகிறான். ஆலோசனைக் கூட்டத்தில் அமைச்சர்கள், படைத்தலைவர்கள், குடும்பத்தினர் ஆகியோர் கூடியிருக்கிறார்கள். ஆலோசனை மண்டபத்தில் இராவணன் மானவுரை நிகழ்த்துகிறான்.

*சுட்டது குரங்கு; எரி சூறையாடிடக்*
*கெட்டது கொடிநகர்; கிளையும் நண்பரும்*
*பட்டனர்; பரிபவம் பரந்தது, எங்கணும்;*
*இட்டஇவ் வரியணை இருந்தது, என்உடல்*

என்று தொடங்கித் தன்னுடைய ஆற்றாமையையும் ஆத்திரத்தையும் பிழிந்து கொட்டுகிறான் இராவணன். எரிகின்ற நெருப்பிலே எண்ணெய் ஊற்றுவது போல, படைத்தலைவர். மகோதரன், வச்சிரதந்தன், துன்முகன், மாபெரும் பக்கன், பிசாசன் ஆகியோர் இராவணனுக்கு இதவுரை நிகழ்த்துகின்றனர். இவர்களுடைய பேச்சையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த கும்பகர்ணன்

பேச எழுந்தான். கும்பகர்ணன் அரக்கர் சாதியிலே பிறந்தவனாயினும், அறத்தின் நீதி அவனைப் பேசுமாறு தூண்டி விட்டது; தன் கடமையை உணர்ந்து பேசுகிறான் கும்பகர்ணன். அவன் கூற்றாகப் பத்துப் பாடல்கள் பிறக்கின்றன. அவற்றில் இரண்டு பாடல்களில், மூன்று இடங்களில் புகழைக் குறிக்கிறான்.

*என்று ஒருவன் இல்உறை தவத்தியை, இரங்காய்,*
*வன்தொழிலினாய், மறைதுறந்து, சிறைவைத்தாய்,*
*அன்றுஒழிவதாயின, அரக்கர்புகழ்; ஐயா*
*புன்தொழிலினால் இசை பொறுத்தல் புலமைத்தோ?*

*ஆசுஇல் பர தாரம் அவை அம்சிறை அடைப்பேம்;*
*மாசுஇல் புகழ் காதலுறுவேம்; வளமை கூரப்*
*பேசுவது மானம்; இடை பேணுவது காமம்;*
*கூசுவது மானுடரை நன்று, நம கொற்றம்*

மேலும், முதற்போரில் எல்லாவற்றையும் போட்டதோடு நில்லாது, வீரத்தையும் களத்தே போட்டு வெறுங்கையோடு இலங்கை புக்க இராவணன், சானகி நகுவள் என்றே நாணத்தால் சாம்பி, கும்பகர்ணனை அழைத்துப் போர்க் கோலம்பூட்டி போர்க்களம் செல்ல ஏவுகிறான். அப்போது கும்பகர்ணன் இராவணனுக்கு அறிவுரை கூறுகிறான்.

*ஆனதோ வெஞ்சமம்? அலகில் கற்புடைச்*
*சானகி துயர் இனம் தவிர்ந்தது இல்லையோ?*
*வானமும் வையமும் வளர்ந்த வான் புகழ்*
*போனதோ? புகுந்ததோ பொன்றும் காலமே?*

மற்றும் இராமனிடம் தன்னை அழைத்துச் செல்ல வந்த வீடணனிடம் கும்பகர்ணன் மறுத்துக் கூறும்போது, "நீர்க் கோல வாழ்வை நச்சி நெடிது நாள் வளர்த்துப் பின்னைப் போர்க்கோலம் செய்து விட்டாற்கு உயிர் கொடாது அங்குப் போகேன்'' என்று கூறியதோடு நிற்கவில்லை.

*உலைவு இலாத் தருமம் பூண்டாய்; உனக்கு அது தக்கதேயால்;*
*புலையுறு மரணம் எய்தல் எனக்கு அது புகழதேயால்*

என்று கூறுகிறான்.

கும்பகர்ணன் கூற்றிலிருந்து, "அறம் தவறிப் பிறன் மனைவியைக் கவர்ந்தால், உள்ளபுகழ் அழியும் – அற்பச் செயலினால் புகழ்வளராது – பிறன்மனைவியைச் சிறையிடுவதும், புகழை விரும்புவதும், ஒன்றுக்கொன்று முரணான செயல்கள் – பழிவிளைக்கும் செயலால் புகழடைய விரும்புவது பேதைமை – கற்புக்கரசியின் சிறைத் துன்பத்தால், மண்ணுலகத்திலும் விண்ணுல கத்திலும் வளர்ந்த பெரும் புகழ் ஒழிந்து போகும் – தன்னை வளர்த்தவனுக்குச் செய்ந்நன்றி காட்டி, இழிவுடைய மரணம் எய்தினாலும் புகழ் விளையும் என்னும் அசைக்க முடியாத நம்பிக்கை, கும்பகர்ணனுக்கு இருப்பது தெளிவாகிறது. கும்பகர்ணன், ஒரு புகழ் விரும்பி என்பது புலனாகின்றது.

கும்பகர்ணன் போர்க்களத்திலே புகுந்தால், வெற்றியே யன்றி வேறெதும் பெற்றிலனாவான். பேராண்மை என்பது அவனது பிறப்புரிமை. தன்னுடைய ஆண்மையினால் போர்க்களத்தில் பகைவர்களின் பாதச்சுவடுகளே இல்லாமல் ஒழித்துவிடுவான். அவனைத் தாக்கியவர்களின் கைகள் தாம் சலித்துப் போகுமேயன்றி, அவனை ஒருவரும் அசைக்க முடியாது, அசைக்க முடியவில்லையென்றாலும் சிறிதளவாவது துன்பம் ஏற்படுத்த முடியுமா என்றால், அதுவும் முடியாது. வானர வீரர்களோடு கும்பகர்ணன் போர் புரிந்த திறத்தைப் பாடும்போது, கம்பனே வியந்து போகிறான்.

*தாக்கினார்; தாக்கினார் தம் கைத்தலம் சலித்த தன்றி*
*நூக்கினார் இல்லை; ஒன்றும் நோவு செய்தாரும் இல்லை*
*ஆக்கினான்; களத்தின் ஆங்கு ஓர் குரங்கினது அடியும் இன்றிப்*
*போக்கினான்; ஆண்மையாலே புதுக்கினான், புகழை அம்மா!*

பாடலின் இறுதியில், "அம்மா!" என்ற வியப்பிடைச் சொல்லைப் பெய்து பூரித்துப் போகிறான் கம்பன். போர்க் களத்தில் தன்னை எதிர்த்த வானர வீரர்களில், இறந்து பட்டவரேயன்றி, இருந்த வீரர்கள் எதிர்த்து நிற்க மாட்டாமல் தப்பிப் பிழைத்து ஓட, அந்தப் போர்க்களத்தில் ஒரு குரங்கினது சுவடும் இல்லாமல், ஓட ஓட விரட்டியடித்த கும்பகர்ணனது புதுமையான ஆண்மையை – புதுமையான புகழை, கம்பன் போற்றாமல் இருப்பானா? கும்பகர்ணனது ஆண்மை, சாதாரண ஆண்மையன்று; பேராண்மை.

*"பேராண்மை என்ப தறுகண்; ஒன்று உற்றக்கால்*
*ஊராண்மை மற்று அதன் எஃகு."*

என்பது தெய்வமாக்கவி திருவள்ளுவர் வாய்மொழி. பிறர்

அஞ்சும் இடத்தும் அஞ்சாது நிற்கும் தறுகண்மையே பேராண்மை. அந்தப் பேராண்மையும் ஊராண்மையோடு கூடினால் சிறப்புடையதாகும்.

திருக்குறளுக்கு உரைகண்ட பரிமேலழகர், ஊராண்மைக்குப் பின்வருமாறு விளக்கம் தருகிறார்: – "ஊராண்மை – உபகாரியாந்தன்மை; அஃதாவது இலங்கையர் வேந்தன் தன் தானை முழுதும் படத் தமியனாய் அகப்பட்டானது நிலைமை நோக்கி, அயோத்தியர் இறை, மேற்செல்லாது 'இன்று போய் நாளை நின் தானையோடு வா' என விட்டாற் போல்வது."

பரிமேலழகர் விசேட உரையைக் கொண்டு இராமனுடைய ஊராண்மையை நோக்குவோம் :– முதற் போரில், இராமனது அம்புக்கு இலக்காகி, இலங்கையர் வேந்தன், சொல்லும் அத்தனை அளவையில் மணிமுடி துறந்து, ஆயுதங்களையும் இழந்து, ஆலமரத்தின் விழுதுகளைப் போல வெறுங்கையனாகி நிற்கும் இராவணனை நோக்கி, இராமன் பின்வருமாறு கூறுகிறான்:

*ஆள் ஐயா! உனக்கு அமைந்தன மாருதம் அறைந்த*
*பூளை ஆயின கண்டனை; இன்று போய், போர்க்கு*
*நாளை வா என நல்கினன் – நாகு இளங்கமுகின்*
*வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்*

அறத்தின் மூர்த்தி இராமன். புறா ஒன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகையாகிய சிபிச்சக்கரவர்த்தியின் புகழிலே பூத்தவன் இராமன். கோசல நாடுடை வள்ளலாகிய இராமன், இராவணனுக்கு உயிர்ப்பிச்சையளித்தது புகழ்தற்குரிய செயல்தான். சந்தனத்தில் நறுமணம் கமழ்வது இயற்கை – புகழ்தற்குரியதுதான் – என்றாலும், அதிசயமல்லவே. சேற்றிலே நறுமணம் வீசுகிற தென்றால், அது தான் அதிசயம். இரக்கம் என்னும் ஒரு பொருள் இலாத அரக்கர் குலத்திலேவந்த கும்பகர்ணனிடம், ஊராண்மையோடு கூடிய பேராண்மை இருந்தது என்றால், அதுதான் அதிசயம்; புதுமை.

போர்க்களத்தில் புகுந்த கும்பகர்ணனோடு, நீலன் என்னும் வானர வீரன் போர் செய்கிறான். வானர வீரர்களால் கும்பகர்ணனை ஏதும் செய்ய முடியாமல் போனது கண்ட நீலன், மலையைத் தூக்கி எறிந்தான். மலையும் கும்பகர்ணனை அசைக்கவில்லை. பின்னர், நீலன் பின்பேர்ந்து முன்பாய்ந்து கும்பகர்ணனைக் கைகளால் குத்தினான்; கால்களால் உதைத்தான். கைகளும் கால்களும் செயலிழந்து விட்டன. என்றாலும், நீலனுக்கு ஆத்திரம் அடங்கவில்லை. நெய் சொரிந்த நெருப்புக் கொழுந்து போல உக்கிரங் கொண்டு துள்ளினான். அப்போது, கும்பகர்ணன் நீலனை இடது கையினாலே எற்றி விட்டான். எற்றுண்ட நீலன் உயிர் பதைத்து வீழ்ந்தான். கும்பகர்ணனது வலது கையிலே சூலமிருந்தும், ஏன் எறியவில்லையென்றால், நிராயுதபாணியான நீலன் மீது, சூலம் என்னும் ஆயுதம் கொண்டு தாக்கக் கூடாது என்ற கருணைதான்.

*கைத்தலம் சலித்து, காலும் குலைந்து, தன் கருத்து முற்றான்,*
*நெய்த்தலை அழலின் காந்தி எரிகின்ற நீலன் தன்னை,*
*எய்த்து உயிர் பதைப்ப அன்னான் எற்றினான் இடது கையால்*
*முத்தலைச் சூலம் ஓச்சான், வெறுங் கையான் என்று முன்பன்*

இந்தக் காட்சியைக் கண்ட நமக்கு, இராமனுடைய புகழை விட கும்பகர்ணனுடைய புகழ் புதுமையானது; போற்றத் தகுந்தது என்று புரிகின்றதல்லவா? ஆம்! கும்பகர்ணன் புகழைப் புதுக்கினான்.

புதுக்குதல் என்பது 'உள்ள புகழை மேலும் புதுமையாகச் செய்தல்' என்ற பொருளேயன்றி, 'பழுது பட்ட புகழை மீண்டும் புதுப்பித்தல், என்ற பொருளும் கொள்ளலாம். இங்கு இராவணனை நினைவு கூர வேண்டும். இராவணன் பிறன் மனைவியைக் கவர்ந்து பேராண்மை' இழந்தான்.

*பிறன் மனைநோக்காத பேர் ஆண்மை, சான்றோர்க்கு*
*அறன் ஒன்றோ? ஆன்ற ஒழுக்கு.*

என்பது வள்ளுவர் வாக்கு. எயிலுடைய இலங்கை நாதன் என்றைக்குச் சீதையை இதயமாம் சிறையில் வைத்தானோ, அன்றைக்கே பேராண்மை இழந்தவனாகி விட்டான். அதனால் தான், வீரமும் களத்தே போட்டு, வெறுங்கையோடு தலை குனிந்து நடக்க வேண்டியவனானான். 'இராவணன் தோற்றுத் திரும்பினானே' என்பதற்காகக் கும்பகர்ணன் வருந்தவில்லை. 'வானமும் வையமும் வளர்ந்த புலத்தியர் குலத்தின் புகழ் போனதே' என்று வருந்தினான்; வேதனைப் பட்டான்.

இராவணனைப் போன்றே கும்பகர்ணனுக்கும் இராமன் முன்பு நிராயுதபாணியாக நிற்கும் நிலை

ஏற்பட்டது. சீதையைத் தூக்கிச் செல்ல முயன்ற சூர்ப்பணகை மூக்கையும் காதையும் இழந்ததுபோல, சுக்கிரீவனைத் தூக்கிச் செல்ல முயன்ற கும்பகர்ணனது மூக்கையும் காதையும் சுக்கிரீவன் கடித்து எடுத்துச்சென்று விட்டான். முன்பு தங்களுக்கிருந்த வான் புகழையும், இன்று நேர்ந்த இழிதகவையும் எண்ணி யெண்ணி, ஊழித்தீயும் அவியும்படிநெடுமூச்செறிந்தான் கும்பகர்ணன். தன் எதிரே, மாயமாக் கூத்தன் இராமன் நிற்பதையும் கண்டான். இராமனுக்கும் கும்பகர்ணனுக்கும் கடும்போர் நிகழ்ந்தது. போரில் கும்பகர்ணன், தனது வாள், கேடயம், கவசம் ஆகியவற்றை இழந்ததோடு சூலப்படையையும் இழந்து நிற்கிறான். கும்பகர்ணனுக்குத் துணையாக வந்த நால்வகைப் படைகளும் அழிந்தன. நிராயுதபாணியாக நிற்கும் கும்பகர்ணனைப் பார்த்து இராமன் வினவுகிறான்.

*ஏதியோடு எதிர் பெருந்துணை இழந்தனை;*
*எதிர் ஒரு தனி நின்றாய்;*
*நீதியோனுடன் பிறந்தனை ஆதலின்,*
*நின் உயிர் நினக்கு ஈவென்;*
*போதியோ? பின்றை வருதியோ? அன்றுஎனின்*
*போர் புரிந்து இப்போதே*
*சாதியோ? உனக்கு உறுவது சொல்லுதி,*
*சமைவுறத் தெரிந்து அம்மா!*

"கும்பகர்ணா! நீ இப்போது ஆயுதமும் படையும் இழந்து தனியே நிற்கின்றாய். இந்த நேரத்தில் உன் உயிர் என் கையில் இருக்கிறது. நீதிமானாகிய வீடணனுடன் பிறந்தாய் என்ற ஒரே காரணத்திற்காக, உன் உயிரை உனக்கே பிச்சையளிக்கிறேன். ஏற்றுக் கொண்டு போகின்றாயா? பின்பு வருகின்றாயா? இரண்டு மின்றேல் போர் புரிந்து இப்போதே சாகின்றாயா? நன்றாக ஆலோசித்துச் சொல்'' என்றான் இராமன். நிராயுதபாணியாகித் தனியே நிற்பவனோடு வலிமை காட்டுதல் பேராண்மை அன்று ஆதலின், இராமன், அன்று இராவணனிடம் ஊராண்மையைக் காட்டினான்; இன்று கும்பகர்ணனிடம் ஊராண்மையைக் காட்டுகிறான். அன்று இராவணன், இராமன் போட்ட உயிர்ப்பிச்சையை ஏற்றுக் கொண்டு இலங்கைக்குத் திரும்பினான். இன்று, கும்பகர்ணன், இராமன் ஈவதாகச் சொன்ன உயிர்ப்பிச்சையை ஏற்றுக் கொள்கிறானா? மறுக்கிறானா? பார்ப்போம். இப்போது கும்பகர்ணன் கூறுகிறான்:-

*"மற்று எலாம் நிற்க; வாசியும், மானமும் மறத்துறை*
*வழுவாத*
*கொற்ற நீதியும்; குலமுதல் தருமமும் என்று இவை*
*குடியாகப்*
*பெற்ற நுங்களால், எங்களைப் பிரிந்து, தன் பெருஞ் செவி*
*மூக்கோடும்*
*அற்ற எங்கைபோல், என்முகம் காட்டிநின்று ஆற்ற*
*லென் உயிர் அம்மா!"*

*"உங்கள் தோள் தலை வாள்கொடு துணிந்து உயிர்*
*குடித்து எம்முன் உவந்துஎய்த*
*நங்கை நல்நலம் கொடுக்கிய வந்தநான், வானவர்*
*நகை செய்ய,*
*செங்கை தாங்கிய சிரத்தொடும் கண்ணின் நீர்*
*குருதியினொடு தேக்கி,*
*எங்கைபோல் எடுத்து அழைத்து, நான்*
*வீழ்வெனோஇராவணன் எதிர் அம்மா!"*

இராமன் வினாவுக்குக் கும்பகர்ணன் விடை கூறும் இந்த இரண்டு பாடல்களிலும் தன் தங்கை சூர்ப்பணகையை ஒப்பு நோக்கி மறுப்புரை கூறுகிறான் "மூக்கும் காதும் இழந்ததில் என் தங்கையுடன் ஒற்றுமை இருப்பினும், இராவணன் காலில் விழுவதில் ஒற்றுமை காண முடியாது. அவள் பெண்ணாகிய காரணத்தால் அவ்வாறு வீழ்ந்து அழுதாள். அவளைப் போல் வீழ்ந்து அழுவதற்குப் பெட்டையா நான்? பெண்மை வீழ்ந்து அழுததைப் போல ஆண்மை வீழ்ந்து அழுமா? பேராண்மை இழந்தவன் காலில், பேராண்மையுடைய நான் விழுவேனா? பேராண்மை இழந்தவன் காலில், பேராண்மை இழப்பதற்குக் காரணமானவள் வீழ்ந்தாள். எதிர்ப்பவன் வீழ்வேனா?'' என்று மறுத்துரைத்தான் கும்பகர்ணன். அன்று, முதற் போரில் இராவணனால் பாழ்பட்டுப் போன அரக்கர் குலத்தின் புகழை, இன்று புதுப்பித்தான் கும்பகர்ணன் என்பது புலனாகும்.

அன்றொருநாள் பஞ்சவடிக் காட்டில் சூர்ப்பணகை மூக்கும் காதும் இழந்தது இலங்கைப் போர் மூள்வதற்குக் காரணமாய் அமைந்தது. இன்று கும்பகர்ணன் மூக்கும் காதும் இழந்தது இலங்கைப் போர் முடிவதற்குக் காரணமாய் அமைந்தது. எப்படியெனில்:- "ஐயன் வில்தொழிலுக்கு ஆயிரம் இராவணர் அமைவிலர்'' என்பதை நன்கு உணர்ந்து கொண்டான் கும்பகர்ணன். "என்னை வென்றுளர் எனில், இலங்கைக் காவல உன்னை வென்று உயர்தல் உண்மை'' என்று அண்ணனிடம் அன்றே எடுத்துரைத்தான் கும்பகர்ணன். இராவணன் கேட்கவில்லை. 'கருத்திலா மன்னன் தீமை கருதினால் அதனைக் காத்துத் திருத்தலாம் ஆகின் நன்றே; திருத்துதல் தீராதாயின், அவர்களுக்கு முன்னே சாதலை விட வேறு வழியே இல்லை' என்ற முடிவுக்கு வந்து விட்டான். நீர்க்கோல வாழ்வை நச்சி நெடிது நாள்

வளர்த்துப் பின்னைப் போர்க் கோலம் செய்து விட்டவனுக்கு உயிர் கொடுக்கத் துணிந்து விட்டான். போருக்கும் புறப்பட்டான். வியத்தகு போர் புரிந்தான். கும்பகர்ணனின் போராற்றலைக் கண்டு, இராமபிரானே கை விதிர்த்து நின்று அதிசயித்துப் போனான் என்றால், அவனது வீரத்தை மேலும் புகழ்தல் வேண்டுமோ?

இராம கதையில், இராவணன் வதைப் படலத்தில் இராகவன் இராவணனைக் கொன்றான். கும்பகர்ணன் வதைப் படலத்தில், இராமன் கும்பகர்ணனைக் கொல்லவில்லை; கும்பகர்ணனது வேண்டுதலை இராமன் நிறைவேற்றினான்.

*"மூக்கு இலா முகம் என்று முனிவர்களும் அமரர்களும்*
*நோக்குவார் நோக்காமை நுண்கணையால் என் கழுத்தை*
*நீக்குவாய்; நீக்கிய பின் நெடுந்தலையைக் கருங்கடலுள்*
*போக்குவாய்; இது நின்னை வேண்டுகின்ற பொருள்"*
என்றான்

கும்பகர்ணன், தனக்குச் சாக்காட்டை இராமனிடம் வேண்டிப் பெற்றான் என்று எண்ணும் போது, நம்முடைய உள்ள மெல்லாம் வியப்பினால் விரிகின்றது. உடலெல்லாம் மயிர்க்கால்கள் சிலிர்க்கின்றன. இராமாவதாரத்தில் இராவணன் உயிர் கொடுத்துப் பழிகொண்டான்; கும்பகர்ணன் உயிர்கொடுத்துப் புகழ் கொண்டான்.

புகழ் கொண்ட கும்பகர்ணன், 'பழிகொண்ட இராவணன் கண்களிலே தன் முகத்தைக் காட்டக்கூடாது, என்ற காரணத்திற்காகத்தான் தன் தலையைத் துண்டித்துக் கடலில் எறியும்படி இராமனிடம் வேண்டினான் போலும்! அன்று, அண்ணனிடம் விடைபெற்றுப் போருக்குப் புறப்பட்ட போது, "அற்றதால் முகத்தினில் விழித்தல்" என்று சொல்லிப் புறப்பட்டதன் பொருளும் இன்று தான் புரிகின்றது. "கும்பகர்ணன் போரில் மாண்டு போனால், இறந்தவன் தன் முகத்தில் விழிக்க முடியாதேயொழிய, தான் தம்பி முகத்தில் விழிக்கலாம்" என்று இராவணன் எண்ணியிருக்கலாம். அந்த வாய்ப்பும் இராவணனுக்கு இல்லாமல் போயிற்று. இராவணன் போர்க்களத்திற்குச் சென்று பார்த்தபோது, தம்பியின் தலையற்ற உடலைத் தானே கண்டான். முகத்தில் விழிக்க முடியாமல் போயிற்றே.

புகழ் கொண்ட கும்பகர்ணனுடைய மரணச் செய்தி கேட்டுப் பழிகொண்ட இராவணன், "தம்பி தன் பொருட்டு இறந்தான்" என்று அறிவழிந்து, அவசன் ஆகி, அண்டம் முற்ற அரற்றி அழுதான். எப்படி?

*"நோக்கு அறவும் எம்பியர்கள் மாளவும், இந் நொய்து இலங்கை*
*போக்கு அறவும், மாதுலனார் பொன்றவும் என் பின் பிறந்தாள்*
*மூக்கு அறவும், வாழ்ந்தேன் – ஒருத்தி முலைக் கிடந்த*
*ஏக்கறவால், இன்னம் இரேனோ, உனை இழந்தும்?"*

ஊனும் உதிரமும் ஊட்டித் தன்னை வளர்த்தவனுடைய கண்ணீரைப் பெறவேண்டும் என்பதற்காகவே, கும்பகர்ணன் தன் மரணத்தை இராமனிடம் வேண்டிப் பெற்றான் போலும்!

*"புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பின், சாக்காடு*
*இரந்துகோள் தக்கது உடைத்து"*

என்னும் குறளுக்கு எடுத்துக் காட்டாக இறந்தான் கும்பகர்ணன்.

கும்பகர்ணன் மரணமன்றோ புகழ்ச்சிக்குரிய மரணம்! புகழுக்காகவே வாழ்ந்து, புகழுக்குப் புதுமை கூட்டிப் புகழைப் புதுக்கிப், புகழுக்காகவே உயிர் கொடுத்தவன் கும்பகர்ணன்.

*"ஒன்றா உலகத்து உயர்ந்த புகழ் அல்லால்*
*பொன்றாது நிற்பதுஒன்று இல்."*

---

நன்றி, 'கம்பக்கதம்பம்'' வானதிபதிப்பகம்

# கூட வந்த குரங்கு



## வித்துவான்-கலாநிதி-க-ந-வேலன்

இராமன் ஆண்டாலென்ன? இராவணன் ஆண்டாலென்ன? கூடவந்த குரங்கு ஆண்டாலென்ன? இப்படி ஒரு வசனம் உண்டு. அந்த அளவுக்கு குரங்குகளைப் பற்றி இழிவான ஒரு கருத்து இதன் மூலம்தெரிவிக்கப்படுகிறது.

இராமராச்சியத்துக்குக் குரங்குகளின் பங்கு குறைவானதல்ல. குரங்குகளும் அனுமான் எனப்படும் தெய்வீக புருஷனின் மகத்தான பங்கு இராமனுக்குச் சமமாக வைத்து வணங்கப்படும் ஆஞ்சநேயரின் பங்கு– காவியத்தின் புகழையே உயர்த்தி விட்டது.

இராம அயனம் என்பதற்கு இராமன் வழி; இராமன் வாழ்ந்து காட்டிய வழி என்பது பொருளாகும். " சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம் சொல்லிய வண்ணம்செயல்". வள்ளுவர்–அறத்தின் நாயகனாம் இராமன் வாழ்ந்து காட்டிய அறவழியே இராமாயண மாகும்.

வள்ளுவன் அறத்துக்கு இலக்கணம் சொன்னான். கம்பன் அந்த இலக்கணத்துக்கு இலக்கியம் சொன்னான்.

வள்ளுவத்துக்கு எழுதப்பட்ட உரைகளுள் எல்லாம் மிகச்சிறந்த உரை கம்பராமாயணமேயாகும். கம்பராமாயணம் வள்ளுவத்தின் மாபாடியம்.

அறம் இன்னதென விளக்க வந்த பரிமேலழகர், " சிறப்புடைய ஒழுக்கமே ஈண்டு அறமெனப்பட்டது" என ஒழுக்கத்தையே அறமாகக் கூறுவர்.

உலகமாந்தர் விரும்புவது இன்பமே. அதனை அடைவதற்கான பொருளையே சிறப்புடைமரபிற் பொருளும் இன்பமும் அறத்து வழிப்பட வேண்டும் என்பது ஆன்றோர் வாக்காயினும், அறத்தை விரும்புவோர் அருமையே.

இன்ப நாட்டமுடையோன் கழிமிகு காமத்து அறத்தையும் பொருளையும் இழப்பான். இதற்கு இராவணனே சான்றாகும்.

பொருட்பற்றுடையோன் அறத்தையும் இன்பத் தையும் இழப்பான். இதற்குத் துரியோதனனே சான்றாகும்.

அறப்பற்றுடையோன்,பொருளையும் இன்பத் தையும் இழப்பான். இதற்கு இராமனே சான்றாகும். ஏன்? இராமன், அறத்தால் முடியிழந்தான். காட்டில் வாழ்ந்து மனைவியையும் பிரிந்து விரக வேதனையால் புலம்பினான்.

இருப்பினும் " அறத்தினூங்கு ஆக்கமுமில்லை" ஆதலால் அறத்தை உலகினர்க்கு உணர்த்துவதே இராமாயணத்தின் தலையாய நோக்கமாகும்.

இந்த நோக்கத்தை நிறைவேற்றும் இராமனுக்குத் துணையாய் அமைந்தவர்களுள் தலையாவன் அனுமானே. ' உருவு கண்டு எள்ளாமை வேண்டும்' என்னும் குறளுக்கு விளக்கமும் அவனே.

குரங்கு உருவில் ஒரு தெய்வத்தைப் படைத்தான் கம்பன்.

கிட்கிந்தையில் முதன் முதலாக அனுமன் இராமனைச் சந்திக்கிறான். சுக்கிரீவன் முதலியோர் இராமன் வருகையை சந்தேகிக்கிறார்கள். ஆனால் அனுமனோ,

*" சிந்தையில் சிறிது துயர் சோர்வுற தெருமரலின்*
*நொந்து அயர்த்தவர் அனையர் ..........*
*.......... .......... மானிடப் படிவர்; மயர்*
*சிந்தனைக் குரிய பொருள் தேடுதற்கு உறுநிலையர்"*

"தருமமும் தகவும் இவர் தனமெனும் தகையர்" என ஒரே பார்வையில் அவர்களின் உண்மை உயர்வை மதிப்பீடு செய்கிறான்.

அடுத்து கவ்வை இன்றாகநுங்கள் வரவு என வரவேற்கிறான் " நீ யார்' எனும் இராமனின் வினாவிற்கு

*" .......... யான் காற்றின் வேந்தற்கு*
*அஞ்சனை வயிற்றில் வந்தேன்......*

*" இம்மலை இருந்து வாழும்*
*எரிகதிர்ப் பருதிச் செல்வன்*
*செம்மலுக்கு ஏவல் செய்வேன்*
*தேவ நும் வரவு நோக்கி*
*விம்மலுற் றனையன் ஏவ*
*வினவிய வந்தேன்......."*

என விடை பகர்ந்தான்.

இதனைச் செவியுற்ற இராமன் " யார் கொல் இச் சொல்லின் செல்வன்" என்றான்.

கம்பராமாயணமே ஒரு சொல்லின் செல்வம் தான். நூல் முழுவதும் பாத்திரங்கள் பலவும் சொற் செல்வங்களாகப் படைக்கப்பட்டிருக்கின்றன.

*கண்ணே வேண்டுமெனினும் ஈயக் கடவேன்.*
*மண்ணே கொள் நீ மற்றைய தொன்றும் மற*

என இரந்து மன்றாடிய தசரதனும்,

*நதியின் பிழையயிறு நறும்புனல் இன்மை......*
*விதியின் பிழை"*

எனத்தம்பிக்குத் தத்துவம் உரைத்த இராமனும்,

" நின்பிரிவினும் சுடுமோ பெருங்காடு" என உரைத்து அவன் பின் செல்லத் சீரை சுற்றிய சீதையும்

*வாலியைப் படுத்தாய் அலை மன் அற*
*வேலியைப் படுத்தாய்*

என அறத்தின் நாயகனுக்கே அறம் உரைத்த வாலியும், அசோக வனத்திலே,

*" எல்லை நீத்த உலகங்கள் யாவும் என்*
*சொல்லினால் சுடுவேன் அது தூயவன்*
*வில்லின் ஆற்றற்கு மாசென்று வீசினேன்."*

என உரைத்து "மன்னவற்கு யான் சொலும் வாசகம் அருளுக" என உரைத்த நெஞ்சுருக்கும் வாசகங்களும்;

போர்க்களத்தில் விபீடணனைச் சந்தித்த கும்பகர்ணன் கொட்டிய சகோதர வாஞ்சையும் சொற் செல்வங்களே.

ஆனால் இவர்களை யெல்லாம் ஒதுக்கி விட்டு, அனுமனையே சொல்லின் செல்வன் எனப் பட்டம் சூட்டக் காரணம் என்ன?

இந்தப் பட்டம் கம்பன் என்னும் பல்கலைக் கழகத்தினால் வழங்கப்பட்டது. வழங்கியவர் ஸ்ரீ இராமபிரான்.

பட்டத்தை வழங்கிய ஸ்ரீ இராமபிரான் தமது பட்டமளிப்பு உரையில்,

*" ......... இவனின் ஊங்குச்*
*செவ்வியோர் இன்மை தேறி*
*ஆற்றலும், நிறைவும் கல்வி*
*அமைதியும் அறிவும் என்னும்*
*வேற்றுமை இவனோடு இல்லை......."*

*"இல்லாத உலகத்து எங்கும்,*
*இங்கு இவன் இசைகள் கூரக்*
*கல்லாத கலையும் வேதக்*
*கடலுமே"* என்னும் காட்சி
*இவன் சொல்லாலே தோன்றிற்று அன்றோ?*

ஆதலால் இவன் விரிஞ்சனோ (பிரமனோ) விடை வலானோ (சிவனோ)

இவன் பெருமையை நான் சிக்கறத் தெளிந்தேன். நான் தெளிந்தது போல இப்போது நீங்கள் உணராமல் இருக்கக்கூடும். ஆனால் பின்னர்க் காணுதிர் மெய்ம்மை' என்று சுருக்கமாக, ஆனால் ஆழமான கருத்துக்களை கூறித் தமது உரையை முடித்துக் கொண்டார்.

உலகில் ஒவ்வொரு குணமே ஒவ்வொருவரும் மேலோங்கி நிற்கும். நிறைகுணத்தர் யாவர்? ஆற்றல் இருப்பவரிடம் நிறையோ, கல்வி அமைதியோ அறிவோ இருத்தல் அரிது. இப்படியே பிறவும். ஆனால் அனுமானிடமோ இவை வேற்றுமையின்றி அமைந்து கிடந்தன என்பதும் இவன் கல்லாத கலையும், பயிலாத வேதமும் இல்லை என்பதும் இவன் சொல்லாலே தோன்றிற்றுன்றே என உறுதி செய்து இவன் பிரமனோ சிவனோ எனவும் இராமன் வியக்கிறான்.

முடிவாக இவன் பெருமையை இலக்குவனா; நீ உணர்ந்து கொள்ளவில்லை. இருந்து பார் என இலக்குவனுக்கு உணர்த்துவது போல இராமன் வாயிலாகக் கம்பன் நமக்கு உணர்த்துகிறான்.

இந்த மெய்ம்மையை உணரப் பல இடங்கள் நூல் முழுவதும் உள்ளன. சில இடங்களைப் பார்ப்போம்.

அசோக வனத்தில் இனி வாழ்வதில் பயனில்லை என முடிவு செய்த சீதை தற்கொலை முயற்சியில் ஈடுபட்டபோது இராம நாமத்தை உச்சரித்துக் கொண்டு சீதை முன் குதித்தான் அனுமன். இராம நாமத்தைக் கேட்டவுடன் சீதை உயிர்விடும் எண்ணத்தைக் கைவிட்டு 'நீ யார்' என்றாள். " அன்டர் நாயகன் அருந்தூதன் நான்"என்றான் அனுமன். இதனைக் கேட்ட சீதை,

***மும்மையாம் உலகம் தந்த***
***முதல்வற்கும் முதல்வன் தூதாய்***
***செம்மையால் உயிர் தந்தாய்க்குச்***
***செயல் என்னால் எளியது உண்டே?***
***அம்மையாய் அப்பன் ஆய***
***அத்தனே! அருளின் வாழ்வே!***
***இம்மையே மறுமை தானும்***
***நல்கினை இசையோடு ..........***

எனச் சீதை கூறுவதற்கு காரணம், அனுமனின் சொற் செல்வமே. "ராம் ராம்" என்னும் மந்திரத்தை கேட்டிருக்காவிட்டால் சீதை உயிர் துறந்திருப்பாள். அந்த மந்திரத்தைச் சரியான சந்தர்ப்பத்தில் சொன்னதே அனுமனின் சொல் வண்ணம்.

***" கண்டனன் கற்பினுக்கு அணியை"***

எனச் சீதைக்காக ஏமாற்றத்தைத் தாங்கி ஏங்கி கிடந்த இராமனிடம் அனுமன் கூறியதும் இத்தகையதே.

***" காத்து ஓம்பல் சொல்லின்கட் சோர்வு"***
***" திறனந்து சொல்லுக சொல்லை"***
என்பன வள்ளுவம்.

அனுமன் சொல்லும் தன்திறனும் கேட்கும் சீதையின் திறனும் அறிந்து சொன்னான். சொற்சோர் வின்றி வேண்டாது கூறாது "ராம் ராம்" என்றான்.

இலங்கையை விட்டு புறப்படுமுன் இலங்கைக்குத் தீ வைத்த அனுமனை இந்திர சித்தன் பிரம் மாத்திரத்தால் பிணித்து இராவணன் முன் நிறுத்தினான். பெருங் குற்றங்கள் புரிந்த அனுமன் என்ன பதில் சொல்லப்போகிறான்.

"இராவணேஸ்வரன் மாட்சி என்னைக் கவர்ந்தது. அவனைப் பார்க்க ஆசைப்பட்டேன். அற்ப குரங்குக்கா இந்த ஆசை என என்னை அடித்து விரட்டினர். என்னைக் காப்பாற்றிக்கொள்ள ஒரு தட்டுத் தட்டினேன். அவ்வளவுதான். அவர்கள் மடிந்து விட்டார்கள். இதற்கு என் வலிமை காரணமல்ல. அவர்கள் பலவீனமே காரணம்." எப்படி இருக்கிறது சொல்லின் செல்வம்.

பகைச் சூழலில் தன் திறனும் (தனது தனித்த நிலையையும்) பகைவர் தம்திறனும் ஆகிய திறன் அறிந்து சோர்வின்றி " நகச் சொல்லி" காலம் கருதி, இடம் அறிந்து, எண்ணி உரைத்தான் அனுமன்.

'இந்த இடத்தைக் கம்ப சித்திரத்தில் காண்போம்.
யாரை! ( நீ யார்) என்னை இங்கு எய்து காரணம்?
ஆர்உனை விடுத்தவர்? அறிய ஆணையால்
சோர்விலை சொல்லுதி'
***"......... நீ என்கொல், அடா! இரும்.***
***புரத்தினுள் தரும் தூது புகுந்த பின்***
***அரக்கரைக் கொன்றது? அஃது***
***உரையாய்.................?***
என்னும் வினாவிற்கு,
***" காட்டுவார் இன்மையால் கடிகாவினை***
***வாட்டினேன், என்னைக் கொல்ல வந்தவர்களை***
***வீட்டினேன், பின்னும் மென்மையினால் உன்தன்***
***மாட்டு வந்தது காணும் மதியினால்***
என்பது அனுமானின் விடை,

இராவணனை கண்ணுற்ற உடனேயே அனுமன் தன் திறனும் பகைத்திறனும் புரிந்து கொண்டதை,

***" கொல்லலாம் வலத்தனும் அல்லன் கொற்றமும்***
***சொல்லலாம் தரத்தனும் அல்லன்...... ஆற்றலை***
***வெல்லலாம் இராமனால், பிறகும் வெல்வரோ?***

***" என்னையும் வெலற்கு அரிது இவனுக்கு, ஈண்டு இவன்***
***தன்னையுங் வெலற்கு அரிது எனக்கு, தாக்கினால்***
***அன்னவே காலங்கள் கழியும், ஆதனால் துன்ன அருஞ்***
***செருத் தொழில் தொடங்கல் தூயதோ***

எனக் கம்பன் அனுமனின் சொற் செல்வத்தின் கூற்றைக் காட்டுவான்.

அடுத்து "இவ்வளவு வல்லமையுள்ள நீ ஏன் கட்டுப்பட்டாய்" என இராவணன் கேட்டான். "உன் மனைவியரையும் உன் காமக் கிழத்தியரையும் அவர்கள் தூங்கும்போது (ஆடைகுலைந்த நிலையில்) பார்த்து விட்டேன்; தற்செயலாக. அதற்குத் தண்டனை இது என்றான். ஆடை குலைந்த கற்புக்கரசியாகிய மாற்றான் மனைவியைக் கவர்ந்த உனக்கு என்ன தண்டனை

என்பது குறிப்புப் பொருள். எப்படி இருக்கிறது சொல்லின் செல்வம்.

சீதையைத் தேடிப் புறப்பட்ட வானர வீரர்கள் எல்லோரும் வெறுங்கையோடு திரும்பி விட்டார்கள். எல்லோரும் அனுமன் வரவை எதிர் நோக்கி இருக்கிறார்கள்.

அனுமன் அதோ வருகிறான். வந்து விட்டான். வந்தவன் இராமனை வணங்கவில்லை. வாய் திறக்கவில்லை. சீதை இருக்கும் தென்திசை நோக்கி வீழ்ந்து வணங்கினான். இந்த மௌன பாஷையை விடச் சொற்செல்வம் வேறுண்டோ? குறிப்பால், தான் சீதையைத் தெற்கே உள்ள இலங்கையிற் கண்டதைக் கூறிய அனுமன்,

***"விற்பெரும் தடந்தோள் வீர வீங்குநீர் இலங்கை வெற்பில் நற்பெருந் தவத்தளாய நங்கையைக் கண்டேன் அல் லேன்"***

அதாவது நான் சீதையைக் காணவில்லை என ஒரு போடு போட்டான். எல்லோரும் அசந்து போனார்கள். ஆனால் என்று தொடர்ந்தான்.

குடிப்பிறப்பு என்று சொல்லப்படுகின்ற ஒன்றும், இரும் பொறை என்பதொன்றும், கற்பு எனக் கருதப்படும் ஒன்றும் ஆகிய மூன்றும் ஒன்று சேர்ந்து களி நடம் புரியக் கண்டேன் என்றான்.

கண்டனன் கற்பினுக்கு அணியைக் கண்களால் எனக்கூறி சூடாமணி பெற்றதுவரை கூறிய அனுமன் தான் இலங்கையில் ஈட்டிய பெரு வெற்றியைக் கூறவில்லை. இதற்குத் கம்பன். "தான் தன் வென்றியை உரைப்ப வெள்கி" எனக் காரணம் காட்டினான். இந்த வெட்கத்தைத்தான் லஜ்ஜை என்பது. சொல்வன்மைக்கு இந்த லட்சையும் ஒரு தளமாகும். இது ஒருவனுக்குக் கல்வியினால் வருவதில்லை. குடிப்பிறப்பினால் வருவதென்பது வள்ளுவர் கருத்தாகும்.

அனுமன் கிட்கிந்தையில் இராமலக்குவரைக் கண்டவுடனேயே மட்டுக்கட்டி விட்டான். "அயல் மறைய நின்று இவர் யாவரோ" என நினைத்தான். அவனது நினைப்பைக் கம்பன் "அயல் மறைய நின்று கற்பினின் நினையும் எனக்கூறுகிறான். கற்பு என்னும் சொல், இங்கு புதுப்பொலிவு பெறுகிறது.

அவனது கற்பின் நினைவே அவர்களைச் சரியாகக் கணிக்கிறது. " பிரிந்தவர் மீண்டும் கூடுவது போன்ற ஓர் உணர்வு தோன்றுகிறதே. இயற்கையே இவர்களைக்கண்டு தொழுகின்றதே..... எனவே இவர்களே தருமம் ஆவார்? எனக் கற்பின் நினயும் அனுமானை "தன் பெரும் குணத்தால் தன்னைத்தான் அல்லது ஒப்பிலாதான்" எனக் கம்பன் போற்றுகிறான்.

இராமாயணத்தில் மிகச் சிறந்த இடமாகக் கருதுவது, சீதை கணையாழியைப் பெற்றுக் கொண்டு சூடாமணியைக் கொடுப்பது.

அனுமானாக வந்து இராவணன்தான் தன்னை ஏமாற்றுகிறானோ எனச் சந்தேகித்த சீதைக்கு நம்பிக்கை ஊட்டப் பல விவரங்களைத் தெரிவித்த அனுமன் இராமநாம மோதிரத்தைச் சீதைக்குக் காட்டினான். கொடுக்கவில்லை. அவள் கண்டாள் எடுத்துக் கொண்டாள். இந்த விநயம் அனுமனுக்கே உரிய பண்பாட்டைக்காட்டுகிறது.

இந்தக் காட்சியைக்கம்பன்
***"........... நெடிய கையால்***
***காட்டினன் ஓர் ஆழி; அது***
***வாள் நுதலி கண்டாள்"***

எனக்காட்டுவான். யார் கணையாழியை யார் கொடுப்பது? யாருக்குக் கொடுப்பது? கொடுப்போன் உயர்ந்தும் பெறுவேன் தாழ்ந்தும் போவதால் தன்னிடம் கணையாழி பெறுவதன் மூலம் சீதை தாழ்ந்து விடக் கூடாதே எனக் கருதியே அனுமன் கணையாளியைக் கொடுக்காது காட்டினான். என அனுமானின் பணிவுடமையைக் காட்டி அவனை மேலும் உயர்த்தி விடவேண்டும் என்பது கவிஞனின் கருத்தாகும்.

இந்த இடத்தின் அருமையை உணர்ந்த பெரியாழ்வார்

***" மைத்தகு மாமலர்க் குழலாய் வைதேகி விண்ணப்பம்"***
என அனுமன் சீதைக்கு விண்ணப்பம் செய்து
***" ஒத்தபுகழ் வானரக்கோன் உடனிருந்து நினைத் தேட அத்தகு சீர் அயோத்தியர் கோன் அடையாளம் இவை மொழிந்தான்"***
என இராமனின் அடையாளங்களை கூறி
***" இத்தகையன் அடையாளம் ஈதவன் கைமோதிரம்"***

எனக் காட்டினனேயன்றி கொடுத்தனன் இல்லை என்பதைக் குறிப்பால் உணர்த்துகிறார்.

பக்தன் தெய்வத்தின் முன் நிவேதனம் சமர்ப்பிப்பது போலத்தன் கைகளாலும் மோதிரத்தை உயர்த்தி காண்பிப்பதுபோன்ற உணர்வை இத்தெய்வீகப் புலவர்கள் காட்டுகின்றார்கள்.

மோதிரத்தை கொடுக்கும் வகையில் அனுமன் காட்டிய பௌவியம் இது வென்றால் சூடாமணியைச் சீதை கொடுக்க அனுமன் பெற்றுக்கொண்டது அனுமனின் பணிவுடைமையை மட்டுமன்றி பக்திப் பெருக்கையும் உணர்த்துவதாகும்.

தன் திருத்துகிலில் பொதிந்து வைத்திருந்த சூடாமணியைச் சீதை எடுத்தாள் அது

*"சேவகன் சேவடி என்னக் காந்துகின்றது*
*காட்டினள் மாருதி கண்டான் (அதனை)*

*நாடிவந்து என தின்னுயிர் நல்கினை நல்லோய்*
*கோடி என்று கொடுத்தனள்."*

அப்போது அனுமன் தொழுது வாங்கினான். பந்தனை செய்தனன். வந்தித்து, அழுது, மும்மை, வலங்கொடு இறைஞ்சினன்.

சீதை கொடுக்க தொழுது வாங்கிய அனுமன் முதலில் அதனைப் பத்திரப் படுத்தினான் பின்னர் வந்தித்து அழுதான்; ஏன் அழுதான்? யாருக்காக அழுதான். அவனுக்கென ஒரு கவலையுண்டோ? இறுதியாக மும்மை ( மூன்று முறை) வலங்கொடு. இறைஞ்சினான்.

***அசோகவனத்தில் அந்த நள்ளிரவில்***
***சீதை தெய்வமாகி விட்டாள்***

மோதிரத்தைப் பெற்று மகிழ்ச்சியுள் மூழ்கி சீதை

*" பாழிய பனைத்தோள் வீர,*
*துணையிலேன் பரிவுதீர்த்த*
*வாழிய வள்ளலே யான்*
*மறுவிலா மனத்தோன் எண்ணில்*
*ஊழியோர் பகலாய் ஓதும்*
*யாண்டு எலாம் உலகம் ஏழும்*
*ஏழும் வீழுற்ற ஞான்றும்*
*இன்றென இருத்தி என்றாள்*

என்னைக் கண்ட இன்றென, கடத்தற்கரிய கடலை வான் வழியாகத்தாண்டி, இலங்கையின் அகழியையும், மதிலையும் தாண்டி, அரக்கர்களின் கட்டுக்காவல்களையும் தாண்டி, வீரம் காட்டிய இன்றென, இவ்வரிய செயலை, செய்ததற்கு உன்னிடமுள்ள வீரதீரம் மாத்திரமல்ல, உன்னிடமுள்ள பரோபகார சிந்தை, தியாக உணர்வு ஆகிய எல்லாவற்றோடும் இன்றென துணையிலேனாய் உயிரை மாய்த்துக் கொள்ள இருந்த என் பரிவு தீர்த்த உன் வள்ளல் தன்மையைக் காட்டிய இன்றென இருத்தி எனது வாக்கு பலிக்கும். ( எப்படி) நான் மறுவிலா மனத்தேன். உலகம் ஏழும் ஏழும் வீழுற்றாலும் இன்றென இருத்தி, என வாழ்த்தினாள்.

கணையாழியைக் காட்டியதையும் சூடாமணியைக் கொடுத்ததையும் கம்பன் வெறும் நிகழ்ச்சிகளாகக் காட்டவில்லை. அனுமனின் சொற் செல்வத்தின் தளம் இப்பணிவுடைமை என்பதைச் சீதை வாயிலாக உலகுக்கு உணத்தியுள்ளான்.

இந்த இடத்தில் சீதைக்கும் ஓர் ஐயம் ஏற்படுகிறது. இந்த ஐய உணர்வையும் மடம் என்னும் பெண்மையைக்காட்ட ஒரு சந்தர்ப்பமாகவே புலவன் குறிப்பிடுகிறான் எனக் கொள்ள வேண்டும்.

*" ஐய நீ அளப்பரும் அளக்கர் நீந்தினை*
*எய்தியது எப்பரிசு? இயம்புவாய்."*

ஐயனே நீ எப்படி இந்தப் பெரிய கடலை நீந்திக்கடந்தாய் நீ? என்பது பொருள் பொதிந்த மொழி. இத்தனை சிறிய தோற்றமுடைய நீ, அதுவும் குரங்கு உருவமுடைய நீ, இத்தனை பெரிய கடலை எப்படி நீந்திக்கடந்தனை. அனுமன் கடலை நீந்தியா கடந்தான்.

அதற்கு அனுமன் கூறிய விடை, இந்திய தத்துவத்தின் மணிமுடியானது

*" கருங்கிடை உன் ஒரு துணைவன் தூயதாள்*
*ஒருங்குடை உணர்வினோர் ஓய்வுஇல் மாயையின்*
*பெருங்கடல் கடந்தனர் பெயரும் பெற்றிபோல்*
*கருங்கடல் கடந்தனன் காலினால் என்றான்."*

அளக்கரை நீந்தி எய்தியது? எப்பரிசு? என்பது வினா. நான் நீந்தவில்லை. கடந்தனன் காலினால் என்பது விடை. கால் என்பது காற்றையும் குறிக்கும் வானையும் குறிக்கும்.

உன் துணைவனின் தூயதாளைத் துணை கொண்டு மாயையின் பெருங்கடல் கடத்தல் போல அவன் காலினால் கருங்கடல் கடந்தனன் என்று குறிப்பும் பொருள் தோன்ற விடை இறுத்தான். அச் சொல்லின் செல்வன்

இதன் பின்னரும் சீதை தன் பேதைமைச் சின்மதியால்,

*" இத்துணை சிறியது ஓர் ஏண் இல் யாக்கையை*
*தத்தினை கடல் அது தவத்தின் ஆயதோ*
*சித்தியின் இயன்றதோ செப்புவாய்."*

என்று வினாவினாள்.

சீதையின் இந்த வினாவிற்கு அனுமன் விடை பகரவில்லை. கடல் தாவும் போதுதான் கொண்ட பேருருவைக் காட்டி நின்றான்.

அவன் தோள்கள் விட்டு உயர்ந்து நின்றன. ஆனால் அவன் கைகள் தொழுதபடி நின்றன.

*'எட்ட அரு நெடுமுகடு எய்தி நீளுமேல்*
*முட்டும் என்று உருவொடு வளைந்த மூர்த்தியான்.*

சீதையாகிய தெய்வத்தாயின் முன் கூப்பிய கரங்களோடு, குடிசையுள் நிற்பான் ஒருவன், கூரை முட்டும் என்று குனிந்து நிற்பது போல தலை சாய்ந்து நின்றான். எனக் கம்பன் அனுமனின் பணிவுடமையைக் காட்டினான்.

அனுமனை உள்ளபடி உணர்ந்தவர்களுள் இராமனுக்கு அடுத்தபடியாக முதியோனாகிய சாப்பவனைக் குறிப்பிடவேண்டும்.

கடலை கடக்க எல்லோரும் தயங்கிய நேரத்தில்,

*மேலை விரிஞ்சன் வீயினும் வியா மிகைநாளீர்*
*நூலை நயந்து நுண்ணி துணர்ந்தீர்*
*நுவல்தக்கீர்"*

நூற் பொருளை நுண்ணிதின் உணரும் உணர்வும் உணர்ந்ததை நுவலும் திறனும் என்பது அனுமனின் நாநலத்தைக் குறிப்பதாகும் எனவும்,

*நீதியில் நின்றீர் வாய்மை அமைந்தீர்*
*நினைவாலும்*
*மாதர் நலம் பேணாது வளர்ந்தீர் மறை எல்லாம்*
*ஓதி உணர்ந்தீர் ஊழி கடந்தீர்"*

எனவும் கூறியவை எல்லாம் உண்மை வெறும் புகழ்ச்சி இல்லை.

இராவணனையும் இலங்கை மாநகரையும் அனுமன் கலக்கிய கலக்கு

*" சுட்டது குரங்கு; எரிசூறை ஆடிட*
*கெட்டது கொடிநகர்: கிளையும் நண்பரும்*
*பட்டனர் ; பரிபவம் பரந்தது எங்கணும்*
*இட்டது இவ்வரியணை இருந்தது என் உடல்"*

என இராவணனை ஓலமிடவைத்தது. ஆனால் அனுமன் இந்த வீரச் செயலை என்றும் தன் வாயால் சொல்லவில்லை.

நாநலம் என்பது எல்லா நலன்களும் உள்ள ஒருவனிடமிருந்து புறப்படும் ஒரு நலமே.
அந்நலம் எல்லா நலங்களையும் விடச் சிறந்தது ஒரு நலமே.

*நாநலம் என்னும் நலன் உடைமை அந்நலன்*
*யாநலத்து உள்ள தூ உம் அன்று; - குறள்.*

இப்போது சொல்லுங்கள் இலங்கையைக் கூட வந்த குரங்கு ஆண்டால் என்ன?

*கரை செறி காண்டம் ஏழு, கதைகள் ஆயிரத்து எண்ணூறு,*
*பரவுறு சமரம் பத்து, படலம் நூற்றிருபத்தெட்டே;*
*உரைசெயும் விருத்தம் பன்னீராயிரத்து ஒருபத்தாறு;*
*வரம் மிகு கம்பன் சொன்ன வண்ணமும் தொண்ணூற்றாறே.*

*தராதலத்தின் உள்ள தமிழ்க் குற்றம் எல்லாம்*
*அராவும் அரம் ஆயிற்று அன்றே- இராவணன்மேல்*
*அம்பு நாட்டு ஆழ்வான் அடி பணியும் ஆதித்தன்*
*கம்ப நாட்டு ஆழ்வான் கவி.*

# தோழியர் இருவர்

சொக்கன்

மனிதன் அடைந்துள்ள பேறுகளிலே தலையாயது ' தக்க இன்ன தகாதன இன்ன' என்று பகுத்துணரும் அறிவேயாகும். விலங்குகள், பறவைகள், ஊர்வன நீர்வாழ்வன என்ற இன்னோரன்ன பிராணிகளுக்கு இந்த அறிவுப்பேறு இல்லை. உண்பதும் உறங்குவதும் பாலுணர்வினை நிறைவு செய்வதும் சிறிது காலம் தம் குட்டிகள், குஞ்சுகளிலே பரிவு காட்டி வளர்ப்பதுமே பிராணிகளின் இயல்பு. ஆனால் மனிதப்பிராணியோ தனது வாழ்வின் தொடக்கத்திலிருந்து முடிவுரை பலவித உறவுகளையும் தொடர்புகளையும் ஏற்படுத்தியவண்ணம் அவற்றால் விளையும் இன்ப துன்பங்களிலே நிறைவு கண்டு வருகிறது. இந்நிறைவே மனிதன் தனிபண்பு எனலாம். " மானிடம் வென்றதம்மா" என்ற கவிக்கூற்றும் இவ்வுண்மையையே உணர்த்து கின்றது.

மனித உறவுகளிலே மிக உயர்ந்தது காதல். ஏனெனில் பிறஉறவுகளிலே காணத்தகும் சமத்துவ மின்மை காதலுக்கு இல்லை. காதலில் ஈடுபடும் பெண்ணும் ஆணும் ஒத்த அன்பினராகும் பொழுதே அங்கு உண்மைக்காதல் உருக்கொள்ளும். இதுவே வாழ்வு முழுவதும் நீடித்து நிற்கும். சில அசாதாரண சந்தர்ப்பங்களிலே இது பல பிறவிகளிலும் தொடர்ந்தும் செல்ல வல்லதாகும். இராமனுக்கும் சீதைக்கும் இடையே நிலவிய காதல் அத்தகையது. இவ்வுண்மையை படிப்போர் உள்ளத்தை தொட்டுக்கனியவும் உருகவும் வைத்துப் பாடியதில் கம்பன் பெற்ற பெரு வெற்றி யாவரும் அறிந்ததே.

காதற் பிணைப்புக்கு அடுத்த பெரும் பிணைப்பு நண்பு மூலம் ஏற்படுவதாகும். மன்னர் மன்னனும் தெய்வ அம்சம் பொருந்தியவனுமாகிய இராமபிரான் தன்னிலும் பல படிகள் தாழ்ந்த குகனையும் சுக்கிரீவனையும் வீபிடணனையும் நண்பராய் ஏற்று; நண்பின் பெருமைக்கு இலக்கியமானான். இவ்வகையில் கம்பராமாயணம் காதற்காவியமாய் மட்டுமன்றி நட்புக் காவியமாகவும் நயக்கப்படுகிறது.

சீதையின் உலகம் இராமனுடையது போல விசாலமானதன்று. மிதிலையிலும், அயோத்தியிலும் தோழியரிடையிலும் வனவாசத்தின்போது இருடிபத்தினியரிடையிலும், இராவணாலே சிறைப்பட்டு அசோகவனத்தில் இருந்த காலத்தில் அரக்கியரிடையிலும், அவள் வாழ்க்கை கழிந்து விடுகிறது. ஆனால் கடலிலும் பெரிய கண்கள் படைத்த சீதை, தன் கண்களிலும் பெரிய உள்ளம் வாய்க்கப் பெற்றவள் ஆதலால் அங்கு நட்பென்னும் பெரும்பிணைப்பு ஏற்பட்டதில் வியப்பில்லை. அந்தப் பிணைப்பிலே பிறரைச் சிறைப்படுத்தியும் தானே சிறைப்பட்டும் அவள் விளங்கினாள். நண்பின் பெருமையையும் நம்மனோர்க்குப் புலப்படுத்தினாள்.

தமிழர் சமுதாயம் நட்பை உயிரெனப் போற்றி வந்தமை இலக்கியம் கண்ட உண்மையாகும். பைந்தமிழ்புலவர் பிசிராந்தையாரும் சோழமன்னன் கோப்பெருஞ்சோழனும் ஒருவர் பற்றி ஒருவர் கேள்வியுற்ற அளவில் நட்பை உள்ளங்களில் வளர்த்ததும், சோழன் வடக்கிருந்து மரணத்தைத் தழுவிய காலத்தில் அவனை நாடி வந்து அவனோடு பிசிராந்தையார் தாமும் உயிர் விட்டதும் நட்பின் சிகரத்துக்கு நல்ல எடுத்துக் காட்டுக்கள். சங்ககாலக் காதல் இலக்கியங்களிலே தலைவனுக்குப் பாங்கனும் தலைவிக்குத் தோழியும் கெழுதகை நட்பினராய், அவர்களுக்குக் கண்ணும் கவசமுமாய் நின்று நன்நெறி உய்த்தமையையும் நாம் அறிவோம். பழந்தமிழ் இலக்கிய மரபிலே ஊறித்திளைத்த கம்பன், தனது மரபுணர்வின் வெளிப்பாடுகளாகச் சீதைக்குத் தோழியர் இருவரை அமைத்து, அவர்கள் வாயிலாகச் சீதையின் உணர்வுகளுக்கு உருக் கொடுத்தான். கம்பராமாயணத்தில் இருவேறு சூழ்நிலைகளில் தோழியர் இருவர் அறிமுகமாகின்றனர். ஒருத்தி நீலமாலை; மற்றவள் திரிசடை. முன்னவள் மிதிலையில் கன்னியாயிருந்த சீதைக்குப் பன்னரும் அன்புப் பாங்கியாய் விளங்கியவள். பின்னவளோ, அசோகவனத்தில் பிரிவு துயரமே ஒருருவாய்

"மென்மருங்குல் போல் வேறுள அங்கமும் மெலிந்த" நிலையில் அல்லற்பட்டாற்றாது அழுத சீதைக்கு அன்னையிலும் பரிந்து ஆறுதல் பகர்ந்தவள். சீதையின் வாழ்வைப் பொறுத்த வரையில் இவ்விருவர்தம் நட்பும் இன்றியமையாததே.

இரு வேறு சூழ்நிலைகள் என்றேன். "மங்கலமணவாழ்வுக்கு உரிய நாயகன் என் நெஞ்சம் கவர்ந்தவன் தானோ அல்லனோ, வில்முறித்தவன் யாவன்" என்ற எதிர்பார்ப்பு நிலையில், நெஞ்சொடுங் கிச் சீதை இருக்கையில், அவளுக்கு நற்செய்தி பகர்வவளாய் அறிமுகமானவள் நீலமாலை. அசோகவனத்தில் தன் கணவன் தன்னை வந்து சிறை மீட்கமாட்டான் என்று முடிவு செய்து கொண்டு நெஞ்சுடைந்த நிலையிலே இருந்தவளுக்கு தான் கண்ட கனவினை எடுத்துரைத்து சுபசோபனம் நிகழப் போவதைச் சூசகமாகக் கூறி அறிமுகமானவள் திரிசடை. இவ்வகையிலே சூழ்நிலைகளில் வேறுபாடு உள்ளது உண்மையே. எனினும் இவற்றிடையே ஓர் ஒற்றுமைப்பாடும் உண்டு. இத்தோழியர் இருவரினதும் செய்திகளால் ஈற்றில் ஏற்படுவது சுபமுடிவுகளே. ஆக எதிர்பார்ப்பும் பதற்றமும் பரிதவிப்பும் நிறைந்த நெருக்கடிச் சூழ்நிலைகளை முற்றாகமாற்றித் தம் உயிர்த்தோழிக்கு அமைதியும் மகிழ்வும் அளித்த வகையில் இவ்விரு பாத்திரங்களும் நட்பின் உன்னத இலட்சிய வடிவங்களாகவே திகழ்கின்றன.

மிதிலையின் நிலா முற்றத்தில் சீதை தோழியர் புடைசூழ நிற்கிறாள். வீதி வழியே விசுவாமித்திர முனிவரை தொடர்ந்து வந்த இராமன் அவளைக் காண்கிறான். சீதையும் கைவளைத்திருத்துவாள் போன்று கடைக்கண்ணால் இராமனை நோக்குகின் றாள்.

***பருகிய நோக்கு எனும் பாசத்தால் பிணித்து***
***ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்***
***வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும்***
***இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினார்***

பால. மிதிலைக்காட்சி –37

என்று இவ்விருவரிடையேயும் புகுந்து, ஆடல்புரியத் தொடங்கிய காதலை அழகுற வருணிக்கின் றான் கம்பன்.

இதன்பின்பு இருவரையும் பொறுத்தவரையில் இருயுகங்கள் கழிகின்றன! அதாவது கண்டு களிந்த நாள். அந்த நாளின் கழிகாம இரவு, இராமன் வில்முரித்த மறுநாள் ஆகிய இருநாள்களே அந்த இருயுகங்களு மாகும்.

இந்த யுகங்களுக்கிடையே சீதைக்கு வேறொரு நெருக்கடியும் உண்டாகின்றது. " விண்ணுள்ளே எழுந்த மேகமானது பூணூலாகிய மின்னலைப் பூண்டு மண்ணிலே உலாப்போந்தது போலே வந்த இளைஞன் யாவனோ? அவன் என் நெஞ்சுள்ளேதான் வீற்றிருக் கிறான். ஆயினும் அவன் யார் என்று தெரியவில்லையே. என் கண்ணுள்ளே அமர்ந்தபோதும் என் கண்ணாள னைக் காணல் கூட வில்லையே!" என்ற மனப்போராட் டமே அவளுக்கு ஏற்பட்ட நெருக்கடி. வில்லை முறிப்பானோ மாட்டானோ? என்ற என்ற அச்சமும் உள்ளத்தில் ஊசலாடியிருக்கலாம். ஆக எல்லா வகையிலும் எதிர் பார்ப்பின் உக்கிரக் கொடுங்கோலாட் சிக்கு உட்பட்டு அலக்கண் உறும் சீதையின் நிலை, கம்பனாலே பலபட வருணிக்கப்படுகிறது.

நீலமாலைக்குச் சீதையின் மனநிலை முற்ற முழுக்கத் தெரிந்தே இருந்தது. உண்மையில் இராமன் வில்முறித்த நிகழ்வை ஒரு கணக் கூறினுள் கண்ட அவளுக்குச் சீதையிலும் பன்மடங்கு பரவசமும் மகிழ்ச்சியும் உண்டாகிவிடுகின்றன. உண்மை நட்புக்கு இலக்கணம் தன் தோழிக்கு ஏற்படும் மகிழ்ச்சியிலே தானும் இரண்டறக் கலந்து விடுதல் தானே? இந்த அத்துவிதநிலை நீலமாலை சீதையை நோக்கி ஓடிவரும் மாதிரியிலிருந்து நன்கு புலனாகின்றது.

நீலமாலையை அவ்வேளையிலே கண்டவர்க ளுக்கு ஒன்று இவளுக்குப் பைத்தியம் அல்லது இவள் நாற்குணமும் துறந்திட்ட நாணிலாள் என்றே சொல்லத் தோன்றியிருக்கும். அவள் ஓடி வந்த ஓட்டத்தில், கழுத்து மாலைகளும் காதுக்குழைகளும் பலமாக ஆடுகின்றன. அவை கணத்துக்கு கணம் வர்ணஜாலம் காட்டும் வானவில்லை நினைவூட்டுகின்றன. மலரணிந்த கூந்தலும் அவிழ்ந்து தொங்குகின்றது. கூந்தல் மட்டுமா? அரையில் கட்டிய ஆடையும் அவிழ்ந்து விழுந்து விடுவேன்' என்று பயமுறுத்துகின்றது! ஓட்டவேகத்தில் துவளும் மின்னலாய்த் தோற்றுகின்றாள், 'நெடுந்தடங்கிடந்த கண்' நீலமாலை!

***வடங்களும் குழைகளும் வானவில்லிடத்***
***தொடர்ந்த பூங் கலைகளும் குழலும் சோர்தர***
***நுடங்கிய மின்என நொய்தின் எய்தினாள்***
***நெடுந்தடங் கிடந்தகண் நீலமாலையே***

பால. கார்முக . ப. 56

நீலமாலையின் மகிழ்ச்சி இவ்வளவோடு நிற்கவில்லை. சீதை, தன்தலைவி என்பது கூட அவளுக்கு மறந்து போகின்றது. சீதையின் முன் வருகின்ற பொழுதெல்லாம் அவளின் அடிகளின் வீழ்ந்து வணங்கும் மரியாதையைக்கூட அவள் கைந்நெகிழ்த்து

விடுகின்றாள். கைகட்டி, வாய் புதைத்து மெல்லப்பேசும் இயல்பினள், ஆரவார ஓசை எழுப்புகிறாளே! ஆமாம்! இது இவளின் அளவு கடந்த உவகையின் வெளிப்பாடுதான். போதும்! இனியாவது செய்தியைச் சொல்லலாம் அல்லவா? பதிலாக ஆடிப்பாடுகின்றாள்.

இத்தனையையும் சீதை தன் தோழிக்காகப் பொறுத்துக்கொண்டு, நீலமாலையை நோக்கி, ' சுந்தரி, நடந்த செய்தியைச் சொல்'' என்று பரிவோடு வினாவுவதுதான் வியப்பு. அந்த ஒரே வினா விண்ணில் பறந்தவளை மண்ணுக்குக் கொணர்ந்ததுதான் அதனிலும் வியப்பு. நீலமாலை படிமானத்துக்கு வந்து சீதையைத் தொழுது, நிகழ்ந்தவை கூறுகின்றாள். "நாற்படைகளாகிய மாபெரும் கடலுக்கு உரிமையாளன், கல்வியிற் சிறந்தவன், தயரதன் என்னும் ஒப்பற்ற பெயருக்கு உரியவன், மேகம் போல் வழங்கும் பெருங்கையன் என்று தயரதனின் புகழ்ப்புராணம் நீலமாலையின் வாயில் அரங்கேறுகின்றது.

சீதைக்கு எப்படி இருந்திருக்கும்? தயரதன் யாராய் இருந்ததால் என்ன? அவன் பெருமைகள் பற்றி அறிவதா அவளுக்கு முக்கியம்? ஆனால் நீலமாலை குறும்புக்காரி. அவள் குலமுறை கிளத்தி நீட்டி முழக்குவதெல்லாம் சீதையின் ஆவலை தூண்டி வேடிக்கை பார்க்கத்தானே? நட்பின் உரிமைப்பாடான குறும்புதான் அது!

ஆனால் இதை இன்னும் தொடரலாகாது. சீதையின் ஆவல்மீறி அவள் அழுதே விடுவாள் போல இருக்கிறது! இனி விடயத்துக்கு வருவோம். என்று இரங்கி இறங்கி வருகின்றாள் நீலமாலை. அடுத்து இராமனின் மான்மியங்கள் அவள் வாயில் மடைதிறந்து பெருகுகின்றன."மையலை விளைவிக்கும் மன்மதனிலும் வடிவாற் சிறந்தோன். மராமரத்திலும் வளர்ந்து பரந்த தோளான் ஆதிசேடனிலே துயில் கொள்ளும் திருமால் தானோ என்று ஐயம் கொள்ளவைக்கும் அழகன், அவன் பெயர் இராமன். தன் தம்பியோடும் வணங்குதற் கரிய குருவாகிய விசுவாமித்திரரோடும் வந்துள்ளான். தோள்வளை அணிந்த வீரத்திருவாளனும் வல்லமை படைத்தோனும் புனிதனுமாகிய அவன், வில்லுக்கு நாண் ஏற்றிய அந்தக் கணத்தில் உலகமே நடுங்கியது. ஆனால் அப்பெருத்தகையோ ஒரு நொடிப்பொழுதில், முன் தான் பயின்ற கருவி இது என்று சொல்லும் வண்ணம் வில்லினை லாவகமாகத் தன் தோளிடத்தேவலிகொண்டு வளைத்திட்டான். இற்றது வில்! இமயவர் ஏத்தினர், பூமழை பொழிந்தது. வேத்தவையேவில்லோசை கேட்டு நடுங்கிற்று''

***மாத்திரை அளவில் தாள் மடுத்து முன்பயில்***
***சூத்திரம் இதுவெனத் தோளின் வாங்கினான்***
***ஏத்தினர் இமையவர் இழிந்த பூமழை***
***வேத்தவை நடுங்குற முறிந்து வீழ்ந்ததே.***

பால. கார்முக. ப.61

இவ்வாறு, சீதையின் நெஞ்சத்து நிலை கொண்ட கொண்டல் நிறத்து கோமகனே வில்முறித்த செய்தியையும் அதனோடு அவன் குலம், நலம் யாவையும் கூறிச் சீதையைக் குளிர்வித்த வகையில் நீலமாலை நல்ல நட்பிற்கு உதாரணமாய் விளங்கினாள். இதனோடு அவளது மகிழ்ச்சியும், கூந்தலும் ஆடையும் அவிழ்ந்த கோலமும் சீதையின் மனஎழுச்சிக்கும் விரகதாபத்திற் கும் குறியீடுகள் போன்று கம்பனாலே புலப்படுத்தப் பட்டன என்றும் கொள்ளலாம் போலும்.

அடுத்து, வனவாசத்தின்போது இராவணனின் மனவாசத்திற்கும் உரியவளாகி, அவனால் கவரப்பட்டு, கொடுமனமும் கொலையுணர்வும் வாய்ந்த அரக்கி யரிடையே அசோகவனத்திலே சிறைப்பட்டிருந்தாள் சீதாப்பிராட்டி. சுந்தரகாண்டத்தின் சுந்தரபடலமாகிய காட்சிப்படலத்தில் கம்பன், சிறையிருந்த செல்வியின் பிரிவுச் சோகத்தைத் தனது கவிநலம் முழுமையும் நிறைந்து பெருகும் வண்ணம் அமைத்துக் காட்டு கின்றான் எனலாம். கற்பாறைகளாகிய அரக்கியர் கூட்டத்தால் நெருக்குண்டு, வான் துளிநாடும் மருந்துச் செடியாய்க் கருகிச் செத்த கோலத்தில் சீதை காட்சி தருகின்றாள். ' விழுதல், விம்முதல், மெய்யுற வெதும்புதல் , வெருவல், எழுதல், ஏங்குதல், இரங்குதல், இராமனை எண்ணித் தொழுதல், சோருதல், துளங்குதல், துயர் உழந்து உயிர்த்தல், அழுதல் அன்றி அயலொன்றும் செய்குவதறியா அவள்' பிரிவெனும் துயர் உருவு கொண்டால் அன்ன பிணியள் கண்ணீரில் கழுவுண்டும் நெடு மூச்சிற் காய்ந்தும் ஒருநிலைப்படாத ஒரே துகில் தரித்து, வெயிலில் வைத்த விளக்காய் ஒளிகுன்றி, மாசுண்டமணியாய் உடலில் அழுக்கேறி அண்ணலோடு தான் கழித்த ஆனந்த நாட்களையும் அவனது பெருமைகளையும், அவன் வரா விடில் தன் நிலை என்ன, என்ற அவல எண்ணங்களையும் நினைவிலே தேக்கிச் சுமந்தவண்ணம், இருந்த நிலமும் செல்லரித்திட இருக்கும் அவளுக்குப் பாலைப் பசுஞ்சோலையாய் ஆறுதல் நிழல் அளிக்கின்றாள் திரிசடை என்ற அன்புச்செல்வி,

திரிசடை விபீடணனின் புதல்வி; தந்தையைப் போல மகள் என்பதற்குத் தக்க எடுத்து காட்டு. பெரியதந்தையாகிய இராவணனின் செயலிலே அளவு கடந்த வெறுப்பும் தருமத்தில் எல்லை மீறிய விருப்பும் உடையவள் திரிசடை. கம்பன் இந்த நல்லாளை அறிமுகம் செய்யும் வகை இது.

ஆயிடைத் திரிசடை என்னும் அன்பினால் தாயினும் இனியவள்.........
இராமனுக்கு துணைவனாகிய குகன் ' தாயினும் நல்லான்' திரிசடையும் சீதையைப் பொறுத்தவரையில் ' தாயினும் இனியவள் தான்' சந்தேகமில்லை

நீலமாலை சீதைக்குத் தோழி; இளம்பருவத்துக் கனவுகளை உருக்கொடுக்க உதவிய இனிய தோழி. அவளின் துடிக்கும் இளமைப்பருவம் காட்டாற்றுவெள்ள மாய்ப் பாய்தோடுவதாகக் கம்பன் காட்டுவது பொருத்தமே. ஆனால் திரிசடையோ நீலமாலைக்கு நேர்மாறு. வயதாலும் தகுதியாலும் பொறுமையாலும் கூடிய திரிசடையின் பேச்சிலும் செயலிலும் கம்பீரம் ஆழமும் நிறைந்திருப்பதில் வியப்பில்லை. திரிசடை இன்சொலில் திருந்தினாள் 'என அறிமுகம் செய்யும் கம்பன், தனது கூற்றை முற்றாக நிரூபிக்கும் வகையிலேயே அவள் சீதைக்குக் கூறும் நல்லுரைகளை அமைத்துக் கொண்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

அரக்கியர் கண் இமைக்காது கருத்துடன் சீதைக்குத் காவல் இருந்தும், இரவு வந்தவுடன், துயிலெனும் கள்ளருந்தி மயங்கிக் கிடந்தமை தோழியர் இருவரையும் சுதந்திரமாக உரையாடுவதற்றுகு வாய்ப்பளிக்கின்றது.

***சீதை:-*** தூயவளே கேட்பாயாக. நீயே என் இனிய துணைவி. துடி இடையாய், எனது இடக்கண்ணும் இடப்புருவமும் துடிக்கின்றன. இதனால் எனக்கு நன்மை விரைகின்றதோ? அல்லது முற்பிறப்புத் தீவினைதான் மூண்டு வருகிறதோ? அறியேன். விசுவாமித்திர முனிவரோடு மிதிலைக்கு என் முதல்வர் வந்த காலத்தில் இடப்புருவம், இடத்தோள், இடக்கண் என்பன இனியவாய்த் துடித்தன. இப்பொழுதும் அதுபோலவே துடிக்கின்றன. நான் மறந்ததொன்றையும் சொல்லி விடுகிறேன். என் உயிருக்கு உயிரானவரும் தருமத்தை உலகிற்கு வழங்கும் வள்ளலுமான தலைவர் பார் துறந்து காடடைந்த காலத்தில் என் வலத்தோளும், வலக்கண்ணும் புருவங்களும் துடித்தன. பயன்? நஞ்சையொத்த கொடிய இராவணன் கபடச்செயல் புரிய எமது பர்ணசாலை நோக்கி வந்தானே? அப்பொழுது இந்த தீய சகுனத்துடிப்பு நிகழ்ந்தது. எனக்கு நேர உள்ளது யாது?
சொல்.

***திரிசடை:-*** ஆஹா! நன்று, நன்று! சுபசோபனமேயா கும். நீ உன் கணவரை அடைதல் உறுதி. மேலும் கேள். மின்னல் போலும் இடையாளே, உனது காய்ந்த உடலில் பசுமை ஏறியுள்ளது. பொன்னிறம் உடையதோர் வண்டு உனது காதிலே வந்து இன்னிசை பாடி மறைந்ததைக் கண்டேன். இதன் பொருள், உன் உயிர்த் தலைவர் தம் தூதுவன் வரவுள்ளான் என்பதே. இனி தீயவர்க்குத் தீமைவிளையப் போவது திண்ணம்.

நீ நித்திரை கொள்வதில்லை. அதனாலே கனவும் தோன்றுவதில்லை. கூர் விழியாளே, நான் விரிவான கனவு ஒன்று கண்டேன். அந்த கனவு நிகழ்ச்சிகள் பழுதற்றனவாய் உள்ளன. சூரியனைப் பார்க்கிலும் ஒளிநிறைந்த உண்மைகள் அவை. சொல்கிறேன். கேள்.

பெருமை பொருந்திய இராவணன் தனது பொன்னிற மயிர்களிலே எண்ணெய் பூசியவண்ணம் செந்நிற ஆடை தரித்தவனாய், வலிய கழுதைகள் பூட்டிய தேரில் தென் திசை நோக்கிச் செல்கிறான். அவன் மக்களும் சுற்றமும் மற்றையோரும் அவனைத் தொடர்ந்து செல்கின்றனர். திரும்பி வருவார் ஒருவரும் இல்லை. இராவணன் வளர்த்து வரும் யாகாக்கினிகளும் அணைந்து போகின்றன. யாககுண்டங்களில் செந்நிறக் கறையான்கள் புற்றெடுக்கின்றன. வானத்தில் தோன்றும் இடியேற்றினால் தீபங்கள் ஒளிகாலும் மாளிகைச் சுவர்கள் பிளந்து போகின்றன. பெண் யானைகள் மதங் கொள்வதும், பேரிகைகள் முழக்குவார் இன்றியே முழங்குவதும், வானிலே மேகக்கூட்டம் திரளாமலே வெடிப்பட இடி முழங்குவதும் அதனால் விண் மீன்கள் உதிர்வதும் நான் தொடர்ந்து கண்ட காட்சிகள். இன்னும் கேள்.

இரவும் பகலாக ஒளிர்கிறது. இயக்க இளைஞர்களின் தோள்களை அணிசெய்யும் கற்பகப் பூமாலைகளும் புலால் நாறுகின்றன. இலங்கா புரியும் சூழ்ந்துள்ள மதில்களும் சுழல்கின்றன. எல்லாத்திசை களிலும் தீப்பற்றி எரிகின்றது. மாடமாளிகைகள் மீது அமைந்த பூரணகும்பங்கள் வாய் விரிந்து உடைந்து பிளக்கின்றன. அழகு பெற அமைத்த தோரணங்கள் (அலங்கார வளைவுகள்) முரிகின்றன அவற்றோடு வலியயானைகளின் தந்தங்கள் ஒடிகின்றன. வேத விற்பன்னரான அந்தணர் வைத்த நிறைகுடத்து நீரெல்லாம் கள்ளைப்போலப் பொங்கி வழிகின்றன.

சந்திரனைப் பிளந்து கொண்டு விண்மீன்கள் தோன்றும் மேகங்களில் இருந்து பொழியும் மழைத்துளிக்குப் பதிலாக குருதியே பொழிந்திடும். கதை, சக்கரம், வாள், முதலியன கடல் போலும் ஓசை எழுப்பித் தம்மோடு தாம் போர் புரியும். மங்கையர் தம் மங்கல நாண்கள் அறுப்பாரின்றி தாமாகவே அறுந்து வீழும். இன்னும் கேள்

இராவணன் பட்டத்தரசி மண்டோதரி. அவள் இயக்கர்தம் தச்சனனாகிய மயனின் மகள். அவளின் கூந்தல் அவிழ்ந்து விழ அக்கூந்தலிலே தீயானது பரவி எரிகின்றது. இந்தக் துன்பம் இவளுக்கு ஏற்பட காரணம் உண்டு.

சற்று முன்பு வேறொரு கனவும் தோன்றியது. வலிய சிங்கங்கள் இரண்டு மலை ஒன்றின் மீது புலிகள் சூழவந்து தோன்றுகின்றன. அந்த வனம் யானைகள் நிறைந்ததாகும். அந்த யானைகள் இந்த சிங்கங்களாலும் புலிகளாலும் வளைக்கப்பட்டு விடுகின்றன. போர்! பயன்? யானைகளின் பிணக்குவியல் எங்கும் நிறைந்து கிடக்கின்றது. அந்த வனத்திலிருந்து மயில் ஒன்று தனது நகரத்தை அடைவதற்கு பறந்து செல்கின்றது.

இதனைத் தொடர்ந்து, ஆயிரம் ஒளிவிளக்குகளின் ஒளி ஒன்றாய் பொருந்தும் தீபம் ஒன்றினை ஏந்திய வண்ணம், சிவந்த நிறமுடைய ஒருத்தி இராவணனது அரண்மனையிலிருந்து வெளிப்போந்து விபீடணனின் அரண்மனையினுள்ளே புகுந்து விடுகிறாள். மென்மையான சொல்லுடையாய், நான் இதனைக் கண்டு கொண்டிருந்த வேளையில் நீ என்னைத் துயில் எழுப்பி விட்டாய்.

இவ்வளவு விபரமாக நடக்கப் போகின்றவற்றைக் கனவில் வைத்து திரிசடை கூறுகிறாள். இந்த இடத்திலே கம்பனின் குறும்பு மூளை, உளவியல் சார்ந்த ஒரு பண்பினைச் சீதையில் ஏற்றி அவள் வாயிலாகப் பின்வரும் கூற்றை உரைக்க வைப்பது நயம்மிக்கது.

***பொன்மனை புக்கஅப் பொருவில் போதினில்***
***என்னைநீ உணர்த்தினை முடிந்தது இல்என***
***" அன்னையே! அதன்குறை காண்" என்று ஆயிழை***
***" இன்னமும் துயில்கென" இருகை கூப்பினாள்***

சுந்தர காட்சி, ப. 53

கனவு நினைத்து வருவதன்று. விட்ட இடத்திலிருந்து தொடர்வதற்கு அது காவியமோ, இக்காலத்தவர் எழுதும் விறுவிறுப்பு நாவலோ அன்று, கல்வியிற் பெரிய கம்பன் இதனை அறியானா?

சீதை எவ்வளவு ஆவலோடு திரிசடை கண்ட கனவைக் கேட்டாள் என்பதையும் அவளின் பேதை மனம் மேலும் மேலும் நிகழப்போவதை அறிவதில் எத்துணை பேரவாக் கொண்டிருந்தது என்பதையும் அவளின் "அதன் குறைகாண், இன்னமும் துயில்" என்ற கூற்றுக்களால் கம்பன் அழகுறப் புலப்படுத்தியுள்ளான் என்பதே பொருந்தும். மேற்றிசைத் திறனாய்வாளர் கூறும் சோக நகைச்சுவை என்பதற்கு இக்கூற்றுக்கள் சிறந்த எடுத்துக்காட்டுக்கள்.

இதனோடு திரிசடை–சீதை உரையாடல் முடிந்து அடுத்த நிகழ்ச்சி ஆரம்பமாகிறது.

நட்புக்கு வேண்டிய நயவுரைகளும், தாய்மையுணர்வும் ஒருசேர அமைந்த திரிசடையோ சீதையின் நெஞ்சிலே ஆபத்பாந்தவியாக நின்று விடுவதோடு, அழியாத பாத்திரமாகக் கம்பராமாயணத்திலும் சுவைஞராகிய எங்கள் உள்ளங்களிலும் நிலைத்து வாழ்கிறாள்.

*வாழ்வு ஆர்தரு வெண்ணெய் நல்லூர்ச் சடையப்பன் வாழ்த்துப் பெற,*
*தாழ்வார் உயர, புலவோர் அகஇருள் தான் அகல,*
*போழ் வார் கதிரின் உதித்த தெய்வப் புலமைக் கம்ப நாட்டு*
*ஆழ்வார் பதத்தைச் சிந்திப்பவர்க்கு யாதும் அரியது அன்றே.*

*அம்பு அரா அணி சடை அரன் அயன் முதல்*
*உம்பரால், முனிவரால், யோகரால், உயர்*
*இம்பரால், பிணிக்க அரும் இராம வேழம் சேர்*
*கம்பர் ஆம் புலவரைக் கருத்து இருத்துவாம்.*

# பண்டிதமணியும் கம்பராமாயணமும்

'பல்கலைப்புலவர்' க.சி. குலரத்தினம்

ஆதிகாவியம் எனவும் வழங்கும் இராமாயணம் இந்தியா, இலங்கை ஆகிய இருநாடுகளின் கதை எனக் கருதவும் உள்ளது. அஃது இதிகாசங்களில் ஒன்றாகவும் உள்ளது. ஆதி கவியாய வான்மீகியார் செய்த காவியத் தலைவனாய இராமன் மீது கொண்ட ஆசை காரணமாகக் கல்வியிற் சிறந்த கம்ப ர் அதைத் தமிழ் செய்துள்ளார்.

கம்பர் காவியஞ் செய்த காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டென்றும், பதினொராம் நூற்றாண்டென்றும், பத்தாம் நூற்றாண்டென்றும், ஒன்பதாம் நூற்றாண்டென்றும் பலர் பலவிதமாக ஆராய்ந்துள்ளார்கள். பண்டைக்கல்வெட்டு ஒன்று 1376 இல் "இராமாயணம் கம்பன்" எனக் கூறுகிறது. பெரியவாச்சான்பிள்ளை 1128 ஆம் ஆண்டளவில் "மஞ்சுலாம் சோலை" என்னும் பாடலுக்கு 'ஈக்கள் வண்டொடு' என்னும் கம்பரின் பாடலை மேற்கோள் காட்டுவர். வீரசோழியம் என்னும் இலக்கணம் 1200 ஆம் ஆண்டளவில் " கம்பனாரிடைப் பெருமை" எனக் கூறுகிறது. இன்னும் 1162–1179 ஆண்டுக்காலத்தில் அரசு வீற்றிருந்த முதலாம் பிரதாபருத்திரன் காலத்தில் கம்பர் வாழ்ந்தவர் என்றும் கூறுவர். தமிழ் கூறும் நல்லுலகங்களுள் ஒன்றாயதுமான ஈழத் திருநாட்டிலே இராமாயணம் வடமொழியிலும், தமிழிலும் பரவலாகப் படித்தவர்களிடையே வழங்கி வந்த காவியமொழியில் காளிதாசன் செய்த இரகுவம்சத்தைத் தமிழில் தந்த யாழ்ப்பாணத் தரசரின் மருகனும் செந்தமிழ் புலவருமாய அரசசேரி என்பார் 1478– 1519 ஆண்டு காலத்தில் தம் நூல் செய்தவர். அவர் தமது நூலில் கம்பருக்குப் பெருமை கூறு மளவில் அவர் காலத்திலேயே கம்பராமாயணம் இங்கே வழங்கி வந்ததற்குச் சான்று பகருவார்.

*" பொற்றா மரையாள் ஒழியாது பொலியுமார்ப*
*எற்றாங்கு மேவி ரகுராம சரிதை யாவும்*
*கற்றார் கவியிற் பெரிதாந் தமிழ்க் கம்பநாடன்*
*உற்றாங் குரைத்தான் உரையாதன ஓதுகிற்பாம் "*

இங்ஙனமே கம்பரின் புரவலரும் நண்பருமான சடையப்பவள்ளல் ஒரு பஞ்ச காலத்தில் யாழ்ப்பாணத்து அரசனுக்குப் போதியளவு நெல்லும் பிறவும் தேவையறிந்து கொடுத்துதவிய கொடைத்திறனைப் புகழ்ந்து பாடியதாக ஒரு பாடல் வழங்குகிறது.

*" கருது செம்பொனின் அம்பலத்திலோர்*
*கடவுள் நின்று நடிக்குமே*
*காவிரித்திரு நதியிலே யொரு*
*கருணை மாமுகில் துயிலுமே*
*தருவுயர்ந்திடு புதுவையம் பதி*
*தங்கு மன்னிய சேகரன்*
*சங்கரன் தரு சடையன் என்றொரு*
*தரும தேவதை வாழ்கவே "*

ஈழ நாட்டுப் புலவர்கள் பாரம் பரியமான இராமாயணம், பாரதம், கந்தபுராணம் ஆகிய நூல்களைப் படித்தும் பிரசங்கம் செய்தும் வந்துள்ளார்கள். இவை முதியவர்கள் கல்வி முறையெனப் பெருமளவில் பரவி வந்துள்ளன.

இராமாயணத்தைப் பொறுத்தமட்டில் அது பலவிடங்களிற் படிக்கப் பெற்று வந்துள்ளது. பழைய புலவர்கள் கம்பராமாயணத்தை நாடகமாக்கியும் நடித்துள்ளார்கள். இராம நாடகம் பழைய நாடகங்களுள் ஒன்று. இதனைச் செய்தவர் மானிப்பாயைச் சேர்ந்த அருணாசலம் சுவாமிநாதர் என்பவராவார். இவர் காலம் 1765–1824 என்பர். இருவடைய மைந்தர் ஏலேலசிங்க முதலியார். இலங்கைச் சட்டசபை அங்கத்தவர்களுள் முன்னோடிகளுள் ஒருவர். சுவாமிநாதர் என்பார் தாமியற்றிய இராமநாடகத்திலே இராமாயணக் கதையை ஒரு தனிப்பாடலில் சுவை குறையாமல் பாடியுமுள்ளார். சுவாமிநாதரின் இராமாயணப் புலமை நாடறிந்த தாயிருக்கவே இருபாலைச் சேனாதிராய முதலியார் இவரிடம் சென்று கம்பராமாயணம் பாடங்கேட்டு வந்துள்ளார். சேனாதிராய முதலியார் ஆறுமுகநாவலர்

அவர்களை உருவாக்கியவர்களுள் ஒருவர். நாவலர் அவர்களின் இராமாயணப் புலமை பலரறிய வெளிவரவில்லை. ஆனால் செந்தமிழ்ப் பத்திராதிபர் திரு நாராயண ஐயங்கார் அவர்கள், நாவலர் அவர்கள் இராமாயணத்தைப் பதித்திருந்தாலோ என்று வெகுவாக ஆசைப்பட்டவர்.

நாவலர் அவர்களின் வழிவந்த வித்துவ சிரோமணி பொன்னம்பலபிள்ளை அவர்களும், சுன்னாகம் குமாரசுவாமிப்புலவர் அவர்களும், புன்னாலைக்கட்டுவன் வித்துவான் கணேசையர் அவர்களும், இராமாயணம் வல்லவர்கள். இன்னும் திருகோணமலை கனகசுந்தரம்பிள்ளை அவர்களும் இராமாயணத்தில் திறமை வாய்ந்தவர்கள். வித்துவ சிரோமணி பொன்னம்பலபிள்ளை அவர்களின் இரசனைக் குறிப்புக்கள் அவரின் இலக்கிய வட்டத்தாரிடம் இருந்து பலருக்குப் பெருவிருந்தளித்து வந்தன. அவை ஒரு காலத்தில் அவர்களின் ஏகபோக உரிமையாயும் இருந்தன.

ஒரு சமயம் சுன்னாகம் குமாரசுவாமிப்புலவர் அவர்களும் திருகோணமலை கனகசுந்தரம் பிள்ளை அவர்களும் கூட்டாகச் சேர்ந்து கம்பராமாயணம் பாலகாண்டப் பகுதிக்குக் குறிப்புரையும் சேர்த்து அதனை அருமையாக 1918 ஆம் ஆண்டில் இராமாவதாரப் பாலகாண்டம் என அச்சிட்டனர். புலவர் அவர்களும் பிள்ளை அவர்களும் கங்கையும் யமுனையும் போலக் கூடிய வேளையில் அவர்தம் புலமையும் பல்கலைக் கழகப்பன்முகவறிவும் பொங்கித் ததும்பிப் பிரவாகித்த வாறு இராமாயணம் வெளிவந்தது.

இந்தப்பதிப்பின் முகவுரையில் இராமாயணத்தை ஈழநாட்டவர் எங்ஙனம் கருதி வந்தார்கள் என்பதும் வெளிவந்தது. " இந்த இராமாயணம் பண்டைக் காலந் தொட்டுச் சொற்சுவை பொருட்சுவை, கவிச்சுவை முதலியன உணர்தற்கேற்ற கல்விவன்மையும் நல்லுணர்வுமுடைய புலவர்களாற் புகழ்ந்து பாராட்டிப் படிக்கப்பட்டு வருகின்றது".

இங்ஙனமாகப் பண்டிதமணி அவர்கள் பத்து வயதுப் பாலப்பருவந் தொட்டுப் பதினெட்டு வயது இளமைப் பருவம் வரை மருதநில, முல்லைநில வாழ்வு வாழ்ந்து இடையிடையே தென்மராட்சியைச் சேர்ந்த வித்துவான்களிடம் செவிவாயாகப் பாரதம் இராமாயணம் கேட்டு வந்தபின், நாவலர் காவிய பாடசாலையில் ஒருமுகமாகக் குருகுலக்கல்வி பயிலச் சென்றிருந்தார். அவ்வேளையில் இவருக்கு அங்கே குமாரசுவாமிப்புலவர் பாடஞ்சொன்னபோது இராமாயணமும் அதன் சுவையும் பெரு விருந்தாயிருந்தன.

கம்பரை விட வேறுயார் விடயங்களைச் சொல்ல வல்லவர் எனக் கருதுமளவில் பண்டிதமணி அவர்கள் கம்பர் மீது பேரபிமானமும் சீதை மீது பெருங்காதலும் கொண்டார். தாம் படித்த நூல்களிலே இராமனைப் பற்றியும் சீதையைப்பற்றியும் வரும் பாடல்களையெல்லாம் பாடமாக்கித் தம் இராமாயண விமர்சனத்துக்கு வாய்ப்பாகக் கையாண்டு வந்தார். சின்னத்தம்பிப் புலவரிடத்துத் தீராத தாகங் கொண்ட பண்டிதமணி அவர்கள், கரவை வேலன் கோவையில் வரும் " பூ வென்ற மாவிலங்கேசனை நாளைக்குப் போர்புரிய வாவென்ற வீரன்" என்னும் தொடரை நாவினிக்கப் பொச்சடித்துக் கூறுதல் அவர் வழக்கம். சீதை சீதை என்று அவர் சொல்லும்போது, அவள் இராமனிடம் " நின் பிரிவினும் பார்க்கக் காட்டின் சூடு பெரிதாமோ" என்று கேட்டமை உத்தமமான பெண்களின் தன்மையாகும் எனப் புகழ்வர், போற்றுவர்.

மிதிலைக் காட்சியில் அவர் தம்மை மறந்து போவது வழக்கம். விசுவாமித்திரமுனிவரின் பின் இராமரும், அவருக்குப் பின் இலட்சுமணனும் சென்றார்களாக, அங்கே மாடத்தில் சீதை நின்றாளாக, அவளை இராமன் கண்டானாக, அவளும் காதற் பார்வையிற் கண்டாளாக. இருவரும் இவ்வாறாக இதயம் மாறிப்புக்கனர் என்பது கம்பன் கூற்று.

இப்பாடலைக் கருத்தூன்றிக் கற்பித்தபின், பண்டிதமணி அவர்கள் தமக்கியல் பாயமைந்த நகைச்சுவையோடு விடுக்கும் வினாக்களுள் ஒன்று, விசுவாமித்திரருக்குப் பின்னர் சென்றவர் யாவர்? என்பதாகும். அதற்கு விடை சீதை எனக் கூறக் கேட்டுச் சுவைத்தமை அவரின் கம்பராமாயண ரசனையில் ஒருதுளி.

மிதிலையில் இராமன் வில்வளைப்பதற்கு எழுந்த எழுச்சி, பெருமுனிவர் செய்த பெருயாகத்தில் பொழிந்த நெய் ஆகுதியின் வாய் வழி பொங்க எழுந்த கொழுங்கனல் என்ன எழுந்தான் என விளக்கும் போது துள்ளலோசையில் அதனைப் பாடித் தானும் தாளத்தோடு துள்ளி எழும்புவது வழக்கம்.

பண்டிதமணி அவர்களுக்கு நாவலர் பாரம் பரியத்தால் வந்த இராமாயண இரசனைக் குறிப்புக்கள் பெருமளவில் உந்து சக்தியாயிருந்தன. அவர்தாமே பலமுறை படித்தும் படிப்பித்தும் சுவைத்தும் எழுதி வைத்திருந்த குறிப்புக்கள் பலருக்குப் பெரு விருந்தாயுமிருந்தன. கம்பராமாயண விருந்து செய்வதில் அவர் பெருமை நாடறிந்ததாகும்.

அவர் ஆய்ந்து எழுதி வைத்திருந்த குறிப் புக்களுள் வெண்ணெய் போலத் திரண்டவற்றுள் ஒரு பகுதியை அவர் தமிழ் நாட்டுக்கு விருந்து செய்துள்ளார். தமிழ் நாட்டார் சார்பாக அவற்றைக் கையேற்ற பேராசிரியர் சேதுப்பிள்ளை அவர்கள் அவற்றைக் "கடவுட் கொடை" எனப் போற்றியுள்ளார். எஞ்சியவற்றுள் இன்னொரு பகுதி யாழ்ப்பாணத்து முத்தமிழ் வெளி யீட்டுக் கழகத்தாரால் கம்பராமாயணக் காட்சிகள் என்னும் தலைப்பில் வெளிவந்துள்ளன. அவை தினகரன் பத்திரிகையில் வாரந்தோறும் ஒளி கான்ற கதிர்களில் ஒருசில.

அநுமான் கண்டனன் கற்பினுக் கணியைக் கண்களால் எனக் கூறும் வகையில் பண்டிதமணி அவர்களும் இராமாயணக் காட்சிகளைத் தம் சிந்தையாற் கண்டு பிறருக்கும் காட்டியுள்ளார். அவர் காட்டிய வண்ணம் நாம் காணும் போது, கம்பன் செய்த வம்பு பெருவிருந்தாயமைகிறது. அவர் கம்பரின் கருத்து வழியே சென்று காட்டியவை நாம் வேறெந்த இராமாயணத்திலும் காண முடியாதவை. கம்பர் கண்ட வம்பு ஆதி கவியாய வான்மீகி பகவானும் இன்றிருந்தால் ஏற்றுக் கொள்ளும் படித்தாயமைந்துள்ளது. இராம காதைக்கு ஆகர்ஷண வேகம் அமைத்தவர் கம்பர் என்பது பண்டிதமணி அவர்களின் காட்சி. அண்ணலும் நோக்கினான், அவளும் நோக்கினாள் என்பதும் ஒரு காட்சி. இராமனுடைய வீரத்தைப் பெரு முனிவர்களே ஆராய்ந்துள்ளார்கள். இராமரின் பாணம் புருடார்த் தங்களுள் முன்னணியிலுள்ள தருமமே ஆகும் என்பது பண்டிதமணி அவர்களின் காட்சி. இவருடைய காட்சிக்குக் கம்பரேயன்றி முந்தியநாவினராய மூத்த கவிகளும் சாட்சியாயுள்ளார்கள். இந்த வகையிலே பண்டிதமணி அவர்கள் கம்பரை அபரபிரமன் என்பர். அஃதாவது கம்பரின் படைப்பு அற்புதமானது என்பதாகும்.

இராமன் இராவணனை இன்று போய் நாளை வா என்ற தருமத்தைத் தொட்டுப் பாடிய சின்னத்தம்பிப் புலவரின் கரவை வேலன் கோவையில் வரும் பூ வென்ற மாவிலங்கேசனைப் போர் புரிய நாளைக்கு வா வென்ற வீரன் என்னும் அடிகள் பண்டிதமணி அவர்களின் காட்சிக்குப் பெருவிருந்தாயமைந்தமை இனிதே. அது தொடை நிரம்பிய தோமறுமாக்கதை.

இன்று நாம் சனநாயக அரசு, குடியரசு எனப்பெயர் பெற்ற அரசுகளின் பரிபாலனங்களைக் கண்முன்னே காண்கிறோம். பண்டிதமணி அவர்கள் தமது கம்பராமாயணக் காட்சியில் அயோத்தி மக்கள் யாவரும் ஆண்களாயின் தசரதராயும் பெண்களாயின் கோசலையாயும் மாறிவிடுகிறார்கள். அவர்கள் ஸ்ரீஇராமரைக் காணும் போது. இது பண்டிதமணி அவர்கள் கண்ட முடிசூடிய குடியரசு என வரையறுக்கற்பாலது. குடிமக்களின் குசலம் விசாரிப்பாலும் வாழ்த்தினாலும் இராமனும் தம்பிமாரும் வளருகிறார்களாம்.

பண்டிதமணி அவர்கள் கம்பரின் என்னனைய முனிவரும் இமையவரும் எனவரும் பாடலில் பெரிதும் ஈடுபட்டவர். அவர் தமது இளமையிலேயே இப்பாடலில் ஈடுபாடுடைய வராய்த் தம்மனைய மாணாக்கர்களுக்கு மட்டுவில் பொன்னம்பலம் அவர்கள் கல்வி கற்பித்தவர் எனக் கம்பரின் பாணியில் சிறப்புப்பாயிரமும் பாடியவர். பின்னர் அப் பாடலை வெகுவாக நயந்து, கம்பர் அயோத்தியையும் தசரதரையும் திருக்கைலாசபதி, திருமால், இந்திரன் என்கின்ற வரிசையில் வைத்த மையை வெகுவாக இரசித்துக் காட்டியவர். கம்பர் கண்ட கற்பனையுலகைத் தாம் கண்டு எங்களுக்குக் காட்டியவர்.

பண்டிதமணி அவர்கள் 1942 ஆம் ஆண்டளவில் சீதைமீது கொண்ட காதலைத் துண்டித்து, வள்ளி மீது செலுத்துவாராயினார். பிராட்டியாரை விட்டு நாச்சியாரைத் தொட்ட கதையே தட்சகாண்ட உரைப்பிறப்பு.

# தெய்வமாத் திரு

வித்துவான்
திருமதி. வசந்தா வைத்தியநாதன்

"யத்ர நார்யஸ்து பூஜ்யந்தே
ரமந்தே தத்ர தேவதா"

வனிதையர் உயர்வு பெற்று வாழும் இடத்தில் வானவர் மகிழ்ந்து வாசம் செய்வர் என்பது மனு வாசகம். பிறப்பு, குடிமை, ஆண்மை, ஆண்டு, உருவுநிறுத்த காமவாயில், நிறை, அருள், உணர்வு, திரு என ஒப்பின்வகை பேசப்படும். இவற்றுள் பெண்மை போற்றப் பெறுவது "நிறை" என்னும் தன்மையால்.

*" பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மை உண்டாகப் பெறின்".*

புண்ணிய பாரத நாடு பெண்ணைத் தாய்மையாக, தூய்மையாக.... ஏன் தெய்வமாகவே வந்திக்கின்றது. வழிபாடு செய்கின்றது. இது ஏனைய நாடுகளில் காணமுடியாத ஒன்று. அன்பு, அடக்கம், பொறுமை, கற்பு, தியாகம், அறிவு, சௌபாக்கியம், இத்தனை சொற்களின் பேரிலக்கியம் பெண்ணே.

*" பண்புடையார்ப் பட்டுண்டுலகம் அதுவன்றேல்
மண்புக்கு மாய்வது மன்"*

என்பது குறளமுதம். நாடாகவோ, காடாகவோ, அவலாகவோ, மிசையாகவோ பூமி இருக்கட்டும். எங்கே ஆடவர் நல்லவரோ அங்கே நிலமும் நன்மையுடையதாக இருக்கும் என்று புறநானூறு கூறும்.

அந்த ஆடவர் நலம் பெற்றொளிரப் பெண் ணென்னும் பேரொளியே காரணமாகின்றது. "இல்லம்" என்னும் கோயிலைத் தூய்மையாக்கிக் "கணவன்" என்ற தெய்வத்தைக் குடியேற்றி அவனை வழிபட்டு உய்யும் வழிபாடுதான் அவளது வாழ்வு.... தவம்.

*" தெய்வம் தொழாஅள் கொழுநற்
றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை".*

வறனோடி வையத்து வான்றருங் கற்பினாள்...."
என்ற இந்த வான்தருங் கற்பே மங்கையரின் உயிர்மூச்சு. குடத்துள் தீபமாக இருந்தவள் தற்காத்தல், தற்கொண்டாற் பேணல், இருவர்க்கும் உளதாய சொற்காத்தல் என்றினைய பண்புகளால் குன்றிலிட்ட தீபமாக ஒளிர்கின்றாள். தானும், தன் கொழுநனும் சிறத்தல் மட்டுமல்லாது, பிறந்த குடிக்கும், புகுந்த குடிக்கும் பெருமை சேர்ப்பவளே இலக்கியத்தில் இடம் பெறுகின்றாள்.

கொண்டானிற் றுன்னிய கேளிர் பிறரில்லை என்ற உணர்வுடன் " கொண்ட கொழுநன் குடிவறனுற் றெனக் கொடுத்த தந்தை கொழுஞ் சோறு உள்ளாதவளே" தமிழ்ப் பெண்ணாகிறாள். சிலம்பின் செல்வியாம் கண்ணகி இத்தகைய மன உறைப்புடைய மங்கையர் எழுவரை வஞ்சினமாலையிலே காட்டு கின்றாள்.

*" வன்னி மரமும் மடைப்பளியும் சான்றாக
முன்னிறுத்திக் காட்டிய மொய்குழலாள் பொன்னிக்
கரையின் மணற்பாவை நின்கணவ னாமென்று
உரைசெய்த மாதரொடும் போகாள் திரைவந்து
அழியாது சூழ்போக வாங்குந்தி நின்ற
வரியா ரகலல்குல் மாதர் உரைசான்ற
மன்னன் கரிகால் வளவன்மகள் வஞ்சிக்கோன்
தன்னைப் புனல்கொள்ளத் தான்புனலின் பின்சென்று
கல்நவில் தோளாயோ வென்னக் கடல் வந்து
முன்னிறுத்திக் காட்ட அவனைத் தழீஇக் கொண்டு
பொன்னங் கொடிபோலப் போதந்தாள் மன்னி
மணல்மலிபூங் கானல் வருகலன்கள் நோக்கிக்
கணவன் வரக் கல்லுருவம் நீத்தாள் இணையாய
மாற்றாள் குழவிவிழத் தன்குழவி யுங்கிணற்று
வீழ்ந்தேற்றுக் கொண்டெடுத்தவேற் கண்ணாள்
வேற்றொருவன்
நீள்நோக்கங் கண்டு நிறைமதி வாண்முகத்தைத்
தானோர் குரக்குமுக மாகென்று போன
கொழுநன் வரவே குரக்குமுக நீத்த
பழுமணி அல்குற்பூம் பாவை விழுமிய*

*பெண்ணறி வென்பது பேதைமைத்தே என்றுரைத்த
நுண்ணறிவி னோர் நோக்கம் நோக்கதே
எண்ணிலேன்
வண்டல் அயர்விடத் தியானோர் மகட்பெற்றால்
ஒண்டொடி நீயோர் மகற்பெறிற் கொண்ட
கொழுநன் அவளுக்கென் றியானுரைத்த மாற்றம்
கெழுமி அவளுரைப்பக் கேட்ட விழுமத்தால்
சிந்தை நோய்கூருந் திருவிலேற் கென்றெடுத்துத்
தந்தைக்குத் தாயுரைப்பக் கேட்டாளாய் முந்தியோர்
கோடிக் கலிங்கம் உடுத்துக் குழல்கட்டி
நீடித் தலையை வணங்கித் தலைசுமந்த
ஆடகப்பூம் பாவை அவள் போல்வார்"*

இவர்கள் போன்ற கற்பரசிகள் வாழ்ந்து வளம்பெருக்கிய வரலாறுகள் பலப்பல.

*'' **மைவைத்த கண்டன் நெறியன்றி மற்றோர் நெறியறியா**......''தெய்வச் சோழர் குடிப்பிறப்பாய் தென்னவனின் பழிதீர்த்த தெய்வப்பாவை. "**தீண்டுவீரால் திருநீலகண்டம்**" என்று ஆணையிட்ட அற்புறு புணர்ச்சியின்மை அயலறியாவகை வாழ்ந்த, பண்டையும்
பதியையும் காத்த பெருமாட்டி....*

*மாரிக்கால இரவினில் வந்துற்ற அடியார்க்கு
பகல்வித்திய செந்நெல்
மல்லல் முளைகொண்டு வல்லவாறு அமுதாக்கிப் படைத்து உடுக்கை இழந்தவன் கைபோல உற்றஇடத்து உதவிய உத்தமி....*

*பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் கறைக்கண்டன்
கழலிணையே
கருத்தி லிருத்திக் கணவனை நன்னெறிப் படுத்தி, ஊனுடை வனப்பையெல்லாம் உதறி உம்பரும் வியக்கப்
பேயுருவம் பெற்ற அன்னை.....*

*அடியவர் பொருட்டு அருந்தவப் புதல்வனையே அரிந்து அரியவினை செய்துயர்ந்த அரிவை...*

*"கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை" கணவனது சொல்லையே எல்லையாக் கொண்டு உலக இயலுக்குப் புறம்பான இயற்பகை நாயனாரின் மனைவி....*

*தம்பியார் உளராக வேண்டும் எனவைத்த தயாவினால் அம்பொன் மணிநூல் தாங்காது அனைத்துயிர்க்கும் அருள் தாங்கிய தூண்டு தவ விளக்கனையார்.....*

*செல்வ எனச் சொல்லாது ஒழிக என விலக்கும்*

*"பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே" என அறிஞர்கள் விளித்து அவர்கள் காண செந்தாமரைத் தடாகத்துள் புகுவது போன்ற செந்திக்குட் பாய்ந்து கணவன் உடல் தழுவிய பெருங்கோப் பெண்டு.....*

*"கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல்லென்று இணையடி தொழுது வீழ்ந்த"* கோப்பெருந்தேவி....

இவர்களது கற்புநெறி தமிழரின் ஏடும் எழுத்தும் காட்டும் சாவா மூவாச் செய்திகளாம்.

இந்தக் கற்பிலக்கியத்தின் வரைவிலக்கணம் தான் போதினை வெறுத்த அயோத்தி மன்னன் பொன்மனைபுகுந்து " நின் பிரிவினும் சுடுமோ பெருங்காடு" என்று நாடு துறந்து கணவனுடன் காடேகிய மிதிலைச் செல்வி கரிய செம்மலாம் காகுத்தனைப் பிரிந்து ஐயிரண்டு திங்கள் அறம்புகா இலங்கையின் அசோக வனத்திற் சிறைவைக்கப் பட்டாள். அதற்கு முன்பாகவே "மயிலுடைச் சாயலாள் வஞ்சியா முன்னம் நீண்ட எயிலுடை இலங்கை நாதன்...... இதயமாஞ் சிறையில் வைத்தான்."

மாயமானின் பின் மதியைப் போக்கி, மதிலாகக் காத்து நின்ற மலையோனையும் கடிந்து மாய அரக்கனது மனத்திலும் மனையிலும் இடம்பெற்ற என்னை இவ்வுலகம் இனி ஏற்குமோ என்று அன்னை ஊதுலைக் குருகாக உள்ளம் வெய்துயிர்ப்பாள்.

***" வஞ்சனை மாவின்பின் மன்னைப் போக்கி என்
மஞ்சனை வைதுபின் வழிக்கொள் வாயெனா
நஞ்சனை யான் அகம்புகுந்த நங்கையாள்
உஞ்சனென் றிருத்தலும் உலகம் கொள்ளுமோ?"***

– சுந்தரக்காண்டம் உருக்காட்டு. ப. 17

விரிமழை குலங்கிழித்து ஒளிரும் மின்னென கருநிறத்தரக்கியர் குழாத்துள் " சுருதிநாயகன் வரும் வரும் என்று கருதி மாதிரம் அனைத்தையும் அளக்கின்ற கண்ணாள்" முன் காமவேகம் கொண்ட இராவணன், முடியின்மீது முகிழ்த்துயர் கையினனாக படியின் மேல் விழுந்தான். வேரறுந்த மரம்போல் வீழ்ந்த வேந்தனை ஒரு துரும்பினும் அற்பமாக எண்ணி அன்னை பேசுவாள்.

" அடே இராவணா! உனது வாள், நாள், வரம் எல்லாம் கூற்றுவனின் ஆற்றலைத் தடுக்கலாம். வீரனின் கரத்தைத் தடுக்காது.

***" தோற்றனை பறவைக்கு அன்று,
துன்னுநீர் வெள்ளம் சென்னி
ஏற்றவன் வாளால் வென்றாய்
அன்றெனின் இறத்தி அன்றே?
நோற்ற நோன்புடைய வான்நாள்
வரம்இவை நுனித்தவெல்லாம்
கூற்றினுக்கு அன்றே வீரன்
சரத்திற்கும் குறித்ததுண்டோ?"***

சுந்தரகாண்டம். காட்சிப்படலம் 120.

கயிலைக் குன்றெடுத்த நாளிலே தன் சேவடிக் கொழுந்தால் உன்னை வென்ற ஈசனின் வில், எனது நாயகனின் ஆற்றலுக்கு ஆற்றாது முறித்து வீழ்ந்த ஒசை உன் செவிக்கு எட்டவில்லையோ?

*"கடிக்கும் வல்லரவும் கேட்கும்*
*மந்திரம் களிக்கின் றோயை*
*அடுக்கும் ஈது அடாது என்று*
*ஆன்ற ஏதுவோடு அறிவு காட்டி*
*இடிக்குநர் இல்லை உள்ளார்*
*எண்ணியது எண்ணி உன்னை*
*முடிக்குநர் என்ற போது*
*முடிவு அன்றி முடிவது உண்டோ?"*

– சுந்தரகாண்டம். காட்சிப்படலம் 136.

*"இடிப்பாரை இல்லா ஏமரா மன்னன்*
*கெடுப்பா ரிலானுங் கெடும்".*

– திருக்குறள் ^48.

என்ற பொய்யாமொழியின் வாக்கை நினைவூட்டி உனக்கு அழிவு நிச்சயம் என்று கற்பின் கனலாக ஜானகி பேசுவாள்.

இலங்கையிற் போய் சீதாதேவியைக் கண்டுவந்த பின்பு சொல்லின் செல்வனான அனுமனுக்கு இராம னிடத்துள்ள மதிப்பை விட அன்னையின் மேல் மதிப்பு மிகுந்த விட்டது.

*"பேணநோற்றது மனைப்பிறவி பெண்மை போல்*
*நாணம் நோற்று உயர்ந்தது நங்கை தோன்றலால்*
*மான நோற்று ஈண்டிவள் இருந்த வாறெல்லாம்*
*காண நோற்றிலன் அவன் கமலக் கண்களால்"*

சுந்தரகாண்டம். காட்சிப்படலம் 73.

என்று போற்றுவான். பொறை, அன்பு, நாணம், அச்சம், வீரம், கற்பு, என்று பற்பல குணங்களுக்கும் ஊற்றுக் கண்ணாகச் சீதையைக் காண்கின்றான். இற்பிறப்பு, என்பதொன்றும், இரும்பொறை என்ப தொன்றும் கற்பெனும் பெயரதொன்றும் களிநடம் புரியக் காண்கின்றான். அதனாற்றான் தேவியை இலங்கையிற் கண்டுவந்த அனுமன் இராமனது திருவடி தொழ வில்லையாம். தெற்கே திரும்பி நின்று முளரிநீங்கிய தையல் இருக்கும் திசைநோக்கி மண்ணுற வணங்கி னானாம். கற்பெனும் தகைமைக்குத்தான் எத்துணை ஏற்றம்...... இது நாள்வரையில் மன, மொழி, மெய்களால் இராகவனுக்கே அடிமைபூண்டு அவனது ஏவலுக்கே தன்னை முழுமைப்படுத்தி தெய்வமாய்க் கண்டு வணங்கிவந்த ஐயனின் பெருமையை விட அன்னையின் பெருமை ஒருபடி கூடிவிட்டது. அஞ்சனையின் மைந்தனுக்கு அவன் கூறுகின்றான்...

*"உன் பெருந்தேவி என்னும்*
*உரிமைக்கும் உன்னைப் பெற்ற*
*மன் பெரு மருகி என்னும்*
*மாண்புக்கும் மிதிலைமன்னன்*
*தன் பெருந் தனயை என் னும்*
*தகைமைக்கும் தலைமைசான்றாள்*
*என் பெருந் தெய்வம் ஐயா!*
*இன்னமும் கேட்டி யென்பான்"*

– சுந்தரகாண்டம். திருவடிதொழுத படலம்–26

*பொன்அலதில்லை பொன்னை*
*ஒப்பனப் பொறையில் நின்றாள்*
*தன்அலதில்லை தன்னை*
*ஒப்பனத் தனக்கு வாய்த்த*
*நின்அலதில்லை நின்னை*
*ஒப்பென, நினக்கு நேர்ந்தாள்*
*என்அலதில்லை என்னை ஒப்பென,*
*எனக்கும் ஈந்தாள்"*

– சுந்தரகாண்டம். திருவடிதொழுத ப. 27.

ஒப்பாரும் மிக்காரும் இன்றித் தனக்குத் தானே இணையாய் கற்புக்கடம் பூண்ட பொற்புடைத் தெய்வமாய் வாழ்ந்து காட்டிய சீதையைப் போன்றோர் தோன்றிய மண் இது.

*"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று*
*நீரினும் ஆரளவின்றே சாரல்*
*கருங் கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு*
*பெருந் தேனிறைக்கும் நாடனொடு நட்பே"*

*"இம்மை மாறி மறுமை யாயினும் நீயாகியர்*
*எம்கணவன் யானாகியர் நின் நெஞ்சு நேர்பவள்"*

என்று ஊழி ஊழியாகத் தொடர்ந்து வரும் எண்ணத்தின் திண்மையே பெண்ணின் பெருமை. ஊழிபெயரினும் தான்பெயரா இந்தத் தெய்வக் கற்பினரை இந்த மண்ணில் பிறந்த ஒவ்வொருவரும் மரியாதை செலுத்திக்கொள்ளக் கடமைப் பட்டிருக்கின்றோம்.

# இராமாயணத்தில் சடையப்பவள்ளல்

கலாநிதி- கா. இந்திரபாலா

கற்பனையுங் கருத்தும் பொதிந்து விளங்கும் தமிழ்க் களஞ்சியங்களிலொன்று கம்பராமாயணம் கற்பனையென்னு மாறானது தமிழ் மலையினுச்சியி லூற்றெடுத்துப் பாய்கின்றது. அந்த ஆறு தன்னிடத்திற் குளிப்பாக்குங் குடிப்பார்க்கும் எல்லை யற்ற இன்பந் தரவல்லது. அத்தகைய சிறப்புடையது கம்பராமாயணம். அவ்விராமாயணத்தைத் தமிழுலகிற்குத் தந்தவன் கம்பன். கம்பனைத் தமிழர்க்கீந்தவன் சடையனென்றே சொல்ல வேண்டும்.

அறியாப் பருவத்திலே அரைவயிற்றுக் குணவின்றி யல்லலுற்றுத் திரிந்த அரசகவிக்கு "ஆன்பாலும் நெய்யும் அரம்பை முதல் முக்கனியும்" அருந்தமிழமுதமுமூட்டி, அன்பெனும் நீர் பருக்கி ஆளாக்கி வைத்தவன் சடையப்ப வள்ளலே. அப்பெரு நன்மை செய்தவனுக்குக் கம்பன் நன்றி செலுத்தாதிருப் பானா? தன்னூல்களிலெல்லாம் எந்தெந்த விடங்களிற் சடையனின் புகழைப் புகுத்த வியலுமோ அங்கங்கே யெல்லாம் புகுத்தி விட்டான். கவிச்சக்கரவர்த்தி. தமிழ்நாடு முழுவதும் புகழ்ந்தேத்தப் பெறும் பெருங்காவியமாகிய கம்பராமாயணத்தில் பத்திடங்களிற் சடையனை வைத்துப் பாடி அவற்கழியாப் புகழ் கொடுத்திருக்கிறான். இதைவிடக் கம்பன் செய்யக்கூடிய கைம்மாறு வேறொன்று முண்டோ?

இப்பெருங்காவியமுருப்பெற்றது அந்த "அடையா நெடுங் கதவுமஞ்சலென்ற சொல்லு முடையான் சடையப்பனூர்" ஆகிய திருவெண்ணெய் நல்லூரிலே யாம் இதைக் கம்பன் தன் காவியத்தின் பாயிரத்திலேயே

*"..........இராமவதாரப் பேர்த்*
*தொடை நிரம்பிய தோமறு மாக்கதை*
*சடையன் வெண்ணெய் நல்லூர்வயின் தந்ததே"*

எனக் கூறுகின்றான்.

இனி இராமாயணத்திற் சடையனைப் புகழ்ந் துள்ள மற்ற விடயங்களைப் பார்ப்போம். விசுவாமித் திரனின் வேள்வியையழிக்க வந்த தாடகையைக் கொன்று தேவர்களாற் புகழ்மாலை சூடப் பெற்ற இராமனுக்கு விசுவாமித்திரன் சில படைக்கலங்களை யளிக்கின்றான். ஏவினால் பகைவரைக் கொல்லத் தப்பாத அப்படைகலங்களுக்கு, வந்தடைந்த வறியோர்க்கு 'அஞ்சல்' என்று சொல்லத் தப்பாத சடையனின் வாய்ச்சொல்லை உவமை கூறுகிறான் கம்பன்.

*"மன்னவர் வறுமை நோய்க்கு*
*மருந்தன சடையன் வெண்ணெய்*
*அண்ணல் தன் சொல்லே யன்ன*
*படைக்கல மருளினானே"*

எனவுரைத்து உலகத்தின் வறுமை என்கின்ற பிணியை மாற்றவல்ல மருந்து சடையனே யென்பதால் சடையப்ப வள்ளலின் வண்மையைப் பிறிதெவ்விதத் திலும் புகழ வியலாமற் செய்து விட்டான் கம்பன்.

மிதிலையிலிராமனைக் கண்டபின் காதல் நோயாற் கருத்திழந்து தவிக்கின்றாள் சீதை. பகல் முடிந்து இருள் சூழ்ந்து கொண்டதும் வெண்டிங்களா னது வெளியேறி விண்ணிலும் மண்ணிலும் தண் கதிர்களைப் பரப்பி ஒளி வீசிக்கொண்டிருக்கின்றது. அவ் வேளையில் நிலாக்கற்றைக் குவமைகூற வந்த கம்பன்,

*"விண்ணும் மண்ணும் திசையனைத்தும்*
*விழுங்கிக் கொண்ட விரிநன்னீர்ப்*
*பண்ணை வெண்ணெய்ச் சடையன் றன்*
*புகழ் போல் எங்கும் பரந்துளதால்"*

எனமுடித்து விடுகின்றனன். அந்நேரமவனுக்கு வேறெவ் வுவமை தான் நினைவிற்கு வரக்கூடும்? தான் செய்த வண்மையால் மண்ணுலகில் மட்டுமன்றி விண்ணுலகினுந் தன் புகழைப் பரவச் செய்தவன் நல்லூர் வள்ளல். அப்பெரும் புகழ் இங்கே உலக முழுவதும் மட்டுமன்றி வான் முழுதும் பரவிய தண்ணொ ளிக் கற்றைக் குவமானமாகின்றது.

இராவணனின் செருக்கடக்க இராமபிரான் இலங்கை நகர் புகுவதற்குச் சேது கட்டப்படுகின்றது. பெருங் குரங்குகள் மலைகளையெடுத்து வீச, நளன் அவற்றை வாங்கிச் சேது கட்டுகின்றான். குரங்குகள் வீசும் மலைகளையெல்லாம் தன் றொழில் வல்லமையி னாலே நளன் தாங்கியருளியதை அழகிய தோருவமை கொண்டு விளக்குகின்றான் கம்பன். அஞ்சலென்ற பயங் கூறியழைத்து. அருந்த அன்னமிட்ட அழகிய அக்காட்சி கம்பனின் மனதிற்றோன்றுகிறது.

*"மஞ்சினிற் றிகழ்தரு மலையை மாக்குரங்கு*
*எஞ்சுறக் கடிதெடுத் தெறியவே நளன்*
*விஞ்சையிற் றாங்கினன் சடையன்வெண்ணெயிற்*
*றஞ்சமென்றோர்களைத் தாங்குந் தன்மைபோல்"*

எனத் தன்னை வந்தடைந்தவர்களை யெல்லாந் தளராது தாங்கியருளுஞ் சடையனே நலனுக்குவ மானமாகின்றான். எண்ணுக் கணக்கற்றவறியோர் வந்திரந்தாலும், அவர்க்கெல்லாம் பசி தீர்க்கும் வண்மை பொருந்தியவன் சடையனே யென்பதைக் கம்பன் இதன் மூலம் அறிவிக்கின்றானன்

இலங்கையில் நடந்த இரும்போரிலே இந்திரசித்து விட்ட நாகபாசத்தாற் கண்டுண்ட இலக்குமணனும் சேனை வீரரும் கருடன் வரவால் நாகபாசம் நீங்கியெழுகின்றனர். அக்காட்சியை விளக்கும் கவிஞற்குச் சடையனின் எண்ணம் உதிக்கின்றது. சடையனூர் வந்தடைந்த, வேதம் வல்ல அந்தணர்கள், அறிவுமிக்க புலவர்கள், முதலாயினோரது சுற்றத்தார் களது பசியானது சடையனின் வண்மையால் ஒரு கணப்பொழுதில் எவ்வண்ணம் மறைந்து விடுகின்ற தோ, அதுபோல அந்நாகமும் ஒழிந்து விட்டது என்னும் பொருளமைய,

*"..... மழையென்று*
*ஆசங்கை கொண்ட கொடைமீது*
*யண்ணல்சடையன்றன் வெண்ணெயனுகுந்*
*தேசங் கலந்த மறைவாணர் செஞ்சொ*
*லறிவாள ரென்றிம் முதலோர்*
*பாசங்கலந்த பசிபோலகன்ற*
*பதகன்றுரந்த வுரகம்"*

எனக்கூறி இவ்விடத்திலும் சடையனுடைய புகழை நிலைநாட்டுகிறான் கவியரசன்.

போருமொழிந்தது; இராவணனாதி யோரும் மாய்ந் தொழிந்தனர். இராம பிரானுக்கு முடிசூட்டும் நிகழுப் போகின்றது. அதற்காகத் திரள்திரளாக மக்கள் வந்தடைகின்றனர். அவர்களுள் அந்தணரும், வணிகரும் வேளாளரும் வருகின்றனர். சான்றோருந் திரண்டு வருகின்றனர்.

அவர்கள் எத்தகைய சான்றோரெனின்

*"...... ஆலி நாட்டுச்*
*சந்தணி புயத்து வள்ளல்*
*சடையனே யனைய சான்றோர்"*

எனக் கம்பன் தெளிவுறக் கூறுகிறான். "சடையனே என்பதனால் சடையன் போன்ற சான்றோ ரைக் காண்பதரிது என்பது தெற்றென விளங்குகின் றது. இதுகாறும் சடையனின் வன்மையைப் புகழ்ந்த கம்பன், இப்பொழுது சான்றோனென அவனைப் புகழ்வதால், சடையப்ப வள்ளல் பலவகையாலும் சிறப்பு வாய்ந்தவனென்பதைத் தெரிவிக்கின்றான்.

அதன்பின், திருமுடிசூட்டுவிழா, நடை பெறு கின்றது. அழகாக அலங்கரிக்கப்பட்ட மண்ட பத்திலே பெருந்தகைகள் இராமனுக்கு அருஞ் செயல்கள் புரிந்துகொண்டிருக்கிறார்கள். அநுமன் சிங்காசனத் தைத் தாங்குகின்றான். அங்கதன் உடைவாளைக் கையிற் கொண்டிருக்கிறான். பரதன் வெண்கொற்றக் குடை பிடிக்கின்றான். மற்றத்தம்பியார்களாகிய இலக்குமணனுஞ் சத்துருக்கனும் வெண்சாமரை வீசுகின்றனர். அந்நிலையில்,

*" விரைசெறி கமலத் தாள்சேர்*
*வெண்ணெய் மன் சடையன்றங்கள்*
*மரபுளோர் கொடுக்க வாங்கி*
*வசிட்டனே புனைந்தன் மௌலி*

திருமாலினவதாரமே யென்று போற்றப் படும் இராமபிரானுக்கு, சூட்டுதற்கு முடியைக் கொண்டுவந்து கொடுப்போர் எத்தகைய குலத்தோராக இருத்தல் வேண்டும்? அவர்களுடைய குலத்து தித்தவன் தான் சடையன். கம்பன் இதனாற் சடையனின் குலச் சிறப்புக் கூறியதுடன் கமலதேவியின் பாதம் சேரப் பெற்றவன் என்பதனால் அவனின் செல்வச் சிறப் பையும் கூறியுள்ளான்.

முடிசூட்டும் முடிவுற்றது. கம்பன் தன்னிராமா யணத்தின் யுத்த காண்டத்தையும் ஒரு வாழ்த்துப்பாவால் முடிக்கின்றான். மறையவரையும், மனுநெறியையும் இராமனையும், அனுமானையும் மற்றும் பலரையும் வாழ்த்துகின்றான். அந்நிலையிலும் தன்னை வாழ வைத்த வள்ளலையும் மறவாது:

*"அறைபுகழ் சடையன் வாழி"*

எனக் குறிப்பாக வாழ்த்தி, இராமன் அனுமன் முதலியினோரோடு சடையனையுஞ் சமனாக வைத்து, அவனைப் பெருமைப்படுத்துகின்றான். இவ்வண்ணம், இராமாயணத்திலெட்டிடத்திற் சடையன் புகழைத் கம்பன் நிலைக்கவைப்பதைக் கண்டோம். இன்னுமிரண்டுள. அவை ஐயத்திற்குரியவாதலால் இங்குக் கூறப் படவில்லை. தம்மை யாதரித்த பெரியோரைத் தன் நூல்களிற் புகழ்தல் தமிழ்ப்புலவர் வழக்கம். அவ் வழக்கத்தை யொட்டிக் கம்பனும் தன்னை வளர்த்த வள்ளலைத் தன்நூல்களில் புகழவியலுமான இடங்களி லெல்லாம் புகழ்ந்துள்ளான். சடையனிருந் ததாற் கம்பனையறிந்தோம். கம்பனிருந்ததாற் சடையனை யறிந்தோம்.

*எண்ணிய சகாத்தம் எண்ணூற்று ஏழின் மேல், சடையன் வாழ்வு*
*நண்ணிய வெண்ணெய்நல்லூர்தன்னிலே கம்பநாடன்*
*பண்ணிய இராம காதை பங்குனி அத்த நாளில்,*
*கண்ணிய அரங்கர் முன்னே, கவி அரங்கேற்றினானே.*

*கமுந்தராய் உன கழல் பணியாதவர் கதிர் மணி முடிமீதே*
*அமுந்த வாளிகள் தொடு சிலை இராகவ ! அபிநவ கவிநாதன்*
*விழுந்த நாயிறு அது எழுவதன் முன், மறை வேதியருடன் ஆராய்ந்து,*
*எழுந்த நாயிறு விழுவதன் முன் கவி பாடியது எழுநூறே.*




இலக்கியத்துக்குத் தேர்ந்தெடுக்கப்படும் பொருளே அவ்விலக்கியத்தின் வடிவத்தினை நிச்சயித்து உருவாக்கும். வடிவத்தை வைத்துக் கொண்டு பொருள் தேடுபவரும் உண்டு. அது சாகா வரம் பெற்ற இலக்கியத்தை ஒருபோதும் உண்டாக்காது. செய்யுளிலக் கியத்தின் பொருளுக்கேற்றபடி பா வடிவம் அமைகின்றது. பா என்றால் " சேட்புலத்திருந்த காலத்தும் ஒருவர் எழுத்துஞ் சொல்லுந் தெரியாமற் பாடமோதுங்கால், அவன் சொல்லுகின்ற செய்யுளை விகற்பித்து இன்ன செய்யுளென்று உணர்தற்கேதுவாகிப் பரந்துபட்டுச் செல்வதோர் ஓசை" பகுதியாக அமைவதே சந்தம். பெருஞ் கவிஞர்கள் தாம் கையாளும் பொருளுக்கேற்றபடி சந்தங்கள் அமைந்து வரக் கவி புனைவார்கள். கதை நிகழ்வேகம், கதை நிகழிடம், கதை போன்ற இன்னோரன்ன விடயங்களுக்கேற்றபடி சந்தங்கள் அவர் கவிதைகளிலே அமைந்விடும். " சந்தம் வழிந்த கவிதை கிழியுமோ?" என்று புதுவைக் கவிஞன் கேட்பது பொருள் பொதிந்த கேள்வியாகும். தமிழிலே சந்தம் வழிந்த கவிதைகள் பாடிய கவிஞர்களுள் கம்பன் கவிச் சக்கரவர்தியாகவே அமைந்துள்ளான். கவிதைகள் பாடிய கவிஞர்களுள் கம்பன் கவிச் சக்கரவர்த்தியாவே அமைந்துள்ளான். அவனுடைய சந்தங்களை யெல்லாம் இச்சிறிய கட்டுரையிலே விவரித்துவிட முடியாது. சில சந்தங்களை எடுத்தாண்டு வகைமாதிரி காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

தமிழ் எழுத்துக்களை அவற்றின் ஓசைக்கேற்றபடி வல்லினம். மெல்லினம், இடையினம் எனப் பாகுபாடு செய்துள்ளனர். தமிழ் இலக்கண நூலார். மெல்லெழுத்துக்களையும் வல்லெழுத்துக்களையும் சந்தர்ப்பத்துக்கேற்றபடி உபயோகித்துப் பொருளைப் புலப்படுத்தும் சந்தங்களைக் கையாளுவதிலே கம்பன் வல்லவன். சீதையை நினைத்தாலே கம்பனுக்குப் பொன்னின் நினைவு வந்து விடுகின்றது. சீதையை முதன் முதல் அறிமுகஞ் செய்யச் தொடங்கும் முதற் பாடல்

*" பொன்னின் சோதி போதினின் நாற்றம்*
*பொலிவே போல்*
*தென்னுண் தேனின் தீஞ்சுவை செஞ்சொற்*
*கவியின்பம்*
*கன்னிம்மாடத் தும்பரின் மாடே களிபே டோடு*
*அன்னமாடு முன்துறை கண்டங் கயல் நின்றார்"*
மிதிலை –23

என அமைகின்றது. சீதையினுடைய மென்மையான தன்மைகளைக் கூறும் பாடல்களுக்குத் தலைமை வகிக்கும் இப்பாடல் மென்மையான சந்தமுடையதாகவும் அமைந்துவிடுகிறது. பின்னர் சீதை சுயம்வர மண்டபத்துக்குச் சென்ற சந்தர்ப்பத்தில் அவளுடைய அழகினையும் ஒயிலினையும் புலப்படுத்துஞ் சந்தர்ப்பத்திலே

*" பொன்னி னொலி பூவின் வெறி சாந்துபொதி*
*சீதம்*
*மின்னினெழில் அன்னவள்தன் மேனிஒளி மான*
*அன்னமும் அரம்பையரு மாரமிழ்ந்தும் நாண*
*'மன்னவை இருந்தமணி மண்டபம் அடைந்தாள்."*
கோலம்–28

எனப் பாடப்படுகிறது. இயற்கை எழிலைப் புலப்படுத்தும் அளவான மென்மை ஓசை கொண்ட சந்தம். ஆனால், செயற்கை எழிலைப் பாடுமிடத்து அளவுக்கு மீறிய மெல்லினஓசையினை கம்பன் கையாண்டு ஒரு நுண்மையான வேறுபாட்டினையும் புலப்படுத்தி விடுகிறான். எயிறுடை அரக்கியாகிய சூர்ப்பணகை அழகிய பெண்ணாகத் தன் உருவினை மாற்றுகிறாள். தேவர் அனையர் கயவர் என்பர். சூற்பனகையும் அழகான பெண்ணாகிவிடுகிறாள். இராமனை மயக்குவதற்குச் சீதையை விட அழகான பெண்ணாக இருக்கவேண்டுமெனச் செயற்கையான வடிவெடுக்கிறாள். இவற்றையெல்லாம் உணர்த்தும் வகையிலே சூற்பணகையை வர்ணிக்கும் சந்தர்ப்பத்தில்

கம்பன் மிதமிஞ்சிய மெல்லொலிகள் பயின்று வரும் சந்தத்தினை கையாளுகிறான்.

*" பஞ்சி யொளிர் விஞ்சுகுளிர் பல்லவ மனுங்க*
*செஞ்செவிய கஞ்சநிகர் சீறடியளாகி*
*அஞ்சொலிள மஞ்ஞையென அன்னமென மின்னும்*
*வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்:*

சூர்ப்–31

இது நஞ்சு கக்கும் வஞ்சக அழகு. சீதையின் இயற்கையானது போன்றதல்ல இது. எனவே இதனைத் தனித்துவமான முறையிலே கம்பன் கையாண்டுள்ள கற்பனை நயத்தற்பாலது. இந்த அழகின் உண்மைத் தன்மை எப்படி இருக்குமென்பதை தாடகையை வர்ணிக்குமிடத்தில் கம்பன் எடுத்துக்காட்டுகிறான். அங்குமென்மை வன்மையாகின்றது. சந்தமே அரக்க உருவத்தை வெளிக் காட்டி விடுகிறது.

*'இறைக்கடை துடித்த புருவத்த ளெயிறென்னும்*
*பிறைக்கடை பிறக்கிட மடித்த பிலவாயள்*
*மறைக்கடை யரக்கி வடவைக்கன லிரண்டாய்*
*நிறைக்கடல் முனைத்தென நெருப்பெழவிழித்தாள்*

தாடகை –31

வல்லின எழுத்துக்களிலே 'ட' வும் 'ற' வும் ஏனையவற்றைவிடக் கூடிய வன்மை மிகுந்தன. தன் கணவன் அநியாயமாக கொலைசெய்யப்பட்டான் எனக் கேள்வியுற்ற கண்ணகி பாண்டிய மன்னன் வாயிலிலே சீற்றத்துடன் வாயிற் காவலனுடன் உரையாடுமிடத்து இளங்கோவடிகள் 'ற' கர ஒலியினை உபயோகிப்பதன் மூலம் அவளுடைய சீற்றத்தினை.

*' அறிவறை போகிய பொறியறு நெஞ்சத்து*
*இறைமுறை பிழைத்தோன் வாயி லோயே'*

என்று புலப்படுத்தி விடுகின்றார். கம்பனே 'ற' கரத்தையும் 'ட' கரத்தையும் அடுத்தடுத்து அடுக்கி ஏற்படுத்தும் சந்தம் தாடகையின் வலிய, கொடிய, அரக்கத் தோற்றத்தினைப் புலப்படுத்தி விடுகின்றது.

யுத்த காண்டத்தில் 'ற' கரமும் 'ட' கரமும் நன்கு உபயோகிக்கப்படுகின்றன. உறங்குகின்ற கும்ப கர்ணனை எழுப்புதற்கு வந்த கிங்கரர்கள் சினத்துடன் கூறியவற்றை இளங்கோவடிகளைப் போலக் கம்பனும் றகரத்தினை உபயோகித்து,

*' உறங்கு கின்ற கும்ப கன்ன உங்கள் மாய*
*வாழ்வெலாம்*
*இறங்கு கின்ற தின்று காண் எழுத்திராய்*
*எழுந்திராய்*
*கறங்கு போல விற்பி டித்த கால தூதர் கையிலே*
*உறங்கு வாயு றங்குவா யினிக்கி டந்து றக்குவாய்'*

கும்ப –45

செய்யுளின் பொருள் விளங்காதவர்க்கும் சந்தம் போப உணர்வினை புலப்படுத்தி விடக்கூடிய தாய் உள்ளது.

கிட்சிந்தையில் வாலியை கொல்வதற்காக இராமன், இலக்குணமன், அனுமன், சுக்கிரீவன் ஆகியோர் மலைச்சாரல் வழியாகச் செல்கின்றார்கள். யுத்தத்திற்கு நடக்கும் நடை. வாலிவதை என்றும் இலட்சிய நோக்கு, யுத்த நடை காரணமாக மலையில் ஏற்பட்ட ஆரவாரம் என்பனவற்றை யெல்லாம் சந்தத்தாலேயே உணரவைக்கிறான் கம்பன்.

*' மினல்மணிக் குலம்துவன்றி வில்லலர்ந்து*
*விண்குலாய்*
*அனல்பரப்ப லொப்பமீது இமைப்பவந் தவிப்பபோல்*
*புனல்பரப்ப லொப்பிருந்த பொன்பரப்பு மென்பரால்*
*இனையவிற் றடக்கைவீரர் ஏகுகின்ற குன்றமே.*

வாலி –6

என்பது கம்பர் கவி. சந்தம் பரபரைப்பை உணர்த்துகின்றது. இதுவரை காலமும் பரபரப்பில்லாமல் இருந்த கிட்கிந்தை மலை இராம இலக்குமணரின் வரவாலே பரபரப்பு அடைகின்றது. சீதையின் பிரிவாலே சோர்வடைந்திருந்த அண்ணனும் தம்பியும் "இணையவிற் றடக்கை வீரர்" ஆகச் சுறு சுறுப்படைகின் றனர். தீர்மானித்த காரியத்தை ( வாலியை கொல்லுதல்) நிறைவேற்றுதற்குத் தீவிரமடைகின்றனர். இவை எல்லாவற்றையுமே எண்ணக்கூடியதான சந்தம் இங்கு வந்தமைகின்றது.

கம்பனிற் பல இடங்களிலே சூரியன் உதிக்கிறான். வெவ்வேறு சந்தர்ப்பங்களிலே வெவ்வேறு உணர்வுகள் புலப்படும்படியாகச் சூரியயோதய வர்ணனை அமைந்து விடுகின்றது. அதற்கேற்றபடி வெவ்வேறு சந்தங்களும் பயன்படுத்தப்படுகின்றன. கம்பனில் முதற் சூரிய உதயம் வேள்வி காக்க விசுவாமித்திர முனிவர் இராமனையும் இலக்குவனையும் காட்டுக்கு அழைத்துச் செல்லுஞ் சந்தர்ப்பத்தில் " அலர் கதிர்ப்பரிதி மண்டிலம் அகன் குன்றின் நின்று இவர" என்னும் வர்ணனைக்கமைய நடைபெறுகின்றது. ஆனால் முழுமையான சூரியோதயக் காட்சி முதன் முதலாக தாடகைவதம் முடித்து அகலிகை

சாபவிமோசனம் பெற்று முனிவரும் இராமலக்குவரும் மிதிலையை அடைவதற்கு முன்னர், நடைபெறுகின்றது. வெற்றிப் பெருமிதத்துடன் சோனை நதியை அண்டிய ஒரு சோலையிலே அம்மூவரும் தங்குகின்றனர். வெற்றிப் பெருமிதம் இருந்ததேயொழியப் பரபரப்பு இருக்கவில்லை. இத்தகைய தன்மையுடன்தான் அடுத்தநாள் காலை சூரியன் உதிக்கிறான்.

***காலன் மேனியின் கருகிருள் கடிந்துல கழிப்பான்***
***நீல ஆர்கலி தேரோடு நிறைகதிர்க் கடவுள்***
***மாலின் மாமணி உந்தியி லயனோடு மலர்ந்த***
***மூல தாமரை முழுமலர் முழைத்தென முழைத்தான்***

அகலிகை 4.

பரபரப்பற்ற பீடு நடைச் சந்தம் இச்சந்தர்ப் பத்திலே உபயோகப்படுகின்றது. இராமன் சீதையைக் கன்னிமாடத்திலே கண்டு, நோக்கி, இருவரும் மாறி இதயம் புகுந்த பின்னர், இரவு முழுவதும் இருவரும் விரக வேதனையுற்றனர். அடுத்த நாட்காலை கதிரவன் உதயம் காமனை எரித்த கடவுளின் நெற்றிக்கண்போல் உதித்ததாகக் கம்பன் கூறுகிறான். இராமனுடைய வேதனையைப் போக்குவதற்கு வேகமாகச் செயற் படுகிறவன் போலக் கதிரவன் உதயமாவதாகவே கம்பன் கருதுகிறான். எனவே, அதற்கேற்ற சந்தத்துடன்,

***` ததையும் மலர்ந்தா ரண்ணல்***
***இவ்வண்ணம் மயலுழந்து தளரும் ஏல்வை***
***சிதையும் மனத்து இடருடைய***
***செங்கமல முகம்மலரச் செய்ய வெய்யோன்***
***புதையிருளின் எழுகின்ற புகர்முக***
***யானையின் உரிவைப் போர்வை போர்த்த***
***உ தயகிரி யெனுங்கடவுள் நுதல்***
***கிழிந்த விழியேபோ லுதயஞ் செய்தான்.***

மிதிலை –150

என்று பாடலை அமைத்து விடுகிறான். ஆனால் இராமனுடைய திருமண நாளன்று கதிரவன் எழுந்ததை,

***‘ அஞ்சன ஒளியானும் அலர்மிசை உறைவாளும்***
***எஞ்சலில் மணம்நாளைப் புணர்குவர் எனலோடும்***
***செஞ்சுடர் இருள்கிறித் தினகரன் ஒரு தேர்மேல்***
***மஞ்சனை அணிகோலம் காணிய எனவந்தான்’***

கடி–21

என்று கம்பன் கூறுகிறான். திருமணக் கோலத்தைக் காணுதற்குக் கதிரவனுக்கு இருந்த ஆவல், விருப்பு, மகிழ்ச்சி, ஆகியனவெல்லாம் புலப்படுத்தும் படியான சந்தத்துடனே கவிதை அமைக்கப்பட்டுள்ளன.

இவ்வாறு இராமாயணம் முழுவதிலும் சூரியன் எழுந்த சந்தர்பத்துக்கேற்ற சந்தம் அமைக்கப்பட்டுள்ளது. அப்பாடல்களையே தனியாக எடுத்து நோக்குவது சுவையுடையதாகும்.

சங்க இலக்கியங்களிலே வஞ்சிப்பா என்றொரு வகையான பா உபயோகப்படுத்தப்பட்டது. வீரமும் விறுவிறுப்பும் பொருந்தியே சந்தர்ப்பங்களிலே அப் பாவகை பெரும்பாலும் உபயோகிக்கப்பட்டது. செல்வக் கடுங்கோ வாழியாதனுடைய வீரத்தினைப் புலப்படுத்தும் கபிலர் அவனுடைய வீரச் செயல்கள் சிலவற்றை நிரைப்படுத்திக் கூறுகிறார். அச்சந்தர்ப்பத்திலே,

***" கடுங்கண்ண கொல்களிற்றால்***
***காப்புடைய எழுமுருக்கி***
***பொன்னியல் புனைதோட்டியால்***
***முன்துரந்து சமதந்தாங்கவும்"***

என வஞ்சியடிகளைப் பயன்படுத்துகிறார். கம்பனும், அனுமனைக் கைப்பற்றி வரும்படி சினங்கொண்ட இராவணன் கூறிய சந்தர்ப்பத்திலும் அனுமனைப் பிடிக்க வீரர் விரைந்த சந்தர்ப்பத்திலும் முன்னைய வஞ்சிப்பாவின் ஓசை யெழக்கூடிய வடிவத்திலும் சந்தத்திலும் கவிதைகளை அமைக்கிறான்.

***" உண்ட நெருப்பைக்***
***கண்டனர் பற்றிக்***
***கொண்டணை கென்றான்***
***அண்டரை வென்றான்"***

இல–எரியூட்டு–47

என்பது இராவணன் கட்டளை. விரைவான நடவடிக்கையை எதிர்பார்க்கும் உணர்வினையும் கோப உணர்வினையும் புலப்படுத்தும் சந்தம் அமைந்துள்ளது. கட்டளையை ஏற்று இலங்கை வீரர் சென்றது.

***" சாரயல் நின்றார்***
***வீரர் விரைந்தார்***
***நேரிதும் என்றார்***
***தேரினர் சென்றார்***

இல. எரியூட்டு–49

என்று கூறப்படுகின்றது. வீரத்தினையும் வேகத்தினையும் புலப்படுத்தும் சந்தத்தினை இராமன் சீதையை மணப்பதற்கு வில்முறித்த சந்தர்ப்பத்திலும் கம்பன் பயன்படுத்துகிறான். சதானந்தர் முரிக்க வேண்டிய வில் விவரத்தைக் கூற

*" நினைத்தமுனி பகர்ந்தவெலாம் நெறியுன்னி அறிவனுந்தன்*
*புனைந்தசடை முடிது ளக்கிப் போரேற்றின் முகம்பார்த்தான்"*

கார்–25

அவ்வேளையில் விசுவாமித்திர முனிவர் பார்த்த பார்வையின் பொருளை நன்கு உணர்ந்த இராமன்

*" பொழிந்த நெய்யாகுதி வாய்வழி பொங்கி*
*எழுந்த கொழுங்கனல் என்ன எழுந்தான்'*

கார்–26

எனப் பொருத்தமான உவமை மூலமும்சந்தத்தின் மூலமும் கூறும் கம்பன் அவன் நடந்து சென்றதை

*' மாக மடங்கலும் மால்விடை யும்பொன்*
*நாகமும் நாகமும் நாண நடந்தான்'*

கார்–32

என்று கூறும்போது சந்தத்துள்ளல், வில் நோக்கி நடந்த இராமன் வீரநடையை நன்கு காட்டுகிறது.

தொழிலது புடைபெயர்ச்சிக்கேற்ற சந்தத்தினை உபயோகிப்பதிலே கம்பன் கைதேர்ந்து விளங்குகிறான். இந்திரசித்து விடுத்த அரவக்கணை (நாகபாசம்) இராமனையும் விபீடணனையும் விடுத்து இலக்குவன் உட்பட்ட ஏனையோர் யாவரையும் பிணித்துவிடுகிறது. "இந்த அரவக்கணை இலக்குவனைக் கொன்றால், நானும் இறப்பேன்" என்று நினைக்கிறான் இராமன். இந்நிலை யைத் தேவர்களெல்லாம் பார்த்து பயந்து, இந்நிலை எப்படிச் சென்று முடியுமோ? என்று எண்ணினர். இவர்களின் அருகே கருடாழ்வானும் நின்றான். இராமனிடம் கொண்ட அன்பின் பெருக்காலே, மனம் நடுங்கி, இத்துன்பத்திலிருந்து இராம இலக்குவரை மீட்பதற்காகக் கருடன் இருள் நடுவே மெதுவாகப் புறப்பட்டுவரலானான். இச்சந்தர்ப்பத்திலே கம்பன் கையாளும் சந்தம் இறக்கையை அடித்து வேகமாக வரும் கருடனில் புடைபெயர்ச்சியைக் காட்டுவதாயுள்ளது.

*அசையாத சிந்தை அரவால் அணுங்க*
*அழியாத உள்ளம் அழிவான்*
*இசையால் இலங்கை அரசோடும் அண்ணல்*
*அருள் இன்மை கண்டு நயவான்*
*விசையால் அனுங்க வடமேரு வையம்*
*ஒளியால் விளங்க இமையாத்*
*திசையானை கண்கள் முகிழா ஒடுங்க*
*நிறைகால் வழங்கு சிறையான்"*

நாகபாசம்–244

'அசையாத சிந்தை' 'அரவாலணுங்க' ' அழியாதவுள்ளம்' அழிவான்' என்று ஒவ்வொரு தொடரும் கருடன் இறக்கை ஒவ்வொருதடவை மேலே கிளம்பி கீழே விழ உந்திச்செல்லும் செலவைக் குறிக்கின்றது.

பல மன்னர்களாலும் தூக்கவே முடியாதிருந்த சிவ தனுசினை, சனகனுடைய சபாமண்டபத்திலே, பூ மாலை ஒன்றை எடுப்பதுபோல மிக இலகுவாகத் தூக்கிய இராமர் அதனை வளைத்து முரித்துவிடுகிறார். இக்காட்சியைக் கண்ட சீதையினுடைய தோழி நீலமாலை அச்செய் தியைச் சீதைக்கு அறிவிக்க ஒடுகிறாள் அவ்வில்லை முறித்தவன் யாரென்பது நீலமாலைக்கு நன்கு தெரியும். கன்னிமாடத்திலிருந்து சீதை கண்டது அவனையே என்பதும், அவனை நினைத்தே அவள் வருந்திக்கொண்டிருக்கிறாள். என்பதையெல்லாம் தோழியாகிய நீலமாலை அறியாமலிருப்பாளா? எனவே அவனே வில்லை முறித்துவிட்டான் என்னும் விடயம் அவள் உள்ளத்திலே உவகையை ஊட்டுகிறது. அந்த மகிழ்வான நல்ல செய்தியைத் தானே சீதைக்கு முதலில் கூறிவிட வேண்டும்என்ற ஆவல் அவளுக்கு. எனவே ஒடுகிறாள். அவள் உவகையினையும் வேகத்தையும் அச்சந்தர்ப்பத்திலே கம்பன் கையாளும் சந்தம் புலப்படுத்துகின்றது.

*" வடங்களும் குழைகளும் வான வில்லிட*
*தொடர்ந்த பூங் கலைகளும் குழலும் சோர்தர*
*நுடங்கிய மின்னென நொய்தின் எய்தினாள்*
*நெடுந்தடங் கிடந்த கண் நீல மாலையே"*

கார்–56

" பெருவீரர்களும் பெருங்கவிஞர்களும் ஒரே காலத்திலே தோன்றுகின்றனர்" என்னும் ஆங்கிலக் கவிஞர் ஒருவனுடைய கூற்றுக்கேற்றபடி " கங்காநதியும் ஈழமும் கடாரமும் கைவரசிங் காசனமிருந்த" சோழப்பெருமன்னர்கள் காலத்திலே தோன்றிய பெருங் கவிஞன்தான் கம்பன். அவனுடைய இலக்கியம் பேரிலக்கியம். எத்தனையோ பெருமைமிகு பண்புகளைக் கொண்டமைவது. அவற்றுள் ஒன்று அவனுக்கு கைவந்த சந்தம். கம்பனுடைய கற்பனை விரிவுக்கும் பாடுபொருளின் சந்தர்ப்பங்களுக்கும் ஏற்ற வகையிலே நூற்றுக்கணக்கான சந்த வண்ணங்கள் வந்தமைந் துள்ளன.

# கம்பன் காட்டும் பண்பாட்டுக் கோலங்கள்



பேராசிரியர் ப. கோபாலகிருஷ்ணன்

கம்பனது இராமாயணம் ஒரு பண்பாட்டுக் கருவூலம். கம்பன் தனது இராமகதையை மனித சமுதாயம் முழுவதற்கும் பயன்படத்தக்க ஒரு பேரிலக்கியமாகப் படைத்தளித்துள்ளான். அவன் தனது காப்பியத்தின் மூலம் தமிழுக்குப் புதுவாழ்வு தேடித் தந்துள்ளான். பண்பாட்டுக் கோலங்களைச் சித்திரிப் பதற்குத் தனது பேரிலக்கியத்திற் கிடைக்கும் ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் மிகவும் நிதானமாகவும் நுட்பமாகவும் பயன்படுத்திக் கொண்ட பெருமை அவனையே சாரும். இத்தகைய சிறப்பினால்தான் அன்று தொட்டு இன்றுவரை எண்ணற்ற மாந்தர்கள் கம்பராமா யணத்தைப் பல்வேறு கோணங்களில் சுவைத்து வருகின்றனர். கம்பனுக்கு விழா எடுத்து உவகை கொள்கின்றனர். அனைத்து மக்களது உள்ளங்களையும் கொள்ளை கொள்ளும் காவியமாக இலக்கிய உலகில் இன்றும் பவனி வருகின்றது கம்பராமாயணம். இச்சிறப்பு மிக்க காவியம் கம்பனுக்கு 'கவிச்சக்ரவர்த்தி' என்ற சிறப்புப் பட்டத்தையும் ஈட்டித்தந்தது.

இக் கவிச்சக்கரவர்த்தியை மகாகவி பாரதி,

*யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்*
*வள்ளுவன் போல் இளங்கோவைப் போல்*
*பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை*
*உண்மை வெறும் புகழ்ச்சியில்லை*

எனப் போற்றியுள்ளான். பொய்யாமொழிப் புலவர் திருவள்ளுவர், இளங்கோவடிகள் போன்ற மேதைகள் இயற்றிய நூல்களால் தமிழ்மொழி வளமும் பெருமையும் அடைந்தது. ஆனால் அம்மொழி பெருமையின் உச்சநிலை அடைந்தது கம்பராமாயணம் எழுந்த பின்னரே எனக் கூறின் மிகையில்லை. காவியப் பண்பு, கவிதைச்சிறப்பு ஆகியதுறைகளில் தனக்கென ஒரு முத்திரையை கம்பன் பதித்துக் கொண்ட காரணத்தால் கம்பராமாயணம் ஈடு எடுப்பு அற்ற ஒரு பெரு நூலாகப் புகழடைந்தது. 'இறவாத புகழுடைய நூல்' என்ற பாரதியின் வாக்கு இக்காவியத்திற்கு நன்கு பொருந்தும். கம்ப ராமாயணத்தை ஆராய்ந்து அறிந்த ஏனைய அறிஞர் பலரது முடிவும் இதுவேயாகும்.

மனிதனைப் பொறுத்தமட்டில் மனித உணர்வு விலங்கு உணர்வு ஆகிய இரு உணர்வுகளும் அவனிடத்தே தலையெடுக்கத் தவறுவதில்லை. விலங்கு உணர்வினின்றும் நீங்கி மனித உணர்வு மிக்க ஒருவனாகவும் அதனினின்றும் வளர்ச்சி கண்டு தெய்வத் தன்மை கொண்ட ஒருவனாகவும் விளங்கும் போது அவனது பிறவி முழுமை பெற்றதாக அமையும். மனிதப் பிறவியை எடுத்த ஒருவன் பண்பாட்டு நிலையில் முழுமை பெற்ற ஒருவனாக வளர்ச்சி காணும் போது தான் எடுத்த பிறவியின் நோக்கம் அர்த்தமுள்ளதாகவும் நிறைவு பெற்றதாகவும் அமையும். அத்தகைய ஒரு நிலை எப்படிப்பட்டது எனச் சிந்திப்பார்க்கு கம்பன் படைத்த இராமனே எம் கண்முன் வந்து நிற்பான். கம்பராமாயணம் ஒரு பண்பாட்டுக் காவியமாக மேன்மையடைந்ததற்குரிய முக்கிய காரணங்களில் ஒன்று அக்காவியத்தின் தலைவனது சிறந்த குண நலன்கள். மக்களுக்கு இருக்க வேண்டிய எல்லா நலன்களும் பெருமைகளும் திரண்ட ஓர் உருவமே காவியத்தலைவனாகிய இராமன். அவனிடத்து மனித்தன்மை மட்டுமன்றித் தெய்வத் தன்மையும் உள்ளது. இந்தியாவில் ஆதிகவியென புகழடைந்த வால்மீகி இயற்றிய இராமாயணத்தை முதல் நூலாகக் கொண்டமை இதன்சிறப்புக்கு மற்றொரு காரணம் எனலாம். அத்துடன் கம்பன் வடமொழி இராமாயணத்தை மொழிபெயர்க்குங்கால் பிற நூல்களிற் காணாத பல புதிய பண்பாட்டுக் கோலங்களையும் கருத்துக்களையும் காவியத்திற் புகுத்திப் பெருமை பெறுகின்றான்.

இன்றளவும் கம்பன் புகழ் வளர்ந்து வருவதற்குக் காரணம் அவன் பண்பாடு பற்றிய பல நுட்பமான அம்சங்களைத் தன் காவியத்தில் புகுத்தியமையேயாகும்.

அவன் புகழ் வளர்ச்சி பெற்று வருவதே ஒரு தனி வரலாறு. பல்துறைப்புலவன் எனப் போற்றப்படும் அவன் ஓர் உலகமகாகவிஞன்; மானிடனே ஆனாலும் ஆன்ம நேய ஒருமைப்பாடுடையவன்; சிறந்த பண்பாட்டு உணர்வு மிக்கவன். பிறப்பால் தமிழன். வாழ்வால், மனத்தால் உலகளாவிய சிந்தனையாளன். தமிழன் எந்த மொழியாளர் முன்னிலையிலும் தலைநிமிர்ந்து நிற்கமுடிகின்றதென்றால் அது கம்பனாற் தான் எனில் மிகையில்லை. எம்மொழியில் எழுந்த காவியத்திற்கும் தமிழ் மொழிக்காவியம் எவ்வகையிலும் தாழ்ந்ததல்ல என்ற மேன்மையும் கம்பனது கைவண்ணத்தினாலேயே எமக்குக் கிட்டியுள்ளது.

கம்பனது படைப்பாகிய இராமாயணம் பெருங் காப்பிய நிலையிலும் அதற்குரிய தரத்திலும் தனக்கேயுரிய சிறப்பைக் கொண்டுள்ளது. கம்பன் பல்வேறு பண்பாட்டுக் கோலங்களைச் சித்திரிப்பதற்கு அடிப்படையாக அமைவது அவனது கவிதைச் சிறப்பு ஆகும். அவனது கவிதை நவில் தொறும் நயம் பயப்பது; அறிதொறும் மேலும் அறிந்து எம் அறியாமையை நீக்க வேண்டும் என்ற ஆவலைத் தூண்டுவது; ஐம்புலன்களும் பெறும் இன்பத்தை ஒத்த இன்பத்தை அளிப்பது. தோண்டத் தோண்ட வளம் அளிக்கும் சுரங்கம் போன்றது. நீங்கா நினைவு மிக்க காவியம் என்பதனால் இக்காவியப் புலவனாகிய கம்பனுக்கு இன்றவும் விழாக்கள் மூலம் நன்றிக்கடன் செலுத்துகிறோம். கம்பனுக்கு ஒரு விமரிசனம். அது ரசிகர்களின் ரசனையின் உச்சமாக அமைந்தது.

***இம்பர் நாட்டிற் செல்வமெலாம்***
***எய்தி அரசாண்டிருந்தாலும்***
***உம்பர் நாட்டிற் கற்பகக் கா***
***ஓங்கு நீழல் இருந்தாலும்***
***செம்பொன் மேரு அனைய புயத்***
***திறல்சேர் இராமன் திருக் கதையிற்***
***கம்பநாடன் கவிதையிற் போற்***
***கற்றோர்க் கிதயங் களியாதே***

இந்த ரசனை உணர்வு வற்றாத வளமிக்க ஊற்றாக எம்மிடையே இருந்து வருகின்றது.

எதனை எந்தச் சந்தர்ப்பத்தில் எவ்வாறு அமைக்க வேண்டுமோ அவ்வாறு அமைத்துக் கூறுவதில் வல்லவன் கம்பன். அவன் ஒன்றைத் தொட்டால் அவனை அறியாமலே அது எவ்வாறு அமைய வேண்டுமோ அவ்வாறு அமையும். அது அவனுக்கேயுரிய இயற்கைக் கொடை. இக்காரணத்தால் சமய உணர்வுடையோர் இராமனது திருத்தோற்றத்திலும் அவனது பண்புமிக்க குணநலன்களிலும் தம்மை இழந்து விடுகின்றனர். இலக்கிய ஆர்வலர்கள் கம்பனது வியக்கத்தக்க கவிதையில் ரசனைவழி தம்வயம் இழந்து விடுகின்றனர். இளந்தலைமுறையினர் இக்காவியத்தில் இடம் பெறும் பாத்திரங்களின் வழி வெளிப்படும் பண்பாடு, வீரம், அஞ்சாமை, நுண்ணறிவு, சகோதரத்துவம், மனித நேயம், அன்பு போன்ற பண்பு நலன்களில் மகிழ்கின்றனர்.

இவ்விலக்கியத்தின் வழியே மனித குலத்திற்கு வழங்கப்படும் பண்புகள் சமூக நிலையில் மேன்மை பெறவும் மனித ஆளுமையை வளர்த்துக் கொள்ளவும் சமூகத்தை வழி நடத்தவும் உதவிவருகின்றன. அந்த அளவுக்குக் கம்பனது பண்பாட்டுச் சிந்தனைகள் மனித உள்ளங்களுக்கு உரமூட்டுபவையாக உள்ளன. எத்தகைய சூழ்நிலையிலும் எமது வாழ்வை அமைத்து நிறைவு கொள்ளக் கூடிய ஓர் அனுபவ பாடத்தைப் புகட்டுகின்றது இக்காவியம். இராமன் தர்மத்தின் வடிவமாக விளங்குகின்றான். அவனது பக்தனாகிய அனுமன் செயற்திறன் மிக்கவனாயும் நுண்ணறிவு உள்ளவனாகவும் வீரநெஞ்சத்தினனாகவும் குருபக்தி மிக்கவனாகவும் விளங்குகின்றான். நாம் இராமனாகத் தான் வாழ முடியாவிட்டாலும் அனுமனாகவாவது வாழ முயற்சிக்க முடியாதா? என்ற அனுபவ பாடத்தை இக்காவியம் காலந்தோறும் புகட்டி நிற்கின்றது. ஸ்ரீ இராம பக்த அனுமன் என்று விளங்கிய அவனுக்கும் எண்ணற்ற அடியவர்கள் எம்மிடையே உண்டு. அவனது குணவியல்புகளில் தம்வயம் இழந்தவர்கள் அவனைத் தெய்வமாக வழிபடுகின்றனர். காரியசித்திக்கு அவனே உதாரணம். அனுமனை நினைந்து காரியமாற்றினால் அது வெற்றியில் முடியும் என்ற நம்பிக்கையும் உள்ளது. அனுமன் இராமதூதன்; அவனுக்கே இப்பெருமை என்றால் அவனது தலைவனாகிய இராமனது பெருமை அளவிடற்கரியது. எனவேதான் கடவுள் வணக்கத்தில்,

***“ ...... அலகிலா விளையாட் டுடையா ரவர்***
***தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே”***

எனக் கம்பன் இறைவனுக்குரிய சரணாகதியை முன்வைத்துப் பாடுகின்றான். இத்தகைய சிறப்பம்சங்களைத் தனது காவியத்திற் பாடிய காரணத்தினால் மகாகவி பாரதி, ‘ கம்பன் என்றொரு மானிடன் வாழ்ந்ததும்’ என அவனை ஏற்றி மொழிகின்றான். தெய்வப்புலமை மிக்கவனாகத் திகழ்ந்த கம்பனைத் தெய்வமாகவே போற்றும் சிறப்பும் உள்ளது.

***‘ கம்பநாடன் கழல் தலையிற் கொள்வாம்’***
***‘ கம்பர் ஆம் புலவரைக் கருத்து இருத்துவாம்,’***

***'மாதவன் கம்பன் செம்பொன் மலரடி தொழுது வாழ்வாம்'***

***' தெய்வப் புலமைக் கம்ப நாட்டு ஆழ்வார் பதத்தைச் சிந்திப்பவர்க்கு யாதும் அரியது அன்றே'***

என்ற புகழுரைகளின் வழி அவனது தெய்விகச் சிறப்பினை உணரமுடிகின்றது. மக்களது நல்வாழ்வுக்கேற்ற சிந்தனைகளை சமூகத்தின் நன்மைக்காக கம்பன் இக்காவியத்தில் வாரி வழங்குகின்றான். வாழ்வியல் முறையையும் அரசியல் இயல்பையும் அறிவுரைகளையும் காவியத்தில் புகுத்தி அறநூற் பொருளுக்கேற்ப அதனைப் படைத்துள்ளான். மானுட அன்பு, இராமாவதாரச் சிறப்பு ஆகிய அம்சங்களே இக்காவியத்தின் ஆத்மா என்று கூடச் சொல்லலாம். வாழ்க்கையின் இலக்காக அமைவது இலக்கியம் என்றும் வாழ்வின் இயல்பினை இயம்புவது இலக்கியம் என்றும் கூறப்படும் கருத்துக்களுக்குச் சிறந்த எடுத்துக் காட்டாக அமைவது கம்பனது இராமாயணம் ஆகும்.

கவிஞனது இறைவாழ்த்துக்கள் அனைத்தையும் நாம் ஆராய்ந்து பார்த்தால் எமது பண்பாட்டிற்கேற்ற இறை தத்துவ விளக்கமாகவே அமைந்து சிறப்புப் பெறுகின்றன. யுத்த காண்டத்தில் வரும் இறைவாழ்த்து எவ்விளக்கமும் பொருந்தும் வண்ணம் எல்லாவற்றிக்கும் எல்லாமாக அமையும் இறைமையின் சிறப்பைச் கூட்டுகின்றது.

***ஒன்றே என்னின் ஒன்றே ஆம் பல என்று உரைக்கின் பலவே ஆம்***
***அன்றே என்னின் அன்றே ஆம் ஆமே என்னின் ஆமே ஆம்***
***இன்றே என்னின் இன்றே ஆம் உளது என்று உரைக்கின் உளதே ஆம்***
***நன்றே நம்பி குடிவாழ்க்கை நமக்கு இங்கு என்னோ பிழைப்பு அம்மா***

ஒரு நாடு பண்பாட்டு நலன்களைப் பேணிப் பாதுகாக்கும் நாடு எனச் சிறப்படைவதற்கு அந்நாட்டு மக்களது தெய்வ நம்பிக்கையே அடிப்படையாக அமைகின்றது.

அருள் நிறைந்த ஆலயத்தில் தமது மனதைக் கவர்ந்தனவற்றைக் கண்டு ரசிப்பது போன்று கம்பனது பாத்திரப் படைப்புக்கள் ரசனைக்குரியன என்பது மட்டுமன்றி பண்பாட்டுச் சிறப்புடையனவாகவும் உள்ளன. இக்காவியத்தில் பல்வேறு குணநலன்கள் பொருந்திய விதவிதமான பாத்திரங்கள் இடம் பெறுகின்றன. அத்தகைய பாத்திரங்கள் வெவ்வேறு பாங்கில் மதிப்புப் பெறுவதற்குரிய காரணம் சிறந்த பண்பாளனாகிய இராமன் என்னும் பாத்திரத்தோடு கொண்டுள்ள இணக்கமேயாகும். இராமனோடு இணக்கம் ஏற்படாது போய்விடுமிடத்து அப்பாத்திரங்கள் இருந்தும் இல்லாதவைபோல் ஆகிவிடுகின்றன. இராமனோடு பாத்திரங்களை இணைத்துச் சிறந்ததோர் காவியத்தை நன்கு செய்து முடித்திருக்கின்றான் கவியரசன் கம்பன்.

ஒரு நாட்டைப் பற்றிக் கனவு காணும் மகாகவி அந்நாடு எல்லாவகையிலும் குறைவற்றதாயும் எவ்வகைப் பண்பாடுகளும் நிறைந்துள்ளதாகவும் இருக்க வேண்டும் என விரும்புகின்றான். இயற்கை எழிலுடன் சிறந்து விளங்கும் ஒரு நாட்டில் மக்களிடையே அவர்களது பண்பை வெளிப்படுத்தும் பல விழாக்கள் சிறப்பாக நடைபெறுவதையும் கவிஞன் பாடல்களின் வழி எமக்கு உணர்த்துகின்றான். அந்நாட்டில் எங்கும் ஒரே கொண்டாட்டம். திருமணவிழா, இசைவிழா சொற்பொழிவு, கோவிற்றிருவிழா போன்ற அனைத்தும் எமது பண்பாட்டுக் கோலங்களாகச் சிறப்புடன் இடம்பெறுகின்றன. பருந்தோடு நிழல் செல்வது போன்று பாட்டோடு இசை இயங்கிச் செல்கின்றது. விருந்தினரை எவ்வளவு ஆவலுடனும் ஆசையுடனும் வரவேற்பார்களோ அவ்வளவு ஆசையோடு திருவிழாக் கொண்டாட்டத்தை அந்நாட்டினர் வரவேற்று அனுபவிக்கின்றனர் எனக் கூறி அந்நாட்டின் பண்பாட்டினை தெளிவாக எமக்கு உணர்த்தி விடுகின்றான் கம்பன்.

மக்களது பண்பாட்டுச் சிறப்பினைக் கம்பன் பிறிதோர் கோணத்தில் நின்று எமக்கு அறியத்தருகின்றான்.

***கூற்றம் இல்லை ஓர் குற்றம் இலாமையால்***
***சீற்றம் இல்லை தம் சிந்தையின் செம்மையால்***
***ஆற்றல் நல்லறம் அல்ல( து) இலாமையால்***
***ஏற்றம் அல்லது இழிதக (வு) இல்லையே***

அந்நாட்டில் உண்மை இல்லை. ஏனெனில் பொய் உரைப்பவர்கள் இல்லாததே காரணம். யாதும் கொள்வார்கள் இலாமையால் கொடுப்பார்களும் இல்லை எனக் கம்பன் அந்நாட்டின் பண்பாட்டுச் சிறப்பினை நன்கு சித்திரித்துக் காட்டுகின்றான். ஒரு நாடு பண்பாட்டு நிலையில் ஏற்றம் காண்பதற்கு அடிப்படையாக அமைவது கல்வியே. எல்லோரும் எல்லா

நிலைகளிலும் நிறைவு பெற்றவர்களாக விளங்கும் ஒரு நாட்டையே போற்றுகின்றான்.

***அறிவுடையார் எல்லாம் உடையார். அறிவிலார்***
***என்னுடையரேனும் இலர்***

என்ற வள்ளுவனின் வாக்கை நினைவுக்குக் கொண்டு வருகின்றது அந்நாட்டின் கல்வி நிலை.

***கல்லாது நிற்பார் பிறர் இன்மையின் கல்வி முற்ற***
***வல்லாரும் இல்லை அவை வல்லர் அல்லாரும் இல்லை***
***எல்லோரும் எல்லாப் பொருளும் எய்தலாலே***
***இல்லாரும் இல்லை உடையார்களும் இல்லை மாதோ***

என்ற நிறைவு பெற்ற நாட்டை எமக்குக் காட்டுகின்றான் கம்பன், இந்நிலைக்கு கல்வியின் மேன்மையே காரணமாகும் எனக் கவிச்சக்கரவர்த்தி அழுத்தந் திருத்தமாகக் கூறி விடுகின்றான். கல்வி என்ற விதையை விதைத்து விட்டால் அது முளைக்கும். காலப்போக்கில் அது நன்கு வளர்ச்சியடையும். வளர்ந்து கேள்வி என்ற கிளைகளை நான்கு திசைகளிலும் பரப்பும். அந்தக் கிளைகளில் நல்ல முயற்சி என்னும் தளிர்கள் உண்டாகும். பின்னர் அன்பு என்னும் மொட்டு அரும்பும். அன்பாய் அரும்பிய மொட்டு அறமாய் மலரும். அறம்போன்ற மலர் போகக்கனியைத் தரும்.

***ஏகம் முதற்கல்வி முளைத் (து) எழுந்து எண்ணில் கேள்வி***
***ஆக முதல்திண் பணைபோக்கி அருந்தவத்தின்***
***சாகந் தழைத்து அன்(பு) அரும்பித் தருமம் மலர்ந்து***
***போகம் கனி ஒன்று பழுத்தது போலும் அன்றே!***

பண்பாடு செம்மை பெறுவதற்கு அடிப்படையாக அமையும் கல்வியில் ஒரு நாடு மேன்மையுற்றால் எல்லா இன்பங்களும் எளிதாய்க் கிடைத்துவிடும் என்ற உண்மையைத் தனது காவியத்தின் மூலம் உலகுக்கு உணர்த்துகின்றான் கம்பன். கம்பனது காவியத்தினால் தமிழ்வளரும்; நாடு ஏற்றம் காணும்; மக்கள் அறிவுடையோராய் விளங்குவர்; நாடே பண்பாட்டில் முழுமையடையும். கம்பனது காவியத்தைக் கற்கும் போது அவனது பாடல்கள் எல்லையற்ற சுவை நயம், இன்பம்' ஆகியவற்றைக் கொண்டவை என்ற உண்மை புலப்படும். 'யாவரே முடிவு உறக் கண்டார்' எனவும் 'யாவரோ முடிவு எண்ணவல்லார்' எனவும் எம்மைச் சிந்திக்க வைக்கின்றது அப்பண்பாட்டுக் களஞ்சியம்.

இச்சிறப்பினாலேயே ஊர்தோறும் கம்பனுக்கு விழா எடுத்து மனநிறைவு கொள்கின்றது மனிதகுலம். கம்பன் கலை வளத்தைப் போற்றவந்த புத்தனேரி ரா. சுப்பிரமணியன்

***கம்பன் திருவிழா நாம் நடத்தி– அவன்***
***காவியத்தின்பம் படித்துணர்வோம்***
***கம்பராமாயணக் காவியத்தைத் – தங்கக்***
***கட்டிட மிட்டினிக் காப்போமடி***

எனக் கூறிய கருத்தாழம் மிக்க சிந்தனைகள் இற்றை நாளில் செயல்வடிவம் பெற்று எம்கண்முன்னே சிறப்புடன் நடத்தேறி வருகின்றன. அதுவே கம்பனுக்கு நாம் செலுத்தும் நன்றிக்கடன் எனக் கூறின் மறுப்பதற்கு எவருமில்லை.

*நாரணன் விளையாட்டு எல்லாம் நாரத முனிவன் கூற.*
*ஆரணக் கவிதை செய்தான், அறிந்த வான்மீகி என்பான்;*
*சீர் அணி சோழ நாட்டுத் திருவழுந்தூருள் வாழ்வோன்,*
*கார் அணி கொடையான், கம்பன், தமிழினால் கவிதை செய்தான்.*

*அம்பிலே சிலையை நாட்டி அமரர்க்கு அன்று அமுதம் ஈந்த*
*தம்பிரான் என்ன, தானும் தமிழிலே தாலை நாட்டி,*
*கம்ப நாடு உடைய வள்ளல், கவிச் சக்கரவர்த்தி, பார்மேல்*
*நம்பு பாமாலையாலே நரர்க்கும் இன் அமுதம் ஈந்தான்.*

# கம்பனின் ஞானத்தெளிவு

அதி. வண. கலாநிதி எஸ். ஜெபநேசன்
(பேராயர், தென்னிந்திய திருச்சபை, யாழ்ப்பாணத் திருமண்டலம்)

கம்பனின் காவியத்திலே வீரத்தைக் காணலாம்; தியாகத்தைக் காணலாம்; காதலைக் காணலாம்; நட்பைக் காணலாம்; இவை எல்லா இலக்கியங்களிலும் உள்ளன. ஆனால் கம்பராமாயணத்திலே காணப்படும் ஞானத் தெளிவுக்கு நிகரானதை வேறு இலக்கியங்களிலே காண்பதரிது. கோசல நாட்டின் முடியைத் துறந்து, தவம் புரியத் தசரதன் செய்த முடிவைக் கம்பன் விளக்கும் விதம் நம் உள்ளத்தைப் பக்குவப்படுத்தும் அருமருந்தாக விளங்குகின்றது.

தசரதச் சக்கரவர்த்தி தேவர்களுக்காக யுத்தம் செய்த மகாவீரன். மூன்று உலகங்களிலும் பெருங் கீர்த்தி பெற்று இந்திரன், குபேரன் இவர்களுக்குச் சமானமாகவிருந்தான். அவனுடைய ஆட்சியிலே கோசல நாட்டு மக்கள் எவ்வித குறையுமின்றி இன்பமாக வாழ்ந்து வந்தார்கள். சத்துருக்கள் நெருங்க முடியாத வகையில் தசரதன் அயோத்தி நகரத்தை அமைத்திருந்தான். அவனைச் சூழ அன்பும் பண்பும் நிறைந்த தேவியர், தெய்வீகக் குழந்தைகள் இருந்தனர். வீரத்திலும் செல்வத்திலும் குறைவற்றிருந்த தசரதச் சக்கரவர்த்திக்குச் சிறப்பான மந்திரிகளும் இருந்தார்கள். பூஜை வேள்விச் சடங்குகள் நடத்துவதற்கு வசிட்டர், வாமதேவர் முதலிய ரிஷிகள் இருந்தனர். பூலோக இன்பத்தின் உச்சியை அடைந்திருந்தான் தசரதன். யாருக்குத்தான் இந்த சௌபாக்கியங்களைத் தொடர்ந்து அனுபவிக்க மனம் வராது?

ஆனால் பராக்கிரமசாலியான தசரதன் ஒருநாள் தன் நிலையை உணர்ந்தான். தலையிலே காதினடியிலே ஒரு மயிர் நரைத்துப் போயிருந்தது. இனி இராஜ்யபாரம் தனக்குக் கூடாது. துணிவு வாய்க்கப் பெற்ற, ஆற்றல் மிகுந்த சுறுசுறுப்புள்ள இளவரசன் இராஜ்யபாரத்தை யேற்க வேண்டும் என்று முடிவு செய்தான். இதுதான் தசரதனின் மிகப்பெருஞ் சாதனை. ஒரே ஒரு நரைமயிர்! அதனைக் கண்ணாடியிலே பார்த்தான் தசரதன். அது கூறிய செய்தியை மனமார ஏற்றுக் கொண்டான்.

*"மன்னனே யவனியை மகனுக்கீந்துநீ*
*பன்னருந் தவம்புரி பருவ மீதெனக்*
*கன்னமூ லத்தினிற் கழற வந்தென*
*மின்னெனக் கருமைபோய் வெளுத்ததோர்மயிர்"*

மனிதர்கள் பலவிதமான பருவங்களைக் கடந்து, மூப்படைந்து, உலக வாழ்வினின்றும் நீங்குகின்றனர். ஒவ்வொரு பருவத்திலும் ஒவ்வொரு விதமான இன்பம் இருக்கின்றது. ஒவ்வொரு வகையான கடமையிருக்கின்றது. இதனாலேதான் நமது ரிஷிகள் மனிதனின் வாழ்க்கைப் பயணத்தை பிரம்மச்சாரி, கிருகஸ்தன், வானப் பிரஸ்தன், சந்நியாசி என்று வகுத்தனர். இந்த அடிப்படையிலே ஒருவன் தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்வானாகில், தொல்லையின்றி வாழ்வான். ஆங்கிலத்திலே இதனை வளர்தல், ஈடுபடுதல்,ஒதுங்குதல், (Grewth, Invelvement, Withdrawal) என்று விளக்குவர். சிலர் பிள்ளைப் பருவத்திலேயே ஒதுங்கி விட முனைவர்; இன்னுஞ் சிலர் முதுமையடைந்த பின்னரும் தம்மை வளர்த்துக் கொண்டே இருப்பர். சிலருக்கு சமுதாயப் பணியில் ஈடுபட என்றுமே மனம் வராது. தம்மையே தொடர்ந்து வளர்ப்பர்.

தசரதச் சக்கரவர்த்தி, தலைமயிர் ஒன்றைக் கண்டவுடனேயே ஒதுங்கிப் போகவேண்டுமென்று முடிவு செய்தான். ஷேக்ஸ்பியர் என்ற ஆங்கில மகாகவி 'King Lear' என்ற நாடகத்திலே மன்னன் லியர் எவ்வாறு இந்த உணர்வு மீதுரப் பெற்றமையினால் இராஜ்யபாரத்தைத் துறக்க முடிவு செய்தான் என்பதனை விளக்குகின்றான். முதுமை பீடித்துக்கொண்டது. "இளம் நெஞ்சங்களிடம் இராஜ்யபாரத்தைக் கையளித்துவிட்டுச் சிறிது சிறிதாக மரணத்தை நோக்கித் தவழ்வோம்"

என்கிறான் மன்னன்.

"Tis our fast intent
To shake all cares and business
From our age
Conferring them on younger strengths
while we
Unburden'd crawl toward death"

இந்தப் பக்குவத்தைத் தசரதச் சக்கரவர்த்தி அடைந்துவிட்டான். ஒவ்வொரு பருவத்திலும் ஒரு வாழ்க்கை முறையும் அதனோடு இணைந்த இன்பமும் இருக்கின்றது, என்பதை உணர்ந்து கொண்டான். வாலிபப் பராயம் மறைகின்றது. காதல், கொடை,ஆட்சி, விழா, வீரம் எல்லாமே வாலிபத்துடன் மறையலாம். ஆனால் முதுமை அதனுடைய இன்பங்களைத் தருகின்றது. அமைதி, ஞானம், சாந்தி, இறையிணைவு, ஒய்வு, நித்திரை எல்லாமே இன்பமானவை. இவை முதுமை கொடுக்கும் பரிசில்கள்.

இதனையே வோல்ற் விற்மன் (Walt Whitman) என்னும் ஆங்கில கவிஞர் பின்வருமாறு விளக்குகின்றார். "Day of action, sun, ambition, laughter, night follows close with millions of stars, sleep and restinering darkness"

பகற்பொழுது, செயல், ஞாயிறு சாதனைவேட்கை சிரிப்பு, இரவு தொடர்கிறது, கோடானுகோடி விண்மீன்கள், நித்திரை சுகமளிக்கும் இருள்.

தசரதன் ஒரு நரைமயிரைக் கண்டு தான் மூப்பு அடைந்து விட்டதனை உணர்ந்தான். அதற்குப்பின் அவனிடத்தில் ஒரு விதமான சலனமுமில்லை. மந்திரிமார்களுக்குத் தனது முடிவை எடுத்துக் கூறும் பொழுது ஒரு ரிஷியாகவே மாறிவிடுகிறான்.

தனது மந்திரிமாரைப் பார்த்து மூவுலகிலுமுள்ள பகைவர்கட்குப் பின்னிடாது பொருது வெற்றிபெற்ற நான் காமம் முதலாகிய உள் உறை பகைஞருக்கு அஞ்சி இராஜ போகங்களை சுகிக்க விரும்புவேனோ என்கிறான். "அறிவோர்க்கு நாரியருந்துரும்பாம்" என்பது ஆன்றோர் வாக்கு. தசரதன் இப்பொழுது ஞானி. புறப்பகையை வெட்டி வீழ்த்திய யான் காமம் வெகுளி மயக்கம் முதலிய உட்பகைகளுக்கு அஞ்சி வாழ்தல் தகுமோ என்கிறான்.

*'வெள்ளநீ ருலகினில் விண்ணி னாகரிற்*
*றள்ளரும் பகையெலாந் தவிர்த்து நின்றயான்*
*கள்ளரிற் கரந்துறை காம மாதியா*
*முள்ளுறை பகைஞருக் கொதுங்கி வாழ்வெனோ'*

அடுத்த பாடலில் கம்பனின் ஆன்மீக உணர்வும் கவித்துவமும் உன்னத நிலையையடைகின்றன.

செம்பஞ்சு ஊட்டிய மென்மையான தளிர் போன்ற பாதங்களையுடைய கைகேயி தேரையோட்ட கடுஞ்சினத்து அசுரர்களின் பத்துத் தேர்களையும் வெற்றி கண்ட எனக்கு, மனப்பேய் ஏறி நடத்துகின்ற ஐந்து தேர்களையும் வெல்வது கடினமோ என்கிறான்.

*"பஞ்சிமென் றளிரடிப் பாவை கோல்கொள*
*வெஞ்சினத் தவுணர்தேர் பத்தும் வென்றுளேற்*
*கெஞ்சலின் மனமெனு மிழுதை யேறிய*
*வஞ்சுதேர் வெல்லுமீ தருமை யாவதோ."*

அவுணரை வெல்லப் பத்துத்திக்கும் சென்றது அவன் தேர். இப்பொழுது மனம் என்னும் பேய் சாரத்தியஞ் செய்கின்ற மெய், வாய், கண், மூக்கு, செவியென்ற ஐந்து தேர்களை வெல்வது கடினமோ என்கிறான்.

*"உரன் என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்*
*வரன் என்னும் வைப்புக்கோர் வித்து"*

என்கிறது தமிழ் மறை. தசரதச் சக்கரவர்த்தி அந்த நிலையை அடைந்து விட்டான். இனியவன் வானவர்க்கு விருந்து.

# அயோத்தியா காண்டம் ஒரு நாடகப் பொக்கிஷம்



கலைப்பேரரசு · ஏ·ரி· பொன்னுத்துரை

அயோத்தியா காண்டம் சிறு நாடக நிகழ்வுகள் பலவற்றின் சங்கமமாய் பெரு நாடகமாய் நாடகக் களஞ்சியமாய் அமைகிறது. சுவைஞர்களுக்குச் செய்தி கூறுவதாய் ( Information) கல்வி புகட்டுவதாய் (Education) இன்புற வைப்பதாய் (Enteratainment) ஆற்றுப்படுத்துவதாய் ( Motivation) செப்பனிடப்பட்ட ஒரு நல்ல நாடகமாகவே காட்சிதருகிறது. 'கம்ப நாடகம்' என்ற பிரயோகம் மக்கள் மன்றில் மிக்குநிற்பதும் அன்றுமுதல் ஆண்டாண்டாக 'பாதுகாபட்டாபிஷேகம்' மேடை நாடகமாக நடிக்கப்படுவதும், ' கம்பன் தாளம் பிடிக்கிறான்' என கம்பன் புகழ் பாடிய எங்கள் பண்டிதமணி கலாநிதி சி. கணபதிபிள்ளை சுட்டுவதும் இராமாயணம் ஒரு நல்ல நாடகப் பொக்கிஷமே என வலியுறுத்துகின்றன.

அயோத்தியா காண்டத்தில் இடம்பெறும் கொடுமனக் கூனி போடும் முடிச்சு ஒரு வலுவான சூழ்ச்சி. அதில் சிக்கும் கைகேயி தசரதன் பாத்திரங் களின் நிலைப்பாடுகள், சிக்கல்கள், தரமான சிறுநாடகக் கோலம் பூண்டு ரசிகர்கள் இதயங்களை ஈர்க்கின்றன. குகன் என்ற வேடன் பாத்திரத்தைச் சுற்றிச் சுழலும் நிகழ்வுகள் நல்ல நாடக ஓட்டமுடையதாய் நகர்ந்து, 'யாவரும் கேளிர்' என்ற உரிப்பொருளை முன் வைக்கிறது. சிகரம் வைக்கும் சம்பவமாய் பரதன் பாதுகை பெறும் நிகழ்வு தனிப்பண்புடன் மிளிர்கிறது. இம் மூன்று கட்டங்களும் நல்லோட்டமுள்ள மேடைக்கு எடுக்கவல்ல ஆக்கங்களே. நாடக நோக்கில் இராமாயணத்தை நயக்க முனைவோருக்கு இக்கட்டுரை ஆற்றுப் படுத்தல் முயற்சியாய் அமையலாம்.

நல்ல செய்தி ( Massage) செப்பனிடப்பட்ட நாடகத்தின் அடிநாதப் பண்பு என்பர் நாடகம் வல்லார். நிலஉடமை மோகம் (அயோத்தியை ஆள்வது இராமனா? பரதனா? ) பாரிய அழிவுக்கு வித்திட வல்லது என்பதை 'சூழ்ச்சி' க் காட்சி மூலம் கம்பன் பிட்டுக்

அன்றைய நாட்டுக் கூத்துக்களில் பாத்திரங்கள் அரங்கில் தோன்றும்போது தம்மைத்தாமே அறிமுகம் செய்யும் உத்தி பெரிதும் கையாளப்பட்டது. ஆடல்பாடல் மூலம் இது நிகழும். தங்கள் வீர தீரப் பிரதாபங்களைக் கம்பீரமான குரலில் பாடியும் தாளக்கட்டுக்குப் பொருத்தமாகப் பல்வேறு துள்ளுநடை இட்டும் பாத்திரங்கள் அறிமுகம் செய்யும். கூனியின் அறிமுகம் எடுத்த எடுப்பிலேயே சுவைஞர்கள் உள்ள அரங்குக்குள் ஊடுருவி விடுகிறது. காரணம் மேற்குறிப்பிட்ட உத்தி இவ்விடத்தில் ஒரு படி உயரத் தொழிற்படுவதே.

'துடிக்கும் நெஞ்சினளாய், ஊன்றிய வெகுளி யுடன், உளைக்கும் உள்ளத்துடன் கான்றெரி நயனத்துடன், கதிக்கும் சொல்லுடன், மடித்த வாயுடன் துன்னரும் கொடுமனக் கூனி அரங்குக்கு வருகிறாள். ஒரு கணம் ரசிகர்கள் நிமிர்ந்து பார்க்கிறார்கள். நாடகம் களைகட்டுகிறது. கேகையன் மான் பள்ளியறைக்குள் கூனி புகுந்து சீறடி தீண்டித்துயில் எழுப்புகிறாள். இரு வேறு மாறுபட்ட பாத்திரங்கள் ரசிகர்கள் முன்னே; பேச வேண்டுமா? சிக்கல் பிறக்கிறது. சிறக்கிறது நாடகம்.

உரையாடல் தொடர்கிறது.

*" வீழ்ந்தது நின் நலம் திருவும் வீழ்ந்தது*
*வாழ்ந்தனள் கோசலை மதியினால் "*

என்ற கூனியின் வார்த்தைகள், பிரச்சினை ஒன்றை உருவாக்கி முறுக்கேற்றி இருவர் உறவை அறுக்க எறியப்படும் வஞ்சக வார்த்தைகள் ஆகின்றன.

'இராமன் முடிசூடுவான்' என்ற வார்த்தை கூனியின் உரையாடலில் இடம்பெற்ற வேளை கைகேயி புளகித்தாள், மாலையைப் பரிசாக நீட்டினாள். கோபம் கொப்பளிக்க மாலையை நிலத்தில் எறிந்தாள் கூனி. கம்பனின் நாடக ஆற்றல் தனிச்சிறப்புடன் இவ்விடத்தில் திரை வைக்கின்றது. அஃறிணைப் பொருள் ஒன்றன்

உபயோகமூலம் எதிரும் புதிருமான இரு வேறு மனோநிலைகளைத் தெட்டத் தெளிவாகக் காட்டும் பாணி ஒரு உயர்ந்த உத்தியாகும்.

அதட்டுதல், உரப்புதல், கோபம் பீறிடப் பார்த்தல், திட்டுதல், பெருமூச்சு விடுதல், அலங்கோலமாதல், அழுதல், மாலையை எறிதல் என்ற கூனியின் செயற்பாடுகள், அசைவுகள், பலவேறு பாவங்கள் நடிப்பின் இலக்கணம் பற்றிப் பேசாமல் பேசுகின்றன.

பரதனை எதிர் நோக்கியுள்ள இன்னல்களை, இடர்களை, தொடர்பு அறாத வகையில் தர்க்க ரீதியில் நம்பும்படி பேசி, முடிச்சை இறுக்கும் கட்டத்தில் நாடக உரையாடலின் உயர்வை, நகர்த்தப்பட வேண்டிய போக்கைச் சுவைஞர்கள் உணர்கிறார்கள். ஒரு நாடகத்தின் ,முக்கிய அம்சம் அதில் இடம் பெறும் பொருத்தமான சுவையான உரையாடலாகும். இதன் மூலமே கதையோட்டம், பாத்திரப்பண்பு, பல்வேறு உணர்வுகள் வெளிக்கொணரப்படுகின்றன. நற்பண்பு மிக்க கைகேயியின் மனதை மாற்றிய மாபெரும் சக்தியைக் கூனியின் உரையாடலிற் காண்கிறோம். ஒரு விடயத்தை எதிர்த்து வெட்டிப் பேசும் ஆற்றல், தர்க்க மிடும் பாணி என்பவற்றிக்கு இலக்கணமாய் மந்தரை சம்பாஷணை அமைகிறது.

ஒரு நிலையில் கூனி பரதனுக்காக இரங்கு வதாய், பச்சாதாபப்படுவதாய்ப் பேசுகிறாள். " தந்தையும் கொடியவன் நற்றாயும் தீயளால் எந்தையே பரதனே என் செய்வாய்'' என்கிறாள். " உரை செயக் கேட்கிலை, உணர்தியோ", என மந்தரை பேசி கைகேயியைத் திசை திருப்ப முனைகிறாள்.

"எனக்கு நல்லையு மல்லை நீயென் மகன் பரதன் தனக்கு நல்லையுமல்லை தருமமே நோக்கின் உனக்கு நல்லையுமல்லை''

என்ற பதிலடியில் கைகேயின் சீற்றம் கூனியைக் குறுகவைத்துக் குமுறி நிற்கிறது.

" வரன் முறை திறம்புதல் வழக்கோ?'' என்ற கைகேயியின் நறுக்கான பேச்சு, ' அறிவிலி அடங்குதி' என்ற ஏச்சு இரண்டினுக்கும் அதிர்ச்சியடையாது, கைகேயின் கால்களில் வீழ்கிறாளே, தொடர்ந்தும் தனது உரையாடலை கேட்கும் நிலைக்குக் கைகேயியைத் தன் பக்கம் ஈர்க்கிறாளே இவற்றில் எல்லாம் உயர் நடிப்புச் சதுராடுகிறது.

" இராமன் அரசனானால் நாடு கோசலைக்கே உடைமை, உனக்கும் உன் மைந்தர்க்கும் உரிமையில்லை, கோசலை தரும் பொருள்தான் உனக்குரியது'' என்ற பொருளில் கூனி பேசிக் 'கொழுவலை' இறுக்கும் இயற்கைப் பாணி நல்ல உரையாடலுக்கு உதாரண மாகிறது.

இதனைத் தொடர்ந்து கைகேயியின் மன மாற்றத்தை, ஈடாட்டத்தைக் காண்கிறோம். பரதனை நாடாளவைக்க ஆலோசனை கேட்கும் அளவுக்கு தள்ளப்படுகிறாள் கைகேயி. திருப்புமுனை ஒன்று முளைவிடுகிறது. இரண்டு வரங்களைக் கேட்டுச் 'சன்னதம்' கொள்ளும் கைகேயி படமெடுத்தாடும் பாம்பாகிறாள். கூனி மேடையில் இல்லையெனினும், அவள் விதைத்த விதைகள் விஸ்வரூபமெடுக்கின்றன. கைகேயியின் பேச்சில், செயலில் நாடக ஒட்டத்தில் சுவை பிறக்கிறது.

அடுத்து, கம்பன் கனகச்சிதமாகத் தாளம் போட, கைகேயி நாடகமே ஆடத்தலைப்படுகிறாள். தாளத்துக்குத்தகக் கைகேயி மேகலை சிந்தினாள், கிண்கிணியைத் துறந்தாள். திலகத்தையே அழித்தாள். கூந்தலைப் பூமி தடவுமாறு பரப்பினாள். மலர் உதிர்ந்த பூங்கொடி போலப் பூமியில் உருண்டாள். அற்புத நடிப்பு நிகழ்கிறது. 'ஆகா' போடுகின்றனர் அவையோர். ஆனால் ஏமாற்றப்படுகிறான் தசரதன். தனது காதற் கிழத்தியின் நிலைகண்டு அவளை அணைத்து எடுத்து, தேற்றுவது, எதுவும் செய்யத் தயார் என முன்வருவது, வாக்குறுதி அளிப்பது எல்லாம் அவன் அவல நாயகனாவதற்கு அடித்தளமாகின்றன. வரம்பற்றிய விளக்கம் இன்றி அவற்றைத் தருவதாகச் சத்தியம் செய்தான். இரண்டு வரங்களுமே இவனை அதிரவைத்தன. இராமனைக் காட்டுக்கு அனுப்புவது என்பது அவனை மூர்ச்சிக்கவே வைத்தது. தவிப்பின் உச்ச நிலையிலே மன்றாடி, மண்டியிட்டு வேண்டுகோள் விடுக்கிறான்.

***" கன்னே வேண்டும் எனினும் ஈயக்கடவேன் என்***
***உன்நேர் ஆவி வேண்டினும் இன்றே உனதன்றோ?***
***பெண்ணே! வண்மைக் கேகயன் மானே !***
***மண்ணே கொள் நீ மற்றையது ஒன்றும் பெறுவாயேல்***
***மண்ணே கொள்நீ மற்றையது ஒன்றும் மற "***

என்றான் தசரதன்.

உள்ளத்துணர்வு வார்த்தையாக நடிப்பாகப் பீறிட்டுப் பாய்வதை உணர்கிறோமல்லவா? தன்னை மறந்து உச்சஸ்தாயியில் உருக்கமாகப் பேசுகிறான்.

*"என் மகன்! என் கண் ! என் உயிர் எல்லா*
*உயிர்கட்கும்*
*நன்மகன் இந்த நாடு இறவாமை நய"*

என்ற வார்த்தைகள் உருகவைக்கின்றன கூத்தாட்டு அவையினரை.

சூழ்ச்சியும் சூழ்வினையும் இடம்பெறும் இச்சிறு கட்டத்தில் அரிய பல நாடகப்பண்புளை, நடிப்பு இலக்கணங்களைச் சுவைஞர்கள் சுவைக்கிறார்கள், சிந்திக்கிறார்கள். துன்பியல் சுவை மெருகேறி நிற்கும் தன்மையால் சீரியவாழ்வுக்குத் தம்மைத் தயார் செய்து கொள்கிறார்கள் என்பதில் ஐயமில்லை.

கம்பநாடன் காட்சியமைப்பிலும் ஒரு வல்லுநன். நகரிலும் அரண்மனையிலும் பல நிகழ்வுகளைக் காட்டியவன்தண்ணென்றிருக்கும் கங்கைக்கு அணித்தாய் சுவைஞர்களை அழைக்கிறான். ஒரு வகையில் சூழலில் இருந்து மாறுபட்டு விட்ட சூழலுக்குக் காட்சிகளைப் பொருத்தமாக நகர்த்திச் செல்லும் விவேகம் நாடகவல்லுநர் நயந்து கையாளும் மாற்றம்.

மேடைநாடகம் நனிசிறக்க, பாத்திரங்களுக்கேற்ற நடிகர்கள் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். பொருத்தமான தோற்றப் பொலிவு, வலுவான குரல் வளம், பாத்திரத்தைப் பன்மடங்கு கனதியுடன் பார்வையாளர்க்கு முன் நிறுத்தும். ஒருவர் தாங்கும் பாத்திரம் தத்ரூபமாய் அமைய ஒப்பனை, உடை, நடை, அணியும் ஆபரணங் கள், ஆயுதங்கள் துணைநிற்கின்றன. குகன் பற்றிக் கம்பன் தரும் விரிவான வர்ணனைகள் நெறியாள்கை செய்வோர்க்கும் ஒப்பனைக் கலைஞர்களுக்கும் பெரிதும் உதவுகின்றன.

"காயும் வில்லினன் கல்திரள் தோளினன்" என ஆரம்பித்த கம்பன் நீண்ட பட்டியல் தருகிறான். துடியெனும் பறையையுடையவன்; தோலினால் தைத்த செருப்பை அணிந்தவன்; இருள் போன்ற மிகவும் கரிய நிறத்தையுடையவன்; பெருஞ் சேனைத் தலைவன் என்றெல்லாம் கூறிய கம்பன் மேலும் தொடர்கிறான்.

" கொம்பு துந்துபி கொட்டு முறைமையன் பம்மை பம்பு படையினன்" என்கிறான். அரைமுதல் தொடை வரை தொங்க விட்ட செந்நிறத்தோலை உடையாய் உடையவன், புலிவாலினை அரைக் கச்சாகச் சுற்றிக் கட்டிக் கொண்டவன். மயிர்முடியிலே நெற்கதிரைச் செருகிக் கொண்டவன்; வலிய மயிர் நீண்டுயர்ந்து தோன்றுகின்ற முன்னங்கையுடையவன்; எண்ணெய் யூட்டப்பட்ட இருளையொத்த உடம்பினன்; அரைக் கச்சிலே கட்டிய வாளையுடையவன்; பாம்புகளே பயப்படும் படியான கொடிய கண்பார்வையுடையவன்; வச்சிராயுதம் போன்ற உறுதி படைத்தவன். புலால் நாற்றத்துடன் சிரிப்பு என்பது சிறிதுமே அற்ற முகத்தினனாய் யமனே நடுங்கும் படியான அதிர்ச்சி தரும் கொடூர குரலையுடையவன் என்றெல்லாம் குகன் பாத்திரம் பற்றிய விபரங்களை நுணுக்கமாய்க் கண்முன்னே நிறுத்தினாற் போல, கம்பன் விளக்குகிறான்.

நாடக நுட்பம் நன்கு தெரிந்தவன் கம்பன் என்பதை வலியுறுத்துவதாய் அமைகிறது; இந்த இடத்துச் சித்திரக் கோலம்.

புறத்தோற்றத்தில் குகனைக் கொடியவனாகச் சிருஷ்டித்த கம்பன், இராமனைச் சந்தித்த வேளை 'மண்ணுறப் பணிந்து மேனி வளைத்து வாய் புதைத்து நின்றான்' என வர்ணிக்கிறான். " காணிக்கையாக, தேனும் மீனும் கொண்டு வந்தேன்; தேவரீர் உள்ளம் யாதோ?" என வேண்டிய கட்டத்தில் அன்பு முதிர்ந்த பக்தி நிலையில் உள்ள அவனது அகத்தைப் படம் பிடிக்கிறான். மிக்க கொடியவன் போல் காட்டி அவனைப் பணிவுடைமை மிக்கவனாய் செயல் மூலம் காட்டுவது வியக்க வைக்கும் பாத்திர வார்ப்புக்கு ஓர் எடுத்துக் காட்டு எனலாம்.

உறக்கமற்ற தம்பி இலக்குமணனையும் தரையிலே படுத்திருக்கும் இராமனையும் காவல் காத்து நின்ற குகன் பார்க்கிறான். "கண்ணீர் அருவிசோர் குன்றினின்றான்" என்கிறான் கம்பன். வாய்ச்சொல் எதுவும் வரவிடாது, அங்கத்துடிப்புக்கள் நிகழவிடாது கண்ணீர் உகுக்கக் குகனைக் காட்டுகிறானே; இவ்விடத்தில் உச்சமான நடிப்பு இலக்கணம் தெரிந்தவன் கம்பன் என்பதை உணர்கிறோம். ஒரு நடிகன் இதனைச் செய்ய எத்துணை வல்லவனாய் இருக்க வேண்டும்.

அடுத்து, கம்பன் ஓடம் விடும் காட்சிக்குச் சுவைஞரை இட்டுச் செல்கிறான். " முடுகின நெடுவாய் முரிதிரை நெடுநீர் வாய் கடிதினின் மடவன்னக் கதியது செலநின்ற" என்ற அடிகள் மூலம் மடங்குகின்ற அலைகள் மத்தியில், அன்னத்தின் இயக்கம் போன்ற போக்கில் நெடிய மரக்கலம் செல்வதாகக் காட்டுகிறான். நீரினைக் கைகளால் எடுத்து வீசி, விளையாடியபடி இராமனும் சீதையும் புளகித்தனர். நீண்ட கோலினால் துழாவியப்படி மரக்கலத்தை வேகமாக ஓட்டுகிறான் குகன். கங்கைகடந்து கரையேறும் காட்சியும்

தொடர்கிறது. பக்தியின் உச்சியைத் தொட்டு நின்ற ஒரு கனதியான காட்சியை (Serious Scene ) தொடர்ந்து நதியிலே ஓடம் விடும் இன்பக் காட்சியைப் புகுத்தியமை சுவைஞர்கள் ரசனையை மனங்கொண்டு அமைத்த கலைக்கோலம் என எண்ண வைக்கிறது.

இராமனைக் காணவேண்டும் என்ற துடிப்புடன் தனது சேனைகள் சகிதம் பரதன் புறப்படுகிறான். பரதனது சேனா சமுத்திரம் கங்கைக் கரையில் வியாபித்து நிற்கிறது. இராமனுடன் போர் புரியவே பரதன் பெரும் சேனையுடன் வந்துள்ளான் என்ற சந்தேகம் குகன் உள்ளத்தில் முளைவிடுகிறது; பெரும் கோபமாய் விஸ்வரூபமெடுக்கிறது? படைத்துணைவரை அழைத்து "போருக்குத் தயாராகுங்கள், இராமனை வெல்ல சூழ்ந்து வந்துள்ள படையை ஒழியுங்கள்" என குரல் எழுப்புகிறான். "கடியெறி கங்கையின் கரைவந்தோர் களைப் பிடியெறிபட"எனப்படபடக்கிறான். ஆத்திரம் கொதிப்பாய் மாறுகிறது. நாக்கினில் வீராவேசமான சொற்கள் பீறிடுகின்றன. இந்த வேளை கம்பன் தீட்டும் உரையாடலின் வேகம் அற்புதமானது.

**" ஆழநெடுந்திரை யாறு கடந்திவர் போவாரோ?**
**வேழ நெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ?**
**தோழமை யென்றவர் சொல்லிய சொல் ஒரு சொல்லன்றோ?**
**ஏழைமை வேட னிறந்திலன் என்றெனை ஏசாரோ? "**

எனக் குமுறும் குகன் " மன்னவர் நெஞ்சினில் வேடர் விடுஞ்சரம்வாயாவோ?" என்றெல்லாம் சிந்தித்து, போர் செய்யத்தயாரானான். சுமந்திரன் மூலம் உண்மை நிலை உணர்ந்த குகன் பரதனைச் சந்திக்கப் பணிவன்புடன் வருகிறான். நம்பியும் நாயகனை ஒக்கின்றான்' என உணர்ந்த குகன் இராமன் திசை நோக்கித் தொழுத பரதனை வணங்கினான். பரதன் வந்த நோக்கினை, அவனது எழிலார்ந்த பண்பினை உணர்ந்த நிலையில் திரும்பவும் தெண்டனிட்டு வணங்கினான். கோபக்கனலாக இருந்த குகன் திடீரெனச் சாந்தத்தின் உறைவிடமாகிறான். "ஆயிரம் இராமர் உளரானாலும் உன்னொருத்தனுக்கு ஒப்பாவாரோ ?" என வாயார வாழ்த்தி அன்பு பூண்ட கட்டம் புல்லரிக்க வைக்கிறது. முரண்பட்ட மாறுபட்ட உணர்வு வீச்சுக்களை ஒரு பாத்திரத்தின் மூலம் காட்டி அவ்வுணர்வுகளைச் சொல்லல், செய்கையால் உச்சத்துக்கு இட்டுச் செல்லும் பாங்கு நாடக நோக்கில் நல்ல ஒரு அமைப்பு என எண்ணவைக்கிறது.

இவ்விதம் குகன் பாத்திரத்தை மையப் புள்ளியாக்கிக் கொண்டு சில முக்கிய பாத்திரங்களுடன் அவன் தொடர்பு கொள்ளும் நிகழ்வுகளைக் கோவையாக்கி சிறுநாடகமொன்றைச் சித்திரிக்கிறான் கம்பன். வேறுபட்ட, முரண்பட்ட குணங்களை அவனூடாகக் காட்டிய இடங்கள் இதயத்தைத் தொடுகின்றன. மேலாக உயர்வு தாழ்வு அற்ற சகோதரத்துவம் கருப்பொருளாய் அமைவதும் குகன் நாடகத்தின் சிறப்பம்சமெனலாம்.

அயோத்தியா காண்டத்தின் இறுதியில் அமையும் திருவடிப்படலம் பல முக்கிய நிகழ்வுகளை முன் வைக்கிறது. கானகத்தில் இருந்தும் இராமனை அயோத்திக்கு மீட்டுவருவேன் என்ற பெரும் ஆவல் உந்த, பரிவாரம் சூழ, சித்திர கூடத்தை நோக்கிப் பரதன் விரைகிறான். படை ஆரவாரமின்றி அமைதிச் சூழலில் நகர்கிறது. உள்ளத்தில் ஆவல், கொந்தளிப்பு; புறத்தில் அமைதியான நிலைப்பாடு. ஆம். முரண் சமநிலை என்ற ரசம் பிரவாகிக்கிறது இங்கே. சிக்கலுக்கு முன் சாந்த நிலையை நாடகவல்லுநர் சிருஷ்டிப்பர். கம்பன் இதற்குப் புறநடையா?.

தொடர்ந்து நாடக ஓட்டத்தில் சிறுபுயல் வீசுகிறது. 'அரசு புரியாது சடாமுடியுடன் வரக் காரணம் யாது? என்ற பரத்துவாச முனிவனின் கேள்வி பரதனைச் சினங் கொள்ள வைக்கிறது. சற்றுச் சீற்றத்துடன் பதில் கூறிய பரதன் ' முறையின் நீங்கி முதுநிலம் கொள்கிலேன்,' என்ற தன் முடிவை வெளியிடுகிறான். இராமன் அயோத்தி வரத் தடை கூறுவனாயின் அவனுடன் தானும் கானகத்தில் வாழ்வேன் என வைராக்கியம் தெறிக்க முடிவெடுக்கிறான். இலட்சிய இளவலாகப் பரதன் காட்சி தருகிறானே, அவ்வேளை ஆனந்த அலைவீச்சு அவையோர் மன அரங்கில்.

நாடகத்துள் நாடகமாய் 'இலக்குமணன் சீற்றம்' விறுவிறுப்பூட்டுகிறது. பெரும்படையுடன் பரதன் வந்து சேர்ந்தது இராமபிரானைக் கொன்றொழிக்கவே என்ற முடிவில் யுத்த சன்னத்தனாகிறான் இலக்குமணன். கோபம் கொப்பளிக்க வீறுகொண்டு அவன் உரைத்த உரையாடல் பகுதி சகோதரபாசத்தின் ஆழநீளத்தை வலியுறுத்துகிறது. அதே வேளை அற்புத நடிப்புக்கும் இக்கட்டம் இடமளிக்கிறது.

பரதன் சீற்றம், அடுத்து இலக்குமணன் சீற்றம் என ஒரேமாதிரியான நிகழ்வோட்டத்தைத் திரும்பத் திரும்பப் புகுத்தலாமா? இது கலையின் பாற்பட்டதா? என்ற வினா எழலாம். சகோதரபாசத்தை, வீரச்சுவையை அபரி மிதமாக அழுத்தும் நோக்குடன் இந்த உத்தி கையாளப்பட்டிருக்கிறது. நாடகம் வல்லார் காட்டும்

இவ்வுத்தி கம்பன் வார்ப்பிலே தனிமுத்திரை பொறிக்கிறது.

பரதன் இராமன் சந்திப்புடன் ரசிகர்கள் மெய்சிலிர்க்கிறார்கள். அண்ணனைக் கண்டதுதான் தாமதம் இராமனின் திருவடிகளில் பரதன் பக்தியுடன் வீழ்கிறான். இராமனின் கண்களில் இருந்தும் கண்ணீர்த்துளிகள் பாய்கின்றன; பரதனைத் தழுவு கிறான். தந்தையின் சேமத்தை விசாரிக்க, தந்தையின் மரணச் செய்தியைப் பாரதன் கூறுகிறான். இதுமுதல் ஒரே அழுகை. சோகரசம் நீண்டு செல்கிறது. இராமன் பிரலாபம், அழுகை, சீதையின் சோகம், தாய்மாரின் முன் இராமன் கண்ணீர் சிந்துதல், தாய்மார் சீதையைத் தழுவி அழுதல் முதலிய நிகழ்ச்சிகள் மூலம் சோக இருளை அரங்கில் பாய்ச்சுகிறான் கம்பன். இயற்கையோட்டம் இக்காட்சிகளில் மெருகூட்டுகிறது.

தொடர்ந்து சம்வாதம் ஒன்று ஒரு பிரச்சினையை ஒட்டி நிகழ்கிறது. நாடகத்தில் தத்தம் நிலைப்பாட்டை நியாயப்படுத்துதல் தீர்மானத்தை உருவாக்கல் என்பன மிக முக்கியமென்பர் கலாவல்லுநர். "மீண்டும் வந்து அரசு செய்க" என்ற பரதனின் விருப்பு பிரச்சினைக் குரியதாகிறது. பரதன் கொள்கையை மறுக்கிறான் இராமன். 'அரசு என்னுடையதுதான் என்றால் தங்கட்கே தந்தேன்' என்ற பரதன் உரைக்கு 'நீதியின்பாற்பட்ட தன்று' என இராமன் எதிர்ப்புத் தெரிவிக்கிறான். தந்தை சொற்படி தான் பதினான்கு ஆண்டுகள் காட்டில் வாழ்வதும் பரதன் நாட்டை ஆள்வதுமே சத்தியத்தின் பாற்பட்ட செயல் என்கிறான் இராமன். தந்தை தனக்கு முடிசூட்ட விரும்பியவேளை எவ்வண்ணம் தான் மறுப்புத் தெரிவியாது ஏற்றானோ அது போலத் தான் கூறுவதைப் பரதன் மறுக்காது ஏற்றலே நியாயம் எனத் தன் நிலைப்பாட்டை நியாயப்படுத்துகிறான். நீண்ட சம்வாதத்தின் பின், பரதன் பதின்னான்கு ஆண்டுகள் அரசு புரிதலே தர்மம் என்ற நிலைப்பாடு தேவவாக்குப்படி உருவாகுகிறது. பதின்னான்கு வருடங்கள் முடிந்தபின் ஒரு நாள் தாமதித்தாற் கூட தான் அக்கினிப் பிரவேசம் செய்வான் என பரதன் பிரதிக்ஞை செய்யும் இடம் உள்ளத்தை உருக்குகிறது. இராமன் இணக்கத்துடன் பிரச்சினைக்குத் தீர்வு கிடைக்கிறது. முடிவு என்ன என்ற வினாவிசைக்குறி விலகுகிறது. அவை மகிழ்கிறது. ஆனால் கலக்கத்துடன், விம்மலுடன் 'பாதுகையைத் தந்தருள்க' எனப் பரதன் பிரார்த்திப்பது, இராமன் கொடுப்பது, கண்ணீர் ஒழுக அழுதபடி தரையில் வீழ்ந்து பணிந்து வணங்கி, பாதுகைகள் இரண்டினையும் கீரிடமாகக் கருதித் தலையில் வைத்து நகருவது ஆகிய காட்சிகள் சிகரக் காட்சிகளாக சுவைஞர்களை உருகவைக்கின்றன. எதிர்பாராத முடிவு, பெரியோரை மதித்தல், சகோதர பாசம் முதலிய பல பண்புகளின் வலியுறுத்தல் சுவைஞர்களுக்குப் பெரும் திருப்தி தருகிறது.

ஆக, செப்பனிடப்பட்ட நாடகத்தில் இடம்பெற வேண்டிய நல்லகருப்பொருள்–மதிநுட்பம் வாய்ந்த கதைப்பின்னல் பொருத்தமான இறுக்கமான உரையாடல்– பல்வேறு சுவைகளின் பிரவாகம் – முரண்பட்ட பாத்திரங்கள்– சிக்கல்கள்– காட்சி மாற்றங்கள் எனப் பல அம்சங்கள் அயோத்தியா காண்டத்தில் முறையாக இடம் பெறுகின்றன. நடிப்புக்கள் பற்றிய குறிப்புக்கள், ஒப்பனைபற்றிய முக்கிய அம்சங்கள், சம்பவங்களுக்குத்தக்க புறச் சூழல் பற்றிய தகவல்கள் என்பவற்றையும் கூறாமல் கூறுகிறான் கம்பன். மூன்று சிறு நாடகங்களும் சலிப்புத்தருவனவாய் இல்லை. நற்கலை ஆக்கமாய் அதே வேளை ஆழ்ந்த அறிவை, நுட்பத்தை, நமக்குத் தரும் நுண்மாண் நுழைபுலம் மிக்க பொக்கிஷமாய் அமைகிறது அயோத்தியா காண்டம். ஆக, அயோத்தியா காண்டம் ஒரு நாடகப் பொக்கிஷமே தான்.

*பண்ணுக் கிசைவாக – விருத்தம்*
*பாடி அளித்திடு வான்*
*எண்ணும் கருத்துடனே – சந்தம்*
*இசையச் செய்திடுவான்*
*தீது நன்மையெல்லாம் – ஆய்ந்து*
*தெளியச் சொல்லிடுவான்*
*வாதி பிரதிகளின் – வழக்கை*
*வரைந்து காட்டிடுவான்*
*அரக்கர் நெஞ்சறிவான்– முனிவர்*
*அகமும் கண்டறிவான்*
*குரங்கின் உள்ளறிவான் – வேடர்*
*குணமும் நன்கறிவான்.*

*–கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை–*

# சிந்தையும் திரிந்தது

செல்வி. புஸ்பா செல்வநாயகம் B.Sc

மறுநாள் முடிசூட்டு விழா. அயோத்தி நகர் மகிழ்ச்சி ஆரவாரத்தில் திளைத்து " பொன்னகர் இது"வெனப் பொலிகிறது!. நகர மக்கள் இராமன் முடிபுனையப் போகிறான் என்ற மங்கலமான செய்தி கேட்டு நாட்டை அலங்கரிக்கின்றனர் ; வீட்டை அணி செய்கின்றனர். வழியிற் சென்றவர்களுக்குப் பொருளை வாரி வாரி வழங்குகின்றனர். அவர்கள் ஆர்த்தனர்; களித்தனர்; ஆடிப்பாடினர். அதுமட்டுமா? மன்னனையும் புகழ்ந்து வாழ்த்தினர். இந்த அளவு மீறிய குதூகல வேளையில் கூனி திடும் பிரவேசமாகத் தோற்றுகிறாள். அவளைக் கவிஞர் " இன்னல் செய் இராவணன் இழைத்த தீமை போல் துன்னரும் கொடுமனக் கூனிதோன்றினாள் " என்று அறிமுகஞ் செய்யும்போது இராவணன் செய்யப்போகும் தீமையை முன்னறிவிப்புச் செய்வதோடு கூனி கொடியவள் என்பதையும் தெளிவு படுத்துகிறார். அவளது இயற்பெயர் வேறிருக்க, அவளது காரணப் பெயரைக் கூறியதற்குக் காரணம் அவள் முதுகுமட்டுமல்ல மனமும் கோடியவள் என்று காட்டுவதே எனலாம். துடிக்கும் நெஞ்சோடும் கொதிக்கும் கோபத்தோடும், கண்களில் தீப்பொறி பறக்க, வாய் குழறிக்கொண்டு கைகேயியின் அந்தப்புரத்திற்குக் கூனி எனும் மந்தரை செல்கிறாள். அங்கு கடைக்கண் அருள்பொழிய ஆழ்ந்த பேரன்பினாள் என்றும் தெய்வக் கற்பினாள் என்றும் கவிஞராற் போற்றப்படும் கைகேயி உறங்குவது கண்டு மெல்ல அவளது பாதங்களை வருடுகிறாள் மந்தரை. அவளது ஸ்பரிசமே தீமையைப் பயப்பதாய் இருப்பதால் அது பாம்பு தீண்டுவது போலிருந்தது என்று கவிஞர் கூறுகிறார். "பேரிடர் அணித்தாய் நிற்க உறங்குவதும் உண்டோ" என்று கூறிக் கைகேயியை எழுப்புகிறாள். இராமனைப் பிள்ளையாய்ப் பெற்ற தனக்கு இடர் என்பதும் உண்டோ என்று மொழிந்த கைகேயியை நோக்கி, "உன் செல்வமும் செல்வாக்கும் இன்றோடு தொலைந்தன. புத்திக் கூர்மையால் வாழப் போகிறவள் கோசலை. இராமன் நாளை முடிசூடப் போகிறான்" என்ற செய்தியை முதலில் அறிவித்த கூனிக்கு மகிழ்ச்சி மிகுதியால் "சுடர்க்கெலாம் நாயகம் அனையதோர்" நவரத்தின மாலையைக் கைகேயி பரிசளித்தாள். ஆனாற் கூனியோ வெப்பங் கக்கப் பெருமூச்சு விட்டபடி கோபம் பொங்கி எழ அம்மாலையைத் தரையில் வீசி எறிகிறாள்.

மெல்ல நயமாகக் கைகேயியின் மனதிற் சக்களத்திக் காய்ச்சலை ஊட்டிப் பார்க்கிறாள் கூனி. இராமன் முடி புனைந்தபின் கோசலைக்கு ஏற்பட விருக்கும் சிறப்பு, ஏற்றம் முதலியனபற்றியும், அவள் பெறப்போகும் வாழ்வு பற்றியும், பெரிதுபடுத்திக் கைகேயியின் அகங்காரத்திற்கு எண்ணெய் விடுகிறாள். இராமன் முடிசூடியபிறகு நீ வறுமை அடைவாய், உன்னை வந்து இரந்தவர்க்குக் கொடுக்கவோ தானதருமம் செய்யவோ உன்னிடம் ஏதும் இராது. எனவே நீ கோசலையைச் சென்று பணிந்து அவள் தருவதைப் பெற்றுத்தான் வாழ வேண்டும்! என்று கூறும் கூனியின் சொல் கைகேயியின் உள்ளத்தை மாற்றவில்லை. பின் பரதனைக் கூவிப் பரிதாபமாக,

*" தந்தையும் கொடியன்; நற்றாயும் தீயளால்*
*எந்தையே பரதனே என்செய்வாய் ...... "*

என்று அலறிப் பிரலாபிக்கிறாள். ஆத்திரம் உச்சநிலையை அடையக் கைகேயியை நோக்கி,

*" அரசர் இல் பிறந்து பின்*
*அரசர் இல் வளர்ந்து*
*அரசர் இல் புகுந்து, பேர்*
*அரசியான நீ*
*கரைசெயற் கருந்துயர்க்*
*கடலில் வீழ்கின்றாய்*
*உரைசெயக் கேட்கிலை உணர்கிலோய் "*

என்று கூனி கூறுவது அவளது ஆத்திரத்தையும் வயிற்றெரிச்சலையும் பிரதிபலிக்கிறது. இதைக் கேட்டுக் கைகேயி கோபங் கொழுந்து விட்டெரிய,

*" நீதி அல்லவும் நெறிமுறை அல்லவும்*
*நினைந்தாய்*
*ஆதி; ஆதலின் அறிவிலி அடங்குதி"*

என்று அவளை அதட்டுகிறாள். அரசி என்று மும்முறை கைகேயியை அழைத்து அவள் பெருமையையும், மதிப்பையும் தூண்ட நினைத்த கூனியின் எண்ணத்தில் மண் விழுகிறது. எனினும் கைகேயி வாய்தவறி எடுத்துக் கூறிய வார்த்தைகள் மூலம் மனிதனாகப் பிறந்தவன் அடையவேண்டுவது புகழ் என்றும், முறைதவறி நடப்பவர்களுக்குப் புகழ் கிடையாது என்றும் மூத்தவரான தான் இருக்க இராமனுக்கு முடிசூடத் தசரதன் நினைத்தது சரியல்ல என்றும் தனது உள்ளத்தில் எழுந்ததைக் கூறியமாத்திரத்திற் கூனி தனது இறுதிப் பாணமான பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகிக்கலானாள்.

கைகேயியோடு கூடவே இருந்து ஸ்ரீதனமாக வந்த கூனிக்கு, கைகேயியைத் திருமணஞ் செய்ய விரும்பிய தசரதன் அவளுக்குப் பிறக்கும் மகனுக்கே முடி சூட்டுவதாக முன்பு கொடுத்த வாக்குறுதியைப்பற்றித் தெரியும். பிறந்தது முதற் கேகய நாடு செல்லாத பரதனை இப்போது திடீரெனக் கேகயநாடு சென்று பாட்டனைப் பார்த்து வரும்படி தசரதன் அனுப்பிய காரணம் இராமனுக்கு அவன் இல்லாத வேளை முடி புனையக் கருதியே என்றும், இராமனது பட்டாபிஷேகத்தின்பின் கைகேயியின் பிறந்த நாடு அடையப்போகும் இன்னல் பற்றியும் விபரித்தாள். எந்தவொரு பெண்ணும் தன் தாய் வீட்டுக்கு அவலம் ஏற்படும் காரியத்தை ஏற்காள் என்பது உண்மையே. தசரதனைவிட ஜனகன் சிற்றரசன்தான், அவனைவிடச் சிற்றரசன் கேகயன். மேலும் ஜனக னுக்கும் கேகயனுக்கும் பகைமையும் உண்டு. ஜனகன் கேகயன்மேற் படையெடுத்தாற் கேகயனுக்கு உதவியாகத் தசரதன் வருவான் என்று அஞ்சிய ஜனகன் இதுவரை வாளாவிருந்தான். இராமன் அரசனாகிவிட்டாற் பிறகு ஜனகன் கேகயனுக்கெதிராகப் போருக்கு எழுந்தால் அவனுக்கு யார் உதவ வருவார்கள் என்று விரிவாகவும், மனதிற் படும்படியும் கூனி, கேகயன் படப்போகும் துயரம், அவலம் முதலியனபற்றியும் விபரித்தாள். இப்படி வரிசையாகவும் அடுக்கியும் கூறப்பெற்ற இந்த வாதங்களின்முன் கைகேயி நிலைகுலைந்து விட்டாள். அவளுடைய தாய்மை, பிறந்த வீட்டுப்பற்று, எதிர்காலம் பற்றிய ஏக்கம், சக்களத்தியின் செல்வாக்கில் ஏற்பட்ட தன் தாழ்ச்சி, கணவனது அன்பில் கொண்ட ஐயம் ஆகிய இத்தனையுஞ் சேர்ந்து அவளது தூய சிந்தையையும் திரித்துவிட்டன.

இராம கதையின் கட்டுக்கோப்புக்கு மந்தரை எனப்படும் கூனி மிக இன்றியமையாதவள். அவள் இல்லையானால் இராமன் வனம்செல்லப்போவதும் இல்லை. இராவண வதம் நடக்கவும் மாட்டாது. இந்த இரு நிகழ்வுகளுந்தான் இராமாயணத்தின் உயிர் நாடிகள். இவை நடைபெற நேரடியாக கூனிதான் காரணமாக இருக்கிறாள். " காலக்கோளனாள்", "மூன்றுலகினுக்கும் இறுதி மூட்டுவாள்", " வெவ்விடம் அனையவள்", "சூழ்ந்த தீவினையேய் மந்தரை", "வேதனைக்கூனி" என்று பல தொடர்களாற் கவிஞரால் அழைக்கப்படும் கூனி இறுதியில் " உள்ளமும் கோடிய கொடியாள்" என்றும் வசைபாடப்படுகிறாள். இராமன் சிறுவனாக இருந்தபோது உண்டை வில்லால் அடித்ததற்குப் பழி வாங்கும் மனோபாவமும் அவளிடம் ஊன்றிநிற்பது காரணமாக நிமிடத்துக்கு நிமிடம் தன் வாதங்களை மாற்றிக் கைகேயியின் உள்ளத்தைக் கலைத்துத் தன் வழிக்கு மாற்றிவிடுகிறாள்.

விடா முயற்சியும், எடுத்த காரியத்தைச் சாதிப்பதில் அவளுக்குள்ள வன்மையும் மிகுதியானவை. இராமன், பரதன் ஆகிய இருவரில் எவருக்காவது முடிபுனையும் பாக்கியம் கிடைத்தால் அதனாற் கூனிக்கு எவ்வித பயனும் இல்லை. பரதன்மேல் அன்பு கொண்டு அவனுக்குப் பட்டம் கிடைக்க வேண்டும் என்ற வேட்கை மிகுதியாற் சூழ்ச்சி செய்தாள் எனில் இராமனைக் காட்டுக்கு அனுப்பாது பரதனுக்கு மட்டும் ஆட்சிபெற ஆவன செய்வதுடன் தன் திட்டத்தினை முடித் திருக்கலாம். இராமன் காடாள்வதும், பரதன் நாடாள்வதும் ஆகிய இரு நிகழ்வுகளுக்கும் தொடர் பில்லை. ஆகவே இராமனைக் காட்டுக்கனுப்பவும், அவன் படும் துன்பங்களைக் கண்டு தான் மகிழ்வதற்குமே இச்சூழ்ச்சியை நிறைவேற்றக் கைகேயியையும் பரதனையும் பயன்படுத்தினாள் போலும். மந்தரையின் சூழ்ச்சியின் பிறகுதான் கதையே விரைவு பெறுகிறது. இராமனது அருங்குணமும், பரதன், இலக்குமணன் ஆகியோரது சகோதர வாஞ்சையும், சீதையின் கற்பும், அரக்கர் வீரமும், மந்தரையின் சூழ்ச்சி காரணமாக வெளிப்படுகின்றன. இராமனின் பாங்கரும் தொல்புகழ் அழகினைப் பருக மந்தரை எனுங் கூனி உதவி செய்கிறாள்.

# சுக்கிரீவன் நன்றி மறந்ததேன்



பண்டிதர் - மு - ந - கடம்பேசுவரன்

இலக்குவன் வருகிறான். கோபாக்கினி சுவாலிக்கின்றது அவன் முகத்தில். துடிக்கின்றன உதடுகள். நெறிக்கின்றன புருவங்கள். நெறுநெறுவென்று பற்களைக் கடிக்கின்றான். சுக்கிரீவனது அரண்மனையிலுள்ளோர் துவண்டு போகின்றனர்.

அங்கதன் பதறி ஓடுகின்றான் சுக்கிரீவனைத் தேடி.

*" எந்தை கேளல் விராமற் கிளையவன்*
*சிந்தை யுண்நெடுஞ் சீற்றத் திருமுகம்*
*தந்த ளிப்பத் தடுப்பரும் வேகத்தான்*
*வந்த னன்னுன் மனக்கருத்தி யாதென்றான்"*

எதனையும் உணராதபடி அந்தப்புர சுகம் சுக்கிரீவனைத் தடுக்கின்றது. பஞ்சணையே பற்றுக் கோடாகக் கிடக்கின்றான் அவன்.

நிலைமையை யுணர்ந்த அங்கதன் அனுமனிடஞ் செல்கின்றான். அநுமன் முதலானோர் என் செய்யலாம் என, தாரை,

*" திரம்பி னீர் மெய் சிதைத்தீ ருதவியை*
*நிறம்பொலீருங்கள் தீவினை நேர்ந்ததால்*
*மறஞ்செய் வானுறின் மாளுதிர் மற்றினிப்*
*புறஞ்செய் தாவதெனென்கின்ற போதின் வாய்"*

என்று பழிக்கின்றாள். அநுமனது ஆலோசனைப்படி தாரை சென்று, தணிக்கின்றாள் இலக்குவனது கோபக்கனலை.

இலக்குவன் சீற்ற முறுவதாக இப்படி ஒரு காட்சிகிட்கிந்தா காண்டத்திலுள்ள கிட்கிந்தா படலத்திலே வருகின்றது.

இலக்குவன் சீற்றமுற்றானே ஏன்? இந்தச் சுக்கிரீவன் நன்றி மறந்து விட்டானே என்பது தான். இதுவே இலக்குவனது சீற்றத்தின் அடி நாதம்.

சுக்கிரீவன் நன்றி மறந்ததாகக் கம்பன் காட்டியதேன்?.

சிருஷ்டி கர்த்தா அவன் ஆக்கத்தில் வாழ்கிறான். காவியத்தின் கதை மட்டுமல்ல; அவன் கதையும் அங்கே பரவியிருக்கும். அவன் பரிமாணம் கலந்திருக்கும்– அவன் தன் உள்ளத்தில் உயர்வாகத் தோன்றுவதை நிலைப்படுத்துவதற்குத் தன் அனுபவ அறிவைப் பயன்படுத்துவான். பாத்திரங்களுக்கு ஏற்றாற்போலப் படைத்துத் தொடுத்து, வளர்த்து நிறைவுபடுத்துவான். அவன் பண்பு நலன்கள் அவனது ஆக்கத்திற் செறியாதிருக்க முடியாது. கதையில் இருந்தே அவன் கதையையும் அளந்து விடலாம். எனவே தான் கம்பனின் காவியத்தில், தனித்துவமான முத்திரைகள் மிளிர் கின்றன.

கம்பனின் உணர்வில் உந்நத இடத்தைப் பெற்றிருப்பது நன்றிப் பெருக்கே.

நன்றியுடைமையாகிய பண்பு மிக உயர் வானதாகவும் ஏனைய பண்புகளெல்லாவற்றிற்கும் உயிரூட்டந்தரும் பண்பாகவும் நின்றுதவுகின்றது. நன்றிமறவாமை என்னும் இந்தப் பண்பு உணர்வால் உணரப்படுவதாகும்.

*" உயிர் எத்தன்மைத்து என்ற வழி*
*உணர்தற் தன்மைத்து என்ப"*

( தொல். சேனாவரையம்)

இவ்வாறு உயிரை உணர்வால் உணர்வது போலவே, நன்றியறிதலும் உணரப்படுகின்றது. நன்றியைப் போற்றும் உள்ளம் உடையார்க்கு இவ்வுணர்வு உள்ளத்தோடுறைந்து பண்பனைத்தையுஞ் சிறக்கச் செய்கின்றது. தகுந்த நேரத்தில் அன்பாய்க், காதலாய்ப், பக்தியாய் வெளிப்பட்டுப் பல்வேறு வகையில் உதவி, உயர்ந்த மனோ நிலையைத் தோற்றுவிக்கின்றது.

பிள்ளைகளின் வளர்ச்சிக்குத் தாய்தந்தையர் உதவுகின்றனர். பிள்ளைகள் நன்றி சொல்வதில்லை. புன்சிரிப்பு–முகமலர்ச்சி போன்ற மெய்ப்பாடுகளால் வெளிப்படுத்துவதோடு நின்று விடுகின்றனர். பின்னர்

உரியவேளையில் தந்தை தாயராலே பெற்ற பேறுகளை நினைந்து நன்றி மறவாதிருக்கின்றனர்.

அடியார்கள் கடவுளர் அருளை வேண்டித் தம் துன்பத்தைத்துடைக்கின்றனர். அந்த நன்றியை நினைந்து நினைந்துருகிப் பாடிப் பரவுகின்றனர்.

மகாபாரதத்தில் வரும் கன்னனைப் போன்று, நன்றியுணர்வின் எல்லையைத் தொட்டவர் பலர். இலக்கியங்களிலும், தனிப்பாடல்களிலும் அவர்கள் பாராட்டப்பட்டுள்ளனர். கம்பன் தன் நன்றியறிதலை வெளிப்படுத்திய முறை வித்தியாசமானது. கம்பனும் சடையப்பவள்ளல் கைம்மாறு கருதாது செய்த உதவியை எண்ணுகின்றான். ஈடு செய்யும் வகையறியாது ஆயிரத் தில் ஒருவராகப் போற்றுகின்றான். தன் காவியத்தில் ஆயிரத்தில் ஒரு பாடலாற் சடையப்பரை எண்ணி அமைத்துத் தன் நன்றியறிதலின் உயர்வை உணர்த் துகின்றான்.

*" அரியணை அனுமன் தாங்க*
*அங்கதன் உடைவாள் ஏந்தப்*
*பரதன் வெண்குடை கவிக்க*
*இருவரும் கவரி பற்ற*
*விரை செறி குழலி ஓங்க*
*வெண்ணையூர்ச் சடையன் தங்கள்*
*மரபுளோர் கொடுக்க வாங்கி*
*வசிட்டனே புனைந்தான் மௌலி"*

கம்பன் தன் புகழ் உள்ளவரை காவியம் வாழும் வரை சடையப்ப வள்ளலும் வாழும்படி செய்துள்ளான். வள்ளல் இல்லாமல்தானில்லை என்பதை உணர்த்தி யுள்ளான். இந்த வள்ளலின் கருணையில்லா விடின் கம்பனை எவரும் அறியாரன்றோ. தூண்டுதல் இல்லை யாயின் திறமைகள் துலங்கல் இல்லை.

*" சுடர்விளக்காயினும் தூண்டுகோல் வேண்டும்."*

கம்பன் நன்றியுடைமையின் மகத்துவத்தைத் தன்காவிய சம்பவத்திலும் புலப்படுத்த வேண்டும் என்று கருதியிருக்க வேண்டும்.

*" சிதைவகல் காதற் றாயைத்*
*தந்தையைக் குருவைத் தெய்வ*
*பதவியந் தணரை யாவைப்*
*பாலரைப் பாவை மாரை*
*வதைபுரி குநர்க்கு முண்டா*
*மாற்றலா மாற்றல் மாயா*
*உதவிகொன் றார்க்கென் றேனு*
*மொழிக்கலா முபாய முண்டோ"*

என வினாவல் மூலம்

*" செய்தி கொன்றார்க்கு உய்வில்லை"*

என்ற புறநானூற்றுக் கருத்தில் தனக்கிருந்த அசையாத நம்பிக்கையைக் கம்பன் உணர்த்தக் காணலாம். செய்ந்நன்றி மறந்தவனைக் கொல்லுதல் குற்றமன்று என எம்பிரான் இராமரது வாக்கினாலேயே கம்பன் காட்டும் போது, தனது உணர்வுகளில் உறைந்திருந்த நன்றியறிதலின் உயர்வைக் கம்பன் காட்டுவதாகத்தான் கொள்ள வேண்டும்.

நன்றி மறந்தவன் சுக்கிரீவன் என இராமர் கூறுவது போலவும் உடனேயே இலக்குவன் அவனைத் தண்டிக்க விரைவது போலவும் ஓர் சம்பவத்தை அமைத்துத் தன் கருத்தினை நிறுவுவதற்குக் கம்பன் முயல்கிறான் என்றே நாம் கருத வேண்டும். இந்த இடத்தை விட்டால் இதுபோன்ற பிறிதோர் இடம் வாய்ப்பதரிது. செய்ந்நன்றியின் உயர்வைத் தெய்வமே ஏற்ற இடம் இதுதான் என்று, வலியுறுத்தும் வாய்ப்புக் கம்பனுக்கு வாய்த்து விட்டது.

இராமரது வாயாற் கம்பன்,

*பெறல ருந்திருப் பெற்று தவிப்பெரும்*
*திறனி னைந்திலன் சீர்மையிற் றீர்ந்தனன்*
*அறம றந்தன னன்பு கிடக்கரும்*
*மறன றிந்திலன் வாழ்வில் மயங்கினான்.*

*நன்றி கொன்றரு நட்பினை நாரறுத்*
*தொன்று மெய்ம்மை சிதைத்துரை பொய்த்தலாற்*
*கொன்று நீக்குதல் குற்றத்தி னீங்குமால்*
*சென்று மற்றவன் சிந்தையைத் தேர்குவாய்*
என்கிறான்.

இதனைக்கேட்டு விரைந்து சென்ற இலக்கு வனைச் சுக்கிரீவனது வானரப் படைகள் உரிய முறையில் வரவேற்காது போகவே, இலக்குவன் கடுஞ்சினத்தனாய் வாயிலை எற்றி உதைந்து கொண்டு உள்ளே செல்கின்றான். அறிந்த தாரை தம்மவர் நிலையுணர்ந்து

*எய்தி யென்செயத் தக்கதிங் கென்றலும்*
*செய்திர் செய்தற் கருநெடுந் தீயன*
*நொய்தி லன்னவை நீக்கவு நோக்குதிர்*
*'உய்திர் போலும்' உதவிகொன் றீரெனா*

என்கின்றாள்.

( உய்திர் போலு மென்றது உய்யமாட்டீர் என்றவாறு. ஒரு கால் தப்பிப் பிழைத்தாலும் மறுமையில் நன்றிகொன்ற இப்பாவத்தினின்றும் தப்பிப் பிழைக்க மாட்டீர் என்றவாறு).

தாரையின் தோற்றமும் தேற்றமும் இலக்குவன் சீற்றத்தை மாற்றஞ் செய்தபின் அனுமன் பேசுகின்றான்.

*செம்மைசே ருள்ளத் தீர்கள்*
*செய்தபே ருதவி தீரா*
*வெம்மை சேர் பகையு மாற்றி*
*யரசு வீற்றிருக்க விட்டீர்*
*உம்மையே யிகழ்வ ரென்னி*
*னெளிமையா யொழிவ தொன்றோ*
*இம்மையே வறுமை யெய்தி*
*யிருமையு மிழப்பரன்றே.*

நன்றி கொன்றார்க்கு இம்மை மறுமை இரண்டுமில்லை. என அநுமன் வாயால் உரைத்த கம்பன் ஒருவன் ஒன்றுஞ் செய்யாதிருக்கும் போதே உதவும் மனப்பான்மையை, அத்தகைய உதவியின் உயர்வை,

*உதவாம லொருவன் செய்யு*
*முதவிக்குக் கைம்மா றாக*
*மதயானை யனைய மைந்த*
*மற்று முண்டாக வற்றோ*
*சிதையாத செருவி லன்னான்*
*முன்சென்று செறுநர் மார்பில்*
*உதையானே லுதையுண் டாவி*
*யுலவானே லுலகில் மன்னோ*

என்றும்,

இன்னும் பலவாறு பல்வேறு இடங்களிலும் செய்ந்நன்றி பாராட்டுகின்றான்.

ஒன்றை நோக்குவோம், போரை நீக்கித் தன்னோடு வருமாறு அழைக்கின்றான் விபீடணன். அதற்குக் கும்பகர்ணன்

*" நீர்க்கோல வாழ்வை நச்சி*
*நெடிதுநாள் வளர்த்துப் பின்னைப்*
*போர்க்கோலஞ் செய்து விட்டார்க்*
*குயிர்கொடா தங்குப் போகேன்...."*

என்று கூறுகையில் செய்ந்நன்றியாகிய செஞ் சோற்றுக் கடன் போற்றப்படுகிறது. பாசத்தோடு கலந்ததான செய்ந்நன்றியிது.

செய்ந்நன்றி ஒன்றுக்காக மட்டும் கும்பகருணன் இராவணனைப் பிரியாதிருந்தான் எனக் கொள்ள முடியாது.

கிட்கிந்தா காண்டத்தில் அமைந்துள்ள கிட்கிந்தா படலத்தில் சுக்கிரீவனை நன்றி மறந்தவனாகக் காட்டுவதற்குக் கம்பன் அவசரப்பட்டிருக்க வேண்டிய தில்லை. ஏன் அவ்வாறு காட்டக் கருதினான்? நன்றி மறவாமையில் உயர்வை வெளிப்படுத்தக் கருதிய தனாலேயே சுக்கிரீவன் நன்றி மறந்ததான நிலையைக் கம்பன் காட்டியிருக்க வேண்டும்.

" உயர்ந்தவர்க் குதவிய உதவி யொப்பவே" என்ற கம்பனது குறி அவனது உயர்வைக் காட்டுங் குறியாகவும் வெளிப்படுகின்றது. நன்றியை உணருகின்ற உயர்வு உயர்ந்தார் மாட்டே தான் இருக்கும்.

" விருத்த மென்னும் ஒண்பாவுக்கு உயர் கம்பன்" என வருதலை அவதானித்தால் உயர் என்ற அடைமொழி கம்பன் பண்பில் உயர்ந்தவன் எனக் கொள்ளவும் இடந்தருகின்றது. இத்தகைய பண்பு இளமையில் முளைவிட்டு வளரவேண்டிய தென்பதைக் கம்பன் காட்டியது அருமை. இது அவனுக்கும் பொருந்தும்.

" ..................... அஞ்சி லைம்பதி லொன்றறி யாதவன் நெஞ்சில் நின்று நிலாவ நிறுத்துவாய்"

என்று இராமர் இலக்குவனுக்குக் கூறிய கூற்றில் பண்பானது இளமை தொட்டே வளர வேண்டிய தென்பதைக் குறிப்பாகக் கம்பன் உணர்த்துகின்றான். இளமையில் பதிந்த ஒன்று மரண காலம் வரையும் நிலைக்கும். நன்றிமறவாமை என்னும் உயர் பண்பு கம்பனிடம் மரண காலம் வரையும் நிலைத்து இருக்கிறது. என்பதைக் கம்பன் மரணத்தைத் தழுவிக் கொண்ட வேளையிலும் காணமுடிகிறது.

***" ஆன்பாலுந் தேனும் அரம்பை முதல் முக்கனியும்***
***தேம்பாய உண்டு தெவிட்டுமனம்- தீம்பாய்***
***மறக்குமோ வெண்ணெய் வருசடையா கம்பன்***
***இறக்கும்போ தேனும் இனி"***

தன்னைக் கவர்ந்த இவ்வுயரிய நன்றி மறவாமையென்னும் பண்மை வலியுறுத்தவே தான் பாடிய இராமாவதாரம் என்னும் பாரகாவியத்தில் சுக்கிரீவன் நன்றி மறந்தான் எனக் காட்டக் கம்பன் கருதினான் என்பது தெளிவு. அந்தச் சம்பவம் இடம் பெறாவிடினும் கதையம்சத்தின் சிறப்பெதுவும் குன்றி விடப்போவதில்லை.

*"முடிபுனை யுந்தச ரதனுரை யிங்கிது முழுதுமொ ழிந்துடனே*
*முதல்வர் வரந்தனி லனைவர்களும்பழ முறைமிலெ ழுந்தபினே*
*இடர்பெரு கும்பர தனையரு ளும்படி வடதிசை புஷ்பகமேல்*
*இரகுபதி யுஞ்சனகியுமொரு தம்பியு மெவருநிறைந்திடுமுன்*
*வடுபடி யும்வசந் தனைநிமி ஷங்கொடு வருகென வெம்பெருமான்*
*வரைதிருபந்தனை முடிமிசைகொண்டொருமறலியின் மண்டலமும்*
*அடுகளி றிந்திர னுறைதரு மண்டல மயனுறை மண்டலமும்*
*அதிரதி ரும்படி விசையனு மந்தன வளவு கிளம்பினனே"*

என்ற விருத்தத்திலும், "தாவி யனுமன் வந்தானே" என்ற பதமுழுதினும் விரிவாகவே பாடுதல் காண்க. இராமாயணவண்ண முதலியவற்றிலும் இச்செய்தி கூறப் பட்டுள்ளதாம். இவ்வசந்தன் கதை வேறு எந்த வடமொழி யிராமாயணத்தில் உள்ளதோ, தெரியவில்லை. எனினும், தமிழ் நாட்டில் சில நூற்றாண்டுகட்கு முன்வரை இச்சரிதம் பெருவழக்கா யிருந்ததென்பது, மேற்கூறிய பிரமாணங்களால் அறியத்தகும்.

## 13. அனுமானுடன் இராமன் விருந்துண்டது

இராவணவதத்துக்குப் பின் இராமபிரான் பிராட்டியு டனும் வானர வீரர்களுடனும் புஷ்பக விமானத்திற் சென்று பரத்துவாசர் ஆச்சிரமத்திற் றங்கியபோது, பெருமான் அம்முனிவர்க்கு அனுமானது அரும்பெருத வியைப் புகழ்ந்து கூறி, அம்முனிவராற்றிய விருந்தில் தம்முடன் உண்ணும்படி அச் சிறிய திருவடியை அழைத்தனர் என்றும், அவ்வுபசாரத்தை அவர் ஏற்றுக் கொள்ளாது இராமரது பரிகலசேடத்தையே உண்ணலா யினர் என்றும் வரலாறொன்று வழங்குகின்றது.

*"முனிவன் வாண்முக நோக்கியெம் முழுதுணர் முனியே*
*அனும னாண்டகை யளித்தபே ருதவியின் றெம்மால்*
*நினைய வும்முரை நிரப்பவு மரிதினி நீதி*
*புனித வுண்டியெம் முடனெனப் புரவலன் புகன்றான்"*

என்பன முதலாகவரும் கம்பராமாயணச் செய்யுட்களால் *இதனை உணர்க. இவ்வாறு உடனுணம்படி பெருமாள் விரும்பிய கருணைத் திறத்தை வியந்து திருமங்கைமன்னனும் –

*"வாத மாமகன் மற்கடம் விலங்கு*
*மற்றோர் சாதியென் றொழிந்திலை யுகந்து*
*காத லாதரம் கடலினும் பெருகச்*
*செய்தகவினுக் கில்லைகைம் மாறென்று*
*கோதில் வாய்மையி னாயொடு முடனே*
*உண்ப னானென்ற வொண்பொரு ளெனக்கும்*
*ஆதல் வேண்டுமென்ற றடியிணை யடைந்தேன்*
*அணிபொ ழிற்றிரு வரங்கத் தம்மானே"*

(பெரிய திருமொழி, 5, 8, 2)

என்று அருளிச்செய்தல் அறியத்தக்கது. பரதனிடம் தாம் குறித்த தினத்தில் வந்துசேரும் செய்தியை முன்சென்று சொல்லி வரும்படி இராமபிரானால் விடுக்கப்பட்ட அனுமான், அதனை அப்பரதற்கு அறிவித்துவிட்டுத் திரும்பி, பரத்துவாசமுனிவரால் அப் பெருமான் விருந்துண்ணும் சமயத்தில் வந்துசேர்ந்தனர் என்றும், அதுகண்டு பெரிதும் மகிழ்ந்து சிறிய திருவடியை அவரிளைப்புத்தீரத் தம்முடனுண்ணும்படி பெருமான் அருளிக்கூறினரென்றும் பின்னோர் இச்சரித்திரத்தைச் சிறிது வேறுபடக் கூறுவர். காழி அருணா சலக்கவிராயர் தம் இராமநாடகத்தில் இதனை,

*'நீதமுட னனுமனிது சொன்னா னிந்த*
*நிமிஷவந்து சாமியுனக் கருள்வ னென்றான்*
*போதரவாய்ப் பரத்வாசன் மடத்திற் பூர்வ*
*போசனவே ளையிற் போய்ரா கவனைக் கண்டான்*
*பாதமலர் வணங்கினான் பரதன் தன்னைப்*
*பார்த்ததுங்காத் ததுஞ்சொன்னா னப்போதையன்*
*காதலனே யனுமானே நீயே யென்றன்*
*கண்ணென்றா னென்னுடன்வா உண்ணென் றானே"*

*"வாவா அனுமானே – என்னுடன் உண்ண–வாவா சீமானே"*

என்று பாடுதல் காணலாம். இச்சரித்திரத்தையே, பாப்பாவினம் என்ற நூலியற்றிய காரி ரத்தின கவிராயர்,

*"கமையடைந் தொடுங்குவான் விருந்தறைந் திடுகாலைத்*
*தமையன்வந் தனனெனப் பரதன துயிர்தந்தான்*
*அமைவுகண்டுடனுண்பா னருள் தந்த குணனுறார்"*

(பரிபா. 2, பக் 80)

என்றும், திருவைகுந்தநாதர் பிள்ளைத்தமிழாசிரியர்

*"கார்நிறக் கோதையும் மதிபொருவு வதனமுங்*
*கச்சடங் காத தனமுங்*
*கமலவிழி யுங் கொண்ட சனகியுந் தம்பியுங்*
*கதிரவன் பெறுமதலையும்*
*ஏருலவு வானரத் தலைவருஞ் சேனையு*
*மிலங்கையர சன்ற னுடனே*
*எதிபரத் துவனுறையு மினிதான சாலையினி*
*லெய்தியவ னால மைந்த*
*வார்கவைமி னோடிசில் போனக முணககருதி*
*வாய்மடு துற்ற பொழுதில்*
*வந்துதொழு மாருதியை யென்றனுட னுண்ணநீ*
*வாவென் றழைத்து மகிழுஞ்*
*சீர்மருவு தாரணி யிராகவ முகுந்தநீ*
*சிறுதே ருருட்டி யருளே*
*சீதரதென் வைகுந்த நாதரகு வீரநீ*
*சிறுதே ருருட்டி யருளே"*

---

*இச்செய்யுட்கள் கம்பராமாயண அச்சுப்பிரதிகளிற் காணப்படா; சில ஏட்டுப் பிரதிகளில் மட்டுமுள்ளன. (ஸ்ரீ வை.மு. கோபால கிருஷ்ணமாசாரியஸ்வாமியின் யுத்தகாண்ட உரைப் பதிப்பு, பக் 811 – 2.)

என்றும் பாடியிருத்தல் காண்க. இத்தகைய வரலாறு வால்மீகி முனிவர் கூறாததொன்றாகும். பரத்து வாசமுனிவரது விருப்பின்படி ஒருநாள்வரை அவராச் சிரமத்தில் தாமதித்த இராமபிரான், மறு நாள் தாம் வந்துசேருஞ் செய்தியைப் பரதற்கு முன்சென்று அறிவிக்கும்படி அனுமானை அனுப்பி, அம்மறுநாளே பரதனிடஞ் சென்றுவிட்டதாக அம்முனிவர் கூறுகின்றா ரேயன்றி அனுமான் திரும்பிய செய்தி கூறினரில்லை. இவ்வாறு வான்மீகத்துக் காணப்படாமை பற்றியே, மேற்கூறிய திருமங்கைமன்னன் பாசுரத்துக்கு வியாக் யானமிட்ட பெரியோர் 'உடனுண்பனான்' என்பதற்குத் தம் திருமேனி யனுபவத்தை அளித்துதவிய தாகக் கருத்துக் கூறலாயினர். ஆயினும், மேற்கூறிய ஆசிரியர் பலர் வாக்குகளாலும் அனுமாற்குத் தம்முடன் உண்ணும் பெரும்பேற்றை அளித்து அவரைச் சிறப்பிக்கப் பெருமான் விரும்பினர் என்பதே தமிழ் நாட்டார் வழங்கி வந்த வரலாறு என்பது நன்கு விளங்குகின்றது. இவ்வரிய செய்தி ஆழ்வார் காலத்துக்கும் முற்பட்டதாயிருத்தலின் பழைய தமிழ்வழக்கினுள் ஒன்றாக இதுவும் கொள்ளற் குரியதாகும்.

## 14 பிராட்டி மல்லிகைமாலையாற் பெருமானைக் கட்டியது

பெரியாழ்வார் தம் திருமொழியில், அசோக வனிகையிலிருந்த பிராட்டியிடம் தெரிவிக்கும்படி இராமபிரான் அனுமான்மூலம் சொல்லி விடுத்தனவாகப் பாடிய அடையாளங்களிலே -

*"அல்லியம்பூ மலர்க்கோதாய் அடிபணிந்தேன் விண்ணப்பம்*
*சொல்லுகேன் கேட்டருளாய் துணைமலர்க்கண் மடமானே!*
*எல்லியம்போ தினிருந்த விருந்ததோ ரிடவகையில்*
*மல்லிகைமா மாலைகொண்டங் கார்த்ததுமோ ரடையாளம்"*

எனப் பெருமானுக்கும் பிராட்டிக்கும் நிகழ்ந்த அந்தரங்க நிகழ்ச்சியொன்றும் குறிப்பிடப்பட்டதாக அவ்வாழ்வார் அருளிச் செய்தல் காணலாம். இதனால் அயோத்தியிலே இராமபிரானும் பிராட்டியும் ஒருநாளிரவு ஏகாந்தமா யிருந்தகாலையில், பிரணய கலகமுண்டாக அப்போது மல்லிகைமாலையைக்கொண்டு பிராட்டி தன் நாயகனைக் கட்டினள் என்ற செய்தி தெரிவருகின்றது. இது வான்மீகி முனிவரேனும் கம்பரேனுங் கூறாத தொன்றாம். இதற்கு மூலமும் தமிழ்நாட்டுவழக்கே போலும்.

## 15 தசமுகன் தலைகளைத் திருமால் எண்ணியது

தசமுகனான இராவணண் தன்னை ஒருதலை யுடனாக உருமாற்றிக்கொண்டு, பிரமதேவனிடம் நீண்ட ஆயுள் வரம்பெறும் விருப்புடன் வந்துநின்றபோது, திருமால் குழந்தையுருவாய் அப்பிரமன் மடியில் தங்கி, 'தன்னியற்கை வடிவினை மறைத்து வஞ்சகனாய் வரும் இவ்வரக்கனுக்கு வரமளித்தல் கேடாம்' என்ற குறிப்பினைத் தம் திருவடிகளைத் தூக்கி அவற்றால் தசமுகன்தலைகளை எண்ணிக் காட்டி மறைந்தன ரென்றும், அத்தலைகள் தம்மால் அழித்தற்குரியவை என்பது புலப்படக்காட்டிய அக்குறிப்பிபை அறியாமலும், வணங்காமுடியனாக, அவ்விலங்கேசன் தன்னை வணங்கிக் கேட்டதற்கு உவந்தும் பிரமதேவன் வேண்டிய வரத்தை அவர்க்கு அளித்து விடுத்தனன் என்றும் வரலாறொன்று தமிழ்நாட்டில் தொன்றுதொட்டு வழங்கியதாகும். இதனை, ஆழ்வார்களுள் முன்னோரான பொய்கையார் தம் முதற்றிருவந்தாதியில்,

*"ஆமே யமரர்க் கறிய வதுநிற்க*
*நாமே யறிகிற்போம் நன்னெஞ்சே – பூமேய*
*மாதவத்தோன் றாள்பணிந்த வாளரக்க னீண்முடியைப்*
*பாதமத்தா லெண்ணினான் பண்பு"* (45)

என்றும், பேயாழ்வார் தம் மூன்றாந் திருவந்தாதியில்

*"ஆய்ந்த வருமறையோ னான்முகத்தோ னன்குறங்கில்*
*வாய்ந்த குழவியாய் வாளரக்கன் – ஏய்ந்த*
*முடிப்போது மூன்றேழென் றெண்ணினா னார்ந்த*
*அடிப்போது நங்கட்கரண்"* (77)

என்றும், திருமழிசையாழ்வார் தம் நான்முகன் திருவந்தாதியில்,

*"கொண்டு குடங்கான்மேல் வைத்த குழவியாய்த்*
*தண்ட வரக்கன் றலைதாளாற்–பண்டெண்ணிப்*
*போங்குமர னிற்கும் பொழில்வேங் கடமலைக்கே*
*போங்குமர ருள்ளீர் புரிந்து"* (44)

என்றும் அருளிச் செய்தவற்றால் அறியலாம். இவற்றுள், இரண்டாம் பாசுரத்துக்கு –

"(பிரஹ்மா) ஸ்வாபாவிகமாக சேஷித்வமில்லா மையாலே புதுக்கும்பிடைக்கண்டு இறுமாந்து, தங்களனர்த்தமறியாதே ராவணனுக்குத் தொடுத்த தெல்லாங் கொடுக்கப்புக, 'இவனாலே நோவுபட்டாலும் நம்முடைய பாடேயிறே இவர்கள் வந்து விழுவது' என்று பார்த்து (அவன் குறங்கிலே) அழகிய பிள்ளையாய் ஸாயுதனான ராவணனுடைய தலைகளை மௌக்த்யத் தாலே மூன்றேழென்று எண்ணினவன்"

என்றும், முற்பாசுரத்துக்கு –

"ப்ரஹ்மாவின் மடியிலே ஒரு சிறுபிள்ளையாய்க் கண்வளருவாரைப்போலே கிடந்து, 'இவனுக்கு வரங்கொடுக்கவேண்டா, இது அநர்த்தமாம்' என்று, ராவணன் தலையைத் தன் திருவடிகளாலே எண்ணினவன்...ராவணன் பத்துத்தலையையும் மறைத்துவர அத்தைச் சிறுபிள்ளைகள் காலையாட்டு மாப்போல எண்ணிக் காட்டினான்"

என்று ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை எழுதியுள்ள வியாக்யான பந்திகள் அறியத்தக்கன. ஆழ்வார்களிலே முற்பட்டார் மூவர் ஒரு சேரக் கூறிய இவ்வரிய வரலாற்றுக்கு வேறு வடமொழிப் பிரமாணங் காணப்படிலது. அதனால், இதுவும் இராமாயண சம்பந்தமாகத் தமிழ்நாட்டில் வழங்கிவந்த பழைய கதைப் பகுதி என்றே கொள்ளத்தக்கது.

## 16. அகத்தியரும் இராவணனும்

தசமுகனான இராவணனைப் பற்றிய வரலாறுகள் சிலவும் வடநூல் வழக்கின்வேறாகத் தமிழகத்து வழங்கி வந்தனவாம். இவ்விராவணன் குணங்களாலும் செய்கைகளாலும் பழிக்கப்பட்டவனாயினும் பெருந்தவம்புரிந்து பிரமனாலும் சிவபிரானாலும் நீண்ட நாளும் வாளுமாகிய வரங்கள் அளிக்கப்பெற்றனனென்றும், இசையிற் பெரிதும் வல்லவன் என்றும் நூல்களிற் சிறப்பிக்கப்படுபவன். இவனது சிவபக்தித்திறத்தை வியந்தே சம்பந்த மூர்த்திகள் தம் தேவாரப்பதிகங்களில் எட்டாம்பாடல் தோறும் இவனைப் பாடுவாராயினர். ஆயினும் குணஞ்செயல்களாற் கொடியோன் இவன் என்பதனை,

*"மெய்சொல்லா விராவணனை மேலோடி யீடழித்துப்*
*பொய்சொல்லா துயிர்போனான் புள்ளிருக்கு வேளூரே"*
*"தேவிதன்னை யொருமாயையால்,*
*கானதில் வவ்விய காரரக்கன்"*
*"உரையுணராதவன் காமமென்னு முறுவேட்கையான்*
*பொருண்மன்னனைப்பற்றிப் புட்பகங்கொண்ட பருண்மன்னன்"*

என்பன முதலியவற்றால் அம்மூர்த்திகள் பல்லிடத்துங் குறிப்பிட்டுச் செல்வர். இத்தசமுகன் தன் பேராற்றலால் தென்னாட்டை அடிப்படுத்தி ஆட்சிபுரிந்து வந்தவன் என்றும், அகத்தியமுனிவர் இவனை ஓர் உபாயத்தால் இந்நாட்டிலணுகாதபடி செய்து ஒட்டினரென்றும் தமிழ் வரலாறொன்று வழங்குகிறது. இதனை,

*"தென்னவற் பெயரிய துன்னருந் துப்பிற் றொன்முதுகடவுள்"*

என்னும் மதுரைக்காஞ்சித் தொடராலும் (40–1) அதற்கு நச்சினார்க்கினியர்

"இராவணனைத் தமிழ்நாட்டை ஆளாதபடி போக்கின கிட்டுதற் கரியவலிமையினையுடைய பொதியமலை யிலிருக்குங் கடவுளாகிய பழமை முதிர்ந்த அகத்தியன்... இராவணன் தென்திசையாண்டமை பற்றித் தென்னவன் என்றார், இராவணனாளுதல் தொல்காப்பியப் பாயிரச் சூத்திரத்து உரையாசிரியர் கூறிய உரையான் உணர்க"

என்றெழுதிய உரைக்குறிப்பாலும் அறியலாகும். "தென்னவன் மலையடுக்கச் சேயிழை நடுங்கக்கண்டு" என, இராவணனைத் தென்னவன் என்ற பெயரால் திருநாவுக்கரசுநாயனாரும் வழங்குதல் அறியத் தக்கது.

இனி, நச்சினார்க்கினியர் எழுதியவாறு, இராவணன் தென்றிசையாண்ட செய்தியை உரையாசிரியரது உரையினின்றேனும், அவனை அகத்தியமுனிவர் தமிழ்நாட்டினின்று ஒட்டிய வரலாற்றைப் பிறநூல்களினின்றேனும் விவரமாக நாம் அறியக்கூட வில்லை. அச்சிடப்பட்ட தொல்காப்பியம் – இளம் பூரணப் பாயிரவுரையுள் இராவணன் செய்தி ஒன்றுமே காணப்பட்டிலது. எனினும் தம் பாயிரவுரையில் அகத்தியனார் வரலாறு கூறுமிடத்து –

*"பொதியிலின்கணிருந்து இராவணனைக் கந்தவருத் தாற்பிணித்து அவனை ஆண்டுவாராமை விலக்கி"*

என்று எழுதிச்செல்வர் நச்சினார்க்கினியர். தஞ்சைவாணன் கோவையில், "இசைக்குருகப்படுசிலை" (345) எனப் பொய்யா மொழிப் புலவர் கூறிய தொடரும், அதற்கு, "இராவணனைப் பிணிக்கக் குறுமுனி பாடும் இசைக்கு உருகப்பட்ட பொதியமலை" என அட்டவதானி சொக்கப்ப நாவலர் எழுதிய உரையும் அந் நச்சினார்க்கினியர் கூற்றையே வலியுறுத்துதல் காணலாம். இவ் வரலாற்றையே

*"இனியபைந் தமிழின் பொதியமால் வரைபோல்*
*இசைக்குரு காதிம மலையின்*
*தனையயின் றீஞ்சொற் குருகுறுஞ் சோண*
*சயிலனே கயிலைநா யகனே"* (சோணசைலமாலை 26)

எனச் சிவப்பிரகாச முனிவரும் கூறினார். இவற்றால் தென்றிசை ஆண்டுவந்த இராவணன் அகத்தியரது ஆச்சிரமமான பொதியமலையினியிடையிற் புக்கபோது, அவனைப் பிணித்துத் தமிழகத்தை விட்டு அகற்ற வேண்டிக் கந்தருவகானத்தைத் தம் யாழ்கொண்டு அம் முனிவர் வாசிக்க, அப்பாடற்குப் பொதிய முருகி அவ்வரக்கனைச் சூழ்ந்து நெருக்கித் தன்னுள் அகப்படுத்திக் கொள்ளவும் அதற்காற்றாத இராவணன் வேண்டிக் கொண்டவாறு, தென்னாட்டில் இனிப்புகாதபடி அவனுக்கு ஆணையிட்டு, அவ்வாபத்தினின்று அவனை

விடுவித்து ஒட்டினர் – என்பதுபோன்ற கதை இந் நாட்டில் வழங்கியதாக வேண்டும் என்பது புலப்படுகிறது.[1] அகத்தியர் யாழிசையில் வல்லவர் என்பதனை,

*"மன்னு மகத்தியன்யாழ் வாசிப்ப"* (திருக்கைலாய ஞானவுலா)

*"தமிழ்க்குன்றில் வாழுஞ் சடாதாரிபேரியாழ்"* (தக்க.பரணி 539)

என்பவற்றால் உணர்க. இவ்வாறு அகத்திய முனிவர் இராவணனைத் தென்னாட்டை விட்டு அகற்றியவர் என்ற வரலாற்றை வடநூல்களிற் காண்டல் அரிதாகவுள்ளது. அதனால் இது பழைய தமிழ்வழக்காகவே கொள்ளத்தகும். சீதாபிராட்டியைத் தேடிவரும்படி சுக்ரீவன் வானரவீரர்களை ஏவும்போது, "அம்மலய பர்வதத்தின் உச்சியில், மிகவும் தேஜோவானாய் சூரியஸமானராய் ருஷிசிரேஷ்டராயுள்ள அகத்திய முனிவரையுந் தரிசியுங்கள். பிறகு நிர்மலசித்தமும் பரமஞானவானுமான அம்முனிவரது ஆணை பெற்றுக் கொண்டு தாமிரபர்ணியைத் தாண்டுங்கள்" என்றும், இராமபிரான் அகஸ்தியாச்சிரமத்தைப்பற்றித் தம் இளவலான இலக்குமணர்க்குக் கூறும்போது, "அம் மகானாகிய அகஸ்தியர் இவ்வுலகிற்கு நன்மை புரியும் பொருட்டு இங்கிருந்த யமனுடைய உபத்திரவத்தை நீக்கி, இத் தென்திக்கினையும் சுகமாக வசிக்கத் தக்க திசையாகச் செய்துவைத்தார்." எனவும் "எவருடைய மகிமையால் இன்றைக்கும் அரக்கர்கள் இத்தென் திக்கைக் கண்ணெடுத்துப் பார்த்து உட்புக நடுங்குகிறார்களோ, அவருடைய ஆச்சிரமம் அது, பெரும் புண்ணிய மூர்த்தியாகிய அவர் இத் திசைக்கு வந்தது முதல் இங்கே அரக்கர்கள் தம் பகைமை நீங்கிச் சாந்தமுள்ளவர்களாகி விட்டனர். அம் முனிவர் பெயரைக் கொண்டே இத் தென்திக்கும் அகஸ்தியர் திசை என்ற வெகு சாந்தமான பெயர்பெற்று மூவுலகத்துக்கும் பிரசித்தமடைந்து கொடியவர் அஞ்சுந் திசையாக விளங்குகின்றது" என்றும் வால்மீகி முனிவர் கூறுகின்றார். இவற்றால் இராவணன் தென்னாட்டையாளாதபடி அகத்தியர் செய்வித்தவர் என்ற தமிழ்ச் செய்திக்கு, வடமொழியிதிகாசமும் ஆதரவளித்தல் அறியத்தக்கதாகும்.

## 17. முடிவுரை

இன்னும், இராமாயணச்சரிதங்கள் பல உவமையாகவும் எடுத்துக்காட்டாவும் சங்கச் செய்யுட்களிற் கூறப்படுதலைக் காணலாம். உதாரணமாக, கோவலன் தன் மனைவியுடன் காவிரிப் பூம்பட்டினத்தை விட்டகன்றதும், அந்நகரம் இராமபிரானைப் பிரிந்த அயோத்தியினிலையை அடைந்ததாக ஒப்பிட்டு,

*"பெருமக னேவ லல்ல தியாதுங்கனும்*
*அரசே தஞ்சமென் றருங்கா னடைந்த*
*அருந்திறல் பிரிந்த அயோத்தி போலப்*
*பெரும்பெயர் மூதூர் பெரும்பே துற்றதும்"* (சிலப் 13,63)

என்று இளங்கோவடிகள் பாடுகின்றார். 'மஹாவீர': 'ஸத்யபராக்ரம': என்று வால்மீகி பகவான் இராம பிரானைச் சிறப்பித்துக் கூறுதல்போல, அருந்திறல் என்று அப்பிரானை இளங்கோவடிகள் இங்கே குறிப்பிடுதல் அறியத்தக்கது. இவ்வாறே, இளைய பெருமாளான இலக்குமணரது தொண்டாற்றுந் திறத்தை கொங்குவேளிர் –

*"இறைமீக் கூறிய விராமன் றம்பி*
*'மறுவொடு பெரிய மதலைக் கியைந்த*
*ஆனாப் பெரும்புகழ் யாமு மெய்தத்*
*தேனார் தாமரைத் திருந்துமலர்ச் சேவடி*
*வழிபா டாற்றுதும்"* (33, 24, 90, – 4)

எனப் பெருங்கதையிற் சிறப்பிக்கின்றார். இதனுள் 'லஷ்மணர் என்பது, மறு (–உடல்மச்சம்) உடைமை பற்றி வழங்கிய பெயர் என்பதனை 'மறுவொடு பெரிய மதலை' என்ற தொடரால் அவ்வாசிரியர் குறித்தல் குறிப்பிடற்பாலது. ஜைனநூலான வடமொழி உத்தரபுராணத்தில் (பர்வம்–67, ச்லோ. 151) இராமாயண சரித்திரம் வருமிடத்து, "அந்தத் தேவனான மணிசூளனானன் சக்கர ரேகை என்ற அடையாளத்துடன் கூடியவனாதலால் லஷ்மணன் என்ற பெயருடையவனானான்" என்ற கருத்தமைந்த சுலோகம் கூறப்பட்டதென்பர். இது ஜைனரான அங்கொங்குவேள் கூறிய மேற்கண்ட தொடருடன் ஒப்பிட்டறியத்தக்கது. இங்ஙனமே, தனக்கு நேர்ந்த பழிக்கு அஞ்சிப் பூமிக்குள் ஒளித்துத் தன் புகழை உலகில் நாட்டிய சீதாபிராட்டியின் அரியபெரிய செயலை,

*"சிறுமையி னுணர்ந்த பெருமக னிரங்க*
*மண்கெழு மடந்தாய் மறைவிடந் தாவென*
*ஒன்றுபுரி கற்போ டுலகுவிளக் குறீஇப்*
*பொன்ற லாற்றிய புகழாள் போல"*

(1,36,338–41)

எனப் புலவர் பெருமானாகிய அவ்வேளிரே கூறுதல் அறியத்தக்கது. இனி, இராவணன் கயிலையங்கிரியை எடுத்துநின்ற நிலையை.

*"இமையவில் வாங்கிய வீர்ஞ்சடை யந்தணன்*
*உமையமர்ந் துயர்மலை யிருந்தன னாக*
*ஐயிரு தலையி னரக்கர் கோமான்*
*தொடிபொலி தடக்கையிற் கீழ்புகுந் தம்மலை*

[1] இவற்றையெல்லாம் "மதுரைக்காஞ்சியாராய்ச்சி" என்ற தலைப்பின் கீழ் 26– ஆண்டுகட்கு முன் யான் எழுதிய கட்டுரையுள்ளுங் குறித்துள்ளேன் (செந்தமிழ், மதுரை–7)

*எடுக்கல் செல்லா துழப்பவன் போல*
*உறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையைக்*
*கறுவுகொண் டதன்முதற் குத்திய மதயானை*
*நீடுறு விடரகஞ் சிலம்பக் கூய்த்தன்*
*கோடுபுய்க் கல்லா துழக்கு நாடகேள்"*

என்று குறிஞ்சிக்கிலியில் (2) கபிலர் கூறுவர். இதனுள் வேங்கை மரத்தைப் புலியென்று தன் கோட்டாற் குத்தி அக்கோட்டைத் திரும்ப வாங்கமாட்டாது வருந்திக் கூப்பிடும் மதயானையின் நிலைக்கு இராவணன் கயிலையெடுத்து வருந்திய நிலையை அவர் ஒப்பிட்டிருப்பது காண்க. தருக்க முதலிய சாஸ்திரப்பொருளை விரிக்குமிடத்தும், "மீட்சியென்பது இராமன் வென்றானென. மாட்சியியலிராவணன் தோற்றமை மதித்தல்" என்பதுபோல (மணி 27,53–4) இராமாயண சரிதத்தைத் திட்டாந்தங் கூறுதல் பண்டையோர் வழக்காம். இவ்வாறே, இராமாயண சம்பந்தமான சரிதங்கள் தமிழகத்தில் பெருக வழங்கிவந்துள்ளவற்றைத் தலமான்மியங்களானும் நாம் பலபடியாகத் தெரியலாகும். கழுகின் வேந்தாகிய சம்பாதி இருந்த வனம், காவிரிப்பூம்பட்டினத்தை அடுத்திருந்ததென்று மணிமேகலை கூறும். இச்சம்பாதிவனத்தைப் புள்ளிருக்கும் வேளூர் என்பர். இதனை,

*"வெங்கதிர் வெம்மையின் விரிசிறை யிழந்த*
*சம்பாதி யிருந்த சம்பாதி வனமும்"*
(மணி. 3.53–4)

*"தன்னாய சம்பாதி சடாயென்பர் தாமிருவர்*
*புள்ளானார்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே"*
(தேவா. புள்ளிருக்கும். சம் 4.)

என்ற முன்னோர் வாக்குக்களால் உணர்க. இனி, இராவணன் பெருந்தேவியான மண்டோதரிக்குச் சிவபிரான் அருள்புரிந்ததனை–

*"ஏர் தருமே முலகேத்த எவ்வுருவுந் தன்னுருவாய்*
*ஆர்கலிசூழ் தென்னிலங்கை யழகமர்வண் டோதரிக்குப்*
*பேரரு ளின்பமளித்த பெருந்துறை மேய பிரானைச்*
*சீரிய வாயாற் குயிலே தென்பாண்டி நாடனைக் கூவாய்"*
(திருவாசகம், குயிற்பத்து, 2.)

*"உந்துதிரைக் கடலைக் கடந்தன்*
*றோங்குமதி லிலங்கை யதனி"*
*பந்தணை மெல்விர லாட்கருளும் பரிசறிவார்"*
( ஷை, திருவார்த்தை, 5)

எனத் திருவாதவூரடிகள் அருளியதும் அரியதோர் தமிழ்ச்செய்தியாகும். பாண்டிநாட்டுத் திருவுத்தரகோசமங்கையில், அக்கினி தீர்த்தக்கரையிலே தம்மை நோக்கித் தவஞ்செய்து கொண்டிருந்த முனிவர் குழாத்தின் முன்பு சிவபெருமான்தோன்றி, இலங்கையில் இராவணன் தேவியான மண்டோதரி தம்மை இடைவிடாது வழிபடுதலால் அவளுக்கு முதலில் அருள் புரிதற்குத் தாம் செல்ல வேண்டியிருத்தலையும், அம்முனிவர்க்குத் தாம் பிரசன்னமாகுங் காலத்தையுங் குறிப்பிட்டு இலங்கைசென்றனரென்றும், ஆண்டு மண்டோதரியின் விருப்பிற்கிசைந்து அவளுடன் கலந்து அவளை மகிழ்வித்து வந்தபோது, இலங்கேசன் அவளிருப்பிடத்தை நோக்கித் தீடீரென்றுவர, சிவபிரான் குழந்தையுருக் கொண்டு அத்தேவிமடியிலிருத்தல் கண்டு அதுபற்றி அவன் உசாவ, ருஷிபத்தினி யொருத்தியின் மகவென்பதை அவளால் அறிந்து அம்மகவின் அழகுக்கு வியந்து அதனைத் தழுவவும், குழவியானசிவபெருமான் மறைந்து, தம் தலத்தில் நோற்கும் முனிவர்க்கு அருள் புரியச் சென்றனர் என்றும் ஷை உத்தரகோசமங்கைத் தலபுராணம்* கூறும் இவ்வாறே, சேது புராணமுதலிய தலமான்மியங்களில் வழங்கும் இராமாயணவழக்குக்கள் பல. அவற்றையெல்லாம் இங்கு விரிப்பிற்பெருகும்; அவ்வம்மான்மியங்களை நோக்கியுணர்க. இவற்றால், சீராமசரிதம் சங்ககாலத்துத் தமிழ்மக்களுட் பெரு வழக்குப்பெற்றிருந்த தென்பதும், தமிழிராமாயண நூல்கள் இயற்றப்பட்டிருந்தன வென்பதும், தென்னாட்டு வழக்கேயான சரித்திரக்கூறுகள் அச்சங்ககாலத்தும் பிற்காலத்தும் பெருக வழங்கிவந்தன என்பதும் நன்கறியலாகும்.

---

* இப்புராணம், கமலை ஞானப்பிரகாசர் சிஷ்யரான மாசிலாமணிச் சம்பந்தர் என்பவரால் இயற்றப்பெற்றது. இந்நூலுள் பார்ப்பதி தவம்புரிந்த அத்தியாயத்தில், 3–முதல் 10–வரையுள்ள பாடல்கள் இச்சரிதங் குறிப்பன. இந்நூல் அச்சிடப்பெற்றிலது.

# கம்பராமாயண ரசனை



திரு. வ. வே. சு. ஐயர்

## உபோற்காதம்

கம்ப நாட்டாழ்வார் எழுதிய திவ்ய கிரந்தமானது முப்பத்தைந்து தலைமுறைகளாகத் தமிழருக்கு ஆனந்தத்தைத் தந்து வருகிறது. இந்த ஆயிரத் தைம்பது வருஷங்களில் எத்தனை மேதாவிகள் கம்பனுடைய ராமாயணத்தை ஆராய்ந்திருப்பார்கள், எத்தனை பேர் பிரசங்கித்திருப்பார்கள், எத்தனை பேர் தமக்குள் தாமே படித்து ஆனந்த பரவசர்களாகி யிருப்பார்கள். ஒவ்வொரு தலைமுறையிலும் கம்ப ராமாயணம் பிரசங்கிப்பதில் சிறந்தவர் என்று கீர்த்தி பெற்றவர் அனேகர் இருந்திருக்கிறார்கள். வேறெந்தக் காவியத்தையும் பற்றி இத்தகைய தனிப் பெயரை வித்துவான்கள் பெற்றதாகவாவது விரும்பிய தாகவாவது நாம் கேட்டதில்லை. இப்பொழுதுகூட, சிலப்பதிகாரம் பிரசங்கிப்பதில் சிறந்தவர் என்றாவது, மணிமேகலை சொல்லுவதில் சாமர்த்தியம் நிறைந்தவர் என்றாவது வித்துவான்களைப் பற்றிப் புகழுவதில்லை. ஆனால் கம்பனுடைய ராமாயணத்தைப் பிரசங்கிப் பதையே ஒருவர் தமது காரியமாக வைத்துக் கொண்டால் மனிதர் அவர்களுக்கு, அவர்களுடைய புலமைக்கும் சொற்பொழிவுக்கும் தக்கபடி, தனி மரியாதை செலுத்துகிறார்கள். அவர்களும் கம்ப ராமாயணப் பிரசங்கி என்கிற பெயரை ஆசையோடே விரும்புகிறார்கள்.

ராமாயணம் புண்ணிய கதையாகையால் கதையை உத்தேசித்துப் பக்தர்கள் அதற்குத் தனி மரியாதை செலுத்துகிறார்கள் என்று சொல்லப்படலாம். ஆனால் வில்லிபுத்தூரார் பாரதத்தைப் பிரசங்கிக் கின்றவர்கள் என்றாவது ஆரியப்ப புலவர் என்னப் படுகிற அனதாரிப் புலவரின் பாகவதத்தைப் பிரசங்கிக்கிறவர்கள் என்றாவது, கச்சியப்பருடைய ஸ்கந்த புராணத்தைப் பிரசங்கிக்கிறவர்கள் என்றாவது யாருக்கும் கியாதி வந்து நாம் கேட்டதில்லை. ஆகவே இந்தப் புகழும் புகழிலுள்ள விருப்பமும் கம்பன் எழுதிய காவியத்தின் சிறப்பைத்தான் காட்டுகின்றனவே ஒழிய கதையின் சிறப்பைக் காட்டவில்லை. கம்பனுடைய ராமாயணமானது மற்றக் கவிகள் எழுதிய ராம சரிதைகளையும் தமிழில் எழுதப்பட்ட இதர காவியங்களிற் பெரும்பாலனவற்றையும் கூட வெயிலிடைத் தந்த விளக்கொளிபோலாக்கிவிட்டது.

இது மாத்திரமில்லை. கம்ப ராமாயணமானது ஹோமர் எழுதிய இலியாதையும், விர்க்கீலியன் எழுதிய ஏனயிதையும், மில்டனுடைய சுவர்க்க நஷ்டம் என்ற காவியத்தையும், வியாஸ பாரதத்தையும், தனக்கே முதனூலாக இருந்த வால்மீகி ராமாயணத்தையும் கூட பெருங் காப்பிய லட்சணத்தின் அம்சங்களுள் அனேகமாய் எல்லாவற்றிலும் வென்றுவிட்டது என்று சொல்லுவோம்.

## ரசனைச் சுவை

காவிய இலக்கணத்தை நிர்ணயிப்பதில், பாரத தேசத்து இலக்கண ஆசிரியர், நமக்குத் தெரிந்தமட்டில், விவரியாமல் விட்டுவிட்ட சில அமிசங்களை மேனாட்டு இலக்கண ஆசிரியர் விஸ்தாரமாக விவரித் திருக்கிறார்கள். நம் நாட்டு இலக்கண ஆசிரியர் பொருள் யாப்பு அணிகளைப் பற்றி நன்றாக ஆராய்ந்திருக்கிறார்கள் என்பதை ஒப்புக் கொள்கிறோம். அலங்கார சாஸ்திரத்தை நம் நூலாசிரியர் ஆழமாக ஆய்ந்திருக்கிறார்கள் என்ப திலும் ஐயமில்லை. ஆனால், காவிய சமக்ரத்தைப் பற்றின ஆராய்ச்சிகள் இதுவரை வெளிவந்திருக்கும்

கம்பன் கவிதை என்ற நூலில் உள்ள வ.வே.சு. ஐயரின் 'கம்பராமாயண ரசனை' என்ற கட்டுரையின் ஒரு பகுதி மாத்திரமே இங்குத் தரப்பட்டுள்ளது

நூல்களில் விஸ்தாரமாகக் காணப்படவில்லை. பெருங் காப்பியத்தில் என்ன என்ன விஷயங்களைப் பற்றிப் பேசவேண்டும் என்று இலக்கணங்களில் ஒரு பெரிய ஜாபிதா காணப்படும். ஆனால் காவியம் எவ்வாறு அமைக்கப்பட வேண்டும், என்ன என்ன இலக்கணங்கள் பெருங் காப்பியத்துக்கு இன்றியமையாதவை, பெருங் காப்பியங்களின் போக்குக்கும் ஏனைய காவியங்களின் போக்குக்கும் என்ன வித்தியாசம், என்ற விஷயங்கள் நம் இலக்கணங்களில் விசாரிக்கப்படவில்லை. மேனாடுகளில் அரிஸ்தோத்தலன் காலம் முதற்கொண்டு இலக்கண நூலாசிரியர் காவிய அமைப்பைப் பற்றிப் பெரிய பெரிய ஆராய்ச்சிகள் வெளியிட்டிருக்கிறார்கள். நம்மவர் காட்டிலுள்ள மரங்களைத் தனித் தனியே கவனித்துக் கொண்டு வந்து அரணியத்தை மறந்துவிட்டார்கள்: மேனாட்டவர் மரங்களைக் கவனித்ததோடு கூட அரணியத்தைப் பற்றியும் விசேஷமான ஆராய்ச்சிகள் செய்துள்ளார்கள்.

காவிய சமக்ர இலக்கணத்தைத் தாண்டி கவி தனது அலங்கார இலக்கணத்தில் பாவிக அணியை வர்ணிக்கும் போது சில வார்த்தைகளில் சொல்லி முடித்துவிடுகிறான். அரிஸ்தோத்தலன், ஒராஸியன், புவாலோ, வீதா, பெயின் முதலிய மேனாட்டு இலக்கண ஆசிரியர்கள் விரிவாகச் செய்துள்ள ஆராய்ச்சியைப் பற்றி இங்கு ஓரிரண்டு வார்த்தைகள் சொல்லுவது பொருந்தும். அவ்விலக்கணக் காரர்களுடைய பிரதான அபிப்பிராயம் என்ன வென்றால், ஓர் பெருங் காப்பியம் அனேக அவயவங்கள் சேர்ந்ததாயிருப்பினும் ஒரு ஜீவப் பிராணியைப் போல ஓர் தனிப் பிண்டமாயிருத்தல் வேண்டும். தலை, இடை, கடை என்ற பாகுபாடும், அனைத்தையும் சேர்த்துப் பார்க்கும் போது ஏகம் என்கிற உணர்ச்சியும் அக்காவியத்தில் தோன்ற வேண்டும். ஒவ்வோர் அவயமும், தன்தனக்கு முன்னேயுள்ள அவயத்தோடும், பின்னேயுள்ள அவயத்தோடும் பிணைக்கப்பெற்று ஒன்று என்கிற உணர்ச்சியை வளர்க்கவேண்டும்.

பஞ்ச தந்திரக் கதை, விக்கிரமாதித்தன் கதை, மதனகாமராஜன் கதை, அராபியக் கதை முதலிய கதைகளை ஓர் பக்கமும், அரிச்சந்திர புராணம், கந்த புராணம், ராமாயணம் முதலிய காவியங்களை ஓர் பக்கமும் வைத்துச் சீர்தூக்கிப் பார்த்தால் நாம் மேற்காட்டிய இலக்கணத்தின் கருத்து விளங்கும். பின் சொல்லிய மூன்றிலும் ஒரே ஒரு வஸ்து தான் காவியமாக எழுதப்படுகிறது. இவற்றுள் அனேக உபகதைகள், வர்ணனைகள் உபாக்கியானங்கள் வருகின்றன என்பது வாஸ்தவம். ஆனால் இவை அனைத்தும் கதையின் மத்திய சம்பவத்துக்குத் துணையாக நிற்கின்றன– மத்திய சம்பவத்திற்கு அலங்காரமாகவோ, மத்திய சம்பவத்திற்கு வித்தாகவோ, மத்திய சம்பவத்தினின்று இயற்கையாக விளைந்த விளைவாகவோ, விளங்குகின்றன. முன் சொல்லப்பட்ட நூல்களோ, அவை செய்யுள் நூல்கள் அல்ல என்பது ஓர் பக்கமிருக்க தனிக் கதைகளின் கேவலம் சேர்க்கையேயாகும். அவைகளில் மத்திய சம்பவத்திற்கும் கதைகளுக்கும் உள்ள சம்பந்தம் மிகமிக லேசானது– அதைச் சம்பந்தம் என்றுகூடச் சொல்லத் தகாது. மகா காவியத்தின் பகுதிகளுக்கோ இத்தகைய ஒட்டின்மை இராது. அவற்றின் சம்பந்தம் ஜீவ சம்பந்தம். உபாக்கியானங்கள் முதலிய புற அணிகள் பெருங் காப்பியத்தினுள் அளவுக்கு மீறி இரா. மற்ற உறுப்புக்ளெல்லாம் காவியத்துக்கு அகத் துறுப்புக்களாவே விளங்கும். அவ் உறுப்புக்களில் எதை எடுத்துவிட்டாலும் கதை ஊனமாகிவிடும்.

பாவிக அணி என்று நாம கூறுவதை மேனாட்டவர் 'ஆர்க்கிதெக்தோனிக்ஸ்' (Architectonics) என்கிறார்கள். இப் பதத்துக்கு ரசனை அல்லது காவிய நிர்மாணம் என்று பொருள் சொல்லலாம். இது மனைச் சிற்ப நூலினின்று எடுத்துக்கொண்ட பெயராகும். ஓர் அரண் மனையையோ கட்டடத்தையோ கட்டுவதற்கு அனந்த கோடி ரீதிகள் உண்டு. ஆனால் சில ரீதிகள் தாம் கட்டடத்துக்கு அழகு தரும். பெரும்பாலானவை வானத்தையும் சூரிய ஒளியையும் மூடுமே ஒழிய நமது சௌந்தரிய உணர்ச்சியைத் திருப்தி செய்வியா. அப்படியே ஓர் காவியத்தைப் பல மாதிரி எழுதலாம். நளசரித்திரம், ராமாயணம், பாரதம், அரிச்சந்திர புராணம் முதலிய காவியங்களெல்லாம் அவ் அவ் ஆசிரியர்களின் மனோதர்மத்துக் கேற்றபடி எழுதப் பட்டுள்ளன. சில சம்பவங்களைச் சிலர் விரிக்கிறார்கள், மற்றவற்றைச் சுருக்கி விடுகிறார்கள். வேறு சிலர் முற்சொல்லியவர்க்கு மாறாகச் செய்கிறார்கள். சிலர் சில சம்பவங்களை எடுத்து விட்டுப் புதிய சம்பவங்களைப் புகுத்துகிறார்கள். ரஸிகனுடைய மனதிற்குத் திருப்தி உண்டாகும்படி எந்தக் கவியின் அமைப்பு அமைந்திருக்கிறதோ அவனைத்தான் ரசனையில் சிறந்தவன் என்று சொல்லலாகும். உண்மையாகப் பார்க்கையில் பெருங் காப்பியங்களுக்கு ரசனையே இன்றியமையாதது. ரசனா சுகம் இல்லாமல் வேறு சுகம் இருப்பினும் பெருங் காவியங்கள் பெருமையுள்ளனவாகா.

காவிய ரசனையை மகா வித்துவான் ஒருவனுடைய ராக விஸ்தாரத்துக்கு ஒப்பிடுவோம். எல்லா வித்துவான்களும் ஏழு ஸ்வரங்களைத்தான்– அல்லது அர்த்த ஸ்வரங்களையும் சேர்த்துக் கொண்டால் இருபத்திரண்டு ஸ்வரங்களைத் தான்– கையாளுகிறார்கள். இந்த ஸ்வரங்கள் துவாரா நவரஸங்களைத்தான் ஊட்டுகிறார்கள். ஆனால் ஒரு வித்துவானுடைய ஆலாபனத்துக்கும் இன்னொரு வித்துவானுடைய ஆலாபனத்துக்கும், ஒரு பாடகன் ஓர் கீர்த்தனையைப் பாடுவதற்கும் இன்னொருவன் அதே கீர்த்தனையைப் பாடுவதற்கும் எத்தனை பேதம்! ஒருவன் ராகத்தின் ஸ்வரங்களில் யாதொரு அபஸ்வரத்தையும் கொண்டுவந்து கலக்காமல் பாடிவிடுகிறான். ராகம் பிழையின்றி சாஸ்திரோக் தமாகப் பாடப்பட்டிருக்கும். லயத்தில் யாதொரு பிசகும் இராது. கேட்போர் 'சபாஷ்' என்று சொல்லிக் கொண்டும் சிரக் கம்பம் செய்துகொண்டும் கேட்பார்கள். ஆனால் அவர்களுடைய இருதயத்தில் யாதொரு சலனமும் ஏற்பட்டிராது. அலை வந்து மோதியும் அசையாத பாறை போல அவர்களுடைய இருதயம் அப்படியே இருந்துவிடும். இன்னொருவன் வருகிறான். அதே ராகத்தைப் பாடுகிறான். ஆனால், எல்லோரும் அமுத மழையில் அகப்பட்டவர்கள் போல் ஆகி விடுகிறார்கள். அவரவர்களுடைய சம்ஸ்காரத்திற் கேற்றபடி அவரவர்களுடைய இருதயம், மந்த மாருதத்தில் ஊசலாடும் பூங்கொம்பர் போலவும், சிற்றலைகளால் அசைந்தாடும் தாமரை போலவும், கருப்பஞ் சாற்றில் கரையும் கற்கண்டைப் போலவும், அக்னியில் நெகிழ்ந்து உருகும் மெழுகைப் போலவும் தங்கத்தைப் போலவும் ஆகிவிடுகிறது. அவர்களுடைய மனது புதிய உலகத்தில் சஞ்சரிக்கத் துவக்கிவிடுகிறது. மனோலோகத்தில் சித்திரத்துக்குமேல் சித்திரம் தோன்றிக்கொண்டே வருகிறது. அவர்கள் வயப்பட்டு, வயப்பட்டுப் போய்விடுகிறார்கள். இந்தக் கலைஞனுக்கும் முன் சொல்லப்பட்ட கலைஞனுக்கும் உள்ள வித்தியாசம் இவனிடம் கனிவு இருந்தது; அவனிடம் அது இல்லை. ஆனால் அது மாத்திரமில்லை. இவனுடைய பாட்டின் அமைப்பு மனோஹரமாக அமைந்திருக்கிறது. ஒவ்வொரு ஆவிருத்தமும் அதற்கு முன்னே பாடப்பட்ட ஆவிருத்தத்தினின்று இயற்கையாக வளர்ந்த வளர்ச்சியாகும். அதே மாதிரி தனக்குப் பின்னே வரப்போகும் ஆவிருத்தத்திற்குத் தோற்றுவாயும் ஆகும். ஒவ்வொரு 'சங்கதி' யும் அந்தந்தப் பதங்களை அலங்கரிக்க விழுந்த அலங்காரமாகுமே யன்றி, பதங்களையே முழுக்கி மூடிவிடும் வெறும் சப்த சாலங்களாகா. ஒவ்வோ ரிரஸமும் போதிய அளவுக்கு விஸ்தரிக்கப்பட்டு இயற்கையான சோபானங்கள் வழியாக அதனோடு பொருந்தக்கூடிய வேறொரு சுவைக்கு வழிகாட்டிக் கொண்டு போகும். கடைசியாக எல்லா ஆவிருத்தங் களும் எல்லாச் சுவைகளும் இன்னலந் தெரிய வல்லாருடைய இருதயம் லயித்துப் போகும்படி ஓர் சமஷ்டி உணர்ச்சியை உண்டாக்கும்.

இதே மாதிரிதான் ஒரு காவிய ரசனையும். காவியத்தின் தனித் தனிப் பாகங்களிலுள்ள இன்சுவை ஒரு பக்கமிருக்க, பாகத்துக்கும் பாகத்துக்கும் உள்ள பொருத்தம் அழகாக இருப்பதோடு காவியமானது நல்ல சமஷ்டிகரணத்தைப் பெற்றிருக்கவேண்டும். எவ் வளவுக் கெவ்வளவு இந்த சமஷ்டிகாரம் அழகாக இருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு காவியமானது ரஸிகருடைய இருதயத்தைக் கவர்ந்து எல்லோரும் விரும்பத்தக்கதாகும்.

கம்பராமாயணத்தில் உள்ள ரசனைச் சுவை மிகவும் உயர்ந்தது. ரஸிகருடைய அறிவுக்கு அது அமுதமாக நிற்கின்றது. கம்ப ராமாயணத்தின் ரசனைச் சுவையை உணராமல் மற்ற சுகங்களை மாத்திரம் உணருகிறவர்கள் அதன் சுவையில் செம்பாதிக்கு மேல் இழந்து விடுகிறார்கள். ராமாயணத்தின் அழகை விஸ்தரிக்கிறவர்கள் ஒவ்வோர் பாகத்தின் அழகை, சிற்சில வேளைகளில் ஒவ்வோர் செய்யுளின் அழகைத்தான் எடுத்துக் காட்டுகிறார்கள். ராமா யணத்தை ஓர் சிற்பியால் சமைக்கப்பெற்ற அரண் மனையாகப் பாவித்து, அவ்வரண்மனையின் ஒவ் வோர் அவயவத்துக்கும் மற்ற அவயவங்களுக்கும் உள்ள பொருத்தத்தையும், அவயவங்களுக்கும் அரண்மனையின் சமக்ர அமைப்புக்கும் உள்ள பொருத்தத்தையும் வியக்தீகரித்து எடுத்துக் காட்டும் விமரிசனங்கள் இதுவரையில் வெளிவரவில்லை.



# வாலி வதை



வாகீசகலாநிதி வா. ஜகந்நாதன்

இராமாயணத்தில் வாலி வதை ஒரு சிக்கலான நிகழ்ச்சி. வாலி வதை நியாயம் என்பாரும், அன்று என்பாருமாக இருவேறு கருத்து உடையவர்கள் இருக்கிறார்கள், மனிதனாக வந்த இராமன் தன்னைக் குறையுடையவனாகக் காட்டிக்கொள்ளும் சந்தர்ப்பங்களில் இதுவும் ஒன்று என்று சொல்பவர்களும் இருக்கிறார்கள். இதைப்பற்றி ஆராய்வதே இந்தக் கட்டுரையின் நோக்கம்.

வாலி வதையில் மூன்று விதமான வினாக்கள் எழுகின்றன. அயோத்தி அரசனாகிய தசரதன் மகன் கிஷ்கிந்தையில் இந்தச் செயலைச் செய்வதற்கு உரிமை உண்டா என்பது ஒரு வினா; வாலியை மறைந்து கொன்றது முறையா என்பது இரண்டாவது வினா; இறுதியில் வாலி மனம் மாறி இராமன் செய்தது முறைதான் என்று சொல்வது இயல்பாக அமைந்திருக்கிறதா என்பது மூன்றாவது. இவற்றை இனி ஆராய்வோம்.

## 1. உரிமை

இராமன் வாலியைக் கிஷ்கிந்தைக்கு வந்து கொன்றான். அதற்கு அவனுக்கு என்ன உரிமை இருக்கிறது.

தசரதன் அரசாட்சிக்குள் உலகமெல்லாம் அடங்கி நின்றது என்றே கம்பன் சொல்கின்றான்.

*'அம்மாண் நகருக்கு அரசன்; அரசர்க்கு அரசன்*
*செம்மாண் தனிக்கோல் உலகு ஏழினும்*
*செல்ல நின்றான்"*
(அரசியல்:1)

என்று கூறுகிறான். அதனால் கிஷ்கிந்தை அவன் ஆட்சிக்குட்பட்டது என்பது தெரியவரும். அந்த அந்த நாட்டுக்கு என்று தனி அரசர்கள் இருந்தாலும் அவன் எல்லா அரசர்களுக்கும் மேலான அரசன்; சக்கரவர்த்தி. இராமனைச் சக்கரவர்த்தித் திருமகன் என்பதில் அடையின்றிச் சொல்வதனால் தசரதன் தனியுரிமை பெற்ற சக்கரவர்த்தி என்பது தெரிய வரும். வாலி தாரையினிடம் பேசும்போது,

*" ஏற்றபே ருலகெலாம் எய்தி ஈன்றவள்*
*மாற்றவள் ஏவலால் அவன்தன் மைந்தனுக்கு*
*ஆற்றரும் உவகையால் அளித்த ஐயனைப்*
*போற்றலை, இன்னன புகறற் பாலையோ?"*
( வாலி வதை: 33)

என்று கேட்கிறான். இங்கே 'ஏற்றபே ருலகெலாம் எய்தி" என்ற தொடர் தசரதன் ஆட்சி உலகமுழுவதும் விரிந்தது என்பதைக் காட்டுகிறது. வாலியே இராமனொடு பேசும் போது,

*" வீரம் அன்று; விதிஅன்று; மெய்ம்மையின்*
*வாரம் அன்று; நின் மண்ணினுக்கு என்உடல்*
*பாரம் அன்று"*
(வாலி வதை: 92)

என்கிறான். " நின்மண்ணினுக்கு " என்று அவன் கூறுவதில், அவன் இருந்த நிலமும் இராமனுக்கு உரியதே என்ற கருத்துப் புலனாகிறது. வாலியே அதை ஒப்புக்கொண்டு கூறுவதால் தன்னுடைய அரசுரிமை இல்லாத நாட்டில் இராமன் செய்தது இது என்று சொல்வதற்கு இல்லை.

## 2. மறைந்து கொன்றது

வாலியைத் தண்டிக்கும் உரிமை இராமனுக்கு இருந்தாலும் அதனை நேர் நின்று செய்யாமல் மறைந்து செய்தது ஏன்?

வாலியை நேர் நின்று எய்வதால் எதிர்ப்போனுடைய பலத்தில் பாதி அந்த வாலியைச் சேர்ந்துவிடும்.

*" பேதையர் எதிர்குவர் எனினும் பெற்றுடை*
*ஊதிய வரங்களும் உரமும் உள்ளதில்*
*பாதியும் என்னதால்; பகைப்ப தெங்ஙனம்?*
*நீதுயர் ஒழிகென நின்று கூறினான்"*

(வாலிவதை:29)

என்று இதை வாலியே கூறுகிறான்.

அது மட்டும் அன்று. பிறன் மனை விழையாமையே இராமனுடைய அருங்குணங்களில் தலையாயது.

*" இந்த இப்பிற விக்கிரு மாதரைச் சிந்தை யாலும்*
*தொடேன் என்ற செவ்வரம்"*

(சூடாமணி : 34)

தந்தவன் அவன். அவன் பிறன்மனை விழைந்த வாலியைச் சாடுகிறான்.

*" உருமை என்றவற் குரிய தாரமாம்*
*அருமருந்தையும் அவன் விரும்பினான்*
*இருமை யும்துறந் திவன் இருந்தனன்;*
*கருமம் இங்கிதெம் கடவுள் என்றனன்"*

(நட்புக் கோள்: 67)

என்று வாலி தன் தம்பியின் மனைவியை வெளவிக்கொண்டதை அநுமன் சொல்கிறான்.

இராவணனைத் தன் வாலிற்சுற்றித் திரிந்தவன் வாலி. அவனுடைய துணையைப் பெற்றிருந்தால் இராமனுக்கு மிகுதியான துணை வலிகிடைத்திருக்கும். அப்படி இருக்க, அவனை நாடாமல் பலவீனனான சுக்கிரீவனோடு நட்புக் கொண்டான் இராமன். இது அரசியற் சூழ்ச்சிக்கு ஏற்றதா? துணைவலியை அறிந்து தக்க துணைவர்களைச் சேர்த்துக்கொள்ளுதலே அரச தர்மம். அவ்வாறாயின் வாலியை விட்டு, சுக்கிரீவனைத் துணையாகச் சேர்த்துக்கொண்டதற்கு என்ன காரணம்?

சுக்கிரீவன், வாலி என்னும் இருவருள்ளும் சுக்கிரீவனையே வேறிடங்களிலுள்ளவர்கள் நல்லவ னென்று எண்ணினார்கள். அதனால் அவர்கள் இராமனிடம், சுக்கிரீவனையே துணையாக்கிக்கொள்ள வேண்டும் என்று கூறினார்கள்.
கவந்தன் இதைச் சொல்கிறான்:

*" கதிரவன் சிறுவ னான*
*கனகவான் நிறத்தி னானை*
*எதிர்எதிர் தழுவி நட்பின்*
*இனிதமர்ந் தவனின் ஈண்ட*
*வெதிர்பொரும் தோளி னானை*
*நாடுதல் விழுமி தென்றான்;*
*அதிர்கழல் வீரர் தாமும்*
*அன்னதே அமைவ தென்றார்"*

(கவந்தன் : 55)

இவ்வாறு சவரியும் சொல்கிறாள். அவளே சுக்கிரீவன் இருந்த குன்றத்துக்கு வழியைக் கூறுகிறாள்

*" அனகனும் இளைய கோவும்*
*அன்றவண் உறைந்த பின்றை*
*வினைஅறு நோன்பி னாளும்*
*மெய்ம்மையின் நோக்கி வெய்ய*
*துனைபரித் தேரோன் மைந்தன்*
*இருந்த அத் துளக்கில் குன்றம்*
*நினைவரி தாயற் கொத்த*
*நெறியெலாம் நினைந்து சொன்னாள் "*

(சவரி பிறப்பு நீங்கு : 6)

இவற்றால் வாலி கொடியவன் என்பதும், சுக்கிரீவன் நல்லவன் என்பதும், இராமனுடைய நட்புக்கு உரியவன் என்பதும் பலர் கொண்ட கருத்து என்பது தெளிவாகும்.

இராவணனோடு போர்புரிவதற்குத் தன்துணை இருந்தால் வெற்றி எளிதில் கைகூடும் என்றும், அந்தத் துணையைத் தேடாமல் பலவீனனான சுக்கிரீவன் துணையை நாடியது நல்ல முயற்சி அன்று என்றும் வாலியே சொல்கிறான்.

*" செயலைக் செற்ற பகைதெறுவான் தெரிந்து*
*அயலைப் பற்றித் துணை அமைந்தாய் எனின்,*
*புயலைப் பற்றும் அப் பொங்குஅரி போக்கிஓர்*
*முயலைப் பற்றுவது என்ன முயற்சியோ?"*

(வாலிவதை: 94)

என்று அவன் கேட்கிறான். 'தன் செயலையெல்லாம் இழக்கும்படியாகச் செய்த ஒரு பகைவனை அழிப்பதற்கு ஆராய்ந்து அயலவனாகிய துணைவன் ஒருவனோடு சேர்ந்தாய் என்றால், அந்தத் துணை வலியதாக இருக்க வேண்டாமோ? மேகத்தைத் தாவிப் பற்றிச் சினம் பொங்க நிற்கும் சிங்கம் போன்ற யான் இருக்க, சிறு முயல்போன்ற சுக்கிரீவனைத் துணையாகப் பற்றிகொண்டது எத்தகைய காரியமோ?' என்கிறான். தான் சிங்கம் போன்றவன் என்பதையும், சுக்கிரீவன் முயல் போன்றவன் என்பதையும் குறிப்பாகச் சொல்கிறான். " தக்க துணைவரைத் தேடிச் சேர்த்துக்

கொள்ளாமல் வலிமையற்ற ஒருவனைத் துணையாகக் கொண்டாயே!'' என்று எள்ளி நகையாடுவதுபோல இருக்கிறது இது.

வாலியின் வலிமை தெரிந்தும் அவனைத் துணையாகக் கொள்ளாதற்கு முக்கியமான காரணம், இராமன் தன் பகைவனாகக் கருதியவன் எந்தக் குற்றத்தைச் செய்தானோ அதே குற்றத்தை, அதாவது பிறன் மனை விழைதல் என்னும் குற்றத்தைச் செய்தான் வாலி ஆதலின், அவனை ஒறுத்தான். இந்த இரண்டு குற்றவாளிகளிலும் ஒரு வேறுபாடு உண்டு. இராவணன் சீதையை வௌவிச் சென்று அசோக வனத்தில் சிறைப்படுத்தியிருந்தானேயன்றி, அந்தப் பிராட்டியின் கற்புக்கு மாசு உண்டாக்கவில்லை. இராமனுக்கு அவளை மீட்பதே நோக்கமன்றி இராவணனைக் கொல்ல வேண்டுமென்பதன்று. இராவணன் சீதையை விட்டிருந்தானானால் இராமனுடைய சீற்றம் தவிர்ந்திருக்கும். இராவண சங்காரமே நிகழ்ந்திராது.

*''தையலை விட்டவன் சரணம் தாழ்ந்துநின்*
*ஐயறு தம்பியோடு அளவ ளாவுதல் உய்திறன்''*
( கும்பகருணன்: 88)

என்று கும்பகருணன் இராவணனுக்கு அறிவுரை கூறுகிறான். இந்திரசித்தனும் தோற்று வந்த பின் இந்தக் கருத்தைச் சொல்கிறான்:

*'' ஆதலால் அஞ்சி னேன் என்று*
*அருளலை ; ஆசை தான்அச்*
*சீதைபால் விடுதி ஆயின்,*
*அனையவர் சீற்றம் தீர்வர்;*
*போதலும் புரிவர் ; செய்த*
*தீமையும் பொறுப்பர் ; உன்மேல்*
*காதலால் உரைத்தேன் என்றான்;*
*உலகெலாம் கலக்கி வென்றான்''*
( இந்திரசித்து வதை : 6)

ஆகவே, இராவணன் சீதையை விட்டிருந்தால் இராமன் அவளை அழைத்துக்கொண்டு சென்றிருப்பான் என்பதும், இராவணனுடைய பிழையைப் பொறுத்து அவனைக் கொல்லாமல் விட்டிருப்பான் என்பதும் தெரிகின்றது. சீதையின் கற்புக்கு மாசின்றி இருந்தமையால், அவளை இராமனோடு சேரும்படி விடுவதே உய்வதற்கு வழி என்பதை இவர்கள் எடுத்துச் சொன்னார்கள்.

ஆனால் வாலியின் திறத்தில் இவ்வாறு அமையவில்லை. அவன் தன் தம்பியின் மனைவியாகிய உருமையின் நலத்தை நுகர்ந்தான். ஆகவே அந்தக் குற்றம் மன்னிப்பதற்குரியதன்று, செய்துவிட்ட குற்றத்தினால் ஒரு பெண்ணே தன் நலனை இழந்தாள். அதனால் அந்தக் குற்றத்துக்குத் தண்டனை கொடுப்பது அவசியமாயிற்று.

'' அந்தத் தண்டனையை நேரே நின்று செய்திருக்கலாமே ஏன் மறைந்து நின்று கொல்ல வேண்டும்?'' என்பது அடுத்த கேள்வி.

தன்னோடு பொருவாரின் பலத்தில் பாதியை வாலி அடைவான் என்ற நியதி இருந்தாலும், அதை ஒரு பெரிய காரணமாக இராமன் கருதவில்லை. அவனுடைய கருத்தை இலக்குவன் எடுத்துச் சொல்கிறான். ''நின்தம்பி முன்பே வந்து சரணம் புகுந்தமையால் அவனுடைய பகைவனாகிய நின்னைக் கொல்லப்புக்கான். நேர்நின்று பொரப் புகும்போது நீயும் அவனைச் சரணென்று அடையவும் கூடும்; அவ்வாறு செய்தால் தர்மசங்கடம் உண்டாகும்'' என்கிறான். இரண்டு அறச்செயல்கள் ஒன்றனோடு ஒன்று மாறாக இருக்கும்பொழுது சிறந்ததாகிய ஒன்றை மேற்கொண்டு மற்றதை விடுவதே அறத்தின் ஆறு. ஆதலின் குற்றவாளியைத் தண்டிப்பது, சரணம் புகுந்தவனுக்கு அடைக்கலம் வழங்குவது என்ற இரண்டு தர்மங்களில் குற்றவாளியைத் தண்டிப்பதே இன்றியமையாததாதலின் அதனை இராமன் மேற்கொண்டான். இதை இலக்குவன் கூறுகிறான்.

*'' முன்புநின் தம்பி வந்து*
*சரண்புக, முறைஇலோயைத்*
*தென்புலத்து உய்ப்பென் என்று*
*செப்பினன்; செருவில் நீயும்*
*அன்பினை உயிருக்கு ஆகி,*
*அடைக்கலம் யானும் என்றி*
*என்பது கருதி, அண்ணல்*
*மறைந்துநின்று எய்த தென்றான்.*
(வாலிவதை : 125)

என்பதில் இந்தக் கருத்துத் தெளிவாக அமைந்திருக்கிறது.

எனவே, மறைந்து நின்று குற்றவாளிக்குரிய தண்டனையைக் கொடுப்பது முறையாயிற்று.

'மறைந்து கொல்வது வீரத்துக்கு மாசு அன்றோ?' என்ற கேள்வி இங்கே எழலாம்.

வாலியும் இராமனும் ஒருவரை ஒருவர் எதிர் நின்று செய்த போர் அன்று இது. போர் செய்வதாக

இருந்தால் அவரவர் தம் படைக்கலங்களை ஏந்தி நின்று 'வஞ்சியாது எதிர் நின்று' பொருதல் முறை. ஆனால் இங்கே நிகழ்ந்தது போர் அன்று. தண்டனைக்குரிய குற்றவாளியை எந்த வகையில் தண்டித்தால் அது பலிக்கும் என்று தண்டம் செய்பவர் ஆராய்ந்து செய்வர். ஐம்புலிங்க நாடான் என்பவனை, அவன் தன் காமக்கிழத்தியின் வீட்டிலிருந்து வெளிப்பட்டபொழுது காவலர் சுட்டுக் கொன்றார்கள். இங்கே காவலர் செய்தது தண்ட முறையேயன்றிப் போர் முறை அன்று. ஒருவருக்கொருவர் ஓரளவு ஏற்றத் தாழ்வில்லாதவர்களாக நின்று போர் புரிதல் வழக்கு. இங்கே வாலியும் இராமனும் அத்தகைய நிலையில் இருப்பவர்கள் அல்லர். இராமன் தன்பால் சரணம் புகுந்த சுக்கிரீவனுடைய அல்லலைப் போக்குவதாக உறுதி மொழி பகர்ந்தான். தன் குறை முடிப்பதற்கு முன் தன் நண்பனின் குறையை முடிக்க முற்பட்டான். அவனுக்குத் தீங்கு இழைத்த வாலியைத் தண்டித்தான். தன் தம்பி தனக்குப் பிழை செய்தான் என்று எண்ணிய வாலி அவனை ஒறுக்கும்போது, சுக்கிரீவன் விரும்பி அது செய்யவில்லை என்றும், பலரும் வற்புறுத்தியதனால் அவ்வாறு செய்தான் என்றும் அறிந்த பிறகும் அவனை விடாமல் துரத்தி அலைத்தான். நல்ல வேளையாகச் சுக்கிரீவனுக்கு இரலையங்குன்றம் அடைக்கலத் தானமாக உதவியது. அதனிடம் சென்றால் வாலி அழிவான் என்பது சாபம். ஆதலால், அங்கே சென்ற சுக்கிரீவனை அவனால் ஒன்றும் செய்ய முடிய வில்லை.

எனவே, அரசியல் முறைப்படி குற்றவாளியை எந்த உபாயத்தால் தண்டிக்கலாம் என்று ஓர்ந்து அந்த முறையைக் கடைப்பிடித்து இராமன் வாலியைக் கொன்றான். இந்த நிகழ்ச்சியில் போருக்குரிய முறையைக் கொண்டு வரக் கூடாது; தண்ட நீதியையே பார்க்க வேண்டும்.

### 3. மனமாற்றம்

வாலி முதலில் இராமனைக் குறை கூறுகிறான். இலக்குவன் பதில் சொல்கிறான். அதன் பின்பு வாலி, இராமன் செய்தது சரியென்று ஒப்புக் கொண்டு அவனைப் போற்றுகிறான். இஃது இயல்பாக அமைந்திருக்கிறதா? தன்னைக் கொல்லத் துணிந்த ஒருவனை ஏசியது மன இயல்புக்கு ஒத்த செயல். ஆனால் பிறகு மனம் மாறிப் போற்றியது அதற்குப் பொருந்துமா? இது அடுத்த கேள்வி. இது சற்று விரிவாக ஆராய்வதற்கு உரியது.

வாலி பிறன் மனை விழையும் தவறு செய்தவனானாலும் அவனிடம் நல்ல பண்புகளும் இருந்தன. சிவபக்தியும், நியாயத்தை எடுத்துரைத்தால் உணரும் இயல்பும் கழிந்ததற்கு இரங்கும் பண்பும், சிறியன சிந்தியாத தகைமையும் உடையவன் அவன். இராமனிடம் அவனுக்கு எல்லையில்லாத மதிப்பும் பக்தியும் இயல்பாகவே இருந்தன.

போர் செய்யப் புகும்போது தாரை விலக்குகிறாள். அப்போது பேசும் பேச்சிலிருந்து அவன் எவ்வாறு இராமனை மதித்திருக்கிறான் என்பதைத் தெரிந்துகொள்ளலாம்.

தாரை சொல்கிறாள் : " உன்னுடைய பலத்தின் முன் நில்லாமல் வலிமை இழந்துபோன சுக்கிரீவன் மீண்டும் போர் செய்வதற்கு வருகிறான் என்றால் அவனுக்கு உயர்ந்த துணை கிடைத்திருக்க வேண்டும் என்பதுதான் காரணம். இராமபிரான் உன் உயிர் கொள்வதற்குச் சுக்கிரீவனுக்குத் துணையாக வந்திருக்கிறானென்று அன்புடையவர்கள் சொன்னார்கள்", என்று. அதைக் கேட்டவுடன் வாலிக்குக் கோபம் வருகிறது. " நீ என்ன சொல்கிறாய்? உலகத்துக்கெல்லாம் தரும நீதியைச் செய்பவனுக்கு இயல்பு அல்லாததைச் சொல்கிறாயே அடிபாவி நீ பெண்ணாகையால் உயிர் பிழைத்தாய். இல்லாவிடின் இந்தத் தகாத சொல்லைச் சொன்னதற்காக உன்னை நான் கொன்றே இருப்பேன்" என்கிறான்.

*" உழைத்தவல் இருவினைக்கு ஊறு*
*காண்கிலாது*
*அழைத்துஅயல் உலகினுக்கு அறத்தின்*
*ஆறுஎலாம்*
*இழைத்தவற்கு இயல்புஅல இயம்பி*
*என்செய்தாய்!*
*பிழைத்தனை பாவி! உன் பெண்மையால்*
*என்றான் "*

( வாலி வதை :31)

அவன் பேசும் முறையும், பாவி என்று கூறுவதும், அவனுக்கு உண்டான சினத்தை நன்றாக வெளிப்படுத்துகின்றன. " உன்னைக் கொன்று போட்டிருப்பேன் ; நீ பெண் ஆகையால் உன் பேதைமையை அறிந்து அது செய்யாமல் விட்டுவிட்டேன்" என்றல்லவா சொல்கிறான்? இராமனிடம் அவன் கொண்ட பெரும் மதிப்பு இதனால் வெளியாகிறது.

" அவன் தருமமே வடிவானவன். உயிரெல்லாம் இரட்சிக்கும் கருணையாளன். இம்மை மறுமை என்னும் இரண்டையும் ஆராய்ந்தறியும் அறிஞன். இந்தக் காரியம் செய்வதால் அவனுக்கு வரும் நன்மை என்ன?" என்று

கேட்கிறான்.

*"இருமையும் நோக்குறும் இயல்பினாற்கிது*
*பெருமையே? இங்குஇதில் பெறுவ*
*தென்கொலோ?*
*அருமையின் இன்னுயிர் அளிக்கும் ஆறுடைத்*
*தருமமே தவிர்க்குமோ தன்னைத் தான்அரோ!"*
(வாலி வதை: 32)

இராமனைத் தர்ம தேவதையாவே எண்ணுகிறான் வாலி. " தர்மம் தன்னைத்தானே அழித்துக்கொள்ளுமோ? " என்று கேட்கிறான். அது மட்டும் அன்று "அவனுடைய பெருமை என்ன! குரங்கினுடைய சிறுமை என்ன! கூட்டு ஒருவரையும் வேண்டாக் கொற்றவன் அவன் ; அசஹாய சூரன். இந்த உலகமெல்லாம் எதிர்த்து நின்றாலும், தன்னுடைய கோதண்டாத்தால் வென்றுவிடும் ஆற்றல் அவனுக்கு உண்டு. தனக்குத் தானே துணையாக இருக்கும் அந்தப் பெருமானுக்குப் புன்மையான தொழிலையுடைய குரங்கின் நட்பு வேண்டுமோ? அதை அவன் ஏற்பானோ?" என்றும் சொல்கிறான்.

*" நின்ற பேருலகெலாம் நெருக்கி நேரினும்*
*வென்றிவெஞ்சிலை அலால் பிறிது*
*வேண்டுமோ?*
*தன்துணை ஒருவரும் தன்னில் வேறுஇலான்*
*புன்தொழிற் குரங்கொடும் புணரும்*
*நட்பனோ?"*
(வாலி வதை:34)

"அண்ணன் தம்பி உறவுக்கு இலக்கணமாக உள்ளவன் அல்லவா அவன்? தம்பிகளையன்றித் தனக்கு வேறு உயிர் இல்லை என்று இருப்பவன். என் தம்பியும் நானும் செய்யும் போரில் இடையே வந்து அம்பைத் தொடுப்பானா? அவன் கருணைக் கடல் அல்லவா?"

*" தம்பியர் அல்லது தனக்கு வேறுஉயிர்*
*இம்பரின் இலதென எண்ணி ஏய்ந்தவன்,*
*எம்பியும் யானும் உற்று எதிர்ந்த போரினில்*
*அம்புஇடைத் தொடுக்குமோ, அருளின்*
*ஆழியான்?"*
(வாலி வதை:35)

இவ்வாறு அவன் சொல்லும் மாற்றங்களில் இராமபிரானிடத்தில் அவனுக்கு இருந்த எல்லையற்ற பெருமதிப்புத் தெளிவாகத் தெரிகிறது. ஆகவே, அவன் தாரை சொன்ன சொல்லை ஏற்கவில்லை. போர் செய்யப் புகுகிறான். அவளும் அவனுடைய வேகத்தைக் கண்டு மேலே ஒன்றும் பேசாமல் இருந்து விடுகிறாள்.

இத்தகைய கருத்தை உடையவன் இராமனுடைய அம்புக்கு இலக்காகிறான். இராமனுடைய அம்பு எந்தப் பொருளின் மேல் எய்தாலும் அதை உருவிச் செல்லும் ஆற்றலுடையது. தாடகையை எய்தபோதும், மராமரங்களை எய்தபோதும் இந்த ஆற்றலை நாம் கண்டோம். ஆனால் வாலியை எய்தபோது அது ஊடுருவிச் செல்லவில்லை. அவன் மார்பிலே புதைந்து நின்றது. அதிலிருந்து வாலியின் வலிமையைத் தெரிந்துகொள்ளலாம். அந்த அம்பும் வலிமை உடையதுதான். தன் மார்பில் பதிந்திருந்த அதை எடுப்பதற்கு வாலி பெருமுயற்சியைச் செய்கிறான். தன் கரத்தினால் பற்றி இழுக்கிறான்; வரவில்லை. வாலினாலும் காலினாலும் வலிமையோடு பறிக்கிறான் அப்பொழுதும் அது வரவில்லை. சோர்ந்து விழுந்து உருளுகிறான்.

"இந்த அம்பை எய்தவன் சாமானியமானவன் அல்லன். மும்மூர்த்திகளுக்கும் ஒப்பான ஒருவன் செய்த செயல்தான் இது" என்கிறான். தன்னுடைய முழு வலிமையையும் கொண்டு காலினாலும் மார்பின் வலிமையாலும் அந்த வாளியைப் பறித்து எடுக்கிறான். அதைப் பறித்தவுடன் அங்கிருந்து குருதி வெள்ளம் பெருகி எழுகிறது. முன்னைத் தைத்துக் கொண்டபோது உள்ள வலியைவிட அதைப் பிடுங்கும்போது உண்டாகும் வலி மிகுதியாக இருக்கும். அம்பைப் பறித்த பிறகு வாலிக்கு மிக்க வலி உண்டாகிறது. அந்த அம்பைப் பார்க்கிறான். அதில் இராமனுடைய திருநாமம் இருக்கிறது.

அதைக் கண்டவுடன் அவனுக்குச் சினம் மூளுகிறது; சிரிப்பும் தோன்றுகிறது. இராமன் செய்தது தவறு என்ற எண்ணத்தால் நகை உண்டாகிறது. "சூரியன் மரபே நல்லறத்தைத் துறந்துவிட்டது" என்று நாண் உட்கொள்கிறான்.

அப்போது அவன் முன் இராமபிரான் தோன்றுகிறான். அம்பினால் உண்டான பெரும் வேதனையினால் துன்பமும் சினமும் மூள, இருக்கிறான் வாலி. அந்த இரண்டும் காரணமாக அவன் பேசத் தொடங்குகிறான்; இராமனை ஏசுகிறான். அம்பு செய்த புண்ணின் வேதனையே அவனை அப்படிப் பேசச் செய்கிறது. அவன் பலபல சொல்லி இராமனை ஏசுகிறான்.

அப்படி ஏசிக்கொண்டுவரும்போது மெல்ல மெல்லச் சில மாற்றங்கள் நிகழ்கின்றன. வலிகுறைந்து வருகிறது. மும்மூர்த்திகளும் ஒருவராக வந்தவனென்று மதித்த இராமன் அவன் முன் வந்து நிற்கிறான். இதுகாறும் அவனை நேரே பார்த்தறியாதவன் வாலி. இலட்சிய நாயகனாக எண்ணியிருந்த அந்தப் பரம் பொருள் அவன் முன்னே வந்து நிற்கிறது. அவனுடைய திருவுருவ எழில் அவன் உள்ளத்தைக் கவ்வுகிறது. அதே சமயத்தில் அம்பினால் உண்டான புண்ணின் வேதனையும் துன்புறுத்துகிறது.

"அரச நீதி என்பது உங்கள் குலத்தில் உதித்தவர்களுக்கெல்லாம் உரிய சொத்து ஆயிற்றே; அப்படி உள்ள நீ அந்தத் தருமத்தினின்றும் பிறழலாமா! உன் தேவியைப் பிரிந்த வருத்தத்தால் இன்னது செய்வது என்று அறியாமல் செய்கையில் திகைத்தாய் போலும்" என்று கூறுகிறான்.

*" கோஇயல் தருமம் உங்கள்*
*குலத்தினோர் தங்கட் கெல்லாம்;*
*ஓவியத் தெழுத ஒண்ணா*
*உருவத்தாய், உடைமை அன்றோ;*
*ஆவியைச் சனகன் பெற்ற*
*அன்னத்தை அமிழ்தின் வந்த*
*தேவியைப் பிரிந்த பின்னை*
*திகைத்தனை போலும் செய்கை!"*

(வாலி வதை : 86)

இவ்வாறு கூறும் போதே இராமபிரானுடைய உருவ எழில் அவன் உள்ளத்தைக் கொள்ளை கொள்கிறது. அதனால் " ஓவியத்து எழுத ஒண்ணா உருவத்தாய்! " என்று சொல்கிறான். ஒரு பக்கம் வேதனை; ஒரு பக்கம் இராமனைக் கண்கொண்டு காண்பதனால் உண்டான வியப்பு. இரண்டும் மாறாடுகின்றன. எத்தனை காலமாக இராமபிரானுடைய பெருமையை எண்ணியிருக்கிறான்! தாரையிடம் சொல்லி விளக்கியிருக்கிறான்! அவ்வாறு எண்ணத்திலே நின்ற பெருமான் இப்போது கண்முன்னே நிற்கிறான்.

அவன் வேதனை மெல்ல மெல்லக் குறைகிறது. இராமனுடைய திருவுருவக் காட்சியில் அவன் வரவர அதிகமாக ஈடுபடுகிறான். ஆனாலும் அவன் வாய் ஏசுகிறது. மனம் இராமனுடைய வடிவத்தில் ஈடுபடுகிறது. இந்த இரண்டாட்டம் சிறிது நேரம் நடைபெறுகிறது. அவன் என்ன என்னவோ சொல்லி இராமன் செயல் தகாதது என்று பேசிக்கொண்டு வருகிறான்.

பிறகு இராமன் பேசத் தொடங்குகிறான். சுக்கிரீவன் குற்றம் இல்லாதவன் என்பதைக் காரணங்களுடன் விளக்குகிறான். "நீ மலைக் குகைக்குள் நெடுங்காலம் இருந்தமையால் மீண்டும் வர மாட்டாய் என்ற எண்ணத்தால் படைத்தலைவர்களும் முதியவராகிய சான்றோரும் மற்றத் தலைவர்களும் 'நீயே அரசனாக வேண்டும்' என்று வற்புறுத்தினதால்தான் சுக்கிரீவன் அரசனானான். நீ மறுபடியும் திரும்பி வந்தபோது உன்னை வணங்கி, நம் அண்ணன் வந்துவிட்டான் என்று பெருமகிழ்ச்சியை அடைந்தான். 'இனத்தவர் கூறியதால் நான் அரசை ஏற்றேன்' என்று சொன்னான். நீ அவன் சொன்னவற்றை ஏற்காமல், அவன் சொன்னவற்றின் உண்மையை ஆராயாமல், அவனைக் கொல்லப் புகுந்தாய். அவன் குற்றம் இல்லாதவன் என்பதை உணர்ந்தும் நீ இரக்கமில்லாமல் அவனைக் கொன்றுவிடத் துணிந்தாய். அவன் வேறு வழியில்லாமல், உனக்கிருந்த சாபத்தை உணர்ந்து, நீ வர முடியாத ருசிய மூக பர்வதத்தை அடைந்தான். நீ அவனுடைய தாரத்தை வௌவி அவள் நலத்தை நுகர்ந்தாய். ஆதலாலும், சுக்கிரீவன் எனக்கு நண்பனாதலாலும் உன்னைத் தண்டித்தேன்" என்கிறான்.

அதைக் கேட்ட வாலி, "மனிதர்களுக்குள்ள அறத்தை எங்களுக்குச் சார்த்துவது முறையன்று. ஆகவே எங்கள் விலங்குத் தொழிற்கு ஏற்றதே இது" என்கிறான்.

"உன்னுடைய பேச்சும் அறிவும் விலங்கிற்குரியவை போல இல்லையே! இத்தகைய அறிவுடைய நீ இது பிழை என்று உணராமல் இருப்பாயோ? உணர்ந்தும் இதைச் செய்தாய். ஆதலின் உன்னை ஒறுத்தேன்" என்று இராமன் சொல்கிறான்.

" அப்படியானால் விலங்கை வேட்டையாடுவது போல என்னை மறைந்து கொன்றாயே! அவ்வாறு செய்தது ஏன்?" என்று கேட்கிறான் வாலி.

அதற்கு இலக்குவன் மறுமொழி கூறுகிறான். அதை முன்பே பார்த்தோம். " நீயும் சரணாகதி அடைந்தால் என் செய்வது என்றெண்ணியே மறைந்து எய்தான்" என்கிறான்.

இப்படி நீண்ட நேரம் வாலிக்கும் இராமனுக்கும் உரையாடல் நிகழ்கிறது. இறுதியில் இலக்குவனும் பேசுகிறான்.

புண்ணினால் உண்டான வேதனை துன்புறுத்த, இராமனை நேரிலே கண்ட வியப்பு உள்ளத்தே மெல்ல மெல்ல அமுத்த, இரண்டாட்டத்துக்கு உள்ளாகியிருந்த அவன் மனம் மாற வழி பிறக்கிறது. புண்ணின் வேதனை மெல்ல மெல்லக் குறைந்து வருகிறது. இராமனுடைய காட்சியும் அவன் கூறிய காரணங்களும் அவன் அறிவிலே பதிகின்றன. அந்தக் கூற்றிலுள்ள உண்மையை உணரத் தலைப்படுகிறான். " பெரு வீரன் ஒருவன் தன் மார்பில் பட்ட வேலினால் வேதனை உறாமல் அதனையே பறித்து எய்ய விரும்பினான்" என்று திருக்குறளில் ஒரு காட்சி வருகிறது.

*"கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்*
*மெய்வேல் பறியா நகும்."*

ஆகவே மார்பிலே ஏற்ற புண்ணால் பெரிதும்

வேதனை உறும் இயல்பு வீரர்களுக்கு இராது. இங்கே வாலியின் மார்பில் தைத்த அம்பு மிகவும் வலிமையுடையதாகையால் அதைப் பறித்தபொழுது அவன் வேதனைமிகுதி ஆயிற்று. அதனால் அவன் இராமனை ஏசினான்.

ஆனால் இராமனுடன் உரையாடி அவன் உருவ அழகிலே கண்ணையும் கருத்தையும் பறிகொடுத்துக் கொண்டே வரும்போது, வேதனையும் குறைகிறது; நல்லறிவும் தலைப்படுகிறது. அப்போது அவன் இராமன்பால் கொண்ட பழைய மதிப்பும் பக்தியும் மேலெழுந்து வருகின்றன. 'இவன் தர்மம் அழியும்படி செய்ய மாட்டான்'' என்ற உணர்வு மட்டும் உண்டாகிறது. எனவே, இராமனை வணங்கிப் பேசத் தொடங்குகிறான்.

*'' .....அறத்திறன் அழியச் செய்யான்*
*புவியுடை அண்ணல் என்பது*
*எண்ணினன், பொருந்தி முன்னே*
*செவியுறு கேள்விச் செல்வன்*
*சென்னியின் இறைஞ்சிச் சொன்னான்.''*
(வாலி வதை : 126)

இயல்பான வாலி இராமனை மும்மூர்த்தியே வடிவெடுத்தவன் என்று உணர்ந்தவன். அவன் பெருமையைக் கேள்வியினால் உணர்ந்த செல்வன். இடையே, இராமன் அம்பின் வலிமையால் உண்டான புண் வேதனையைத் தர, அதனால் தன் இயல்பான உணர்வு நீங்கி, இராமனைக் குறை கூறலானான். பிறகு அவன் கூறிய காரணங்களும், மார்பிற்பட்ட புண்ணின் வேதனை குறைவதும் சேரவே தன் பழைய நிலைக்கு வருகிறான். அதாவது இராமன் அறத்தை நிலைநிறுத்த வந்தவன்; மூவரும் ஒருவனாகிய மூர்த்தி என்ற மதிப்பும் பக்தியும் மீண்டும் அவன் உள்ளத்தில் மலர்ந்து விடுகின்றன. பாசியின் மேல் ஒரு கல்லை வீசினால் சிறிது இடைவிட்டு விலகி மீண்டும் பழையபடி சேர்வது போன்ற நிலை இது. இராமனிடம் கொண்ட பெருமதிப்பும் பக்தியும் வாலிக்கு இயல்பாகவே உள்ளவை. இராமனுடைய அம்பினால் உண்டான புண்ணின் வேதனை அவை சிறிது நேரம் விலகும்படி செய்தது. ஆனாலும் பெருவீரனாதலாலும்; இராமனுடைய பெருமையை உணர்ந்தவனாதலாலும், இராமனை நேரிலே கண்ட காட்சி அவன் உள்ளத்தைக் கவ்வியதாலும்; அவன் கூறிய காரணங்களை நியாயமென்று உணர்ந்தமையாலும் அவன் தன்னுடைய பழைய நிலையையே அடைகிறான். அவனுடைய மனமாற்றம் இடையிலே வந்தது. இப்போது அது நீங்கிவிட்டது. ஆகவே, வாலி இராமனைப் புகழத் தொடங்குகிறான். ஏதும் நடக்காமல் இராமன் தன் காட்சியைத் தந்தால் எவ்வாறு மகிழ்வானோ அவ்வாறு மகிழ்கிறான். அவனைத் தான் ஏசியது தவறு என்ற உணர்வும் இருத்தலால் இராமனைப் [illegible]ழ்ந்து மகிழ்கிறான்.

''எம்பெருமானே! நாயேன் அறியாமல் கூறி ஏசியவற்றைத் திருவுள்ளத்திற் கொள்ளாதே. பிறவி நோய்க்கு அருமருந்தனைய பெருமானே! நீ ஏவிய கூரிய அம்பினால் என் உயிர் போகும் தருணத்தில் நல்லறிவைத் தந்தருளினாய். மூவருமாக இருப்பவன் நீ. அவர்களுக்குள் முதல்வன் நீ. எல்லாம் நீதான். பாவமும் நீயே தருமமும் நீயே பகையும் நீயே, உறவும் நீயே! உன் அம்பே தருமம். அதைவிடத் தருமம் வேறு என்ன இருக்கிறது? தருமமே உருவமாக உடைய நின்னைத் தரிசிக்கப் பெற்றேன். இனி நான் காண வேண்டியது என்ன இருக்கிறது?'' என்றெல்லாம் மனம் உருகிப் புகன்ற வாலி, சுக்கிரீவனுக்கு அறிவுரைசொல்லி, அங்கதனை இராமபிரானிடம அடைக்கலப்படுத்தி, மோட்சத்தை அடைகிறான்.

*'' இறந்து வாலி*
*அந்நிலை துறந்து வானுக்கு*
*அப்புறத்து உலகன் ஆனான்''*
( வாலி வதை: 159)

'' வானோர்க்குயர்ந்த உலகம்'' என்று வள்ளுவர் கூறும் முத்திப் பேற்றை அவன் அடைகிறான். அதனால் இந்தக் கதைப்பகுதிக்கு '' வாலி மோட்சம் '' என்ற பெயரும் வழங்குகிறது.

இதுகாறும் கூறியவற்றால், இராமன் வாலியைத் தண்டிப்பதற்கு உரிமையுடையவன் என்பதும், அவனை மறைந்து கொன்றது தண்ட நீதியின்பாற்படும் என்பதும், வாலி இயல்பாகவே இராமனிடம் கொண்ட பக்தியும் மதிப்பும் உள்ளத்தே ஆழ்ந்திருந்தமையால், இடையே இராமன் அம்பினால் உண்டான வேதனை காரணமாக அவன் சிறிது ஏசினாலும், இறுதியில் அவனுடைய இயல்பான பண்பே மிதூர்ந்து நின்று இராமன் செய்த செய்கை அறத்தாறென்று உணர்ந்து வாழ்த்தினான் என்பதும் விளங்கும்.

---

*நன்றி : கம்பன் மணிமலர் – 1982, காரைக்குடிக் கம்பன் கழகம்.*



பேராசிரியர் எஸ். இராமகிருஷ்ணன்

அறவழிப் பிழையா ஆட்சிக்கலைக்குக் கம்பன் வகுக்கும் இலக்கணத்தைக் கற்றுத் தெளிவதற்கு முன்னால் அறம் என்பதைக் குறித்துச் சில கருத்துக் களைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

கோள்களையும் எண்ணில் அடங்கா விண்மீன் களையும் கொண்ட இப் பிரபஞ்சத்தின் கோடானு கோடி நிகழ்ச்சிகளில் ஒரு முறை நிலவுகிறதென்று தொல்லோர் கருதினர். இதுவே ரித என்று வேத நூல்களிலும், பால் என்றும் ஊழ் என்றும் சங்க நூல்களிலும் குறிப்பிடப் படும். ஊழ், பால், உண்மை, இயற்கை, முறை, தெய்வம் ஆகிய சொற்களால் வள்ளுவர் இதனையே குறித்தார்.

சர்வ வியாபியாக உள்ள இறைமையின் வீறுதான் பிரபஞ்சத்துக் கருமங்களின் கிரமத்துக்குக் காரணம் என்பது முன்னோர் கருத்து.

முறை தவறிய செயல்களும் பிரபஞ்சத்தில் நிகழ்கின்றன. நிலம் நடுங்குகிறது. எரிமலை தீ கக்குகிறது, புயல் வீசுகிறது. வானம் மோசம் செய்கிறது. அல்லது அடை மழை பெய்து ஊரெல்லாம் வெள்ளக் காடாய் ஆக்குகிறது. இவையெல்லாம் பிரபஞ்சத்தின் முறையில் எங்கோ ஓரிடத்தில் ஏற்படும் கோளாறின் விளைவே என்பது முன்னோர் கொண்ட முடிவு.

பிரபஞ்சம் என்பதன் அங்கமே மனித சமுதாயம். அது முறைமையின் இறைமைக்கு உகந்த வாழ்வை நடத்த வேண்டும்; அதுவே அறவாழ்வு.

## முதலறமும் சார்பறமும்

அறம் என்ற சர்வ வியாபியான இறைமை யாற்றல், அன்பில்லாத வன்னெஞ்சருக்கும் அவர்தம் தீவினைகளுக்கும் தீரா விரோதி என்பார் வள்ளுவர்.

*என்பு இலதனை வெயில்போலக் காயுமே*
*அன்பு இலதனை அறம் (77)*

என்ற குறள், எலும்பு இல்லாத உயிரினத்தை வெப்பம் உருவழியக் காய்வதுபோல், அகத்தில் அன்பு இல்லா தவனை அறம் எரிக்கும் என்று கூறுகிறது.

*மறந்தும் பிறன்கேடு சூழற்க; சூழின்*
*அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு (204)*

என்ற குறள், பிறன்கேடு சூழ்வானை அறம் ஒறுக்கும் என்று உரைக்கிறது.

அன்பு என்ற பண்பின் பயனே அறம் என்பதை,

*அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை*
*பண்பும் பயனும் அது*

என்ற குறளிலிருந்து தேர்ந்து தெளியலாம்.

பிற உயிர்கள்பால் செந்தண்மை கொண்டு ஒழுகுவதால் அந்தணர் அறவோர் ஆவார் (30) என்று வள்ளுவர் மொழிவதிலிருந்தும் அன்பே அறத்துக்குத் தோற்றுவாய் என்பதை உணரலாம்.

அன்பு இல்லாது அறம் இல்லை. ஆனால் அறம் திறம்பிப் புறநெறியில் செல்வதும் அன்புடையார்க்கு இயலும்.

*அறத்திற்கே அன்புசார்பு என்ப அறியார்*
*மறத்திற்கும் அஃதே துணை (76)*

என்பது குறள். 'அன்பானது அறம் செய் வோர்க்கே சார்பாம் என்பர் அறியாதார்; அவ்வன்பு மறம் செய்வார்க்கும் துணையாம்' என்று மணக்குடவர் இக்குறளுக்குக் கண்ட உரை நேரிதே. மொழிப்பற்று பிறமொழியைப் பகையாகவும் நாட்டுப்பற்று பிறதேச விரோதமாகவும் மாறும்போது, அன்பு மறத்திற்கே துணை புரிகிறதென்பதுதேற்றம். பரதனைப் போலவும் இலக்குவனைப் போலவும் உடன்பிறப்புப்பாசத்தின் மூர்த்தியாகத் திகழ்ந்தான் கும்பகருணன். ஆனால்

பரதனும் இலக்குவனும் அறம் வளர்த்த இராமனுக்குப் பின் பிறந்தாராதலால், அன்புக்கும் அறத்துக்கும் இடையே முரண் ஏற்படவில்லை. கும்பகருணனோ அறம் கொன்ற இராவணனுக்குத் தம்பியாகப் பிறந்தான். தமையன் பாவ வழியில் செல்வதை ஓர்ந்தான் எனினும், அவனிடமுள்ள அன்பு மிகுதியின் காரணமாக, இராமனுக்கு எதிராக நின்று போர் செய்தான். இங்கு அன்பு மறத்துக்குத் துணையானதைக் காண்கிறோம்.

அன்புக்கும் அறத்துக்குமுள்ள தொடர்பினைக் கண்டோம். அவற்றுக்கும் அறிவுக்கும் உள்ள உறவையும் கண்டு கொள்ளவேண்டும். மனிதரைத் தொழிற்படுத்தும் ஆற்றல்கள் இரண்டு. மனத்தின் இயற்கையான தூண்டல் ஆகிய உணர்ச்சி என்பது ஒன்று. கல்வி கேள்வி அனுபவம் முதலியவற்றால் இயற்கையான அறிதிறன் பண்பட்டு மனத்துக்கு அமைகின்ற ஊற்றம் என்பது இன்னொன்று. அன்பு என்ற நல்லுணர்வு இல்லாதவரி டமும் அறிவின் ஆற்றல் இருக்கலாம். இவரைக் கருதியே,

*அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்*
*மக்கட்பண்பு இல்லாதவர்* **(997)**

என்றார் வள்ளுவர்.

மரமாவது ஏதாவதொரு பயன் தரக்கூடும். ஆனால், அஃகி அகன்ற அறிவுக்கு உரியார் அன்பில்லாத கன்னெஞ்சராயிருந்தால், அந்த அறிவு அவரைப் பிறன்கேடு சூழ்வதற்கே இட்டுச் செல்லும். கொடுமனக் கூனியும் சகுனியும் இதனை மெய்ப்பிப்பர்.

இயல்பாக நல்லுணர்ச்சி வாய்க்கப் பெற்றவ ராயினும், அறிவின் ஆற்றல் பெறாதபோது, வாழ்வின் மேடுபள்ளங்களில் தடுமாறுவர். அன்னவர் நல்லாரைச் சேர்ந்து வாழ்ந்தால், நன்னெறியில் செல்வர். அவப்பேறாக, அவருக்குச் சிற்றின்பம் அமைந்துவிட்டால், அறம் திறம்பிக் கெடுவர். இப்படித்தான் தூயளான கைகேயி தீயவளாக மாறினாள். அவள் 'தெய்வக் கற்பினாள்' என்றும், 'தூயசிந்தை' உடையவள் என்றும் கம்பன் கூறுவான். இராமன் முடிசூடப் போகிறான் என்று கூனி கூறியவுடன், அத்தூயவளின் அகத்தில் அன்பு எனும் கடல் ஆர்த்தெழுந்தது என்றும், அவளது நிறைமதி முகம் புத்தொளி வீசியது என்றும், மிகுந்த உவகையோடு உயர்ந்த மாலையைக் கூனிக்கு நல்கினாள் என்றும் கம்பன் கூறுவான். அறிவின் திறம் பெறாததால், இத்தகைய கைகேயி கேடு சூழும் தன்மையளானாள். கணவன் விண்ணகம் செல்லவும், காகுத்தன் கானகம் செல்லவும், பரதன் பதினான்கு ஆண்டு நந்திக் கிராமத்தில் கண்ணழியக் கலுழவும் காரணமானாள்.

கோடி கூனிகளால் கோசலையைக் கெடுத்திருக்க முடியாது. "இராமனைப் பயந்த எற்கு இடர் உண்டோ?" என்று பேதையான கைகேயி பகர்ந்ததுபோல, "பரதனைப் பெற்ற எனக்குத் துன்பம் உண்டோ?" என்று அவள் கூறினாளில்லை. பரதன் கைகேயி மகன் என்பதையும், இராமனே தன் மகன் என்பதையும் உணர்ந்தவள் அவள். இந்த வேற்றுமை பொருட்படுத்த வேண்டியது ஒன்று அல்ல என்பதை அறிவால் ஓர்ந்து அதை மாற்றியவள். எனவே,

*மறுஇல் அன்பினில்*
*வேற்றுமை மாற்றினாள்* **(2,4,4)**

என்பான் கம்பன். குகனையும் தன் மகனாகக் கருதும் திராணியை அளித்தது இந்த நல்லறிவே.[1]

இராமன் வேறு, பரதன் வேறு என்ற வேற்றுமை யைப் புரியாதவளாகவே கைகேயி இருந்தாள்.

*மங்கை உள்ளமும்*
*ஆற்றல்சால் கோசலை அறிவும் ஒத்தவால்*
*வேற்றுமை உற்றிலள்.*[2] **(2,2,59)**

என்பான் கம்பன். கூனி தோன்றி, இராமன் வேறு, பரதன் வேறு என்பதைக் காட்டினாள். அதன் அடிப்படையில் அவளைக் கேடு சூழும் வழியில் உந்தித் தள்ளினாள்.

வேற்றுமை மாற்றிய கோசலையை யாராலும் அசைக்க முடியவில்லை. வேற்றுமை அறியாத பேதையைக் கூனி கெடுத்துவிட்டாள்.

எனவே, தக்க இன்ன, தகாதன இன்ன என்பதைத் தேர்ந்துகொள்ளும் அறிவுடன், "யாதும் ஊரே, யாவரும் கேளிர்" என்ற அன்புநெறியில் மாசற்ற மனத்தினராக நல்வினை ஆற்றுதலே அறமாகும். இந்தப் பின்புலத்திலேயே

---

1. 'இன்துணைவன் இராகவனுக்கு இலக்குவற்கும் இளையவற்கும் எனக்கும் மூத்தான்"
என்று பரதன் குகனை அறிமுகம் செய்தபோது, கோசலை இராம இலக்குவர் காடு சென்றதும் நலமா யிற்று என்று இயம்பிவிட்டு,

"நீவிர் ஐவீரும் ஒருவீராய் அகலிடத்தை நெடுங்காலம் அளித்தீர் என்றாள்"
(அகல் இடம்–பரந்த உலகம். அளித்தீர் – காப்பீராக.) 2. மங்கை–கைகேயி.

*மனத்துக்கண் மாசு இலன் ஆதல் அனைத்து அறன்;*
*ஆகுல நீர பிற (34)*

என்ற குறளின் பொருளைப் புரிந்துகொள்ள வேண்டும்.

இதுவரை கூறியது முதலறம் எனலாம். இது காலம், தேசம், சூழல் ஆகியவற்றால் கட்டுப்படாதது. இது தேர் ஓடிய காலத்துக்கும் பொருந்தியது; 'கார்' ஓடும் காலத்துக் கும் உகந்தது. ஆசியாவுக்கும் ஏற்றது; இதர கண்டங் களுக்கும் தகுந்தது. இன்பத்தோடும் இசைவது; துன்பத்திலும் தகைவது. கருமத்துக்கு உரிய கருவி என்று இதைக் கைக்கொள்வதில்லை; மானிட இயல்பாகவே கைவரத் தக்கது இது. தன்னால் வரு பயன் தானேயாகித் திகழ்வது.

இந்த முதலறத்திலிருந்து கிளைத்தும் வேறுபட்டும் செல்வதே சார்பு அறம் ஆகும். எக்காலத்துக்கும் ஒத்து இயலும் தத்துவ உண்மையான முதலறத்தைச் சமுதாய வாழ்வு என்ற உலகியல் உண்மையோடு பொருந்தச் செய்து பல்வேறு நிலையிலுள்ள மக்களுக்கு நடைமுறை விதிகளை வகுப்பதே சார்பறம் எனலாம். சமுதாய வாழ்வு மாறுவதால், சார்பறமும் மாறும் என்பது கண்கூடு.

சார்பறம் பலவகைத்து. இல்லறம், துறவறம் என்பன ஒரு வகையின. அந்தணர் அறம், அரசர் அறம், வேளாளர் அறம், வணிகர் அறம் என்பன வேறு வகையின. இக்காலத்தில் எழுத்தாளர், வைத்தியர், ஆசிரியர் முதலிய பல்வகை வினைஞர் தத்தம் தொழிலுக்கு ஏற்ற நடத்தை விதிகளை உருவாக்கியிருப்பதையும் சார்பறம் எனலாம்.

இன்று சமுதாயத்துக்கு நன்மையாக உள்ள சார்பறமே நாளைக்குத் தீமையாக மாறலாம். தனி உடைமை ஏற்பாட்டுக்கு மாற்றுக் காணமுடியாத காலத்தில், செல்வர்கள் வறியவர்க்கு வழங்கி இசைகொள்ள வேண்டுமென்ற அறத்தினைப் போதிப்பது தக்கதே. காலம் மாறிச் சமதர்ம சமுதாயத்தைச் சிருஷ்டிப்பதற்குப் பக்குவமான நிலைமை எய்திய பிறகு, சமதர்மப் பாதைக்கு மாற்றாகக் கொடை நெறியைப் போற்றுவது பிழையாகும்; வன்பழியுமாகும். அன்று ஈட்டம் விரும்பி இசை வேண்டாப் பேய்ப் பிறப்பினரைச் சாடி, ஈகையின் உயர்வை வள்ளுவர் வற்புறுத்தியது செம்மை சான்ற செயலே. இன்று தனி உடைமை முறைக்கு இறுதி சூழ்ந்து சமதர்மச் சமுதாயம் சமைப்பதற்கு ஏற்ற நிலைமை மலர்ந்துள்ள போது, பொருளாதாரத்தில் ஆதிக்கம் வகிக்கும் சிலரைக் கருணை உள்ளத்தினராக மாற்றுவதே செய்யத்தக்க கருமம் என்பது நாட்டுக்குத் தீமையே சூழ்வதாகும்.

வம்ச பரம்பரையான தொழில் பிரிவினையின் அடிப்படையில், பல்வகைச் சாதி ஏற்பாடு வளர்ந்தது. அந்தக் காலத்தில், சமுதாயம் கட்டுக்கோப்புக் குலையாமல் முறையாகச் செயல்படுவதற்கு அது உதவியது. நாளாவட்டத்தில் சாதி முறை என்ற சார்பறமே சமுதாய வாழ்வு ஒரே நிலையில் தேங்குவதற்கும் ஒரு காரணமாயிற்று. அத் தேக்கமே அன்னியர் நம் நாட்டைக் கவர்வதற்கு வாய்ப்பு அளித்தது. இன்று வம்ச பரம்பரைத் தொழில் பிரிவினை, காலத்துக்கு ஒவ்வாததாகி மாய்கிறது; புதிய முறையில் தொழில் பிரிவினை உருவாகிறது; எவரும் எத்தொழிலையும் பயின்று மேற்கொள்வதற்குச் சம சந்தர்ப்பம் அளிக்க முயற்சி எடுக்கப் பெறுகிறது. தனி வாழ்வில் (கொண்டு கொடுத்தல், அதன் மூலம் உறவுமுறை அமைதல்) சாதிமுறைக்குப் பெரும் செல்வாக்கு இருந்தபோதிலும், பொதுவாழ்வில் சாதி முறைக்கு இடமில்லை. இன்னமும் சாதி எண்ணங்கள் பொது வாழ்வில் செயல்படுகின்றன. ஆனால் அவற்றால் தீமை உண்டாகிறது.

சார்பறத்தின் நிலையாமையைக் கண்டோம். அதன் மற்றோர் இயல்பையும் குறித்துக்கொள்ள வேண்டும். தனி உடைமைச் சமுதாயத்தில், முதலறத்திலிருந்து முரணிய செயல்களுக்குச் சார்பறம் இடம் தருவதே நாம் இங்குக் கருதுவது. "அன்பு உடையார் என்பும் உரியர் பிறர்க்கு" என்று தியாகத்தைப் போற்றும் முதலறம். ஆனால் தனி உடைமையாளர் தமக்கென்று பொருள் பெருக்குவதைச் சார்பறம் ஏற்றுக்கொண்டது. மானம் நோக்கின் கவரிமான் அனைய தன்மையராக யாவரும் வாழவேண்டுமென்று முதலறம் கூறும். சிலர் ஈகையால் புகழையும் வேறு சிலர் இரத்தலால் இழிவையும் அடைவதைச் சார்பறம் வேண்டாவெறுப்பாக ஒத்துக்கொண்டது. நாணயமான தொழில்களிடையே உயர்வும் இல்லை. தாழ்வும் இல்லை என்று முதலறம் இயம்பியது. ஆனால் செல்வத்தாலும் அதிகாரத்தாலும் சாதியாலும் மலிந்த ஏற்றத் தாழ்வுகளை மறுக்காது, அவற்றை முறைப்படுத்திக் கட்டுப்படுத்தும் முயற்சியையே சார்பறம் மேற்கொண்டது. இதனைக் கண்டு ஒரு நந்தனாரையும் ஒரு திருப்பாணாழ்வாரையும் படைத்து ஆண்டவன் சன்னிதானத்தில் அனைவரும் சரிநகர் என்று சாற்றி அமைதி கண்டது முதலறம்.

தனிஉடைமையே தன்னலத்தின் வேர். யான் எனது என்னும் செருக்கைத் துறவிகளோடு பிறரும் நீக்கவேண்டுமெனில், பயன் கருதாது பணியாற்றும் திறம் அனைவருக்கும் அமைய வேண்டுமெனில், பொதுமை நெறியில் பொருள் இயல் அமையவேண்டும். பொதுமை வழியில் பொருளைப் படைத்துத் துய்க்கும் சமுதாயத்தில் முதலறத்துக்கும் சார்பறத்துக்கும் இடையேயுள்ள

பிணக்கம் நீங்கும். இரண்டும் இணக்கமாக அமையும். எல்லாரும் எல்லாச் செல்வமும் எய்தித் துய்க்கும் நிலையில், முதலறமும் சார்பறமும் ஒன்றி ஒருமை நிலையினை எய்திவிடும். இதனைத் தன் மேதாவிலாசத் தாலும், அன்பின் திறத்தாலும் வளமார்ந்த மனோபாவனை யாலும் தெள்ளிதின் உணர்ந்த கம்பன் இதன் விளக்கமாகக் கோசல வாழ்வைப் படைத்திருப்பதை அடுத்த அத்தியாயத்தில் காண்போம்.

## அரசநீதி சார்பறமே

முதலறத்தையும் சார்பறத்தையும் இனம் கண்டு கொண்ட தெளிவோடு, தொல்லோர் வகுத்த அரசியலின் இயல்புகளைத் தேர்ந்து தெளியவேண்டும்.

அரசியலின் முதலாய நோக்கமும் முடிவாய பயனும் அறம் காத்தலே என்று பெரியோர் துணிந்தனர். பகை நீக்கிக் குற்றம்கடிந்து அச்சம் தவிர்த்துப் பொருள் பெருக்கிக் குடிகளை ஓம்புவதற்கே தண்டம் தோன்றியது என்பார் பீஷ்மர். அத் தண்டம் தருமத்தின் வடிவே என்பார் மனு.

*அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்*
*நின்றது மன்னவன் கோல்* (543)

என்றார் வள்ளுவரும். இந்தச் செங்கோல், வானம் பொழியும் மழையினைப் போலவே மக்களுக்கு இன்றியமையாத் தேவை என்றும் அவர் உரைத்தார்.

பெரிய மீன் சிறிய மீனை விழுங்குதல்போல, வலியார் எளியாரை வதைக்கும் மச்ச நியாயத்தால் மனிதகுலம் கெடுவதைத் தவிர்த்து, எளியவனையும் வலியவனாக் குவது தண்டமே என்றார் கௌடிலியர்.

தண்டத்துக்குக் காவலனான அரசன், கல்வி கேள்வி களால் சிறந்து, அறிவால் உயர்ந்து, குடிகளை ஆளும் திறன் பெறவேண்டுமென்றும் அவர்கள் மொழிந்தனர்.

அரசன் இன்சொல்லனாயும், காட்சிக்கு எளியனாயும், வெறுப்பான விமர்சனங்களையும் பொறுப்பானாயும், இடித்துரைக்கும் பெரியாரின் துணையினையே தலையாய வலிமையாகக் கருதுவோனாயும் விளங்க வேண்டுமென்றும் அவர்கள் இயம்பினர்.

தன் மனத்தை வெல்லுவதே அரசனது முதலாவது கடமை என்பார் பீஷ்மர். காமம், வெகுளி, உலோபம், நன்மையின் நீங்கிய மானம், மதம் என்ற செல்வக் களிப்பால் ஏற்படும் செருக்கு, அளவுகடந்த உவகை ஆகியவற்றைப் பகை வர்க்கமென்று குறித்து, இவற்றை நீக்கிப் பொறி அடக்கவேண்டுமென்று கௌடிலியர் கூறினார். இந்த அறுவகைக் குற்றங்களையும் மன்னன் கடியவேண்டுமென்று வள்ளுவரும் கூறினார். (431,432)

தன் உடலை யாகமேடைத் தூணாகவும் தன்னுயிரை அத்தூணில் கட்டிய பசுவாகவும் கருதிக் குடிநலனுக்காகத் தன்னை அர்ப்பணம் செய்து ஆள்வோனே நல்வேந்தன் என்று பீஷ்மர் கூறினார். குடிகளைத் தழுவிக் கோல் ஓச்சும் மன்னவனைக் கடவுள் என்றே மக்கள் கருதுவர் என்றார் வள்ளுவர். (388)

"கொடுந்தண்டம் மக்களை நடுக்கமுறுத்தும்; குறைந்த தண்டம் அவமதிக்கப்படும்; தகுதியான தண்டம் நன்கு மதிக்கப்படும்" என்றார் சாணக்கியர்[1]

*கடுமொழியும் கைஇகந்த தண்டமும் வேந்தன்*
*அடுமுரண் தேய்க்கும் அரம்*[2] (567)

என்று வள்ளுவர் கொடுந்தண்டத்தை எதிர்த்து எச்சரித் தார். முறை தவறும் அரசன் குடியும் கூழும் ஒருங்கு இழப்பான் என்றும் அறிவுறுத்தினார். குற்றம் புரிந் தாரிடத்தில் தாட்சணியம் காட்டும் குறைந்த தண்டமும் கூடாது என்றார் (541). குற்றம் கடிதல் வடு அன்று, வேந்தன் தொழில் என்றும், கொலையிற் கொடியாரை ஒறுத்தல் களை எடுத்துப் பயிர் காக்கும் உழவன் தொழிலை ஒக்கும் என்றும் விளம்பித் தகுதியான தண்டத்தின் தேவையை வள்ளுவர் விளக்கினார்.

எனவே அரசத் தொழில் அறமே உடைத்து என்று எண்ணுதல் தக்கதே. ஆனால் செங்கோல் செலுத்தும் வேந்தனும் அறம் திறம்பும் கருமங்கள் சில இயற்ற நேர்கின்றது. நஞ்சாலும் நெருப்பாலும் சூனியத்தாலும் பகைவரை வருத்தி அழித்தலும் குற்றமில்லை என்று முன்னோர் கூறினர். இது ஒன்றை வள்ளுவர் கூற வில்லையெனினும் வேறு பல வஞ்சனைகளுக்கு அவரும் உடன்படுகிறார்.

---

1 மௌரியர் காலத்தில் வாழ்ந்து அர்த்தசாத்திரம் என்ற பொருள் நூலை அருளிய கௌடிலியருக்கே சாணக்கியர் விஷ்ணுகுப்தர் என்ற பெயர்களும் உண்டு.

2 கை–ஒழுக்கம். அதாவது இங்கு நீதி. கை இகந்த–நீதி கடந்த. அடுமுரண்–பகைவரை வெல்லும் வலிமை.

மைந்தன் முதல் மாற்றான் வரையில் யாவரையும் ஒற்றாடுவது, எவரையும் நம்பாது அனைவரையும் அஞ்சும் கொள்கையால் விளைவதாகும். ஆனால் ஒற்றர் இல்லாது கொற்றவன் இல்லை என்று பீஷ்மர் கூறுவார். சாணக்கியருக்கும் இது உடன் பாடே.

*எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்*[1]
*வல்அறிதல் வேந்தன் தொழில்* (582)

என்பார் வள்ளுவரும். ஒற்றாடாத மன்னனுக்கு வெற்றி இல்லை என்றும் அவர் எச்சரிப்பார்.

ஒற்றரைப் பலவகைப்படுத்துவார் சாணக்கியர். பெண்களையும் அமைச்சர் இல்லங்களுக்கு அனுப்பி ஒற்றாடுவதற்கு அவர் ஏற்பாடு செய்வார். வள்ளுவர் அதனைக் கூறாவிடினும், ஒற்றரை முற்றத் துறந்த முனிவர் வேடத்திலும் அனுப்புவதில் சாணக்கியருடன் உடன்படுவார்.

மேலும்,

*ஒற்றுஒற்றித் தந்த பொருளையும் மற்றும்ஓர்*
*ஒற்றினால் ஒற்றிக் கொளல்*

என்று உரைத்து, ஒரே காரியத்துக்கு இரு வேறு ஒற்றரைத் தனித்தனியே அனுப்பச் சொல்லுவார் வள்ளுவர். மூன்று வெவ்வேறு ஒற்றர் தனித்தனியே ஒற்றித் தந்த செய்தி ஒன்றாயிருந்தால் அதை உண்மை எனக் கொள்ளலா மென்று சாணக்கியரும் வள்ளுவரும் மொழிவர் (குறள் 589). இங்கு அவநம்பிக்கையில் பிறந்த தந்திரத்தின் எல்லையைக் காண்கிறோம்.

பகைநாட்டின் நல்லவர்களையும் தீயவர்களையும் தரம் அறிந்து தகுந்த முறையில் வஞ்சித்து வசப்படுத்திக் கொள்ள வேண்டுமென்றும் சாணக்கியர் அறிவுறுத்துவார். பொருத்தல் (சந்தி), பிரித்தல் (விக்கிரகம்) என்ற கலைகளில் வல்லவனே அமைச்சன் என்று முன்னோர் கூறியதை வள்ளுவரும் ஏற்றுக் கொள்வார்.

*பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்*
*பொருத்தலும் வல்லது அமைச்சு* (633)

என்பது குறள். பகைவரின் துணைவரை அவரிட மிருந்து பிரிக்கவும், அவ்வாறு பிரிந்தவரைத் தம் துணை வராகப் பேணிக்கொள்ளவும், முன்பே தம்மிடமிருந்து விலகியவரைக் கூட்டிக் கொள்ளவும் வல்லவனே அமைச்சன் ஆவான் என்பது இதன் பொருள். அன்னிய அரசுகளது வலியைச் சந்தி விக்கிரகத்தால் சிதைக்க வேண்டுமென்பது வஞ்சனையே அல்லால் வேறு ஒன்றில்லை.

அறன் அல்லன சில செய்து அறம் காக்கும் இந்த அவலத்தை வெறுத்தே, "வேண்டேன் மகுடம்" என்று கைவிதிர்த்தார் யுதிட்டிரர். இத்தகைய செயல்கள் இழிந்தவை அல்ல என்று பீஷ்மரும் வாதித்தாரலர். தனித் தனியே நோக்கின் இவை ஒவ்வொன்றும் தாழ்மையே, தாளாண்மையல்ல, ஆனால் தனக்கென வாழாது பிறர்க்குரியாளனாகப் பணிபுரியும் அறவேந்தன், குடிநலம் கருதி இக்கருமங்களை இயற்றும்போது, அறம் மீறிய குற்றம் அவனைச் சேராது என்று பீஷ்மர் அமைதி கூறினார்.

இது எவ்வாறு? மனிதர் யாவரும் நன்னெறியில் செல்வோராயின், சமுதாய வாழ்வில் சிக்கல் தோன்றாது. அப்போது, தண்டத்துக்கே தேவை இல்லாது போய்விடும். ஆனால், பொருள் நசையும் மண்ணாசையும் பொறாமையும் செருக்கும் மனிதர் பலரை ஆட்டிப் படைக்கும் சூழலில், குற்றம் கடிந்து பகை நீக்கி நாடு காக்கும் பணி சிக்கலானதாகிறது. இது அறவழி, இது புறவழி என்று எளிதில் தீர்மானிக்க இயலாத சிக்கலும் நேர்கிறது. பகைவர் வஞ்சனையால் கேடு சூழும்போது, அவரது வலிமையை அறியவும் சிதைக்கவும் ஒற்றாடலையும் சந்தி விக்கிரகம் முதலான சூழ்ச்சிகளையும் அரசன் கைக்கொள்ள வேண்டும். இவை இழி செயல்களென்று தள்ளிவிட்டால், பகைவரைத் தொலைப்பது அரிதாகிறது. எனவே, அறம் அல்லன செய்தாவது நாடு காப்பதா, அறம் வழுவாதிருந்து நாட்டை இழப்பதா என்ற வகையில் பிரச்சினை உருவாகிறது. நாடு காத்தலே அரசனது தலையாய கடமை என்பதால், குறியின் செம்மையைக் கருதிக் குறுநெறியினைத் தழுவ அவன் முன்வர வேண்டும். நெறியின் செம்மையைக் காப்பேனென்று செப்பிக் குறிக்குக் குழிபறிக்கக்கூடாது. இவ்வாறே, முன்னோர் 'விரகின்றி வேந்தில்லை' என்ற சூத்திரத்துக்கு அமைதி கூறினர். கிணறு தோண்டுவோன் அதில் ஊறும் நீரைக்கொண்டு தன்மீது படிந்த சேற்றைக் கழுவுதல் போல, செங்கோன்மையால் ஈட்டும் புண்ணியத்தைக் கொண்டு வஞ்சனையால் வரும் பாவத்தைக் கழுவலாமென்றும் தடைக்கு விடை கூறுவோர் உளர்.

1. எஞ்ஞான்றும் – ஒவ்வொரு நாளும். வல் அறிதல் – விரைந்து அறிதல்.

குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள் மிகை நாடி மிக்க கொள்ளும் கொள்கை உடைய வள்ளுவருக்கும் இது ஏற்புடைத்தே.

எனினும், அவநம்பிக்கையும் ஐயமும் வஞ்சனையும் கொடுமையும் பெருக்கிச் சமுதாயத்தின் சூழலை நச்சு மயமாக்கும் தீமையாகவே இச் சார்பறம் செயல்படு மென்று கம்பன் அஞ்சினான். உற்ற மனைவியையும் பெற்ற மைந்தனையும் அயிர்க்கும் அளவுக்குச் சிறுமை உறும் சமுதாயத்தில், அன்புக்கும் நட்புக்கும் இடமில்லாது போய்விடும். தோழமைக்குப் பதிலாக வஞ்சனையே எங்கும் பரவிப் படரும். உதட்டில் வெல்லமும் உள்ளத்தில் கள்ளமுமாக உள்ளவரே வாழ்வதற்கு வழி ஏற்படும். வஞ்சகத்தில் விஞ்சியவரே முன்னுக்கு வருவர்; நாடாளும் பெற்றிக்கு உரியராவர். கொடுந்தண்டம் அமைந்து, நல்லோரும் சான்றோரும் அரக்கரால் அலைப்புண்ட முனிவரைப்போல், இடருற்றுத் தவிப்பர். எனவே, தின்மையால் நன்மை நாடும் புன்மையைக் கம்பன் வெறுத்தான்.

## இராமன் புகன்றது

ஆயினும், வாலி வதைக்குப்பின் திருமுடி புனைந்த சுக்கிரீவனுக்கு இராமன் அரசநீதி ஓதும் வகையில், கிட்கிந்தை காண்டத்தில் சார்பறம் இடம் பெற்றிருக்கிறது. பின்பற்றுவதற்குரிய வழிமுறையாகக் கம்பன் இதனை இங்குக் காட்டவில்லை. நாடகநயம் உணர்ந்த கவிஞன், தலைவனது சொல்லாலும் செயலாலும் அவன்தன் மனநிலையைப் புலப்படுத்த விழைகின்றான்; எனவே முதலறத்தின் மூர்த்தியான இராமன் சீதையைப் பிரிந்ததால், சார்பறம் பேசும் அளவுக்கு மனங்கலங்கியி ருக்கிறான் என்பதை நமக்கு உணர்த்துகிறான். இராமனது நிலைகுலைவுக்கு ஓர் அளவு கோலாகவே சார்பறப் பேச்சு அமைந்திருப்பதை நாம் இனிக் காண்போம். மௌலி சூடிய சுக்கிரீவனை மார்புறத் தழுவிய இராமன் மொழிவான் :

*வாய்மைசால் அறிவின் வாய்த்த*
*மந்திர மாந்தரோடும்,*
*தீமைதீர் ஒழுக்கின் வந்த*
*திறத்தொழில் மறவ ரோடும்,*
*தூய்மைசால் புணர்ச்சி பேணித்*
*துகள் அறு தொழிலை ஆகிச்*
*சேய்மையோடு அணிமை யின்றி,*
*தேவரின் தெரிய நிற்றி*[1] (4,8,8)

"அறிவிற் சிறந்த சத்தியசீலர்களையும், வலிமையிற் சிறந்து ஒழுக்கம் ஓம்பும் வீரரையும் தூய நண்பரையும் சுற்றமாகக்கொண்டு, அவர்கள் அணுகாதும் அகலாதும் (தீக்காய்வார்போல்) பழகச் செய்து, வடுவில்லா வேந்தன் தொழிலை இயற்றித் தேவன் எனத் திகழ்வாயாக" என்று இராமன் கூறுகிறான். இது தக்கதே.

*செய்வன செய்தல், யாண்டும்*
*தீயன சிந்தி யாமை,*
*வைவன வந்த போதும்*
*வசைஇல இனிய கூறல்*
*மெய்யன வழங்கல், யாவும்*
*மேவின வெஃகல் இன்மை,*
*உய்வன; ஆக்கித் தம்மோடு*
*உயர்வன; உவந்து செய்வாய்*[2] (4,8,11)

என்பான் இராமன். தூயன சிந்தித்து நல்லன செய்தல், கடுஞ்சொல் பொறுத்து இன்சொல் பேசல், வாய்மை தவறாதிருத்தல், பிறர் பொருள் வெஃகாமை ஆகிய உறுதிப் பொருள்களைக் கடைப்பிடித்துக் குடிகளை உயர்த்துவதின் மூலம் தானும் உயர்வதையே மனத்துக் கினிய கருமமாகக் கொள்வாய் என்று இராமன் புகன்றதும் நன்றே.

நமக்கு நாயகன் மட்டுமன்று; "நன்மை நனி பயந்து எடுத்து நல்கும் தாய்" என்று குடிகள் புகழும் வகையில் அவர்களைப் பேணிக் காக்கவேண்டுமென்றும், தீயன வந்த போது, அறவரம்பு மீறாவண்ணம் தீமையோரைச் சுடவேண்டுமென்றும் இராமன் மேற்கொண்டு உரைப்பதும் ஏற்புடைத்தே:

*பூவின்மேல் புனிதற் கேனும்*
*அறத்தினது இறுதி, வாழ்நாட்கு இறுதி;*
*அஃது அறிதி, அன்ப!* (4,8,12)

என்று அவன் எடுத்துக்கூறுவதும் அவனுக்குப் பெருமை தருவதே.

கூனியால் தனக்கு உற்றகேட்டைக் காட்டி, "உருவு கண்டு எள்ளாமை வேண்டும்" என்ற நெறியை அவன் உணர்த்துவதும் சீர்மை உடைத்தே.

---

புணர்ச்சி–நட்பு. துகள் அறு–குற்றமற்ற. சேய்மை யோடு அணிமை இன்றி–(அவர்கள்) மிகவும் நெருங் காமலும் விலகாமலும் பழகச் செய்து.
வைவன வந்தபோதும்–(பிறர்) வசைபேசினார் என்ற சேதி வந்தபோதும். மேவின–பொருந்தின (பொருட்கள்). வெஃகல் இன்மை–விரும்பாமை.

ஆனால் இவ்விதம் அறம் பகர்வதுடன் அமையாது விரகும் வேந்தனுக்குத் தேவை என்று அவன் விளம்பி விடுகிறான்.

*'புகைஉடைத்து என்னின், உண்டு*
*பொங்கு அனல் அங்கு' என்று உன்னும்*

*மிகைஉடைத்து உலகம்; நூலோர்*
*வினையமும் வேண்டற் பாற்றே* * (4,8,9)

என்று தேர்ந்த சொற்களைச் செருகித் திறம்படப் பேசுகிறான் இராமன்.

இவ்வுலகத்தோர், கண்ணால் கண்டதே உண்மை என்ற ஒற்றைச்சாண் வட்டத்தில் இயங்குவார் அல்லர். கண்டதைக் கொண்டு, காட்சிக்குப் புலனாகாத உண்மையையும் ஊகிக்கும் அறிவு பெற்றவர். பார்வைக்குப் புகை தெரிந்தால், அந்த இடத்தில் எரியும் கனல் உண்டு என்பதை அவர்கள் உய்த்துணர்வார்கள். இந்த மிகுதியான விவேகத்தை உலகமாந்தர் அடையப் பெற்றிருப்பதால், அரச நீதிநூல்களில் கூறப்பட்டிருக்கும் வினையமும் தேவை என்கிறான் இராமன். அரசின் நிலையும் அரசனது சிந்தனையும் அவன் செய்ய விருப்பதும் மக்களும் மாற்றரசரும் அனுமானித்து அறிவதற்கு இடமில்லாத வகையில், வேந்தன் கரவாக ஒழுகவேண்டும் மென்பதே இது. தொல்லோரின் தண்டநீதி நூல்களைக் கொண்டு, கொற்றவன் வஞ்சனையை நியாயப்படுத்துகிறான் இராமன்.

வினையம் என்ற சொல்லுக்கு வஞ்சகம் என்று பொருள் கொள்ளாது, விநயம் அல்லது பணிவு என்று பொருள் கொண்டு, காகுத்தன் கூற்றின் வெம்மையைத் தணிக்க முயல்வார் உளர். ஆனால் பணிவு என்று பொருள் கொண்டால், உலகத்தாரின் அனுமான அறிவாற்றலைப் பற்றிய குறிப்புப் பொருள் இல்லாது போகிறது. மேலும், அரச நீதிநூலோர் உரைக்கும் வஞ்சனையே அல்லாது, முதலற நூலோர் மொழியும் பணிவினை இங்குக் கருதினான் அல்லன் என்பதை இராமனே இப்பாட்டின் பின்னிரண்டு அடிகளில் தெளிவு படுத்தி விடுகிறான்.

*பகையுடைச் சிந்தை யார்க்கும், பயன்உறு பண்பின் தீரா*
*நகையுடை முகத்தை ஆகி, இன்உரை நல்கு, நாவால்*

என்றுரைத்த பின், இராமன் விரகினை விளம்பவில்லை என்பதெல்லாம்வம்பே. பகைவரது தராதரம் அறிந்து, அவரவர் தகுதிக்கேற்ற செயல்களைச் சோர்வின்றிச் செய்யும்போதே, அவர்களிடம் நகைமுகம் காட்டித் தேனொழுகப் பேச வேண்டுமென்கிறான் இராமன். "இன்உரை நல்கு, நாவால்" என்று இயம்பி, விரோதியிடம் இனிக்கப் பேசுவதெல்லாம் உள்ளத்தில் ஊறும் அன்பால் விளைவதல்ல என்பதை ஐயத்துக்கு இடமில்லாமல் காட்டிவிடுகிறான் கறுவுள்ள மனத்தனாகிப் பகைவரை ஒற்றாடவும், பிரித்தல் பொருத்தலால் அவர்தம் வலியைப்பெருக்கவும், பொருதலுக்கான வினைகளைச் செய்யவும் மறைவில் முனைத்தபோதே, புறத்தே சிரித்தும் இனியன பேசியும் நடிக்க வேண்டுமென்பது இராமன் கூற்று. இது வழிவழி வந்த நூலோர் வினையமே ஆகும். வள்ளுவரும்,

*பகைநட்பாம் காலம் வருங்கால் முகம்நட்டு*
*அகநட்பு ஒரீஇ விடல்*[1] (830)

என்றார்.

தம் பகைவர் தமக்கு நண்பராய் ஒழுகும் காலம் வந்தால், அவரோடு முகத்தால் நட்புச் செய்து அகநட்பை விலக்க வேண்டுமென்று இங்கு வள்ளுவர் போதிக்கிறார்.

## இராமன் செயல் வேறு

பகைவரிடம் நண்பராக நடித்து அவர்தம் நாசம் சூழ வேண்டுமென்ற இப் புன்மையைக் கம்பன் ஒப்பமாட்டான். இங்கு இதனைக் கழறும் இராமனுக்கே இது உடன்பாடு அன்று. கரவு என்பதை அறியாத கோசலத்தின் தவப்புதல்வன் அவன். பகைவனுக்குப் பின்னவனான வீடணன் தன்னை நாடி வந்தபோது, அவனைத் தோழனாக வரித்தவன் இராமன். வீடணன் வஞ்சக நெஞ்சனாக வருகிறான் என்றே சுக்கிரீவன் முதலானோர் அஞ்சினர். அவனை ஏற்பதால் ஆபத்து வருமென்று அவர்கள் எச்சரித்தனர். ஆனால் தஞ்சம் புகுந்தவனை நஞ்சமென விலக்குவது அறம் திறம்பு வதாகும் என்று கருதினான் இராமன். வீடணனிடம் முகத்தால் நட்புக்காட்டி மனத்தில் வைரம் பாராட்டும் சிறுமைக்கும் அவன் ஆளாகவில்லை. 'வந்தவனால் நன்மையே ஆகுக, தின்மையே ஆகுக, சரணம் என்றவனை ஏற்றே தீருவேன்' என்றான் அந்த உத்தமன்.

---

* மிகை—மிகுந்த அறிவு. நூலோர்—அரசநீதி நூல்களை இயற்றியோர். வினையம்—வஞ்சகம்.

1 ஒரீஇ—விலக்கி.

*வெற்றியே பெறுக, தோற்க;*
*வீக, வீயாது வாழ்க;*
*பற்றுதல் இன்றி உண்டோ?*
*அடைக்கலம் பகர்கின்றானை* (6,4,105)

என்று தன் துணைவருக்கு எடுத்துரைத்த ஏந்தல் இராமன்.

"பழகியவன் ஆகுக, புதியவன் ஆகுக! என் தாய் தந்தையரையும் தமையனையுமே கொன்றவன் ஆகுக; நாளைக்கே மாறுபடுவான் ஆகுக; என்னைத் தஞ்சமென்று வந்தவனை நெஞ்சார ஏற்பேன். நெடிது நாள் பழகிய தோழனாகவே அவனைக் கருதுவேன்" என்று தூய அறம் இயம்பிய கருணாமூர்த்தி இவன்.

*இன்று வந்தான்என்று உண்டோ?*
*எந்தையை யாயை முன்னைக்*
*கொன்றுவந் தான்என்று உண்டோ?*
*அடைக்கலம் கூறு கின்றான்* [1]

*துன்றிவந்து அன்பு செய்யும்*
*துணைவனும் அவனே; பின்னைப்*
*பின்றும்என் றாலும் நம்பால்*
*புகழ் அன்றிப் பிறிது உண்டாமோ?* [2] (6,4,106)

வந்தவன் சூழ்ச்சியால், தான் இறந்தாலும் கவலையில்லை என்றும் கூறுவான் இராமன். புகலென்று வந்தவன் வஞ்சனையால் 'இறந்த நாள் அன்றோ என்றும் இருந்த நாள் ஆவது' என்றும் உரைப்பான்.

இராமன் கருத்துக்குத் துணைவர் இணக்கம் தெரிவித்த பின்னர், கடைவாயிலில் இருந்த வீடணனைச் சுக்கிரீவன் அழைத்து வந்தான். அப்போது இராமன் அவனைத் தழுவிப் பேசிய பேச்சும், தயா முதலறத்தின்[3] விழுமிய வடிவாக அவன் திகழ்வதை எடுத்துக் காட்டுகிறது:

*குகனொடும் ஐவர் ஆனேம்*
*முன்பு; பின் குன்று சூழ்வான்*
*மகனொடும் அறுவர் ஆனேம்;*
*எம்முழை அன்பின் வந்த*
*அகனமர் காதல் ஐய;*
*நின்னொடும் எழுவர் ஆனேம்;*
*புகலரும் கானம் தந்து*
*புதல்வரால் பொலிந்தான் நுந்தை* [4]. (6,4,143)

இவ்வாறு முதலறத்தின் தூய்மையிலிருந்து சிறிதும் பிறழாது கருமம் புரிந்த காகுத்தன், சுக்கிரீவனுக்கு அரசநீதி ஓதும்போது நூலோர் வினையத்தைப் போற்றுகிறான் எனின், அது வரம்பு கடந்த துயரால் அவன் சிந்தை கலங்கியிருப்பதையே காட்டுகிறது.

## மனச் சோர்வும் மதிச் சோர்வும்

மன்னுயிரெல்லாம் தன்னுயிர் என்று போற்றும் பண்பாளன், தம்பிக்குத் தரணியைப் பரிவுடன் வழங்கி விட்டு வனம் புகுந்தான். இங்குக் காதலியைப் பிரிந்து கடுந்துயர் உழக்கின்றான். சீதையைக் காத்தற்குத் தனக்கும் தம்பிக்கும் வலிமை இருந்தபோதிலும், அது பயனற்றுப் போயிற்று. இருவரையும் மாயத்தால் வேற்றிடம் போக்கித் தமியளான தையலை வவ்விச் சென்றுவிட்டான் அரக்கன். இல்லாளைக் காக்க முடியாது போன அவலம் குரிசிலை வதைக்கின்றது. எவர் துன்பத்தையும் பொறுக்க முடியாத குழைவு இந்நம்பிக்கே உரியது. சீதையின் துயரை இவன் எப்படிப் பொறுப்பான்? பொறுமைக்கு அணியாகவும் கற்பினுக்கு அரசியாகவும் மிளிரும் சீதையை அன்பினுக்குரிய மனைவியாகப் பெற்ற மென்னெஞ்சன் அவளது பிரிவால் மறுகுவதில் வியப்பில்லை. அவளைத் தன் உயிராகவே அவன் கொண்டிருந்ததால் தானே,

*ஈண்டுநீ இருந்தாய்; ஆண்டு அங்கு*
*எவ்வுயிர் விடும் இராமன்?* (6,4,77)

என்று அனுமன் சீதையிடம் கூறினான்.

"இன்னுயிர் இன்றி ஏகும் இயந்திரப் படிவம் ஒப்பான்" என்று இராமனை அனுமன் குறிப்பிட்டது முற்றிலும் உண்மையே.

இன்னொன்று: கந்தருவனும் சவரியும் சாற்றக் கேட்டுச் சுக்கிரீவனை அடைந்தான் இராமன். மனைவியின் பிரிவால் மனம் மறுகும் தலைவன், இல்லாளைப் பிரிந்து நின்ற சுக்கிரீவனிடம் பரிவு கொண்டது இயல்பே. தம்பியரே உயிர் என்று கருதிய நம்பி, தம்பியின் மனைவியைக் கவர்ந்த தமையனான வாலிமீது சீற்றம் கொண்டான். இந்த உணர்ச்சி வேகத்தில்,

---

1. எந்தையை–என் தந்தையை. யாயை–(என்) தாயை. முன்னை–(என்) தமையனை.
2. துன்றி–நெருங்கி. பின்றும்–மாறுபட்டு 3. தயா முதலறம்–தயை என்ற முதலறம்.
4. குன்று சூழ்வான் மகன் – சூரியன் மைந்தனான சுக்கிரீவன். எம்முழை–எம்மிடம். அகனமர்–மனமார்ந்த. புகல் அரும்–புகுவதற்கரிய. நுந்தை–உன் தந்தை. தயரதனை 'உந்தை' என்று வீடணனிடம் இராமன் குறிப்பிடும் நயம் பெரிது.

*தலைமையோடு நின் தாரமும்*
*உனக்கு இன்று தருவேன்* (4,3,70)

என்று உறுதி கூறினான். உண்மையை முழுமையாக ஆராயாது வழங்கிய ஒருதலைப் தீர்ப்பு இது. அன்றே வாலியின் உயிரை முடிப்பேன் என்றதால் மறைந்து நின்று வாளி தொடுக்கும் பழிக்கு ஆளானான்.

*ஆவியைச் சனகன் பெற்ற*
*அன்னத்தை, அமிழ்தின் வந்த*
*தேவியைப் பிரிந்த பின்னைத்*
*திகைத்தனை போலும் செய்கை* (4,7,86)

என்று வாலி இடித்துக் கூறும் நிலைமை ஏற்பட்டது. மேலும் தனக்குற்ற அழிவை எண்ணாது, இராமனுக்கு நேர்ந்த இழிவையே எண்ணி வாலி நாணியதும் கடிந்துரைத்ததும், பின்னர், ஆறி நின்று, தன் குற்றம் உணர்ந்து, இராமனது நெடிது நோக்கும் நோன்மையைப் போற்றியதும், அந்த மாவீரனின் மன விரிவைப் புலப்படுத்தின.[1] ஆவேசத்தில், அவசர வாக்கு அளித்தோமே, மறைவில் இருந்து அம்பு தொடுத்து வில்லறம் திறம்பினோமே, சிறியன சிந்தியாதான் ஆன வாலியை மாய்த்தோமே என்றெல்லாம் நினைந்து நினைந்து மனம் புழுங்குகிறான் இராமன்.

அதனால் தான், கிட்கிந்தையில் வந்து வசிக்குமாறு சுக்கிரீவன் வேண்டியபோது, வேந்தன் இருக்கை விரதியர்க்கு ஒவ்வாது என்று உரைப்பதுடன் அவன் அமையான். 'அரக்கன் சிறையில் தேவி நோன்பிருக்கும் போது, ஆவி போன்ற நண்பரோடு இராமன் இன்பம் மேவினான்' என்ற சொல்லுக்கு இடம் தரேன் என்றதுடனும் நில்லான்.

மேலும் கூறுவான்.

**இல்லறம் துறந்தி லாதோர்**
**இயற்கையை இழந்தும், போரின்**
**வில்லறம் துறந்தும் வாழ்வேற்கு**
**இன்னன மேன்மை இல்லாச்**
**சில்லறம் புரிந்து நின்ற**
**தீமைகள் தீரு மாறு,**
**நல்லறம் தொடர்ந்த நோன்பின்**
**நவை அற நோற்பல் நாளும்[2] (4,8,23)**

மனைவியைப் பிரிந்து வாழ்வதால், இல்லறத்தின் இயற்கையை இழந்து நிற்பதாகக் கூறினான். வாலியை மறைந்து நின்று கொன்றதையே வில்லறம் துறந்த செயல் என்று குறிப்பிடுகிறான். இவை போன்ற வேறு சில அற்பச் செயல்களும் புரிந்ததாக இராமன் எவற்றைக் குறிப்பிடுகிறான்? மனைவியின் புலவியைக் கருதி, மாயமானைத் தானே தொடர்ந்து சென்றதையும், வாலி தன் திறத்தில் உரைப்பதற்கு என்ன உள்ளது என்பதை அறியாது, அவனைக் கொல்வதற்கு ஒரு சார்பாக முடிவு கட்டியதையும் கருதிப் பேசுகின்றானா? அல்லது வாலியுடன் வாதம் செய்தபோது ஒன்றைவிட்டு வேறொன்றைப் பேசித் தன் குறையை ஏற்காதிருந்ததை எண்ணுகின்றானா? அல்லது, துயரால் அவசமுற்றுத் தேய்வோரின் இயற்கைக்கு இணங்க, தான் இழைக்காத குற்றங்களையும் புரிந்ததாகப் பாவித்துப் பழி சூட்டிக் கொண்டு சோர்கிறானா? யாதாயினும் ஆகுக; தான் இழைத்த தீமைகள் தீர, கார்காலம் முழுவதும் கடுந்தவம் புரிவேன் என்று அவன் உரைப்பதும் கிடக்க; சீதையைப் பிரிந்ததால், அவன் துயரின் வடிவாகித் தடுமாறுகிறான் என்ற உண்மையை நாம் இங்கு உணரவேண்டும்.

இந்தத் தடுமாற்றத்தில், இராமன் சார்பறம் மட்டுமா பேசுகின்றான்? அதற்கும் அப்பால் செல்கிறான்.

***மங்கையர் பொருட்டால் எய்தும்***
***மாந்தர்க்கு மரணம் என்றல்***
***சங்கைஇன்று உணர்தி; வாலி***
***செய்கையால் சாலும்; இன்னும்***
***அங்கு அவர் திறத்தி னானே***
***அல்லலும் பழியும் ஆதல்***
***எங்களில் காண்டி அன்றே;***
***இதற்குவேறு உவமை உண்டோ?[3]***

(4,8,13)

என்பதும் கதிரோன் மைந்தனுக்குக் காகுத்தன் கற்பித்த அரசநீதியே.

மங்கையரால் பழியும் அலலலும் மரணமும் நேரும் என்பது இராமன் இங்கு நிறுவப்புகும் சூத்திரம். மாதரால் மரணம் எய்தும் என்பதற்கு வாலியையும், பழியும் தொல்லையும் வருதலுக்குத் தம்மையும் (இராம இலக்குவரையும்) சான்று காட்டுகிறான் இராமன்.

இந்தக் கொள்கையை இவனுக்கு எவர், எங்கு, எப்போது கற்றுக்கொடுத்தார்? வம்சம் விளங்கச் செய்யும் தாய்க் குலத்தை அழிவு சூழும் இழி நிலைக்கு உரியவரென்று தாழ்த்துவதைவிடக் கொடுமை இல்லை.

1. வாலி வதையைப்பற்றிய விரிவான ஆராய்ச்சியைச் 'சிறியன சிந்தியாதான்' என்ற நூலில் காண்க.
2. சில்லறம்–அற்ப ஒழுக்கங்கள். நவை – குற்றம்.
3. உவமை–எடுத்துக்காட்டு

புனிதவதியான சீதையின் மணாளனா இவ்வாறு பேசுவது? கோசலையின்மகனா இங்ஙனம் கழறுவது? கைகேயி தீயளாக மாறியபோதும்,

அவளை மறந்தும் வெறுத்துப் பேசாத சீலனா இவ்விதம் செப்புவது?

இராவண வதம் நிறைவுற்ற பின்னர், தனக்கு முன் தோன்றிய தந்தை, "உனக்கு அமைந்த வரம் ஒன்று கேள்' என்று வற்புறுத்தியபோது, இவன்,

*தீயள் என்றுநீ துறந்த என் தெய்வமும் மகனும்*
*தாயும் தம்பியு மாம்வரம் தருகளனத் தாழ்ந்தான்* [1]
(6,37,128)

இதே இராமன்தான், துயரத்தால் தன்வசம் இழந்த நிலையில் மாதரால் மரணம் நேரும் என்று சுக்கிரீவனிடம் மொழிகிறான்.

வாலி மங்கையால் மடிந்தான் என்பது எவ்வாறு உண்மையாகும்? சுக்கிரீவன் மனைவியான உருமையிடம் கொண்ட காமத்தால் அவன் இறந்தான் என்று வேண்டு மானால் கொள்ளலாம். காமத்தால் கேடு வரும் என்பதை அரசநீதி வகுத்தோர் அனைவரும் கூறியுள்ளனர். இராமன் திருமுடி சூடவிருந்தபோது, அவனுக்கு அரசியல் போதித்த வசிட்ட முனிவரும் இதனை எடுத்துரைத்தார்.

*தூம கேது புவிக்குளனத் தோன்றிய*
*வாம மேகலை மங்கைய ரால்வரும்*
*காமம் இல்லை எனின்; கடுங் கேடுஎனும்*
*நாமம் இல்லை; நரகமும் இல்லையே.* [2] (2,2,29)

உரிமை மனைவியை மருவி மகிழும் பெருமையை விடுத்துப் பிற மகளிர்பால் மையல் கொள்ளுவோர் அழிதுயரும் இழிநரகும் எய்துவர் என்பது முனிவரது கருத்து. அதனால் காமம் என்னும் இழிவு, வரவிருக்கும் கேட்டுக்கு முன்னறிவிப்பாக விண்ணில் தோன்றும் தூமகேதுவுடன் ஒப்பிட்டார்.

உருமை காமத்தால் வாலி மடிந்தான் என்றாலும் அதற்கு உருமை எப்படிப் பொறுப்பாவாள்? குற்றம் நங்கை உடையதா, இச்சை கொண்ட வாலி உடையதா? வாலியே குற்றவாளி என்றால் மங்கையரால் மடிந்தான் என்பது எப்படிப் பொருந்தும்?

வாலியின் உரிமை மனைவி தாரை; சுக்கிரீவன் அறை கூவியதைக் கேட்டு அமருக்கு ஆர்த்தெழுந்த வாலியை இடை விலக்கினாள் அந்த உத்தமி. சுக்கிரீவனுக்கு இராமன் என்பவன் இன்னுயிர்த் துணைவனாய் அமைந்து உன்னுயிர் கொள்வதற்கு உடன் வந்தான் என்று சேதி கிடைத்திருப்பதாகச் செப்பினாள். தம்பிக்குத் தரணியை வழங்கிய தியாகியும், தருமத்தின் நாயகனு மான இராமன், அண்ணன் தம்பியர் சண்டையில் குறுக்கிட்டு அம்பு தொடுக்கும் அற்பனாக மாட்டான் என்று பேசி, தாரை வாயை அடக்கி விட்டுக் களம் புகுந்தான் வாலி. மாறாக, அவன் தாரை சொல் கேட்டிருந் தால் மங்கையால் வாழ்ந்தேன் என்று விதந்து ஓதியிருப் பான்.

சத்தியவான் வாழ்ந்தது சாவித்திரியால் என்பது பெண்ணைக் கண்ணெனப் போற்றிய சான்றோர் வாழ்ந்த பாரத நிலத்தில் பிறந்த கதை.

மங்கையரால் பழியும் அல்லலும் நேரும் என்பதற்கு இவனும் தம்பியும் உதாரணமாம். மனைவியின் பேச்சைக் கேட்டு, மதிமோசம்போய், மாயமானைத் தொடர்ந்து சென்றதால் அல்லலுக்கு உள்ளாயிருப்பதாக அவன் கருதுகின்றானா? அவ்வாறு எனில், அது எப்படிச் சீதையின் குற்றமாகும்? காமத்தால் நிகழும் குற்றங்களில் பெண் வழிச்சேறலும் ஒன்று என்று உரைத்த வள்ளுவரும், அதை ஆடவன் குற்றமெனவே கணித்தார். மீண்டும் வாலிதாரையின் பேச்சைக் கேட்டிருந்தால், நன்னுதலாள் பெட்டாங்கு ஒழுகியதால் உய்ந்தேன் என்றுவிளம்பி, வள்ளுவரது பெண் வழிச் சேறல் அதிகாரத்துக்கு அறைகூவல் விடுத்திருப்பான் அல்லவா?

---

1 என் தெய்வம்–கைகேயி

2 தூமகேது : வால் நட்சத்திரம். வாமமேகலை–அழகிய மேகலை (அணிந்த). மேகலை என்பது மகளிர் இடையில் அணியும் ஒருவகை ஆபரணம்.

தூமகேது என்று முனிவர் குறிப்பிட்டது மங்கையரையா, அவரால் வரும் காமத்தையா? மங்கையரே எனில் குலமகளிரையா, விலைமகளிரையா? இவ்வா றெல்லாம் மயங்குவதற்கு இடம் தரும் செய்யுள் இது. வசிட்டர், உணர்ச்சி வசப்பட்டு, மறைதந்த நாவால் வாய்தந்தன கூறினாரன்று; அமைதியாகவே அறிவுரை நல்குகிறார். இரண்டாவதாக, மாதரார் அன்பாலேயே அறம் கண்ட கோசலத்தின் குருநாதன் அவர். மூன்றாவதாக, கற்புக் கடம் பூண்டவருக்கெல்லாம் முன்மாதிரி எனப் போற்றப் பெறும் அருந்ததியின் கணவர் அவர். நான்காவதாக,

*"மன்னினும் நல்லன்; மலர்மகள் கலைமகள், கலை ஊர்*
*பெண்ணினும் நல்லன்"* (2,1,39)

என்று இவராலேயே பாராட்டப் பெற்ற சீதையின் மணாளனிடம் பேசுகிறார்; எனவே அவர் காமத்தையே தூமகேது என்றார் எனக் கொள்வோம்.

மங்கையால் பழியும் அல்லலும் வந்தது என்று சூர்ப்பணகையைக் கருதி மொழிகின்றானா? அதனைப் புரிந்து கொள்ளலாம். ஆனால் இராவணன் ஏன் அவள் பேச்சைக் கேட்டான்? அவன் என்ன எடுப்பார் கைப்பிள்ளையா? அவன் காமவெறியனாயிருந்ததால், சூர்ப்பணகையின் சூழ்ச்சி வெற்றிபெற்றது. அவன் வஞ்சனை இயற்றிச் சீதையை வவ்வியதால் இராம இலக்குவற்கு அல்லல் மூண்டது.

இராமன் அரசியல் பேச்சின் நொய்ம்மையைக் காட்டவே இவற்றை விரித்துக் கூறினோம். அவனைக் கடிந்தும் இடித்தும் வெறுத்தும் பேசுவது நம் நோக்கம் அல்ல; கம்பன் கருத்தும் அல்ல. சீதையைப் போன்ற மனைவியை இராமனைப் போன்ற நம்பி பிரிந்தால், அவன் துயரத்தில் தன்னிலை தவறுவதில் வியப்பில்லை. அது அவனது செவ்விய இயல்பையே காட்டும்.

கார் காலத்தில் தவம் செய்யப்போவதாகக் கூறினான் காகுத்தன். ஆனால் அவன் எப்படித் தவம் செய்ய முடியும்? சீதையின் பிரிவை எண்ணி எண்ணித் தேய்ந்தான். இதனால் மனச்சோர்வும் மதிச்சோர்வும் அதிகமானதால், மழைக்கால முடிவில் வருவதாக வாக்களித்திருந்தவானர வேந்தன் வராமை குறித்து இராமன் சினம் கொள்கிறான்.

***நன்றி கொன்று அரு நட்பினை நார் அறுத்து,***
***ஒன்றும் மெய்ம்மை சிதைத்து, உரை பொய்த்துளார்க்***
***கொன்று நீக்குதல் குற்றத்தில் தங்குமோ?***
***சென்று, மற்று அவன் சிந்தையைத் தேர்குவாய்***
(4,10,3)

என்று இலக்குவனிடம் கூறுகிறான்.

நன்றி கொல்வதும், நட்பின் உயிர்ப்பண்பாம் அன்பைத் துணிப்பதும், சத்தியத்தைச் சிதைப்பதும் அற விரோதம் என்பதில் தடையில்லை. ஆனால் அவ்வாறு அறம் திறம்புவானைக் கொன்று நீக்குதலும் குற்றமாகாது என்கிறான் இராமன். இது என்ன புதுமை என்று உசாவினால்,

***நஞ்சம் அன்னவரை நலிந்தால் அது***
***வஞ்சம் அன்று; மனுவழக்கு ஆதலால்*** (4,10,5)

என்று நியாயம் காட்டுகிறான்.

நன்றி மறந்தவர் அனைவரையும் கொன்றுவிடலாம் என்று மனு எங்கும் கூறவில்லை. தீயோரைத் தரம் அறிந்து தண்டித்தல் தண்டநீதிக்கு உரியதே என்று மனுவும் பீஷ்மரும் வள்ளுவரும் பிறரும் மொழிந்தது உண்மையே. ஆனால் அது அரசனையே சார்ந்த உரிமை. இராமன் அரசன் அல்லன்; சுக்கிரீவன் இவனது குடியும் அல்லன். மேலும், இவன் தீயோரைத் தேடிச் சென்று தொலைத்தவனு மல்லன். விராதனும் கரன் முதல் காளையரும் கவந்தனும் தாமாக வந்து இகலி மாண்டனர். அறம் கொன்ற கண்டகரை வேர் அறுப்பேன் என்று தண்டகவன முனிவருக்கு அடைக்கலம் அளித்தபோது உறுதி கூறிய இராமன், அந்த அரக்கரிடம் தானாகப் போர்மேல் சென்றா னல்லன். இராவணன் வலியவந்து சீதையை வவ்விய பின்பே, அவனுடன் அமர் நிகழ்த்த எழுகின்றான். அப்போதும், "சீதையை விடுக! போர் தவிர்க!" என்று அறிவுரை பகர்வதற்கு அங்கதனைத் தூது அனுப்புவான். முதற் போரில், தானையும் தேரும் இழந்து தன்னந் தனியனாய் இராவணன் நின்றபோதும், சீதையை விடுத்துத் தேவரை முறையில் வைத்து வீடணனை அரசனாக்கி அறம் நிலைக்க வழி செய்தால், உயிர்ப் பிச்சை அளிப்பேன் என்பான் இராமன். அதற்கு ஒப்ப வில்லையானால் "இன்று போய்ப் போருக்கு நாளை வா" என்று மனவிரிவோடு மொழிவான். வலிய வந்து மாறுகொண்ட தீயோரையும் திருத்த முயல்வதும், அது இயலாதபோதே அவரை ஒறுப்பதும் இராமன் நடை முறையாகும்.

இத்தகைய செவ்விய வழியில் ஒழுகும் இராமன், "வில் உண்டு; அம்புண்டு; நன்றி கொன்றவனைக் கொல்வேன். வானப் பேரும் மாளும்" என்றெல்லாம் இலக்குவனிடம் பேசுகிறான் எனில், அது அவனது அப்போதைய மனக் குழப்பத்தையே காட்டும்.

பார்க்கப் போனால், "கண்டனென் கற்பினுக்கு அணியைக் கண்களால்" என்ற நற்செய்தியை அனுமன் வந்து உரைக்கும் வரையில், இராமன் அவலத்தால் நிலைகுலைந்தே இருந்தான். இந்தப் பின்புலத்தில் தான், கிட்கிந்தை காண்டத்தில் அவன் ஓதும் அரசநீதியினைக் கணிக்க வேண்டும்.

ஆக, நாம் முதலறத்துக்கும் சார்பறத்துக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை ஒருவாறு கண்டு அறிந்தோம்; கண்ணெதிரே காட்சி தந்த சமுதாயத்துக்கு அரசநீதி வகுத்த தொல்லோர் அதனைச் சார்பறமாகவே அமைத்திருப்பதை ஓர்ந்தோம். அச் சார்பறத்தின் சிறுமைகளைக் கம்பன் வெறுத்த போதிலும், கிட்கிந்தை காண்டத்தில் இராமன் வாயிலாக அச் சார்பறமே ஓதப் பெறுவதை விவரமாகப் பயின்றோம். முதலறத்தின் மூர்த்தியான இராமனது நடைமுறைக்கு அச் சார்பறம் முற்றிலும் முரணாக உள்ளதென்பதையும், சீதையைப் பிரிந்து சிந்தை கலங்கிய நிலையிலேயே இராமன் அதனை உதட்டளவில் ஓதுகிறான் என்பதையும் தேர்ந்து தெளிந்தோம். சான்றோன் சித்தம் கலங்கும் போதே சார்பறம் பேசுவான் என்று அமைத்து அதன் நொய்ம் மையைக் கம்பன் காட்டும் கைத்திறம் வியத்தற் குரியது.

---

*நன்றி : கம்பன் கண்ட அரசியல் மீனாட்சி புத்தகநிலையம்*

# கம்பயில் வள்ளுவர்

மஹாவித்துவான்-எப்-எக்ஸ்-சீ-நடராசா

*"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாரும்*
*தொழுதுண்டு பின்செல்வார் என்றே இத் தொல்லுலகில்*
*எழுதுண்ட மறை சொன்னால் இவருடனே இயலுமிது*
*பழுதுண்டோ கடல் சூழ்ந்த பாரிடத்தில் பிறந்தோர்க்கே"*

– இஃது ஏர் எழுபதிலுள்ள பாடல். இந்நூல் கம்பராற் பாடப் பட்டது. திருக்குறளை "எழுதுண்ட மறை" எனக்குறிப்பிட்டு

*உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்*
*தொழுதுண்டு பின் செல்பவர் "*

(குறள் 1033)

என்னும் குறளை முழுமையாக எடுத்தாண்டுள்ளார், கம்பர் கவிச்சக்கரவர்த்தி. அவர் வீட்டுக் கட்டுதறியும் கவிபாடும். தமிழ்க் கடல் கடைந்து நரருக்கும் அமுதம் ஈந்தவர், கல்வியிற் பெரியவர், புதுமையர், சித்திரம் புனைவதில் சிறந்தவர், நாடக வழக்கின் நயங்காட்டியவர், அபிநவ கவி நாதன் என்பதும் கம்பர் பெயர்.

தெய்வப் புலவர் திருவள்ளுவர், பொய்யா மொழியினர், அணுவைத் துளைத்து ஏழ் கடலைப் புகட்டியவர், உலகப் பொது மறை தந்தவர், உலகியல் வழக்கில் உண்மை பேசியவர், யதார்த்தப் பண்பினர் எனினும் காமத்துப் பாலில் நாடக வழக்குண்டு.

கம்பர், வள்ளுவர் இருவரும் பெரும் புலவர்கள். உலகப் புகழ் பெற்றவர்கள். எனினும் இவர்களின் பெயர், பிறப்பிடம், பெற்றோர், குலம், சமயம், வாழ்க்கை வாழ்ந்த காலம் என்பன பற்றிய சந்தேகங்கள் உண்டு.

ஏர் எழுபது, திருக்கை வழக்கம், சடகோபரந்தாதி, சரசுவதியந்தாதி, இராமகாதை என்னும் நூல்களைக் கம்பர் யாத்தார். இராமகாதையே கம்பராமாயணம்.

*"கரைசெறி காண்டமேழு கதைகளாயிரத்தெண்ணூறு*
*பரவுறு சமரம் பத்து படல நூற்றிருபத்தெட்டே*
*உரை செயும் விருத்தம் பன்னீராயிரத் தொருபத்தாறு*
*வரமிகு கம்பன் சொன்ன வண்ணமுந்தொண்ணூற்றாறே"*

– என்னும் பாவின் மூலம் இந்நூல் பற்றிய தகவல்கள் பலவற்றை அறியலாம். இரவிரவாக ஆராய்ந்து, எழுந்த ஞாயிறு வீழ்வதன் முன்னம் எழுநூறு கவிகள் வீதம் பாடினார். இவரது மூலநூல் வான் மீகி இராமாயணம். கம்பராமாயணத்தின் ஏழாவது காண்டம் ஒட்டக் கூத்தர் பாடியது என்றும் கருத்து. விருத்தமெனும் ஒண்பாவில் உயர் கம்பர். அவர் காட்டிய வண்ணம் தொண்ணூற்றாறு. வீராசாமிச் செட்டியாரின் விநோதரச மஞ்சரியின் மூலம் கம்பருடைய செய்திகள் பல அறியப்படும்.

இனித் திருவள்ளுவர் பெற்றோர் ஆதி, பகவன். தொழில் நெசவு. இயற்றிய நூல் திருக்குறள்.

*"வீடொன்று பாயிர நான்கு விளங்குற*
*நாடிய முப்பத்து மூன்றொன்றூழ் – கூடு மொரு*
*வெள்ளி லெழுப திருபதிற்றைந்தின்பம்*
*வள்ளுவர் சொன்ன வகை"*

சிறுமேதாவியார் பாடிய திருவள்ளுவர்மாலைப் பாடலில் குறள் பற்றிய விபரங்கள் சில பெறப்படுகின்றன. ஏனைய பாக்களையும் படிக்கும்போது வள்ளுவர் பெருமை, அறிவாற்றல் என்பன புலனாகும். உலகிலுள்ள மொழிகள் பலவற்றிலே மொழி பெயர்க்கப்பட்ட பெருமைக் குரியது திருக்குறள். ஓதற்கு எளியது. உணர்தற்கு அரியது. சிந்தனைக் கருவூலம். இதன் சிறப்பு செப்பிடற்கரியது.

தமிழின் 'கதி' – க – கம்பராமாயணம்.

தி – திருக்குறள் என்று காட்டுவது முண்டு.

*"எப்பொருளும் யாரும் இயல்பில் அறிவுறச்*
*செப்பிய வள்ளுவர் தாம் செப்பவரும் – முப்பாற்குப்*
*பாரதஞ் சீராம கதை மனுப் பண்டை மறை*
*நேர்வன மற்றுஇல்லை நிகர் "*

என்றார் பெருந்தேவனார்.

புரட்சிக் கவிஞர் பாரதியார் இதனை விஞ்சி

1. ***யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல்
வள்ளுவர் போல் இளங்கோவைப் போல்
பூமிதனில் யாங்காணுமே பிறந்ததில்லை
உண்மை வெறும் புகழ்ச்சியில்லை.***

11. ***கல்வி சிறந்த தமிழ்நாடு புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு.***

111. ***வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு***

என்று கூற, கவிமணி தேசிய விநாயகம்பிள்ளை

1. ***வள்ளுவர்தந்த திருமறையைத்–தமிழ்
மாதின் இனிய உயிர் நிலையை***

11. ***பாவின் சுவைகடல் உண்டெழுந்து–கம்பன்
பாரிற் பொழிந்த தீம் பாற்கடலை***

எனப் பாடினார்.

கற்றோரும், மற்றோரும் புகழும் கவிஞர்கள் கம்பரும், வள்ளுவரும்.

கம்பருடைய பாடல்களிலே குறட்பாக்கள் முழுமை யாகவும் சொற்றொடராகவும் இடம் பெற்றுள்ளன. குறட்கருத்துக்களும் எடுத்தாளப்பட்டுள. இவ்வாறு இடம் பெறுவது தமிழர் பண்பு – சால்பு.

1. உண்மைகள் உலகம் முழுவதற்கும் பொது வானவை. உலகப் பொது நூல்களில் அவை வெளிப்படும் முறையும் ஒன்றாக அமைவதுண்டு.
11. ஒருவர் கூறியமையினால் ஏனையோர் அதனை அவ்வாறே கூறுதல் கூடாது என்பது கட்டாய நியதியல்ல.
111. தமது காலத்திற்கு முற்பட்ட இலக்கிய இலக்கணங் களைப் படித்துச் சுவைத்தவர் அவற்றிலிருந்து – அவ்வாறே எடுத்தாள்வது தவறன்று.
4. முன்னோர் மொழி பொருளேயன்றி அவர் மொழியும், பொன்னேபோற் போற்றுந் தமிழ் மரபு.

பழமையான தொல்காப்பியத்திலிருந்து சூத்திரங் களை இலக்கணிகள் பலர் முழுமையாக எடுத் தாண்டுள்ளனர். திருக்குறளில் இருந்தும், அதற்குப் பிற்பட்ட காலத்து அறிஞர்கள் தமக்கு வேண்டியவற்றை வேண்டிய அளவு மொண்டு கொண்டனர். கம்பரும் இதற்கு விதி விலக்கானவர் அல்லர்.

திருவள்ளுவர், காலத்தால் கம்பருக்கு முற்பட்டவர். எனவே திருக்குறளைக் கற்கும் வாய்ப்புக் கம்பருக்கும் கிடைத்தது. பெரியவர் மொழியை மறையெனப் போற்றினார். இதனால் இருவரும் பெருமை பெற்றனர். பழந்தமிழ் இலக்கியங்கள் செய்யுள் வடிவின. வாய் மொழியாகப் பேணப்பட்டன. சொற்றொடர்கள் பல ஒரே அமைப்பின. இதன் காரணத்தை உய்த்துணர்ந்து கொள்ளத் தவறிய அறிஞர் சிலர் 'ஒருவரையொருவர் பார்த்தெழுதினர்' எனக் கருத்து வெளியிட்டுள்ளார்கள்.

கம்பராமாயணத்தையும், திருக்குறளையும் ஆய்வாதாரமாகக் கொண்டே இக்கட்டுரை எழுதப் படுகின்றது. குறள் முழுவதையும் எடுத்தாண்டமை, சொற்றொடரை எடுத்தாண்டமை, கருத்துரைகளை எடுத்தாண்டமை என மூன்று பிரிவுகளில் ஆராய்வோம். அதனையும் கம்பராமாயணத்தின் காண்டங்களின் வரிசை ஒழுங்கின்படி காண்போம்.

இராமாயணம் ஏழுபெரும்பிரிவுடைத்து, அவை காண்டங்கள், பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், உயுத்த காண்டம், உத்தர காண்டம் என்பது வரிசை ஒழுங்கு.

பாலகாண்டம் 22 உட்பிரிவுகளையுடைத்து, படலம் என்ற பெயரின.

அயோத்தி மன்னன் தசரதன் மனைவியர் பலர், பட்டத்தரசிகள் மூவர், புத்திரப் பேறில்லை. கலைக் கோட்டுமுனிவர் மூலம் யாகம்; மூவருக்கும் நால்வர் புதல்வர்; மூத்தவன் இராமன். ஒரு நாள்......

அரசசபைக்கு விசுவாமித்திர முனிவர் வந்தார். தமது யாகம் காக்க இராமனைக் கேட்டார். இராமலக்குவர் கையடையாக ஒப்படைக்கப் பட்டனர். வழிப்போக்கில் முனிவர் கதை பல சொன்னார்.

திருமால் நீண்டகாலம் தவம் மேற் கொண்டார். மாவலிச்சக்கர வர்த்தி மண்ணும், விண்ணும் கவர்ந் தான். தேவர்களைக் கொடுமைப் படுத்தினான். திருமாலிடம் அவர்கள் முறையிட்டனர். குறை தீர்க்கக் குள்ளனாகப் பிறந்தார் திருமால். வாமனன் என்பது பெயர்.

மாவலி மாபெரும் யாகம் செய்தான். அவன் குரு வெள்ளி – சுக்கிராச்சாரி. யாகமுடிவிலே வாரி வழங்கினான் மாவலி. கேட்டவற்றையெல்லாம் கொடுத் தான்.

குள்ளனும் வந்தான். தனது காலினால் மூன்றடி மண் கேட்டான். குருவுக்கு அவனது குள்ளம் புலனாயிற்று.

"மன்னா, இவனைக் குள்ளன் எனக் கொள்ளேல், அண்டம் முழுவதும் உண்டவன், அரவணை மீது துயில்பவன், கேட்பதைக் கொடுக்காதே'' என்று தடுத்தான்.

குருவே "பாத்திரமறிந்து பிச்சையிடு கோத்திர மறிந்து பெண்ணைக் கொடு" என்பது பழமொழி. இறக்கின்ற தறுவாயினும் கன்னன் கொடை கொடுத்தான். பூவில் வாழ் அயனும் நிகலரன் என்றால் புண்ணியம் அதனினும் பெரிதோ எனக் கேட்டவன் கன்னன். எல்லோரும் இரந்து நிற்கும் கண்ணன் என்னிடம் இரந்து நின்றால் இதைவிடப் பெரும்பேறு வேறெது?

"ஈவாரை ஈயவொட்டான் இவனுமீயான் எழு பிறப்பினுங்கடையாம் இவன் பிறப்பே" என்ற முன்னோர் முதுமொழி அறியீரோ – என்று மாவலி வெள்ளியிடம் பேசும்போது

***"எடுத்தொருவருக்கொருவர் ஈவதனின் முன்னந்***
***தடுப்பது நினக்கழகிதோ தகவில் வெள்ளி***
***கொடுப்பது விலக்கு கொடியோய் உனது சுற்றம்***
***உடுப்பதுவும் உண்பதுவுமின்றி விடுகின்றாய்"***

(வேள்விப்படலம் 33)

ஒருவர் ஒருவருக்கு எடுத்து ஈவதைத் தடுப்பது அழகோ. தகவில்லாத வெள்ளியே கொடுப்பதைத் தடுப்பவனுடைய சுற்றம் உடுப்பதுவும், உண்பதுவுமின்றிக் கெடும் என்பது இதன் பொழிப்பு.

இப்பாடலிலே திருவள்ளுவரது குறளைக் கவிச்சக் கரவர்த்தி முழுமையாகக் கையாண்டிருப்பதைக் காண்கிறோம்.

***"கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்***
***உண்பதூ உம் இன்றிக் கெடும்"***

(குறள்: 166)

மாவலி சுக்கிராச்சாரியாருக்கு விடை கூறும் பாடல்களுள் இதுவும் ஒன்று.

***"வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்***
***வள்ளிய ராகில் வழங்குவ தல்லால்***
***எள்ளுவஎன்சில இன்னுயி ரேனும்***
***கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றால் "***

(வேள்விப்படலம் 29)

இப்பாடலிலே

***"சாதலின் இன்னாதது இல்லை இனிது அதூ உம்***
***ஈதல் இயையாக்கடை "***

(குறள்: 230)

என்ற குறளின் கருத்து எடுத்தாளப்பட்டுள்ளது காணலாம்.

இராமனை அழைத்துச் செல்லும் வழியிலே காமனாச்சிரமம் குறுக்கிட்டது. அதன் வரலாறு கூறினார் முனிவர். சூரன் தேவர்களைக் கொடுமைப் படுத்தினான். ஒரு குழந்தையைத் தந்து சூரனை அடக்குவதாகக் கூறிய சிவபெருமான் யோகத்தில் அமர்ந்து விட்டார். யோகத்தினைக் குலைக்க மலரம்பு வீசினான் மன்மதன். சிவன் விழித்தார். மன்மதன் நீறானான். அவனது அங்கம் – அங்கசேதமானது. அவனும் அநங்கன் ஆனான். சிவன் யோகத்திலிருந்த இவ்விடத்தின் தூய்மையைச் சொல்ல முடியுமோ என்பதான பாடல் இது:

***"பற்று அவா வேரொடும் பசையறப் பிறவிபோய்***
***முற்று வா வுணர்வு மேன் முடுகினா ரறிவு சென்று***
***உற்ற வா னவனிருந்து யோகு செய் தனனெனிற்***
***சொற்றவா மனவதோ மற்றிதன் தூய்மையே"***

(தாடகை 30)

இப்பாடலிலே

***"பற்று அற்ற கண்ணே பிறப்பு அறுக்கும்மற்று***
***நிலையாமை காணப்படும்" –***

(குறள்: 349)

என்ற குறளின் சொற்றொடர் கையாளப்பட்டுள்ளது.

***"கற்றதனால் ஆயபயன் என் கொல்***
***வாலறிவன்"***

என்ற குறளில் வரும் 'வாலறிவன்' எடுத்தாளப் பட்டுள்ளதையும் காணலாம்.

மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள் கண்ணினைக் காக்கின்ற இமையெனக் காத்தனர். யாகம் இனிதே முடிவுற்றது. வழிநடை தொடர்ந்தது. இராகவன் பாதம் பட்டுக் கல்கனிந்தது. அகலிகை சாபவிமோசனம் பெற்றாள்.

***மைவண்ணத்து அரக்கி போரில்***
***மழை வண்ணத்து அண்ணலே உன்***
***கை வண்ணம் அங்குக் கண்டேன்***
***கால்வண்ணம் இங்குக் கண்டேன்***

என மாமுனி புகழ்ந்தார். மிதிலையை நோக்கித் தொடர்ந்தனர்.

"மையறு மலரின் நீங்கிய செய்யவள் இங்கிருக் கிறாள்" எனக் கொடிகள் என்னும் கைகளை நீட்டி ஒல்லைவா என்று கமலச் செங்கண் ஐயனை அழைத்தது மிதிலை. முனிவர் முன் செல்ல இளையவன் பின் தொடர நடுநாயகமாக நடக்கிறான் இராமன். அவனுடைய நடை நாகமும், நாகமும் நாணும் நடை. நகரின் அழகினைச் சுவைத்தவாறு சென்ற அவன் மேலே நிமிர்ந்து நோக்கினான் அங்கே......

***"என்னரு நலத்தினாள் இனையள் நின்றுழிக்
கண்ணொடு கண்ணிணை கவ்வி ஒன்றை ஒன்று
உண்ணவும் நிலை பெறாது உணர்வு மொன்றிட
அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்"***

(மிதிலை 35)

எண்ணிக் கணக்கிட முடியாத நலங்கள் நிறைந் தவள் சீதை, திருமகள் அவதாரம், கண் இணைகள் ஒன்றை யொன்று கவ்வின. உண்ணவும் நிலை பெறவில்லை, உணர்வு ஒன்றி விட்டது. தெய்வீகக் காதல்.

விதி வழி கூட்டியது. பருகிய நோக்கின் வழியே உணர்வு ஒன்றியது. நோக்கியது – நோக்கு எதிர் வாய்ச் சொற்கள் இல. பாசத்தாற் பிணித்தனர். வரிசிலை அண்ணலும், வாட்கண் நங்கையும் மாறிப்புக்கு இதயம் எய்தினார். பிரிந்தவர் கூடினால் பேசல் வேண்டுமோ என்றார் கவியரசர்.

தமிழரது அகத்திணை மரபின் வழிபட்ட காதல் இது. திருவள்ளுவரின்

***"கண்ணொடு கண்ணிணை நோக்கு ஒக்கின்
வாய்ச் சொற்கள் என்னபயனும் இல"***

(குறள்: 1100)

எனும் குறள் இங்கு பயின்றுள்ளது காணலாம்.

இரண்டாவது அயோத்தியா காண்டம் பன்னிரண்டு படலமுடையது.

ஆண்டு பல அறநெறியாட்சி செலுத்தினான் தசரதன். அவனுடைய கன்னத்திலே ஒரு நரைமயிர். இராவணன் செய்த தீமைபோல வெளித் தோன்றிற்று. "மன்னனே, அவனியை மகனுக்கு ஈந்துவிடு" என்றது. தனியே இருந்த தசரதன் வசிட்டரையும், மந்திரிமாரையும் அழைத்தான்.

அமைச்சர்கள் வந்தனர். அவர்கள் தம்முயிர்க்குறுதி எண்ணார். தலைமகன் வெகுண்ட போதும் நீதி விடாது செம்மையே மொழிவார், நல்லவும் தீயவும் நாடி நலம் விளைவிப்பார்.

***"உற்றது கொண்டு மேல் வந்து
உறுபொருள் உணரும் கோளார்;
மற்றது வினையின் வந்தது
ஆயினும் மாற்றல் ஆற்றும்
பெற்றியர்; பிறப்பின் மேன்மைப்
பெரியவர் அரிய நூலும்
கற்றவர்; மானம் நோக்கின்,
கவரிமா அனைய நீரார்"***

(மந்திரப்படலம் 09)

"நிகழ்ந்ததையும், நிகழப்போவதையும் உணரும் ஆற்றல் உள்ளவர்கள். வினையினால் வந்ததாயினும் அதனையும் மாற்றவல்ல முயற்சியுடையர். உயர் குடிப்பிறந்தவர். மேம்பாடுடையவர். அரிய நூல் பல கற்றவர்; மானத்தைக் காக்குமிடத்தில் கவரிமா அனையவர்கள்" என்பது கருத்து. அமைச்சரின் தகைமை பற்றிய இப்பாடலிலே பொய்யா மொழியில் வரும் சொற்றொடர் அமைந்திருப்பதைக் காணமுடிகிறது.

***"மயிர் நீப்பின் வாழாக் கவரிமான் அன்னார்
உயிர் நீப்பர் மானம் வரின்"***

– (குறள்: 969)

அரச ஆணை கேட்டுவந்த அமைச்சர்களுக்குத் தன்மனக் கருத்தினைக் கூறினான் தசரதன். மன்னுயிர்வாழ ஆட்சி புரிந்தேன். இனி என் உயிர்க் குதவியும் – உறுதியும் தேட விழைகிறேன். ஐம்பொறி களை அடக்கித் தவம் மேற் கொள்ள விரும்புகின்றேன். பிறவிப் பெருங்கடலை இறைவனடி பற்றி நீந்திக் கடக்க நினைவு கொண்டேன் – என்றான்.

***"துறப்பெனுந் தெப்பமே துணை செய்யாவிடின்
பிறப்பெனும் பெருங்கடல் பிழைக்கலாகுமோ?"***

(மந்திரப்படலம் 23)

இப்பாடலடியிற் சுட்டப்படும் கருத்து

***"பிறவிப் பெருங்கடல் நீந்துவார், நீந்தார்
இறைவனடி சேராதார்"*** –

(குறள்: 10)

என்னும் திருக்குறளை – நினைவூட்டுவது நோக்குக.

"நாடாள்க" – என்றான் தசரதன். சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை போன்றிருந்தது இராமன் முகம். "காடாள்க" என்றாள் கைகேயி. அவன் முகம் மும்மடங்கு பொலிந்தது. மன்னவன் பணி என்றாள் சிற்றன்னை. நும்பணிமறுப்பேனோ, என் பின்னவன் பெற்ற செல்வம் அடியேன் பெற்றதன்றோ என்றான் இராமன். மணிமுடிபுனைய வேண்டியவன் சடைமுடியும், மரவரியும் தரித்தான். சீதையும். இலக்குமணனும் அவனுடன் புறப்பட்டனர். அவ்வேளை அங்கு வந்தார் வசிட்டர். கலங்காத அவருள்ளமும் கலங்கியது. வருந்தினார் மனதுள்ளே.

"சூழினும் தான்முந் துறும்" – (ஊழ் 380) என்றகுறள் காணப்படுவதைக் காணலாம். "என்ன உன்னியும் விதியது வலியினுமிசைந்தார்" – (மந்திரப்படலம் 35) என்னும் பாடலிலும் இக்குறளின் கருத்தைக் காண்க.

கங்கைக் கரைவேடன் குகன். அவனைப் பார்த்து "எம்பி நின்தம்பி, நீ தோழன், மங்கை கொழுந்தி" – என்று உறவு பாராட்டினான் இராமன். பரதனால் இராமன் நாடிழந்தான் எனக் குகன் கோபத்தோடு இருக்கிறான். அவனைத்தேடி வருகின்றான் பரதன். அவனுடைய நோக்கத்தினைப் புரிந்து கொள்ளாத குகன் பலவாறு எண்ணுகின்றான்.

***"ஆழநெடுந்திரை ஆறு கடந்திவர் போவாரோ"***
(குகப்படலம் 15)

என்ற பாடல் படித்துச் சுவைக்க வேண்டியது. "உஞ்சிவர் போய்விடில் நாய்க்குகன் என்றெனை ஓதாரோ" – என எண்ணி "வேடுகொடுத்தது பாரெனுமிப்புகழ் மேவுதற்குத் தருணம் வாய்த்தது" – என மகிழ்ந்தான். அவ்வேளையிலே "பரதனுடைய படையெலாம் எலிப்படை, அவற்றை அழிக்கும் நாகம் நான்" எனக் குகன் கூறுகிறான்.

***"எலியெலாமிப்படை அரவம் யானென***
***ஒலி உலாம் சேனையை உவந்து கூவினான்***
***வலியுலாமுலகினில் வாழும் வள்ளுகிர்ப்***
***புலியெலாமொருவழிப் புகுந்தபோலவே"***
(கங்கை காண் படலம் 10)

இதில்
***"ஒலித்தக்கால் என்னாம் உவரி எலிப்பகை நாகம் உயிர்ப்பக் கெடும்"*** (குறள்: 763) என்ற குறளின் சொற்றொடரையும் கருத்தையும் புகுத்தியுள்ளமை புலனாகும்.

மூன்றாவது காண்டம் ஆரணிய காண்டம் பதினொரு படலம்.

இராமன் வனம் புகுந்தான். சீதையை விராதன் தூக்கினான். இராமனால் விமோசனம் பெற்றான் விராதன். அகத்தியர் முதலாம் முனிவர்கள் இராமனை வரவேற்றனர். அரக்கரின் கொடுமை கூறினர். "மறத்தல் வெகுளியை யார் மாட்டும் தீய பிறத்தல் அதனால் வருமென்று, செல்லிடத்தும் சினம் காக்கின்றோம்" – என்றனர்.

***"வேண்டின வேண்டினர்க்கு அளிக்கு மெய்த்தவம்***
***பூண்டுள ராயினும் பொறையினாற்றலால்"***
(அகத்தியப்படலம் 08)

என்ற பாடலிலே தவம் செய்வார் வேண்டியதை வேண்டியவாறு பெறுவர் என்பது பெறப்படுகின்றது.

***"வேண்டிய வேண்டியாங்கு எய்தலான் செய்தவம் ஈண்டு முயலப்படும்"***

(குறள்: 265)

இக்குறளின் சாயலை அப்பாடலிலே காண்க.

இராமனைக் கண்டாள் சூர்ப்பனகை. பஞ்சி ஒளிர் விஞ்சுகுளிர் பல்லவமனுங்க மஞ்ஞையென, அன்னமென, வஞ்சியென, நஞ்சமென வஞ்சமகள் வந்தாள், மூக்கறுந்தாள், மூளி உரனெரிந்து வீழ, நான் இருப்பதோ என அண்ணனிடம் முறையிட்டாள். அவளது நிலை கண்டோர் பலவாறு எண்ணினர். இவளை இது செய்தார் யாவர். அப்போது.....

***"முனிவர் வெகுளியின் முடிபென்றார்சிலரே"***
(மாரீசன்வதை 34)

– என்ற பாடலடி

***"குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி கணமேயும் காத்தலரிது"***

(குறள்: 29)

என்னும் குறளின் கருத்தை உள்ளடக்கியது.

இப்படலத்திலே விதியை வலியுறுத்தும் சொற்றொடர்களும், கருத்துகளும் விரவிக் காணப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| 1. | தருவது விதியே | (மாரீசன் 80) விதியே |
| 2. | விதியது வலியினான் | (மாரீசன் 86) விதியது |
| 3. | தேவியைத் தீண்டா | (மாரீசன் 208) விதி விளைவை |
| 4. | துஞ்சுவது என்னை | (சடாயு உயிர்நீத்தது – 15) விதியினானை |
| 5. | வந்திலர் மைந்தர் | (ஷ 140) விதியினார் |
| 6. | என்றுன்னி | (ஷ 152 ) விதியார் |
| 7. | என்றலுமிளைய | (ஷ 218 ) விதியின் |

இவை "ஊழிற்பெருவலியாவுள" (குறள்: 380) என்னும் குறளை அடியொற்றின.

நான்காவது கிட்கிந்தா காண்டம் பதினான்கு படலமுடைத்து.

சீதையைத் தேடிப் புறப்பட்டனர் இராமலக்குவர். உரிஷிமூக பருவதத்தில் பதுங்கி வாழ்ந்த பானு மகன் பயந்து விட்டான். அவனை அனுமன் தேற்றினான். இராமன் முன்தோன்றினான். மங்கலம் கூறி வரவேற்றுத் தன்னை அறிமுகம் செய்தான். இராமன் அவனைச் "சொல்லின் செல்வன்" எனப் பெயரிட்டழைத்தான். இலக்குவனிடம் அனுமனைப்பற்றிக் கூறும் போது "இவனது உருவுகண்டு பரிகாசம் செய்யக் கூடாது" – என்று கூறினான்.

*"மானியாம் படிவமன்று மற்றிவன் வடிவமைந்த"*
(மராமரப் படலம் 21)

– என்ற பாடலில்

*"உருவு கண்டு எள்ளாமை வேண்டும் உருள் பெருந்தேர்க்கு அச்சாணியன்னார் உடைத்து"* (குறள் 66) –

என்ற குறளின் கருத்துப் பொதிந்து வைக்கப் பட்டுள்ளது.

வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்குப் பட்டங் கட்டினர். முடிசூடிய சுக்கிரீவன் இராமன் அடியை முடிதாழ்த்தி வணங்கினான். அப்பொழுது இராமன் அவனுக்குப் புத்திமதிகள் பல புகட்டினான்.

உனது நாட்டினை அறவழியில் ஆட்சி செய். வாலியின் மகனை நின்மகனாக நினை. மந்திரிமார் மதி வழி நட என்பனவாய கூறிவரும் போது

*"நாயகன் அல்லன்; நம்மை நனிபயந்து எடுத்து நல்கும் தாய்" என, இனிது பேணி, தாங்குதி தாங்குவாரை; ஆயது தன்மையேனும், அற வரம்பு இகவா வண்ணம், தீயன வந்தபோது, சுடுதியால் தீயோரை"*
(அரசியல் 34)

என்று கூறுகின்றார். இது

*"கொலையிற் கொடியாரை வேந்து ஒறுத்தல் பைங் கூழ் களை கட்டதனோடு நேர்"* –
(குறள் 550)

என்ற குறளையும்

*"குடிபுறங்காத்து ஓம்பிக் குற்றம் கடிதல்*
*வடுஅன்று வேந்தன் தொழில்"*
(குறள் 449)

என்று குறளையும் தழுவியுள்ளமை உணரலாம்.

சிலப்பதிகாரத்தில் கண்ணகியிடம் "கள்வனைக் கோறல் வெள்வேற் கொற்றம்" – எனப் பாண்டியன் கூறியது இவ்விடம் நினைத்தற்பாலது.

சீதையைத் தேடிக் காணவேண்டிய கடமையில் கரிசனையற்றவனானான் சுக்கிரீவன். இலக்குவன் சுக்கிரீவனைக் காணப் புறப்பட்டான். அங்கதனும் அனுமனும் தரையிடம் சென்று கூறினர். அவர்களுக்குத் தாரை.

*"நொய்தில் அன்னவை நீக்கவும் நோக்குதிர்*
*உய்திர் போலும் உதவி கொன்றீர் எனா"*
(கிட்கிந்தை 28)

என்று கேட்டாள். இதில்

*"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வு இல்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு"*
(குறள் 110)

என்ற குறளின் சாரம் பொதிந்திருப்பதை உணரமுடிகிறது.

ஐந்தாவது சுந்தரகாண்டம் 15 படலங்களைத் தன்னகத்தே அடக்கியுள்ளது.

அசோகவனத்தில் சீதை சிறை. அரக்கியர் காவல். பெண்ணெனப் பெயர் கொடுதிரியும் கூற்றினர். அவர்களிடை தூயவள் ஒருத்தி. சீதைக்குத் தாயினும் இனியவள். அவள் திரிசடை.

வன்மருங்குல்வாள் அரக்கியர்; வெயிலிடை வைத்த விளக்கெனச் சீதை. எண்ணாது எண்ணி உறாதன உற்றாள்.

இராவணன் சீதையிடம் வந்தான். இறைவனிடம் இரந்தறியாதவன். ஆசையால் அவன் உயிர் அழிந்தது. கூசிக் கூசிக் கூறினான். இறுதியில் முடியின் மேல் கை வைத்துப் படியின் மீது வீழ்ந்து "அடிமையை ஏற்றுக் கொள்" – எனச் சீதையிடம் இரந்து வேண்டினான்.

"ஏ துரும்பே" என்று சினந்தாள். சீதை நயமூட்டியும், பயங்காட்டியும் பேசினாள்.

அஞ்சினை; ஆதலால் வஞ்னை மான் ஏவினாய்; மாயையால் மறைந்து வந்தாய்; பறவைக்குத் தோற்றனை. கடிக்கின்ற பாம்பும் மந்திரம் கேட்கும் நீயோ அழியப் போகின்றாய் என்றாள்.

*"கடிக்கும் வல்லரவும் கேட்கும்*
*மந்திரங் களிக்கின்றோயை*
*அடுக்கும் ஈது அடாதென்றான்ற*
*ஏதுவோடறிவு காட்டி*
*இடிக்குநரில்லை யுள்ளா*
*ரெண்ணிய தெண்ணியுன்னை*
*முடிக்குந ரென்றபோது*
*முடிவன்றி முடிவதுண்டோ"*
(காட்சி : 136)

இக்கருத்தை

*"இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்*
*கெடுப்பார் இலானும் கெடும்"* –
(குறள் 448)

என்னும் குறளிலே காண்க.

இராகவன் தூதன் அனுமான் சீதையைத் தேடினான், கண்டான். அதனால் ஆடினான், பாடினான், ஆண்டும் ஈண்டும் பாய்ந்தோடினான், உலவினான்.

உவகைத் தேனுண்டான். சீதைக்கு உருக் காட்டினான்; துணையாழி கொடுத்தான். குளாமணி பெற்றான். இலங்கையை எரியூட்டி இராமன் முன் எய்தினான். "கண்டனன் கற்பினுக் கணியைக் கண்களால்" என்றான். இராமன் உயிர் மீண்டது. விற்பெருந்தடந் தோள் வீர,

*"உன்பெருந்தேவியென்னும்*
*உரிமைக்கு முன்னைப் பெற்ற*
*மன்பெரு மருகியென்னும்*
*வாய்மைக்கும் மிதிலை மன்னன்*
*தன் பெருந்தனயை யென்னும்*
*தகைமைக்கும் தலைமை சான்றாள்*
*என்பெருந்தெய்வமையை*
*இன்னமும் கேட்டி யென்பான்"*

(திருவடிதொழுத படலம் 29)

பெருமை மிக்க மனைவியைப் பெற்ற தலைவனே இகழ்வார் முன் ஏறுபோல் பீடு நடையிடலா மென்றான்.

*"புகழ்புரிந்த இல்லிலோர்க்கு இல்லை இகழ்வார் முன் ஏறுபோல் பீடு நடை"*

(குறள் 59)

என்ற வள்ளுவர் வாக்கைப் கம்பர் பாடலில் காணமுடிகிறது.

கம்பர் பாடிய ஆறாவது காண்டம் உயுத்த காண்டம் பதினெட்டுப் படலமுடையது.

இராவணன் தம்பி கும்பகருணன் – மலைபோன்ற உடல்; இதயம். இராமன் படையுடன் வந்தான் எனக் கேட்ட கும்பகருணன் ஆனதோ வெஞ்சமர். திட்டியின் விட்டமன்ன கற்பின் செல்வியை விட்டிலையோ, இது விதியின் வன்மையே என்றான். இராவணனுக்கு அறிவுரை கூறும் போது

*"புலத்தியன்வழி முதல் வந்தபொய்யறு*
*குலத்தியல் பழிந்தது கொற்றம் முற்றுமோ*
*வலத்தியல் அழிவதற் கேது மையறு*
*நிலத்தியல் நீரிய லென்னு நீரதால்"*

(கும்பகருணன் வதை 82)

என்னும் பாடலிலே

*"நிலத்தியல் பால் நீர் திரிந்து அற்றாகும் மாந்தர்க்கு இனத்தியல்பதாகும் அறிவு"* –

(குறள் 452)

என்னும் குறள் முழுமையாக எடுத்தாளப்பட்டுள்ளது.

இராவணன் அமைச்சருடன் ஆலோசனை நடத்தும் போது.

*"ஊறுபடை ஊறுவதன் முன்னமொருநாளே"*

(மந்திரப்படலம் 56)

என்ற பாடல் மூலம் பகைவர் வலிமையுறுமுன் அழிக்க வேண்டும் என்பது வலியுறுத்தப்படுகிறது.

*"இளைதாக முள்மரங்கொல்க களையுநர் கைகொல்லும் காழ்த்த இடத்து"*

(குறள் 879)

இக்குறளை உள்வாங்கி வெளியிட்ட பாடல் அஃது.

இராவணனுக்கு அறிவுரை புகட்டினான் விபீடணன். இரணியன் அழிவையும் சுட்டினான்.

*"காடுபற்றியுங் கனவரை பற்றியுங் கலைத்தோல் மூடி பற்றியும் முண்டித்தும் நீட்டியும் முறையால்"*

(இரணியன்வதை 31)

என்ற பாடலிலே பொய்த்தவவேடம் பயனற்றது என மொழிந்தான். "முண்டித்தும் நீட்டியும்" என்ற சொற்றொடர்

*"மழித்தலும் நீட்டலும் வேண்டா"*

(குறள் : 280)

என்ற குறளை நினைவூட்டுகிறது.

இராமனிடம் அடைக்கலம் புகுந்தவன் விபீடணன். பலரும் பலவாறு கூறினர்.

*"வண்டுளரலங்கலாய் வஞ்சர் வாண்முகங் கண்டதோர் பொழுதினிற் றெரியும்"*

(விபீடணன் அடைக்கலம் 90)

என்றான் அனுமன். இராமன் விபீடணனுக்கு இருக்கை ஈந்தான். விபீடணன் முகம்

*"அழிந்தது பிறவியென்று அகத்தியன் முகத்துக் காட்டியது".*

(ஷை 141) –

என்று கூறி

*"அகத்தினழகு முகத்தில் தெரியும்"* என்று நிலை நாட்டுகிறார் கம்பர். *"அடுத்து காட்டும் பளிங்கு"*

(குறள்: 706)

என்ற குறளை அடியொற்றியவை இவை.

அனுமனைக் கூறும்போது, அனுமனது நிலையை,

*"வணங்கிய சென்னியன் மறைத்தவாயினன் நுணங்கிய கேள்வியனுவல்லதாயினான்"*

(விபீடணன் அடைக்கலம் 87)

என்றார் கம்பர்.

*"நுணங்கிய கேள்வியர் அல்லால் வணங்கிய வாயினராதல் அரிது"*

(குறள்419)

என்பது பயின்றுள்ளது.

கும்பகருணன் செஞ்சோற்றுக்கடன் கழிக்கப் போருக்குப் புறப்பட்டான். விபீடணன் அவனை இராமன் பக்கல் அழைக்க வந்தான்.

"நவையிலை, ஏன் வந்தாய், அமுதுண்பாய் நஞ்சுண் பாயோ பிறன்மனை நோக்குவேமை உறவெனப் பெறுதி போலாம்" –

(கும். வதை 134)

என்றான் அண்ணன்.

*"பிறன்மனை நோக்காத பேராண்மை"*

(குறள் – 148)

புலப்படுகின்றது.

இறக்க நேரினும் ஒழுக்கம் ஓம்ப வேண்டும் என்பதை

*"வேதநூன் மரபுக் கேற்ற ஒழுக்கமே வேண்டும்."*

(கும். வதை 141)

என்ற வரியில் கும்பகருணன் கூறும் போது

*"ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்"*

(குறள் 131)

வள்ளுவர் காட்சி தருகின்றார்.

இராமனிடம் சேர மறுத்தான் கும்பகருணன் – தம்பி தனியே மீண்டான். குலத்து மானம் தீர்ந்திலன் என இராமனிடம் கூறினான்.

*''செய்திறன் இனிவேறுண்டோ*
*விதியை யார் தீர்க்க கிற்பார்"*

(கும். வதை 171)

என்றான் இராமன். இங்கும் "ஊழிற் பெருவலி" என்ற குறள் வெளிப்படுகின்றது.

உயுத்தகளம், இந்திரசித்தன் கடும்போர் நடத்தி னான். மாலையாயிற்று. மாயப் போர் செய்தான். நாக பாசம் ஏவினான். கட்டுண்டனர் வீரர். இராவணாதியர் மகிழ்ந்தனர். இராமன் பக்கம் துக்கம். அப்பொழுது கருடன் சமீபித்தான். கருடனைக் கண்ட நாகங்கள் விலகின. கட்டுண்ட வீரர் பிழைத்தனர். இராமன் கருடனுக்கு முகமன் கூறினான். விடை பெற்றுப் போனான்.

*"ஆரியன் அவனை நோக்கி*
*ஆருயிர் உதவி, யாதும்*
*காரியம் இல்லான் போனான்;*
*கருணையோர் கடமை ஈதால்;*
*பேர் இயலாளர், 'செய்கை*
*ஊதியம் பிடித்தும்' என்னார்;*
*மாரியை நோக்கிக் கைமாறு*
*இயற்றுமோ வையம்? என்றான்.*

(நாகபாசப்படலம் 271)

இப்பாடலில்

*"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரி மாட்டு என் ஆற்றுங் கொல்லா உலகு"*

(குறள்: 211)

என்ற குறள் செல்வாக்குச் செலுத்தியுள்ளது காண்க. இவைபோல் இன்னும் பல காட்டலாம். விரிவஞ்சி விடுத்தாம்.

திருத்தொண்டர் புராணம் பாடியவர் சேக்கிழார். அநபாயன் அவருக்குக் கவரிவீசிய அரசன். ஞானம், மலை, கடல் என்பவற்றினும் பெரியவை எவையென்ற அரசன் வினாவுக்கு பின்வரும் முதலையுடைய மூன்று குறட்பாக்களை விடையாக எழுதியவர் சேக்கிழார்.

1. "காலத்தினாற் செய்த நன்றி" (ஞானம்)
   செய்நன்றியறிதல் 102
2. "நிலையிற்றிரியாது" (மலை)
   அடக்கமுடைமை 124
3. "பயன்துக்கார்" (கடல்)
   செய்ந்நன்றியறிதல் 103

இச் செய்தியைக் கம்பர் தமது நூலான திருக்கை வழக்கத்திலே

"............................................ காவலன்
மண்ணிற் கடலின், மலையிற் பெரிதென் என எண்ணியெழுதிக் கொடுத்த ஏற்றக் கை" – என்று புகழ்ந்துள்ளார். வள்ளுவர் குறள் மீது கம்பர் கொண்டிருந்த மதிப்பு இங்கேயும் துலங்குகிறது.

இது பற்றிய குறிப்பினையே சபாபதி நாவலர் "சிதம்பர சபாநாத புராண"த்திலே கடவுள் வாழ்த்து 16ஆம் பாடலில்

*"ஞாலமலை கடல் தன்னிற் பெரியதெது வென*
*வெடுத்து ஞானம்மாள் செங்*
*கோலனநபாயன் வினவிய முத்திறக்*
*குறிப்பைக் குறிப்பிறேர்ந்து"* –

என்று பாடினார்.

"தோண்டச் சுரக்கும் மணற்கேணி" – என்பதுபோல் அறிவுக் கருவூலமாகிய திருக்குறளையும் கற்பனைக் களஞ்சியமான கம்பராமாயணத்தையும் நுணுகி ஆய்வு செய்யும்போது கம்பரில் வள்ளுவரைக் கண்டு களிப்புறலாம்.

# சூர்ப்பணகை ஒரு அவல பாத்திரம்

பண்டிதர் · க · சச்சிதானந்தன்

### அறிமுகம்

**தொ**ல்காப்பியனார் வகுத்த மெய்ப்பாடுகள் எட்டனுள் அவலமும் ஒன்று. இலக்கியங்களில் அவ்வவல மெய்ப்பாடு பயின்று வருகின்றது. நம் உண்மை வாழ்க்கையில் அவலத்தைத் துய்க்க, நாம் விரும்புவதில்லை. ஆனால், இலக்கியங்களிலும் நாடகங்களிலும் அவல மெய்ப்பாட்டினைப் பெரிதும் இரசிக்கிறோம். நம் வாழ்க்கையில் ஒரு உற்றார் இறந்ததற்காகக் கண்ணீர் விட்டுத் தாங்காத துன்பத்தில் ஆழ்கிறோம். ஆனால் அரிச்சந்திரன் நாடகத்தில் சந்திரமதியின் புலம்பலைக் கேட்டுத் தாரை தாரையாகக் கண்ணீர்வடிக்கிறோம். ஆனால் நாடக முடிவில் நன்றாயிருக்கிறது நாடகம் என்று அதனை இரசிக்கிறோம்.

தொல்காப்பியனார் அவல மெய்ப்பாட்டுக்குரிய பொருளாக நான்கைக் கூறுகின்றார்.

*"இளிவே இழவே அசைவே வறுமையென*
*அசைவில் வந்த அவலம் நான்கே"*

ஒருவன் தன்னிலையின் குறைபாட்டினால் வெறுக்கப்பட்டு இளிபொருளாக மாறும்போது அவன் அவலமெய்பாட்டுப் பொருளாக மாறுகிறான். ஒரு தலைவன் எல்லா நற் குணங்களும் பொருந்திய வனாக இருப்பினும் ஒரு சிறு களங்கத்தினால், தன் உன்னத தானத்திலிருந்து மிகவும் இளிக்கப்பட்டுக் கேடெய்துகிறான். நளன் சூதாடும் களங்கத்தால் இளிநிலையடைந்தான்; இராவணன் பிறன்மனை நயந்தகளங்கத்தால்அவலபாத்திரமாயினான். கோவலன் கலையுணர்வும் கற்பும் ஒருங்கே பொருந்திய ஒரு இலட்சியப் பெண்ணை மனத்திற் கொண்டு நிஜ உலகி அவள் கிடையாமையால் இரு பெண்களிடையே ஊசலாடி அவல பாத்திரமாயினான். சேக்ஸ்பியரின் நாடகங்களில் ஹம்லெற், ஒதெல்லோ, யூலியஸ்சீசர், அவலபாத்திரங்களிற் சில. இராமாயணத்தில் கைகேயி ஒரு அவல பாத்திரம், தசரதன் ஒரு அவல பாத்திரம். சூர்ப்பணகையும் ஒரு அவல பாத்திரமே என்று காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### மன்னிக்க வேண்டும்

இக்கட்டுரை எழுதுகையில் ஆசிரியர் மிகவும் சங்கடப்பட வேண்டியிருக்கிறது. எடுத்த கட்டுரையின் நோக்கத்திற் கேற்ற கம்பனின் கவிதைகளைக் காட்டுங்கால், அவற்றிற் சொட்டும் நயத்திலே, தன்னைப்பறிகொடுத்துவிடாமலிருக்க, எடுபடும் மனத்தைக் கட்டுப்படுத்த வேண்டியிருக்கிறது. அவன் கவிதையின் ஒவ்வொரு வரியினதும் சுகானுபாவத்தை விட்டு, பாத்திர குணசீல ஆராய்வு செய்ய மனத்துக்குக் கடிவாளம் போடினும் பிய்த்துக் கொண்டு செல்லப் பார்க்கிறது. இடையிடையே அந்தச் சுகானுபவத்தால், பாதையைவிட்டு மருங்குகளிற் சென்றால் வாசகர்கள் என்னை மன்னிக்க வேண்டும். அது கவிதை நயத்தின் பரவசம்.

### பாவியேனையும் பார்க்குங்கொலோ

சூர்ப்பணகை ஒரு அவல பாத்திரம். அழகான ஒரு உள்ளத்தையும், அழகற்ற ஒரு வெளித் தோற்றத்தையும் சூர்ப்பணகை கொண்டிருந்தாள். அதுவே அவள்அவலத்துக்குக் காரணம்.அழகினைக் கண்டு அதனை இரசித்துப் பரவசப்பட்டு அதிலே எடுபடும் மென்மையான ஒரு அழகுள்ளம் படைத்தவள் சூர்ப்பணகை. ஆனால் அவள் வெளித்தோற்றம் அவ்வழகிற்கேற்பப் பொருத்தமாய் அமையவில்லை. அழகினால் எழுந்த ஆசையை அடைய அதற்கேற்ற புற அழகைப் பெறாததே அவள் அவலத்துக்குக் காரணம். புற அவலட் சணத்திற்கேற்றதும் அழகினைச் சுவைக்க முடியாததுமான ஒரு மனத்தைப்

பெற்றிருந்தாளானால் அவள் கதையே வேறாய் இருக்கும். அவள் அவலப்பட்டு வருந்துகிறாள்.

***காவியோ கயலோவெனும் கண்ணிணைத்***
***தேவியோ மலர் மங்கையிற் செவ்வியாள்***
***பாவியேனையும் பார்க்குங்கொலோ வெனும்***
***ஆவி தேயினும் ஆசையின் தேய்விலாள்***

(சூர்ப்பணகைப் ப. 87)

முதலில் இராமனைக் கண்டாள் சூர்ப்பணகை. பின்புதான் சீதையைக் கண்டாள். சீதையின் அழகோடு தன் புற அழகை ஒப்பிடுகிறாள், அட ! என்ன வித்தியாசம் ! இப்படியுமா பிரமன் என்னைப் படைத்தான். அவனைப் போல ஒரு வஞ்சகன் இருக்கவே முடியாது. அவள்கண்கள் நீலோற் பலங்களோ கயல்மீன்களோவென அழகை அள்ளிச் சொரிகின்றன. அவளோ, திருமகளுக்குத் திருமகளாக அழகு பொழிகின்றாள் .பாவியேனையும் பார்க்குங் கொலோ. "இந்தத் திருமகள் பக்கலிலிருக்க பாவியாகிய என்னையா பார்க்கப் போகின்றான், இராமன். சீதையைப் பார்க்கிறாள்; பின்பு தன்னைப் பார்க்கின்றாள். இந்த அழகில் ஒரு துளியையாவது நான் பெற்றேனில்லையே!'' என்ற பாவம் தான் 'பாவியேன்' என்று சீதையைக் கண்டு சொல்லச் செய்கிறது. பின்புதான் " அழகிற்கு எல்லையில்லை" யென்று எண்ணுகிறாள். "அழகிற்கு இவ்வளவு எல்லையின்றியிருக்க, ஒரு துளியைத் தானும் நான் பெற்றேனில்லையே. நான் தவம் செய்யவில்லையே' என்று அவள் மனம்புலம்புகிறது. ' பாவியேன்' என்ற சொல்லை மூன்றாமடியின் முதலில், எந்தவித அடைமொழியுமின்றி எதுகையின் அழுத்தத்தோடு வனைந்த கம்பனின் கவி அவள் இதயத்தை எடுத்துக் காட்டுகிறது. காவியோ, கயலோ, தேவியோ என்ற சொற்களில் ஒ! என்ற அவலக் குரல் ஒலிக்கின்றது. அவள் மனத்தின் சோகத்தை எடுத்துக் காட்ட அமைத்த ஓசை, சூர்ப்பணகையின் உள்ளத்தின் எதிரொலியே. மூன்றாவது அடி வரை தொடர்ந்து வந்த கவியின் கருத்தும் ஓசையின் அசைவும், 'என' என்ற சொல்லிற் சிறிது நிற்கிறது. நான்காவது அடியில் கருத்தும் ஓசையும் ஒன்றையொன்று தழுவி, அவளின் சோக உள்ளத்தை மேலும் வனைகிறது. ஆசையின் தேய்விலாள் என்று முடிக்கிறார் கம்பர். அழகுணர்வால் எடுபட்ட உள்ளம்; அதனால் எழுந்த ஆசை; முடியாத ஆசையென்று உள்ளம் அடக்க அடக்க உயிர்தான் தேய்கிறது. அப்படியிருந்தும் அந்த ஆசை தேயவில்லையே! ஆசை பெருகுகிறது. அதுதான் அவலம்.

## சூர்ப்பணகையைப் போல இராமனின் அழகை இரசித்தவர் யாருமில்லை

கம்பன், இராமனின் அழகை எத்தனையோ பாத்திரங்களின் வாயிலாக வெளியிட்டிருக்கிறான். ஆனால், சூர்ப்பணகையின் வாயினாலேதான் முழு அழகையும் சொல்லும்படி விட்டிருக்கிறான். மிதிலை மாடத்தின் உப்பரிகையிலிருந்து, சீதை இராமனைப் பார்க்கின்றாள் " அண்ணலும் நோக்கினான். அவளும் நோக்கினாள். பின்னர் இராமன் மறைந்த வழியே பார்க்கின்றாள். அவன் சென்றபின் அவன் அழகும் பார்வையும் அவள் உயிரையே கொள்கிறது. அங்கு இரவிலே அவள்புலம்பும் போதெல்லாம், இராமனின் அழகைப் பாதாதி கேசமாக வருணிக்க வில்லை; அங்கமங்கமாக வருணிக்க வில்லை.

ஆனால், சூர்ப்பணகையோ ஒவ்வொரு அங்கத்தையும் வெவ்வேறாக இரசிக்கிறாள். உச்சி தொடக்கம் உள்ளங்கால் வரையும் ஒவ்வொரு அங்கத்திலும் அழகு காண்கிறாள். அவனுடைய குஞ்சி, கண்கள், முகம், கைகள், தோள், மார்பு, அரை, பாதம் என ஒவ்வொரு அங்கத்தையும் தனித்தனியாகக் கண்டு முழு அழகிலும் மனம்பறி போகிறாள். இராமன் அயோத்திமாநகர வீதியிற் சென்றிருக்கிறான். அப்பொழுது பெண்கள், அவன் அழகில் மருண்டார் கள்.

***"சாளரம் தோறும் தோன்றும்***
***சந்திர உதயங் கண்டார்"***

***" சாரளத்திலும் பூத்தன தாமரை மலர்கள்"***

***" தோள் கண்டார் தோளே கண்டார்***
***தொழுகழற் கமலமன்னதாள் கண்டார்***
***தாளே கண்டார்........"***

யாரும் வடிவினை முடியக் காணவில்லை

ஆனால் சூர்ப்பணகையின் வாயினால் இராமனின் அழகு முடிவுற வெளிவருகிறது.

***"தொடையமை நெடுமழைத் தொங்கலா மெனக்***
***கடை குழன்றிடைநெரி கரிய குஞ்சியைச்***
***சடையெனப் புனைந்திலன் என்னிற்றையலார்***
***உடையுயிர்........"***

சூர்ப்பணகை ப. 23

முதல் இரண்டு அடிகளும் இராமனின்

குஞ்சிக்கே அடைமொழியாம். கரிய மேகங்கள் சுருள் சுருளாக இருப்பதே ஒரு அழகு. ஆனால் அவை தொடுக்கப்பட்ட மாலைபோலத் தொங்குகின்ற வையானால் அவ்வழகை இவன் தாழ்ந்த குஞ்சியிலேதான் காணலாம். கன்னங்கள் இரண்டிலும் அலையலையாகச் சில சுருள் மயிர்கள் இருக்கின்றனவே அவை உள்ளத்தையே கொள்ளுகின்றனவே. இந்தக் குஞ்சியைத் தவ சிரேட்டர் முடிவது போல சடையாக முடிந்திருக்கிறானே. அதனாற்றான் பெண்கள் உயிர்தப்பியிருக்கின்றார்கள் போலும். அன்றி அ ரசகுமாரன் போல அவிழ்த்து விவானேயானால் தையலார் உயிர், உடையும், என்ற கம்பனின் சொல்லை உற்று நோக்குக. கண்கள் நோக்குகிறாள்.

***நவம் செயத்தக்கதோர் நளினநாட்டத்தான்***
***தவம் செயத் தவம்செய்த தவமென்னென்கிறாள்.***

சூர்ப்பணகை ப. 18

கண்களை "நளின நாட்டம்" என்று ஆசைப்படும் சூர்ப்பணகை ஒரே சொல்லில் அக்கண்களின் அழகை வெளிப்படுத்துகிறாள். சிலருடைய அழகோ, பார்க்கப்பார்க்கப் புளித்து விடும், அலுத்துவிடும். அதன்மேற் புதுமை கிடையாது. ஆனால் இராமன் கண்களோ, பார்க்கப்பார்க்க ஒவ்வொரு கணமும் புதிது புதிதாக அழகைச் சொரிகின்றனவே. இந்த அழகுதான் தெவிட்டாத அழகு

***" அறிதோறறியாமை கண்டற்றால் காமம்***
***செறிதோறும் சேயிழை "மாட்டு"***

என்று " வள்ளுவன் கூறிய பெண்ணழகுக்கு இது பொருத்தமான ஆணழகு போலும்" என்கிறாள். நாம் ஒன்றை அறிய அறியத்தான் இன்னும் எவ்வளவு அறியவேண்டும் என்று தோன்றும். அடிவானம் போல அறிவின் எல்லையும் விரிந்து செல்லும். ஒரு போதும் நிற்காது. அவ்வாறே இவன் கண்ணழகும் பார்க்கப் பார்க்கப் புதிது புதிதாக அழகைத்தரும் என்கிறாள் சூர்ப்பணகை. தோளைப்பார்க்கிறாள்

***தோளொடு தோளிணை தொடர்ந்து நோக்குறின்***
***நீளிய வல்லகண் நெடிது மார்பென்றாள்.***

சூர்ப்பணகை. ப. 16

இவன் தோளிணைகளை முன்னொருகால் மிதிலையிலே கண்ட பெண்களின் கண்கள் நீண்டன வல்ல. அதனாற் போலும் தோள் கண்டார். தோளே கண்டார். சூர்ப்பணகை பிரலாபிக்கின்றாள் அழகின் ஆராமையினால். இவனுடைய ஒரு தோளிலிருந்து மற்றத் தோள்வரை செல்வதற்கு முன்கண்களின் பார்வைப்புலம் முடிந்துவிடுகிறது. இரண்டு கண்களின் விசாலமும் போதாதே. அவன் தோள்களோ தொடர்ந்து பார்க்கினும் முடியாதவையாக அகன்று செல்கின்றனவே ! இந்த விழிகளை ஒரு காதின் அருகே சரித்து ஆரம்பித்தாலும், நடுத்தோள்களைப் பார்க்குமவ்வளவில், விழிகள் மறு காதின் கரைக்குவந்து விடுகின்றனவே. தொடர்ந்து பார்க்க முடியாமல் இருக்கின்றேன். பாதியில் விட்டு விட்டு விழிகளை அரைமார்பிற் பொருத்திப் பார்க்க வேண்டியிருக்கிறதே என்று விழிகளின் நீளம் போதாமையைக் குறித்துக் கவலை கொள்கிறாள். நீளிய அல்ல கண், நெடிது மார்பு என்கிறாள்.

## அரையைப் பார்க்கிறாள்

ஆக , அந்த இடையிலே பொருந்தியிருப்பதற்குப் பட்டுகளும், பீதாம்பரங்களும் தவம் செய்ய வில்லையே! அந்த மரவுரிதான் தவம் செய்ததோ!

***நற்கலை மதியென வயங்கு நம்பிதன்***
***மற்கலை யரையுறப் பொருந்தி மாணுற***
***வற்கலை நோற்றன மாசி லாமணிப்***
***பொற்கலை நோற்றில போலும்.***

சூர்ப்பணகை . ப. 22

மரவுரி தவம் செய்தது அவன் அரையிலே பொருந்தி அதைத் தொட்டு அனுபவிக்க; பொன்னாடை தவம் செய்யவில்லை. அது போல நானும் தவம் செய்யவில்லை என்ற ஏக்கம் பாட்டிலே தொனிக்கின்றது .

## பாதத்தைப் பார்க்கின்றாள்.

பூமிதேவியும் இவன்பாதம்படுதலால் இரகசியமாக அவன் அழகைத் தொட்டு உள்ளே மனம் புல்லரிக்கிறாளோ, வெளியிலே காட்டாமல் அந்தரங்கமாக இவன் மேனியைத் தொட்டு அழகை இரசிக்கும் பூமாதேவிக்கு அதனை வெளியே காட்டாமல் மறைக்க முடியவில்லையே. அவள் மேனிபுல்லரிப்பதனால் பூமியானவள் தன் உள்ளத்தையல்லவா பகிரங்கமாகக் காட்டி விடுகிறாள். இங்கே குத்திட்டு நிற்கும் அறுகம் புற்களெல்லாம் பூமிதேவியின் புல்லரிக்கும் உரோமங்களல்லவா அவையேன் இப்படிக் குத்திட்டு நிற்கின்றன. இவன் பாதம்படுவதால் ஏற்படும் புல்லரிப்பினாலல்லவா. இராமனின் பாதம்பட புல்லரிக்கும் பூமியும் ஒரு பெண்

தானே. அவளுடைய பெண்மை நன்றாயிருக்கிறது என்கிறாள் பரிகசிப்புடன்.

***உடுத்த நீராடையள் உருவச் செவ்வியள்***
***பிடித்தகு நடையினள் பெண்மை நன்றரோ***
***அடித்தலம் தீண்டலின் அவனிக் கம்மயிர்***
***பொடித்தனபோலுமிப்புல்லென் றுன்னுவாள்***
சூர்ப்பணகை ப. 19

இந்தப் பூமியானவள் மானங்காக்கின்ற வளல்லவா; இந்தக் கடலை ஆடையாக வல்லவா உடுத்திருக்கின்றாள். அன்றியும் அழகுள்ள வளல்லவா; பெண்யானை போன்ற நடையையுடையவள் அல்லவா. இவன் பாதம்பட்டு பூமிப் பெண் இப்படிப் புல்லரிக்கலாமா? மானமில்லையா? ஆடையேன் உடுத்தியிருக்கிறாள். இவள் பெண்மை நன்றாயிருக்கின்றது. இவள் மேனி குத்திட்ட அறுகம் புல்லாகப் புல்லரிக்கின்றதே என்கிறாள். அப்படியானால், நான் மாத்திரம் இவன் அழகைப்பருகிப் புளகாங்கிதம் கொள்வது தவறா. 'அடித்தலம் தீண்டலின்' சும்மா தொட்ட மாத்திரத்திற் புல்லரிக்கின்றாளே.

இவ்வாறு நயந்தவள், அவன் தோள்களில் நட்ட கண்களைப் பறிக்கமுடியாது தவிக்கின்றாள்.

" ஊன்றிய கண்களைப் பறிக்கவோர் ஊற்றம் பெற்றிலள்". ஆராமையால் நெடிது பார்த்தபடியே நிற்கிறாள். அவன் தோள்களிற் கண்களைப்புதைத்து விட்டாள். ஊன்றிய கண்கள். என்பதனாற் பெறுவதென்ன இனிமேல் எடுக்கப் போவதில்லை என்ற எண்ணத்தோடு புதைத்த கண்கள். 'பறித்தல்' மனமில்லாது வலிந்து எடுத்தல். கண்களை மீட்டுப் பிடுங்கி எடுப்பதற்கு உளவலிமையில்லாது தயங்குகிறாள் சூர்ப்பணகை.

### சீதைபார்த்த விதம்

சீதைக்கு இராமனின் நீலமேனியே முதலில் கண்ணுக்கு விருந்தாகின்றது. அதன்பின் அகன்ற அவன் மரகத மலைபோன்ற மார்புகள் கவருகின்றன. இந்நீலநிறத்தின் சொல்லொணா அழகினுள்ளே, தாமரையின் மென்செம்மை அப்படியே உள்ளத்தை அள்ளிக் கொள்கின்றது. இராமனின் நீலமேனியின் முழுமை தரும் காட்சியை முதலிற் கண்டு பின்பு மார்பு, கண் என்னும்பகுதிகளுக்கு வருகிறாள். அப்பகுதிகளிலிருந்து பின்பு முழு வடிவத்துக்குச் செல்கிறாள். இறுதியில் மேகமானது வானவில்லோடு விளங்கும் பொழுது தோன்றும் அழகே அவள் கண்முன் நிற்கின்றது.

***அல்லினை வகுத்ததோர் அலங்கற் காடெனும்***
***வல்லெழு அல்லவேல் மரகதப் பெரும்***
***கல்லெனும் இருபுயம் கமலம் கண்ணெனும்***
***வில்லொடும் இழிந்ததோர் மேகம் என்னுமால்.***
மிதிலைக்காட்சி ப. 53

'வில்லொடும் இழிந்ததோர் மேகம் 'என்கிறாள். மழை மேகத்தோடு பொருந்தியிருக்கும் வான வில்லுக்கும் மேகமேனியில் சுமந்திருக்கும் வில்லுக்கும் பொருந்தவே வில்லோடும் எனக் கம்பர் பொருத்தமாக அமைத்துள்ளார்.

அதன்பின் முழுமையழகில், அவள் உயிரைப் பறிக்கும் அங்கங்களைக் குறிப்பிடுகிறாள். அங்கே சூர்ப்பணகையைக் கவர்ந்த குஞ்சி சடையாகக் கட்டப்பட்டது. இங்கே அரசிளங்குமரனுக் கேற்பத் தாழ்ந்து நிற்கும் பின் மயிர், இருளினை மாலையாகக் கட்டப்பட்டது போலக் காணப்படுகிறது; அதனை 'இருண்மாலைக் காடு' என்கிறாள் சீதை. மரகத மலைபோன்ற இரண்டு தோள்களின் பின்னணியில் கமலக்கண்களின் அழகைப் பருகுகிறாள். பின்னர் அதே குஞ்சியை 'இந்திர நீலமொத்து இருண்ட குஞ்சி 'யென்கிறாள். அந்த இருண்ட குஞ்சியின் பின்னணியில் சந்திரவதனம் அழகு செய்கிறது.

இன்னும் கீழ்நோக்கி அவள் பார்வை செல்கின்றது. அப்பொழுது நீலமேனி போன்ற தடந்தோள்கள் மலையெனத்திரண்டு காட்சி யளிக்கின்றன. தாழ்ந்த கைகளின் எழில்தான் என்னே! இவற்றையெல்லாம் பார்க்கும் போது இராமன் கண்கள் அவள் கண்களைச் சந்தித்தன. உடனே ஒரு குறு முறுவல் பூத்தான். அந்த முறுவல் அவள் உயிரை அப்படியே உண்டு விட்டது " முந்தி அம்முறுவல் என்னுயிரை உண்டதே" என சீதை தன் வயமிழக்கின்றாள்.

குஞ்சியையும் முகத்தையும் தாழ்ந்த கை களையும் ஒவ்வொரு பகுதியாகப் பார்க்கின்றவள் இவை எல்லாவற்றினதும் தொகுதியாக எழுந்த முழு அழகு, அவள் உயிரை உண்பதற்குமுன் அவன் உள்ளத்தின் சம்மதமாகிய புன்முறுவல் உண்டுவிட்டது. சீதையின் அழகில் இராமன் மனங்கொள்ளை கொடுத்தான் என்பதனைக்காட்டும் குறுமுறுவல் அவளை அப்படியே ஆட்கொண்டு விட்டது. ' முந்தி' என்ற கம்பனின் வாக்கு என்ன அற்புதம் செய்கின்றது. இராமன் உடலழகினால் ஏற்பட்ட தாக்கத்தினும் அவன் மன இசைவின் அறிகுறியாகிய புன்முறுவல்

மிகப்பெரிய தாக்கமாயிருந்தது என்பது தோன்றவே 'முந்தி' அம்முறுவல் உண்டது என்று கூறுகின்றார்.

அது மாத்திரமா! அவ்வாறு செய்த குறுமுறுவலோடு அவன் நடந்த நடை அவள் மனத்தில் அழியாததாக விருந்தது.

*படர்ந்தொளி பரந்துயிர் பருகும் ஆகமும்*
*தடந்தரு தாமரைத் தாளு மேயல*
*கடந்தரு மாமதக் களிநல் யானை போல்*
*நடந்தது கிடந்ததென் உள்ளம் நண்ணியே*

மிதி. கா. ப 58

அவன் நடந்தபோது அசைகின்ற அந்தத் தோள்கள் உயிரையல்லாவா அப்படியே பருகுகின்றன. அந்தத் தோளுக்கு இசைய எடுத்து வைக்கும் கமலபாதங்களின் அரச கம்பீரியத்தை என்னென்று சொல்ல !மதஞ் சொரியும் யானை அசைவது போன்று அசைந்த நடை, என்னுள்ளத்தில் அப்படியே அசைகின்றது. 'நடந்தது கிடந்தது என்னுள்ளம் நண்ணியே' என்ற அடிகளில் ' டந்த' என்ற ஒலி அசைவுக்குரிய தாளத்தை அப்படியே மனக்கண்ணிற் கொண்டு வருகின்றது. 'படர்ந்தொளி' தடந்தரு கடந்தரு என நடக்கும் அடிகளின் இறுதியிலே நடந்தது கிடந்தது என இரட்டை ' டந்த' தாளம் விழுவது நடையை ஒலிக் குறிப்பாலும் பாட்டின் அசைவினாலும் காட்டும் கம்பனின் மாஜால மாம்.

சீதை இராமனின் அழகை முழுமையாகக் கண்டாள். பகுதிகளைக் காணுந்தோறும் முழுமையின் அமைப்பிலே அவற்றைத் தொடர்புபடுத்தி இரசித்தாள்.

அவன் நடையும் முறுவலும், பின்னர் பஞ்சவடியிலேயும் அவளைக் கவர்ந்தன.

*மாதவள் தானும் அங்கு*
*வந்து நீர் மொண்டு மீளும்*
*போதகம் நடப்ப நோக்கிப்*
*புதியதோர் முறுவல் பூத்தாள்.*

அதே, பஞ்சவடியில் தான் சூர்பணகையும், இப்பொழுது அவன் அழகை ஒவ்வொரு அங்கமாகக் கண்டு வயமிழந்து நிற்கின்றாள். ஊன்றிய கண்களை பறித்தெடுக்க முடியாது பரிதவிக்கிறாள்.

## சூர்ப்பணகையின் அவலம்

இராமன் அழகினால் சீதையின் உயிர் உண்ணப்படுகின்றது. ஆனால் அக்கணமே, இராமனின் இசைவுக்குரிய குறிப்பாகப் புன்முறுவல் அவளை ஆட்கொண்டது. எனவே சீதையிடம் அவலம் பிறக்கவில்லை. பிரிவினால் தாபம் ஏற்பட்டது.

சூர்ப்பணகையோ இராமன் தன்னைக்காண முடியாத ஒரு இடத்திலே நின்று அழகை அள்ளிப் பருகினாள். அவளுக்கு இராமன் புன் முறுவலைக் காணக் கிடைக்கவில்லை.

இத்தகைய அழகன் தன்மேனியைக் கண்டு என்செய்வானோ என்று நினைந்து ஒரு அழகிய அணங்கின் வடிவத்தை எடுக்கிறாள். மென்மையான பெண்மை இராமன் முன் அடியெடுத்து வருகின்றது. இராமன் தனிமையிலே இருக்கின்றான். சூர்ப் பணகையைக் கண்ட இராமனுக்கு அவள்வந்த நோக்கம் நல்லதன்று என்று முன்னரேபடுகின்றது. எனினும் கம்பனின் இராமன் ஏன் உண்மையைச் சொல்லத் தயங்குகிறான். வான்மீகியின் ஸ்ரீஇராமன் சூர்ப்பணகையிடத்தே உண்மையைச் சொல்லி அவளைக் காதலிக்க விடாது மறுத்துவிடுகிறான். நான் விவாகம்செய்தவன் என்று முகத்தில் அறைந்தது போல் உண்மையைக் கூறிவிடுகிறான், வான்மீகி இராமன்.

தமிழ் இராமனோ தனிமையாக இருக்கின்றான். அவன் விவாகம் செய்தவன் என்பது கூடச் சூர்ப்பணகைக்குத் தெரிந்திருக்காது. அப்படியிருந்தும் சூர்ப்பணகையை வந்த காரியம் என்ன என்று வினவுகிறான். அவள் "உன்னைத் தனிமையிலே காணவந்தேன்" என்கிறாள் அப்பொழுது கம்ப இராமன் 'வந்த காரியத்தைச் சொல் முடியுமானால் செய்கிறேன்' என்கிறான். சூர்ப்பணகை தன் பெண்மையைக் காத்து எவ்வளவு அழகாகத் தன் எண்ணத்தை வெளியிடுகிறாள்.

*"தாமுறு காமத் தன்மை*
*தாங்களே உரைப்ப தென்ப(து)*
*ஆமென லாவ தன்றால்*
*அருங்குல மகளிர்க் கம்மா"*

"ஸ்ரீராமா நல்ல குடிப்பிறந்த பெண்மைக் குணமுள்ள மகளிர் தங்களுடைய மனத்தின் இச்சைகளை வெளியாகச் சொல்லுவதில்லை யென்பதை நீயறியாயோ? என்று மிகக் குறிப்பாகத் தன்னிலைமையைச் சொல்லுகின்றாள் சூர்ப்பணகை. அப்பொழுதாவது கம்ப இராமன் தான்

விவாகம் செய்தவன் என்று உண்மையைக் கூறுகின்றானா.

உன்னை முறைப்படி திருமணத்திற் தருவதற்குரியவர்கள் இல்லையே என்கிறான். இதன் குறிப்பு என்ன? மேலும் சூர்ப்பணகை சொல்லுகிறாள்; "காந்தருவ விவாகம் என்று ஒன்று இருக்கின்றதே அதற்குக் கொடுப்பாரும், அடுப்பாரும் வேண்டிய தில்லையே அம்முறைப்படி மணம் புரியலாமே?" அதற்குக் கம்பஇராமன் உன்னுடைய குலத்துக்கும் என்னுடைய குலத்துக்கும் அடாதே என்கிறான். சூர்பணகையோ பழைய வரலாறுகளைச் சான்று காட்டுகிறாள். ஏன், கம்ப இராமன் முதன் முதலிலேயே நான்விவாகம் செய்தவன் என்று கூறியிருக்கலாமே. இதற்குரிய விடை வேறொரு கட்டுரையாக விரியும்.

இராமன், சூர்ப்பணகையை நீயார் என்று வினவிய பொழுது மாயாவடிவத்தில் அழகுருப்பெற்ற சூர்ப்பணகை உண்மையைக் கூறுகின்றாள்.

*" மாவெலாம் தொலைத்து வெள்ளி*
*மலையசைத்து உலகம் மூன்றும்*
*காவலான் பின்னை காம*
*வல்லியாம் கன்னி "* என்றாள்.

தன் தோளோடு எட்டுத்திக்கு யானைகளின் மத்தகம் பொருந்தப் போர்செய்து, அவற்றின் கொம்புகள் மார்பிலே உழும்படி செய்து அவற்றை முறித்தவன் இராவணன். வெள்ளி மலையைத் தோளினால் அசைத்தவன்; தேவர்களையெல்லாம் அடிமை கொண்டவன். அந்த வீர அண்ணனின் தங்கையென்கிறாள் சூர்ப்பணகை. வான்மீகியின் சூர்ப்பணகைக்கு அவலத்துக்கு இடமேயில்லை. ஆனால் கம்ப இராமன் சூர்ப்பணகைக்கு அவலம் பிறப்பிக்கத்தக்கதாக நடந்துகொண்டான். யாராவது திருமணத்தில் உன்னை எனக்குத் தத்தம் செய்வாரில்லையே; குலப்பொருத்தம் சரியில்லையே என்று ஒரு ஆடவன் கூறும்போது ஒரு பெண்மனத்தில் அவன் என்ன உணர்வுகளை, ஆசைகளை மூட்டுகிறான். இதனால் இராமன் தன்னை விரும்பமாட்டான் என்று எண்ணிய சூர்ப்பணகைக்கு ஒரு நம்பிக்கை ஒளி பிறக்கிறது.அது அவள் அவலத்தை மேலும் கூட்டுகிறது.

## சூர்ப்பணகை அழகு இரசிகை; பெண்ணழகிலும் மயங்கினாள்

சூர்ப்பணகை கோரப்பற்களும், செம்பட்டை மயிரும் கருங்கல் மலைபோன்ற மேனியும் முடைநாற்றமும் கொண்ட வெறுத்தக்க வெளியுடல் கொண்டவளாக இருக்கலாம். ஆனால் அவள் உள்ளமோ அழகை நயக்கும் கலையுள்ளம். ஒரு முரட்டு வெளித்தோற்றத்துள், ஒரு மலர் போன்ற அழகுள்ளத்தைக் கொண்டிருந்தாள்.

இராமன் அழகு ஆணழகு; அதைப்பெண் பார்ப்பதற்கு அழகுணர்வைவிட வேறு கருத்துக்களும் கூறலாம். ஆனால் சீதையின் பெண்ணழகைக் கண்டதும் என்ன கூறுகிறாள்.

*பண்புற நெ டிது நோக்கிப்*
*படைக்குநர் சிறுமை அல்லால்*
*எண்பிறங்கு அழகிற்கு எல்லை*
*இல்லை ஆம் என்று நின்றாள்;*
*கண்பிற பொருளிற் செல்லா*
*கருத்து எனின் அஃதே கண்ட*
*பெண்பிறந்தேனுக்கு என்றால்*
*என் படும் பிறருக்கு?* என்றாள்.

சீதை இராமனின் அயலிலே நிற்கிறாள் அப்பொழுது இராமன் விவாகமானவன் என்றது சூர்ப்பணகைக்குத் தெரிந்தது போலும். சீதையைக் கண்ட சூர்ப்பணகை அவளைக் கண்வாங்காது அப்படியே பார்த்து அழகில் சொக்கி நிற்கின்றாள் வைத்த கண்களை எடுக்க முடியவில்லை. உள்ளமோ, அதிலே அழுந்தி விட்டது. நெடுநேரம் சென்ற பின் சூர்ப்பணகை சிந்திக்கிறாள். அழகு என்பது எல்லையற்றது என்பதை இன்றுதான் புரிந்தேன். ஊர்வசி, மேனகை, அரம்பை, திலோத்தமை போன்ற தேவப்பெண்களைக் கண்டவிடத்து அவர்களின் பெண்ணழகை ஒரு எல்லையாக வைத்து அதற்கு மேல் சிறிது அழகுள்ளவர்கள் இருக்கலாம். பெண்ணழகு அந்த எல்லைக்கு மேற்செல்லாது என்று எண்ணியிருந்த சூர்ப்பணகை மனத்தில் சீதையைக் கண்டவுடன், அழகைப்பற்றி ஓர் உண்மை புலப்படுகிறது. அழகுக்கோ எல்லையில்லை; ஆனால், அழகு ஒரு எல்லைக்குள் நிற்பது, அழகை ஆக்குகின்ற கலைஞர்களின் கையாலாகாத தன்மையாலேயே. அது எல்லைப்படுவது அவரின் கைவண்ணச் சிறுமையாலேயே. சிருட்டிப்பவனின் கைவண்ணம் எவ்வளவோ, அவ்வளவுக்கு அழகு மேலும் மேலும் எல்லையின்றிச் செல்லும் என்ற முடிவுக்குச் சீதையைக் கண்டவுடன் சூர்ப்பணகை வருகின்றாள். 'எண் பிறங்கழகு', என்று கம்பர்

அதனைக் கூறுகின்றார். சேர்மானங்களினால் எத்தனையோ விதமான சிருட்டிகள் பிறக்கும். ஒரு விதமான அழகுடைய கண்ணும் ஒருவிதமான அதரங்களும் சேர்கையில் அது ஒரு அழகு. பகுதிகளின் சேர்ப்புக்கேற்ப முழுமையின் அழகு அமையும். இது gestall என்னும் உளவியற் கொள்கையாகும். அப்படிப்பட்ட சேர்மானங்கள் எண்ணிறந்து வரும். அவையெல்லாம் படைப்பவனின் கைவண்ணம். அதனாலேயே 'எண்பிறங்கழகு' என்கிறார். 'எண்பிறங்குதல்' சேர்மானங்களினால் வெவ்வேறாதல்.

இப்படிப் பெண்ணழகிற் சொக்கிப்போன சூர்ப்பணகை, சீதையை நோக்கி என்ன சொல்லுகிறாள்.

'கண்ட பெண்பிறந்தேனுக் கென்றால் என்படும் பிறருக்கு'. இந்தப் பெண்ணழகைக் கண்டு பெண்ணான எனக்கே இப்படியான ஒரு அழகுணர்வு ஏற்படுமானால் ஆண்களுக்கு எவ்வாறிருக்கும் என்கிறாள். பின்னர் தனித்தனிக் கண்ட இரு அழகுருவங்களையும் ஒன்று சேர்த்துப் பார்க்கிறாள்.

***பொரு திறத்தானை நோக்கிப்***
***பூவையை நோக்கி நின்றாள்***
.........................................
.........................................
***இருநிறத்தார்க்கும் செய்த***
***வரம்பிவர் இருவர் என்றாள்***

ஒரு வரியிலே திறத்தானை நோக்கி' 'பூவையை நோக்கி நின்றாள்' என இரண்டு நோக்கி என்னும் சொற்கள் பிரயோகிக்கப்பட்டுள்ளன. இராமனைப்பார்த்துத் திகைத்து நின்று, சீதையைப் பார்த்துத் திகைத்து நின்று கண்களை எடுக்க முடியாது நின்ற சூர்ப்பணகையின் நிலையைக் காட்டவே இருதரம் நோக்கி என வைத்து, நின்றாள் என முடிக்கிறார் கம்பர். பின்னர் இந்த அழகுருவங்கள் ஆண் பெண் அழகுக்குச் சிருட்டிக்கப்பட்டனவற்றில் உச்ச வரம்பாக உள்ளன என்று வியந்து நிற்கிறாள்.

இவ்வாறு கம்ப இராமாயணத்தில் இராமனினதும் சீதையினதும் அழகை எந்தப்பாத்திரம் இவ்வளவு உள்ளுணர்வோடு இரசித்தது. சூர்ப்பணகை அழகுள்ளம் படைத்தவள். அவள் வெளியழகுதான் உள்ளழகுக்குப் பொருத்தமாக அமையவில்லை. அதுதான் அவலம்.

## அழகும் ஒரு நஞ்சு என்கிறாள்

தனக்கும் இராமனுக்கும் பொருத்தமில்லையென்பது தெரிந்தும், அவள் அழகுள்ளம் அவன் தோள்களிலிருந்து கண்களை இழுத்தெடுக்கவிடவில்லை.

'பாவியேனையும் பார்க்குங்கொலோ' என்று தன்னையே நோகிறாள். இந்த நோவு அவலமாகின்றது. அவளின் அங்கங்கள் வெட்டப்பட்ட நிலையில் இராமனுக்குக் கூறுவது அவலத்தின் எல்லையையே தாண்டுகிறது. அவள் அழகற்ற தன்னை ஏற்கும்படி கூறுவதற்குச் சொல்லும் நியாயம் அவள் புண்பட்ட அவலமனத்தை எடுத்துக் காட்டுகிறது.

***'கண்டாரே காதலிக்கும் கட்டழகும் விடமன்றோ'*** ஓர் ஆண் தன்னிலும் அழகு குறைந்தவளைப் பெண்ணாகக் கொள்வதுதான் அவளால் கெடுதி வராமல் இருப்பதற்கு வழி. ஓர் ஆண் தன்னிலும் அழகியை மணந்து கொண்டால் அது அவனுக்கு நஞ்சாகவே முடியும் என்கிறாள் சூர்ப்பணகை.

## முடிவுரை

இராமனின் அழகையும், சீதையின் அழகையும் சூர்ப்பணகை இரசிக்கும் பாங்கைக் கொண்டு சூர்ப்பணகை ஒரழகுள்ளம் உடையவள் எனப் பெறுமாறு கம்பர் வைத்துள்ளார். அந்த அழகுக்குப் பொருந்தாத ஒரு வெளித்தோற்றம் சூர்ப்பணகையை அவலத்துக் குள்ளாக்குகின்றது. அழகுணர்வால் அவள் பெற்ற உணர்வு, இராமனை மறக்க முடியாமற் செய்யப் பெரும் துன்பத்துக்குள்ளாகிறாள்.

# தமிழர் பண்பாட்டிற் கம்பன்

பேராசிரியர்- சு.வித்தியானந்தன்

இலக்கியம் ஒரு சமுதாயத்தின் பண்பாட்டுக் கூறு என்ற வகையிலே அதனையும் அதனை ஆக்கியோனையும் அச்சமுதாயத்தின் பொதுவான பண்பாட்டுப் பகைப் புலத்திலே பொருத்தி நோக்கி மதிப்பிடுவதும் ஆய்வு முறைகளில் ஒரு வகை. அவ்வகையிலே தமிழ்ப் பெரும்புலவர் வரிசையிலே தலைமை பெற்றுத் திகழும் கம்பனை அவனது தளமான தமிழர் பண்பாட்டுப் பாரம்பரியத்தின் பகைப் புலத்தில் நோக்கும் முயற்சியானது ஒரு ஆய்வேடாக அமையக் கூடிய அளவுக்கு விடயப் பரப்புடையதாகும். அத்தகு விரிந்த அமைப்புக்கு இக்கட்டுரைக் களம் இடம் தராதாகையால் சில முக்கிய கூறுகள் மட்டும் இச்சிறுகட்டுரைமூலம் முன்வைக்கப்படுகின்றன.

தமிழர் பண்பாடு ஏறத்தாழ இரண்டாயிரத்து ஐந்நூறுஆண்டுகட்கு மேற்பட்ட தொடர்ச்சியான பண்பாட்டுப் பாரம்பரியம் கொண்டது. கிறித்துவுக்கு முற்பட்ட நூற்றாண்டுகளிலிருந்து இப்பண்பாடு வளத்தின் தொடர்ச்சியையும் வளர்ச்சியையும் அவதானிக்க முடியும். இந்த நீண்ட வரலாற்றிலே தமிழினம் தனக்கெனத் தனிப் பண்புகளைப் பேணி வந்துள்ளதோடு பிறபண்பாடுகளிலிருந்து பல நல்ல கூறுகளை உள்வாங்கித் தன்னை வளம்படுத்தியும் வந்துள்ளது. குறிப்பாக வடமொழி சார்ந்த இலக்கியம், சமயம் என்பன தமிழர் பண்பாட்டினை வளப்படுத்தும் முயற்சியிற் பெரும் பங்கு வகித்துள்ளன. இப்பண்பு மிகுதியாகக் காணப்பட்ட சோழப் பெருமன்னர் காலத்திற் பெரும் புலவனாகத் திகழ்பவன் கம்பன் என்ற வகையிலே அப்பகைப்புலத்தைக் கருத்திற் கொண்டே யாம் அவனை அணுக வேண்டியது அவசியமாகின்றது. அவ்வகையிற் சோழப் பெருமன்னர் காலத்தில் ஏனைய பெரும் புலவர்களிலிருந்து குறிப்பாகக் காப்பியப் புலவர் களிலிருந்து கம்பன் எவ்வாறு வேறுபட்டுத் தனித் தன்மை – தனித்த ஆளுமை உடையவனாகத் திகழ்கிறான் என்பது கவனத்துக்குரியதாகின்றது.

சோழப் பெருமன்னர் காலத்தின் ஏனைய காப்பியப் புலவர்கள் என்ற வகையிலே சீவக சிந்தாமணி ஆசிரியரான திருத்தக்க தேவர், திருத்தொண்டர் மாக்கதை தந்த சேக்கிழார் என்போர் அக்காலக் காப்பியக் கொள்கையின் இருவேறு தளங்களைக் காட்டுபவர்கள். திருத்தக்கதேவர் வடநாட்டுக் கதைப் பொருளை அடிப்படை மாற்றங்களின்றி ஏற்றுத் தமிழிற் காப்பிய வடிவம் தந்தவர். சேக்கிழார் தமிழ் நாட்டிற் பிறந்து தமிழராகவே வாழ்ந்த சிவனடியார்களின் வரலாற்றைக் காப்பியமாக்கியவர். திருத்தக்க தேவர் கதைப்பொருளை மொழி பெயர்த்துக் கொண்டவர் : சேக்கிழார் பாரம்பரியக் கதைகளினின்று கதைப் பொருளைப் பெற்றுக் கொண்டவர். இவ்விருவரும் நிற்கும் தளத்தினின்று வேறுபட்டு மூன்றாவதான ஒரு தளத்தில் நிற்பவன் கம்பன். அவர் வடமொழியினின்று கதைப் பொருளைப் பெற்றுக் கொண்டவர். ஆனால் அதனைத் தமிழ்ப் பண்பாட்டுப் பாரம்பரியத்துக்கும் பொருந்தும் வகையிற் பாத்திர உருவாக்கம், நிகழ்ச்சிகள் என்பவற்றிற் குறிப்பிடத் தக்க மாற்றங்கள் செய்து காப்பிய வடிவம் தந்தவன். வடமொழியில் வான்மீகி முனிவர் செய்த ஆதிகாவியத்தினின்று பெறப்பட்டதும் வைஷ்ணவ பாரம்பரியத்தின் தளத்தில் உருவானதுமான இராமனது கதை கம்பனால் இராமாவதாரம் என்ற காப்பியமாக்கப் பட்ட முறைமையிலே தமிழ்நிலைப்பட்ட அனைத்திந்திய பண்பாட்டுக் கோலத்தைப் பெற்றது. இன்னொரு வகையிற் கூறுவதானால் தமிழிலக்கியத்துக்கு ஒரு அனைத்திந்திய பண்பாட்டு நிலையை அது ஈட்டித் தந்ததெனவும் கொள்ளலாம். இராமனது கதை இந்திய பெருநிலத்தைத் தாண்டி ஈழத்தையும் தழுவி நிற்பதால் அனைத்திந்திய பண்பாட்டு நிலை என்பதையும் தாண்டித் தென்னாசியப் பண்பாட்டு நிலையை ஈட்டித் தந்துள்ளதென்றும் கொள்ளலாம். இத்தகைய நிலையைத் தமிழர் பண்பாடு எய்தும் வகையிற் கம்பன் மேற்கொண்ட அணுகுமுறைகள் சில இங்கு நமது கவனத்திற் குரியவாகின்றன.

தமிழர் பண்பாட்டிலே இலக்கிய மரபிற் சிறப்பாகப் பேணப்படும் கூறுகளில் ஒன்று ஆண் பெண் உறவு தொடர்பானவை. திருமணத்துக்கு முன் களவு என்ற நிலையிலும், திருமணத்தின் பின் கற்பு என்ற நிலையிலும் பேசப்படும் இவ்வுறவுநிலை பொதுவாக அகப் பொருள் மரபு எனப் பெயர் பெறுவது. திருமணத்துக்கு முன் ஆண்–பெண் இருபாலரிடமும் நிகழும் அன்புணர்வு களவு எனவும், திருமணத்தின் பின் பேணப்படும் அன்புநிலை கற்பு எனவும் கொள்ளப்படும். திருமணம் என்பது ஆணையும் பெண்ணையும் சம்பிரதாய பூர்வமாக இணைக்கும் சடங்காக மட்டும் அமையலாகாது என்ற உணர்வின் அடிப்படையிலேயே தமிழில் இவ்வகைப் பொருள் மரபு இலக்கிய முதன்மை கொடுத்துப் பேணப்பட்டு வந்தது. சங்க இலக்கியத்தில் சிறப்பாகப் பேணப்பட்டு நின்ற இம்மரபை அவற்றுக்குப் பின் அறநூல், பக்திப்பாடல் என்பவற்றைப் புனைந்தோரும் உரிய இடம் தந்து போற்றினர். திருக்குறளில் அமைந்த காமத்துப் பாலும் திருமுறைகளில் இடம்பெறும் திருக்கோவையாரும் இதற்குச் சான்றுகள். இத்தகைய தமிழர் பண்பாட்டு மரபில் வந்த கம்பன் வடமொழி இராமகதையைத் தமிழிற் காப்பியமாக்க முனைந்த வேளை அதிலே புலப்படுத்தப்பட்ட ஆண்–பெண் உறவு நிலைகள் தமிழர் பண்பாட்டின் அகப்பொருள் மரபுக்குரிய சிறப்புக் கூறுகள் கொண்டிருக்கவில்லை என்பதை உணர்ந்தான். குறிப்பாக இராமகதையின் தலைமைப் பாத்திரங்களான இராமன் சீதை இருவரின் உறவுநிலை மட்டுமன்றி கௌதமர் – அகலிகை, வாலி–தாரை ஆகியோரின் உறவுநிலைகளும் தமிழர் பண்பாட்டு நோக்கிலே குறைபாடுடையனவாகத் திகழ்வதை அவதானித்தான். அவற்றைத் தமிழர் பண்பாட்டுக்கேற்ப மாற்றியமைத்துக் கொண்டதன் மூலம் அவர்களின் பாத்திரப் பண்பில் ஒரு வளர்ச்சி நிலையையும் காட்டினான்.

வடமொழி இராமாயணக் கதையின்படி இராமன் –சீதை திருமணம் சம்பிரதாய பூர்வமான ஒரு சடங்காகும். வில்லை முறிந்த இராமனுக்குச் சீதை பரிசுப் பொருள் ஆகிறாள். வில்லை யார் முறித்திருந்தாலும் (இராவணன் அல்லது இலக்குமணன் ஆகிய யார் முறித்திருந்தாலும்) முறித்தவனை மாலையிட வேண்டிய கடப்பாடுடையவள் அவள். இராமன் முறித்ததால் இராமனுக்கு மாலையிட்டாள். எனவே சீதை தன் மனத்தால் விரும்பி இராமன் மனைவியானாள் என்று கூற முடியாது. இராமனும் அவளை வீரத்திற்குப் பரிசாகப் பெற்றானே அன்றி விரும்பி அடைந்தான் என்பதற்கில்லை. எனவே வால்மீகி இராமாயணத்தின்படி இராமன் சீதை உறவு கணவன்– மனைவி உறவு மட்டுமே. காதல் உறவு அன்று. திருமணத்துக்கு முன்பே தலைவனும் தலைவியும் களவாகக் கொள்ளும் காதலின் சுவை கண்ட தமிழ் மரபில் வந்த கம்பனுக்கு மேற்படி சம்பிரதாய பூர்வமான கணவன் மனைவி உறவினால் திருப்தி ஏற்படவில்லையென்பது அவ்வுறவு நிலையை அவன் மாற்றியமைத்துக் கொண்டமை மூலம் பெறப்படுகின்றது. இராமன் மிதிலை நகரில் வில்லை வளைப்பதற்கு முன்பே இருவருக்கும் களவுக் காதல் நிகழ்ந்து விட்டதாகக் கதைப் போக்கிலேயே ஒரு மாற்றத்தை அவன் செய்து விடுகிறான். மிதிலைக் காட்சிப் படலம் என்ற பெயரில் ஒரு படலத்தையே அமைத்து இருவரையும் கண்களாற் பேச வைக்கிறான். 'அண்ணலும் நோக்க அவளும் நோக்கி' இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்துவதாக அக்காதற் காட்சி அமைந்து விடுகின்றது. இதன் மூலம் வெறும் கணவன்– மனைவி உறவாக மட்டும் அமைந்து நின்ற இராம – சீதை உறவு, காதல் என்ற அன்புத் தளத்தில் உறுதியாக வேரூன்றி நிற்கும் ஒரு புதிய பரிமாணத்தைப் பெற்றுத் திகழலாயிற்று.

இவ்வாறு களவுக் காதல் மூலம் தமிழர் பண்பாட்டைப் புலப்படுத்தி நின்ற கம்பன் சீதை, அகலிகை, தாரை என்போரது பாத்திர நிலைகட்குத் தமிழ் நிலைப்பட்ட ஒரு கற்பு வடிவத்தையும் கொடுக்கிறான். குறிப்பாக சீதையை இராவணன் தூக்கிச் சென்ற செய்தியை வான்மீகி கூறிய முறைவேறு, கம்பன் கூறிய முறை வேறு. வான்மீகத்தின்படி இராவணன் சீதையை அவளது கூந்தலை இடக்கையாலும், தொடைகளை வலக்கையாலும் பிடித்துத் தூக்கிச் சென்றான். இவ்வாறு பிற ஆண் ஒரு பெண்ணைத் தீண்டுவதைத் தமிழ்ப் பாண்பாடு ஏற்றுக் கொள்ளாது. எனவே தமிழ்ப் பண்பாட்டு மரபைப் பேணி நின்ற கம்பன் " சீதையைத் தீண்டாத கற்புடைய செழுந்திரு'' ஆகக் காட்ட விழைந்தான். இதனால் இராவணன் சீதையைத் தொட்டுத் தூக்கினான் என்று கூறாமல் அவள் இருந்த பர்ணசாலையைக் கீண்டு ஏந்திச் சென்றான் என்கிறான் கம்பன்.

*"ஆண்டா யிடை தீயவன் ஆயிழையைத்*
*தீண்டான் அவன் மேல் உரையைச் சிந்தை செயா*
*தூண் தான் எனலாம் உயர் தோள்வலியால்*
*கீண்டான் நிலம் யோசனை கீழொடு மேல்*

( இராவணன் சூழ்ச்சிப் படலம்– 72)

என்பது அப்பாடல். இதிலே இராவணன் தன்னை விரும்பாத பெண்ணைத் தீண்டினால் தலை பிளக்கும்

என முன்னர் பிரமன் இட்ட சாபம் இருந்ததையும் கம்பன் பொருத்தமாக எடுத்துக் காட்டியுள்ளான்.

வான்மீகி இராமாயணத்தின் கதைப் போக்கின்படி கௌதமர் மனைவியாகிய அகலிகை மீது இந்திரன் மோகங் கொண்டு வந்த பொழுது அகலிகைக்குத் தன்னிடம் கணவர் உருவத்தில் வந்தவன் இந்திரனே என்று தெரிந்திருக்கின்றது. எனவே அவளும் மனம் இசைந்தே அவனுக்கு இணங்கினாள். இதனால் அகலிகை மனத்தாலும் கற்புத் தவறியவளாகவே காட்டப்பட்டுள்ளமை தெளிவு. கௌதமர் சாபத்தாற் கல்லான அவள் இராமனது கால்பட்டு அவள் மீள எழுவது எந்த மேன்மையும் தரவில்லை. இராமனுக்கும் அவளை மீள எழுப்பியது எந்தச் சிறப்பையும் தரவில்லை. இதனை நோக்கிய கம்பன் அகலிகை, இராமன் இருவருக்கும் சிறப்பு ஏற்படும் வகையில் அகலிகையின் பண்பின் ஒரு புதிய மாற்றத்தைப் புகுத்தினான். அகலிகைக்குத் தன்னிடம் தன் கணவனாகிய கௌதமனே உறவு கொள்கிறான் என்ற நினைவே இருந்தது. உறவு நிலையின் இடையேதான் தான் இந்திரனால் வஞ்சிக்கப்பட்டதை அவள் உணர்ந்து கொள்கிறாள். எனவே அகலிகை மனதால் பிழை யாதவள். அவளுக்குக் கௌதமன் இட்ட சாபத்தை இராமனின் கால்தூசு நீக்கும் போது ஒரு நற் பண்பாளனது வரவால் அகலிகையின் உடல் மீது படிந்த அழுக்கு நீங்குகின்றது. இது அகலிகை–இராமன் இருவருக்குமே பெருமை தரும் மாற்றம் ஆகும். கௌதமர்– அகலிகை இருவரதும் கணவன் மனைவி உறவும் இதனால் புனிதமடைவதாகின்றது.

வால்மீகி இராமாயணத்தின்படி வாலியின் மனைவியான தாரை வாலி இறந்தபின் சுக்கிரீவனது காமக்கிழத்தி ஆக அமைகிறாள். இதனை இலக்குமணன் சுக்கிரீவனைச் சந்திப்பதற்குக் கோபத்துடன் போன காட்சியில் அவதானிக்கலாம். சுக்கிரீவனோடு இன்பம் துய்த்த நிலையிலே குடி மயக்கத்தோடு கண்கள் குவிந்த நிலையிலே தாரை இலக்குமணனிடம் தள்ளாடித் தள்ளாடி வந்து சமாதானம் பேச முற்பட்டாளென வான்மீகி முனிவர் கூறுகிறார். கம்பனுக்கு இது ஒப்புக் கொள்ள முடியாததாக இருந்தது. அண்ணன் மனைவியைத் தம்பி அநுபவிக்க நினைப்பதே தமிழர் பண்பாட்டுக்கு முரண் என்ற நிலை கம்பனுடையது. எனவே தாரை ஒரு குரங்குப் பாத்திரமாக இருந்த பொழுதுங்கூடத் தமிழர் பண்பாட்டின்படி அவளைத் தூய மனத்தினளாக வாலி இறந்த பின் கைம்மை நோன்பு நோற்று நிற்கும் பண்பினளாக–அவன் காட்டுகின்றான். இலக்குமணனிடம் தாரை சமாதானம் பேச வரும் பொழுது அவளைத் தனது கைம்மை நோன்பு நோற்கும் தாயாரின் நிலையில் அவன் நினைவு கூருகிறான். இதனைப் பின்வரும் பாடல் புலப்படுத்தும்.

*" ஆர்கொலோ உரை செய்தார்? என்று*
*அருள்வார் சீற்றம் அஃக,*
*பார்குலாம் முழு வெண் திங்கள்*
*பகல்வந்த படிவம் போலும்*
*ஏர்குலாம் முகத்தி னாளை*
*இறைமுகம் எடுத்து நோக்கி*
*தார்குலாம் அலங்கல் மார்பன்*
*தாயரை நினைந்து நைந்தான்."*

( கிட்கிந்தைப் படலம் –51)

இவ்வாறு வால்மீகி இராமாயணக் கதையினின்று வேறுபட்டுத் தமிழ்ப் பண்பாட்டின் படி கம்பன் கையாண்டுள்ள அணுகுமுறைகளும் பாத்திர உரு வாக்கத்திற் புகுத்தியுள்ள மாற்றங்களும் அவனால் திட்டமிட்டு உணர்வு பூர்வமாகவே மேற் கொள்ளப் பட்டவை என்பதை அவன் காப்பியப் படைப்பிற் புறநிலையாகக் கையாண்ட சித்திரிப்பு முறைகளும் காட்டி நிற்கின்றன. சரயு நதி பாயும் கோசல நாட்டை அவன் காவிரி பாயும் கழனி நாடாகவே கண்டான் என்பதை " காவிரி நாடன்ன கழனி நாடு" என வரும் பாடற்பகுதி உணர்த்தும். அதாவது தான் வாழ்ந்த வளங் கொழிக்கும் சோழ நாட்டின் தளத்திலேயே கோசல நாட்டை அவன் கற்பனையிற் காண்கிறான். மேலும் அந்தத் தமிழ் நிலத்தில் ஊற்றெடுத்த ஐந்திணை அகப்பொருள் நெறியை இலக்கியத்தின் முக்கிய உள்ளடக்க அம்சமாக அவன் மதித்திருந்தான். இதனைக் கோதாவரி நதிக் காட்சியை அவன் வருணிக்கும் போது புலப்படுத்தி விடுகிறான்.

*" புவியினுக் கணியாய் ஆன்ற*
*பொருள் தந்து புலத்திற் றாகி*
*அவியகத் துறைகள் தாங்கி*
*ஐந்திணை நெறியவாவிச்*
*சவியுறத் தெளிந்து தண்ணென்*
*ஒழுக்கமும் தழுவிச் சான்றோர்*
*கவியெனக் கிடந்தகோதா*
*வரியினை வீரர் கண்டார்"*

(சூர்ப்பணகை. ப.1)

என்ற அப்பாடலிற் சான்றோர் கவி ஐந்திணை நெறியை அளாவி நிற்பதை அவன் எவ்வளவு மதிப்புடன்

நோக்கினான் என்பது புலப்படும். எனவே தான் மதித்த அந்த நெறியைத் தான் படைத்த காப்பியத்திலும் பொருத்தமுறப் புகுத்தி, அக்காப்பியக் கதைக்கு ஒரு புதிய பரிமாணத்தையே அவன் தந்துள்ளான் என்பது தெளிவாகின்றது.

இவ்வாறு தான் போற்றிய தமிழர் பண்பாட்டைத் அவனது காப்பியத்திற் பொருத்தமுறப் புகுத்தி அக்காப்பியத்தையே உயர்நிலையடையச் செய்த கம்பனுக்குத் தமிழா பண்பாடும் உரிய மதிப்பளித்துக் கௌரவித்து வந்துள்ளமையை வரலாறு காட்டி நிற்கிறது. கம்பனுக்குப் பின்னர் தமிழ்க் காப்பியம் செய்ய முயன்றுள்ள பலரும் கம்பனையே தமது ஆதர்சமாகக் கொண்டுள்ளனர் என்பது கவனிக்கத் தக்கது. கடந்த நூற்றாண்டின் இரட்சண்ய யாத்திரிகம் என்ற கிறிஸ்தவக் காப்பியம் படைத்த எச். ஏ. கிருஷ்ணபிள்ளை அவர்களைக் 'கிறிஸ்வக் கம்பன்' என்றே அழைக்கும் முறைமை உண்டு. இராம நாடகக் கீர்த்தனையைப் பாடிய அருணாசலக் கவிராயர் அவர்கள் கம்பனது காப்பிய அமைப்பை ஒட்டியே கதைப்போக்கை அமைத்துச் சென்றுள்ளார் என்பதும், பாத்திர உரு வாக்கத்திலும் அவரையே அடியொற்றினார் என்பதும் குறிப்பிடத்தக்கன. இந்த நூற்றாண்டிலே தமிழ்க் கவிதைக்குப் புதிய வடிவும் வனப்பும் தந்த மஹாகவி பாரதி தான் அறிந்த பெரும் புலவரை நினைவு கூருகையிலே

**" யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல் வள்ளுவன் போல்........"** எனக் கம்பனை முதலில் வைத்தே சிந்தித்துள்ளான். தமிழ்த் திறனாய்வாளரில் முதல்வரான வ.வே.சு. ஐயர் அவர்கள் கம்பனை உலக மகாகவிகளுள் ஒருவனாக இனம்கண்டு காட்டியதன் மூலம் தமிழ் இலக்கியத்துக்கு உலகளாவிய தரம் கம்பனால் கிடைத்துள்ளதென்பதைப் புலப்படுத்தி யுள்ளார்.

***இம்பர் நாட்டிற் செல்வமெலா***
***மெய்தி அரசாண் டிருந்தாலும்***
***உம்பர் நாட்டிற் கற்பகக் கா***
***ஒங்கு நீழ லிருந்தாலும்***
***செம்பொன் மேரு அனைய புயத்***
***திறல் சேர் இராமன் திருக்கதையைக்***
***கம்ப நாடன் கவிதையிற் போற்***
***கற்போர்க்கு இதயம் களியாதே***

என ஒரு இரசிகமணி கம்பனை இரசித்து மகிழ்கிறார். தமிழ்ப் பண்பாட்டிலே வேறெந்தப் புலவனுக்கும் இத்தகு முதன்மையும் வரவேற்பும் அளிக்கப்பட்டதாகக் கூற முடியாது. இதற்கெல்லாம் காரணமான அடிப்படைகளிலொன்று அவன் தமிழர் பண்பாட்டின் தளத்திற் காலூன்றி நின்று காவியம் படைத்தமை என்பதிற் கருத்து வேறுபாட்டுக்கிடமில்லை. இவ்வாறு கம்பன் தமிழர் பண்பாட்டில் நின்று ஆற்றிய பணி தொடர்பாக நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை அவர்கள் கூற்றாக அமையும் பாடலுடன் இக்கட்டுரையை நிறைவு செய்கின்றேன்.

***" மால் கடிந்த தவமுனி வான்மீகி என்பான்***
***வனத்திடையே தான்கண்டு கொண்டு வந்த***
***பால்படிந்து, முன்அடர்ந்து, பருத்து, நீண்டு,***
***பரிமளிக்கும் பலவின்கனி பாருக்கீந்தான்***
***மேல்படிந்த பிசின் அகற்றி மெள்ளக் கீறி***
***மெதுவாகச் சுளையெடுத்துத் தேனும் வார்த்து***
***நூல்படிந்த மனத்தவர்க்கு விருந்து வைத்தான்***
***கம்பனென்ற தமிழ்த்தாயர் நோற்ற மைந்தன்"***

நாடகக் காட்சியெல்லாம்- கவியில்
நன்கு காட்டிடுவான்
பாடகர் போற்றிடவே- இனிய
பண்கள் தந்திடுவான்

*-கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை-*

# கம்பன் கவித்துவத்தின் கருத்துநிலை ஊற்றுக்கால்

**பேராசிரியர் கா. சிவத்தம்பி**

கம்ப ஆய்வுகள் பல நிலைகளிலே செய்யப்பட்டு வந்துள்ளன, செய்யப்பட்டு வருகின்றன. இதுவரை கிடைத்த ஆய்வுத் தெளிவுகளின் அடிப்படையில் கம்பனுடைய சமூக–இலக்கிய நோக்குப் பற்றியும் எத்தகைய எண்ணத் துணிபின் அடிப்படையில், (எத்தகைய வாழ்க்கை நோக்கு, சமூகநோக்கு, மதநோக்கு ஆகியவற்றின் அடிப்படையில்) அவன் தனது இராமாவதாரத்தை எழுதியிருந்தல் கூடும் என்ற வினாபற்றிச் சிந்திப்பது இப்பொழுது அவசியமாகின்றது.

அத்தகைய ஒரு சிந்தனை கம்பராமாயணம் பற்றிய ஆய்வினை இன்னொரு மட்டத்திற்குக் கொண்டு செல்ல உதவும். கம்பனிடத்து இன்ன இன்ன பண்புகள் காணப்படுகின்றன, இன்னஇன்ன இடங்களில் இன்னவிடயங்களைப்பற்றி அவன் சொல்லியுள்ளான் அவை வால்மீகியிலிருந்து வேறுபடுவனவாகவுள்ளன. அவை அவனது தனித்துவத்தைக் காட்டுவன எனநாம் பட்டியலிட்டுக் கூறுவனவற்றை யெல்லாம் தொகுத்து நோக்கி, அந்தச் சிறப்புக்களின் அடித்தளமாக, ஆதார சுருதியாக அமைகின்ற மனநிலை /"சித்தாந்தம்"/ கருத்தோட்டம் யாது என்பதனை நிறுவிக் கொள்வது அவசியமாகும்.

அந்த நோக்கின் அடிப்படையிலேயே இந்தக் கட்டுரை எழுகின்றது.

இதன் பிரதான உசாவல் தளத்தினை அறிந்து கொள்வதற்குக் "கருத்து நிலை ஊற்றுக்கால்" என்பது யாது என்பதை விளக்குவது அவசியமாகின்றது.

கம்பனது 'கருத்துநிலை' யாது அதன் ஊற்றுக் கால் எங்கே காணப்படுகின்றது என்பதே இத்தேடலின் பொருள் ஆகும்.

'கருத்துநிலை' என்னும் எண்ணக்கரு பற்றிய தெளிவிருத்தல் அவசியமாகின்றது.

ஆங்கிலத்தில் "ஐடியலோஜி" (Ideology) எனக் குறிப்பிடப் பெறுவதன் மொழி பெயர்ப்பாகவே "கருத்து நிலை" என்னும் தொடரினைப் பயன் படுத்துகின்றேன்.

அண்மைக்கால, சமூக–விஞ்ஞான, கலை, இலக்கிய ஆய்வுகளில் 'கருத்துநிலை' என்ற இவ்வெண்ணக் கரு முக்கியமான இடம் வகிக்கின்றது. ஆக்கத்தையும் அதன் ஊடாக மேற்கிளம்பும் பொருளையும், ஆசிரியரையும், அவரது எண்ணக் கருத்து நிலைப்பாடுகளையும் இணைத்து நோக்கி, ஒரு குறிப்பிட்ட ஆக்கமானது, தோன்றுகின்ற சமூக, பண்பாட்டு, கலைச் சூழலில் அது எத்தகைய 'கருத்து' வன்மையைப் பெறுகின்றது என்பதை அறிவதற்கு இவ்வெண்ணக்கரு இப்பொழுது பெரிதும் பயன் படுகின்றது. 'அறிவு', 'அறிகை' என்பன பற்றிய சமூகவியற் பின்னணியை அறிந்து கொள்வதற்கும், ஒரு பொருள்பற்றிய 'விளக்கம்' எவ்வாறு ஏற்படுகின்ற தென்பதைத் தெரிந்து கொள்வதற்கும், இந்த விளக்கங்களுக்கும் சமூக இருக்கைக்குமுள்ள தொடர்புகள் யாவை என்பதைப் புரிந்து கொள்வதற்கும், "கருத்துநிலை" என்ற இவ்வெண்ணக்கரு பெரிதும் உதவும்.

'கருத்துநிலை' என்னும் இக்கோட்பாடு விளங்கப் படும் முறைமையிற் சில மாறுபாட்டு நிலைகள் உள்ளன. மார்க்ஸீய விமர்சன முறைமையில் கிறாம்ஸ்சி (Gramsci) என்பாரது அணுகுமுறையின் படி "கருத்து நிலை" என்பதனைப் பின்வருமாறு எடுத்துக் கூறலாம்.

> "இக்கருத்தில் 'கருத்து நிலை' என்பது, கலையிலும், சட்டத்திலும், பொருளாதார நடவடிக்கைகளிலும், தனிப் பட்ட, ஒருங்கிணைந்த சீவியத்தின் எல்லா வெளிப்பாடு களிலும், தொக்கி நிற்கும், உலகம் பற்றிய எண்ணக்கரு ஆகும். ஆனால் கருத்து என்பது கருத்தமைதி முறைமை என்பதிலும் பார்க்கக்கூடியது. நடவடிக்கை (செல்கை) களுக்கு வேண்டிய பிண்டப் பிரமாணமான மனநிலைகள் பற்றியும் அவற்றைச்

செய்வதற்கான செயலூக்கத்தி சைப்பாடு பற்றியும் இது சம்பந்தப்பட்டுள்ளது.

மனிதர்கள் நடத்தை முறைக்கான விதி முறைகள் இல்லாமலும், நடத்தை, செய்கைக்கான திசைப் படுத்தப் படல் இல்லாமலும் எதையும் செய்ய மாட்டார்களாதலால், கருத்து நிலை என்பது சமூக நிலையில் எல்லாவிடங் களிலும் ஊடுருவிப் பரவி நிற்பதாகும். எனவே கருத்து நிலை என்பது, மனிதர் தாம் இயங்கும், தமது நிலைகள், போராட்டம், ஆகியன பற்றிய தமது பிரக்ஞையைப் பெற்றுக் கொள்ளும் புலமாகும்."

(A Dictionary of Marxist Thought. T.B. Bultomort and others. Blackwill - London 1985)

ஆசிரியனையும் அவன் ஆக்கத்தையும், ஆக்கத்தின் தாக்கத்தினையும், தாக்கங்களின் சமூக இயைபுகளையும் அறிந்து கொள்ளாது நாம் இலக்கியம் பற்றிய நிறைவான விளக்கத்தைப் பெற்று விட்டோம் என்று கருதி விடல் கூடாது. இவற்றை அறிந்து கொள்வதற்கு ஆசிரியன் பற்றிய அறிவு, ஆக்கம்பற்றிய பூரண விளக்கம் ஆகியன முக்கியமான வையாகும்.

கம்பனை அவனது காலத்தோடு இணைத்து நோக்கு வதற்குச் சில சிக்கற்பாடுகள் உள்ளன.

(அ) கம்பன் என்னும் கவிஞன் / மனிதன் பற்றிய வாழ்க்கை வரலாற்றுத்தகவல்கள் நம்மிடையே இல்லை யென்று கூறத்தக்க அளவுக்குக் குறை வானவையே.
கம்பன் காலம் பற்றிக் கூட இன்னும் ஏகோபித்த கருத்துக் கிடையாது. வையாபுரிப்பிள்ளை பரம்பரையினர் கி.பி. 12ஆம் நூற்றாண்டு என்பர். தெ.பொ.மீ. வழிவந்தோர் கி.பி.9ஆம் நூற் றாண்டு என்பர்.

(ஆ) கம்பன் இயற்றிய நூலின் 'வகை' யைத்தீர்மா னிப்பதிலுள்ள சிக்கல்கள்.
இந்திய இலக்கிய மரபில் அது இதிகாசமாகும். தமிழில் அதனைக் 'காவியம்' எனலாமா என்பது ஒருமுக்கிய பிரச்சினை.
இப்பிரச்சினை பெரிய புராணம் பற்றியுமுண்டு. அதனையும் வடமொழிப் புராண இலக்கண முறையைக் கொண்டு வகைப்படுத்த முடியாதுள் ளது.
கம்பராமாயணமும், பெரிய புராணமும் முற்றிலும் தமிழ் நிலைப்பட்ட இலக்கியங்களாகக் காணப்படு கின்றன.

"பேரிலக்கியம்" என்ற தொடரும் இந்நூல்களை விளங்கிக் கொள்வதற்குப் பெரிதும் உதவாது. அது 'சிற்றிலக்கியத்'தின் எதிர்நிலையாகும். பேரிலக்கியம் என்பது தரஅடிப்படை கொண்டது என்னில், கம்பராமாயணம், பெரிய புராணம் ஆகியவற்றின் இலக்கியத் தரத்திற்கு இணை யாகாத "பெரிய அளவி"லான ஆக்கங் களை மதிப்பிடுவது சிரமமாகிவிடும்.

கம்பன் என்னும் "மனிதன்" பற்றிய தரவுகள் இல்லாத நிலையில் அவனது ஆக்க ஆளுமையையும் அவனது 'கருத்துநிலை'ப்பாட்டையும் அவனது ஆக்கம் மூலம் அறிந்து கொள்ளமுனைவது பயன்தரக்கூடிய ஒரு முயற்சியாகும்.

இவ்வாய்வினை நாம் இருவகையில் நோக்கலாம்.

ஒன்று – அக்கால இலக்கிய உற்பத்தி நெறிகளுக் கமைய அவனது ஆக்க ஆளுமையை அறிய முனைதல்

மற்றது – இராமாவதாரத்தின் அமைப்பமிசங்களி னூடாக ஆசிரியரது ஆக்கங்களுக்கமைய அறிதல்.

கம்பராமாயண காலத்து இலக்கிய ஆக்கங்களெனப் பேணப்பட்டுக் கையளிக்கப்பட்டுள்ளவை.

(I) அரசவைகளையும் கோயில்களையும் மையமாகக் கொண்டவை.

(II) சமண, பௌத்த நிறுவனங்களுடன் ஏதோ ஒரு வகையில் தொடர்பு கொண்டு விளங்கியவை.
உரைவிளக்கங்கள் இலக்கணநூல்கள் ஆதியன முதலில் சமண, பௌத்தசார்புடையனவாகவே காணப்படுகின்றன.
சற்றுப் பின்னர் சைவ, வைஷ்ணவ நிறுவனங்கள் முக்கியமானவையாகின்றன.

இக்காலத்து ஆக்க இலக்கியங்கள் பெரும் பாலும் கோயிற் பண்பாட்டின் வெளிப்பாடாகவே காணப்படுகின் றன. கோயில் என்னும் சொல் அரண்மனைக்கும் ஆலயத்துக்குமான பொதுப்பெயராகும். மன்னர்களின் ஆளுமைகள் எவ்வாறு முனைப்புப் படுத்தப்பட்டன என்பது இவ்வுண்மையால் நன்கு புலனாகின்றது.

இந்துக் கோயிற் பண்பாட்டினுள், அரச ஆதரவு வைஷ்ணவத்திலும் பார்க்க, சைவத்துக்கு அதிகம் கிட்டிற்று.

இப்பின்புலத்தில் நோக்கும் பொழுது கம்பராமாயணம் அரசவை ஆதரவுடன் எழுதப்பட்ட நூல் அல்ல என்பது முதற்கண் தெளிவாகின்றது. ஆனால் அது பக்தியியக்கத்தின் பெறுபேறான இலக்கியமே என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை. கம்பன் சித்திரிக்கும் இராமன் ஆழ்வார்களின் பாடல் வழியாகச் சித்திரிப்பு முழுமை பெற்ற ஒரு தெய்வப் பாத்திரமே என்பது ஆராய்ச்சியால் நிறுவப்பட்டுள்ளது. விஷ்ணு அவதாரமான இராமனுக்குக் கோயில்கள் தமிழ் நாட்டிற் கட்டப் பெற்ற தன் பின்னரே இராமாயணம் தோன்றுகின்றது.

இந்த முரண்பாட்டினைக் கூறும்பொழுது ஒரு முக்கிய வரலாற்றுண்மையை வற்புறுத்துவது அவசியம்.

கி.பி. 7முதல் 9–ஆம் நூற்றாண்டு வரை வளர்ந்து நின்ற பக்தி இயக்கத்தினைச் சோழப் பெருமன்னர் தமது நிர்வாக ஒருங்கிணைப்புக் கான ஒரு கருத்துநிலைப் பிணைப்புச் சங்கிலியாகக் கொள்கின்றனர். கோயில்கள் ஆண்டவனின் ஆலயங்களாக மாத்திரம் அமையாது சோழ நிர்வாக அமைப்பின் முக்கிய மையப்புள்ளிகளில் ஒன்றாகவும் அமைகின்றன. சைவத்தைப் பொறுத்த வரையில் அமைச்சர் ஒருவரே அடியார் வரலாற்றையும் எழுதி (சேக்கிழார்) இத்தொடர்பின் உதாரணமாகிறார்.

கம்பராமாயணம் அடிப்படையில் வைஷ்ணவ நூலே. அதன் இலக்கியச் சிறப்பே அதற்குக்கோயில் இலக்கியங் களுக்கு அப்பாலான முக்கியத்துவத்தை வழங்கிற்று.

கம்பன் அரசவையைச் சார்ந்தவனல்லன், சமகால அரச விருதுகளைப் பெற்றவனுமல்லன். அவ்விருதினைப் பெற்றவர்கள் எழுதிய இலக்கியங்களின் அரசியல் முக்கியத்துவத்தை நாம் மறந்து விடக் கூடாது (ஒட்டக் கூத்தர் – மூவருலா; சயங்கொண்டார்–கலிங்கத்துப் பரணி).

சோழப் பெருமன்னர்களின் ஆதரவுக் குட்படாத ஒரு புலவன் இராமாயண இதிகாசத்தைப் பக்தி இலக்கிய மரபு வளர்த்த இலக்கியநெறி நின்று படைக்கின்றான். நிலக்கிழார் ஒருவரே அவனது போஷகராக விளங்கினார்.

பக்தி அநுபவத்தின் பிரதான அமிசம் பக்தன் இறைவனுடன் தான் கொள்ளும் உறவைச் சொந்த உறவுநிலைப் படுத்துவதும், தனிநிலைப் படுத்துவது மாகும். இதன் காரணமாகத் தெய்வங்கள் மனித நிலைப்படுத்திப் பார்க்கப்படுகின்றன. தெய்வங்களோடு மனித நிலை உறவுகளே மேற்கொள்ளப்படுகின்றன.

கம்பன் இந்தப்பக்தி அநுபவத்தை, அரண்மனைத் தேவைகளுக்கு ஆற்றுப் படுத்தாமல் எவ்வாறு பயன் படுத்துகிறான் என்பது முக்கியமான ஒருவினாவாகும்.

இந்த வினாவினைக் கிளப்பும் பொழுது, இரு விடயங்கள் பற்றிய அறிவு எமக்கு அவசியமாகின்றது.

(I) தனது ஆக்கத்தினை அவன் எவ்வாறு அமைத்துக் கொள்கின்றான்–அதாவது உருவாக்கம் செய்கின் றான்–என்பது

(II) கதையோட்டத்தை எவ்வாறு சித்திரிக்கின்றான் என்பது. அதாவது அவன் கதையோட்டத்தைச் சித்திரிக்கும் பொழுது, என்ன விடயங்கள், கருத்துகள் முக்கியமானவையாக மேற் கிளம்பு கின்றன என்பதை அறிதல்.

ஆக்க அமைப்பில், கம்பன் வால்மீகியைப் பெரும்பாலும் பின்பற்றுகின்றான் என்பதும், ஆனால் சில இடங்களில் சிலமுக்கியமான மாற்றங்களைச் செய்துள்ளான் என்பதும் நமக்குத் தெரிந்ததே.

அவ்வாறு அவன் செய்த மாற்றங்களைக் கொண்டு கம்பனின் ஆளுமை (Personality) எத்தகையது என்று நாம் ஊகிக்கலாமா என்பது முக்கியமான ஒரு வினாவாகும்.

ஏறத்தாழ ஆயிரம் வருடங்களின் பின்னர், கதைப் பொருளும் வரலாற்றுப் பின்னணியும் பண்பாட்டுச் சூழலும், மாறியிருந்த நிலையில் கம்பனால் மாத்திரமல்ல; எந்த இரண்டாந் தரப்புலவனாலுமே வால்மீகியை அப்படியே பிரதி செய்தல் முடியாது. மஹாகவியாகிய கம்பன் நிச்சயம் மாற்றங்களை ஏற்படுத்தியிருப்பான். அந்தமாறுபாடுகள் தவிர்க்கப்படமுடியாதவையே. ஆனால் மாறுபடும் இடங்களின் தன்மையைக் கொண்டு கம்பனின் ஆக்க ஆளுமையை நாம் இனங்கண்டு கொள்ளலாம்.

இக்கட்டுரையில், கம்பன் கதை யோட்டத்தினைச் சித்திரித்த முறைமை வழியாகத் தெரியவரும் அவனது ஆக்க ஆளுமையைச் சுட்டவிரும்புகிறேன்.

கம்பராமாயணம் தமிழின் காப்பிய வழியிலேயே யுள்ளது காப்பியத்தின் அச்சாணியான அமிசம் 'கதையைச் சொல்லிசெல்வது' (Narration) ஆகும். கதையைச் சொல்லிச் செல்லும் முறைமைகள் பலவுள. ஆசிரியன் தானே முன்நின்று சொல்லிக் கொண்டு செல்வது. ஒரோரிடங்களில் ஆசிரியர் பாத்திரங்களின் இயக்கம் மூலம் கதைப் போக்கினைச் சுட்டலாம். அப்படிச் செல்கின்ற பொழுது அது நாடகப் போக்கினையுடைய கதை சொல்லும் முறையாகின்றது. நாடகத் தன்மையையும்

கதை கூறு முறைமையையும் இணைப்பது இத்தகைய ஆக்கத்தின் சிறப்பை எடுத்துக் காட்டுவதாக அமையும்.

இராமதாரம் என்ற பெருங்கதையினோட்டத்தைக் கம்பன் எந்த ஒரு வேளையிலும் மறக்காதவனாய், இராமனுடைய அவதாரத் தேவையை உணர்ந்தவனாகத் தொழிற்பட்டுள்ளமை எவருக்கும் தெரிந்ததே. ஆனால் அந்த முழுப்பார்வை சட்டத்துள் நின்று கொண்டு கதையை அவன் 'நகர்த்திச்' செல்லும் முறைமை நோக்கப் படல் வேண்டும். ஆசிரியன் தானே கதையாகக் கூறி அதனை நகர்த்தாமல், பாத்திரங்களின் இயக்கத்தால் கதை தானே அடுத்தடுத்த கட்டங்களுக்குச் செல்வதான ஓர் உத்தி இராமாயணத்துள் தொழிற்படுவதை நாம் அவதானிக்கத்தவறக் கூடாது.

இது எவ்வாறு செய்யப்படுகின்றது? கம்பனிடத்து இராமாயணக் கதை வளர்ச்சியானது பாத்திரங்களின் ஊடாட்டம் மூலமாகவே நிகழ்கின்றது. கதையின் வளர்ச்சி பாத்திரங்களின் 'உறவு' மூலமாகவே கொண்டு செல்லப்படுகின்றது. இவற்றுட் சில இனிமையான உறவுகள், சில மோதல் நிறைந்தவை. ஆனால் இந்த உறவுகள் மூலமாக ஒவ்வொரு புதிய கட்டங்கள் தோன்றுகின்றன. அந்தக் கட்டங்கள் இராமாயணம் என்ற இதிகாசத்தேரின் ஏற்கனவே தெரியப்பட்ட பயணத்தைத் தர்க்க ரீதியான வளர்ச்சியுடன்; ஆனால் அந்தக் கட்டம் ஏற்படுத்தும் அங்கலாய்ப்பு, அந்தரம், ஏக்கம், எதிர்பார்ப்புகள் ஆகிய வற்றுடன் இழுத்துச் செல்கின்றன. கட்டங்கள் ஏற்படுத்தும் அங்கலாய்ப்புகள் இறுதி முடிவின் நிச்சயிக் கப்பட்ட தன்மையையோ, இறுதி முடிவின் நிச்சயிக்கப் பட்ட தன்மை அவ்வச் சட்டங்களின் நாடகநிலைப்பட்ட முக்கியத்துவத்தையோ எவ்விதத்திலும் குறைக்க விடாது கொண்டு செல்வதிலேயே கம்பராமாயணத்தின் சிறப்புக் காணப்படுகிறது. மேற்குறிப்பிட்டமோதல்கள் 'முக்கியத் துவம்' நிறைந்த உறவுகளை ஒவ்வொருகாண்டத்திலும் காணலாம்.

| | | |
|---|---|---|
| பாலகாண்டம் | – | தாடகை வதை<br>அகலிகை சாபவிமோசனம்<br>பரசுராமன் சந்திப்பு<br>சீதாகல்யாணம் |
| அயோத்தியாகாண்டம் | – | மந்தரை சூழ்ச்சி<br>வரங்கேட்கப்படும் முறைமை<br>வரம் கொடுக்கப்பட்டதால்<br>ஏற்படுவன |
| ஆரணிய காண்டம் | – | விராடன் வதை<br>சூர்பணகை சந்திப்பு<br>இராவணன் 'வருகை'<br>சீதை கவரப்படல் |
| கிஷ்கிந்தாகாண்டம் | – | அனுமன் சந்திப்பு<br>வாலி வதை |
| சுந்தரகாண்டம் | – | சீதையின் நிலை<br>அனுமன் – சீதை சந்திப்பு |
| யுத்தகாண்டம் | – | கும்பகர்ணன்–இராவணன் சந்திப்பு<br>விபிஷணன்–கும்பகர்ணன் சந்திப்பு<br>இந்திரசித்து வதை<br>இராம இராவணயுத்தம்<br>சீதை–இராமர் சந்திப்பு<br>இராமர் நாட்டுக்குத் திரும்புதல் |

மேற்கூறப்பட்ட ஒவ்வொரு ஊடாட்டமும் கதையின் வளர்ச்சிக்கும் பாத்திரங்களின் தன்மை வெளிப்பாட்டுக்கும் எத்துணை முக்கியமானவை என்பதை இங்கு வலியுறுத்த வேண்டிய தில்லை.

ஆயினும், இந்த ஊடாட்டங்கள் ஒவ்வொன்றும், வெறும் பாத்திரங்களின் சந்திப்பு மோதல்களாக இல்லாது, அவற்றினூடே நிகழும் கருத்து இயைபு மோதலைக் காட்டி நிற்கின்றமையை வற்புறுத்துவது அவசியமாகின்றது.

இந்த அமிசத்திலேயே கம்பனுடைய ஆக்க ஆளுமை பளிச்சிடுகின்றது. எந்த ஒரு 'மோதலை'யோ, ஊடாட்டத்தையோ (Internation) தனிமனித விடயமாக் காது, ஒரு கருத்து நிலைமோதலாகவோ ஊடாட்டமாக வோதான் கம்பன் காட்டுகின்றான்.

இந்த அமிசத்தினை இக்காலத்திலேதோன்றிய மற்றைய ஆக்க இலக்கியங்களிலே காணமுடியாதுள்ளது.

காவிய நாயகனையே கிண்டல் செய்யும் ஒரு கதாபாத்திரத்தை (வாலி) கம்பன் படைத்துள்ளான். இராமனே மறந்த இராமனது தெய்வத் தன்மையை நினைவூட்டுவது வாலியும் அநுமனும் தான்.

இந்த அணுகுமுறைக்கு அச்சாணியாக அமைவது கம்பனது 'மானிடநோக்கு' அதாவது எந்தப் பாத்திரத்தையும், எந்தப் பிரச்சினையையும் 'மனித – நிலை'ப்படுத்திப்பார்க்கும் பண்பு. வைஷ்ணவத்தின் அவதாரக் கோட்பாடு இதற்கு உதவுகின்றது என்பது ஒரு முக்கிய உண்மையாகும். இராமனுக்கும், வாலிக்கும், இராவணனுக்கும், ஏன் சீதைக்கும் ஏற்படும் நிலைமைகள் யாவும் 'தர்மசங்கடமானவை'யே இந்தத் தர்மசங்கடங் களை ஒவ்வொரு பாத்திரமும் தத்தமக்குரிய அடிப்படை யான குணநலங்களுடன் எதிர்நோக்குகின்றன. இதனால்

ஒரு தெய்வமாக்கதை, மானுடத்தின் உறவு விளக்கமாக அமைகின்றது.

கம்பனின் இந்த ஆக்க ஆளுமைக்கூறு எங்கிருந்து வருகின்றதென்பது முக்கியமான ஒரு வினாவாகும்.

இக்கட்டத்தில் இராவணன், கும்பகர்ணன் ஆகியோர் (அரக்கர்கள்) இராம இலட்சுமணர்களை 'மனிதர்'களாகவே சுட்டுகின்றனர் என்பதை மறந்து விடக் கூடாது.

அதாவது

*"முன்புற அனையர் பால் அன்பு முற்றினை*
*வன்பகை மனிதரின் வைத்த வன்பினை*
*என்புற உருகுதி........................*

*வீடணன் அடைக்கலப்படலம் – 5*

*"மானிடர் இருவரை வணங்கி மற்று அக்*
*கூனுடைக் குரங்கையும் கும்பிட்டு உய்தொழில்*
*ஊனுடை உம்பிக்கும் உனக்குமே கடன்"*
*.....................*

*கும்பகருணன்வதைப்படலம் – 92*

இவ்வாறு மனிதத் தன்மையைக் கம்பன் அடிக்கடி வற்புறுத்தும் பொழுது அவனைப்பற்றிக் கூறப்படும் சோழ அரசர் பகைமைக் கதை முக்கியமானதாகுகின்றது.

அக்காலத்தின் மற்றைய பிரபல கவிஞர்கள் அரசவைக்கவிஞர்களே. கம்பனோ சோழ மெய்க்கீர்த்தி களைப் பாடியவன் அல்லன். மாறாகச் சோழ அரசனோடு வன்மையான கருத்து வேறுபாடு கொண்டிருந்தான் என்றும், அரசன் ஒருவனை ஏசினான் என்றும் கர்ணபரம்பரைக் கதைகள் கூறுகின்றன. சடையப்ப வள்ளலைப்புகழ்ந்த அளவுக்குக் கம்பன் 'தியாக' விநோதனைப் புகழ வில்லை.

கம்பனது மக்கள் நிலைத் தொடர்புகள் பற்றிக் கர்ணபரம் பரைக்கதைகள் பல தகவல்களைத் தருகின்றன.

கம்பனது குலமும் இவ்விடத்தில் குறிப்பிடப் படவேண்டியதாகின்றது. கம்பன் உவச்சர் குலத்தைச் சேர்ந்தவன். உவச்சர் என்போர் கோயிலில் மேளம் வாசிக்கும் குலத்தினர் என்று கூறப்படுகின்றது. கம்பனது கலைப்பாரம்பரியம் இதனால் நிறுவப்படு கின்றது. அதே வேளையில் அவன் உயர்சமூகத்தைச் சார்ந்தவன் அல்லன் என்பதும் நிறுவப்படுகின்றது.

கம்பன் அரசவையிலிருந்து அந்நியப்பட்டு நின்றதை நோக்கும் பொழுது கம்பராமாயணம் யுத்த காண்டத்தில் வரும் இரணியன் வதைப் படலம் மிக முக்கியமானதாகின்றது.

கம்பனுடைய கருத்துநிலையை விளங்கிக் கொள்வதற்கு இப்படலம் மிக முக்கியமானது என்பதை நானறிய முதன் முதலில் எடுத்துக் கூறிய பெருமை தஞ்சை திரு. கா. வீரையனைச் சாரும். அவர் தான் எழுதிய 'கம்பனும் பக்தி இயக்கமும்' என்ற நூலில் (திருவெண்காடு : 1979) கம்பர் தமது இராமாயணத் தினுட் கொண்டுவந்த, வான்மீகத்தில் இல்லாத "இரணியன் வதைப்படலம்" எவ்வாறு எவ்வாறு அரசனுடைய எதேச்சாதிகாரத்தையும், அந்த எதேச் சாதிகாரத்தின் கையாளாக விருந்த அந்தணர் நிலைப் பாட்டையும், பக்தி நிலை நின்று பிரகலாதன் எதிர்க் கின்றான் என்பதையும் எடுத்துக் கூறுகின்றார்.

*"செவிகளால் பல கேட்டிலர் ஆயினும், தேவர்க்கு*
*அவிகொள் நான்மறை அகப்பொருள் புறப்பொருள் அறிவார்*
*கவிகள் ஆகுவார் காண்குவார், மெய்ப்பொருள் – காலால்*
*புவிகொள் நாயகற்கு அடியவர்க்கு அடிமையின்புக்கார்"*

*இரணியன்வதைப்படலம்: 32*

இரணியன் வதைப் படலத்தில் பிரகலாதன் கூறுபவை எவ்வாறு பக்தி நிலை கொண்டு அரச எதேச் சாதிகாரத்தை எதிர்த்து நிற்கலாம் என்பதைக் காட்டுகின்றது.

இப்படலத்தில் கம்பன் தனது நிலைப்பாட்டை ஐயந்திரிபற எடுத்துக் கூறுகிறான். இப்படலம் வான்மீகி இராமாயணத்தில் இல்லாதது என்பதை மீட்டும் வலியுறுத் தல் அவசியம்.

இவ்வாறு நோக்கும் பொழுது கம்பனின் கருத்து நிலைத் தளங்களுள் ஒன்று–முக்கியமானது–அவன் எதேச் சாதிகாரத்தை எதிர்த்தமையாகும். அவன் மனித நிலைப்பட்ட உறவை, மானுடத்தின் முக்கியத்துவத்தை வற்புறுத்தினான். இந்நிலையின் தர்க்கரீதியான முடிவு. அவனை அரசவைக் கவிஞனாகவிருக்க விட்டிருக்காது. கர்ணபரம்பரைக் கதைகள் சில பழைய நினைவுகளைப் பேணுவனவாகக் கொள்ளப்படவேண்டும்.

இப்படிக் கூறும் பொழுது கம்பனை 'நவீன பொருள் முதல் வாதியாக' நோக்கும் ஆபத்திலிருந்து நம்மை அப்புறப்படுத்திக் கொள்ளவேண்டும்.

கம்பன் இராமவதாரத்தை, வைஷ்ணவத்தை நம்பியவன். ஆனால் அந்த நம்பிக்கை தெய்வத்தை மனித உருவில், உறவில் பார்க்கும் பக்தி இயக்கத்தின் வழி வந்த தாகும்.

பக்தி அரசமயமாக்கப்படுவதைக் கம்பன் எதிர்த்தவன் என்று கொள்வதிலே தவறு இருத்தல் முடியாது.

பக்தி இயக்கம் தமிழ் நாடு இந்தியப்பண்பாட்டுக்கு அளித்த பெருஞ்செல்வம். அந்த வளத்தின் ஊடாகவே தமிழின்மிகப் பெரிய கவிஞன் கம்பன் தோன்றினான்.

# வாலி வதைக் கதை -ஓர் உளவியல் விமரிசன அணுகுமுறை

பேராசிரியர் - ஆ- வேலுப்பிள்ளை

மகாபாரதமும் இராமாயணமும் வடமொழியில் உருவான இதிகாசங்கள். மகாபாரதத்தை வட இந்தியாவுடன் மட்டும் சம்பந்தப்பட்ட கதையென்று பொதுவாகக் கூறலாம். அரிச்சுனன் தீர்த்த யாத்திரையின் பொருட்டுத் தென் இந்தியாவுக்கும் வந்தான் என்று கூறப்பட்டுள்ளது. இராமாயணம் இலங்கையோடு தொடர்புபடுகிறது. வால்மீகி இராமாயணத்திலே கூறப்படும் இலங்கை எம்முடைய நாடு அல்லவென்றும் கோதாவரி ஆற்றிலுள்ள ஓர் ஆற்றிடைக்குறையேயென்றும் ஒரு கருத்து முன்வைக்கப்பட்டுள்ளது. அது எவ்வாறாயினும் தமிழர்களிடையே இராமாயணம் பிரசார மெய்தியதிலிருந்து இராமர், தமிழ்நாடு ஊடாக, சேதுஅணை அமைத்து இலங்கைத் தீவுக்குச் சென்றாரென்றே கருதப்பட்டு வருகிறது. சங்ககால, சங்கமருவியகால நூல்களில் வரும் இராமாயணக் கதைக்குறிப்புக்களைப் பார்க்கும்போது, இந்த அபிப்பிராயமே ஏற்படுகிறது.

பல்லவர் காலத்திலே சைவசமய குரவர்களும் வைணவ ஆழ்வார்களும் இராமாயணக் கதைக் குறிப்புகளைத் தாராளமாகவே எடுத் தாண்டுள்ளனர். இரண்டு சாராரும் இராமாயணக் கதைக் குறிப்புக்களைக் கையாள்வதிலே ஒரு முக்கிய வேறுபாட்டைக் காணலாம். இராமசரிதத்தின் பல்வேறுகூறுகளையும் ஆழ்வார்கள் அறிமுகப்படுத்தி, சோழப்பெருமன்னர் காலத்திலே கம்பராமாயணம் தோன்ற வழி திறந்திருக்கின்றார்கள். சைவசமய குரவர்கள் இராவணன் கதையையே பாடியுள்ளார்கள். இராவணன் அகந்தை காரணமாகக் கயிலாசமலையைப் பெயர்க்கமுயன்றதையும், சிவபிரான் பெருவிரலால் அழுத்தி இராவணனை நெரியச் செய்ததையும், தவறு உணர்ந்து வருந்திச் சாமகீதம் பாடிய இராவணனுக்குச் சிவபிரான் அருள்செய்து பல வரங்களும் வாளும் வழங்கியமையுமே திருஞானசம்பந்தராலும் திருநாவுக்கரசராலும் பலவாறு பாடப்படுகின்றன. இராவணன் தேவியாகிய மண்டோதரிக்குச் சிவபிரான் அருள் செய்தமையே மாணிக்கவாசகராற் பாடப்படுகிறது. இராவணன் குடும்பம் சிவனருள்பெற்ற சிவனடியார் குடும்பம் என்று கருதுவதற்குச் சைவசமயகுரவர்களின் கூற்றுகள் இடந்தருகின்றன.

இராவணனுக்கு ஓர் உன்னத இடம் வழங்கிய தமிழ்நாட்டுச் சூழல் கம்பனிலே பாதிப்பை ஏற்படுத்தியிருக்கின்றது. சிவனருள் பெற்ற இராவணனை வெல்லவல்லனாக இராமனை உயர்த்தவேண்டிய தேவை கம்பனுக்கு ஏற்பட்டிருக்கிறது.

வால்மீகி இராமாயணத்தையும் கம்பராமாயணத்தையும் ஒப்பிடுவோர் சிலர், முதல் நூலிலே இராமன் உத்தமபுருடனாக மட்டும் காட்சியளிக்க, வழிநூலிலே அவன் அவதாரமூர்த்தியாகிவிடுகிறானென்று சுட்டிக் காட்டுவர். இராமன் அவதாரமூர்த்தி என்பதை ஆழ்வார்கள் ஏற்றுள்ளனர். இராவணன் மாமன்னன் என்று சைவசமய குரவர்கள் கொண்டுள்ளனர். இராவணனை வெல்லவல்ல அவதாரமூர்த்தியாக, இராமனை உயர்த்திப் படைக்கவேண்டிய கடப்பாடு, கம்பனை வழிநடத்தியிருக்கிறது.

இராமாயணக் கதையை முழுவதாக நோக்கும் போது, வாலியை ஒரு சிறு பாத்திரமாகவே கொள்ளவேண்டும். கிட்கிந்தா காண்டத்திலே, இராமன் சுக்கிரீவன், அனுமன் என்னும் பாத்திரங்களைத் துணைக்கொள்வதற்கு வழியாக வாலிவதைப்படலம் அமைக்கப்பட்டிருக்கின்றது. இராம–இராவண யுத்தம் மிக விரிவாக யுத்த காண்டத்திலே பேசப்பட, வாலிவதை ஒரு படலமாக மட்டும் அளவிலே சிறிய காண்டங்களுள் ஒன்றான கிட்கிந்தா காண்டத்திலே கூறப்படுகிறது. வாலிவதை விரைவில் நடைபெற்று முடிந்தபோதிலும், வாலி மிகப்பெரும் வீரனாகவே சித்திரிக்கப்படுகிறான். வாலி என்ற கதாபாத்திரம் வால்மீகியிலும் இடம் பெறுகின்றபோதிலும், வால்மீகி அவனைச் சித்திரித்த

வகையிலே அவன் ஒரு சோகநாடகத் தலைவன் போலத் தோன்றவில்லை.

சுக்கிரீவன், அனுமன் முதலியவர்களால் வெல்லமுடியாத வீரனாக வாலி இருந்திருக்க வேண்டும். வாலியைக் கொல்வதுமூலம் சுக்கிரீவனைத் தனக்கு நன்றிக்கடன்பட இராமன் வைக்கிறான். இராமனுடைய உதவிமூலம் சகலசம்பத்துகளையும் பெற்றுகொண்ட சுக்கிரீவன், இராமனுக்கு உதவியாகத் தன்னுடைய சகலவளங்களையும் பயன்படுத்துகின்றான். அகதியாக இருந்த சுக்கிரீவனை அரசனாக மாற்றும் இரசவாதத்தை இராமன் செய்தமையாலேயே இமயமலை அடிவாரத்திலுள்ள கோசலநாட்டைச் சேர்ந்த இராமன் தென்னிந்தியாவிலிருந்து கிட்கிந்தா நாட்டுப் படைகளின் துணைகொண்டு இலங்கையை அடிபணியச்செய்ய முடிந்தது.

இராவணனைத் தீயவனாகக் காட்டி, அவனுடைய அழிவுக்கும் வீபீடணனை நல்லவனாகக் காட்டி, அவனுடைய ஆக்கத்துக்கும் இராமாயணம் வாசகர்களைத் தயார்ப்படுத்திவிடுகிறது. வீபீடணனைத் தமையனுக்குத் துரோகம் செய்தவனாகக் கருதி வெறுப்பவர் உண்டாயினும் இராவணனுடைய அழிவு தவிர்க்க இயலாதது என்றே பலர் கருதுகின்றனர். வாலியினுடைய அழிவுக்கும் சுக்கிரீவனுடைய ஆக்கத்துக்கும் கம்பன் வாசகர்களைத் தயார்ப் படுத்தவில்லை. வாலிவதை இராமன் செய்த பிழை என்ற எண்ணம் பலருக்கு ஏற்படுகிறது. அவதாரமூர்த்தியாகிய இராமன் தவறு இழைக்க மாட்டானாதலாலே, ஏதாவது நியாயம் கற்பிக்கச் சிலர் முனைவர். கவிச்சக்கரவர்த்தி கம்பன் இராமனைத் தாழ்த்திவிட்டானென்பது சிலர் கருத்து. கம்பன் விரும்பியிருந்தால், வாலியின் சிறப்புகளைக் குறைத்துப் படைத்திருந்தால், இராமனுடைய பெருமைக்கு இழுக்கு ஏற்பட்டிருக்காது என்பது உண்மையே.

கம்பராமாயணத்தில் வாலிவதைக்கதை சிறப்பாக, வாலிவதைப்படலம் மிகவும் விறுவிறுப்பான பகுதி. கம்பராமாயணத்திலே ஒரு சிறுபகுதியைப் பாடநூற் பகுதியாகத் தேர்ந்தெடுக்கவேண்டிய இடத்து வாலிவதைப்படலம் அனேகமாகத் தேர்ந் தெடுக்கப் படுவது உண்டு. இராமன் மறைந்துநின்று வாலியை அம்பெய்து கொன்றது சரியா, பிழையா என்பது பட்டிமன்றங்களிலும் விவாத மேடைகளிலும் காரசாரமாக விவாதிக்கப்படுவது உண்டு. சுமார் முப்பது ஆண்டு களுக்கு முன்பு பேராதனைப் பல்கலைக்கழகத் தமிழ்சங்க இதழான இளங்கதிரிலே, இலங்கைப் பல்கலைக்கழகத் தமிழ்துறை இலக்கிய விமரிசன முன்னோடியான பேராசிரியர் வி. செல்வநாயகம், 'கண்ணுற்றான் வாலி' என்ற தலைப்பிலே ஒரு சிந்தனைக்கட்டுரை எழுதினார். தமிழ்நாட்டு அறிஞர் இராமகிருஷ்ணன் ' சிறியன சிந்தியாதான் என்ற தலைப்பிலே வாலியின் பெருமையை உணர்த்தும் ஆய்வு நூல் வெளியிட்டார். சுமார் மூன்று ஆண்டுகளுக்கு முன்பு, அகளங்கன் என்பவர் ' வாலி' என்ற தலைப்பிலே, அகில இலங்கைக் கம்பன் கழக வெளியீடாக, ஒரு சிறந்த ஆய்வு நூல் வெளிக்கொண்டு வந்தார்.

வாலிவதைக் கதை பற்றிய ஆய்வுகளை நோக்கும்போது, வாலியின் பெருமைபற்றி எவருக்கும் ஐயம் ஏற்படுவதாகத் தோன்றவில்லை. இராமன் வாலியின் மேற் சுமத்தும் குற்றச்சாட்டுகளைக் குற்றங்களே என்று சாதிப்பவர்களும் குற்றங்கள் அல்ல என்று மறுப்பவர்களுமாக இருசாரார் உள்ளனர். குற்றங்களே என்று சாதிப்பவர்களும், இராமன் ஒரு தரப்பு நியாயத்தைக் கேட்டு, மறுதரப்பை விசாரியாது, மரணதண்டனை விதித்து, அதைத் தானே நிறைவேற்றியும் விட்டமையைக் கண்டு, மனம் குழம்புகின்றனர். வாலிவதைப்படல இறுதியிலே, வாலி இராமனைப் புகழ்ந்து பணிந்து ஏத்துவதாகக் கம்பன் பாடியுள்ள பகுதியை எடுத்துக்காட்டித் தம்முடைய கட்சியை வலுப்படுத்துகின்றார். வாலிவதைக் கதையை உளப்பகுப்பு நோக்கில் (paycho- analyticview) அணுகுவதாக இக்கட்டுரை அமைகிறது.

கம்பன் தான் இயற்றிய நூலுக்கு வைத்த பெயர் 'இராமாவதாரம்' என்பது பிரசித்தமானது. இராமன் திருமாலின் அவதாரம் என்பதைக் கம்பன் ஆங்காங்கே குறிப்பிட்டுச் செல்கிறான். கம்பராமாயணம் வைணவர்களின் பாராயண நூலாகப் பயன்பட்டு வருவது. இந்தநூலின் சிறப்பு இதுமட்டும் அல்ல; இது தமிழிலே தோன்றிய தலைசிறந்த இலக்கியமுமாகும். மானிடனாகப் பிறந்த வளர்ந்த இராமன் மானிடப் பண்புகள் அற்றவனாகக் கம்பனால் சித்தரிக்கப் பட்டிருந்தால், கம்பனுடைய நூல் சிறந்த இலக்கிய மாகியிருக்க முடியாது. அவதாரமூர்த்தி மானிடப் பலவீனங்கள் என்ற நோக்கிலே மானிடப் பண்புகள் இல்லாதவனாக உருவாயிருந்தால், இலக்கியப் படைப்பாளி என்ற முறையிலே கம்பன் தோற்றிருப்பான். மனிதனும் தேவனும் முழுமுதலும் கலந்த ஒருவகைப் பாத்திரப்படைப்பே இராமனாகும். இராமனை இடையிடை சாதாரண மனிதனாக– பொதுமனிதனாக – காண்பதால்தான் வாசகர்கள் இராமனோடு ஒட்டி உறவாட முடிகிறது. இராமனுடைய சுகதுங்கங்களிலே பங்கேற்க முடிகிறது; இராமனைப் புரிந்துகொள்ள முடிகிறது.

மறைந்து நின்று அம்பு எய்த இராமன், மார்புதுளைக்கப்பட்ட வாலியின் முன்னிலையிலே தம்பி இலக்குமணனோடு வந்து தோன்றுகிறான். குற்றமேது மற்ற தன்னைக் கொல்வதற்காக, இராமன் அம்பு தொடுத்தது ஏன் என்று வாலி வினாவுகிறான். இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களிலே ஏன் செய்தது என்ற வினாவை எழுப்புவதாற் பயனில்லை என்பது உளப்பகுப்பாளரின் கருத்து. ' ஏன்செய்தேன்?' என்ற

வினாவை ஒருவர் எழுப்பினால்கூட, உண்மையான காரணத்தை (Cause) அல்லது நோக்கத்தை (Motive) க் கண்டுகொள்ளாது, மனச்சாட்சியை மழுங்கடிக்கச் செய்யும் சமாதானத்தையே ( reason) அவர் எண்ணுவர். ஏன் செய்தேன்? என்பதற்கு விடைகூறும்போது ஒருவருடைய உள்ளம் அவரையே ஏமாற்றக் கூடுமானால், 'ஏன் செய்தாய்? என்று பிறரை வினாவும்போது, அவர்கூறும் விடை உண்மையான நோக்கத்திலிருந்து வெகுதூரம் விலகிச் சென்றுவிடும். சமாதானமாக . அல்லது நியாயமாக அமையும் இத்தகைய விடை 'rationalisation' எனப்படும். செயலை நியாயப்படுத்தும் இத்தகைய விடையில் நியாயமான அளவு உண்மை நோக்கத்தைக்கூட எதிர்பார்க்கக்கூடாது. வலிமை குறைந்தவனும் குற்றமற்றவனுமான சுக்கிரீவனை அடித்துத் துன்புறுத்திக் கொலைசெய்ய முயன்றது, தம்பியின் தாரத்தைத் தனதாக்கிக்கொண்டது என்பன வாலியைக் கொல்வதற்கான இரண்டு 'காரணங்கள்' என இராமன் கூறியுள்ளபோதிலும் அவை, 'நியாயங்கள்' எனவே கொள்ளத்தக்கன. ஒரு தரப்பினர் மறுதரப்பினர்மீது சுமத்திய குற்றச்சாட்டுகளை அப்படியே நம்பி, மறுதரப்பினருக்கு மரணதண்டனை நிறைவேற்றுவது இராமனுக்குப் பெருமை தராது.

வாலியைக் கொன்றதற்கு இராமன் கூறும் நியாயங்களை, கம்பன் செய்யுள்களிலேயே காணலாம்.

***பிலம்புக்காய் நெடுநாள் பெயராய் எனப்***
***புலம்புற்று உன்வழிப் போதலுற்றான்தனைக்***
***குலம்புக்கு ஆன்றமுதியர் குறிக்கொள்நீ***
***அலம்பொற் றாரவனே அரசு என்றலும்.***

***வானம் ஆள என் தம்முனை வைத்தவன்***
***தானும் மாளகிளையிறத் தடிந்து***
***யானும் மாள்வென் இருந்தரசாள்கிலென்***
***ஊனமான உரை பகர்ந்திரென***

***வந்த உன்னை வணங்கி மகிழ்ந்தனன்***
***எந்தை என்கண்இனத்தவர் ஆற்றலின்***
***தந்த உன்னர சென்று தரிக்கிலான்***
***முந்தை யுற்றதுசொல்ல முனிந்து நீ.***

***கொல்லல் உற்றனை உம்பியை கோது அவற்கு***
***இல்லை என்பது உணர்ந்தும் இரங்கலை***
***அல்லல் செய்யல் உனக்குஅபயம்;பிழை***
***புல்லல் என்னவும் புல்லலை பொங்கினாய்***

***ஈரம் ஆவதும் இற்பிறப்பு ஆவதும்***
***வீரம் ஆவதும் கல்வியின் மெய்ந்நெறி***
***வாரம் ஆவதும் மற்றொருவன் புணர்***
***தாரம் ஆவதைத் தாங்கும் தருக்கரோ.***

***தருமம் இன்னது எனுந் தகைத் தன்மையும்***
***இருமையும் தெரிந்து எண்ணலை; எண்ணினால்***
***அருமை உம்பிதன் ஆருயிர்த் தேவியைப்***
***பெருமை நீங்கினை எய்தப் பெறுதியோ.***

( வாலி 100,101,103,104, 107,109)

வாலியை இராமன் கொன்றதற்கான காரணத்தைக் கம்பன் கூறிவரும் கதைப்போக்கிலிருந்து அனுமானிக்கவேண்டும். இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றமையிலிருந்து இராமாயணக் கதையை உற்று நோக்கிவரவேண்டும். சீதையைப் பறிகொடுத்து, அவளை எண்ணி ஏங்கித் தவித்து மனங்கலங்கிப்போன இராமன் சாதாரணமனிதன் நிலையிலேயே காணப்படுகிறான். அந்தநிலையிலிருந்த இராமன் மனத்திலே, சுக்கிரீவனைத்துணைக்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் கருக்கொள்கிறது. ஆரணிய காண்டத்திலேயே, கவந்தன் இராமனுக்கு அறிவுரை கூறி, சுக்கிரீவனைத் துணைக்கொள் என்று கூறுகிறான். சபரியும் சுக்கிரீவனைப் பற்றிச் சொல்லி, அவனைத் துணைக்கொள் என்று இராமரிடம் கூறினாள். சுக்கிரீவன் நல்லவன் என்ற கருத்து, இராமனுடைய உள்ளத்திலே, இவர்களால் ஊன்றப்பட்டு விட்டது. சுக்கிரீவனைத் துணைக்கொண்டு, சீதையைத் தேடியடைய விரும்பிய இராமன், சுக்கிரீவனுக்குப் பகைவனாகிவிட்ட காரணத்துக்காக வாலியை ஒழித்துக்கட்டுகிறான்.

கதைப்போக்கை உற்றுநோக்கும்போது, சுக்கிரீவன் குற்றமற்றவன் என்று கூறிவிட முடியாது. வாலி அவனைப்பற்றி ஐயப்படத்தக்க நிலையிலேயே அவன் நடந்துகொண்டிருந்தான். மாயாவி வாலியோடு பொருது, ஆற்றாது மலைக்குகையுட் புகுந்து மறைந்தபோது, சுக்கிரீவனைக் குகைவாயிலிலே காவலுக்கு வைத்துவிட்டு, வாலி குகைக்குட் புகுந்து மாயாவியைத் தேடிச்சென்றுவிட்டான். தன்னை நேரில் எதிர்த்துப் போர் செய்பவரின் பாதிப்பலம் தனக்குச் சென்று சேரும் வண்ணம் வரம் பெற்ற வாலி, மாயாவியிடம் தோற்றிருக்க முடியாது என்பதை அறிந்திருந்த நிலையிலும் சுக்கிரீவன், வாலி நீண்டகாலம் திரும்பிவராமையால் இறந்திருக்கக்கூடும் என்று முடிவு கட்டுகிறான். தன்குலப் பெரியோர் வேண்டுகோட்படி சுக்கிரீவன் அரசுரிமையை ஏற்றுக்கொள்கிறான். மாயாவி திரும்பிவந்து தனக்குத் தொல்லை தராமல் இருக்க, குகைவாயிலைப் பாறாங்கற்களாலும் மலைகளாலும் அடைத்து விடுகிறான். வெற்றிவீரனாகத் திரும்பிவந்த வாலி, தன்னுடைய வழி அடைக்கப்பட்டுவிட்டதையும் சுக்கிரீவன் காவலில் இல்லாமையையும் தன்னுடைய அரசுரிமையைச் சுக்கிரீவன் எடுத்துக்கொண்டு விட்டமையையும் காண்கிறான். இவ்விடத்திலே, வாலி

சுக்கிரீவனைப் பற்றிச் சந்தேகப்பட நிறைய இடமிருக்கிறதென்பதை எவரும் மறுக்கமுடியாது, வாலி சுக்கிரீவனிடமிருந்து அரசுரிமையை மட்டுமல்லாது, தாரத்தையும் கைப்பற்றிக் கொண்டான். சுக்கிரீவன் இவை இரண்டையும் திரும்பிப்பெற விரும்பு கிறானென்பது, மேல்வரும் அனுமன் கூற்றிலிருந்து தெளிவாகத் தெரியவருகிறது.

*உருமை என்றிவற்கு உரிய தாரமாம்*
*அருமருந்தையும் அவன்விரும்பினான்*
*இருமையுந் துறந்து இவன் இருந்தனன்*
*கருமம் இங்கிது எங்கடவுளென்றனன்.*

(நட்: 67)

தாரத்தை இராவணனிடம் பறிகொடுத்துவிட்டு, பிரிவுத்துன்பத்தால் வாடிவதங்கிய இராமனுக்கு, சுக்கிரீவன் தாரத்தைப் பறிகொடுத்துவிட்டு நிற்கும் நிலைமை, புரிந்துணர்வோடு கூடிய அனுதாப உணர்வலையை ஏற்படுத்தியிருக்கிறது. 'தலைமையோடு நின்தாரமும் உனக்கின்று தருவன்' என்று இராமன் சுக்கிரீவனுக்கு உடனே வாக்குக் கொடுத்துவிடுகிறான்.

வாலி உளவியல் அறிஞன்போல உள்ளத் தெளிவோடு பேசுகிறான்.

*அரக்கர் ஓரழிவுசெய்து கழிவரேல் அதற்குவேறோர்*
*குரக்கினத்து அரசைக்கொல்ல மனுநெறி கூறிற்றுண்டோ?*
*'ஆவியைச் சனகன்பெற்ற அன்னத்தை அமிழ்தின் வந்த*
*தேவியைப் பிரிந்தபின்னர் திகைத்தனை போலும் செய்கை'*
(வாலி:87,86)

கம்பன் இராமாயணக்கதையை நடத்தி வருமாற்றிலிருந்து, இராமன் திகைத்திருந்தமை தெளிவாகத் தெரியவருகிறது. இராமனுக்கு இராவணன் மேல் எழுந்த சினம், அதைக் காட்ட வழிபுலப்படாத இடத்திலே வாலியின்மேற் காட்டப்பட்டு விட்டதென்ற வாலி கூற்றிலே உளவியல் உண்மை உண்டு. ஒன்றன்மேல் எழும் ஆக்கிரமிப்பு உணர்வு ( aggressive instinct). அதை நிறைவேற்ற இயலாமையின்போது, இன்னொன்றன்மேல் திரும்பி, இரண்டாவது பொருளின் அழிவுக்குக் காரணமாவதுண்டு என்பது உளவியலாளருக்கு ஏற்புடைய கருத்து.

சுக்கிரீவன் மனம் மகிழத்தக்கதாக, அவனுடைய தாரத்தை இராமன் மீட்டுக்கொடுத்தது சரியானது. இதுபற்றி, இராமன் வாலிக்குக்கூறும் நியாயத்தை இங்கே பார்க்கலாம்.

*ஈரம் ஆவதும் இற்பிறப்பு ஆவதும்*
*வீரம் ஆவதும் கல்வியின் மெய்ந்நெறி*
*வாரம் ஆவதும் மற்றொருவன் புணர்*
*தாரம் ஆவதைத் தாங்குத் தருக்கரோ.*

*அறந்திறம்பல் அருங்கடி மங்கையர்*
*திறந்திறம்பல் தெளிவுடையோர்க்கெலாம்.*

(வாலி:107,108)

பெண்களுடைய கற்பையும் பிறர் தாரத்தையும் மதித்துநடக்கவேண்டிய கடப்பாடு பற்றி இராமன் வாலிக்குக் கூறுகிறான். உயர்குல மானிடருக்கு உரியநெறிகள், வானரர் குலத்தவர்களுக்குப் பொருந்தா என்ற வாலியின் வாதம் ஆணித்தரமானதாக அமைகிறது.

*ஐயஅநுங்கள் அருங்குலக்கற்பின்ப*
*பொய்யில் மங்கையருக்கு ஏய்ந்த புணர்ச்சிபோல்*
*செய்திலன் எமைதேமலர் மேலவன்*
*எய்தின் எய்தியதாக இயற்றினான்.*

*மணமும் இல்லை மறைநெறிவந்தன*
*குணமும் இல்லை குலமுதற்கு ஒத்தன*
*உணர்வு சென்றுழிச் செல்லும் ஒழுக்குஅலால்–*
(வாலி:112, 113).

வாலிவதையை நியாயப்படுத்த முனையும் இராமன், வாலியை மிகவும் உயர்த்தி, வாலி விலங்கு அல்லன். தேவன் ஆவான் என்று சாதிக்க முனைவது சுவையானது:

*நலங்கொள் தேவரிற் தோன்றி நவையறக்*
*கலங்கலாஅற நன்னெறி காண்டலின்*
*விலங்கு அலாமை விளங்கியது ஆதலால்*
*அலங்கலார்க்குஇது அடுப்பது அன்றாமரோ.*

*தக்கது இன்னது தகாதது இன்னவென்று*
*ஒக்க உன்னலர் ஆயின் உயர்ந்துள*
*மக்களும் விலங்கே மனுவின்நெறி*
*புக்கவேல் அவ்விலங்கும் புத்தேளிரே.*
(வாலி: 115,120)

வாலி இந்திரன் மகன் என்று கொள்ளப்படுவதாலும், வாலி மனுநெறியைக் காட்டி இராமனைக் கண்டிப்பதாலும், இராமன் இவ்வாறு விதண்டாவாதம் செய்கிறான்.

'விதண்டாவாதம்' என்ற வருணனைக்குக் காரணம் இருக்கிறது. வாலி விலங்கு என்ற காரணத்தினாலேயே, அவனை மறைந்துநின்று அம்புஎய்து கொன்றதாக வால்மீகி முனிவர் படைத்த இராமன் கூறுவது இவ்விடத்திலே ஒப்பிடத்தக்கது. வாலி இந்திரன் மகனென்று கூறப்படுவதுபோல், சுக்கிரீவன் சூரியன்மகன் என்று கூறப்படுபவன். இராமனுடைய நியாயப்படி, சுக்கிரீவனும் தேவனே, சுக்கிரீவனுடைய

நடத்தைபற்றி இலக்குமணனுடன் உரையாடும் இராமன், **இப் பித்தாய விலங்கின் ஒழுக்கினைப் பேசலாமோ?**(வாலி. 34) என்று சுக்கிரீவனை இழிந்த விலங்காகவேதான் கருதுவதாகக் கூறியுள்ளான். சந்தர்ப்பத்துக்குத் தக்கபடி கன்னத்துக்குள் நாவை வைத்துப்பேசும் ( Speaking with tongue in one's cheek ) சாதாரண மானிட இயல்பு, இவ்விடத்திலே இராமனிடம் காணப்பட்டுள்ளது. இலக்குமணனுடன் உரையாடும்போது, இராமன் கூற்றாக அமையும் இன்னொரு செய்யுள் உற்றுக் கவனிக்கப்பட வேண்டும்.

***விற்றாங்கு வெற்பன்ன விலங்கெழிற் தோள! மெய்ம்மை***
***உற்றார்சிலர் அல்லவரே பலரென்பது உண்மை***
***பெற்றார் உழைப்பெற்ற பயன்பெறும் பெற்றியல்லால்***
***அற்றார்நலவையென்றலுக்குஆகுநர் ஆர்கொல்என்றான்.***
(வாலி: 44)

இராமனுடைய கூற்று சமுதாயவாதத்தை (Septicism) ப் பிரதிப்பலிப்பதாகக் காணப்படுகிறது. நல்லவர், நல்லவர் அல்லாதவர் என்ற ஆராய்ச்சியை விட்டுவிட்டு, பயன்பெற உதவக்கூடியவர்களிடமிருந்து கிடைக்கக் கூடிய பயனைப்பெற்றுக்கொள்ள வேண்டியதுதான் என்று இராமன் கூறியுள்ளான். இந்த மனநிலையோடுதான் இராமன் வாலியைக் கொன்றிருக்கிறான்.

சுக்கிரீவனுடைய மனைவியாகிய உருமை, கற்புடையமானிடப் பெண்ணுக்குரிய பண்புகள் வாய்க்கப் பெற்றவளல்லள் என்பதும் கதைப்போக்கிலிருந்து தெளிவாகப் புலப்படுகிறது. சுக்கிரீவன் மனைவியாக இருந்த உருமை, வாலி அரசுரிமையைத் திரும்பப் பெற்றதும், வாலியோடு வாழத்தொடங்குகிறாள். வாலி மாண்டு, சுக்கிரீவன் ஆட்சியைப் பெற்றதும், சுக்கிரீவனுக்குத் திரும்பவும் மனைவி ஆகிறாள். சீதையை நினைத்துக்கொண்டு, இராமன் உருமைக்காக வாதாடுவது அபத்தமானது. வாலி, சுக்கிரீவன் முதலியோர், தம்முடைய பிறப்பும் கல்வியும் எத்தகையதாயினும் தம்முடைய குலத்தோடு ஒத்துவாழும் ஒப்புரவாண்மையைக் கடைப்பிடித்துவந்தனர். ஒப்புரவாண்மையின் அவசியத்தைத் திருவள்ளுவரும் வலியுறுத்தி உள்ளமை இங்கே கவனிக்கத் தக்கது.

இராமன் இழைத்ததாக, வாலிகூறும் குற்றச்சாட்டுக்களை நோக்கினால் குற்றமேதுமற்ற தன்னைக் கொல்வதற்காய்ச் சரந்தொடுத்தலும் போர்முறையில் அல்லாத வகையில் யுத்த தருமத்துக்கு மாறானமுறையில் மறைந்திருந்து அப்பெய்ததும் முக்கியத்துவம் பெறுகின்றன.

***வீரமன்று விதியன்று மெய்ம்மையின்***
***வாரமன்று நின்மண்ணினுக்கு என்னுடல்***
***பாரமன்று பகையன்று பண்பழிந்து,***
***ஈரமன்றி யிதென் செய்தவாறரோ.***

***இருவர் போர் எதிருங் காலை இருவரும் நல்லுற்றாரே***
***ஒருவர்மேல் கருணை தூண்டி ஒருவர்மேல் ஒளித்துநின்று***
***வரிசிலை குழைய வாங்கி வாயம்பு மருமத்தெய்தல்***
***தருமமோ பிறிதொன்றாமோ தக்கிலது என்னும்பக்கம்***

***மற்றொருத்தன் வலிந்து அறைகூவ வந்து***
***உற்ற என்னை ஒளித்து உயிருண்ட நீ***

***நேரும் அன்று மறைந்து நிராயுதன்***
***மார்பில் எய்யவோ வில் இகல்வல்லதே***
( வாலி: 92,91,96, 98)

தன்னைத் தண்டிப்பதாக இராமன் முடிவுசெய்துவிட்டாலும், மறைந்துநின்று அம்பெய்தது ஏன் என்று நேரடியாக வினாவும் வாலியின் வினாபற்றிய செய்யுள் :

***அவ்வுரை அமையக்கேட்ட அரிகுலத்தரச மாண்ட***
***செவ்வியோய் அனையதாக செருக்களத்து உருத்து எய்யாதே***
***வெவ்விய புளிஞரென்ன விலங்கியே மறைந்துவில்லால்***
***எவ்வியது என்னை என்றான் இலக்குவன் இயம்பலுற்றான்.***
( வாலி. 124)

என்ன சமாதானம் கூறலாம் என்று இராமனுக்குப் புலம்படவேயில்லைப்போலத் தோன்றுகிறது. மறைந்துநின்று அப்பெய்ததற்கான உண்மையான காரணம் கதைப் போக்கிலே காணக்கிடைக்கின்றது. அநுமன் வாலியின் வலிமைபற்றி இராம இலக்குமணருக்கு எடுத்துக் கூறுகின்றான்.

***கிட்டுவார் பொரக்கிடைக்கின் அன்னவர்***
***பட்ட நல்வலம் பாகம் எய்துவான்***
(நட்: 40)

இலக்குமணன் வாலிக்குக் கூறிய பதில் வருமாறு:

***முன்புநின் தம்பிவந்து சரண்புக முறையிலோயைத்***
***தென்புலத் துய்ப்பென் என்று செப்பினன் செருவில் நீயும்***
***அன்பினை உயிருக்காகி அடைக்கலம் யானும் என்றி***
***என்பதுகருதி அண்ணல் மறைந்துநின்று எய்ததென்றான்.***
( வாலி: 125)

இந்தப் பதில் சமாதானம் அல்ல நியாயம் ( Reason) என்று கூறுவதற்கும் தகுதியில்லாதது: சாட்டு (excuse) என்று கூறப்படுவதற்கு ஏற்றது. நொண்டிச்சாட்டு (Lame excuse) என்றும் இதனைக்கூறலாம்.

வினாக்களுக்குமேல் வினாக்களை எழுப்பி இராமலக்குமணர்களைத் திணறடித்த வாலி திடீரென மனமாற்றமடைகிறான்.

*தாயென உயிர்க்கு நல்கித் தருமமும் தகவும் சால்பும்*
*நீயென நின்ற நம்பி நெறியினின் நோக்கும் நேர்மை*
*நாயென நின்ற எம்மால் நவையற உணரலாமோ*
*தீயன பொறுத்தி என்றான் சிறியன சிந்தியாதான்.*

*குரங்கெனக்கருதி நாயேன் கூறிய மனத்துக்கொள்ளேல்.*

( வாலி: 127,128)

இந்தப்பகுதியை வைத்துக்கொண்டு, வாலி தன்குற்றங்களை ஒப்புக்கொண்டு விட்டான் என்று சிலர் வாதிப்பர். வாலி இராமனுக்குப்பணிந்து போகிறான் என்று கூறலாமே ஒழிய வாலி குற்றங்களை ஒப்புக் கொண்டுவிட்டானென்று கூற இயலாது. வாலி மரணப்படுக்கையில் இருக்கிறானென்பதை இவ்விடத்திலே நினைவு கூரவேண்டும். இரத்தம் ஓடிக்கொண்டிருக்கிறது என்பதையும் வாலி சோர்வடைந்து கொண்டிருக்கிறானென்பதையும் இவ்விடத்திலே பொருத்திப் பார்க்கவேண்டும். உடலிலே இரத்தம் நிறைய ஓடும்போது, நீதிக்காகப் போரிடலாம். உடலிலே இரத்தம் குறையும் போது, போராடும் மனப்பாங்கு போய்விடுகிறது. மரணம் அண்மித்துக் கொண்டிருப்பதை உணரும்போது சிந்தனாசக்தியும் பலவீனம் அடைந்துவிடுகிறது. தன்னுடைய மகன் அங்கதனும் தன்னுடைய தம்பி சுக்கிரீவனும் தன்னைப்போல் இராமபாணத்தால் அழியக் கூடாது என்று கருதிய வாலி அவர்களை இராமனுக்கு அடைக்கலம் ஆக்குகிறான்.

வாலி தன்னைத் துளைத்த பாணத்திலே இராமநாமத்தைக் கண்டதிலிருந்தே, இராமனை வினாக்களாலே துளைக்கத் தொடங்கினான். இராமனை மிகமிக உயர்வாக மதித்து வந்தவன் " இராமன் என்பவன் உன்னுயிர்கோடலுக்குச் சுக்கிரீவனுடன் வந்தானென அறிந்தேன்" என்று மனைவி தாரை கூறியதும், வாலி பொங்கியெழுகிறான்.

*பிழைத்தனை பாவி உன்பெண்மையால்.*

*ஏற்றபேருலகெலாம்எய்தி ஈன்றவள்*
*மாற்றவள் ஏவமற்று அவன்தன் மைந்தனுக்கு*
*ஆற்றரும் உவகையால் அளித்த ஐயனைப்*
*போற்றலை இன்னன புகல்தற் பாலையோ.*

*நின்ற பேருலகெலாம் நெருக்கிநேரினும்*
*வென்றி வெஞ்சிலையலால் பிறிதும் வேண்டுமோ.*

( வாலி: 31,33)

இதனாலேதான், தாரை வாலியின் உயிரற்ற உடல்மேல் வீழ்ந்து, புரண்டு, புலம்பும் போது பின்வருமாறு கூறுவாள் :

*ஓயாவாளி ஒளித்து நின்றெய்வான்*
*ஏயானந்த இராமன் என்றுளான்*
*வாயால் ஏயினன் என்னின் வாழ்வெலாம்*
*ஈயாயோ அமிழ்தேயும் ஈகுவாய்.*

( வாலி: 172)

இராமனுக்குத்துணை தேவைப்பட்டிருந்தால், சிங்கம்போன்ற தன்னைவிட்டு, முயல் போன்ற சுக்கிரீவனைத் தேர்ந்தெடுத்ததேன் என்று வாலி வினாவும் பகுதி:

*புயலைப்பற்றும் அப் பொங்கரி போக்கியோர்*
*முயலைப்பற்றுவது என்ன முயற்சியோ?*

(வாலி: 94)

வாலி மரணத்தைத்தழுவும்போது, இராமன்மேல் முன்னர் போலப் பேரன்புமிக்கவனாகவே காணப் படுகிறான்.

*மற்றிலென் எனினும் மாயஅரக்கனை*
*வாலிற்பற்றிக்*
*கொற்றவ நின்கட்தந்து குரக்கியற் தொழிலுங்*
*காட்டப் பெற்றிலன்*

(வாலி:136)

இராவணாதியாரை அழிப்பதான இராமனுடைய அவதாரநோக்கம் நிறைவேறிவிட்டது. வாலிவதை இராமாயணத்திலே சிறுநிகழ்ச்சிதான். அவதார மகிமையைப் போற்றுபவர்கள் வாலிவதையைப் பொறுத்தவரை இராமன் செயலை மன்னிக்கவோ மறக்கவோ தயாராகவே இருப்பார்கள். வாலி வதை தேவைதானா என்ற வினாவைச் சிந்திப்பவர்கள் எழுப்பிக்கொண்டே இருப்பார்கள். கம்பன் உள்ளத்தெளிவோடு இந்தச் சிக்கலைத் தோற்று வித்திருக்கிறானென்றே கொள்ளக் கிடக்கிறது.

# கலகக்காரன் குரல்

கலாநிதி. சி. மௌனகுரு

வரலாற்றுரீதியாகத் தமிழ் இலக்கியங்களிலே இரண்டு போக்குகள் தொடர்ச்சியாக வளர்ந்து வந்திருக்கின்றன. ஒன்று மக்களை நசுக்குகின்றதும், மக்களது நலனாட்டத்திற்கு எதிரானதுமான நிறுவனங்களுக்கும் அவற்றை நியாயப்படுத்துகிற தருமங்களுக்கும் சார்பான ஒரு போக்கு, மற்றது அவற்றை எதிர்த்துக் கலகக் குரல் எழுப்பும் போக்கு.

ஒரு சமூகத்திற் காணப்படும் அரசு, மதம், மடாலயங்கள், கல்வி ஸ்தாபனங்கள் என்பனவற்றை நாம் நிறுவனங்கள் எனலாம். இந்நிறுவனங்களும் இவற்றை நியாயப்படுத்தும் தத்துவங்களும் வரலாற்றுப் போக்கில் ஒரு கால கட்டத்தில் உரு வானவைகளாகும். சமூகத்தில் சில ஒழுங்கு முறைகளை ஏற்படுத்த உருவாக்கப்பட்ட இந்நிறுவனங்கள் காலத்தின் தேவையையும் சமூகத்தின் தேவைகளையும் நிறைவேற்றாத போது சமூகத்திற்குப் பாரமாகி விடுகின்றன. வரலாற்றுப் போக்கில் ஒரு கால கட்டத்தில் முற்போக்கான பாத்திரம் வகித்த இந்நிறுவனங்கள் வரலாற்றுப் போக்கிற்கு எதிராகவும், மக்களுக்கு எதிராகவும் மாறுகையில் அவற்றை இனங்கண்டு, அவற்றின் எதிர்ப்போக்குகளை வெளிப்படுத்துவதும், அவற்றைத் திருத்த முயல்வதும் அவ்வக்காலச் சிந்தனையாளர்களினதும், புலவர்களினதும் கடமையாகின்றது. உணர்திறனும், கூரிய அறிவும் மக்கள் நலனாட்டமுமுடைய சிந்தனையாளர் அல்லது புலவர் சமூக நன்மைக்கு எதிராக நிறுவனங்கள் செயற்படுவதை வெகு கெதியாகப் புரிந்து கொள்வர். அத்தகைய புலவர்கள் தத்தம் காலங்களிற் தமது உணர்திறனுக்கும் அறிவுக்கும் அனுபவத்திற்கும் தகத் தம் கருத்துக்களை முன் வைப்பார்கள். இத்தகையோர் தத்தம் காலங்களிற் கலகக்காரர் எனவும், எதிர்ப்பாளர் எனவும் அக்காலச் சமூக நிறுவனம் சார்ந்தோராற் குற்றம் சாட்டப்படுவர். இவர்கள் அவர்கள் வாழும் காலத்தில் மதிக்கப் படாதிருத்தல் கூடும். ஆனால் அவர்களின் கலகத்தில் உண்மையும் நியாயமும், நேர்மையும் இருப்பதனாற் பின்னாளில் அவர்களின் கருத்துக்களை ஏற்கும் நிறுவனங்கள் உருவாக்கும்பொழுது அவர்களின் கருத்துக்கள் ஏற்கப்படும். அவர்களும் போற்றப்படுவர்.

இத்தகைய சிந்தனையாளர்– புலவர் பாரம்பரியம் ஒன்று தமிழ் இலக்கியத்திலுண்டு. தமிழ் இலக்கியத்திற் காணப்படும் இன்றைய கலகக் காரச் சிந்தனையாளர்களும், எழுத்தாளர்களும் இப்பரம்பரையைச் சேர்ந்தவர்களே. தமிழ் இலக்கியத்திற் சங்கப் புலவருள் கணியன் பூங்குன்ற ர், மதுரைக் குமரனார் தொடக்கம் வள்ளுவர், இளங்கோ, கம்பர், ஆகியோருக்கூடாகச் சித்தர்கள், பாரதி என இப்பரம்பரை செல்லும்.

மன்னனைப் புகழ்ந்து பாடிப்பாடிப் பரிசில் பெற்றுத் தம் வாழ்நாட்களைக் கழித்த சங்கப் புலவர்கள் மத்தியில் " மிகப்பேர் எவ்வமுறினும் உணர்ச்சியில்லோர் உடமையுள்ளோம்." என்று பாடிய மதுரைக்குமரனார், " பெரியோரை வியத்தலும் இலமே சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே" என்று பாடிய கணியன் பூங்குன்றனார் ஆகியோரின் குரல், அரசு ஒரு நிறுவனமாக உருவாகிய காலத்தில் அரசு எவ்வாறு அமையவேண்டும் என அறிவுறுத்தியது மாத்திரமன்றி " அல்லற்பட்டு ஆற்றாது அழுத கண்ணீர் அன்றே செல்வத்தைத் தேய்க்கும் படை" என்று அரசுக்கு அச்சுறுத்திய வள்ளுவனின் குரல், பாண்டிய மன்னன் அரசவையில் அரசனுக்கு அஞ்சாமல் ' தேராமன்னா! செப்புவதுடையேன்" என விளித்து வாதம் புரிந்து அவன் மனச் செருக்கையடக்கிய கண்ணகியின் மொழிகளினூடாக ஒலிக்கும் இளங்கோவின் குரல்,

மன்னனே உயிர் மக்கள் எல்லாம் உடல் என்று திருவுடை மன்னன் திருமாலாகவே போற்றப்பட்ட கால கட்டத்தில் " வையகம் மன்னுயிர் ஆக அம் மன்னுயிர் உய்யத் தாங்கும் உடலன்ன மன்னவன்" என்று மக்கள் தான் உயிர் மன்னவன் வெறும் உடல்தான் என ஒலித்த கம்பனின் குரல். கிரியைகள் மக்கள் வாழ்விற் பிரதான

இடம்பெற்று, கிரியைகளும் சடங்குகளுமே சமயம் எனக் காட்சி தந்த வெற்று ஆரவாரச் சூழ்நிலையில் " நட்ட கல்லைத் தெய்வமென்று நாலு புஷ்பம் சாத்தியே சுற்றிவந்து மொடமொடென்று சொல்லு மந்ரம் ஏதடா, நட்ட கல்லுப் பேசுமோ நாதன் உள்ளிருக்கையில்" என்று கிரியைகளுக்கு எதிராக ஒலித்த சித்தர்களின் குரல், ஆங்கிலேயர்களும், இந்திய சமஸ்தானாதிபதிகளும் இணைந்து இந்திய மக்களைக் கொள்ளையடித்த காலத்தில், " வெள்ளையனே வெளியேறு" என்று மக்கள் திரண்ட போது " எல்லோரும் ஓர் குலம் எல்லோரும் ஓர் நிறை, எல்லோரும் இந்நாட்டு மன்னர்" என ஒலித்த பாரதியின் குரல் யாவும் தமிழ் இலக்கியப் போக்கில் அவ்வக்காலத்தில் மக்களுக்கு எதிராக இயங்கிய நிறுவனங்களுக்கும் அவற்றை நியாயப்படுத்திய தத்துவங்களுக்கும் எதிராக எழுந்த கலகக் குரல்களாகும்.

வாழையடி வாழை என வரும் இத்திருக் கூட்ட மரபில் கம்பனுக்கு ஒரு தனி இடம் உண்டு. தமிழ் நாட்டில் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த ஒரு காலகட்டத்தில் வாழ்ந்தவன் என்பது மாத்திரமல்ல தன் கால அரசுக்கும் அதனை நியாயப்படுத்திய சமூக தருமத்திற்கும் எதிராகத் தன் கலகக் குரலை ஏனையோரை விடத் தெளிவாகவும், ஆழமாகவும் எழுப்பிய பெருமையும் அவனுக்குண்டு.

எந்தப் புலவனும் தான் வாழுகின்ற சமுதாயத்திலிருந்துதான் அனுபவத்தையும், அறிவையும் உணர்வுகளையும் பெற்றுக் கொள்கிறான். அவன் காலச் சூழல் அவனிலே பட்டுத் தெறிக்கின்றது. தன் காலச் சூழலையும் அதன் முழுக் குணாம்சத்தினையும் பிரச்சனைகளின் ஆணி வேரையும் நுணுக்கமாகப் புரிந்து கொள்கின்ற சித்தனையாளன் அதனைப் பிரதிபலிக்கின்ற விதம் வித்தியாசமானதாயிருக்கும். புலவனின் அறிவு, அனுபவம், அவன் சார்ந்த தத்துவம், பாரம்பரியம், சூழல் என்ற இன்னோரன்ன அவன் சார்ந்த அம்சங்களுடன், அவன் பெறும் அனுபவங்களும் கலந்து மனதுக்குள்ளே ஒரு கொதிநிலை நடைபெற்றுப் பின்னால் இன்னொரு ரூபத்தில் வெளிப்படும். தன் காலச் சமூகச் சூழலிலிருந்தும், அது எழுப்பும் பிரச்சனைகளிலிருந்தும் மக்கள் நலனாட்டமுடைய எந்தப் புலவனும் தப்பிவிடமுடியாது. கம்பனும் அவனது இராமவதாரம் எனும் இராமாயணமும் இதற்கு விதிவிலக்கன்று.

கம்பன் வாழ்ந்த காலம் கி.பி.12 ஆம் நூற்றாண்டாகும். ஈதன்முதலில் தமிழர் மத்தியில் மிகப் பெரிய ஏகாபத்தியப் பேரரசு உருவான காலம் அது. இக்கால அரசர்கள் சங்க கால மன்னர்கள் போலச் சிற்றரசர்களோ குறுநில மன்னர்களோ அல்லர். கடல் கடந்த நாடுகளையும் கட்டியாண்டு திரிபுவனச் சக்கரவர்த்திகள் எனப் பெயர் பெற்றவர்கள். பெருமளவு விளை நிலங்களைச் சாகுபடிக்குக் கொண்டுவரப் பல வகை ஏற்பாடுகளையும் செய்த அரசு இவர்களது அரசு. சோழர்கால வரி வகைகளின் பட்டியலைப் பார்க்கும்போது மக்களின் நிலை எவ்வாறு இருந்திருக்கும் என்பது தெரியவருகிறது. சோழர் காலக் கிராமங்களில் உடமை மிக்க நிலக் கிழார் எப்படியெல்லாம் ஆதிக்கம் செலுத்தினார்கள் என்பது தெரியவரும். வரி செலுத்த முடியாத மக்கள் கூட்டம் எவ்வாறெல்லாம் துன்பம் அனுபவித்தது என்பது அக்காலக் கல்வெட்டுக்களாற் தெரியவருகிறது. ஒரு பக்கத்திற் சோழப் பேரரசின் கொடி பட்டொளி வீசிப் பறந்தது உண்மைதான். ஆனால் மறுபக்கத்தில் மக்களின் துயரம் மிகுந்த வாழ்க்கையும், இருந்ததும் உண்மையே. மக்களைச் சுரண்டாமல், மக்களின் ஒரு சாராரை வருத்தாமற் பேரரசு ஒன்று எழுவது சாத்தியமில்லை என்பது வரலாறு நமக்குத் தரும் செய்தியாகும்.

பேரரசின் பிரதிநிதியாக மன்னனை இறைவனது பிரதிநிதியாகக் காட்ட அக்கால இலக்கிய ஆசிரியர்கள் பெருமுயற்சி எடுத்தனர். கலிங்கத்துப் பரணியில் ஜெயங்கொண்டார் குலோத்துங்களின் இராஜ பாரம்பரியத்தை நிறுவ எடுக்கும் பெரு முயற்சியில் இதனைக் காணலாம். அத்தகையோரையே அரசவையின் ஆஸ்தான புலவர்களாக்கி அவர்களுக்குக் கவிச் சக்கரவர்த்திப் பட்டமும் வழங்கிக் கௌரவித்தனர் சோழமன்னர். மன்னனைத் தெய்வமாக எண்ணிய மக்கள் அவர்களின் அடக்கு முறைகளைப் பணிவோடு ஏற்றனர். ஏற்காத சில மக்கள் கிளர்ச்சி புரிந்தனர் அவர்கள் அரசரால் அடக்கப்பட்டனர். அழிக்கவும் பட்டனர். சமூகத்தில் ஏற்றத் தாழ்வுகள் நிரம்பி இருந்தன. செல்வம் ஒருபுறம், வறுமை மறுபுறம், பிராமணர் வகுத்துவிட்ட வருணாசிரம தர்மம் பேணப்பட்டது. சாதி அமைப்பு மிக இறுக்கமாகி விட்டிருந்தது. உழுதுண் போரும், உழுதுவித்து உண்போரும் எனச் சமூகம் இரு பிரிவாகிவிட்டது. இச்சமூக அமைப்பையும் அதைக் கட்டிக் காத்த அரசையும் அக்காலப் பிராமண தர்மம் நியாயப்படுத்தியது. நால்வகை வர்ணப் பாகுபாடு களுக்கு வேதங்களின் துணைகொண்டு விளக்கமளித் தனர் வேதியர்கள். ஒருவன் முற்பிறப்பிற் செய்த கர்ம வினைகளினாலேயே குறிப்பிட்ட ஒரு வருணத்தில் வந்து பிறக்கிறான் என்று வருணாச்சிர ஏற்றத் தாழ்வுகளை நியாயப்படுத்தி உயர்வு தாழ்வு சாஸ்வதமானது: மாற்றமுடியாதது: வேதவிதி என்று அழுத்திக் கூறியது

பிராமண தர்மம். மனுதர்ம சாஸ்திர விதிகளுக்கு ஏற்ப நடப்பதே தர்மம் எனப் போதிக்கப்பட்டது. மன்னனுக்கு இறை அம்சம் கற்பிக்கப்பட்டது. மன்னன் இறைவனின் பிரதிநிதி என்று கருத்து உருவானதும் மன்னன் மக்களைவிட்டு வெகுதூரம் சென்று விடுகிறான்.

கி.பி.6 ஆம் நூற்றாண்டு தொடக்கம் 9 ஆம் நூற்றாண்டுவரை சமண, பௌத்த மதங்களுக்கு எதிராகப் பிராமணர், வேளாளர், அரசர், குயவர், மறையர், வேடர், ஏகாலியர், பாணர், என அனைத்து மக்களையும் " சேரவாழும் செகத்தீரே" என்று திரட்டிய, ஆவுரித்துத் தின்றுழலும் புலையரையும் அன்பராகக் கண்ட, முற்போக்குப் பாத்திரம் வகித்த சைவ மதம் சோழர் காலத்தில் நிறுவனமாகி அரசுக்குச் சார்பாகிவிடுகிறது.

சோழர் காலத்திற் சமூக அமைப்பினாலும் அரச வரிகளினாலும் துன்பத்திற்குள்ளான சாதாரண மக்கள் தம் தன்பத்தைத் தமது தலைவிதி என்று கருதியே ஏற்றுக் கொண்டனர். சுரண்டலும் கொடுமையும் மக்களுக்குத் தெரியாமலேயே நாசூக்காக நடந்தேறின. இத்தகைய அரசயையும் அதனை நியாயப்படுத்தும் தத்துவத்தினையும் ஆதரித்துப் பாடிய புலவர்கள் பலர் அக்காலத்தில் இருந்தனர்.

குலோத்துங்க சோழனின் கலிங்கத்துப் போரையும் அவன் படைத் தலைவன் கருணாகரத் தொண்டைமான் பகைவரை அழித்தமையையும் உற்சாகமாகப் புகழ்ந்து பாடிய கவிச் சக்கரவர்த்தி ஜெயங்கொண்டாரின் கலிங்கத்துப் பரணி 2 ஆம் இராஜ இராஜன், 2 ஆம் இராஜேந்திரன், குலோத்துங்கசோழன் ஆகியோரின் புகழையும், சிறப்பையும் உல்லாச வாழ்வையும் விதந்தோதும் கவிச் சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தரின் மூவருலா மற்றும் குலோத்துங்க மன்னனை பிள்ளையாகக் கருதி அவன் பிள்ளைப் பருவத்தினூடாக அவன் புகழை அளவுக்கு அதிகமாக அள்ளி அள்ளித் தரும் இவரது குலோத்துங்சோழன் பிள்ளைத் தமிழ் என்பன இக்காலத்தில் அரசனைப் புகழ்ந்து அரசனது ஆஸ்தான புலவர்கள் பாடிய சிற்றிலக்கியங்களாகும்.

இவற்றைவிடச் சாசனங்கள் மூலமும், பிற குறிப்புக்கள் மூலமும் சில காவியங்கள் எழுந்தன என்றறிகிறோம். இவற்றுள் முதலாவது கூறத் தக்கது 1 ஆம் இராஜராஜன்மீது பாடப்பட்ட இராஜஇராஜ விஜயம் என்ற காவியம். பாடியவர் நாராயணப்பட்டர் என்பவர். இக்காலத்தெழுந்த நாடக காவியம் இராஜஇராஜேஸ்வர நாடகம் ஆகும். 11 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிற் தோன்றிய காவியம் குலோத்துங்க சோழன் சரிதை. இதனைப் பாடியவர் திரிபுவனியூரினரான கவிகுமுத சந்திரபண்டித திருநாராயணப்பட்டன் என்பர். இப் புலவோர்க்கெல்லாம் வளமான வாழ்வும், கவிச் சக்கரவர்த்திப் பட்டங்களும் இவர்களுக்குக் கிடைத்தி ருக்கும் என்பதில் ஐயமில்லை.

இவ்வாறான அரசையும், அரசர்களையும் அவர்கள் ஆட்சியையும் நியாயப்படுத்திய இலக்கியங்கள் எழும் சூழலிலேதான் கம்பன் உருவாகின்றான். கம்பனைப் பற்றிய வாழ்க்கை வரலாறு எமக்கு முற்றாகத் தெரியவில்லை எனினும் அவன் மக்களோடு நெருக்கமாக வாழ்ந்தான் என்பதும் வடமொழிப் புலமை மிக்கவன் என்பதும் அவன் வாழ்க்கைபற்றி வழங்கும் கதைகளின்மூலம் தெரியவருகிறது. சோழப் பேரரசின் ஆதரவு அவனுக்கிருக்கவில்லை. அரசவைப் புலவனாக அவன் அங்கீகாரம் பெற வில்லை. தகுதியின்மையன்று காரணம். வேறொரு காரணம் இருந்திருக்க வேண்டும். சடையப்பவள்ளல் என்ற நிலப் பிரபுவின் ஆதரவுமட்டுமே இவனுக்கிருந்தது. கம்பராமாணயத்தை அரங்கேற்றக் கூடக் கம்பன் கஷ்டப்பட்டதாக அறிகிறோம். " இப்பெரும் காவியத்தை அன்று படைத்துக் கொடுத்த கம்பனுக்கு கவிச் சக்கரவர்த்தி என்ற பட்டம் கூடச் சோழப் பேரரசு வழங்கவில்லை. ஏன்? இந்தக் கேள்வியை நாம் அழுத்தமாகக் கேட்டுப் பார்க்க வேண்டும்.

கம்பன் தன் கால அரசையும், அரசரையும் சமூக அமைப்பையும் அவற்றை நியாயப்படுத்திய தத்துவங் களையும் ஏற்றுக் கொள்ளவில்லை. மக்கள்பக்கம் நின்று, மக்கள் நலத்திற்கு மாறாக நின்று இந்நிறுவனங்களைக் கண்டிக்கும் நோக்கிற் காவியமியற்றினான். தான் வாழ்ந்த காலத்திற் தனக்குக் கிடைத்த வடமொழிப் புலமை, மக்களோடு மக்களாக வாழ்ந்துபெற்ற அனுபவச் செழுமை, பேரரசொன்றின் சூழல் இவை அனைத்தை யும் திரட்டி, தான் சமூகத்திற் தன் பார்வையினை எமக்குத்தந்தான்.

கம்பன் காலத்திற் தமிழ் நாட்டிற் செல்வம் பெருகி வழிந்தது. உடமையாயர் பலர் உருவாகினர். நிலப் பிரபுத்துவம் விவசாயிகளை அடக்கியாண்டது. நிலப்பிரபுத்துவம் செய்த கொடுமைகள் பற்றி வரலாறு படித்தோர் அறிவர். நல்ல மக்கள் எந்த நியாயமுமின்றி வருத்தமடைந்தனர். அவர்களின் பெண்கள் கூட வல்லோரால் அபகரிக்கப்பட்டிருக்கலாம். இவ்வல்லோர் பக்தர்கள் என்ற பெயரிற் பவனி வந்திருப்பர் . தானம் இயற்றியிருப்பர். பணபலமும் படைபலமும், அதிகார பலமும் மிக்க இவர்களின் கொடுமைகளைத் தட்டிக்

கேட்கச் சாதாரண மனிதர்களால் முடிய வில்லை. இந்நிலையில் இவர்களை அழிக்கக் கடவுளே அவதாரம் எடுத்து வரவேண்டும் என்று மக்கள் விரும்பியதனையே கம்பன் பிரதிபலிக்கின்றான். கம்பன் தன் நூலுக்கும் இராமாவதாரம் என்றே பெயரிடுகிறான். இலகில் அதிகாரச் செருக்கையும், அதர்மத்தையும் அழித்துத் தர்மத்தை நிலைநாட்டவே மகாவிஷ்ணு அவதாரம் எடுக்கிறார் என்பது வைஷ்ணவ பாரம்பரியம். அப்பாரம்பரியத்தில் வந்தவனான கம்பன் தன் தத்துவ நோக்கிற்கியைய‌த் தன் காலச் சமூகக் கொடுமைகளை மாய்க்க அப்படித்தான் தீர்வு கண்டான்.

தன் காலத்துச் சோழ அரசர்களினது ஆட்சியும், அவர்களது படையெடுப்புக்களும், பிற மன்னர்களை ஏவல் கொள்வதும், படையெடுப்பின்போது பிறநாட்டுப் பெண்களைத் தம் நாடு கொண்டுவருவதும், உள்நாட்டில் மக்கள் மீது விதித்த வரி விதிப்புக்களும், படைபலமும், பணபலமும், அதிகார பலமும் அவனுக்கு இராவணக் கொடுங்கோன்மையைத்தான் நினைவூட்டுகிறது. சமூகத்தைப் பல பிரிவுகளாகப் பிரித்து பிராமணரைத் துணைகொண்டு, நாட்டை ஆண்ட திரிபுவனச் சக்கரவர்த்திகளான சோழப் பெருமன்னர்கள் இராவணர்களாகக் கம்பனுக்குக் காட்சியளித்ததில் வியப்பில்லை. இராவணனிடமும் நல்ல குணங்கள் இல்லாமலில்லை. அரக்கர் மத்தியிலும் விபீடணன், கும்பகர்ணன் போல் நல்லவர்களும் இருந்தனர். அதே போலச் சோழ மன்னரிடமும் நற்குணங்கள் இருந்திருக்கக் கூடும். எனினும் மொத்தத்தில் அவர்கள் தீயதன் பிரதிநிதிகளே.

இத்தகைய இராவணர்களை அழிக்ககூடிய இலட்சிய புருஷர்களைக் கம்பன் கனவு கண்டிருக்ககூடும். இராச்சிய ஆசை இல்லாத தன்னலம் கருதாது, உடமை துறந்து, காட்டில் அலைந்து, சமூகத்தை துறந்து அறிவைத் தேடித் தவஞ் செய்யச் சென்ற முனிவர்களிடம் காட்டிலே தத்துவங்களைக் கேட்டறிந்து செழுமைபெற்ற, கொடுங்கோன்மைக்கு ஆளான கூட்டத்தவரான விபீஷணன், சுக்கிரீவன் ஆகியோரின் தொடர்பு பெற்ற, சமூக அமைப்பிற் குறைந்தவன் எனக் கருதப்பட்ட குகன் போன்ற வேடனையும், அனுமன் போன்ற இலட்சிய புருஷர்கள் உருவாக வேண்டும் என்று கம்பன் கண்ட இலட்சியமே இராமாவதாரமாக உருப்பெற்றது.

ஏற்றத் தாழ்வுகள் மிகுந்து, அடக்குமுறைகள் நிறைந்து, சமூகப் பிரிவுகள் மலிந்து சிதைந்த சமூகத்தில் வாழ்ந்த கம்பன் இவைகள் எதுவுமல்லாத மனிதனை மனிதன் மதிக்கும் உலகைக் கற்பனை செய்தான் மனிதனை மனிதனாகக் கண்டான் மனிதர் தெய்வநிலைக்கு உயரவேண்டும். அந்நிலையில் வாழவேண்டும் என விரும்பினான். மானிடத்தில் இலட்சிய வடிவமாக இராமனைக் கொண்டான். நிறைவேற முடியாத கற்பனை கம்பனின் பாத்திரங்களைத் தொட்ட இடமெல்லாம் இந்த மனிதப் பண்பு மணக்கக் காணலாம். அரக்கருள்ளும் மனிதப் பண்பைக் கண்டவன் அவன். தன் தம்பியான் கும்பகர்ணனும் தனையரும் போர்க்களத்தில் இறந்த செய்திகேட்டுத் துயரமுறும் இராவணனுக்குள் பாசம் மிக்க ஒரு மனிதனைக் காட்டுகிறான். கம்பன். இந்த மனிதத்தை தூண்டி வளர்த்து மனிதகுலம் அத்தனையையும் உயர்த்திவிடக் கனவு காண்கிறான் கம்பன். இதனால் அதற்குத் தடையாக இருந்தவற்றை விமர்சிக்க வேண்டியவனானான். இவ்வகையில் அவன் தன் காலச் சமூகத்தின் விமர்சகனானான்: கலகக் காரணனானன்.

வான்மீகி செய்த இராமாயணத்தையே தான் பின்பற்றியதாகக் கம்பன் குறிப்பிடுகிறான். ஆனால் வான்மீகியின் இராமாயணத்திலிருந்து கம்பனது இராமாயணம் பல வகைகளில் வேறுபட்டு நிற்கிறது. வான்மீகியின் இராமன் சாதாரண மனிதன். கம்பனின் இராமனோ புருஷோத்தமன்: தெய்வம். தமிழ் நாட்டிற் பல்லவர் காலத்தில் நடைபெற்ற பக்தி இயக்கம் இராமன் கதையை மக்கள் மத்தியில் பரப்பிவிட்டது மாத்திரமன்றி இராமனைத் தெய்வமாகவும் ஆக்கிவிட்டிருந்தது. மக்கள் மத்தியிற் பிரபல்யம் பெற்றியிருந்த கதை ஒன்றின் மூலமே மக்களையும், அவர்களின் சூழலையும் மக்களுக்கு உணர்த்த விரும்பினான் கம்பன். கண்ணகி கதையைச் சிலப்பதிகாரமாக்கிய இளங்கோவும், பாஞ்சாலி சபதத்தைப் பாஞ்சாலி சபதமாக்கிய பாரதியும் இதே பிரிவினரே, மக்கள் மத்தியில் பிரபல்யமான கதைகள் மூலம் தம் காலப் பின்னணியைக் காட்ட முயன்றவர்கள் இவர்கள்.

கம்பராமாயணத்தில் அரசுபற்றியும் அரசன் பற்றியும், அதுசார்ந்த தத்துவம் பற்றியும் கம்பன் தனது நூலில் வைக்கும் கருத்துக்களை நோக்குவதன்மூலம் அவன் கலகக் காரத் தன்மையினைப் புரிந்து கொள்ளமுடியும்.

## அரசுபற்றிய கம்பனின் நோக்கு.

கம்பன் வாழ்ந்த காலத்தில் இருந்த சோழ ஏகாபத்திய அரசு அவனுக்கு இராவணன் அமைத்த அரசாகக் காட்சியளித்தது. இராவணமாக அவன் மனதிற் திரிபுவனச் சக்கரவர்த்திகள் காட்சி தந்தனர். இலங்கை செல்வச் சிறப்பு மிக்கதுதான். ஆனாற் பாவ

வழியிற் சேர்த்த செல்வம் அது. சுவேல மலையின் உச்சியில் நின்று முதன்முதலில் இலங்கையின் செல்வச் சிறப்பைக் கண்டு வியந்த இராமன் அங்குள்ள நீலமணிக் குன்றுகளைப் பாவக் குவியல்களுக்கு ஒப்பிடுகிறான்.

*ஈவது தெரியா உள்ளத்து*
*இராக்கதர் ஈட்டி வைத்து*
*பாவப் பண்டாரம் அன்ன*
*செய்குன்றம் பலவும் பாராய்"*

என்கின்றான்.

இலங்கையே ஒரு பாவப் பண்டாரம்தான். ஏழை மக்களையும், விவசாயிகளையும் சோழர்கால நிலப் பிரபுக்களாகிய இராக்கதர்கள் வருத்திச் சேர்த்த நில புலன்களும், தானியங்களும் செல்வங்களுமாகிய பாவப் பண்டாரமான சோழ நாடுதான் கம்பனின் உள்ளத்தில் பட்டுத் தெறித்துப் பாவப் பண்டார இலங்கையாக வெளிப்பட்டிருக்கவேண்டும். கருத்துக்களையும், காட்சிகளையும் தாம் வாழும் உலகின்மேலே புலவர்கள் பெறுகிறார்கள் என்பன இங்கு மனத்திலிருத்துக.

இராவணனது அரச பேரரசுதான், மிகமிகச் செல்வச் செழிப்பும், போகங்களும் மிக்க அரசுதான். ஆனால் அறம் இல்லாத அரசு என்பது கம்பன் வாக்கு. " கறங்கு கால்புகா, கதிரவன் ஒளி புகா" என்று தொடங்கி " அறம்புகாது இந்த அணிமதில் கிடக்கை நின்று அகத்தில்" என்று இலங்கையின் அரசின் தன்மையை ஒரு பாட்டிற் கூறுகிறான். இலங்கையிலுள்ள அரக்கரைப்பற்றி இராமனிடம் தண்டக முனிவர் கூறுகையில் இரக்கம் என்ற ஒரு பொருள் இலாத நெஞ்சினர் அரக்கர் என்று உளர் சிலர் அறத்தின் நீங்கினார்" – என்று உரைக்கின்றார். அறமற்ற அரசு என்பது இவ்வாறு பல இடங்களிற் கம்பனால் அழுத்தப்படுகின்றது. கம்பன் கால அரசியல் சூழ்நிலையை வைத்து நோக்குகையில் அவன் மனதுட் சோழ அரசுபற்றிய கணிப்பே இவ்வாறு புலப்படுகிறது எனலாம்.

இராவணனது கொடுமையை இடித்துரைக்கும் அமைச்சர்களை அவன் தர்பாரிற் காணவில்லை. அரச ஆணைக்குப் பயந்து 'ஆமாம்' போடும் ஆட்களைத்தான் அவன் அவையிற் காணுகின்றோம். இந்நிலையிற் கும்பகர்ணன் இராவணனை இடித்துரைத்து,

*" ஆசுஇல் பரதாரம் அவை அம்சிறை அடைப்போம்*
*மாசுஇல் புகழ்காதல் உறுவேம், வளமை கூரப்*
*பேசுவது மானம்: இடைபேணுவது காமம்*
*கூசுவது மானுடரை நன்று நம கொற்றம்"*

என்று கூறுவது இராவண அரசைக் குறிப்பிட்டாலும் அது கம்பன் காலச் சோழ அரசுக்கும் பொருந்தும்.

பிறர் உழைப்பைச் சுரண்டிக் கொழுத்த அரசு, அறவுணர்ச்சியும் நல்லொழுக்கமும் அற்ற அரசுதான் இராவண அரசு. இந்த அரசைக் கம்பன் வெறுத்ததில் ஆச்சரியமில்லை. கம்பன் மாத்திரமல்ல மனிதாபிமானம் மிக்க எவரும் இதை வெறுப்பர். கம்பன் கண்ட சோழ அரசும் இதுவே.

இதற்கு மாறாக ஓர் அரசு உருவாக வேண்டும் என்று விரும்பிய கம்பன் அயோத்தியின் அரசையே. இராமன் பிறந்த அரசையே தன் இலட்சிய அரசாகக் கண்டான். இலங்கையையும் அயோத்தியையும் வருணிக்கும் கம்பன் பாடல்களில் இவ்விரண்டு நாடுகளுக்குமிடையே அரசில் அவன் காணும் வித்தியாசங்களைக் காணலாம்.

அயோத்தி அரசை ஒழுக்கம் நிறைந்த அறம் மலிந்த ஓர் அரசாகக் கம்பன் காணுகிறான். "குலம் சுரங்கும் ஒழுக்கம் குடிக் கெலாம்" என்கிறான். "எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தலால் இல்லாரும் இல்லை உடையார்களும் இல்லை மாதோ" என்ற அயோத்தி அரசை ஏற்றத் தாழ்வுகளற்ற அரசாகக் கம்பன் சித்தரிக்கின்றான். சுரண்டல் இல்லாத, அடிமைகளை ஏவல் கொள்ளாத பாவப் பண்டாரங்களில் லாத அரசு அயோத்தி அரசு, அவ்வரசில் வறுமை இல்லை, செறுநர் இல்லை. பொய்யுரை இல்லை, ஒண்மை இல்லை, கள்வர் இல்லை, காவல் இல்லை, கொள்வார் இல்லை, கொடுப்பார் இல்லை என்று அடுக்கிக்கொண்டு செல்லுகையில் கம்பன் தன் கால அரசுக்கு மாற்றீடாகக் கற்பனை செய்த அரசே நம் கண்முன் தோன்றுகிறது.

அயோத்தி அரசு இராவண அரசுபோலப் போகமும், செல்வமும், வளமும் மிக்க அரசுதான். ஆனால் இராவண அரசிடம் இல்லாத ஒழுக்கம் அறம் என்பன நிறைந்த அரசு. தன் காலச் சோழ அரசிடங் காணாத இவற்றைச் சுட்டிக்காட்டி இராவண அரசிற் தன்கால அரசினைத் துலக்கி அதற்கு மாற்றீடாக இன்னவாறு அரசு அமைய வேண்டும் என்று கூறிய கம்பனைத் தன்கால அரச நிறுவனத்தை விமர்சித்த கலகக் காரன் என்றழைப்பதிற் தவறில்லை.

## அரசன்பற்றிய கம்பன் நோக்கு,

அரசனைக் கடவுளின் பிரதிநிதியாகவே மனுதர்ம சாஸ்திரங் கூறும். அதனைப் பின்பற்றிப்போலும் தமிழ்ப்

புலவர்கள் மன்னனை இவ்வுலகின் உயிராகக் கற்பனை செய்தனர். உயிர் உடலை இயக்குவது போல மன்னனும் உலகை இயக்குகிறான். எனப் புலவர் நினைத்திருக்க கூடும். "மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்று புற நானூறும் கூறும். "மன்னுயிரெல்லாம் மண்ணாள் வேந்தன் தன்னுயிர்" என்று மணிமேகலை கூறும். "மன்னுயிர் ஞாலத்து இன்னுயிர் ஒக்கும்"என்று பெருங்கதை கூறும். "வீங்குநீர் வேலி வாழ்பவர்க்கு ஆவியாவார் அரசு" என்று குளாமணி கூறும்.

இவ்வண்ணம் அரசனை உயிராகப் போற்றி வந்தனர் தமிழ்ப் புலவர்கள். மக்களும் அவ்வண்ணமே எண்ணி வந்தனர். மன்னனைக் காணுதல் கடவுளைக் காண்பதற்கு ஒப்பாகக் கருதப்பட்டது. சோழர் கால அரசர்களை உயிராகவும், தம்மை உடலாகவும் கருதி அவரின் ஆணைகளைத் தாங்கிக் கொடுமைகளைக் கூடத் தெய்வநீதி என்ற பெயரிற் சகித்து வாழ்ந்தனர் சோழர் கால மக்கள். இந்நிலையில் இராமாயணத்திற் தசரதனை வர்ணிப்பதன் வாயிலாகவும், அவன் குடி மக்களோடு எப்படிப் பழகினான். என்பதனைக் கூறுவதன் வாயிலாகவும் பாரம்பரியமாக மன்னன்பற்றித் தமிழ் மக்கள் மத்தியில் இருந்துவந்த கருத்தை மாற்றுகிறான் கம்பன்.

"***வையகம் மன்னுயிராக அம்மன்னுயிர்***
உய்யத் தாங்கும் உடல் அன்ன மன்னனுக்கு"

என்று கம்பன், மன்னவன் வெறும் உடலே, அவனை இயக்கும் மக்களே உயிர் என்று கூறும் கருத்து முக்கியமானது. இக்கருத்தை வசிட்ட முனிவர் இராமனுக்கு எடுத்துக் கூறுவதாகக் கம்பர் அமைத் துள்ளார்.

தசரதனைக் குறிப்பிடும் கம்பன் அவன் மேற்கூறிய கருத்துக்கு இயையவே வாழ்ந்தான் என்று குறிப்பிடுவார் கம்பர்.

***"வயிரவான் பூண் அணி***
***மடங்கல் மொய்ம்பினான்***
***உயிர் எல்லாம் தன்னுயிர்***
***ஒக்க ஓம்பலால்***
***செயிர் இலா உலகினில்***
***சென்று நின்றுவாழ்***
***உயிர் எலாம் உறைவதோர்***
***உடம்பு ஆயினான்"***

– என்று கம்பனின் பாடலில் மக்களாகிய உயிர்களுக்குகெல்லாம் உடம்பாக மன்னன் வருணிக்கப்படுகிறான். அம்மன்னனை இயக்கும் உயிரே மக்கள். மக்கள் சக்தி மகாசக்தி. அவர்கள் இன்றி அரசு இயங்கமுடியாது. மன்னர்கள் வருவார், போவார்: அழிந்து போகின்ற இவ்வுடல் போல. ஆனால் மனித சமுதாயம் என்றும் இருக்கும். உயிர்போல. மக்களுக்காக, மன்னனேயன்றி, மன்னனுக் காக மக்களல்ல. மன்னனுக்குரிய அதிகாரம் மக்களிட மிருந்துதான் கிடைக்கிறது என்பதெல்லாம் கம்பன் எண்ணம். இது மரபை மீறிய கருத்து. மரபை மாற்றும் கருத்து. மன்னனைத் தெய்வமாகக் கொண்ட மனுதர்ம சாஸ்திரத்திற்கு மாறான கருத்து. இக்கருத்து அன்றைய சோழர் காலச் சமூக அமைப்பில் ஒரு கலகக் குரலே. அரசுபற்றி விமர்சித்த இக் கலகக் கம்பனுக்கு அரசவைப் புலவர் அந்தஸ்தும், அரசரால் வழங்கப்படும் கவிச் சக்கரவர்த்திப் பட்டமும் கிடைக்காமற் போனது வியப்பில்லை.

## தன் காலத் தத்துவம் பற்றிய கம்பன் நோக்கு:

கம்பன் காலத்திற் தமிழர் மத்தியில் செல்வாக்குப் பெற்றிருந்ததும் சமூகத்தை இயக்கியதுமான தத்துவத்தின் ஆதாரம் பிராமண தர்மமே. நாலு வர்ணப் பாகுபாட்டினை இத்தர்மம் நியாயப்படுத்தியது. பிராமண, சத்திரிய, வைசிய, சூத்திரர் எனப் பிரிவுபட்ட சமூகத்தில் ஒவ்வொருவரும் தத்தம் கடமைகளைச் செய்ய வேண்டும் என்பதும் தத்தம் வருணங்களினின்றும், விதிக்கப்பட்ட கடமைகளினின்றும் மாறவும் கூடாது. மீறவுங் கூடாது என்பதும் தர்மமாகக் கருதப்பட்டது. இவர்களுள் பிராமணமும், சத்திரியமும் உயர் நிலையில் இருந்தனர். இவ்விரு வருணத்தினரும் சமூக உற்பத்தியில் பங்கேற்க வில்லை. சும்மா இருந்து சுகங் கண்டனர் எனலாம். பின்னிருவருணத்தினருமே சமூக உற்பத்தியில் ஈடுபட்டனர். பிராமணரையும், சூத்திரரையும் முறையே மூளை உழைப்பும் உடல் உழைப்பும் வேறுபடுத்தின. ஒரு பகுதியினர் ஏவல் புரிவதற்கு மட்டுந்தான் என்று கூறுகிற இவ் வருணாச்சிரம தர்மத்தைக் கால தேச வர்த்தமானங்கள் கடந்த "சனாதன தர்மம்" என்று அழைத்தனர். இந்தத் தர்மத்தின்படி சமுதாய ஏற்பாட்டில் யாராலும் மாற்ற முடியாது. இத் தர்மத்தின்படி நாட்டை ஆளும் உரிமை மாத்திரமே மன்னருக்குண்டு. சமூகத்தின் நிலவுகிற உறவு முறைகளை மாற்றி அமைக்கும் அதிகாரம் அவர்களுக்குக் கிடையாது. விதிக்கப்பட்ட இத் தருமத்தை அமுல் நடாத்துபவனாகவே மன்னன் இருந்தான்.

இந்தத் தத்துவமும், தருமமும் தமிழரிடையே தொன்றுதொட்டு வந்த ஒன்றல்ல என்பதனைத் தமிழர் வரலாறு அறிந்தோர் அறிவர். சங்க காலப்பகுதி எனக்

கருதப்படும் கி.பி. 1 ஆம், 2ஆம், 3ஆம் நூற்றாண்டுகளில் இத் தருமம் தமிழ் மக்கள் மத்தியிற் செல்வாக்குப் பெற்றிருந்தமைக்குச் சான்றுகளில்லை. வரலாற்றுப் போக்கிற் தமிழர் மத்தியில் வந்து புகுந்த கோட்பாடே இது.

சங்க காலப் பகுதியிற் குறுநில மன்னர்கள் தமக்குட் பொருதிக்கொண்டனர். இந்த மோதலின் தர்க்க ரீதியான வளர்ச்சி பெருநில மன்னர்களை உருவாக்கியது. ஒயாத போரிலும் மக்களின் அழிவிலுமே இவ்வரசுகள் உருவாயின. கொலையுங் கொள்ளையும் சமூகத்தில் நிறைய நிலவின. பரத்தமை ஒழுக்கமும் ஒழுக்கச் சீர்கேடும் இவற்றோடு சேர்ந்தன. இவை அனைத்தும் நிறைந்திருந்த சமூகத்தைக் கண்டு மக்கள் அதிருப்தியுற்றனர். இக்காலகட்டத்தில் மக்களின் அபிலாசைகளைப் பிரதிபலித்தனவே சமணமும் பௌத்தமும், தீவிர ஒழுக்கத்தையும் போர் மறுப்பையும் பிரசாரம் செய்த இம்மதங்கள் தமிழ் மக்கள் மத்தியிலே பெரும் செல்வாக்குப் பெற்றன. மக்கள் மதங்களாக இவை நின்றமையே இவை செல்வாக்குற்றமைக்கான முக்கிய காரணமாகும். ஆனால் காலப்போக்கில் இவை வணிகப் பெருமக்களின் ஆதரவுக்குட்பட்ட மதங்களாயின. இப் பெருமக்களுக்குச் சார்பாக நடந்து கொண்டன. மக்களை விட்டு ஒதுங்கியும் கொண்டன. விகாரைகளுக்குள்ளும், சமணப் பள்ளிகளுக்குள்ளும் புகுந்து கொண்டு சமய ஆய்வில் இறங்கின. மக்களிடமிருந்து பிரிந்து அறிஞர்களின் மூளைக்குட் சென்றுவிட்டன, என்பது பொருத்தமுடைத்து, மக்கள் பக்கம் நின்று மக்களுக்காகப் பரிந்து பேசும் தம்மையைச் சமணமும் பௌத்தமும் இழந்த போதுதான் தமிழ்நாட்டில் வைதீக மறுமலர்ச்சி ஏற்படுகின்றது. சங்க காலத்தில் அதிகம் கணிக்கப்படாதிருந்த உருத்திரனும், திருமாலும், சிவன் விஷ்ணு என் பெயரில் மீண்டும் தமிழர் மத்தியில் வணக்கத்திற்குரியவர்களாகின்றார்கள். சிவனை முதன்மைப்படுத்திய சைவமும், விஷ்ணுவை முதன்மைப் படுத்திய வைணவமும் மக்கள் மதங்களாயின. வணிக மதமான சமணத்திற்கு எதிரான குரல் வணி வர்க்கத்தினரான காரைக்காலம்மையாரிடமிருந்து வந்தமை வரலாற்றின் சுவையான ஒர் அம்சமாகும். பிராமணரான சம்பந்தரும், வேளாளரான அப்பரும் சைவ மறுமலர்ச்சி இயக்கத்திற்குத் தலைமை தாங்கினர். வணிகர் வளர்ச்சியினால் வாணிபம் சிறப்புற நிலங்கள் கவனிப்பாரற்றுப் போயின. இதனாற் பஞ்சம் ஏற்படுவதும் நியதி. மக்கள் பஞ்சம் தீர்க்கவும் பாழடைந்திருந்த சைவக் கோயில்களைத் திருத்தவுமான ஒரு குறியீடாகவே அப்பரின் கையிலுள்ள உழவாரத்தைக் கொள்ள வேண்டும்.

பெரும் வணிகர்களின் சமயமாகி நிறுவனங்க ளாகிவிட்ட சமணத்திற்கும், பௌத்தத் திற்கும் எதிராக அனைத்து மக்களையும் சாதி பேதமின்றித் திரட்டிச்சமயப் போர் புரிந்தனர்: சைவநெறிதான் பெற்ற புண்ணியக் கண்களாக அப்பரும் சம்பந்தரும் " கோத்திரமும் குலமும் கொண்டு என்செய்வீர்?" என்று கேட்டார். நாவுக்கரசர் கோத்திரம் குலம் தாண்டி ஆவுரித் தின்றுழன்ற புலையனையும் அணைத்துக்கொண்டு போராடிய சைவமும் வைணவமும் மக்கள் ஆதரவுடன் சமண, பௌத்த மதங்களைப் புறங்கண்டன.

சோழப் பேரரசின் எழுச்சியுடன் முன்னைய சமண, பௌத்த மதங்கள் போல இவையும் மடாலயங்களுக்குட் புகுந்தன. மக்களை விட்டுத் தூரம் சென்றன. இம்மதத்தின் காவலர்களான பிராமணர்கள் சமூகத்திற் பிரதான இடம் பெற்றனர் அவர்களுக்கென நிலமும் கிராமமும் தானமாக வழங்கப்பட்டன. நான்கு வருணம் பாகுபாட்டை இப் பிராமணர்கள் நியாயப்படுத்தினர். பல்லவர் காலத்தில் ஒலித்த " ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும் கங்கைவார் சடைக் கரந்தார்க் கன்பராகில் அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே" என்று நாவுக்கரசர் குரல் சோழர் காலத்திற் கனவாகப் போய்விட்டது. ஷத்திரியரும் நிலவுடைமையாளருமான சோழர்கள் கையிற் படைபலமும், ஆட்சி அதிகாரமும் இருந்தது. பிராமணர் களிடம் ஆதாரம் காட்ட வேஷங்களும் அறிவுப் பலமும்இருந்தன. இவ்விரு வருணத்தினரும் ஒன்று சேர்ந்தனர். ஆட்சிக்காக தத்துவப் பின்னணியையும் அரசன் தெய்வம் என்ற கருத்தினையும் அறிவாளிகளான பிராமணர் அளித்தனர். பிராமணர்களுக்கு நிலங்களையும், செல்வங்களையும் அரசர்கள் பிரதியுபகா ரமாக அளித்தனர். ஒருவருக் கொருவர் உறுதுணையா யினர். இவ்விரு வர்ணத்தினரும் சேர்ந்து சனாதனக் கோட்பாட்டின் அடிப்படையில் மக்களைச் சுரண்டி ஆட்சியைச் செலுத்தினர் எனலாம். அரசர்கள் வரிவிதித்தலிலும் தண்டனை விதித்தலிலும் பிராமணர் களுக்கு அளித்த விலக்கும் சலுகையும் இதனை மேலும் உறுதிப்படுத்தும்.

இந்நிலையில் மீண்டும் மக்கள் பக்கம் நின்று ஒலிக்க வேண்டிய தத்துவங்களும் சமயங்களும் தேவைப்பட்டன. அதைக்கூற அறிஞர்களும் வழிகாட்டிகளும் தேவைப்பட்டனர். இவ் வரலாற்றுக் கடமையினைத்தான் கம்பன் செய்கிறான். இவ்வகையிற் கம்பனுக்கு அடியெடுத்துக் கொடுத்தவன் திருமங்கையாழ்வார் என்பார் பேராசிரியர் தெ. பொ. மீனாட்சி, சுந்தரனார்.

ஏழை, வழியற்றவன், கீழ்மகன் என்றெல்லாம் பாராமல் அன்பு கொண்டு சீதை என் தோழி, என் தம்பி, உன்தம்பி, நீ எனக்குத் தோழன் என்று நீ சொன்ன வார்த்தைகளால் கவரப்பட்டேன் என்று பாடினார் திருமங்கையாழ்வார். " விலங்கு, மற்றோர் சாதி என்ற பார்க்காமல் உவந்து அருள் செய்பவன் நீ" என்று மேலும் அவர் பாடுவார். முன்னைய கூற்றிற் குகனின் குரலும், பின்னைய கூற்றில் அனுமன் குரலும் ஒலிக்கின்றதல்லவா?

அடித்தளத்து மக்களின் நம்பிக்கைகளையும், ஆசைகளையும் தூண்டிய பழைய பக்தி இயக்கத்தையே கம்பன், நிறுவனமாகிவிட்ட பிராமண தருமத்திற்கு எதிராக நிறுத்துகிறான். அந்தப் பக்தி இயக்கத்தின் துணை கொண்டே மக்களின் ஆசை அபிலாசைகளுக்கு எதிராக நிறுவனமாகிவிட்ட பிராமண தருமத்தை முறியடிக்க அவன் முயலுகிறான்.

கம்ப இராமாயணத்தில் வரும் இரண்டு கதைகளின் வாயிலாக இதனை மேலும் நாம் விளங்கிக் கொள்ளலாம். ஒன்று பால காண்டத்தில் வரும்மாவலி கதை, இன்னொன்று யுத்த காண்டத்தில் வரும் இரணியன் கதை, இராமாயணக் கதையோட்டத்திற்கு இரண்டும் அவ்வளவு பிரதானமில்லைத்தான். எனினும் அன்று சமூகத்தை இலக்கிய தத்துவம் பற்றிய தனது கருத்துக்களை முன்வைக்க இவ்விரண்டு கதைகளையும் கையாளுகின்றான்.

வானகம், வையகம் எல்லாவற்றையும் மாவலி என்ற வலிமை மிக்க மன்னன் கைப்பற்றி யாரும் செய்யமுடியாத வேள்வி ஒன்றைச் செய்து தான் கைப்பற்றிய உலகம் முழுவதையும் பிராமணர்களுக்குத் தானமாகத் தர முயலுகிறான். இத் தீயவனின் கொடுமையைக் கண்டு திருமால் வாமனாவதாரம் தாங்கி வந்து மூன்றடி மண்கேட்டு அவனை அழிக்கிறார்.

இந்தக் கதையில் இரண்டு அம்சங்கள் வெளிப்படையானவை. ஒன்று மாவலி பிராமணருக்கு நிலங்களை அளிக்க முயல்வது, மற்றது ஏனையவர்கள் வேண்டுகோளுக்கு கிணங்கத் திருமால் வாமவானதாரம் தாங்கி அவனை அழிப்பது.

இக்கதை விளை நிலங்கையும், கிராமங்களையும், கன்னிகைகளையும், மக்களையும் மக்களிடமிருந்து பெற்றுப் பிராமணருக்குத் தானமாக வழங்கும் சோழ அரசர்களுக்கு ஒரு பயமுறுத்தலாக இருந்திருக்கும். பிராமணர்கள் நிலவுடைமையாளர்களாகிவந்த அச்சூழ் நிலையில் அப்புதிய நிலவுடைமையாளப் பிராமணர்கள் மீது கம்பன் தொடுக்கும் கன்னிப்போர் இது என்று சிலர் கூறுவர்.

யுத்த காண்டத்தில் வரும் இரணியன் வதைப் படலத்திற் பிராமண தருமத்திற்கு எதிராக இன்னொரு விதமான கருத்துக்களைக் கம்பன் வைக்கிறான். இரணியன் வதைப் படலத்திற் பிரகலாதனுக்கும் அவனைக் கற்பிக்கும் அந்தணனுக்கும் நடக்கும் உரையாடல் முக்கியமானது. வேதங்களின் அறிவே அறிவென்று அந்தணன் நினைக்க, ' தொல்லை நான் மறை வரன் முறைத் துணி பொருட்கெல்லாம் எல்லை கண்டனம் புகுந்திடம் கொண்டதென்று'' என்று பிரகலாதன் கூறுகிறான். நான்மறைக்கும் மேலான பொருளை நான் அறிவேன் என்று கூறுகையில் நான் மறையின் தன்மை பிரகலாதனாற் குறைக்கப்படுகிறது. திருமாலுடைய அடியவர்களாகிவிட்டால் கல்வி, கேள்வி, அறிவு இல்லாதவர்கள் கூட வேதங்களின் அகப்பொருள் புறப் பொருளை அறிவார்கள். பக்தியிருந்தால் எல்லாம் தெரியும். அதற்கு அறிவோ வேதங்களோ தேவையில்லை என்பது பிரகலாதன் வாதம்.

வேதத்திற் துறை போனவன்முன் மக்கள் பக்கம் நின்று வேதத்திற்கு மாற்றீடாகப் பக்தியை முன் வைக்கிறான் பிரகலாதன். பிரகலாதன் நியாயப்படி பக்தி இருந்தாற்போதும் வேதம் முக்கியமல்ல என்று ஆகிவிடுகிறது.

பின்னர் தந்தையாகிய இரணியனுக்கும் பிரகலாதனனுக்கும் நடக்கும் வாதம் கூட இதன் தொடர்ச்சியாகவே இருக்கிறது. வேதம் சொல்வதே சரி. அவற்றுக்கு ஆதியாகவோ, அந்தமாகவோ இன் னொன்று கிடையாது.

***" ஆதியந்தங்கள் இதனின் மற்றில்லை பேருலகின்***
***வேதமெங்கன மங்கன மவை சொன்ன விதியாற்***
***கோதினல்வினை செய்தவருயர் குவர்குறித்துத்***
***தீதுசெய்தவர் தாழ்குவர் இது மெய்ம்மை தெரியின்"***

என்கிறான். இரணியன். வேதம் கூறியபடி செய்தவர்கள் மேம்படுவார்கள்; செய்யாதவர்கள் தாழ்நிலையடைவார்கள் என்பது இரணியன் வாதம். வேதங்களையே அளவுகோலாகக் கொண்ட இரணியன் தான் வேத கேள்வி செய்ததாலேயே இந்நிலையை அடைந்தேன் என்று கூற வருகிறான். சோழ அரசனுக்கு வேதங்கள் துணைநிற்பது இவ்விடத்திற் கம்பனுக்கு ஞாபகம் வந்ததோ என்னவோ?

வேதங்களைப் பிரதானப்படுத்தும் இரணியனுக்கு மாறாகப் பிரகலாதன் கூறுவது கணிப்பிற்குரியது.

வேதங்களும் அதன்படி நடக்கும் யாகங்களும் ஓர் எல்லைக்குட்பட்டவையே. அவற்றையும் மீறிய

ஒன்றிருக்கிறது. வேதங்களுக்கும் மேற்பட்டவன் பரம்பொருளென்று வாதிடுகிறான் பிரகலாதன்.

வேதமும் வேத விதிகளுந்தான் எல்லாம் என்ற தந்தை கூற்றை மறுத்து அவற்றிக்கும் மேற்பட்ட பொருள் ஒன்றிருக்கிறது என்ற மகன் கூற்றிற் தெரிவது வேத எதிர்ப்பு ஆகும். தந்தையின் மனதை மாற்ற மைந்தனால் முடியவில்லை. நரசிங்கம் தூணிலிருந்து புறப்படுகிறது. திசைகடந்தண்டம் கீறிச் சிரித்த அச்செங்கட் சீயம் இரணியனை இறுதியில் வதை செய்கிறது.

வேதத்தின்படி நடந்து உயர்வுபெற்ற இரணியன் வேதங்களாலும் அறியமுடியாத நரசிங்கத்தால் அழிக்கப்படுகிறான். வேதங்களாலும் அறியமுடியாத நரசிங்கம் ஒரு கிழவனின் பக்திவலையிற்படுகின்றது. சிறுவனின் பக்திக்கு இளகுகின்றது. சிறுவனின் பக்திக்கு அது கொடுக்கும் வெகுமதி மிகப் பெரியது. தன்னை வணங்கினால் என்ன நன்மைகள் கிடைக்குமோ அவையெல்லாம் உன்னை வணங்கினாலும் கிடைக்கும் என்று வரமளிக்கிறது நரசிங்கம், ஓர் உண்மைப் பக்தனுக்கு வேதம் கூடப் பணி செய்ய வேண்டும் என்ற கருத்து மேலெழுகிறது.

பக்திக்கும் வேத அதிகாரத்திற்கும் ஏற்பட்ட மோதலில் வேத அதிகாரம் தோல்வியடைகிறது. வேத அதிகாரங்களுக்கு எதிராக மக்கள் நலம் சார்ந்த இப்பக்தி நெறியை வைஷ்ணவ பாரம்பரியத்தில் மேலும் வளர்த்தெடுத்தவர் இராமானுஜர் ஆவர். வருணம் பாகுபாடுகளைக் கடந்த அவரது மனிதாபிமானம் வரலாற்றுப் பிரசித்தமானது.

மேற்சொன்ன இரண்டு கதைகளுக்கூடாகத் தன் காலத்திற் செல்வாக்குப் பெற்றிருந்த பிராமணர்களுக்கும், வேதங்களுக்கும் எதிரான கொள்கைகளைக் கூறுகிறார் கம்பன். இது பிராமண தருமத்திற்கெதிரான ஒரு வகைக் கலகமே. இக் கலகக்காரன் கம்பன் வேதங்கள் கூறும் கிரியைகளுக்கும் அனுஷ்டானங்களுக்கும் மறுதலையாக அனைத்து மக்ககளும் எவருடைய இடையீடுமின்றிப் பக்தி செலுத்தக்கூடிய, இணையக் கூடிய பக்தி நெறியை– அன்பு நெறியை மாற்றீடாக வைக்கிறான். இது நிறுவனமாக்கி விட்ட பிராமண த்ர்மத்திற்கு எதிராக மக்கள் பக்கம் நின்று ஒலிக்கும் குரல்.

உயர் வருணத்தினரான பிராமணரும், ஷத்திரியரும் தம் உயர்நிலையியின்று கீழ் இறங்கிவரக் கூடாது. சண்டாளர் பார்வை பட்டாலே தீட்டு என்பது தர்மசாஸ்திர விதி. ஆனால் கம்பனின் ஷத்திரிய இராமனை இவ்விதிகளை மீறுகிறான். கீழ் இறங்கி வருகிறான். வேடர் குலக் குகனைத் தோழமை கொள்கிறான். தொட்டாற் தீட்டுப்படும். சூத்திரனான குகனை அன்போடு அணைத்துக் கொள்கிறான். தன் மனைவியை குகனின் கொழுந்தி என்று உறவு முறைகூட ஏற்படுத்திக் கொள்கிறான். வருணப் பாகுபாடு நிலைபேறு பெற்ற காலத்தில வருணம் மாறி ஒருவன் உறவுமுறை கொண்டாடுதல் அதுவும் காவிய நாயகனே அக்கால தர்மத்தை மீறுதல் நினைக்கமுடியாத ஒன்று.

மனுதர்மசாஸ்திர விதியினையே மீறும் நாயகன் இந்த இராமன் மக்கள் என்ற அன்புருவங்கள் முன்னாற் சாஸ்திர விதிகள் பின்னே சென்றுவிடுகின்றன.

பரதன் படையெடுத்து வருகிறான் என்று கோபமுற்ற குகன் " ஏழையாகிய எனது அம்பு அரசனின் மார்பில் ஏறாதோ? என்று கேட்கையில் வேதம் விதித்த நால்வகை வருணப்பாகுபட்டிற்கியைச் ஷத்திரிய குலத்தைத் தன்னிலும் பெரிய குலமாக ஏற்றுக் கொள்ளாத ஒரு சூத்திரனின் கலகக் குரலையே நாம் கேட்கிறோம். அக் கலகக் குரலுக்குரியவன் குகனல்ல: கம்பனே.

இவ்வண்ணம் அரசு, அரசன், தன் காலத் தத்துவம் அனைத்தையும் எதிர்த்துக் கலகக் குரல் எழுப்பியமையினாலேயே சோழ அரசவையிற் கம்பனுக்கு இடம் கிடைக்காது போயிற்று. கவிச்சக்கரவர்த்தி என்ற அரச விருதும் கிடைக்காது போயிற்று. கம்பன் மகன் அம்பிகாபதியை மன்னவன் கொன்றான் என்ற கதையும், ' மன்னவனும் நீயோ வளநாடும் உன்னதோ உன்னை அறிந்தோ தமிழை ஓதினேன்" என்று மன்னனையே தூசென மதித்துக் கம்பன் பாடினான் என்ற கதையும் எழுந்தது. சீரங்கக்கோயிலிற் பிராமணர்கள் கம்பனின் இரணியவதைப் படலத்தை எதிர்க்க முற்பட்டதைக் கூறும் கர்ண பரம்பரைக் கதையும் இதனால் எழுந்ததே. கம்பனை ஆதரித்த சடையப்பவள்ளல் கூட ஒருவகையிற் பேரரசின்மீது அதிருப்தியுற்ற சிறு நிலப்பிரபுவாகவே இருந்திருக்ககூடும்.

அரசனைப் புகழ்ந்தும், அரசனைக் சார்ந்த ஆட்களைப் புகழ்ந்தும் பாடிய அன்றைய அரசவைப் புலவர்கள் பொன்னும், மணியும், யானையும், பொருளும் பெற்றிருக்கலாம். அவர்கள் அனைவரும் மனச்சாட்சியை விற்றவர்களே. ஆனால் அன்று மக்கள் பக்கம் நின்று ஏகாதிபத்தியத்திற்கும் அன்று அதனை நியாயப்படுத்திய சனாதன தர்மத்திற்கும் எதிராகக் குரல் கொடுத்த கம்பன் அன்றைய கலகக்காரனே.

அரச ஆதரவின்மையும், பிராமண எதிர்ப்பும் அவனைப் படாத பாடுபடுத்தியிருக்க வேண்டும். ஆனால் அவன் பெற்றவை மிகப் பெரியவை. நல்லெண்ணம் மிக்க சடையப்ப வள்ளல் போன்றோரினதும் சாதாரண பொது மக்களதும் பேராதரவுகளை அவன் பெற்றான். இதனாலேதான் சோழர் காலத்திற் படாடோபமாக வாழ்ந்த கவிச்சக்கரவர்த்திகளின் பெயர்களையெல்லாம் காலவெள்ளம் அழித்தபோதும் கலகக் காரன் கம்பனுக்கு மக்கள் விரும்பியளித்த கவிச்சக்கரவர்த்திப் பட்டம் நிலைத்துவிட்டது; மென்மேலும் சுடர்கிறது.

# கீர்த்தனைகளில் இராமாயணக் காட்சிகள்



வி. சிவசாமி

கீர்த்தனை அல்லது கீர்த்தனம் எனுஞ் சொல் தமிழிலே புகழ்ச்சி, ஒரு வகை இசைப்பாடல் எனப்பொருள்படும், இதன் மூலச் சொல்லான கீர்த்தன எனும் வடமொழிச் சொல்லிற்குக் கூறுதல், கூறச் செய்தல், வெளிப்படுத்தல், தொடர்பு கொள்ளுதல், புகழுதல், சிறப்பித்தல், கோவில் எனப் பல பொருள் உண்டு. இறைவனின் சிறப்பியல்புகளையும், பெருமைகளையும் புகழ்ந்து கூறும் இசைப்பாடல்வகை ஒன்றினைக் குறிப்பதற்கு இது பயன்படுத்தப்படுகிறது.

கர்நாடக இசைக்குரிய கீர்த்தனைகள் தமிழ், தெலுங்கு மலையாளம், கன்னடம், சமஸ்கிருதம் ஆகிய மொழிகளில் உள்ளன. வட இந்திய மொழிகளான ஹிந்தி, மராத்தி முதலியவற்றிலே கீர்த்தனம் என்பது கீர்த்தன் எனவரும். ஹிந்துஸ்தானி இசைக்கான கீர்த்தன்கள் உள்ளன. கீர்த்தனைகள் பொதுவாகப் பல்லவி, அனுபல்லவி, சரணம் ஆகிய பகுதிகளைக் கொண்டிலங்குவன. சிலவற்றில் அநுபல்லவியின்றி ஏனைய இரண்டும் வரும். ஒவ்வொரு பகுதி முடிவிலும் பல்லவி மீண்டும் இசைக்கப்படும். கர்நாடக இசைக்குரிய இராகங்களின் தோற்றம், வளர்ச்சி ஆகியனவற்றிக்கும், கீர்த்தனைகளின் தோற்றம், வளர்ச்சி ஆகியனவற்றிற்குமிடையிலே நெருங்கிய தொடர்புகள் உள்ளன. கீர்த்தனைகளிலே சாஹித்தியம் பிரதானமாகும். தெய்வீக இயல்பும் ஈடுபாடும் முக்கிய இடம்பெறும். பாவரசங்கள் குறிப்பாகப் பக்திரசம் ததும்பும், இக்கீர்த்தனை வடிவம் கி.பி.14ஆம் நூற்றாண்டளவிலே தோன்றியதாகப் பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி குறிப்பிட்டுள்ளார்.

தமிழ்க் கீர்த்தனைகளின் உருவாக்கத்திலே மராத்தி, கன்னடம், தெலுங்கு, சமஸ்கிருதக் கீர்த்தனைகளின் தாக்கம் இடம் பெற்றிருந்தாலும், அவற்றின் தோற்றம், வளர்ச்சி ஆகிய்னவற்றிலே தனித்துவம் உண்டு. இக் கீர்த்தனைக்கான வடிவம் (பல்லவி, அநுபல்லவி, சரணம் ஆகியன அடங்கிய வடிவம்) மேற்குறிப்பிட்ட மொழிகளிலுள்ள கீர்த்தனைகளையொட்டித் தோன்றியிருக்கலாம். ஆனால் கீர்த்தனை எனும் இசைப்பாடல் வகை மராத்தியத் தொடர்பாலே தமிழிலேற்பட்டதெனப் பேராசிரியர் தெ. பொ. மீனாட்சி சுந்தரன், திரு. மு. அருணாசலம் போன்ற அறிஞர்கள் கூறியுள்ளனர். ஆனால் தமிழ்க் கீர்த்தனைக் கான கருவினைத் தமிழிலக்கியத்திலே காணலாம். பழந்தமிழ் நூல்களிலே கலித்தொகை, பரிபாடல் ஆகியனவும் சைவத் திருமுறைகள், ஆழ்வார் திருப்பாசுரங்கள், திருப்புகழ் முதலியனவும் குறிப்பிடற் பாலன. சில அறிஞர்கள் " தலையே நீ வணங்காய்" எனத் தொடங்கும் திருநாவுக்கரசு சுவாமிகளின் தேவாரத்திலே பல்லவிக்கான அமிசம் காணப்படுகின்றதெனக் கருதுகின்றனர். வேறு சில அறிஞர்கள் கலித்தொகை, பரிபாடல் போன்ற நூல்களிலே கீர்த்தனைக்கான முன்னோடி அமிசங்கள் சில உள்ளன எனக் கொள்ளுவர். தேவாரம் ( இறைவனைப் பற்றிய புகழ்மாலை), திருப்புகழ் ( இறைவனின் புகழ்) ஆகிய தெய்வத் தமிழ் மாலைகள் குறிப்பிடற்பாலன. அதே வேளையிலே, தமிழ் மன்னர்பற்றிய மெய்க் கீர்த்திகள் கவனிப்பதற்குரியன. மன்னரைப் போற்றிய புகழ் மாலைகளுக்குப் பதிலாக அல்லது அவற்றைப்போல இறைவனின் புகழ்கூறும் இசை மாலைகளாகக் கீர்த்தனைகள் தோன்றி யிருக்கலாம். மேலும் சிந்து, பள்ளு, குறவஞ்சி முதலிய தமிழ்ப் பிரபந்தங்களும் கீர்த்தனைகளின் ஆரம்ப நிலைகளை அறிவதற்கு உதவுவன. எனவே, மேற்குறிப்பிட்ட பல மூலங்கள் தமிழ்க் கீர்த்தனையின் உருவாக்கத்திலே ஏதோவகையில் துணை புரிந்திருக் கலாம்.

பொதுவாக எளிமையான நடையில், ஜனரஞ்சகமான முறையில் இசையுடன் இறைவன் புகழைக் கீர்த்தனைகள் எடுத்தியம்புவன.

இன்று கிடைத்துள்ள காலத்தால் முந்திய தமிழ்க் கீர்த்தனை வென்றிமலைக் கவிராயரால் எழுதப்பட்ட தாகும். ஒல்லாந்தர் கவர்ந்து சென்ற திருச்செந்தூர் முருகனின் படிமம் 1653 இலே மீட்கப்பட்டபோது இது பாடப்பட்டதாகும். திருப்புகழ் போன்று இதுவும் முருகனைப் பற்றியதாகும். எனவே, இவ்விரண்டிற்கு மிடையிலுள்ள தொடர்புகள் நன்கு ஆராயப்பட வேண்டியவாகும். ஆனால் 1653 க்குமுன்பே தாள்ளபாக்க அன்னமாச்சாரியார் ( 1424–1503), புரந்தரதாசர் ( 1480–1564) முதலியோர் தெலுங்கு, கன்னடம், சமஸ்கிருதம் ஆகிய மொழிகளில் இயற்றிய கீர்த்தனைகள் வந்துவிட்டன. காலத்தால் முந்திய புகழ்பெற்ற கீர்த்தனை ஆசிரியர்களிலே சீர்காழியைச் சேர்ந்த முத்துத்தாண்டவர், மாரிமுத்தாபிள்ளை, அருணாசலக் கவிராயர் ( 1712–1779) ஆகியோர் குறிப்பிடற்பாலர். இவர்களுடைய இறுதிக்கால கட்டத்திலேதான் கர்நாடக இசைக்குரிய சங்கீத மும்மூர்த்திகள் தோன்றினர். அருணாசலக் கவிராயர் பிற்காலத்திலே சீர்காழியிலே வாழ்ந்தவர்

இக்காலகட்டத்திலே தமிழகத்திலே பிரபல்யமாக நிலவிய வழிபாடுகளிலே இராம வழிபாடும் ஒன்றாகும். இந்திய இலக்கிய நூல்களிலே இராமாயணம் மிகமுக்கியமான இடம் ஒன்றினை வகித்துவந்துள்ளது. வேறு எந்த நூலுக்குமில்லாத சிறப்பு இதற்கு உண்டு. இராமாயணம் காட்டும் இலட்சியங்கள் குறிப்பாக இராமனின் இலட்சியங்கள் இந்தியர்களின் இலட்சியங் களாக இலங்கின. இராமன் மிக உன்னதமாக அவதார புருஷனாகவும் திகழ்ந்து வந்துள்ளான். வால்மீகி காலம் தொட்டு இக்காலம் ( காந்தியடிகள் காலம்) வரை இந்தியாவிலும், இந்தியப் பண்பாடு பரவிய தென்கிழக் காசிய நாடுகளிலும் இராமபக்தி முக்கியமான இட மொன்றினைப் பெற்று வந்துள்ளது. இலக்கியத்தில் மட்டுமன்றிக் கட்டிடக்கலை, சிற்பம், ஓவியம், இசை, நடனம், நாடகம் முதலிய பல கலைகளிலும் இராமாயணம் மிகுந்த தனிப்பட்ட செல்வாக்குப் பெற்றிருந்தது. தமிழகத்தைப் பொறுத்தமட்டிலே வால்மீகி இராமாயணத் தைப் பின்பற்றித் தமிழில் இயற்றப்பட்ட சிறப்பான பெருங்காப்பியம் கம்ப இராமாயணம் ஆகும். கம்பனுக்கு முன்பே சங்க காலம் தொட்டு அல்லது அதற்கு முற்பட்ட காலந் தொட்டுத் தமிழர் இராமாயணக் கதையினை நன்கு அறிந்திருந்தனர். ஆழ்வார்களின் திருப்பாசுரங் களிலே குறிப்பாகக் குலசேகராழ்வார் பாடல்களிலே இராமபக்தி நன்கு காணப்படுகிறது. கம்பனுக்கு முன்பே சில கவிஞர்கள் இராமாயணத்தினைத் தமிழிலே பாடினர் என்ற கருத்தும் நிலவுகின்றது. எனினும் கம்பராமா யணம் தனிச் சிறப்பு வாய்ந்தது. இதைத் தொடர்ந்தும், பின்பற்றியும் பலநூல்களும் தனிப்பாடல்களும் தோன்றின இவற்றுள், சந்தவிருத்தத்திலே பாலபாரதியார் பாடியுள்ள இராமாயணம் ஒன்றாகும். 18 ஆம் நூற்றாண்டிலே வாழ்ந்த சீர்காழி அருணாசலக் கவிராயர் இராமாயணக் கதையினை நாடகமாகப் பெரும்பாலும் கீர்த்தனைகளிற் பாடியுள்ளனர். இது இராம நாடகக் கீர்த்தனை என அழைக்கப்படும். கம்பனின் இராமாயணம் கற்றோர் இதயத்தைத் தொடும் காப்பியம் என்பதில் ஐயமில்லை. பாலபாரதியின் இராமாயணமும் நயமுள்ள ஒரு நூலாகும். ஆனால் அருணாசலக் கவிராசர் இராமாயணத்தை நன்கு ஜனரஞ்சகமாக்கும் நோக்குடன் இன்னிசைப் பாடல்களில் நாடகமாக அமைத்துள்ளார். ஏறக்குறைய இவரின் சமகாலத்தவ ராகிய பத்ராசலம் ராமதாசர், உபநிஷத் பிரமன் போன்றோர் கீர்த்தனை வடிவிலே இராமனைத் தெலுங்கு, சமஸ்கிருதம் முதலிய மொழிகளிலே பாடியுள்ளனர். தமிழகத்தில் மட்டுமன்றி மைசூர், ஆந்திரதேசம், கேரளம் முதலிய மாநிலங்களிலும், அந்தந்த மாநில மொழிகளிலே இராமாயணமும் ஒன்று அல்லது பல எழுதப்பட்டு வந்தன. இராமனாட்டம் என்னும் நடனம் கேரள சாஸ்திரீய நடனமாகிய கதகளிக்கு வழிவகுத்தது. அருணாசலக் கவிராயர் சைவராயினும் சிறந்த ராமபக்தர். சிவபிரானையும், இராமபிரானையும் இவர் சமநிலையிலே பரம்பொரு ளாகவே கருதினார்.

இராமநாடகக் கீர்த்தனை பெரிதும் கீர்த்தனை வடிவில் அமைந்துள்ளமை பற்றி ஏற்கனவே கூறப்பட்டது. கீர்த்தனைகள் முதலிலே தனியாகவும், பின்னர் நாடகத்தின் பகுதிகளாகவும் மிளிர்ந்து காலப் போக்கிலே நாடகம் முழுவதிலும் இடம் பெறலாயின. இந்நாடகக் கீர்த்தனை தமிழிலே புதிய ஒரு இலக்கிய வடிவிலான முதலாவது நூலாகும். இது மேலும் பல இசை நாடகங்களுக்கு முன்மாதிரியாக மிளிர்ந்தது. இத்தகைய நாடகங்கள் இசை நாடகங்கள் அல்லது தேயநாடகங்கள் எனவும் அழைக்கப்படும்.

ஏற்கனவே குறிப்பிட்டவாறு அருணாசலக் கவிராயர் சமகாலத் தமிழகச் சமய, சமூகச் சூழ்நிலைக் கேற்ப இராமாயணத்தை ஓர் இசை நாடக வடிவில் அமைத்துள்ளனர். இவருக்கு முன் எவராவது தமிழில் இராமாயணத்தைக் கீர்த்தனை வடிவிலே பாடிலர். தாம் இயற்றிய கீர்த்தனைகளுக்கான இராக தாளங்களை நிச்சயிப்பதற்குத் தம்மிடம் இயற்றமிழ் கற்றவரும் சீர்காழிக்கு அடுத்துள்ள சட்டநாதபுரம் எனும் கிராமத்தவருமான வேங்கடராமையர், கோதண்ட ராமையர் எனும் இரு பிராமண மாணவர்களின் துணையைப் பெற்றிருந்தார். இவர் இராம நாடகத்தை

எழுதுவதற்கு அவர்கள் நன்கு தூண்டுகோலாகவும் விளங்கினர். இசை வல்லுநராலே பாடத் தக்கதும், மக்களாலே கேட்டு மகிழத் தக்கதுமாகிய இசை நாடக வடிவத்தினை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார். இந் நாடகத்திலும் இவர் முதலிலே பாடியது யுத்த காண்டத்திலே அங்கதன் இராவணனுக்குக் கூறியதாகச் சொல்லப்படும் " அடடா வெளியே புறப்படடா" என்று தொடங்கும் இசைப்பாடலாம். மேற்குறிப்பிட்ட மாணவர்கள் இதற்கு இராக, தாளம் அமைத்துச் சென்னையில் இதனைப் பாடிப் பரிசில் பெற்றனர். தொடர்ந்து அருணாசலக் கவிராயர் முழு இராமாயணத்தையும் பாடி முடித்தார். இதனைக் கம்பர் போலச் ஸ்ரீரங்கத்திலே அரங்கேற்ற விரும்பினார். ஆனால் கோவில் துறையாளர்கள் கம்பருக்குப் போல இவருக்கும் பெருமாளின் உத்தரவு தேவை எனக் கூறியதாகவும், இவர் " ஏன் பள்ளிகொண்டீர் ஐயா....." எனத் தொடங்கும் கீர்த்தனையினையும், பெருமாளின் பரிசனங்கள் பற்றியும் பாடிச் ஸ்ரீரங்கநாதரின் உத்தரவையும், கோவிற்காரரின் அனுமதியையும் பெற்றார் என்றும் கம்பராமாயணம் அரங்கேற்றப்பட்ட அதே மண்டபத்திலே இந்நூலையும் 1772 இலே தமது 60 ஆவது வயதில் அரங்கேற்றுவித்தார் என்றும் அறியப்படுகிறது. சமகாலத்தில் வாழ்ந்த மணலி முத்துக்கிருஷ்ணமுதலியார் இவருக்குக் கனகாபிஷேகம் செய்து கௌரவித்தார். மேலும் சில இடங்களிலும் இது அரங்கேற்றப்பட்டது.

ஆசிரியர் இந்நூலினை நாடகம் என்றே பல இடங்களிலே குறிப்பிட்டுள்ளார். தொடக்கத்தில் உள்ள விநாயகர் துதியிலே " எங்குல தெய்வமே! இந்த இராம நாடகத்திற்கு அனுக்கிரகிப்பாயே" எனவும், அனுமார் துதியில், இணையொன்றில்லாதவல்ல ராமநாடகம் சொல்லத் துணைசெய் தருள்வாய்" எனவும் அவர் கூறியிருப்பன கவனித்தற்பாலன. வால்மீகி, போதாயனர் முதலியோர் வடமொழியிலும், கம்பர் தமிழிலும் எழுதியுள்ளமையைக் குறிப்பிட்டுத் தகுதியில்லாத தாமும் ஒரு நாடகமாய் இதனை எழுதியதாகக் கூறுகிறார். "அபசார மையனே கனமான வால்மீகி சுலோகம் செய்தார், கம்பரும் இராமாயணத்தைக் கவியாய்ச் செய்தார். உனதாசையாலே நாடகமாய்ச் செய்தேன்" என்கிறார்; மேலும், "கேவலம் நான் இதைப் பாகவதர் படிக்கும் கீர்த்தனையாய்ச் சொன்னேன்." எனவும் தொடர்ந்து கூறுகிறார். எனவே இவற்றில் ஆசிரியன் நோக்கம் தெட்டத் தெளிவாகின்றது. நாடகக் கீர்த்தனைவடிவிலே இராமாயணத்தை அமைப்பதே இவரின் இலக்காகும். மேலும் முடிவிலுள்ள நூற் பயனிலே " ஞான நாயகனாம் இராமன் நாடகம் இசையாற் சொல்லும் கானபாகவதர் உள்ளம் களித்திட." எனக் கூறப்படுவதாலும் இக்கருத்து வலுப்பெறுகிறது.

ஆசிரியர் பெருமளவு கம்பரையொட்டியே தமது நாடகக் கீர்த்தனையினை அமைத்துள்ளார். ஆயினும், சில இடங்களில் வால்மீகியையும் பின்பற்றியுள்ளார். ஆனால் மூல நூல்களைப் போன்று இராமகாதையினை விரித்துக் கூறாமல், தமது நோக்கத்திற்கேற்பச் சுருக்கி இசை, நாடக மெருகூட்டிக் கூறுகிறார். இசைநயம், நாடகப் பண்புகளுடன் தமது சொந்தக் கற்பனைகளுக் கும் இடமளித்துள்ளார். இந்நூல் தசரதனின் ஆட்சியிலிருந்து இராமன் இராவணனை வென்று முடிசூடியது வரையுள்ள கதையைக் கூறுகின்றது. தொடக்கத்திலே பாயிரமும் மூல இராமாயணங்களை யொட்டிப் பால காண்டம், அயோத்தியா காண்டம், ஆரணியகாண்டம், கிஷ்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்தகாண்டம் என ஆறு காண்டங்களும் கொண்டிலங்குகின்றது. கட்டியக்காரன் வரவு தரசதனின் அரசியலை விளக்குவதாக அமைகின்றது. ஒரு பாத்திரம் தன்னைத் தானே அறிமுகப் படுத்திக்கொண்டு வெளிப்படும் தெருக்கூத்தின் பாணி இதில் அமைந்துள் ளது.

அரங்கத்திலே தோன்றும் தசரதன் நெடுநாளாய்ப் புவியாண்டேன் என்று தன்னை அறிமுகஞ் செய்கிறான். அதுபோல இலட்சுமணன் வருமிடத்திலே, " நானே இலட்சுமணன், ஆனாற் கொடுக்கிறேன் இராமனுக்கு மணிமகுடம்" என்று கூறுவதைச் சுட்டிக்காட்டலாம். இராம நாடகக் கீர்த்தனையிலே காப்பு, பாயிரம், உட்பட ஆறு காண்டங்களிலும் 268 விருத்தம், 197 தரு (பல்லவி, அநுபல்லவி, சரணம் ஆகியன அடங்கிய கீர்த்தனை), 60 திபதை, 6 கொச்சகம், 2 வெண்பா, ஒரு கலித்துறை, ஒரு தோடயம், ஒரு வசனம் இடம்பெற்றள்ளன. விருத்தப் பாக்கள் கம்பராமாயணத் தொடர்பை நன்கு வலியுறுத்துவன. யுத்த காண்டத்திலேதான் கூடுதலான விருத்தங்களும் தருக்களும் உள்ளன.

காண்டங்களின் தொடக்கமும் இறுதியும் விருத்தப் பாக்களிலமைந்துள்ளன. ஒரு விருத்தம் முடிய, அதைத் தொடர்ந்து தரு அல்லது திபதை இடம் பெறுகிறது விருத்தங்கள் கதைக் குறிப்புகளுடன் விளக்கப்பகுதியாக அமைய, தரு, திபதை ஆகியவை உணர்ச்சி வேகமுள்ள பகுதிகளாகக் காணப்படுகின்றன. தோடயமும், வசனமும் நூலின் தொடக்கப் பகுதியில் மட்டும் உள்ளன. ஆசிரியர் குறிப்பாக கம்பராமாயணத் தையே பின்பற்றியிருப்பினும், ஒருசில அம்சங்களிலே

கதைப் போக்கிலே மாற்றங்கள் செய்துள்ளனர். எடுத்துக்காட்டாக இராமன் சூர்ப்பனகையுடன் உரையாடுமிடம் வால்மீகியைத் தழுவியுள்ளது. கம்பராமாயணத்திற் சீதையின் துயர்நிலையைக் கூறுமிடம் கவிகூற்றாக அமைய, இராமநாடகக் கீர்த்தனை சீதையே தன்னிலையைக் கூறுவதாக அமைந்துள்ளது.

இராம நாடகக் கீர்த்தனையிலே பெரும்பாலும் மாலையிலும், இரவிலும் பாடக்கூடிய ரக்தி ராகங்களையே ஆசிரியர் பயன்படுத்தியுள்ளமை பொருத்தமாகும். இராகம், சுவை ஆகியவற்றுக்குப் பொருத்தமான நூலாக ( லக்ஷண கிரந்தம்) இந்நூல் அமைந்துள்ளமை சிறப்பாகும். ஆசிரியர் சாவேரி, தோடி, மோஹனம், சங்கராபரணம், பைரவி, அடானா, கல்யாணி, அசாவேரி, சுருட்டி, புன்னாகவராளி, முகாரி முதலிய 27 இராகங்களையும், ஆதி, அட, மிச்ரசாபு, ரூபகம் ஆகிய நான்கு தாளங்களையும் பயன்படுத்தியுள்ளார்.

இதிலுள்ள சில காட்சிகளைக் குறிப்பிடலாம். பாலகாண்டத்திலே அறுபதினாயிரம் ஆண்டுகள் நன்னிலையில் வாழ்ந்தாலும், பிள்ளைப் பாக்கியமின்றி தசரதன் மிக மனவருத்தமுற்றமை பின்வருமாறு கூறப்படுகிறது.

பல்லவி

*"பிள்ளையில்லாத பாக்கியம்–நான்*
*பெற்றிருந்தென்ன சிலாக்கியம்*

அநுபல்லவி

*வள்ளலே ஜன்மமடைன் என் றொருகாலை*
*வசைகொண்டேன் தசரதன் நான்புவிமேலே*
*கள்ளி ஆனது நெடுகவளர்ந்ததாலே*
*காய் உண்டோ கனியுண்டோ அதுபோலவே*
*(பிள்ளை)*

சரணம்

*மறுவில்லாது இந்தச் சூரியவம்சம் இது*
*வளரும் வங்கிசம் ஆச்சே– இது*
*மழைபெய்ந்தடி மறைந்தால் போலஎன்*
*மட்டிலே நின்று போச்சே*

*பெருக்கக் காண்பதே காண்பதல்லால்*
*பெறுவதொன்றும் காணேன்– மிகு*
*பிச்சர்போலே நெடுநாளும் உண்டஉண்ட*
*எச்சிலை உண்ணல் ஆனேன்*

*ஏந்தினேன் இல்லையே ஒருபிள்ளைக்கனி*
*என்னவிடென்ன வாசல் எனக் கினி*
*பிள்ளை*

எனத் தசரதன் மனநிலை தெளிவாகக் காட்டப்படுகின்றது.

ஸ்ரீராமபிரான் பரப்பிரமம் என்பதை ஆசிரியர் வெளிப்படையாகக் கூறியுள்ளார்.

பல்லவி

*பரப்பிரம்ம சொரூபமே ஸ்ரீராமன் ஆகப் – பாரில்*
*வந்தது பாரும்.*

அநுபல்லவி

*வரத்தினால் அரக்கரை வானத்தில் ஏற்றவும்*
*வானத்தில் தேவர்கள் மலர் மாரி தூற்றவும் (பர)*

என ராமாவதாரமும் நோக்கமும் கூறப்படு கின்றன.

தான் செய்யும் வேள்வியைக் காவல் செய்வதற்கு இளம் இராமனைத் தன்னிடம் விடுமாறு விசுவாமித்திர முனிவர் தசரதனிடம் கேட்டார். ஆனால், அதற்கு அரசன் உடன்படாது தானே மகனுக்காக வருவதாகக் கூறினான். இவ்வேளையிற் குருவாகிய வசிட்டர் விஸ்வாமித்திரரின் வேண்டுகோளுக்கு இணங்குமாறு தசரதனுக்கு ஆலோசனை கூறுவது குறிப்பிடற்பாலது.

பல்லவி

*மோசம் வாராதையா நான் சொன்னவார்த்தை*
*மோசம் வாராதையா.*

அநுபல்லவி

*கோசிகன் பின்னே ராமனைக் கூட்டிவிடுவாய்*
*சொன்னேன் (மோசம்)*

சரணம்

*உப்புநீர்மேலும் சேர்ந்தால் உலகிற் பிரவாகம்*
*அப்படி உன் மகனுக்கு – அடுத்தடுத்தே யோகம்*
*(மோசம்)*

எனவரும் பகுதி கவனித்தற்பாலது.

இராமர் சீதையைக் கண்டு காதலிக்கிறார். வால்மீகி கூறாத இந்த அம்சத்தைக் கம்பர் தமிழக அகப்பொருளிலக்கிய மரபிற்கேற்ப மிதிலைக் காட்சிப் படலமாகவே அமைத்துள்ளார். அருணாசலக்கவிராயரும்

சுயம்வரத்திற்கு முன்பே இராமன் சீதை காதல்பற்றிக் கூறுகிறார். மிதிலையிலுள்ள கன்னிமாடத்திலே தான் கண்ணுற்ற கன்னியாம் சீதாபிராட்டியை இராமன்

பல்லவி

*" ஆரோ இவர் ஆரோ– என்ன பேரோ*
*அறியேனே*

அநுபல்லவி

*" கார் உலாவும் சீர் உலாவும் மிதிலையில்*
*கன்னிமாடந் தன்னில் முன்னே நின்றவர்*
*(ஆரோ)* எனவும்..

சரணம்

*சந்திரவிம்ப முகமலராலே என்னைத்*
*தானேபார்க்கிறார் ஒருக்காலே*
*அந்தநாளிற் தொந்தம்போலே உருகிறார்*
*இந்தநாளில் வந்துசேவை தருகிறார்.*

எனவும், கூறியிருப்பன கம்பராமாயணத்தை நினைவூட்டுவன.

சீதாபிராட்டியின் சுயம்வரத்தின்போது இராமபிரான் நிபந்தனைக்கேற்பப்பாரிய வில்லைத் தொட்டு வளைத்த மாத்திரத்திலே அது யாவரும் வியக்கத்தக்க வகையில் இரு துண்டுகளாக ஒடிந்தது. இதனை ஆசிரியர்

*" சிங்கமெனும் சனகனுடன் விண்ணும் மண்ணும்*
*திடுக்கிடவே எல்லாரும் ராமன்கையால்துங்கமுள்ள*
*அந்தவில்லை வளைவுகாணத்தொடக் கண்டார் இரண்டு*
*துண்டாய்விடக் கண்டாரே"*

எனக் கவி நயம்படக் கூறியுள்ளார்.

சீதாபிராட்டி சபாமண்டபத்திற்கு வருதல், ஸ்ரீராமர் மணக்கோலம் கொள்ளுதல், இருவருக்கும் கலியாணச் சடங்குகள் நடைபெறுதல், சோபனம் கூறுதல் முதலியன நேர்த்தியாக வருணிக்கப்பட்டுள்ளன.

இராமன் முடிசூட்டு விழாவினைத் தடுப்பதற்குக் கூனி, கைகேயியிடம் வருதலும் முதலிற் கைகேயி அவளை ஏசுதலும் குறிப்பிடற்பாலன.

*" கூனிவந்தானே பொல்லாத கூனி வந்தானே*
*போனநாள் இராமன் செய்தபகையாற் காய்ந்து*
*பூனைபோல் இருந்து புலிபோற் பாய்ந்து"*

எனக் கூனி வருதலும்,

பல்லவி

*" ராமனுக்கு மன்னன் முடி தரித்தாலே*
*நன்மையுண் டொருக்காலே*

அநுபல்லவி

*" பாமரமே உனக்கென்னடி பேச்சே*
*பழம்நழுவிப் பாலில் விழுந்தாற்போல ஆச்சே*

சரணம்

*நம்மை எல்லாம் காத்த வண்டி*
*பட்டம் கட்ட ஏற்றவண்டி*
*நாலுபேரில் மூத்தவண்டி*
*அவன் என் கண்மணி (ராம)*

*நான்தான் என்ன மட்டியோ*
*வெட்டிப்போடுவேன் உன்னை ( ராம)*

எனக் கையேயி கூறுவதும் குறிப்பிடத் தக்கவை. இவற்றிலுள்ள சொல்லாட்சி, ஓசைநயம், இறுதி எதுகை முதலிய கவனித்தற்பாலன.

ஆனால், இவ்வாறு கூறும் கைகேயி மனத்தினை முற்றிலும் மாற்றித் தசரதன் குடும்பத்திற்கே பெரிய இழுக்கினை ஏற்படுத்திய கூனியைத் தசரதன் "குடிகேடி" என ஆசிரியர் குறிப்பிடுகிறார். இதுபோலச் சூர்ப்பணகையை " இராவணன் குடிகேடி" என்கிறார். கூனியின் சதிக்குப் பலியான கைகேயி இராமனிடம் தசரதன் தனக்கு வாக்களித்தவற்றை நிறைவேற்றும்படி கூறுகிறாள்.

*" ஈரேழ் வருஷம் ராமாநீ காட்டில்*
*சென்று தவம்செய், பரதன் உலகை ஆள்வான்*
*செல் என்றாள் இது வேந்தன் சொல் என்றாள்"*

என அவள் கூறுவதிலே நாடகத்தன்மையும் காணப்படுகின்றது.

காட்டிற் சென்ற இராமன் தம்பதிகள் இயற்கைக் காட்சிகளைக் கண்டு களித்தனர். இராமன் சித்திரகூட மலையின் இயற்கை எழிலையும் கிளிகள் வேதம் ஓதுவதையும் பிறவற்றையும் சீதாபிராட்டிக்குச் சுட்டிக் காட்டுகிறான்.

பல்லவி

*பாராய் பெண்ணே பாராய் பெண்ணே–*
*பாக்கிய சனகன் கண்ணே*

அநுபல்லவி

*சீர்ஆக நமக்கு நேர்ஆகிற இந்த*
*சித்திரகூடமலை ரத்தினபீடம்போல*

சரணம்

*மாதவர் முனிவர் சொல்வேதங்களைக் கிளி*
*வாடிக்கையாற் கற்றுவனமெங்கும் படிப்பதும்"*

எனவரும் பகுதி குறிப்பிடற்பாலது.

பரதன் தாயினைக் கோபித்துக் கூறுதலும், பரதன் காட்டிற்குச் சேனையுடன் வரும் நல்ல நோக்கினை அறியாது குகனும், இலட்சுமணனும் வெகுண்டெழுதலும் சாதாரணமாக மக்களின் இயல்புக்கேற்பக் கூறப்படுகின்றன.

பரதன் இராமனிடத்துக் கொண்ட இணையற்ற அன்பும், இராமன் பரதனிடத்துக்கொண்டிருந்த சகோதர பாசமும் நன்கு வெளிப்படுத்தப்படுகின்றன. அரசனாக வந்து நாட்டினை ஆளுமாறு வலியுறுத்திக் கூறிய பரதனுக்கு இராமன் அளித்த பதிலில் அவனுடைய குணநலமும் தரும சிந்தனையும் காணப்படுகின்றன.

*" இன்னம் சிறுபிள்ளைபோலே என்னை*
*அழைக்கிறாய் உன்னை*
*அன்னைதந்த பணிவிடையே தர்மம் என்று*
*மதித்தேனே*
*அப்படிநீ மதிக்காமலே இப்படி வந்ததில்தானே"*

எனவரும் பகுதியினைக் கவனிக்கலாம்.

சூர்ப்பனகை சீதையின் அழகினை வருணித்து இராவணனைச் சீதைமீது மையல் கொள்ளச் செய்கிறாள்.

*" சுந்தரமும் அவள் சிகப்பும்*
*தொட்டிட்டுக் கொள்ளலாம் அண்ணாவே நான்*
*இந்தவயதிலே என்கண்ணால்*
*எங்குங் கண்டதில்லை அண்ணாவே "* எனவும்,

*" காணவேணும் லட்சம் கண்கள் சீதாதேவிதன்*
*காலுக்கு நிகரோ பெண்கள்....*
*அவனே நல்ல ஐஸ்வரியம் அவனே நல்லகாம்பீரியம்*
*அவன் வந்தாலல்லோ வீரியம் அப்போ முடியுமுன் காரியம்"*

எனவும் பலவாறு கூறுகிறாள். இவற்றைக் கேட்ட இராவணன் " சீதைமேலே கருத்தாடக் காமப்பேய் தலை சுற்றாட, உடுப்பதுவும் உண்பதுவும் மறந்தான் சிந்தை. உலைகெழு மெழுகானான் அரக்கன். அம்மானே நீ, அடுத்தெனுக்கு ராமன் மனைவியைத்தா என மாமன் மாரீசனிடம் கேட்கிறான். இதைக் கேட்ட மாரீசன் "நாராசம் காய்ச்சி நடுச்செவியில் வைத்தாற் போலே" நடுங்கி, இராவணனுக்குத் தக்க புத்தி சொல்லி இத்தகைய தீய எண்ணம் கொள்ளக் கூடாதெனத் தடுக்கிறான். ஆனாற் பலனில்லை. சூர்ப்பனகை சீதையைக் கவருமாறு இராவணனைத் தூண்டுதலும், மாரீசன் இவ்வெண்ணத்தினைக் கைவிடுமாறு புத்தி கூறுவதும் ஒப்பிடற்பாலன.

இராவணன் சீதையை வஞ்சகமாகக் கவர்ந்து செல்லும் வழியில் சடாயு அவனைத் தடுத்து அறிவுரை கூறுகிறாள்.

பல்லவி

*விடுவிடடா சீதையை விடுவிடடாராவணா*
*விடுவிடடா சும்மா விடுவிடடா*

அநுபல்லவி

*சுடுநெருப்பி வளாலே அடியோடிடே*
*வேகாதே சொரூபத்தைத் தெரியாமல்*
*நரகத்தில் மூழ்காதே அடடா சொன்னேன்*
*சொன்னேன் நடுவிலே சாகாதே*
*ஆசையினாலே குலநாசம் ஆய்ப்போகாதே"*

எனக் கூறியும் அவன் செவிசாய்க்காமையால் இராவணனுடன் போர் புரிந்தான்.

பல்லவி

*"கொத்திக்கொத்தி அடித்தானே*
*இடித்தானே சடாயுராஜன்*
*கொத்திக்கொத்தி அடித்தானே*

அநுபல்லவி

*பத்துச்சிரத்திலும் தானிலும்*
*வெற்றிக் கரத்திலும் மாரிலும் தேரிலும்*
*தத்தித் தத்திப்பரந் தெத்தி எத்திக் கையால்*
*குத்திக்குத்தி எங்கும் சுற்றிச்சுற்றி மூக்கால்*
*(கொத்தி)*

எனச் சடாயு இராவணனுடன் போர்புரிந்தவாறு தத்ரூபமாக, ஓசைநயம் மிக்கதாக வருணிக்கப்படுகிறது.

சடாயு போர்புரிந்து வீரமரணம் அடைகிறான். இதைக்கண்டு சீதாபிராட்டி தந்நிலை குறித்து இரங்குகிறாள். தசரதனாகிய மாமனும், சடாயுவாகிய மாமனும் இறப்பதற்குத் தானே காரணம் என மனம் நோகின்றாள்.

*" வீட்டிலே புகுந்தேன் அந்த மாமனை*
*விதிபோலே தின்றேனே*
*காட்டிலே புகுந்தேன் இந்தமாமனைக்*
*கண்முன்னே கொன்றேனே"*

என்பது அவளின் துயரமிகு வாக்கு.

அசோக வனத்திலே அரக்கியர் மத்தியிலே சீதாதேவியைக் கண்ணுற்ற அனுமானை ஆசிரியர்

பல்லவி

*சீதையைக் கண்டானே அனுமான்*
*செடிமேல்நின்றுசேவையைக் கொண்டானே*
*–அனுமான்*

தரு

*தாயிவள் தாயிவள் நிலைவரமே– சாமி*
*தனக்குமிவள் மெத்த மனோகரமே*
*தியுஞ்சுடுமிவள் சரித்திரமே தெய்வ*
*தெய்வங்களுக்கு மிவள் மீசரமே"*

எனக் குறிப்பிடுகிறார்.

சீதாப்பிராட்டி அனுமாருக்கு அடையாளம் ஈந்து கூறும் வார்த்தைகள் அர்த்தமுள்ளவை.

பல்லவி

*அனுமானே சாமிக்கிந்த அடையாளம் சொல் ஐயா*

அநுபல்லவி

*சனகி இலங்கைச் சிறையில் தன்னுயிரைத்*
*தானேநின்று மனதில் ராமாமிர்த சீவனம்*
*செய்திருக்கிறாள் என்று (அனு)*

எனத் தொடரும் வார்த்தைகள் குறிப்பிடற்பாலன.

அனுமான் அசோக வனத்தை அழித்தமைபற்றிய வருணனை சொல்நயம், பொருள் நயம் உள்ளவை. சீதாபிராட்டியைக் " கண்டேன் கண்டேன்" என அனுமான் தான் பிராட்டியை உயிரோடு கண்டமை குறித்து இராமனுக்குக் கூறுவதும் சுவையுள்ளதாகும். சீதாபிராட்டியின் குளாமணியை அனுமனிடம் பெற்று அளப்பிலா ஆனந்த முற்றான். இதனை ஆசிரியர்

பல்லவி

*சூடாமணி கண்டபோதேசு வாமிக்குவந்த*
*சுகமே ஆனந்தசுகம்*

அநுபல்லவி

*வாடிஅனுமான் சொல்ல ஆடிமுட்ட முட்ட*
*நாடிச்சீதையம்மை சூடிவரவிட்ட (சூடா)*

சரணம்

*அமலாமாமணி தன்னை வாங்கினான்*
*உயிர்செய் அமிர்தசஞ்சீவிபோல் தாங்கினான்*
*சீதை கமலக்கை போற்பிடித் தோங்கினான்*
*கவலை கதிர்கண்ட பனிபோல் நீங்கினான்*
*கண்டு கண்ணிரண்டும் குளிர்ந்தான்*
*மேல்வரும் எண்ணங்களும் தெளிந்தான்*
*அந்த (சூடா)*

எனக்கூறும் விதம் நயமுடைத்தாகும்.

இராமன் தன்னைச் சரணடைந்த விபீஷணனுக்கு இலங்கை அரசையும் அபயத்தையும் அளிக்கும் விதத்தை ஆசிரியர் நன்கு வருணித்துள்ளார்.

இவ்வாறு பல இசை நயம், இலக்கிய நயம், நாடகப் பண்பு உள்ள இசைப்பாடல்கள் இந்நூலிலே காணப்படுகின்றன. இதிலுள்ள இசைப்பாடல்கள் இசைக் கச்சேரிகளிலும், சங்கீத உபந்நியாசங்களிலும் நன்கு பயன்படுத்தப்படுகின்றன. மேற் குறிப்பிட்ட எடுத்துக்காட்டுகளிலே காணப்படும் எளிமையான உவமைகள், கருத்துரைகள், மூதுரைகள் முதலியன குறிப்பிடற்பாலன. ஆசிரியர் பாமர மக்களையும் மனதிற் கொண்டு இதனை இயற்றியபடியாற் பேச்சு வழக்கிலுள்ள சொற்கள், சொற்தொடர்களும் இதில் விரவி வந்துள்ளன. இராமனைப் பரப்பிரம்மமாகப் கொண்டு பல கீர்த்தனைகள் தொடர்ந்து இயற்றப்பட்டு வந்துள்ளன. இவை தெலுங்கு, தமிழ் சமஸ்கிருதம் முதலிய மொழிகளிலே உள்ளன. இவ்வகையிலே தியாகராஜ சுவாமிகளின் தெலுங்கு, சமஸ்கிருத கீர்த்தனைகள் குறிப்பிடற்பாலன. இவருக்கு இராமனே பரப்பிரம்மம். இராமனைப் பல நிலைகளிலே பாடியுள்ளார். சில கீர்த்தனைகளிலே இராமாயணக் காட்சிகள் சிலவற்றைக் குறிப்பிட்டுள்ளார். எடுத்துக் காட்டாக "ராமாயணத்ரான

சௌர்ய...'' எனத் தொடங்கும் கீர்த்தனையிலே இராமாயணத்தின் வீரச் செயல்கள் சிலவற்றைக் குறிப்பிட்டுள்ளார். '' ஏராமுனி நம்முதினே...'' எனும் கீர்த்தனையிற் காகாசுரன்வதம், வாலிவதம், சுக்கிரீவனுக்கும் விபீஷணனுக்கும் இராமன் அபயம் அளித்தல் முதலியன கூறப்பட்டுள்ளன. மேலும்

***'' நிந்நே நற்றம் நானுரா***
***ஓராம ராமைய...'' – ( உன்னையே முற்றிலும் நம்பினேன் இராமபிரானே)***
***'' ராம கதா ஸுதா ரஸ '' ( ராமகதையெனும் அமுத ரசம்)***
***'' ராமநி ஸமான மெவரு ( இராமனுக்கு எவர் நிகரானவர்)***
***'' ராமமேவ தைவதம் ரகு குலதிலக'' ( ராமனே மேலான தெய்வம் ரகுகுலத்தின் செம்மலே)***

போன்ற கீர்த்தனங்களில் அவரின் நிகரற்ற ராமபக்தி தெளிவு.

ஸ்ரீமுத்துசுவாமி தீட்சதர், பாபநாசம் சிவம், போன்ற வாக்கேயகாரர்கள் சமஸ்கிருதம், தமிழ் முதலிய மொழிகளிலே இராமனைப்பற்றிக் கீர்த்தனைகள் எழுதியுள்ளனர்.

இராமாயணக் கதையினைக் தனிக் கீர்த்தனையாகப் பாடும் மரபும் நிலவி வந்துள்ளது. ஏற்கெனவே குலசேகராழ்வார் பதிகம் ஒன்றிலே இராமாயணக் கதை முழுவதையும் பாடியுள்ளார். அருணாசலக் கவிராயரின் நாடகக் கீர்த்தனையிலே வரும்–

***'' எனக்கும் இருபதம் நினைக்கவரம் அருள்வாய்''***

எனத் தொடங்கும் தருவிலுள்ள (கீர்த்தனையிலுள்ள ஒன்பது சரணங்களிலும் இராமாயணக் கதை கூறப்பட்டிருக்கிறது). இவரைப் பின்பற்றியோ அல்லவோ பின் வந்த வாக்கேயகாரர்கள் பலர் இராமாயணக் கீர்த்தனைகள் பாடியுள்ளனர். எடுத்துக்காட்டாகச் சுவாதித்திருநாள் பாடியுள்ள

'' பாவயாமி...'' எனத் தொடங்கும் சமஸ்கிருத கீர்த்தனை, பாபநாசம் சிவன் தமிழில் எழுதியுள்ள இராமாயணக் கீர்த்தனையினைக் குறிப்பிடலாம்.

இராமாயண இசை நாடகங்கள் தொடர்ந்து எழுதப்பட்டு வந்தன. இவைகள் விலாசம் எனவும் அழைக்கப்பட்டன. வேப்பு அம்மான் என்பவர் இராமாயணக் கீர்த்தனை, சீதாகல்யாணம் எனும் இசை நாடகங்களை எழுதினார். ராஜசேகர முதலியார் இராமாயண ஓரடிக் கீர்த்தனை இயற்றியுள்ளார். யாழ்ப்பாணம் மானிப்பாயைச் சேர்ந்த அருணாசலம் இராம நாடகம் எழுதியுள்ளார். நல்லூர் கந்தப்பபிள்ளை ( ஆறுமுக நாவலரின் தந்தை) இராமவிலாசம் எனும் நூலை இயற்றியுள்ளார். சின்னத்தம்பி என்பவரும் இராமவிலாசம் ஒன்று எழுதியுள்ளார். சிந்து வடிவிலும் இராமாயணம் எழுதப்பட்டது. தமிழகத்தைச் சேர்ந்த சுப்புசுவாமி இராமாயணச் சிந்து எனும் நூலை எழுதியுள்ளார். இவ்வாறு தொடர்ந்து இசைநாடகம், நாடகம், கீர்த்தனை, சிந்து என சில ஜனரஞ்சகமான இலக்கிய வடிவங்களில் இக் காலம்வரை இராமாயணக் கதை எழுதப்பட்டு வந்துள்ளமை குறிப்பிடற்பாலது.

*உள்ளம் மகிழ உரைநா அமுதூறக்*
*கொள்ளுமிரு காதும் குளிரவே – தெள்ளிய*
*செந்தமிழ்க் கம்பத் திருநாடன் செய்நூலுக்(கு)*
*எந்தநூலாகும் இணை*
*பாளில் பெயரோங்கு பன்மொழிக்கும் நாணாது*
*நேரில் நிமிர்ந்து தமிழ் நிற்பது தான் – சிறுயர்ந்து*
*ஏறுபுகழ்க் கம்பன் இராம கதையாய் வந்த*
*வீறு கொண்டென்று விளம்பு*

*–கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை–*

# கறெறையிசுவும் கம்பராமாயணமும்



சச்சி- ஸ்ரீகாந்தா கலாநிதிப் பிறப்பட்ட ஆய்வாளர்- டோக்கியோ பல்கலைக்கழகம்

மொட்டந்தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போட்டமாதிரி கட்டுரையின் தலைப்பு இருக்கிறது என்று எண்ணுகிறீர்களா? 'கறெறையிசு, என்பது இங்கே ஜப்பானிலுள்ள டோக்கியோ ஒசாகா போன்ற பெருநகரங்களில் வாழும் இளஞ் சந்ததியினரிடையே கடந்த 20 – 30 ஆண்டுகளாகப் பிரபலமாகியுள்ள வெளிநாட்டு உணவு. ஜப்பானிய மொழியின் 'கதகனா' லிபியிலே இப்படித் தான் 'கறெறையிசு' என்று எழுதுவர். எங்களுடைய நாளாந்த உணவான 'கறியும் அரிசியும்' தான் இப்படி இங்கே வழங்குகின்றது. ஆனால் சாதாரண ஜப்பானியர்களுக்கு' கறெறையிசு' என்றவார்த்தை எப்படி எங்கிருந்து வந்தது என்ற விவரம் அவ்வளவாகத் தெரியாது. தமிழ்ச் சொல்லான 'கறி' வெள்ளைக்காரர் மூலம் ஆங்கில மொழிக்குப் போய் ஆங்கிலேயரிடமிருந்து ஜப்பானியர் அதனை இறக்குமதி செய்து ஆங்கிலச் சொல்லான 'றையிசு' வையும் சேர்த்து 'கறெறையிசு' ஆக்கியுள்ளனர். இனி ஆங்கிலத்தில் அரிசிக்கு பயன்படுத்தப்படும் சொல்லான 'றையிசு' கூட ஆங்கிலேயர் கிரேக்க மொழியான 'ஒரைசா' விலிருந்து கடன் வாங்கியதுதான். கிரேக்க மொழி வார்த்தையான 'ஒரைசா' மட்டும் எங்கிருந்து உதித்ததாம்? பண்டைய கிரேக்கர்கள் அரிசி சாப்பிடக்கூட வில்லையே. கிரேக்க நாட்டிலே நெல்லு விளைவது கூட இல்லை. கிரேக்கர்கள் தமிழர்களுடன் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வர்த்தகத் தொடர்பு கொண்ட போது, தமிழ்ச் சொல்லான 'அரிசி'யை 'ஒரைசா' என மொழி பெயர்ப்புச் செய்து கொண்டனர். ஆகவே, சொல்லப்போனால், இப்போது ஜப்பானியர் தம் மொழியில் பாவிக்கும் 'கறெறைசு' வினுடைய மூலம் 'கறி அரிசி' தான். இதேபோலத்தான், கம்பர் கவி ஆக்கிய கம்பராமாயணமும், சுமார் 700 ஆண்டுக்கு முன் கடல் கடந்து தென் கிழக்காசிய நாடுகளிலே பரவியது. அதனுடைய பிரதிபலிப்புகளை இன்று கூட, பர்மா, கம்போடியா, லாவோஸ், தாய்லாந்து, இந்தோனேசியா, மலேசியா போன்ற நாட்டினரின் கலை வடிவங்களிலே காணமுடியும். இக்கட்டுரையின் நோக்கம் அக்கலை வடிவங்களிலே, கம்பர் படைப்பின் செல்வாக்கைச் சுருக்கமாக விவரிப்பதாகும்.

தென்கிழக்காசிய நாடுகளிலே இராமாயணத்தின் செல்வாக்கை விவரிக்க முன்னர், கம்பர் வாழ்ந்த காலத்திலே (12ம் நூற்றாண்டு) தமிழ்நாட்டிலும் தென்கிழக்காசிய நாடுகளிலும் நிலவிய வரலாற்றுச் சூழ்நிலைகளை முதலில் விளங்கிக் கொள்ள வேண்டும். இராமாயணம் ஏன், தற்போதைய வியட்னாம் (அக் காலத்தில் அன்னாம்) வரை பரவியது என்னும் கேள்விக்கும், இப்போது கூட தாய்லாந்தில் (அக்காலத்தில் சயாம்) ஒரு நகரின் பெயர் 'அயுத்தயா' என ஏன் வழங்கப்படுகிறது என்னும் கேள்விக்கும் 12ம் 13ம் நூற்றாண்டுகளின் வரலாற்றுச் சூழல்கள் விடையளிக்கும்.

கம்பர் வாழ்ந்த காலம் சோழ சாம்ராச்சியம் கொடி கட்டிப் பறந்த காலம். 10ம் நூற்றாண்டு தொடங்கி, தொடர்ந்த 300 ஆண்டுகளுக்கு சோழரின் புலிக்கொடி. இந்தியாவிலே மட்டுமன்றி, இலங்கையிலும் தென் கிழக்காசிய நாடுகளிலும் ஆதிக்கம் செலுத்திய காலம் அது. சொல்லப்போனால், தமிழரின் கலை கலாசாரம் பிற நாடுகளிலும் பேணப்பட்ட காலம் அது. தென்கிழக்காசிய நாடுகளின் எல்லைகள் வடக்கிலிருந்து தெற்கு வரை 2000 மைல்களும், கிழக்கிலிருந்து மேற்குவரை 3000 மைல்களும் பரந்திருந்தன. சீனாவுக்குத் தெற்கிலும் அவுஸ்திரேலியாவுக்கு வடக்கிலும் இந்தியாவுக்குக் கிழக்கிலும் இருந்த அந்த நிலப்பரப்பிலே, கண்டப் பகுதியிலே இப்போதைய நாடுகளான பர்மா, தாய்லாந்து, லாவோஸ், கம்போடியா, வியட்நாம் போன்றவையும், தீவுப்பகுதிகளாக இந்தோனேசியா, மலேசியா தீவுக் கூட்டங்களும் அடங்கின. சோழர்கள் வாணிகத் தொடர்பு வேண்டியும், ஆதிக்கஞ் செலுத்தவும் இந்து சமுத்திரம், வங்காள விரிகுடாக் கடல்களைத் தாண்டித் தென்கிழக்காசியத் தீவுக் கூட்டங்களிலே காலூன்றினர்.

சோழ சாம்ராச்சியத்தின் பரவலுக்கு அத்திவாரத்தை நாட்டிய அரசன் முதலாம் பராந்தக சோழன். இவனின் காலம் கி.பி. 907 – 953. இவன் மறைந்தபின் தொடர்ந்த 30 ஆண்டுகளுக்கு நாட்டு

நிலை வலுவூன்றி இருக்கவில்லை. பின் 985ம் ஆண்டிலே முதலாம் ராஜ ராஜசோழன் அரசு கட்டிலேறியபின், சாம்ராச்சியம் தழைத்தது. சோழ சாம்ராச்சியத்தின் தெற்கு எல்லை இலங்கையிலே அனுராதபுரம்வரை படர்ந்தது. இலங்கையின் வடபகுதி முழுவதும் சோழ ராச்சியத்தினுள் சேர்ந்தது. இந்தியாவின் வடக்கிலே, துங்கபத்திரா நதி வரை சோழர் ஆதிக்கம் செலுத்தினர். கடற்படை வலுவினால், சோழ மன்னனுக்கு மாலைதீவுகளும் அடிபணிந்தன. தென்கிழக்காசியா, அரேபியா, கிழக்காபிரிக்கா நாடுகளுடன் வாணிகத் தொடர்பு வளர்ந்தன. ராஜராஜசோழனின் மகன் ராஜேந்திரன் கி.பி. 1012 இலிருந்து 1044 வரை அரசாண்டான். ராஜேந்திரன் காலத்திலே சாம்ராச்சிய எல்லைகள் மேலும் விரிவடைந்தன. தெற்கே, இலங்கையின் தெற்குப் பகுதியும் சோழ மன்னனின் ஆட்சிக்கு உட்படுத்தப் பட்டன. இந்திய கண்டத்திலே புலிக்கொடி, வடக்கே கங்கை நதி வரைக்கும், கிழக்கே வங்காள நாடு வரைக்கும் பறக்கத்தொடங்கிற்று. ராஜேந்திர சோழனின் மிகப் பிரமாண்டமான படையெடுப்பு கி.பி. 1025இலே, தென்கிழக்காசிய நாடுகளை வெற்றி கொண்டதாகும். இவற்றில் பதினோராம் நூற்றாண்டிலே சீனாவுடனும் வாணிக, கலாசாரத் தொடர்புகள் நிலைநாட்டப்பட்டன.

ராஜேந்திர சோழனின் மறைவின் பின்னர் ஆண்ட மன்னர்கள் வலுவுடையவர்களாக இருக்கவில்லை. சுமார் 23 ஆண்டுகளின் பின்னர், முதலாம் குலோத்துங்க சோழனின் ஆட்சி தொடங்கியது. கி.பி. 1070ல் இருந்து 1122 வரை, தொடர்ச்சியாக 52 ஆண்டுகளுக்கு சோழ சாம்ராச்சியத்தின் எல்லைகளை கூடியளவில் பாதுகாத்த இம் மன்னனின் காலத்திலே தான் கம்பர் வாழ்ந்தார் என வரலாற்றுக் குறிப்புகள் கூறுகின்றன. குலோத்துங்க சோழனுக்கும் கம்பருக்கும் இடையே இருந்த உறவுகளைக் கம்பர் பாடல் மூலமாக அறிகின்றோம். எனவே கம்பருடைய இராமாயணம்தான் தென்கிழக் காசிய நாடுகளுக்குப் பரவியிருக்க வேண்டும். என்பதில் ஐயமில்லை. கம்பருக்கு முன்னோடியான வால்மீகியின் இராமாயணம், தென்கிழக்காசிய நாடுகளிற்குச் சென்றிருக்க முடியாதா என்ற கேள்வி எழலாம். இரு சான்றுகள், கம்பருடைய செல்வாக்கிற்குச் சான்றாக உள்ளன. முதலாவதாக தென்கிழக்காசிய நாடுகளுக்குப் படையெடுத்து வெற்றி கண்டு ஆதிக்கஞ் செலுத்திய மன்னர்கள், இந்திய வரலாற்றிலே சோழ மன்னர்கள் மட்டுமே. இவர்களின் காலத்திலே கம்பர் வாழ்ந்துள்ளார். இரண்டாவதாக சமஸ்கிருத மொழியில் அமைந்த நாடக நூல்கள். நாட்டியக்கலை சம்பந்தப்பட்ட 'நாட்டிய சாத்திரம்' போன்றவற்றின் செல்வாக்குதென் கிழக்காசிய நாட்டுக் கலாசாரங்களிலே காணப் படவில்லை என்று கலாசார மானிடவியல் அறிஞர்கள் கருதுகின்றனர்.

கி.பி. 9ம் நூற்றாண்டிலிருந்து 13ம் நூற்றாண்டு வரை நீடித்த கெஃமர் சாம்ராச்சியம் தற்போதய நாடுகளான தாய்லாந்து, கம்போடியா, லாவோஸ், தென் வியட்நாம் பகுதிகளை உள்ளடக்கியிருந்தது. சோழ சாம்ராச்சியத்தின் வாணிக. கலாசாரத், தொடர்புகள் இந்த கெஃமர் இராச்சியத்தினருடன் மிக நெருக்கமாக இருந்ததை வரலாற்றுச் சான்றுகள் சுட்டிக் காட்டுகின் றன. கெஃமர் அரசர்களின் மேலாதிக்க அரசர்களாகச் சோழ மன்னர்கள் விளங்கியிருக்க வேண்டும். ஏனெனில் கெஃமர் அரசர்களும் தென்னிந்தியப் பெயர்களைச் சூடிக்கொண்டனர். இச்சாம்ராச்சியத்தைத் தாபித்த முதல் அரசனின் பெயர் முதலாம் யசோவர்மன் (889 – 900) தற்போதைய கம்போடிய நாட்டின் வடமேற்குப் பகுதியில் அமைந்த 'அங்கோர்' நகரம் தலைநகராக்கப் பட்டது. கி. பி. 1113 – 50 ஆண்டுக் கால கட்டத்திலே அரசாண்ட இரண்டாம் சூரியவர்மனின் காலத்திலேயே சோழர்களின் கட்டிடக் கலையைத் தற்போதும் பறைசாற்றும் பிரமாண்டமான அங்கோர்வாத் கோயில் சிற்ப வடிவங்கள் எழுப்பப்பட்டன இந்தக்கால கட்டத்திலேதான், தமிழ் நாட்டில் கம்பர் வாழ்ந்திருக்கி றார். எனவே, கம்பர் கவியின் இராமாயணப் பாடல்கள், கெஃமர் ராச்சியத்தை எட்டியிருக்கும் என்பதில் கருத்து வேறுபாடு இருக்க முடியாது. இராமாயணக் காவியத்தின் செல்வாக்கை நிரூபிக்கும் நாட்டார் கலை வடிவங்களை இனிச் சற்று நோக்குவோம்.

### 1. ஜாவா (இந்தோனேசியா)

ஜாவாத் தீவிலே மிகப் பிரதானமான நாட்டார் நாட்டிய வகைக்குப் பெயர் 'வாயங் கூலித்' என்பதாகும். (வாயங் என்பது 'பாவை' கூலித் என்பது பதன் படுத்தப்பட்ட தோல் – அதாவது, 'லெதர்' பாவைகளின் நிழல் நாட்டியம் என விளங்கலாம்)

இந்த நாட்டிய வகை, கிழக்கு ஜாவாவின் அரச சபைகளிலே கி. பி. 11ம் நூற்றாண்டிலேயே உதயமாயிற்று. இராமாயணக் கதைகளும் பாத்திரங்களும் கருப் பொருளாகப் பயன்படுத்தப்படுகின்றன. ஒரேயொரு பாவை இயக்குநர் எல்லாக் கதாபாத்திரங்களின் 'டயலாக்'குகளையும் பேசி, காட்சிகளுக்கிடையே கதையை நடாத்திச் சென்று, பாடல்களையும் பாடுவார். அதே சமயம், பதன்படுத்தப்பட்ட தோலாற் செய்யப்பட்ட தட்டைப் பாவைகளை விளக்கொன்றின் முன் அசைக்க,

அந்தப் பாவைகளின் நிழல்களை, வெண்திரையொன்றிலே விழச்செய்து, சபையினரை மகிழ்விப்பர். சபையினர் வெண்திரைக்கு இரு புறங்களிலும் அமர்ந்திருப்பர். இந்த ஒழுங்கிலே, ஒரு புறத்தில் இருப்போர், நிழல் நாட்டியத்தை ரசிக்க, மறு புறத்தில் இருப்போர் பாவைக் கூத்தை ரசிப்பர்.

வாயங்கூலித் நாட்டிய வகையிலே 4 பிரதான 'வட்டங்கள்' பாகுபடுத்தப்பட்டுள்ளன. முதல் வட்டத்திலே சுமார் அரை டசின் நாட்டியங்கள் அடங்குகின்றன. இவை பூகோளத்தின் தோற்றத்தையும் தாவர விலங்குகளின் தோற்றத்தையும் விவரிக்கும். இரண்டாவது வட்டத்திலும் சுமார் அரை டசின் நாட்டியங்கள் அடங்குகின்றன. இதனிலே, இராவணன் பூர்வ பிறப்புச் சம்பவம் விவரிக்கப்படும். மூன்றாவது வட்டத்திலே அமைந்த 18 நாட்டியங்கள் இராமர் காடு புகுதலையும் சீதை இராவணனால் கடத்தப்படுதலையும், இராம – இராவணப் போரையும் விவரிக்கின்றன. கடைசி நான்காவது வட்டமே மிக நீண்டதாகும். இது பாண்டவ வட்டம். ஏனெனில் சுமார் 150 நாட்டியங்கள் மகாபாரதச் சம்பவங்களை விளக்குமாறு அமைகின்றன.

ஜாவாவிலே நிலவும் இன்னொரு நாட்டிய வகைக்குப் பெயர் 'வாயங் ஒராங்' என்பதாகும். 'ஒராங்'என்பது மனிதரைக் குறிக்கும் சொல்லு. அதாவது, மனித நாட்டியம் எனலாம். இதனிலே நிழல் நாட்டியத்துக்குப் பதிலாக, நடிகர்களும். நடிகைகளும் இராமாயணச் சம்பவங்களைக் கூத்துப் பாணியிலே நடித்து ஆடிக்காட்டுவர்.

## 2. பாலித் தீவு (இந்தோனேசியா)

இந்தோனேசியத் தீவுக் கூட்டங்களிலே கி. பி. 15ம் நூற்றாண்டுக்குப் பின்னர் இஸ்லாமிய மதத்தவர்களின் வருகையால் இஸ்லாம் கலாசாரம் மேலோங்கத் தொடங்கியது. தற்போது அது நிலையூன்றி விட்டாலும், பாலித் தீவு வாழ் மக்களிடையே இந்து சமயச் செல்வாக்கை இன்றும் காணக் கூடியதாக உள்ளது. பாலித் தீவிலே 'கெற்ஜாக்கு' என்னும் குரங்கு நாட்டியம் பிரபலமானது. இக் குரங்கு நாட்டியம், இராமாயணக் காவியத்திலே குரங்குகள் வகிக்கும் முக்கிய பங்கை விவரிப்பதாக உள்ளது. சுமார் 150 ஆண்டுகள் எரியும் தீப் பந்தத்தை மையமாகக் கொண்ட சுற்றுவட்டங்களிலே குரங்கு அமரும் பாணியிலே (போஸ்) செய்து கொண்டு அங்கங்களை அசைத்து நாட்டியமாடி 'உருவெடுக்கும்' நிலையே இந்த குரங்கு நாட்டியத்தின் உச்சக்கட்டமாகும்.

'வாயங் வொங்' எனப்படும் நாட்டிய வகை, ஜாவாவிலே காணப்படும் ஓரங் நாட்டியத்தை ஒத்தது. இதனிலே நடிகர்களும் முகமூடி அணிந்து கொண்டு இராமாயணச் சம்பவங்களை ஆடிக்காட்டுவர்.

## 3. மலேசியா

மலேசியாவில் இடம்பெறும் ஒருவகை நாட்டியத் துக்கு வாயங்சயாம் எனப்பெயர். அதாவது , சயாம் நாட்டிலிருந்து (முன்னாள் தாய்லாந்து) வந்த 'வாயங்' நாட்டியம் இந்த நாட்டியத்திலும் ஒரேயொரு பாவைக்கூத்து இயக்குநர், அமர்ந்த நிலையிலே, இராமாயணச் சம்பவங்களை விளக்கும் பாவைகளை இயக்கிக் காட்டுவார். இவ்வகை நாட்டியத்திலே, தாய்லாந்திலே வழங்கி வரும் இராமாயணவகையின் செல்வாக்கு காணப்படுகின்றது.

## 4. லாவோஸ்

லாவோசிலே நாட்டார் பாடல்களை 'மொஃளம்' என அழைப்பர். இது, தமிழ்ச் சொல்லான 'மேளத்'திலிருந்து உதித்திருக்கவேண்டும். ஈழத்திலே சமீப காலம் வரை பழக்கத்திலிருந்த 'சின்னமேளம்', 'பெரியமேளம்' பாணியிலே, கூத்தியர்கள் ஊர் வம்புகளையும், சரச சல்லாபப் பாடல்களையும், இராமாயணம் போன்ற காவியங்களில் வரும் சம்பவங்களையும் தொகுத்துத் கிராமத்துக்குக் கிராமம் பயணம் செய்து களிப்பூட்டும் குழுவினரே, இந்த மொஃளம் பாடல்களைப் பேணி வருபவர்கள். இக்குழுவினர் லாவோஸ், மற்றும் தாய்லாந்தின் வடகிழக்குப் பகுதியிலும் காணப் படுகின்றனர்.

## 5. கம்போடியா

கம்போடியாவின் பாவைக் கூத்துப் பாரம்பரியத்தை 'நாங்ஸ்பெக்' என அழைப்பர். இக் கூத்திலே இராமாயணத்தில் வரும் சம்பவங்களையே அடிப் படையாகப் பாவிக்கின்றனர். பிரதான பாவைக்கூத்துப் பாத்திரங்களாக இராமர், சீதை, அனுமான், இராவணன் அமைகின்றனர்.

## 6. தாய்லாந்து

தாய்லாந்தின் முகமூடி பாவைக் கூத்து நடனத்துக்கு கோஃன் என்று பெயர். இந்த நடனவகை கம்போடியா வின் 'நாங்ஸ்பெக்' நாட்டியத்திலிருந்து தோன்றியதாகும். கேரளத்தின் கதகளி நாட்டியத்தை ஒத்தது போல, பாவைக்கூத்து இயக்குநர்கள் கதாபாத்திரங்களின்

வகை வகையான முக அலங்காரங்களைச் செய்து கொண்டு இராமாயண சம்பவங்களை விவரிக்கும் பாணியிலே நடனமாட, கதைஞர் கதையை நடத்திச் செல்வர். முக அலங்காரங்களுக்குப் பதிலாக, முகமூடி பாவிக்கப் படுவதும் உண்டு.

தற்போதைய கம்போடியாவிலே, ஒரே நடனக்குழு 'நாங்ஸ்பெக்' பாவைக்கூத்து வகையையும் கோஃன் நடன வகையையும் நடத்திக்காட்டும் நிலையில் உள்ளனர் என்று ஆய்வாளர் றோவுசன் விவரித்துள்ளார்.

தாய்லாந்திலே தற்போது வழக்கிலுள்ள ஆண், பெண் பெயர்களிலேகூடி கம்பராமாயணப் பாத்திரங் களையும், அவர்களின் குணங்களையும் விவரிக்கும் பெயரெச்சங்களையும் கொண்ட மூலங்கள் காணப் படுகின்றன.

பர்மிய அரசர்கள் 'அயுத்தயாவை' நிர்மூலமாக்கிய போது, சயாம் நாட்டிலிருந்து இராமாயணச் செல்வாக்கினைத் தம் நாட்டிற்கு எடுத்துச் சென்றனர். எப்படி? சிறை பிடிக்கப்பட்டசயாம் நாட்டு அரச சபையைச் சேர்ந்த இராமாயண நடன நாட்டியக் காரர்களை பர்மா அரசர் சின்பியியூஷின், தான் பார்த்து மகிழ, பர்மாவுக்கு பணயக் கைதிகளாகக் கூட்டிச் சென்றனர். எனவே, சயாம் பாணியில் அமைந்த இராமாயணப் பாரம்பரியம் பௌத்தநாடான பர்மாவுக்கும் பரவியது.

### 7. பர்மா

பர்மாவிலே இராமர் சீதை கதை பௌத்த ஜாதகக் கதைகளிலே ஒன்றாகக் கருதப்பட்டது. பர்மியர்கள் இராம நாடகத்தை 'ஃசத்' என அழைத்தனர். இதன் கருத்து வரலாற்று அல்லது கர்ணபரம்பரை ரீதியான கதை என்பதாகும். 18ம் நூற்றாண்டு முடியுமுன் அரசகுடும்பத்தினர் பார்த்து மகிழ, பர்மா பாணி இராமாயணக்கதை உருவாகி விட்டது. இதனை அவர்கள் 'யம' என அழைத்தனர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலே வாழ்ந்த யூகியீன்யூ (1853) என்னும் நாடக ஆசிரியர், பக்யிடீன் அரசன் காலத்திலே (1819 – 1837), புது இராமாயண நாடகத்தை உருவாக்கினார். இதன் பெயர் 'பபாஹீன்', பரதன் என்ற பெயரின் திரிபு இது. இக்கதையின்படி, தசரதருக்கு மூன்று ஆண் பிள்ளைகள். மூத்தவர்பெயர் சயதீன், இவர்தான் இராமர். இலட்சுமணனையும், இந்த நாடக ஆசிரியர், கோசலையின் இளையபிள்ளையாக்கிவிட்டார். இலட்சுமணன் பெயர், அதும்பெயின். இரண்டாவது பிள்ளையான பரதனுக்கு பெயர்தான் பபாஹீன். பரதன் ஆட்சிப் பீடத்தில் அமர்வதைக் கருவாகக் கொண்டது தான் பாஹீன் நாடகம்.

பர்மாவின் இன்னொரு பெயர்பெற்ற நாடக ஆசிரியர் யூபொன்னியா இவர் 1866இலே தூக்கிலிடப் பட்டார். இந்த நாடக ஆசிரியர் 1850 களிலே இராமயணக் கதையை 'பதுமா' (பத்மா என்பது திரிபு) எனும் தலைப்பிலே ஆக்கினார். இவரின் ஆக்கப்படி, தசரதருக்கு அவரின் மனைவிகள் மூலமாக 7 ஆண் பிள்ளைகளாம். இந்த 7 பேரும் தனது ஆட்சிக்கு உலை வைத்து விடுவார்களோ என்று பயந்து, ஏழு பேரையும் அரசர் நாடு கடத்தி விட்டாராம். கதை எப்படியெல்லாமோ தொடங்குகிறது.

முடிவுரையாகக் கூறின், 12ம் நூற்றாண்டுக்குப் பின்னர் தாய்லாந்து, லாவோஸ் நாடுகளிலே இராமாயணக்கதை நாட்டார் நடனங்களிலும் நிழல் நாட்டியம், பொம்மலாட்டம் போன்ற வற்றிலும் பாவிக்கப்பட்த் தொடங்கியது. இந்தோனேசியாவின் ஜாவா தீவிலே இராமாயணக்கதையிலும் பார்க்க மகாபாரதக்கதைச் சம்பவங்கள் நாட்டார் நடனங்களிலே முக்கிய பங்கை வகிக்கினும், பாலித்தீவிலே இராமாயணத்தின் செல்வாக்கு முக்கிய நிலையில் இருப்பதை இப்போதும் காணக்கூடியதாயிருக்கின்றது. தற்போது தாய்லாந்து, பர்மா போன்ற நாடுகளிலே பௌத்த மதத்தின் செல்வாக்கும், இந்தோனேசியா, மலேசியா நாடுகளிலே இஸ்லாம் மதத்தின் செல்வாக்கும் மேலோங்கியிருப்பினும் இந்நாட்டு மக்களின் கலை வடிவங்களிலே இராமாயணக் காவியத்தின் செல்வாக்கு நிறைவுற்றுள்ளது. தற்போது இந்நாட்டு மக்களுக்கு தாங்கள் 'பாவிக்கும்' இராமாயண காவியத்தின் 'கர்த்தா' யார் என்பது தெரிந்திருக்க நியாயமில்லை. ஜப்பானிய மொழியில் புகுந்துள்ள 'கறெறைசு' சொல்லின் மூலத்தைப்பற்றியும் ஜப்பானியர்களுக்கு அவ்வளவு தெரியாது. எனவேதான், 'கறெறையிசுவும் கம்பராமாயணமும்' என்னும் தலைப்பை இக்கட்டு ரைக்குத் தேர்ந்தெடுத்தேன்.

# இராமாயண நூல்கள்

இராமாயணம் சம்பந்தமான ஆய்வுகளை மேற்கொள்வோருக்கு உதவியாக அமையும் என்ற நோக்கில் இராமாயண நூல்கள் சம்பந்தமான விபரங்கள் இங்கே தரப்படுகின்றன.

## சமஸ்கிருதம்

1. வான்மீகி இராமாயணம் ( கி.மு. 3 அல்லது 4 ஆம் நூற்றாண்டு) (வட புல, தென் புல வழக்குகள்)

## இராமகாதை நுவலப்படும் பிற சமஸ்கிருத நூல்கள்

1. மகாபாரதம்: (நான்கிடங்களில்)
   ஆரணிய பருவம் 147:28-38, 252-275
   துரோண பருவம் 59:1-31
   சாந்தி பருவம் 22:51-62
   ஏற-க்க்குறைய 700 பாடல்களில் இராமகாதை குறிக்கப்படுகிறது.

2. புராணங்கள்: (முதன்மையானவை)
   1. விஷ்ணு புராணம் (கி.பி. 4) (IV, 4,5)
   2. பிரும்மானந்த புராணம் (கி.பி. 4) (2.21)
   3. வாயு புராணம் (கி.பி. 5) (II. 26) விஷ்ணு புராணம் போன்றது.
   4. பாகவத புராணம் (கி.பி 6) (IX 10-11) இங்குத்தான் சீதை திருமகளின் அவதாரம் என்னும் செய்தி முதலில் கூறப்படுகிறது.
   5. கூர்ம புராணம் (கி.பி. 7) (I.19:1, II 34)
   6. அக்கினி புராணம் (கி.பி. 8-9) (5-12) வான்மீகியின் சுருக்கம்.
   7. நாரதர் புராணம் (கி.பி. 10) (I.79, II.75) வான்மீகியின் சுருக்கம்.
   8. பிரம்ம புராணம் - அரிவம்சத்தின் சுருக்கம்.
   9. கருட புராணம் (கி.பி. 10) பெரும்பான்மையும் பிற்காலஇடைச் செருகல்கள்
   10. ஸ்கந்த புராணம் (கிப. 8-க்குப்பின்) (II:30) சிற்சில செய்திகள்
   11. பத்ம புராணம் (கி. பி 12-15) (116 படல, உத்தர 24, 43-44)

## சிறியன

1. தர்மோத்தர புராணம் (கி.பி. 7)
2. நரசிம்ம புராணம் (கி.பி. 4-5) (இயல் 47-52)
3. தேவி பாகவதம் (கி.பி. 10இ 11) ( III. 28-30)
4. பிரகதர்ம, சௌரபுராணம் (கி.பி. 950 - 1050) (இயல்: 30)

இவையெல்லாம் தத்தம் சமயக் கருத்துக்களை விளக்க இராம காதையைப் பயன்படுத்துகின்றன.

மேற்கண்ட புராணங்கள் தவிர வான்மீகத்தை அடிப்படை யாகக் கொண்டு எழுந்த சில முழு இராமாயண நூல்களும் வடமொழியில் காணப் படுகின்றன.

1. **யோக வசிஷ்ட (அ) வசிஷ்ட இராமாயணம்** (கி.பி. 8 (அ) 12)
2. **அத்யாத்ம இராமாயணம்** (கி.பி. 13) இராமசர்மர்
3. **அற்புத இராமாயணம்** (முந்தையதற்குத் பிற்பட்டது)
4. **ஆனந்த இராமாயணம்** (கி.பி.15) வால்மீகி பெயரால் வழங்குகிறது.

இவையன்றி இன்னும் பல்வேறு சிறுசிறு இராமாயண நூல்கள் வடமொழியில் கி.பி. 19ஆம் நூற்றாண்டு வரையில் தோன்றியுள்ளன. காளிதாசரின் **இரகுவம்சம்** முதலான பல இலக்கியங்கள் இராமசரிதையைப் பாடுபொருளாகப் பேசுவதையும் காண்கிறோம்.இவற்றுள் பெரும்புகழ் வாய்ந்தன:

| | | |
|---|---|---|
| 1. காளிதாசர் | : | **இரகுவம்சம்** (கி. பி. 4) |
| 2. பிரவரசேனர் | : | **இராவணவகோ (அ) சேதுபந்தா** (கி. பி. 550 - 600) |
| 3. பட்டி | : | **இராவணவதா** (கி.பி. 500-650) |
| 4. குமாரதாசர் | : | **ஜானகி ஹரணா** (கி.பி 8) |
| 5. அபிநந்தர் | : | **இராமசரிதை** (கி.பி. 9) |
| 6. க்ஷேமேந்திரர் a | : | **இராமாயண மஞ்சரி** (கி.பி 11). |
| b | | **தசாவதார சரிதை** |
| 7. சாகல்ய மல்லர் | : | **உதார ராகவர்** (கி.பி 12) |
| 8. சகர கவி | : | **ஜானகி பரிணயம்** (கி.பி 17) |

9. அத்வைத கவி : இராமலிங்காம்ருதம் (கி.பி. 17)
10. மோகனஸ்வாமி : இராம இரகசியம்
(அ) இராமசரிதை (கி. பி. 1608)

இராமகாதை நாடக வடிவிலும் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு முதல் 17ஆம் நூற்றாண்டு வரை பல நூல்களாக வெளிவந்துள்ளன. பாசர், பவபூதி, ஜெயதேவர் முதலான நாடகாசிரியர்கள் இதில் அடங்குவர்.

## பௌத்த இராமாயணங்கள்

1. தசரத ஜாதகம் (பாலி, கி. மு. 5)
2. அனமகம் ஜாதகம் (பாலி, கி. மு. 5)
3. தசரத கதணம் (பாலி, கி. மு. 5)

## ஜைன இராமாயணங்கள்

1. விமல சூரி : **பௌம சரியம்** (பிராக்ருதம், கி.பி. 4)
2. சங்க தாசர் : **வாசுதேவ ஹிண்டி** (பிராக்ருதம், கி.பி. 5)
3. இரவி சேனர் : பத்ம புராணம் (சமஸ்கிருதம், கி.பி. 6)
4. குணபத்ரர் : **உத்தர புராணம்** (சமஸ்கிருதம், கி.பி. 10)
5. சுயம்புதேவர் : **பௌம சரியம்** (அபப்பிரம்சம், கி.பி. 9)
6. சிலங்கா : **சௌபன்ன மகா புருஷ சரியம்** (பிராக்ருதம், கி.பி. 868)
7. பத்ரேசுவரர் : **ககாவலி** (பிராக்ருதம், கி.பி.11)

## தமிழ்

**கம்பன்** : **கம்பராமாயணம்** (கி.பி. 9)

## தெலுங்கு

1. கோன புத்தா ரெட்டி : **ரங்கநாத ராமாயணம்** (கி.பி. 13)
2. பாஸ்கரன் மற்றும் மூவர் : **பாஸ்கர ராமாயணம்** (கி.பி. 13)
3. ஆதுகூரி மொல்ல : **மொல்ல ராமாயணம்** (கி.பி. 15)

## கன்னடம்

1. அபிநவ பம்பா என்னும் நாக சந்திரர் : **பம்ப ராமாயணம்** (கி.பி. 11)
2. குமார வான்மீகி என்னும் நரகரி : **தொரவெ ராமாயணம்** (கி.பி. 16)

## மலையாளம்

1. கன்னச இராம பணிக்கர் : **கன்னச ராமாயணம்** (கி.பி. 14)
2. துஞ்சத்த எழுத்தச்சன் : **அத்யாத்ம ராமாயணம்** (கி.பி. 16)

## இந்தி

1. கோஸ்வாமி துளசிதாஸ் : **துளசி ராமாயணம்** (கி.பி. 1574)
2. கேசவ தாஸ் : **இராம சந்திரிகா** (கி.பி. 16)

## அசாமி

மாதவ் கந்தலி : **அசாமி ராமாயணம்** (கி.பி. 14)

## வங்காளம்

கிருத்திவாசன் : **வங்காள ராமாயணம்** (கி.பி. 15)

## ஒரியா

பலராமதாஸ் : **ஒரியா ராமாயணம்** (கி.பி. 16)

## மராத்தி

ஏக நாதர் : **பாவார்த்த ராமாயணம்** (கி.பி. 16)

## நாட்டுப்புற இலக்கியங்கள்

தமிழ், மைதிலி, போஜ்புரி, வ்ரஜ, இந்தி, மற்றும் சில வட நாட்டு மக்களிலக்கியப் பாடல்கள்.

---

*நன்றி: முனைவர் அ. அ. மணவாளன், கம்பராமாயணம் - பாலகாண்டம், கம்பன் அறநிலை, கோவை.*

*பேதியாது நிமிர் பேத உருவம் பிறழ்கிலா,*
*ஓதி ஓதி உணரும்தொறும் உணர்ச்சி உதவும்*
*வேதம், வேதியர், விரிஞ்சன், முதலோர் தெரிகிலா,*
*ஆதி தேவர்; அவர் எம் அறிவினுக்கு அறிவுஅரோ.*

கடவுள் வாழ்த்து

## ஒப்பியல்

# சேக்கிழாரும் கம்பரும்



வித்துவான் மா. இராசமாணிக்கம்பிள்ளை

*முன்னுரை :* ஏறக்குறைய, கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல் சங்க காலம் முடிவுற்றுத் தமிழ்நாடு பல்லவர்–களப்பிரர்–பாண்டியர் ஆட்சிக்குட்பட்டுச் சமண–பௌத்த –சைவ–வைணவ சமயப் போராட்டங்கட்கு நிலைக்களமாகி, ஏறக்குறைய ஐந்து நூற்றாண்டுகள் தடுமாறியது. இந்தக் காலத்தில் எழுந்தவையே சமண காப்பியமாகிய சிலப்பதிகாரமும் பௌத்த காப்பியமாகிய மணிமேகலையுமாகும் என்பது அறிஞர் கருத்து. பிற்காலச் சோழர் காலத்தில், கி.பி. பத்தாம் நூற்றாண்டளவில் உண்டானது 'சிந்தாமணி' என்ற மற்றொரு சமண காவியம். பிற்காலச் சோழர் காலத்தில் சைவமும் வைணமும் சோழமன்னர்களாற் பெரிதும் வளர்க்கப்பட்டன; யாண்டும் சைவ வைணவக் கோவில்கள், மடங்கள், பள்ளிகள் கடனாற்றின. வடமொழிக் கல்லூரிகள் வைணவக் கோவில்களில் மிகுதியாகக் குடிகொண்டிருந்தன. நாயன்மார் பாடல்களும் ஆழ்வார் பாடல்களும் கோவில்களில் ஓதப்பெற்றன; வைணவ ஆசிரியர் வியாக்கியானங்கள் தலையெடுத்தன. நாயன் மார்க்கும் ஆழ்வார் கட்கும் கோவில்களில் விழாக்களும் பூசனைகளும் சிறப்புற நடைபெற்றன. இங்ஙனம் இந்நாட்டிற்கே உரிய சைவ வைணவ சமயங்கள் சிறப்புற்ற சோழர் காலத்தேதான் 'சைவக் காப்பியம்' ஆகிய பெரிய புராணம் பாடச் சேக்கிழாரும், 'வைணவக் காப்பியம்' ஆகிய இராம காதையை இயற்றக் கம்பரும் தோன்றினர்.

*சேக்கிழார், கம்பர் காலங்கள் :* "கம்பர் காலம், சயங்கொண்டார், சேக்கிழார் நாயனார், புகழேந்தியார், ஒட்டக் கூத்தர் முதலிய கவிவேந்தர்கள் எல்லாம் பெரிய பெரிய நூல்கள் பாடி அழியாப் புகழ் நிறுத்திய காலமாம். கம்பர் இவர்கள் அறிவை எல்லாமும் அளந்தறிந்து கொண்டவரும் ஆவர். அளக்கலாகா இயற்கை அறிவின் மாட்சி நன்று பெற்ற ஒருவர்க்குப் பல பெரிய புலவர்களின் புலமையையும் அளந்துகொண்ட செயற்கை அறிவும் நன்கு கூடுமாயின் அவருக்கு அரியவாவன யாவை?" என்று பெரும்புலவராய ரா. இராகவையங்கார் அவர்கள் கூறியுள்ளதை நோக்கக் கம்பர், சேக்கிழார்க்குப் பிறபட்டவர் என்பதுபோதரும். இதுவே உண்மை என்பதை வரலாற்று ஆசிரியரும் ஒப்புக் கொள்கின்றனர். கம்பர் மூன்றாம் குலோத்துங்க சோழன் காலத்தவர் (கி.பி. 1178–1218) என்பது அவர் முடிவு. அஃதாயின் சேக்கிழார் காலம் என்ன? சேக்கிழார், 'பேரம்பலம் பொன் வேய்ந்த' இரண்டாம் குலோத்துங்கன் (கி.பி. 1133 – 1150) காலத்தவர் என்பது அறிஞர் அனைவரும் ஒப்புக் கொண்ட முடிபாகும். ஆகவே கம்பர், சேக்கிழாருக்கு ஏறத்தாழ 25,30 ஆண்டுகள் பிற்பட்டவர் என்னலாம்.

*ஒற்றுமை வேற்றுமைகள் :* சேக்கிழார் தொண்டை நாட்டினர்; வேளாளர்; சோழனுடைய முதல் அமைச்சர். கம்பர் சோழநாட்டினர்; மரபு தெளிவாகவில்லை; சோழனது அவைக்களப் புலவர். சேக்கிழார் பாடிய நூல் நாயன்மார் வரலாறுபற்றியது; கம்பர்பாடியது இராமபிரான் வரலாறு பற்றியது. ஒன்று சைவம்; மற்றது வைணவம். புலவர் இருவரும் சோழரால் பாதுகாக்கப் பெற்றவர்; எனவே, சோணாட்டின்மீதும் சோழர்மீதும் பற்றும் மதிப்பும் உடையவர்.

*சேக்கிழாரும் பெரிய புராணமும் :* சேக்கிழார் 63 தனியடியார் வரலாறுகளைத் தொகுத்து விளக்கிப் பாடிய பெரிய புராணத்திற்கு மூவர் தேவாரம், பிற திருமுறைகள், சுந்தரரது திருத்தொண்டத்தொகை, நம்பியாண்டார் நம்பி பாடிய திருத்தொண்டர் திரு அந்தாதி என்பன மூலங்களாக அமைந்தவை என்பது எளிதிற்பெறப்படும். ஆயின் பெரிய புராணத்தை ஊன்றிப் படிப்பவர், "சேக்கிழார் மேற்சொன்ன மூலங்களோடு அமைந்தார் அல்லர்; பாடல் பெற்ற தலங்கட்கு அவர் நேரே சென்றவர்; பல இடங்களையும் கோவில்களையும் கண்டவர்; தல வரலாறுகளை விசாரித்து அறிந்தவர்; பௌத்த சமண நூல்களை நன்றாகப் படித்துச் செய்திகளை உணர்ந் தவர். சுருங்கக் கூறின், கி.பி. 19–ஆம் நூற்றாண்டில் ஐரோப்பிய வரலாறு எழுத ஐரோப்பா முழுவதும் சுற்றிச் சுவடிகளையும் பிறவற்றையும் ஆய்ந்து சாத்திரீய

முறையில் (Scientific method) வரலாறு எழுதிய ஜெர்மன் வரலாற்றாசிரியரான வான்ராங்கே (Van Rankay) என்பாரைப் போலச் சேக்கிழார் கி.பி. 12–ஆம் நூற்றாண்டில் தமிழ் நாடு சுற்றி நாயன்மார் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்களைக் கேட்டும் படித்தும் பார்த்தும் ஒப்பற்ற பெரிய புராணம் எழுதினார்" என்பதை எளிதில் அறிதல் கூடும்.

சேக்கிழார் உழைப்புக்குக் காரணம் யாது? சேக்கிழார் பொறுப்புள்ள பேரரசின் முதல் அமைச்சர். அவர் பாடப் புகுந்த வரலாறுகள் தமிழ்நாட்டில் பிறந்து வாழ்ந்த பெரியார்களுடையன; ஆதலால், தம் மனம் போனவாறு பாடித் தம் பெருமையை இழக்க அவர் விரும்பவில்லை. மேலும் 63 நாயன்மாருள் ஏறத்தாழ 12 பேர் வரலாற்றுத் தொடர்புடைய சேரசோழ பாண்டிய பல்லவ களப்பிர குலத்தலைவர்கள்; சிலர் சேதிராயர், முனையதரையர் என்ற குறுநில மன்னர் மரபினர். இவர்கள் மரபினர் சேக்கிழார் காலத்தில் வாழ்ந்து வந்தனர். அவர்களைக் கேட்டு அவ்வந் நாயனார் பற்றிய குறிப்புக்களைச் சேக்கிழார் சேர்த்திருக்கலாமென நினைக்க இடம் உண்டு. வரலாற்றுப் புகழ்பெற்ற பல்லவர்–சாளுக்கியர் போர், பல்லவர்–இரட்டர் போர், பல்லவர்–பாண்டியர் போர், பாண்டியர்–சாளுக்கியர் போர் என்பன தெளிவாகவும் குறிப்பாகவும் சேக்கிழார் கூறிச் செல்லலைக் காணும் போது, அப்பெரும்புலவர் பல்லவர் கால (நாயன் மார்கால)த் தமிழக வரலாற்றை நன்கு உணர்ந்த சிறந்த வரலாற்றுப் புலவர் என்பதும் நன்கறியலாம்.

கம்பராமாயணம் : கம்பரது இராமாயணம் வான்மீகர் வரைந்துள்ள இராமாயணம், பால ராமாயணம், காளி தாசன் வரைந்த இரகு வம்சம் முதலியவற்றைச் சிறப்பாகக் கொண்டு, ஆசிரியர் விருப்பம்போல ஆங்காங்கு விரித்துப் பாடப்பெற்ற பெருங் காவியம் ஆகும் என்று அறிஞர் அறைவர். இவ்வரலாறு எந்தக் காலத்தில் எந்த நாட்டில் நடந்தது என்று திட்டமாகக் கூறக் கூடவில்லை. இவ்வரலாறு பல திரிபுகள் அடைந்துள்ளன; பல மொழிகளில் பல வேறு மாறுபாடுகள் உற்றுள்ளன; ஒரே மொழியில் வரையப் பெற்ற பல நூல்களிலும் பல மாறுதல்கள் காண்கின்றன. புத்தஜாதகக் கதைகள். சமண ராமாயண நூல்கள் வடமொழியில் உள்ள. பலவகை இராமாயண நூல்கள் ஆகிய இவற்றுள் ஒன்றுக்கொன்று வேறுபாடு காணலாம். இன்றுள்ள வால்மீகி ராமாயணமும் பல்வேறு காலங்களில் பெருக்கப்பட்டு இன்றைய நிலையை அடைந்துள்ளது என்று ஆராய்ச்சியாளர் பலர் குறித்து, அத்தகைய பிற் சேர்க்கைகளைப் பலபடியாகச் சுட்டி விளக்கிச் செல்லலைப் பல நூல்களிற் காணலாம். வால்மீகி ராமாயணத்துள் சுக்கிரீவன் வானர வீரர்க்குக் குறிப்பதாக உள்ள நாற்றிசை விளக்கங்களை (அவ்வரலாறு இந்தியாவில் நடந்ததெனக் கொண்டு) இந்தியாவில் உள்ள இடங்களைப் பற்றியன என்றெண்ணிச் சுட்டிக்காட்ட முனைந்து, 'பரியத்ரா' மலைத்தொடர்கள் முதலியவற்றைச் சுட்டிக் காட்ட முடியாமல் தவித்த ஆராய்ச்சியாளர் சிலர் "அயோத்தி என்பது பூவுலகில் இருப்பது அன்று; அது தேவர் வாழும் தேவநகரம். இராசிமண்டலக் கணக்கை இங்ஙனம் இராமன் வரலாறாக முன்னையோர் உருவகப் படுத்தினர் என்பதை அறிதல் வேண்டும்" என்று அண்மையில் ஆராய்ச்சியாளர் ஒருவர் வரைந்தமையும் ஈண்டு நினைக்கத்தகும்.

இங்ஙனம் அறிஞர் பலவாறு கூறினும், இராமகாதை நாட்டில் மக்களிடைச் செல்வாக்குப் பெற்றுவிட்டது. தசரதராமன் திருமால் அவதாரமாக்கப்பட்டான்; சீதை இலக்குமியின் அவதாரமாகக் கருதப்பட்டாள். இந்நிலை நன்கு பரவிய காலம் கம்பர் காலம்.

கதையின் மெய்த்தன்மை எந்த அளவினது என்பதைக் கம்பர் நன்கு அறிந்தவரே ஆவர். 'அஃது உண்மையில் நடந்த கதைதான்' என்று அவர் யாண்டும் கூறவில்லை. அதனாற்றான் அவர் தம் காலமக்கள் மனப்போக்கை மதித்து, அக் காலத்தில் வழங்கிய கதைக் குறிப்புகளைக் கொண்டார்; தமிழநாட்டு மக்கட்கு நூல் செய்யவேண்டிய நிலையில் இருந்த அவர் தமிழ் இலக்கண முறைக்கு ஏற்பப்பல புதிய செய்திகளைச் சேர்த்தார்; தமிழ் நாகரிக நிலைக்கு ஏற்பச் சில மாறுதல்களைச் செய்தார்; தம் தமிழ் நாட்டுப் பற்றையும் தக்க இடங்களில் விளக்கியுள்ளார்; செய்ந்நன்றியறி தலையும் தெளிவாகத் தெளிந்துள்ளார்; தம் உயரிய அநுபவங்களையும் சமயத்தைப் பற்றிய தம் உயரிய கருத்துக்களையும் ஆங்காங்கு உவமைகள், பிறிது மொழிதல் முதலியவற்றின் வாயிலாக விளக்கிச் சென்றுள்ளார். இங்ஙனம் பெரியதோர் காவியம் பாட விரும்பிய புலவர் தமக்கு முன்பிருந்த காவியங்களைப் பார்த்திருத்தல் இயல்பே. மகாவித்துவான் ரா. இராகவை யங்கார் அவர்கள் சொன்னவாறு, கம்பர் தமது இயற்கை அறிவுடன் சேக்கிழார் போன்ற கவியரசர் அறிவையும் அளந்து, கொள்ளவேண்டியதைக் கொண்டனர் என்பதில் ஐயமே இல்லை. முற்பட்ட அக்காவியங்களுள்ளும் கம்பர் உள்ளத்தை மிகுதியும் ஈர்த்தது பெரிய புராணமாக இருத்தல் கூடும் என்று நாம் எண்ணுதல் தவறாகாது. என்னை? பெரிய புராணம் சோழ அரசன் தூண்டுதலால் அவனது அமைச்சராற் பாடப்பெற்றது; கம்பர் சோழனது அவைப் புலவர்; ஆதலின், தமக்கு முற்பட்ட புலவர்

ஒருவர் சோழர் அவையிற் செய்துகாட்டிய காவியம் தமக்கு முதல் துணை என அவர் கருதுதல் இயல்பே. மேலும், தமிழ் நாட்டைப்பற்றிய சிலப்பதிகாரம், மணிமேகலை என்ற காவியங்களில் விளக்கமாக இராத நானிலத்து ஐந்திணை வளமும் தெரித்துக் காட்டும் நூல் பெரிய புராண ஒன்றே ஆதலால், அவ்வளத்தை விரிக்கும் விருப்பங்கொண்ட கம்பர் பெருமானுக்குப் பெரிய புராணம் பெருவிருந்தாக இருந்ததெனல் மிகையாகாது.

இனிக் கம்பர் பெருமான் பெரிய புராண அமுதத்தை எங்ஙனம் உண்டு களித்தார் என்பதைச் சுருங்கக் காண்போம்.

1. *"உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்*
*நிலவு லாவிய நீர்மலி வேணியன்*
*அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்*
*மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்."*

என்ற பெரிய புராண முதற் பாசுரத்தை அடியொற்றி,

*"உலகம் யாவையும் தாமுள வாக்கலும்*
*நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா*
*அலகி லாவிளை யாட்டுடை யாரவர்*
*தலைவர் அன்னவர்க் கேசரன் நாங்களே."*

என்ற கம்பரது பாட்டு, அதன் பிரதிபிம்பம்போல விளங்குதல் காணலாம்.

2 *"அளவி லாத அடியார் புகழ்களை*
*அளவில் ஆசை துரப்ப அறைகுவேன்"*

என்று தொடங்கி ஆசிரியர் சேக்கிழார் அவை யடக்கம் கூறுவாராய்,

*"பெருகு தண்கடல் உற்றுண் பெருநசை*
*ஒருசு ணங்களை ஒக்குந் தகைமையேன்"*

என முடித்தார். அக்கருத்தையே அனுவதித்துக் கம்பர்,

*"ஆசைபற்றி.......இராமன் கதையினை*
*ஓசை பெற்றுயர் பாற்கடல் உற்றொரு*
*பூசை முற்றவு நக்குபு புக்கென"*

நான் அறையலுற்றேன்' என்று கூறி முடித்தார்.

3 *"முந்தை யெம்பெருந் தவத்தினா லேகொல்*
*முனிவர் இங்கெழுந் தருளிய தென்றார்"*

*– இயற்பகை நாயனார் புராணம்,5*

என்ற பாட்டின் கருத்தைக் கையடைப் படலத்திலே,

*"நிலஞ்செய்தவ மென்றுணரின் அன்றுநெடி யோயென்*
*நலஞ்செய்வினை யுண்டெனினும் அன்றுநகர் நீயான்*
*வலஞ்செய்து வணங்கவெளி வந்ததிது முந்தென்*
*குலஞ்செய்தவ மென்றினிது கூறுமுனி கூறும்"*

என்ற கம்பரது பாட்டு விரிவுரை செய்கின்றது என்று சொன்னால் அது தவறாகாது.

*"முட்டி லன்பர்த மன்பிடுந் தட்டுக்கு முதல்வர்*
*மட்டு நின்றதட் டருளொடுந் தாழ்வுறும் வழக்கால்*
*பட்டொ டுந்துகில் அநேககோ டிகளிடும் பத்தர்*
*தட்டு பேற்படத் தாழ்ந்தது கோவணத் தட்டு."*

*– அமர்நீதியார் புராணம், 35*

இப்பாட்டில் முதல் இரண்டடிகளில் ஒருநியதி–நீதி–உண்மை–ஆகிய ஒரு வழக்கினை நிறுவிப் பின்னிரண்டடிகளில் அவ்வுண்மை இந்நிகழ்ச்சியால் உதகரிக்கப் பெற்றது என்று எடுத்துக் காட்டுகின்றார் ஆசிரியர். இஃது ஆசிரியரின் மரபு. இவ்வாறு ஒரு நியதியாகிய வழக்கினைக் கூறிச் சரிதத்தை உதகரிக்கும் இவ்வாசிரியரது அரிய மரபினைக் கம்பரும்,

*"தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினும் அவர்தம்*
*மருண்ட சிந்தையை மாற்றுவ ரெனுமிது வழக்கே;*
*உருண்ட வாய்தொறும் பொன்னுரு ளுரைத்துரைத் தோடி*
*இருண்ட கல்லையும் பொன்னிற மாக்கிய விரதம்"*

*– வரைக்காட்சிப் படலம், 8*

என்ற பாட்டிலே சொல், பொருள், யாப்பு என்னும் பல வகையிலும் அடியொற்றிப் பின்பற்றி நின்றது காண்க.

*"ஞாலம் அளந்த மேன்மைத் தெய்வத்தமிழ்"*

*– மூர்த்திநாயனார் புராணம் – 3.*

என்ற சேக்கிழார் வாக்கின் கருத்தும்,

*"நிழற்பொலி கணிச்சிமணி நெற்றியுமிழ் செங்கண்*
*தழற்பொலி சுடர்க்கடவுள் தந்ததமிழ்"*

என்ற கம்பர் கவியின் கருத்தும் ஒன்றாதல் காண்க.

*"கற்பகப்பூந் தளிரடிபோங் காமருசா ரிகைசெய்ய*
*உற்பலமென் முகிழ்விரல்வட் டணையோடுங் கையெயரப்*
*பொற்புறுமக் கையின்வழிப் பொருகயற்கண் புடைபெயர*
*அற்புதப்பொற் கொடிநடங்கி ஆடுவபோல் ஆடுவார் "*

*– திருநாவுக்கரசர் புராணம், 420*

என்ற பாவின் கருத்து,

*"கைவழி நயனம் செல்லக் கண்வழி மனமும் செல்ல*
*ஐயநுண் இடையார் ஆடும் நாடக அரங்கு கண்டார்"*

*– மிதிலைக் காட்சிப் படலம்*

என்ற கம்பரது பாட்டடிகளில் கலந்து இனித்தல் காணலாம்.

***மிதிலைக் காட்சிப் படலம் :*** வான்மீகத்தில் இல்லாத இப்பகுதி கம்பரால் புதிதாகச் சேர்க்கப் பட்டுள்ளது. இதற்குக் காரணம் தமிழ் அகப்பொருள் இலக்கணமேயாகும். உள்ளப் புணர்ச்சி உண்டாய பிறகே கற்பு மணம் நடத்தல் தமிழ் முறை ஆதலின், பிறநாட்டுக் கதையெனினும் தமிழ்நாட்டு மக்கள் படிப்பதற்காகத் தமிழிற் பாடப்படுதலின், இராமன் சீதை மணத்தைத் தமிழ் முறையில் அமைத்துக் காட்டல் தக்கது என்றெண்ணிய கம்பர் இப்பகுதியைப் புதிதாகச் சேர்த்தார். இத்தகைய காட்சி ஒன்று பெரிய புராணத்துள்ளும் சேக்கிழாரால் நுழைக்கப்பட்டுள்ளது. அது சுந்தரர் பரவையார் உள்ளப் புணர்ச்சி பற்றியதாகும். காட்சி, ஐயம், தெளிதல் என்ற படிகள் அங்கு விளக்கப்பட்டுள்ளன. அன்றிரவு இருவரும் தத்தம் இடங்களில் தனித்திருந்து மாரன் மலர்க்கணைக்கு இலக்காகி மயங்குகின்றனர்; மறுநாள் மணம் முடித்து மகிழ்கின்றனர். இந்நிலைகள் அனைத்தையும் கம்பர் பெருமான் தமது மிதிலைக் காட்சிப் படலத்தில் அழகாக அமைத்துப் பாடியுள்ளமை நோக்க, முன்னூல்களில் இல்லாத இப்புதிய பகுதிக்கு மேற்சொன்ன பெரிய புராணப் பகுதி பெருந்துணை புரிந்ததாகல் வேண்டும் எனக் கோடல் பொருத்தமாகும்.

***தொடர்களை ஆளுதல் :*** இங்ஙனம் கம்பர் பெருமான் சேக்கிழார் பெருமானிடம் கொண்ட கருத்துக்கள் பல; விரிப்பிற் பெருகும். இவ்வளவோடு அக்கவியரசர் அமைந்திலர்; பல இடங்களில் சேக்கிழார் வழங்கியுள்ள தொடர்களைப் பொருட் பொலிவு பழுது படாதவாறு எடுத்தாண்டுள்ளமை படித்து இன்புறற் பாலது. சான்றாகச் சில காண்க.

1. ***"உயிர் ஒன்றும் தாங்கி நின்றாள்"***

   *– தடுத்தாட்கொண்ட புராணம், 172*

   ***"துகில் ஒன்றும் தாங்கி நின்றாள்"***

   *– உலாவியற் படலம்*

2. ***"உள் நிலாவிய காதலினால்"***

   *– சம்பந்தர் புராணம், 431*

   ***"உள் நிலாவிய துயரம்"***

   *– கையடைப் படலம்*

3. ***"செய்தவத் தீர்"*** *– சம்பந்தர் புராணம், 118*

   ***"செய்தவம் பயந்த வீரர்"***

   *– விபீடணன் அடைக்கலப் படலம்*

4. ***"தண்டலை மயிலாடு துறை"***

   *– சம்பந்தர் புராணம், 428*

   ***"தண்டலை மயில்கள் ஆட"*** *– நாட்டுப் படலம்*

சொற்களை ஆளுதல் :

1. ***"நோக்கிய"*** அமர்நீதியார் புராணம்–40;

   ***"அண்ணலும் நோக்கினான்***
   ***அவளும் நோக்கினாள்."***

   *– மிதிலைக் காட்சிப் படலம்*

2. ***"சிலையினைக் காப்புக் கட்டுந் திண்புலி நரம்பிற் செய்த***
   ***நலமிகு காப்பு நன்னாள் நாகனார் பயந்த நாகர்***
   ***குலம்விளங் கரிய குன்றின் கோலமுன் கையிற் சேர்த்தி***
   ***மலையுறை மாக்கள் எல்லாம் வாழ்த்தெடுத்தியம்பினார்கள்"***

   *– கண்ணப்பர் புராணம், 33*

வேடர்கள் வாழ்த்தியபடி உலகநிலைத் தாழ்வுக்குறியின் வாராது இவ்வில் வித்தை உயர்ந்த தெய்வக் குறியின் முற்றியதாதலின் இவ்வேடர்களது அறிவுக் குறைவு காட்ட 'மாக்கள்' என்றார்.

இராமன் முடி சூட்டுதற்கு நாள் வைத்த கணித நூல் வல்லோரை, அந்நாளே அவன் முடி துறந்து காடு செல்ல அமைந்த பின்விளைவு நோக்கிக் கம்பர் பெருமான் "கணித மாக்கள்" என்றமை மேற்சொன்னதுடன் ஒப்பு நோக்கத்தக்கது.

3. ***"காடு கொண்டெ ழுந்த வேடு கைவளைந்து சென்றதே"***

   *– கண்ணப்பர் புராணம், 72*

   ***"வேடு கொடுத்தது பாரெனு மிப்புகழ் மேவீரோ?"***

   *– குகப் படலம்*

வேடு–வேடர் கூட்டம்.

முடிவுரை: சேது சமஸ்தான மகாவித்துவான் ரா. இராகவையங்கார் அவர்கள் கூறியவாறு கம்பர் பெருமான் தமக்கு முற்பட இருந்த சேக்கிழார் போன்ற கவியரசர் காவிய அமுதினை எல்லாம் சுவையுற நுகர்ந்த பின்னரே தமது பெருங்காவியத்தைப் பாடினாராவர் என்பது இது காறும் காட்டிய சான்றுகளால் நன்கு விளங்கும். கம்பரைப் போன்றே தமக்கு முற்பட்ட சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி முதலிய புறச்சமய காவியங்களை அழுந்தக் கற்றவர் சைவப் புலவராகிய சேக்கிழார் என்பதற்குப் பல சான்றுகள் காட்டலாம். சேக்கிழார், கம்பர் போன்ற மகாகவிகள் கேவலம் சமய வேறு பாட்டால் பெறற்கரிய கவியமுதைக் கைவிடும் கீழ்மக்கள் அல்லர் என்பதை அறிஞர் அறிவர். சேக்கிழார் சிந்தாமணி படித்தவர் என்பது அவரது வரலாறே கூறும் செய்தி; அன்றி அவரது பெரிய புராணப் பாக்களிலிருந்தும் பல காட்டுகள் காட்டலாம். இதில் இழுக்கென்னை?

இவ்வாறே பின்வந்த கம்பர் பெருமான் பெரிய புராணம், சிந்தாமணி, மணிமேகலை முதலிய செந்தமிழ்க் காவியங்களைக் கற்றுக் களித்தனர்; தமக்கு வேண்டியன வேண்டியாங்குக் கொண்டனர். இங்ஙனம் முன்னாசிரியர்கட்கு மதிப்பளித்த சிறப்பாற்றான், காவிய முறை, சொல்லாட்சி, தொடராட்சி, வருணனை இன்ன பிற காவியப் பண்புகள் தொல்லாசிரியர் மரபுபற்றிச் சிறந்திருக்கச் செய்திருப்பதாற்றான் கம்பரை நாம் போற்றுகின்றோம். கம்பர் திருநாளைக் கொண்டாடிக் களிக்கின்றோம். தமிழ் அறிஞர் கம்பர் கூறும் கதைக் காகவா அவர் காவியத்தைப் படிக்கின்றனர். அவர் புலமை வழியே வெளிவரும் நமது பண்டைத் தமிழ்ச் செல்வத்தை, கவிநயத்தை, புலவர் புலமையை தமிழ்ப் பாவின் பண்பை, தமிழ்ப் புலவரேறாகிய கம்பருடையகனிந்த உலக அநுபவத்தை ஒருங்கே அறிந்து மகிழ – கி.பி 12–ஆம் நூற்றாண்டில் தமிழ் நாட்டில் இத்தகைய பேரறிவு படைத்த பெரும் புலவர் இருந்தமையை எண்ணி எண்ணி இறும்பூது கொள்ளக் கம்பராமாயணத்தைக் கற்கின்றனர்; விழாக் கொண்டாடு கின்றனர்.

---

*நன்றி : கம்பன் கவிஅமுதம் சென்னைக் கம்பன் கழகம்*

மூவர் முடிவேந்தர் – போற்றும்
முத்தமிழ்ப் பாவேந்தன்
தேவி அருள் பெற்றான்– தமிழ்தாய்
செய்தவத் தால் பிறந்தான்

*–கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை–*

# கம்பனும் துளசியும்

——— கா. ஸ்ரீ. ஸ்ரீநிவாஸாசாரியார் ———

'உலகம் யாவையும் தாமுள வாக்கலும்' என்னும் பொருள், நிரம்பிய மங்கல மதுரத் திருவாக்குடன் கம்பனின் இராமகாதை ஆரம்பமாகிறது. பிரம்ம சூத்திர உரை ஆசிரியரான ஸ்ரீராமாநுஜாசார்யரின் ஸ்ரீபாஷ்ய மங்களா சரணம் சொல்லிலும் கருத்திலும் இச்செய்யுளை முற்றும் ஒத்திருக்கிறது. துளசி தாஸர் தமது ராம சரித மானஸத்தைப் பலவகைப் புராணங்கள், வேதங்கள், ஆகமங்கள் ஆகியவைகளுக்குச் சம்மதமானது என்கிறார். அவருடைய ராமாயணம் ஒரு பெரிய மத நூல். அதன் முன்னுரையைப் படிப்பதிலே நாம் பல பக்கங்களைத் தாண்டிவிடுகிறோம். பல கிளைக் கதைகளும், உலக தர்மங்களும், பரந்த நீதி வாக்கியங்களும், இயற்கை வருணனைகளும், ஒழுக்க முறைகளைப் பற்றிய உபதேசங்களும், பக்தி வெள்ளமும் ஒன்றுகூடித் துளசி ராமாயணத்தை, ராமசரிதமானஸம் என்ற அதன் பெயருக்கேற்ப, ஒரு பெரிய அகன்ற நீர்ப்பரப்பாக்கிவிடுகின்றன. கம்பராமாயணமே காம்பீர்யமான நடையில், ஓர் உயர்ந்த காவியத்துக்குரிய சகல லஷணங்களும் அமைந்து, நாடகக் காட்சிகளைப் போலத் துரிதமாகவும், மனிதனின் உள்ளத்தில் மாறி மாறி இயங்கும் உணர்ச்சிகளனைத்தையும் வர்ண ஓவியங்களாலே உள்ளவாறு வர்ணித்துக்கொண்டும் செல்லுகிறது. துளசிதாஸர் தமது ஆரம்ப வணக்கத்தில் உலகம் முழுவதையும் ஸீதா ராம மயமாக அறிந்து எல்லோரையும் அன்புடன் வணங்குகிறார். ஆரம்பத்திலேயே கம்பனுக்கும் துளசிக்கும் உள்ள ஓர் ஒற்றுமையை நாம் காண்கிறோம். இறைவன் உலகத்தைப் படைத்து, அதில் உறைந்து நின்று காப்பதை இருவரும் குறிப்பிட்டிருக்கிறார்கள். இருவரும் தம் காப்புச் செய்யுளில் உபநிஷத்தின் ஒரு தத்துவார்த்தத்தை விளக்கியிருக்கிறார்கள்.

குமரகுருபர சுவாமிகள் காசியில் கம்ப ராமாயணம் பிரசங்கம் செய்து வந்ததாகவும், அதைக் கேட்டுவந்த துளசிதாஸர் தம் ராமாயணத்தில் கம்பனின் சில கருத்துகளை அமைத்ததாகவும், நாட்டில் ஒரு கர்ணபரம்பரைச் செய்தி உலாவி வருகிறது.

கம்பனுக்கும் துளசிக்கும் உள்ள ஒற்றுமைகளுக்குக் காரணங்கள் இரண்டு. ஒன்று, இருவருமே அகில இந்தியாவின் கலைப்பண்பை வளர்க்க உதித்தவர்கள். இராமனை வர்ணிக்கும்போது 'தென்சொற்கடந்தான், வடசொற்கலைக்கு எல்லை தேர்ந்தான்' என்கிறார் கம்பர். இரண்டாவது, இருவருமே வான்மீகியின் ஆதிகாவியத்தைத் தம் முதல்நூலாகக் கொண்டு, இராம கதையைத் தம் கட்டுக்கோப்பிலே அமைத்தவர்கள். அவ்வாறு அமைக்கும்போது இருவரும் சில கட்டங்களில் வால்மீகியினின்றும் வேறுபட்டிருக்கிறார்கள். வால்மீகி பழைய உலக வழக்கை அனுசரித்து, இராமனும் சீதையும் மணந்த பின்பே அவர்களின் காதலை வளர்க்கிறார். ஆனால், கம்பனும் துளசியும், திருமணத்துக்கு முன்னமே காதலர்களின் முதல் சந்திப்பை வருணித்துத் தமது கதைக்கு ஒரு காதல் நிறம் தீட்டுகிறார்கள்.

மிதிலை மாநகர் வீதியில் நடந்து சென்ற நம்பி, கன்னிமாடத்தின் மேடையிலே நின்ற சீதையைக் கண்டு, மாளிகையடைந்த பின்பு, அவளே தன் கண்ணிலும் கருத்திலும் இலங்குவதைக் காண்கிறான். அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள்; சீதையும் தன் கண்வழிப் புகுந்த காதல் நோய் பாலுறு பிரையெனப் பரவ, வீதியிலே கண்ட வீரத் திருக்கோலத்தைத் தன் உள்ளத்தில் வரைகிறாள். காலையிலே கதிரவனின் கிரணங்களால் அலர்ந்த செந்தாமரையில், அவள் தன் காதலனின் கண்ணின் நிறத்தையும் மேனியின்

நிறத்தையும் கண்டு, ஒருவாறு ஆறுதல் பெற்று, தன் வாட்டத்தைத் தீர்த்த கமலப்பொய்கையை நோக்கி,

*" பெண் இவன் உற்ற தென்னும்*
*பெருமையால் அருமை யான*
*வண்ணமும் இலைக ளாலே*
*காட்டலால் வாட்டந் தீர்ந்தேன்*
*தண்ணறுங் கமலங் காள்! என்*
*தளிர்நிற முண்ட கண்ணன்*
*உண்ணிறங் காட்டி நீர்என்*
*உயிர்தர உலாவினீரே!"*

என்கிறாள். இது கம்பன் கண்ட காட்சி.

துளசியோ, ஜனகனின் பூஞ்சோலையில் சீதா ராமரின் காதல் உதயமாவதைக் காண்கிறார். ராமனும் சீதையும் ஒருவர் மற்றொருவரின் இவ் வுலகிலேயே காணக்கிடக்காத ஸௌந்தரியத்தைக் கண்டு உவகை கொள்ளுகின்றனர். துளசி தம் வர்ணனையில் ராம கதையின் தூய்மைக்கும் உலக மரியாதைக்கும் எவ்விதக் குறையும் நேராமல் பார்த்துக் கொள்ளுகிறார்.

இராமன் மண வில்லை இறுக்கும் கட்டம். இராமனால் வில்லை ஒடிக்க முடியுமோ முடியாதோ என்ற ஓர் ஐயம் எழுகின்றது, சீதையின் மனத்திலே. அவள் மனத்தில் நிகழும் இச்சந்தேகப் புயலை வெகு மனோஹரமாக வர்ணிக்கிறார் துளசி. ஆனால் இந்தக் கட்டத்திலே கம்பர், தம் முதனூலின் ஆசிரியரான வால்மீகியையும் வென்றவராகச் சொல்லப்பட்ட துளசியையும் ஒருங்கே தோற்கடித்து விடுகிறார். இராமனின் வடிவழகை முடியக் காண இயலுமா? அவனைக் கண்டவர்களின் நிலை என்ன?

*" தோள்கண்டார் தோளே கண்டார்*
*தொடுகழற் கமல மன்ன*
*தாள்கண்டார் தாளே கண்டார்*
*தடக்கைகண் டாரு மஃதே*
*வாள்கண்ட கண்ணார் யாரே*
*வடிவினை முடியக் கண்டார்*
*ஊழ்கண்ட சமயத் தன்னா*
*னுருவுகண் டாரை யொத்தார்"*

சபையில் கூடியிருந்த சீதையின் தோழிகள் ஞான முனியான விசுவாமித்திரனையும் ஜனக ராஜனையும் பழிக்கலாயினர்.

இத்தனை நிந்தைப் பேச்சுகளுக்கும் சந்தேகங்களுக்கும், இராமன், மாக மடங்கலும் மால் விடையும் பொன் நாகமும் நாண நடந்து வந்து, ஒரு நொடியிலே விடையிறுத்து விடுகிறான் வில்லையிறுத்து. தடுத்திமையாமலிருந்தவர் தாளின் மடுத்ததும் நாணுதி வைத்ததும் நோக்கார் கடுப்பினை யாரும் அறிந்திலர். ஒரு கண்ணிமைப் பொழுதில் எல்லாம் நிகழ்ந்து விட்டது. கையால் எடுத்தது கண்டனர். இற்றது கேட்டனர். வால்மீகிக்கு இந்த ஓர் அடியைக் குறிப்பிடுவதற்கு நான்கு அடிகள் வேண்டியிருந்தன.

துளசி தாஸர், இராமன் வில்லிறுத்த பின்பு சீதையின் மனத்தில் தோன்றிய மன நிகழ்ச்சிகளை விவரிக்கத் தொடங்கிவிட்டாரேயொழிய வில்லிறுத்த தொழிலை அவர் பிரமாதமாக நினைக்கவில்லை. இராமனை அவர் ஒவ்வோரிடத்திலும் கடவுளாகப் போற்றி வருவது தான் இதற்குக் காரணம்.

துளசியும் பல இடங்களில் மனித உள்ளத்தில் தோன்றும் சூட்சும எழுச்சிகளைச் சித்திரித்துக் காட்டுகிறார். ஆனால் அவர் முதலில் மிகப்பெரிய பக்தர், பின்புதான் கவி. அவர் ஒரு பக்த கனி. ஹிந்தியிலேயே புரந்தரதாஸர், கவி என்ற ஹோதாவில் துளசிக்கும் மேம்பட்டவர். ஆனால் துளசிதர்ஸர் வேதங்கள், வேதாந்தங்கள், வேத அங்கங்கள், புராணங்கள், இதிகாசங்கள் ஆகியவைகளின் கருத்துகளை எல்லாம் சுருக்கி, அவைகளை விரஜபாடி அவதீ, போஜபுரி, புந்தேல்கண்டி, ராஜ்புதான் முதலிய கிளை மொழிகளின் சொற்கள் விரவிய ஒரு பொது பாஷையிலே அமைத்துத் தம் இராமாயணத்தை ஞானக்களஞ்சியமாக்கி விட்டார். ஆகவே பொது ஜனங்கள் அதைப் பெரிதும் ஆதரித்தார்கள். இன்றுவரையிலும் இந்நூல் ஹிந்து சமூகத்துக்கு இன்றியமையாத ஒரு கிரந்த ரத்தினமாக இருந்து வருகிறது.

வால்மீகியும் கம்பனும், திருமணமான பின்பு, அயோத்திக்குச் செல்லும் வழியில் பரசுராமனின் வருகையைக் குறிப்பிடுகிறார்கள். ஆனால் துளசி, விவாகத்துக்கு முன்பே, வில்லொடித்த உடனேயே, அங்கே பரசுராமரைக் கொண்டுவந்து நிறுத்திவிடுகிறார். இராமனின் வில்லிறுத்த வீரம்

ஏற்கனவே சீதையின காதலுக்கு உரமாயிருந்தது. உடனே பரசுராமனின் வருகை, அவ்வீரத் தன்மையைப் பின்னும் விளக்கிக் காட்ட மற்றுமொரு சந்தர்ப்பத்தை அளித்தது. உலகத்தையே வென்ற பரசுராமனின் ஒளி இராமனுக்கு முன்பு மங்கிப் போயிற்று. அப்போது சீதாராமர்களின் பரஸ்பர அன்பு எவ்வளவு உறுதி சான்றாதாக இருந்திருக்கும். காதலும் வீரமும் இணைந்து நிற்பதைக் கற்பிக்கவே துளசிதாஸர், இங்கே வாமிகியிலும் கம்பனிலும் இல்லாத ஒரு மாறுபாட்டை அமைத்திருக்கிறார் என்று சொல்லலாம்.

துளசி ராமாயணத்தில் அயோத்தியா காண்டம் மற்ற எல்லாக் காண்டங்களையும் விடச் சிறப்பானது. துளசியின் கவித்துவத்தைக் காண அதுதான் சிறந்த இடம். அவர் முதன் முதலில் ராமசரிதம் என்று பெயரிட்டு அயோத்தியா காண்டம் தான் எழுதினாரென்றும், பின்பு பாலகாண்டத்தின் கடைசிப் பகுதியை முடித்துவிட்டே அதன் முற்பகுதியை எழுதினாரென்றும் கருதுவதற்குத் தகுந்த ஆதாரங்கள் கிடைத்துள்ளன. கவிதைச் சுவையும் பலவித அலங்காரங்களும் நிரம்பிய அயோத்தியா காண்டத்தைத் துளசிதாஸரின் கவிதைக்கு எல்லை நிலம் என்றே சொல்லி விடலாம். அதில்தான் அவர் தமது முழுத் திறமையையும் கொட்டியிருக்கிறார். பாலகாண்டத்தில் சீதா ராமர்களின் சந்திப்பிலிருந்து தொடங்கி அக்காண்டத்தின் முடிவு வரையிலுமுள்ள பகுதியை அதற்கு அடுத்தபடி சிறந்ததாகக் கூறலாம். அயோத்தியா காண்டம் வரையில் கவியரசராக இருந்த துளசி அதற்குப் பின்பு பக்த ராஜனாகவும், உலக நன்மையைக் கருதிய உபதேசக சக்கரவர்த்தியாகவும் மாறிவிடுகிறார்.

கம்பனின் இராமகாதையும் அயோத்தியா காண்டத்தில்தான் ஆரம்பிக்கிறது. இங்கே வ.வே.சு. அய்யரின் கம்பராமாயண ரசனையிலிருந்து ஒரு பகுதியை எடுத்துக் கூறுகிறேன். ராமாயணத்தின் வஸ்து, அதாவது பிரதான சம்பவம் ராவணவதம். அதற்கு நெருங்கிய காரணம் அரணியத்தில் நேரும் சீதா ராவண சந்திப்பாதலால், ராமன் சீதா ஸமேதனாய்க் காட்டுக்குச் செல்லுவதையே அந்த வஸ்துவுக்கு பீஜம், அதாவது விதை என்று கூறவேண்டும். அயோத்தியா காண்டத்தில்தான் இவ்விதை விதைக்கப்படுகிறது. ஆதலால் அதுவேதான் கதையின் உண்மையான தொடக்கம்.

அது முதற்கொண்டு கதையானது ஓர் அரண்மனைக் கட்டிடம் போல அழகாயும் கம்பீரமாயும் கிளம்பி வஸ்து பூர்த்தியாகிற வரையில் ஒரே வளர்ச்சியாக வளர்ந்து செல்கின்றது. அயோத்தியா காண்டத்தினின்று கதையானது மத்தகஜத்தின் நடையோடு, கங்கா பிரவாகத்தின் கமனத்தோடு ராவண வதம்வரை செல்லுகிறது. உபாக்கியானங்களுக்காக வேனும் மந்திராலோசனைக்காகவேனும் கதை நிற்கிறதே என்றால், அது இயற்கையையொட்டியே அவ்வாறு நிற்கின்றது. வனராஜனான கஜேந்திரனும் அங்கங்கே ஆகாரத்திற்காக நிற்கிறான். அங்கே இளைப்பாறுகிறான். கங்கா நதியும் சம தடத்தில் வேகம் குறைகிறது. யமுனை முதலிய உப நதிகளின் நீரை ஏற்றுக்கொள்ளுகையில் வேகத்தைத் திரும்பப் பெற்றுக் கண்டோர் வியக்கச் செல்லுகிறது. கிளை நதிகளையும் கால்வாய்களையும் நிரப்பிக்கொண்டு சற்று ஆலசியமாக நடக்கிறது. ஆனால், ஆலசியமெல்லாம் அடுத்த கட்டத்தில் இரண்டு பங்கு வேகமாகச் செல்லுவதற்காகத்தான். கடைசியில் சமுத்திர ராஜனோடு கலப்பதற்கு முன் கங்கா தேவியின் அழகையும் காம்பீர்யத்தையும், வாயால் வர்ணித்துச் சொல்ல ஒண்ணுமோ? தேவர்களும் கண்டானந்திக்கத்தகும் காட்சியன்றோ கங்கா தேவியின் சமுத்திர சங்கமம்! இத்தகைய வேகமும், ஓட்டமும், பொலிவும் இருக்கின்றன கம்ப ராமாயணத்தில்.

அயோத்தியா காண்டம், ராமாயண சரித்திரத்தின் வேர்; பரத சரித்திரத்தின் ஆரம்பம், பரதன், மாமன் வீடு சென்ற பின்புதான் இராமனுக்கு முடி சூட்டும் பிரஸ்தாபம் வருகிறது. பிறகு மந்தரைச் சூழ்ச்சி. இந்தக் கட்டத்தில் கம்பனும் துளசியும் ஒருவருக்கொருவர் தோற்றவரல்லர். இந்தச் சூழ்ச்சியின் பயன், ராமனுக்கு வனவாசம். தசரதன் இருதலைக் கொள்ளியினிடையே தாக்குண்டு வருந்துகிறான். ஒரு புறம், வரங்கள் இரண்டு; மறுபுறம் இராம வாஞ்சை. புதல்வனின் மணிமுடி அணிந்த கோலத்தைக் காணக்கருதிய சமயத்தில், அவன் வனம்புக நேர்ந்ததைக் கண்டும் கலங்காத வளாகிய கோசலை 'வடித்தாய் கூந்தல், கேகயன் மாதே' என்று இரங்கிக் கூறும் நிலையிலே முடிகிறது அந்தத் தாக்குதல்.

பரத யாத்திரையை வால்மீகி, கம்பன், துளசி ஆகிய மூவருமே பரதனுடைய ராமபக்தியைச் சிறப் பித்துக் காட்டும் முறையிலே வர்ணித்திருக்கிறார்கள்.

பரதனும் குகனும் சந்திக்குமிடத்தில் சில வேறு பாடுகள் உள்ளன. பரதனின் பக்தியை துளசி தமக்கு ஆதரிசமாக வைத்துக்கொண்டார். வால்மீகியும் கம்பரும் பரதனுடைய சிருஷ்டியில் எத்துணை அன்பை, எத்துணை பக்தியை, எத்துணைத் தியாகத்தை, எத்துணை ஆத்ம கண்டனத்தைப் புகுத்தி, பரதனை அனன்னிய சதிருசமான, இணையற்ற ஆத்ம வீரனாக்கிவிட்டார்கள் என்கிறார் வ. வே. சு. ஐயர். இத்தகைய மகா புருஷனைத்தான் துளசி தம் பக்திக்கு ஆதரிசமாகக் கொண்டார். இராமனிடம் உத்தரவு பெற்றுப் பரதன் ராஜ்ய சாஸனத்தை மேற்கொண்டான். ஆனால் அதன் பொறுப்பையெல்லாம் ராமனின் பாத பங்கயங்களிலே அர்ப்பணித்துத் தான் பற்றொழிந்தவனாகவே விளங்கினான். தான் நாட்டிலே வாழ்ந்திருந்தும் காட்டிலே வாழ்வதால் நேரும் துன்பங்களை எல்லாம் அனுபவித்தான்.

குகனை மகோன்னதமான ஒரு பாத்திரமாகச் சிருஷ்டித்திருப்பதில் கம்பன், மற்ற இருகவிகளிட மிருந்தும் மாறுபட்டிருக்கிறார். வெளிப்பார்வைக்கு வேடனாயிருந்தும், கண்ணீரும் கம்பலையுமாக உள்ளமுருக நின்ற கம்பருடைய குகன் அழியாத ஓர் உயிர்ச்சித்திரமாகும். இராஜகுமாரனான இராம னுடைய அலங்கோல நிலையைக் கண்டு " நின்னை இங்ஙனம் பார்த்த கண்ணை ஈர்கிலாக் கள்வனேன்" என்று குகன் கூறுவதாகக் கம்பன் அமைத்திருக்கிறார். கங்கைக் கரையின் காட்டுப்புறத்து வேடனைக் கம்பர் இவ்வளவு உயர்த்தி வைத்திருப்பது கலைக்சூட்சுமம் தெரிந்தவர் அனைவரும் ரசிக்கக் கூடியதாகும். குகனைக் குன்றுபோல் உயர்த்தி, பரதனை அக்குன்றின் மேலிட்ட தீபமாகச் செய்திருக்கிறார் கம்பன். தமிழ் மண்ணில் பிறந்த ஒரு கம்பன்தான் ஒரு குகனைப் படைக்க முடியும்.

அயோத்தியா காண்டத்திற்குப் பின்பு ஓர் அழகிய அரச குமாரியுடன் இரண்டு வீரர்கள் வெஞ்சிலையே துணையாய் அழகிய காடுகளையும், மலைகளையும் கடந்து செல்லும் காட்சியை நமக்குக் காட்டுகிறார் துளசிதாஸர். அதன் பின்பு சீதையை ராவணன் கவர்ந்து செல்வதால் நேரும் பிரிவை நோக்கியவண்ணம், லங்கா தகனத்தின் அற்புதமும் பயங்கரமுமான காட்சிகளைப் பார்த்துக்கொண்டே நாம் ராமராவண ரணகளத்துக்குப் போய்ச் சேர்ந்து கடைசியில் ராமன் வெற்றி பெறுவதைக் காண்கிறோம். இடையிடையே சில கிளைக் கதைகளும் நம் மனத்தைக் கவராமல் இல்லை. கம்பராமாய ணத்திலோ, ராமாயணத்தின் மத்திய பாகமாகிய ஆரணிய காண்டம் மிகவும் அழகாக அமைந்திருக்கிறது. வால்மீகியின் ரசனையைக் கம்பன் மாற்றியிருக்கிற இடங்களெல்லாம் ரஸக்ஞர்களுக்கு நல் விருந்தாக இருப்பதை வ. வெ. சு. ஐயரின் 'கம்பராமாயண ரசனை' என்ற கட்டுரையைப் படித்தோர் அறிந்தே இருப்பார்கள்.

கம்பன் சித்திரித்த மாரீச–ராவண சம்வாதம் ஹாஸ்ய ரஸத்துக்கு ஓர் இணையில்லா உதாரணம். அதற்கு ஏறக்குறைய சமமான ஹாஸ்யத்தை நாம் துளசியின் நாரத சரித்திரப் பிரசங்கத்தில் காண முடியும்.

சுந்தர காண்டத்தில் சென்று சீதா– ராம விரஹம் உச்ச ஸ்தானத்தை அடைந்தவிடுகிறது. சீதையை கண்டு வந்த அநுமன், " இற்பிறப்பு என்பது ஒன்றும், இரும்பொறை என்பது ஒன்றும், கற்பு எனும் பெயரது ஒன்றும் களிநடம் புரியக் கண்டேன்" என்று செய்தியை இராமனுக்கு அறிவிக்கிறான்.

யுத்த காண்டத்தில் துளசிதாஸர் புராணங் களிலிருந்து அஹிராவணன் என்ற மயில் ராவணனின் கதையையும் சேர்த்துக்கொள்ளுகிறார். அஹிராவணன் ராமலெஷ்மணர்களை இலங்கை யினின்றும் பாதாளத்துக்கு எடுத்துச் சென்றுவிட அநுமான் சென்று அவர்களை மீட்டு வருகிறார்.

லஷ்மணன் சக்தியினால் அடிபட்டு மூர்ச்சையாகிறார். அநுமான் சஞ்சீவினி மலையை எடுத்து வரும்போது வழியிலே நந்திக் கிராமத்தில் ஆகாயத்தில் நின்றவாறே பரதனைச் சந்திக்கிறார். "அநுமான் மலையைத் தூக்கிக் கொண்டு ராமனிடம் வந்தார். கூடவே பரதனின் க்ஷேம சமாசாரத்தையும் எடுத்துக் கொண்டு " என்கிறார் துளசி.

துளசிதாஸரின் பக்தி மார்க்கம் ஞானத்தையும் யோகத்தையும் தன் உள்ளே அடக்கிக் கொண்டிருக்கிறது. சாதகப் பறவை, மழையைப் பொழிவித்து உலகத்துக்கு சுபீக்ஷத்தை தரும் மேக மண்டலத்தைக் காண நோற்பது போல, அவரும் ராமபிரானின் லோகரஞ்ஜகமான திருவுருவத்தைக் காண விரும்புகிறார். மனித வாழ்க்கையின் எல்லா நிலைகளையும் அவர் தமது மானஸத்திலே விளக்குகிறார். பாலகாண்டத்தில் ஆனந்தம் தன் எல்லை வரையிலும் போய் நிற்கின்றது. அயோத்தியா காண்டத்தில் இல்லற வாழ்க்கையில் தோன்றும் சிக்கலான பிரச்சினைகள் விவரிக்கப்படுகின்றன.

அதற்குப் பின் மூன்று காண்டங்களில் கர்மயோகம், உழைப்பு ஆகியவைகளும், யுத்த காண்டத்திலும் உத்தரகாண்டத்திலும் செய்கைகளின் கடைசிப்படி, வெற்றி, ஐஸ்வரியம் ஆகியவைகளும் சித்திரிக்கப் பட்டிருக்கின்றன. பக்தி செய்வதால் நற்பயன் எய்தலாம். நற்கதி கிடைக்கும் என்று நினைத்துப் பக்தி செய்வதே தவறு. பக்தியின் ஆனந்தம் ஒன்றுதான் பக்தனாவதற்குப் பயன். வாழ்நாள் முழுவதும், தான் விரும்பிய தெய்வத்தைப் பலனைக் கருதாது வழிபடுவதே பக்தனுடைய வேலை. துளசி தாஸர் உண்மையான அன்புக்கு உதாரணமாக அடிக்கடி சாதகப் பறவையைத்தான் எடுத்துக் காட்டுகிறார். ஜடாயு மற்றோர் இணையற்ற உதாரணம்.

துளசிதாஸர் எப்போதும் ராமனை நாராயண னாகக் காண்கிறார்.

ஆதலால் அவர் தம் ராமாயணத்தைப் பக்தியைப் பரப்ப ஓர் உயர்ந்த சாதனமாகச் செய்துகொண்டார். அவர் வால்மீகி ராமாயணத்தைத் தவிர அத்தியாத்ம ராமாயணம், மகா ராமாயணம், பாகவதம், ஹநுமன் நாடகம் பிரசன்ன ராகவம், உத்தர ராமசரிதம் முதலிய பல நூல்களிலிருந்தும் கருத்துகளை எல்லாம் திரட்டித் தம் நூலிலே அவைகளுக்கு புதிய உருக் கொடுத்திருக்கிறார்.

துளசிதாஸர் பக்தரும் கவியும் மாத்திரமல்ல, அவருக்கு தாவர சாஸ்திரம் தெரியும், பிராணி சாஸ்திரத்திலே நிபுணர். கணக்கிலே தேர்ந்தவர். ஜோதிடமும் சங்கீதமும்கூட அவருக்குத் தெரியும். வர்ணனைகளில் அவர் கம்பருக்கு சளைத்தவரல்லர். ஜனகபுரி, அயோத்தி, இலங்கை முதலிய பட்டணங் களையும் யுத்த ஸந்நாகங்களையும், திருமணச் சடங்குகளையும் அவர் வெகு நேர்த்தியாக வருணித்திருக்கிறார். அவர் ராமாயணத்தைக் காட்டிலும் அதிகமாகத் தமது கீதாவலி என்ற நூலில் இராமனுடைய குழந்தைப் பருவத்தை மிகவும் ரசமாக வர்ணித்திருக்கிறார்.

கீதாவலியில் மற்றோர் ஆழகான காட்சி.

ஜடாயு ராமனுடைய நிஷ்காம பக்தன். ஓர் உண்மையான அன்பனைப் போலவே, அவன் இராமனுக்கு எதிர்பாராமல் ஓர் ஆபத்தை விலக்க முயன்று உயிர் நீத்தான். சாகும் தருணத்திலும் அவனுக்கு ஒரே ஆவல்தானிருந்தது. ராமனுக்கு எவ்விதமேனும் சீதையின் சமாசாரத்தைச் சொல்லிவிட்டு இறக்கவேண்டும் என்பதே அந்த ஆவல். அப்போதும் அவன் தன் இனத்தாரைப்பற்றி நினைக்கவில்லை. தன் படுகாயங்களைப்பற்றி நினைக்கவில்லை. தவவேடம் புரிந்த ராமனை ஒரு முறை தரிசித்துச் சீதையின் செய்தியை அவனுக்குச் சொல்லி விடவேண்டும் என்பதிலேதான் அவன் நினைப்பெல்லாம் ராமனுக்குத் தான் அவன்மீது என்ன அன்பு! ராமன் அவனைச் சந்தித்து அவன் பேச்சைக் கேட்கிறான். உடனே அவனைத் தன் மடிமீது வைத்துக்கொண்டு "பட்சிராஜனே, நான் தந்தையை இழந்தவன், தாங்கள் இன்னும் சில காலம் உயிருடன் இருந்து என்தொண்டை ஏற்றுக்கொண்டு எனக்குத் தந்தையின்பத்தைத் தரலாகாதா?" என்கிறான்.

இராமாயணத்தில் ஒருபுறம் சகோதரனுக்காக ராஜ்யத்தைத் துறக்கும் பரதனுடைய சித்திரமும், மறுபுறத்தில் இராஜ்யத்துக்காகச் சகோதரனைக் கொன்ற சுக்ரீவ, விபீஷணர்களின் சித்திரங்களும் இருக்கின்றன. துளசிதாஸர் இந்த இரண்டு விதச் சித்திரங்களையும் ஒருங்கே சேர்த்து ஒரு காட்சியை ஸ்ருஷ்டித்திருக்கிறார். தமது தோஹாவலீ என்ற நூலில், இலங்கையிலிருந்து திரும்பி வந்தவுடன் ராமன் பரதனைத் தன் தோழர்களுக்கு அறிமுகம் செய்விக்கிறான். பரதன் அவர்களைத் தழுவிக்கொள்ள முன்வருகிறான். ஆனால், சகோதரத் துரோகம் செய்த அவர்கள் பரதனின் தூய உடலுடன் தமது மாசு படிந்த உடல்களைத் தழுவ இடங்கொடுக்கவில்லை. அவர்களுடைய மனநிலையைத் துளசி எவ்வளவு தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுகிறார், பாருங்கள்.

பணமும் மனச்சந்தோஷமும் பெற்றுத் திரும்பிய திருடன் ஒருவன், தான் வரும் வழியில் இடுப்பில் கை வைப்பதுபோல் பாசாங்கு செய்து லேசாகப் பணத்தைத் தொட்டுப் பார்த்துக்கொள்வதுபோல், சுக்ரீவனும் விபீஷணனும் பரதனைச் சந்தித்தார்கள். துளசிதாஸர் மனோ லோகத்தின் ஒவ்வொரு மூலை முடுக்கையும் ஆராய்ந்திருக்கிறார். மனத்தின் எந்த விஷயமும் எந்த அலையும் அவருக்குப் புறம்பானதல்ல. கம்பன் சுக்ரீவ விபீஷணர்களின் ராஜ்ய ஆசையைக் குறிப்பிட்டிருந்த போதிலும், அவர்களை உன்னத சிருஷ்டிகளாக்கி யிருக்கிறார். இருவரிலும் விபீஷணரை உலகத்திற்கு வழிகாட்டியான ஒரு பெரிய சத்தியாக்ரஹியாக அமைத்திருக்கிறார். கூடப்பிறந்த இரு சகோதரரைக் கொல்ல உதவியதுடன், வீர மைந்தன் இந்திரஜித்தைக் கொல்லவும் அவர் உதவி செய்தார். இந்திரஜித்தின்

வெட்டுண்ட தலையைக் கண்டதும் இராமன், "லெஷ்மனா, இது உன் வெற்றியல்ல, அநுமன் வெற்றியல்ல, வேறு யார் வெற்றியுமல்ல, வீடணன் தந்த வெற்றி ஈது" என்று கூறினான் என்றால், அதர்மத்தைக் கண்டு அஞ்சி விலகிடாமல் தர்மத்திற்குச் சகல தியாகங்களையும் விபீஷணரைப் போலவே செய்ய வேண்டுமென்பதுதானே இராமன் கருத்து.

கம்பன் தம் காலத்துக்கு முன்பே ஆழ்வார்களும், நாயன்மார்களும் செப்பனிட்டு வைத்த வழியிலே சென்று, வடமொழிச் சொற்கள் பலவற்றையும் தமக்கு உரியனவாக்கிக்கொண்டு, வால்மீகியின் இராமகதையை அடிப்படையாக வைத்துக்கொண்டு ஒரு சொல் லோவியமாக, ஒரு கலைக்கோபுரமாக நிருமித் திருக்கிறார். கம்பனின் ராமசரிதையிலும் நீதி வாக்கியங்கள் இல்லாமல் இல்லை. ஆனால் அவைகள் கதைகளின் சந்தர்ப்பங்களுக்கு அழகு தருவனவாகவும் மிகச் சுருக்கமாகவும் பொருத்தப்பட்டிருக்கின்றன.

மாவலி வார்த்த நறுப்புனல் கையில் தீண்டியவுடனே, வாமனன் உயர்ந்தவர்க்குதவிய உதவியொப்பவே ஓங்கி வளர்ந்து திரிவிக்கிரமனாகி விடுகிறான். வீடணனிடத்தில் முதலில் ஐயங் கொண்ட சுக்ரீவனையே, அவனைத் தன்னிடம் அழைத்துவரச் சொல்லுகிறான் இராமன். விபீடணன் சுக்கிரீவன் வரவையறிந்து அவனை எதிர்கொண்டு செல்கிறான்.

கம்பனைப் பூரணமாக அறிவதற்கு வழி இது தான். ஆறுகளும், சுனைகளும், அருவிகளும், மலைகளும், வனங்களும், வனாந்தரங்களும் நிரம்பிய ஒரு நாட்டை ஆகாய விமானத்தின் மூலம் சுற்றுவதுபோல் நாம் நம் ஹ்ருதய விமானத்திலிருந்து வால்மீகியின் ராமாயண தேசத்திலே ஸஞ்சரித்துவிட்டு, துளசியின் ராமசரிதமானஸமாகிய மானத வாவியிலே இறங்கி இளைப்புத்தீர நன்னீராடி அந்தக் குளிர்ச்சி பொருந்திய இன்பத்தை உணர்ந்த பின்பு, கம்பனின் கவிதைச் சோலையில் புகுந்தோமாயின் அப்போதுதான் அச்சோலையிலுள்ள பழங்களின் இனிமையையும் அருமையையும் நம்மால் பூரணமாய் அனுபவிக்க முடியும்.

---

*நன்றி : கம்பன் மணிமலர், – காரைக்குடி கம்பன் கழகம்.*

*சம்பு, அந் நாள், தன் உமை செவி சாற்று பூங்*
*கொம்பு அனாள்தன் கொழுநன் இராமப் பேர்*
*பம்ப நாள் தழைக்கும் கதை பாச் செய்த*
*கம்பநாடன் கழல் தலையில் கொள்வாம்.*

*இம்பரும் உம்பர்தாமும் ஏத்திய இராம காதை*
*தம்பமாமுத்தி சேர்தல் சத்தியம் சத்தியம்மே;*
*அம்பரம்தன்னில் மேவும் ஆதித்தன் புதல்வன் ஞானக்*
*கம்பன் செங் கமல பாதம் கருத்துற இருத்துவாமே.*

# கம்பராமாயணமும் ஜைனராமாயணமும்

பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை

கவிதையை அனுபவிப்பதற்குக் கலையுணர்ச்சி நிரம்ப இருத்தல் வேண்டும். மக்களுக்கு இன்ப மூட்டுதலொன்றே அதன் தனிப்பெரு நோக்கம். மகிழ்ச்சியால் உளம் நெகிழ்ந்த நிலையில், உயர்ந்த லட்சியங்களைப் பாராட்டவும் அவற்றை வாழ்வில் மேற்கொள்ளவும் செய்தல் இயலும். ஆனால் இன்புறுத்துதல் மாத்திரமே கவிதையின் நோக்கமாகக் கருதத்தகும். இதைத் தவிர, வேறு நோக்கம் இருத்தல் கூடாது. அதிலும் சமய நோக்கம் கூடவே கூடாது. இன்ப நோக்கத்திற்கு அனுகூலமாக இருப்பதுதான் கலையுணர்ச்சி.

## வால்மீகி

வால்மீகி உயர்ந்த லட்சியங்களை முன்னிறுத்தி அவை விளங்கும் அழகிய சரிதமொன்றினை இயற்றினர். இதுவே இராமாயணம். ஆனால் இராம சரிதத் தொடக்கம் இவ்வாறிருப்பினும், பின்னர், கால அடைவில், சமய நூலாகவும் பக்தி நூலாகவும் பரிணமித்துவிட்டது. இராமன் மனுஷ்ய நிலை கடந்து தெய்வமாகிவிட்டான். இம்மாறுதலுக்கு ஏற்ப, பிற பேதகதிகளையும் இராமாயணம் பெற்றுவிட்டது. எனினும், கவிஞரின் கவித்துவ மேம்பாட்டினாலே, சரிதத்தின் அழகு குறையவில்லை. கலையுணர்ச்சியும் குறைந்துவிடவில்லை. மக்களை இன்புறுத்தும் பயனும் நிரம்பாமற் போகவில்லை.

## கம்பன்

வால்மீகியையே கம்பன் பெரும்பாலும் பின்பற்றுகிறான். கம்பனைப் படிக்கும்போது அவன் வைஷ்ணவன் என்ற எண்ணமே நமது மனத்தில் தோன்றுவதில்லை. கலையுணர்ச்சியைத்தான் அவனிடம் காண்கிறோம். தனது சமயத்தையும் கலைமயமாகச் செய்துவிடுகிறான். சமயத்தை அதன் தனிப்பட்ட நிலையில் கலையின் எல்லைப் புறத்திலேயே நிறுத்தி வைத்திருக்கிறான். இராமன் முதலிய உத்தம பாத்திரங்களைப் புதிதாகச் சிருஷ்டித்துள்ளான். அவனது தமிழைப் படித்து நைந்து நைந்து உருகும்படி, தமிழுக்கு ஏற்றமளித்திருக்கிறான். தமிழ்நாட்டினர்க்கே ஒரு தனிப்பட்ட கௌரவத்தை அவன் தந்துவிட்டான். அவனது புகழ் வானளாவிப் பரந்து நிற்கிறது.

## அத்யாத்ம இராமாயணம்

மதத்தை முக்கிய நோக்கமாகக் கொண்ட இராமாயண காவியங்களும் பலவாயுள்ளன. 14 ஆம் நூற்றாண்டளவில் அகஸ்தியர் இயற்றியதாகச் சொல்லப்படும் அத்யாத்ம இராமாயணம் இத்தகையதே. இதில் பக்திச் சுவைதான் மிகுந்து காணப்படுவது. கலைச் சுவையன்று. இந்த இராமாயணத்தைப் பின்பற்றியே மலையாளத்தில் எழுத்தச்சனும், ஹிந்தியில் துளஸிதாஸரும் தங்கள் இராமாயணத்தை இயற்றியுள்ளார்கள். மிகப் பூர்வகாலத்திலும் இவ்வகை இராமாயணங்கள் தோன்றின. பௌத்த– இராமாயணம் புத்த ஜாதகக் கதைகளிலிருந்து புலப்படுவதாகும். பௌத்த மதக் கொள்கைகள் இதில் காணப்படுவதோடு வேறு பல செய்திகளும் உள்ளன. அவற்றுள் ஒன்று நமக்கு வினோதமாகத் தோன்றும். புத்தர் சாக்கிய மரபைச் சார்ந்தவர். அம்மரபில் உடன் பிறந்த ஆணும் பெண்ணும் மணந்து கொள்ளுதல் வழக்கம். இவ்வழக்கினைப் பின்பற்றிச் சீதையும் இராமனும் உடன் பிறந்தவர்க ளென்று பௌத்த இராமாயணம் கூறும். ஜைன இராமாயணத்திலும் மத நோக்கமே மேம்பட்டு நிற்பது. ஜைனர்களது கொள்கைகளும் புராண வரலாறுகளும் இதிற் காணப்படுகின்றன.

## ஜைன இராமாயணம்

ஜைன இராமாயணத்தில் தசரதன் காசி அரசன் என்றும் பிறகு அயோத்திக்கு அரசனானதாகவும் சொல்லப்படுகிறது. ஆகவே ஜைனர்கள் கதையை வேறுபடுத்துத் தமிழில் இராமாயணம் ஒன்று இயற்றியுள்ளார்கள் என ஊகிக்கலாம். ஏறத்தாழக் கம்பன் காலத்தில், கன்னட மொழியில் ஜைனர்கள் ஓர் இராமசரிதம் இயற்றியுள்ளார்கள். நாகச்சந்திரன் அல்லது அபிநவபம்பா என்ற கவிஞன் சுமார் கி.பி. 1100– இல் இயற்றிய பம்பா இராமாயணம் என்று வழங்குகிற

இராமச்சந்திர சரித புராணம் மிகப் பிரசித்தமானதே. இப் புராணத்தோ டொப்ப, ஜைனர்கள் தமிழிலும் ஓர் இராம சரிதத்தை இயற்றியமை ஸ்ரீபுராணத்தால் நமக்கு விளங்குகிறது. பிற்பட்டெழுந்த ஸ்ரீபுராணத்தில் வரும் இராம சரிதப் பகுதியிலே ஒரு சில செய்யுட்கள் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. இவை இப் பழைய ஜைன இராமாயணத்தைச் சார்ந்தன என்று கொள்ளலாம். அச்செய்யுட்களில் சில வருமாறு.

*உருமிடிப் புண்ட அருமணி நாகமெனத்*
*திருமணி நிலத்திற் றேவி சோர்ந்து*
*செய்த பாவையின் மெய்திரி பின்றி*
*மையலி னுயிர்த்து மடிந்துடன் கிடப்ப*
*விம்முறு துயரிற் கொம்மென வுயிரா*

*விளைந்த தெல்லாம் உளங்கொள வுணரா*
*எழுதுகண் ணருவிய ளினைந்தினைந் திரங்கலின்*
*ஒழுகுபு சுழிய முழுகிய மேனியள்*
*அழுதழு தலறி யாவோ வென்னும்*
*இணைபிரி யன்றிலி னேங்கி நீங்காத்*

*துணைவனை நினைந்து சோகமி தூர்தர*
*வான்பழி சுமந்துநின் வனமலர்ச் சேவடி*
*யான்பிரிந் தேதில ளிடவயின் இடர்ப்பட*
*மான்பின் போகிய மன்னவ னேயெனும்;*
*மாயோன் செய்த மாய மானிடை*

*மாயவன் செய்த மகிழ்ச்சி கண்டருளி*
*ஆவதொன் றின்றி யதன்வழி யொழுகிய*
*நாயக னேயெனை நணுகாய் வந்தெனும்*
*கொற்றவன் துணையே குலவிளங் களிறே*
*செற்றலர்ச் செருக்குஞ் சினத்தி யுருமே*

*மைத்துன மலையே மன்னவனே யெனுங்:*
*நாற்கடற் பரந்தன வேற்படைத் தானையொடு*
*கூற்றழ் மொய்ம்பில் கொடுஞ்சிலைத் தடக்கைத்*
*தம்பித் துணைவனிற் றனிப்படப் பிரிந்திட்*
*டெம்பெரு மகனை யென்வயினிறுவி*

*மாற்றவன் செய்த மாய மானினை*
*நோற்றி லாதே னோக்கிய நோக்கின்*
*அருவினை யேனை யருளிய மனத்தால்*
*மருவிய மாய வுருவுதரற் கெழுந்த*
*வரிசிலைக் குரிசிலை மன்னர் பெருமானை*

*மான்மறி தொடர்ந்துசெல் வாளரி போலக்*
*கானெரி விடுத்துக் கடுவனம் புகுந்து*
*மாயப் புணர்ப்பின் மன்னனை நினைத்து*
*ஆயமுந் தாயருந் தோழியு மின்றியோர்*
*தொதும லாளன் விதிவழி யொழுகி*

*இடனிடை யிட்ட செய்மைத் தன்றியும்*
*கடலிடை யிட்ட காப்பிற் றாகிய*
*இலங்கை மூதூ ரிடுசிறைப் பட்டு*
*மலங்கு விழிமான் வழிதேர்ந் தருளிய*
*மன்னவற் குற்றதும் இன்னதென் றறியாது*

*இன்னற் படவெனை யின்னண மிழைத்த*
*வினையே வலிதே விளிதரல் புரிவாய்*
*மனுவே யனையனை வார ணாசியில்*
*தனியொரு மான்பிணை தன்னின் விடுத்தே*
*எனையுந் தனியே யிவணிட் டதுவே*

*சுழல்விழித் தறுகட் பேழ்வாய்ச்*
*சுடர்க்கைவேற் றிரண்ட தோளாய்*
*உழைவிழி யார் சொற் கொண்டார்*
*உறுவர்வெந் துயர மென்னும்*
*பழமொழி யதனை யோர்ந்தும்*
*பாவியேன் சொல்லைக் கேளா*
*உழையின் பின் போன வேந்தே*
*உனக்குற்ற தறிகி லேனே.*

*கோம்பி கண்டு குலுங்குபு கலங்காச்*
*சாம்பிய மஞ்ஞையிற் சாய்ந்தனள் கிடப்ப.*

சீதையின் சோகத்தையுணர்த்தும் இச்செய்யுட்களை நோக்கினால் இவ் இராமாயண நூல் மிகவும் சுவைபட அமைந்ததாம் என்பது விளங்கும். ஸ்ரீபுராண ஆசிரியர் கையாளும் நடைக்கும் இச்செய்யுள் நடைக்கும் பெரிதும் வேற்றுமை காணப்படுதலினாலே, இவை மேற்கோட் செய்யுள் எனவே பெரும்பாலும் கொள்ளத்தக்கன.

## சரித வேறுபாடு

ஜைன இராமாயண கதை நமது வைதிக இராமாயணச் சரித்திரத்திலிருந்து மிகவும் வேறுபட்டமை மேலே குறிக்கப்பட்டது. தசரதருக்கு இராமன் இலட்சுமணன் பரதன் சத்துருக்கனன் என்ற நான்கு புதல்வர் இருந்தனர். ஜனகர் ஓர் யாகம் செய்தனர். அதற்கு இராமனை அனுப்புமாறு தசரதரை வேண்டினர். அவ்வாறே அனுப்ப, இராமன் அங்குச் சென்று சீதையை மணந்தனன். இவர்களைக் காசியில் வாழ்ந்துவரும்படி தசரதர் நியமித்தார். ஒருமுறை வனத்தில் விளையாடி இன்புறுதற் பொருட்டு இராமன், இலட்சுமணன், சீதை என்ற மூவரும் சித்திரகூடம் சென்று அங்குத் தங்கியிருந்தனர். அப்பொழுது நாரதர் அங்கு வர நேர்ந்தது. இராமன் அவர் வரவை அறியாமையினாலே அவருக்கு வந்தனை வழிபாடாற்றாது இருந்தனன். நாரதர் மிகவும் கோபித்துச் சென்று இராவணனை அடைந்து அவனக்குச் சீதையின் பேரழகை எடுத்துக் கூறினர்.

இராவணன் தாங்கொணாத காமங் கொண்டு மாரீசனோடு சித்திரகூடம் போய் வஞ்சனையாகச் சீதையை எடுத்துச் சென்றனன். அப்பொழுது அயோத்தியில் நிகழ்ந்த உற்பாதத்தால் தசரதர் முற்கூறிய செய்தியை உணர்ந்து தூதர்கள் மூலம் ஆறுதல் சொல்லியனுப்பினர். கௌசல்யை, பரதன் முதலியவர்களும் சுக்கிரீவன், அனுமஹான் (அனுமான்) முதலிய வித்தியாதரர்களும் இராமனிடம் வந்து சேர்ந்தனர். அனுமஹான் சீதையைக் கண்டு வந்து இராமனிடம் தெரிவித்தனன். பின்னர் இராமன் அநுமஹானைத் தூதாக அனுப்பினன். வாலி தன்னைச் சேர்த்துக் கொள்ளும்படி இராமனிடம் வேண்ட, இராமன் மறுத்துவிட்டனன். வாலிக்கும் சுக்ரீவனுக்கும் போர் நிகழ்ந்தது. இப்போர் நிகழ்ச்சியில் இலட்சுமணன் வாலியைக் கொன்றுவிட்டான். விபீஷணன் இராமனிடம் அடைக்கலம் புகுந்தனன். பின்னர் இராவணன் முதலிய வித்தியாதரர்களுக்கும் இராமன் முதலியோர்களுக்கும் பெரும்போர் நிகழ்ந்தது. இப்போரில் இலட்சுமணனால் இராவணன் முதலியோர் அழிவெய்துகின்றனர். இறுதியில் இராமன் தீக்ஷை பெற்று மோஷமடைகின்றான். அவ்வாறே அனுமஹான் முதலியோரும் தீக்ஷை பெற்றனர். ஆனால் இலட்சுமணன் மாத்திரம் நரகம் அடைந்தனன்.

## ஸ்ரீபுராணம்

இச்சரித வேறுபாடு ஸ்ரீபுராணத்தில் காணப்படுகின்றது. இந்நெறியிலேயே ஸ்ரீபுராணத்திற்கு முந்திய ஜைன இராமாயணத்திலும்[1] கதை சென்றது என நாம் ஊகிக்கலாம். இதில் வரும் செய்யுட்கள் சுவையுடையனவாயிருத்தல் வேண்டும் என்று கூறினேன். ஆனால், கதை அமைப்பில் ஜைன இராமாயணம் மிகவும் கீழ்ப்பட்ட தரத்தது எனவே நாம் துணிதல் வேண்டும்.

## விநோதச் செய்திகள்

பழைய ஜைன – இராமாயணங்களிலுள்ள சில செய்திகள் நமக்கு விநோதமாகத் தோன்றும். குரக்கினத்தவர்கள் என்றது வித்தியாதரர்களை. இவர்களது கொடி முதலியவற்றில் குரங்கு அடையாளம் இருந்தனவாம். அரக்கர்கள் வித்தியாதர மரபைச் சார்ந்தவர்கள். இராவணன் இந்த அரக்கர்களின் தலைவன். இவன் தங்கையின் பெயர் சந்த்ரமுகா; இவனது சகோதரர்கள் பானுகர்ணனும் விபீஷணனும். இராவணன் கழுத்தில் இவனது அன்னை அணிவித்த முத்து மாலையிலே இவனது முகம் ஒன்பது முறை பிரதிபலித்ததால், இயற்கைத் தலையையும் உடனெண்ணி இவனைத் தசமுகன் என்று அழைத்தனர். இவன் ஒரு ஜினர் பக்தன். இலங்கையில் சிறைவைக்கப்பட்ட இந்திரன் தனது புத்திரனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்துப் பின் ஜைனத்துறவியாகி முத்தி எய்தினான். இராவணன் மேருவின் மீதுள்ள ஜினர் கோயில்களில் வழிபாடின்றி அனந்த வீரியரிடத்தில் தர்மோபதேசம் பெற்றுக் கேவல ஞானம் பெற்றான். இந்த உபதேசங்களால் அனுமானும் ஜைன மதத்தைத் தழுவினான். இவனுக்கு இராவணன் உதவியால் ஆயிரம் மனைவியர் கிடைத்தனர். தசரதருக்கு மூத்த சகோதரர் அநந்தரதர். அநந்தரதர் துறவு பூண்டதும், தசரதர் அரசாட்சி புரியத் தொடங்கினர். இவரது பட்டமகிஷி அபராஜிதை ( கோசலை), சீதை பூமியினின்றும் பிறந்தவலல்லள்; இயற்கை நெறியில் ஜனகனுக்குப் பிறந்தவளே. தனக்குப் போரில் உதவி புரிந்தது பற்றி, ஜனகன் சீதையை இராமனுக்கு மணம் புரிவிக்க இசைந்தான். ஆனால் வித்தியாதரர்கள் இதற்கு இசையவில்லை. இவர்கள் வீரிய சுல்கமாக வில்லைக் கொணர்ந்தார்கள். இராவணவதத்தின் பின் இராமன் கேவல ஞானம் பெற்று நிர்வாணம் அடைந்தனன்.

அனுமான் அணுவாகவும் மஹான் ஆகவும் உருவெடுக்க வல்லவனாதலால், அப் பெயர் பெற்றான். அணுமஹான் என்பதே அனுமான் எனத் திரிந்தது!

கம்ப– இராமாயணம் சீதையை யன்றி வேறு பெண்களை இராமன் ‘ சிந்தையாலும் தொடேன்’ என்றதாகக் கூறும். இதற்கு மாறாக, ஒரு ஜைன– இராமாயணம் அவன் பதினாயிரம் பெண்களை மணந்துகொண்டதாகக் கதை அமைந்துள்ளது.

மத நோக்கம் மேற்பட்டால் கலையுணர்ச்சியும் கவிதையுணர்ச்சியும் முற்றும் மறைந்துவிடும்.

---

*1. மகாவீரர் நிர்வாணமாகி 530 ஆண்டுகட்குப் பின்னர், விமல சூரி என்பவர் ‘ பவும சரிய’ ( பத்ம சரித) என்ற இராம சரிதத்தைப் பிராகிருதத்தில் இயற்றினர். இதனைத் தழுவி ரவிஷேணர் கி.பி. 678–ல் ‘ பத்ம புராணம் ’ என்ற இராம சரிதத்தை வட மொழியில் இயற்றினர். பின்னர் உத்தர புராணம் 68 ஆம் பருவத்தில் இச்சரிதம் கூறப்படுகிறது. இது 9 ஆம் நூற்றாண்டில் ஜினசேனரது சிஷ்யர் குணபத்திரரால் இயற்றப்பட்டது. 12 ஆம் நூற்றாண்டில் ஹேமச்சந்திரர் தமது த்ரிஷஷ்டி சலாகா புருஷ சரித்திரம் 7 ஆம் பர்வத்தில் ஜைன– இராமாயணத்தை அமைத்திருக்கின்றனர். இவையிரண்டும் பாத்திரப் பெயர்கள் பற்றிய அளவில் நமது இராமாயணத்தைத் தழுவியுள்ளன. இறுதியாக, கி.பி. 1596 இல் தேவ விஜய கணி என்பவர் இராம சரிதத்தை வடமொழியில் வசனமாக எழுதினர். (History of Indian Literature Vol. 2 PP. 489–495)*

---

*நன்றி : "தமிழர் பண்பாடு – கம்பர் காவியம்"*

# கவிச்சக்கரவர்த்திகள் இருவர்

-திரு. ந. சபாரத்தினம்- முன்னாள் அதிபர்- யாழ்- இந்துக்கல்லூரி-

சக்கரவர்த்தி என்றபதம் இன்று வெறுப்பைத் தேடியிருக்கும் "ஏகாதிபத்தியம்" என்ற வெடுக்குடையது. இருப்பினும் கவி, உலகம் 'தெய்வம் உண்டென்றிரு, ஒன்றென்றிரு' என்ற மணிவாசகம் போல் ஒருமையுடையதால் கவிச்சக்கரவர்த்திகள் கால வெள்ளத்தில் பேரரசர்கள் அழிந்து போவது போலும் தன்மையிலர்.

ஆங்கில மஹகாவி ஷேக்ஸ்பியரைக் குறிப்பிடும் போது ஒக்ஸ்போர்ட் பிரபல ஆராய்ச்சியாளர் மிடில்டன்மறி இவ்வாறு கூறுகிறார்.

" மனிதவர்க்கம் கண்ட புலவர்களில் ஷேக்ஸ்பியரே முதன்மை பெற்று விளங்குகிறார்." பேராசிரியரின் கூற்று ஆங்கில இலக்கியத்தை மையமாகக் கொண்டதென்று இலகுவில் மட்டம் தட்ட முடியாது. உலக இலக்கியமென்ற மேல் தட்டில் எந்த மொழியில் எழுதப்பட்ட இலக்கியமானாலும் பேரறிஞர், ஆராய்ச்சி நிபுணர் கவனத்துக்குள்ளாகும். ஆனால் அத்தகைய பிரமாண்டமான ஆராய்ச்சியிலும் மதிப்புக்குரியவர்கள் தவறிவிடுவது சாதாரணம்.

***'யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்'***

என்ற பாரதியாரின் கூற்றை தமிழ் ஆராய்ச்சியாளர் அனைத்துலகிலும் ஏற்றுக் கொண்டனர். யாமறிந்த புலவர்களில் கம்பர், ஷேக்ஸ்பியருக்குரிய இலக்கிய ஆராய்ச்சிக்குரியவராகிறார். ஆங்கில இலக்கியத் துக்குள்ள இடம், பொருள், ஏவல் போன்ற செல்வாக்கு மிகத் தொன்மையான தமிழுக்கு இன்றும் இல்லை.

வரலாறு மரபு, சமய, சமூக, பண்பாடு போன்ற வேறுபாடுகள் உண்டானபோதும் இலக்கியஉலகம், குறிப்பாகக் கவிதைஉலகம் ஒருமைப்பாடுடையது. மேற்கும் கிழக்கும் என்ற பெரும் பிரிவு என்றுமே இருக்கும். இருப்பினும் இன்றும் அணுக்குண்டின் ஆபத்தால் பெரிதும் பேசப்படும் 'ஒரு உலகம்' உருவாக உதவவல்லது இந்த இலக்கிய ஒருமைப்பாடு. ஞானம் உதயமானது ஆசியாக்கண்டத்தில். விஞ்ஞானம் செழிப்படைந்தது மேற்கிந்திய நாடுகளில் என்ற பழைய பல்லவி தானும் இன்று மாற்றம் கண்டிருக்கிறது.

அறநெறிக்கு உரித்தான பாரதம் இன்று 'அக்கினி' அஸ்திரத்தில், பழைய இதிகாசப் போர் முறையை எட்டிப்பிடிக்கிறது. அமெரிக்க ஆங்கில விஞ்ஞானிகள் சிலராவது தங்கள் ஆராய்ச்சிகளில் காணப்படும் பெருவெளிபற்றி முறையிடுகின்றனர். இந்த நூற்றாண்டின் விஞ்ஞான மேதை ஐன்ஸ்டைன் உலகனைத்தையும் ஆட்டி அசைக்கும் சக்தி ஒன்று இருப்பதான சிந்தனையை தன்னுடைய உணர்வு தூண்டுகிற தென்கிறார். இக்காலத்தில் தான்கண்ட மாமனிதரே அதற்குக் காரணம் என்கிறார். குறிப்பாக மகாத்மாகாந்தி.

எனவே நாம் தர்மம் அதர்மம் என்று எந்த மனிதனையோ, நாட்டையோ, கண்டத்தையோ கூறுபோட இயலாது.

உலகம் கண்ட கவிச்சக்கரவர்த்திகள் ஷேக்ஸ்பியர், கம்பன் என்ற இருவரையும் படித்து ஆய்வதற்கு இக்கால நிலை பொருத்தமாகும். தெய்வத்துக்கு அடுத்த படியில் முனிவர்கள், புலவர்கள் இடம் பெற்றாலும் அவர்கள் மனிதர்களே. அவர்களின் படைப்புக்கள் பூசைக்குரிய தானாலும் மக்கள் விளங்கிப்படித்து ஆய்ந்தறிய வேண்டிய பண்டங்களே.

குறைநிறைகள் சீர்தூக்கி இக்காலத்துக்கேற்ற விளக்கம் தேடுவது இன்றியமையாதது.

மஹாகவிகளின் படைப்புகள் காலங்கடந்தவை யானாலும், அவற்றை இன்றைய காலத்துக்கிசைய ஆய்ந்தறியும் படிப்புமுறை விருத்தியடைய வேண்டும். பழைய பல்லவிகளைச் சற்றே ஒதுக்கிப், புதிய பார்வையில் படித்தால் சிறந்த கவிதைகள் எங்கள் வாழ்வை வளமாக்கும். வரலாறு வேறு, புராணம் வேறு,

இதிகாசம் வேறு. இருப்பினும் இலக்கியநயம் கவிதை நயம் காண்பது தனிக்கலை. அதுவே மனிதப்பண்பை வளர்க்க வல்லது.

சிறந்த கவிஞன் யார்? புலவனின் உள்ளத்தில் உதயமாகும் கவிதை எத்தகையது? புகழ் பெற்ற பேரறிஞர் எ.சி. பிராட்லி ஒக்ஸ்போர்டில் ஆற்றிய உரையில் கவிதைபற்றி பரந்த கருத்தை விளக்கியிருக்கிறார்.

'சிறந்த கவிதை என்பதற்கு எல்லையற்ற பல நுட்பக் கருத்துக்களை உணர்த்திக் கொண்டு, விரிந்து செல்ல வல்ல தன்மையுடையமையே சீரியசான்று. அதனை அளவிடற்கரியதொரு பொருட் குறிப்புச் சூழ்நிலை மிகுந்து நிலவிக்கொண்டே பெருகும். கவிஞன் கூறியது ஒன்றைக் குறித்ததே ஆயினும், அக் கருத்தே மிகவிரிந்து பரந்து, அவன் கருதாத வேறுபல இயல்புடைய நல்ல அழகிய கருத்துக்களையும் கூட அது தன்பாற் பொலிந்து திகழும்.,

கவிஞரின் உள்ளம் ஒரு புலமைச்சுரங்கம். இது உருவாதற்குப் பல பிறவிகள் எடுத்த தவத்தாலும், பயனாலும் கல்வியில் கேள்வியில் புலவன் முழுமையடைகிறான். ஷேக்ஸ்பியர் படியாத மேதை என்ற போலிக் கொள்கை மலையேறிவிட்டது. தகப்பனார் அவருக்களித்த உயர் நிலைக் கல்வி வாழ்வின் அநுபவத்தில் பூரணப்பட்டதால் உலக சாதனை இயற்ற முடிந்ததென்று இன்றைய கருத்து நிலை பெற்றிருக்கிறது. 'கல்வியிற் பெரியன் கம்பன்' என்ற பழமொழி எவராலும் நிராகரிக்கப்படவில்லை. கவிஞனின் கல்வி வெறும் ஏட்டுப் படிப்பல்ல. ஷேக்பியருக்கும் கம்பருக்கும் 'வம்பு' இயற்கையான கொடையாகக் காணப்படுகிறது. வரலாற்றின் புறச்சான்றைவிட கவிதைகள் பறை சாற்றும் அகச் சான்று இதனை வற்புறுத்துகிறது.

கவிதைகளுக்கு ஆழம் அளிப்பது துன்ப உணர்வு. மக்களால் வேண்டப்படுவது துன்பம். ஒருவனைப் பண்படுத்துவதற்கும் துன்பம் எவ்வளவு அவசியம் என்பதை ஆண்டவன் மட்டுமல்ல அடியார்களும் அறிவார்கள். தீங்கும், துயரமும், துர்ப்பாக்கியமும் ஒருவனை வந்தடையத் தேவை உண்டு. அவற்றின் மூலம் மனிதன் பண்படுகிறான். துன்பத்தை விசாரிப்பதனால் ஒருவனுக்கு விவேகம் உண்டாகிறது. ஞானநிலையும் கிட்டும். துக்கம் அவனுக்கு வலிவு ஊட்டுகிறது.

இந்த அடிப்படைக் கருத்தில் உதயமாவது இலக்கியத்துக்கு ஒளி ஊட்டும் துன்பியல் நாடகமென்ற சிறப்புடைமை. சோகத்தை எடுத்துரைக்கும் பயிற்சியில் ஷேக்ஸ்பியரின் துன்பியல் நாடகங்கள் தனித்துவம் பெற்றிருக்கின்றன. பெருநிலை மனிதன், பேரரசன், பெருங்குடி வள்ளல் போன்ற சமுகத்தின் உயரிய தலைவர்கள் காலத்தின் கோலமாகத் தங்களுக்குரிய தர்ம வாழ்வில் தவறு கண்டால் அது அழிவுக்கு விட்டுச்செல்லும் சோக முடிவு ஷேக்ஸ்பியர் நாடகம் கற்பிக்கும் கசப்பான ஆனால் பரிசுத்தமான பாடம்.

திகில் ஊட்டும் துன்பியல் நாடகங்கள் ஆங்கில மக்களுக்கே கிலேசமூட்டியதாகக் குறையும் கண்டனமும் வெளிவந்தன. அதற்குச் செவிசாய்த்தே பிற்காலத்தில் 'புயல்' போன்ற விசித்திரக் கதைகளான துன்பத்தின் அடிப்படையில் இன்பமான முடிவுகளைக் கொண்டதாய் இயற்றினரென்று கருதப்படுகிறது.

தமிழ் இலக்கியத்தில் நாடகத்துறை வளம் பெறவில்லை. இன்பம் அளிக்கும் உணர்வு சோகம், கம்பர் இராமாயணத்தில் பல பெரும் பகுதிகளாகக் காணப் படுகின்றன. எனினும் தருமம் தலை காக்கும், நன்மை வெற்றி பெறும், தீமை அழிவுக்கிட்டுச் செல்லும் என்ற கோட்பாடே எங்கும் எதிலும் காணப்படுகிறது. அதற்கமைய முடிவு இன்பத்தையே நாடிநிற்கிறது.

ஷேக்ஸ்பியர் விமர்சகர்கள் துன்பியல் நாடகத்துக்கு இன்று அளிக்கும் விளக்கம், அவருடைய நாடகப் புலமைக்கு அரண் போன்றது. ஒரு நல்லவன் பெரியவன் தனது ஆளுமையின் சிறு குறையாலும் சூழ்நிலை காரணமாகவும் சிறு தவறுகள் சந்தர்ப்பவசம் பெருகி மாண்டு போவதால் அவனுடைய நன்மைக்கும் பெருமைக்கும் பங்கம் ஏற்படுவதில்லை. இவ்வித தாக்க அழிவிலும் அவனுடைய அறவாழ்வுக்கும் இலட்சியத் துக்கும் மக்கள் ஆதரவைத் தேடுகிறது. சீதையைப் பிரிந்த இராமனின் துயரம். உற்றார் உறவினரைப் பறிகொடுத்த இராவணனின் சோகம், இராவணனை இழந்த மண்டோதரியின் பிரிவு, கும்பகர்ணனின் கொற்றத்தைச் சித்திரிக்கும் அழகு மொழிகள் இராமாயணத்தில் அடங்கிய சோகச் சிகரங்கள்.

இவ்விரு கவிதை மேதைகளின் புலமைக்கு விளக்கமளித்த ஒரிரு பாக்களை, காட்சிகளைச் சந்தர்ப்பம் கூறி விளங்க முயல்வது பலன்தரும். இவற்றைச் ஷேக்ஸ்பியரின் ஆக்கங்களில் இனம் காணல் புலமை உலகில் ஒருமைப்பாட்டை அறிவுறுத்தும்.

***சந்தர்ப்பம் :*** தவிர்க்க இயலாத விதியின் விளைவால் இலங்கை வேந்தன் கடும் போரில் இராமனிடம் தோல்வியுற்று ஆவியிழந்து அமர்க்களத்தில் விழுந்தான். வாளும் யாளும் தழுவிய வலிய கரங்கள் வெட்டுண்டு வாழைபோல் வீழ்ந்து கிடந்தன.

இக்கோலத்தைக் கண்ணுற்று மரங்களும் மலைகளும் உருக வாய் திறந்து அலறி அழுத காட்சி கம்பரின் கவிதைகளில் தலை நிமிர்ந்து நிற்கிறது.

*'வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த*
*திருமேனி மேலும் கீழும்*
*எள்ளிக்கும் இடனின்றி உயிர் இருக்கும்*
*இடன் நாடி இழைத்த வாறோ?*
*கள்ளிருக்கும் மலர்க்கூந்தல் சானகியை*
*மனச்சிறையில் கரந்த காதல்*
*உள்ளிருக்கும் எனக்கருதி உடல்புகுந்து*
*தடவியதோ ஒருவன் வாளி?'*

(இராவணன்வதை. ப. 237)

சிறந்த கவிதைக்கு வரைவிலக்கணம் அளித்த பேரறிஞர் பிராட்லி மேலே குறிப்பிட்ட அம்சங்கள் அனைத்தும் இப்பாட்டில் முக்கிய இடம் பெறுகின்றன.

பாட்டின் உயிர் நிலயம்: 'திருமேனி'. மண்டோதரிக் குரித்தான கைலாசமலையை வர்ணித்த எவரும் கம்பருடைய சித்திரத்தைக் கனவிலும் காணார். மலர் கொய்யும் பண்டாரங்கள் சிவனுக்குரிய வெள்ளருக்கு – மிக அரிதான காலத்தில் – தேடி அலைவது. எமது சொந்த அனுபவம். கைலாச வாகனத்திருவிழா என்றால் எங்கும் – விசேடமாக எங்கள் நல்லூர் முருகன் கோவிலில்–எள்ளுப்போட இடமில்லாமல் மக்கள் திரள்வார்கள்.

**காதலைப்பற்றியது : " கள்ளிருககும மலாக கூந்தல் "** சங்கப்புலவர் தருமியின் மணத்துக்கு உதவிய மதுரைச் சோமசுந்தரரின் பாட்டு தமிழுக்குக் கிடைத்த அரிய பாட்டு. 'கொங்கு தேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி' என்று தொடங்கும் பாட்டின் தொனி, 'கள்ளிருக்கும் மலர்க் கூந்தல் ஜானகி' அடியில் கரந்து நிற்கிறதா என்ற சந்தேகம் , காதலரின் பிணக்குக்கு விடுத்த கேள்வி, நக்கீரருக்கு ஆண்டவன் இட்ட சாபம் – இவையெல்லாம் புலவர் கருதாத போதும் பாட்டைச் சுற்றி வளைக்கின்றன. மண்டோதரி கற்புக்கரசி, பேரழகி, அழகு பொலியும் இலங்காபுரி அரசனின் மனைவி. மிக அசாதரணமான சம்பவம் இந்த மரணம். ஜானகியைக் காதலித்த காரணத்தால் இந்த அழிவு ஏற்பட்டதை நன்குணர்ந்த மண்டோதரி, இராமபாணத்தின் வன்மையை விபரித்த போதும், இராவணனின் மனச்சிறையிலிருந்து அந்த அமுத நஞ்சை அகற்ற முயன்றதை உருவக அணியில் அழகு படுத்தியபோதும் 'இராவணனார்' என்ற பெருமதிப்புக்குரிய பதியை இழந்த சோகத்தை மிகக் கம்பீரமாகக் காட்டுகிறார் கம்பர். கவியரசரின் கற்பனை எதுவானாலும் அவருடையகவி மண்டோதரியின் கவலைக்கு, ஒரு தாஜ்மஹாலை எழுப்பியிருக்கிறது. கணவன் தெய்வமாதலால் கணவனை அடைவது இயற்கை. புலவனின் கைவண்ணம் பின்னே, மண்டோதரியின் பெண்மை 'முன்னே'. இது போன்ற கவி 'யாமறிந்த மொழிகளிலே எங்கும் காணோம்' என்றால் என்ன தவறு.

இதற்கு அணைவான ஷேக்ஸ்பியரின் சித்திரத்தை எட்டிப்பார்ப்போம்.

***சந்தர்ப்பம் :*** றோமாபுரிப் பெருந்தலைவன் அன்டனி எகிப்தின் ராணி அழகொழுகும் கிளியோபாற் றாவை அரச விடயமாக இராணி மாளிகையில் சந்திக்கிறான். அவளுடைய முகத்தைப் பார்த்ததும், உலகப் புகழ்பெற்ற அவளுடைய மூக்கு அவனைப் பரவசப்படுத்தியது. அச்சமயம் ரோமாபுரியிலிருந்து ஒரு அவசர செய்தி கொண்டு வந்த தூதுவன் அன்டனியைக் காண அநுமதி கோருகிறான். அதற்கு எவ்வித விருப்பமும் இல்லாத அன்டனி கூறும் வார்த்தைகள் காதல் இலக்கியம் காணாத பொருட்சுவை கொண்ட அமிர்தவார்த்தைகள் "Kingdoms are clay" என்ற மூன்று சாதாரண சொற்களால் உண்டான உருவகம் அந்த நாடகத்தின் துன்ப சிகரத்தைப் பின்னர் விளக்குகின்றது. காதலின் தீவிர உணர்ச்சி கரைகடந் தோடுகிறது. கிளியோபாற்றா வின் அழகு ஒரு வரியில் அழியாப்பேறு பெறுகிறது. "Kingdoms are clay" என்றவரியில் ஷேக்ஸ்பியர் கம்பரைப் போல இனிய 'வம்பு' வைத்திருக்கிறார். தெவிட்டாத இன்ப மளிக்கும் தனித்துவ அழகு அவளுடையது என்ற கருத்து தொக்கு நிற்கிறதை அன்ரனியின் மாண்பைக் காதலி அதற்கேற்ற நடையில் வர்ணிக்கின்றாள்.

காதலனை மரணம் பிரிக்கும் தறுவாயில் அவளுடைய துன்பக் கூற்று இனிமேல் உயிர் வாழ்தலின் தன்மையை வர்ணிக்கிறது.

கணவனைத் தொடர்ந்து காலனைத் தோற்கடிக்க வேண்டுமென்று விரையும் காதலி குறிப்பிடும் உவமானம் அழகு ஒழுகும் உருவகணி.

The Stroke of death is as a lover's pinch, which hurts and is desir'd.

மரணத்தின் கிள்ளு காதலர் கிள்ளைப் போன்ற துன்பமானாலும் வேண்டத்தக்கது. இதற்கு மாறாக கம்பரின் காதலர் சந்திப்பு சாந்தமே உருவானது. ஆனால் நெஞ்சை அள்ளும் சாந்தம் அது.

***"எண்ணரு நலத்தினாள் இனையள் நின்றுழி***
***கண்ணொடு கண்ணிணை கவ்வி ஒன்றை ஒன்று***
***உண்ணவும் நிலைபெறாது உணர்வும் ஒன்றிட***
***அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள்"***

மிதிலைக்காட்சி. ப. 35

பாரததர்ம் காதற்பண்புக்கு அளிக்கும் தானம் இது என்றால் மிகையாகாது.

சீதையைக் காட்டுக்கு வராதே என்ற இராமனுக்கு

விடையளித்த சீதை மிகக் குறுகிய புலமை நிறைந்த வினாவினால் அதனைத் தெளிவு படுத்துகிறாள்.

***"நின் பிரிவிலும் சுடுமோ பெருங்காடு?"***

சீதை பின்வரும் துன்பங்களைக் கற்பனை செய்ய முடியாத நிலையிலும், தனது பதியைத் தொடர்ந்து செல்வதே அறம் என்ற நிலையில் திண்மை பெறுகிறாள். கம்பரின் கவிதைத் திறனுக்கு ஈடிணையற்ற பாத்திரம் கும்பகர்ணன் என்பது எனது சொந்த அபிப்பிராயம்.

***"செம்பு இட்டுச் செய்த இஞ்சித் திருநகர்ச் செல்வம்தேறி***
***வம்பு இட்ட தெரியல் எம்முன் உயிர்கொண்ட பகையை வாழ்த்தி***
***அம்பு இட்டுத் துன்னம் கொண்ட புண்ணுடை நெஞ்சோடு ஐய***
***கும்பிட்டு வாழ்கிலேன்யான் கூற்றையும் ஆடல் கொண்டேன்"***

கும்பகர்ணன்வதை – ப. 160

வீரம், மானம், சகோதரபாசம், வருங்கால விளைவு பற்றிய இரக்கம் – இவையாவும் இப்பாட்டில் மிளிர்கின்றன. வேறெங்கும் இதற்கு நிகரான கவிதை உண்டோ? விபீடணனின் அறநெறிப் பிரசங்கப் பாட்டுக்கள் எத்துணை நலமுறையான போதும் கம்பர் கும்பகர்ணனில் காட்டிய புலமைத்திறன் அழகு வாய்ந்ததாகும். நாடகவிசை ஒரு அற்புதக் கலை. ஆசிரியரைப் போல திகழவல்லது. ஆனால் மகாகவி இந்தப் பாட்டில் எழுப்பிய உணர்வு அரக்கர் குலத்தலைவன் கும்பகர்ணனை இப் பகுதி நாடகத்தின் கதாநாயகன் ஆக்குகிறது. சோக நிலைகள் யாவும் தாண்டி, பிரிந்த இராமனும் சீதையும் ஒன்று கூடி இன்பமாக வாழ்ந்தனரென்பது இதிகாசமரபு.

ஷேக்ஸ்பியர் இதற்கு மாறுபட்டநிலை. 'கிங்லியர்' என்ற துன்பியல் நாடகத்தில் இதனை கச்சிதமாகவும், தெளிவாகவும் காணலாம்.

***சந்தர்ப்பம் :*** பேரரசன் லியர் வெறும் விலாசப் புழு. கைநம்பி முதலிரு புதவிகளுக்கும் ஆட்சியைக் கையளிக்கிறார். மூன்றாவது புதல்வி cordeli a – கோர்டீலியா என்னும் பெயருடைய அருந்தவப் புதல்வியின் உண்மையான அன்பு உணரமுடியாத நிலையில் அவளை அரண்மனையை விட்டு வெளியேற்றுகிறார்.

வாய்ப்பேச்சை நம்பி மோசம் போன மன்னன் லியர் மூத்த இரு மக்களால் கைவிடப்பட்டு மிகக் கேவலமான நிலையில் அலைகிறார்.

அதிகாரம் இன்றேல் மன்னர் வாழ்வு பெருந்தாழ்வு என்று பிரலாபித்த அந்நிலையை வர்ணித்த சொல்லோவியம் எத்துணை பட்டதென்பதை உணர்த்தும் கூற்று மன்னனின் கர்வம் நாய்படாப்பாடாகும் நிலையைக் குறிக்கிறது.

இந்த துன்ப நிலையில், அவருக்குத் தெம்பளித்த மகள் தன்னால் கைவிடப்பட்ட கடைக்குட்டி கோர்டீலியா என்பதை உணர்கிறார். இருப்பினும் தான் வஞ்சனைக்கு இரையானதைக் கரைந்து கரைந்து மனம் நொந்து எடுத்துரைக்கின்றார்.

கோர்டீலியா என்ற தங்கமான தவப்பிள்ளை அளித்தவிடை இலக்கிய உலகில் என்றும் பிரகாசிக்கும்.

அந்தக் கூற்றை இன்று படிக்கும் நாம் அன்று, சொக்கிறட்டீஸ், பின்னர் யேசுபிரான், அமெரிக்க மாமனிதன் லிங்கன், எங்கள் காலத்தில் மாகாத்மாகாந்தி அனைவரையும் துன்பநாடகத்தின் கதா நாயகர்களாகக் கொள்கிறோம்.

இருப்பினும் 'கிங்லியர்' நாடகத்தின் முடிவிலேயே துன்பத்தில் இன்பம் காணும் வாய்ப்புக் கிடைக்கிறது. லியர் அரசனின் மூத்த புதல்விகளும் அவர்களின் கணவரும் எடுத்த சூழ்ச்சியால் அவர்கள் மடிகின்றனர். அதே சமயம் அந்தச் சூழ்ச்சியால் நன்றி மறத்தலுக்கு இரையான அரசனும் நன்றி மறவாமைக்கு இலக்கண மான அவருடைய அருமைப்புதல்வியும் மரணத்தைத் தழுவுவதற்கான சதி வெற்றி பெறுகிறது.

கோர்டீலியா இறந்ததும் அவளைத் தகப்பன் மடியில் வைத்துக் கவன்றார்கள். அவர்கள் விசுவாசமான அன்பர்கள், நண்பர்கள், சாகுந்தருவாயிலும் கோர்டீலியா வின் கண்களில் உயிர்த்துடிப்பு இருப்பதாகப் புலம்புகின் றார்கள்.

'செய்நன்றி கொன்ற மகற்கு உய்வில்லை. என்பது ஏற்கனவே உண்மையாகி விட்டது. அதற்கு நேர்மாறாக, என்றும் நன்றி மறவாத கோர்டீலியாவின் முடிவு எம்மனைவரையும் ஆழ்ந்து சிந்திக்க வைக்கிறது. அறம் அழிந்துவிட்டதா என்ற மனக்கிலேசம் கிளம்புகிறது. அதனை நன்றாக ஆராய்ந்த வேளையில் இத்தகைய மக்கள் திலகம், தம்முடைய கற்பு நெறியில் துன்பத்தைத் தழுவுவது வாழ்வின் சீலத்துக்கு சிகரம் வைக்கிறதென்பது புலனாகும். ஷேக்ஸ்பியரின் நாடகக் கவிதை கம்பரைப் போல என்றும் மனித வர்க்கத்தைத் தெய்வீக நிலைக்கு உயர்த்த வல்லதென்பது தெளிவாகும். உலகப் புகழ்பெற்ற கவியரசர்கள், நூலாசிரியர்கள் எழுதும் நூல்கள் கால வெள்ளத்தால் அழிவனவல்ல. இந்த வரிசையில் கம்பர், திருவள்ளுவர், ஷேக்ஸ்பியர், ரோல்ஸ்டாய், விக்ரர்ஹியூகோ போன்ற சான்றோரின் ஆக்கங்கள் முதலிடம் பெறுகின்றன.

***விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல் கற்றாரோடு ஏனை யவர்'***

இவற்றைக் கற்றல், அவசியம். அதனிலும் அவசியம் நன்கு கற்றவர்களிடம் கேள்வியை அடைதல்.

# இரு இதிகாசங்கள் ஓர் ஒப்பீடு

வித்துவான் சி. குமாரசாமி

நல்லோரைக் காக்கவும் தீயோரை அழிக்கவும், தருமத்தை நிலைநாட்டவும், தான் யுகங்கள் தோறும் அவதாரங்கள் எடுப்பதாகப் பகவான் கீதையிலே கூறுகின்றான். அவ்வாறு பெருமான் எடுத்த அவதாரங்கள் தசாவதாரங்கள் எனப் புராண இதிகாசங்களிலே பேசப்படுகின்றன. அவற்றுள் இராமாவதாரமும், கிருஷ்ணாவதாரமுமே இன்று பலராலும் போற்றிச் துதிக்கப்படுகின்றன. அவ்விரு அவதாரங்களும், மக்கள் உள்ளத்தில் பக்தியையும் பெருமதிப்பையும் தோற்றுவித்து, உயர்ந்த ஸ்தானத்தைப் பெறக் காரணமாயமைந்தவை அவ்வவதாரங்களைப் போற்றி எழுந்த இராமாயணமும், மகாபாரதமுமாகிய இரு இதிகாசங்களுமேயாகும். வான்மீகியின் இராமாய ணமும், வியாசரின் மகாபாரதமும் வடமொழியில் எழுந்து அம்மொழிக்குப் பெருமை சேர்த்த இருபெருங் காவியங்களாகும். அம்மூலநூல்களின் தரத்திற் சிறிதும் குறையாது, அவற்றிலும் ஒருபடி மேல் என்று கூறத்தக்கவகையில் கம்பரும், வில்லிபுத்தூரரும் அக்காதைகளைத் தெள்ளு தமிழில் வடித்துத் தந்துள்ளனர். நாராயணன் இராமாவதாரத்தில் தானே இயற்றுதற் கருத்தாவாக நின்று கோதண்டம் ஏந்தி அரக்கர்களை அழிக்கின்றான். மகாபாரதத்தில் சூத்திரதாரியாக –ஏவுதற்கருத்தாவாக நின்று யாவரையும் நீறாக்கிப் பூபாரம் தீர்க்கும் அவதார நோக்கை முற்றுவிக்கின்றான்.

மனிதவாழ்க்கை சிக்கல்கள் பலநிறைந்தது. எப்படியும் வாழலாம் என எண்ணாது இப்படித்தான் வாழவேண்டும் என்ற இலட்சியத்தைக் கைக்கொண்டு வாழ்பவர்களுக்கு அது ஒரு சோதனைக்களமாகவே மாறிவிடுகின்றது. அத்தகைய சிக்கல்கள், தரும சங்கடங்கள் ஏற்படும்போது எப்படி நடந்து கொள்ள வேண்டும் என எங்களுக்குப் பாடபோதனை செய்து வழிகாட்டவல்லனவாக இவ்விரு காவியங்களிலும் பல பாத்திரங்கள் படைக்கப்பட்டுள்ளன. வெறும் தர்ம சாஸ்திரக் கூற்றுக்கள் தொடமுடியாத சூட்சுமமான பிரதேசங்களையெல்லாம் உள்ளத்தில் அப்பாத்திரங்கள் தொட்டு எம்மை அறியாமலே எம்மை உருக்கிக் குழைத்தெடுத்துப் புதிய வார்ப்பாக மாற்றி விடுகின்றன எனல் மிகையாகாது.

## கதாநாயகர்கள்

இருகாவியங்களிலும் வரும் பாத்திரங்களின் குணவியல்புகளிலும், சம்பவங்களிலும் கூடப் பல ஒற்றுமைகளை நாம் காணமுடிகின்றது. இராமாயணத் தின் கதா நாயகன் இராமனே என்பதில் எவ்வித சந்தேகமுமில்லை. அவ்வாறே தம்பியர்க்குத் தலைமை தாங்கி, முடிசூடித் தருமனே பாரத காவிய நாயகனாகப் பொலிகின்றான். எனினும் இராம காதையில் வில்லாண் மையில் இராமர் பெறும் இடத்தை மகாபாரதத்தில் அருச்சுனனே பெறுகின்றான். குருஷேத்திர யுத்தகளத் திலும், திரௌபதி சுயம்வரம் போன்ற பிற இடங்களிலும் அருச்சுனனது வில்லாண்மையே போற்றப்படுகின்றது. மகாபாரதத்துக்குப் பெருமை சேர்க்கும் பகவத்கீதையும் அருச்சுன னுக்கே உபதேசிக்கப்படுகின்றது. இதனால் அருச் சுனனே கதாநாயகன் எனவும், கன்னனே கதாநாயகன் எனவும், துரியோதனனே காவிய நாயகன் எனவும் பலரும் வாதிடப் பாரதக்கதை இடந்தருகின்றது. இக்கூற்றுக்களுக்கு மேலாகச் சூத்திரதாரியாக நின்று, அனைவரையும் தனது திட்டப்படி இயக்கி, காய்களைத் தான் வேண்டியவாறு நகர்த்தி, வேண்டிய இடத்துச் சில காய்களை வெட்டுக் கொடுத்து ஆட்டத்தை வெற்றி கரமாக முடித்த கிருஷ்ணனே கதாநாயகன் என்று கூறுவோர் கூற்றிலும் கூட ஓரளவு நியாயம் இருப்ப தைக் காண்கின்றோம்.

பிறர் துணை வேண்டாது தானே தனித்து நின்று போராட வல்லவனை அசகாய சூரன் என்பர். இவ்வாற்றலைத் துணை வேண்டாச் செருவென்றி எனப்பாராட்டுகின்றது புறநானூறு. 'தன்துணை

ஒருவரும் தன்னின்வேறலான்' என இராமனின் ஆற்றலை வாலியும் பாராட்டுகின்றான். சொல் ஒக்கும் கடிய வேகச் சுடுசரம்– தாடகை மார்பைப் பிளந்து அங்கு தங்கிவிடாது கல்லாப் புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போன தன்மையை இராமனது கன்னிப் போரிற் காண்கின்றோம். 'கைவண்ணம் அங்குக் கண்டேன்' என விசுவாமித்திரரும் அதனைப் பாராட்டுகின்றார். பலரும் கண்டுவியந்த பாரவில்லைச் சீதைக்குச் சூட்டும் மணமாலையை எடுப்பதுபோல இராமன் எடுத்ததையும், 'எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார்' என அச்சிவதனுசை வளைத்து நாணேற்றி ஒடித்தமையையும் ஜனகன் மாளிகை நிகழ்ச்சியாகக் கம்பர் அழகுறக் காட்டுகின்றார்.

முதன்நாட் போரில், வீரமும் களத்தே போட்டு நிறம்கரிந்திட, நிலம் விரல்கிளைத்திட, மாமியார் மருங்கு சென்ற மருமகன் போல நிலம்பார்த்து இராவணனை நிற்க வைத்து விடுகின்றது இராமபாணம். , பகைவனுக் கருளி 'இன்று போய்ப் போர்க்கு நாளைவா' எனக்கூறி வீரப்பண்பின் சிகரத்துக்கே போய்விடுகின்றான் இராமன். மாளிகையடைந்த இராவவணன் போர்பற்றி மாலியவானுக்கு விபரித்தபோது

*"சிவனோ அல்லன் நான்முகன் அல்லன் திருமாலாம் அவனே அல்லன் மெய்வரம் எல்லாம் அடுகின்றான்"* எனக் கூறி ஆச்சரியப்படுகின்றான். தன்னுடன் கடுஞ்சமர் புரிந்தபோதும்

*".... அன்னான் அந்தக் கூனிகூன் போக உண்டை தெறித்தபோ தொத்த தன்றிச் சினமுண்மை தெரிந்ததில்லை"* எனப் போரை ஒரு விளையாட்டாகவே செய்து நின்றமையை வியக்கின்றான்.

இவ்வாறே அருச்சுனனுடைய வில்லாற்றலைப் பல சந்தர்ப்பங்களிலும் கண்டு களிக்கின்றோம். அரங்கேற்றத்தின்போதும், துருபதனை வென்று சிறைப்படுத்திக் குருதக்கணை கொடுத்தபோதும், காண்டவ தகனத்தின் போதும், இராசசூயம் வேட்டகாலை மாற்றாரை வென்று நின்றபோதும், நிவாத கவச காலகேயரைக் கொன்று இந்திரனுக்குதவிய போதும், எனக் காண்டீபம் விளைத்த வெற்றிகள் பற்பல. தனி ஒருவனாக நின்று விராடநாட்டில் துரியோதனின் படைகளையெல்லாம் புறங்காட்ட வைத்து, நிரைமீட்டுத் துணை வேண்டாச் செருவென்றி என்பதற்கு அருச்சுனனும் இலக்கியமாவதைக் காண்கிறோம் அப்போரில் தனது மாணாக்கனாகிய அருச்சுனனது போராற்றலைக்கண்டு வில்லாசிரியனாம் துரோணர் உளம்பூரித்தமையை

*"விண்டு தானவரை வென்ற விறலுடை விசயன் வின்மை*
*கண்டு தான் அவன் றன்னோடு கற்பதற் குன்னினானே"*

என வில்லி எடுத்துக் காட்டுந்திறன் கண்டு மகிழ்கின்றோம். குருஷேத்திரத்தில் வீட்டுமன், துரோணன், அசுவத்தாமன், கன்னன், சல்லியன், பகதத்தன் சயத்திரதன் முதலியோருடன் ஆற்றிய போர்கள் அருச்சுனனின் பேராண்மையைப் பறை சாற்றி நிற்கின்றன.

ஆயினும், தன்னுடன் பகைத்துப் போர் புரியாது சுக்கிரீவனுடன் மற்போர் புரிந்த வாலிமீது அம்பு தொடுத்துக் கோதண்டம் வசை தேடிக் கொண்டது போன்று, கிருஷ்ணனுடைய தம்பியாகிய சாத்தகியுடன் போர்புரிந்து அவனைக் கொல்லமுயன்ற பூரிசிராமீது அம்பு தொடுத்துக் காண்டீபமும் வசை தேடிக் கொள்வதும் குறிப்பிடப்பட வேண்டியதாகும்.

மகாபாரத காவிய நாயகனாம் தருமனது வில்லாற்றலும் குறைந்ததன்று. பன்னிரண்டாம் நாட்போரில் வியூகம் அமைத்துத் தன்னை உயிருடன் கைப்பற்றச் சபதமிட்டு வந்த துரோணாச்சாரியாருடன் போருடற்றிய போதும், பதினெட்டாம் நாட்போரில் துரியோதனனின் சேனாதிபதியாகிய சல்லியனுடன் பொருது அவனைக் கொன்ற போதும் தருமனுடைய வில்லாற்றலை நாம் உணர முடிகின்றது.

## வீரவேங்கைகள் இருவர்

இராவணனது மைந்தன் மேகநாதன் இளம் வயதிலேயே இந்திரனையும் வென்று இந்திரசித்து என்ற பெரும்புகழ்ப் பெயர் பூண்டவன், அசோகவனத்தை அழிக்க முயன்ற மாருதியை நாகபாசத்தாற் பிணித்து இராவணன் முன் கொண்டு சென்றவன். இராமலக்கு மணரையும் நாகபாசத்தாற் கட்டி மூர்ச்யையுறச் செய்தவன். இராமலக்குமணரைப் பலமுறை எதிர்த்து நின்று போராடிய மாவீரன். மாயப்போர் புரிவதில் ஈடினையற்றவன். அவன் பல்வேறு தந்திரரோபாயங்க ளையும் யுத்தகளத்திற் புரிந்து எதிரிகளைக் கலங்க வைக்கின்றான். நிகம்பலையில் மிக இரகசியமாக அவன் ஆற்றிய வேள்வி முறைப்படி முற்றுற்றிருப்பின் இறந்த அரக்கர் யாவரும் மீள உயிர்பெற்றெழுந்திருப்பர். வீடணன் வண்டாகச் சென்று அறிந்து வந்து கூறியமையால் இலக்குவன் அவ்விடம் தேடிச் சென்று

போராடி அவனைக் கொல்லமுடிகின்றது.

*"இந்த வில்லி ஒக்கும் வில்லி எங்கும் இல்லை இல்லையே"*
என்றும்

*" வீரர் என்பார்கட் கெல்லாம் முன்நிற்கும் வீரர் வீரன் "* எனவும் பாராட்டப்பட்ட அம்மாவீரனின் வெட்டுண்ட தலையை ஏந்திச்சென்ற அங்கதன் அதனை இராமன் பாதத்தில் வைத்துப்பணிகின்றான். உடனேயே இராமன்

*" வன்தலை எடுத்து நீமுன் வருதலால் வானரேச*
*என்தலை எடுக்கலானேன் இனிக்குடை பிடிப்பேன்..."*
என்றும்

*" கம்ப மதத்துக் களியானைக் காவற்சனகன் பெற்றெடுத்த*
*கொம்பும் என்பால் இனிவந்து குறுகினாள் என் றகம் குளிர்ந்தேன்"*

என்றும் கூறுமடிகளால் இராமனது உள்ளத்தில் இராவணனோ, கும்பகர்ணனோ தோற்றுவிக்க முடியாத அச்சத்தை மேகநாதனின் போராற்றல் உருவாக்கியிருந் ததை உணரமுடிகின்றது.

அத்தகைய தொரு வீரவேங்கையாக மகாபாரத்தில் அபிமன்னன் பொலிகின்றான். பன்னிரண்டாம் நாட்போரில் தருமனை உயிருடன் கைப்பற்ற முடியாது தோல்வியுற்றுப் பாசறை திரும்பிய துரோணர் மறுநாள் சக்கர வியூகமாகப் படைகளை அணிவகுத்துத் தருமனை வளைக்கின்றார். அதற்கு முன்னரே துரியோதனன் ஏவிய தற்கொலைப்படை போர்க்கறை கூவி, அருச்சுனனை வேறுபக்கம் கொண்டு சென்றுவிடுகின்றது. படையணியின் முகப்பில் துரோணர், அசுவத்தாமன், கன்னன், கிருபன், சல்லியன், சயத்திரதன் போன்ற மாவீரர்கள் வில்லேந்தி நிற்கின்றனர். தருமனைக் காத்து நின்ற அபிமன்யு வில்லேந்திக் களம் புகுகின்றான். ஒருசில நிமிடங்களிற் சக்கரவியூகம் சிதறி யோடுகின்றது. ' சரமறுத்தான், வில்லறுத்தான், தேரறுத்தான், கொடியறுத்தான் சமரபூமி உரமறுத்தான்' என்கின்றார் வில்லிபுத்தூரர். அபிமன்னன் தொடுத்த அம்புகளால்

*" வெல்லவந்த துரோண மாமுனி விறலழிந்தது குருவெனும்*
*சொல்லழிந்தது வில்லழிந்தது தேரழிந்தது தொடைகளால்"*

எனவரும அடிகள் அபிமன்யு ஆற்றிய போரின் வெம்மையைப்புலப் படுத்துகின்றன. சயத்திரதன் வீசிய கொன்றைமாலையால் அபிமன்னனைத் தனிமைப் படுத்தி யுத்ததர்மத்துக்கு மாறாக அவனைக் கொன்று தாம்பட்ட அவமானத்தைத் தீர்க்கின்றனர் துரியோதனன் படையினர். வலக்கை வில்லொடு இலக்குமணனால் அறுபட்டபின்னரும் ஒருகை கொண்டு போர் புரிந்து மாண்ட மேகநாதன் போலவே அபிமன்னனும் வலக்கை வாளொடு துணிபட்டு வீழ்ந்த பின்னரும் இடக்கையில் தேர்ச்சக்கர மெடுத்துப் போர் செய்து ஈற்றில் சயத்திரதன் கதையால் மாண்டுபடுகிறான்.

*"இருவர் எதிரெதிர் தம்மில் இகல் பொருதல்*
*உலகியற்கை யாருங்கூடிப்*
*பருவமுறாத் தனிக்குதலைப் பாலகனுக்காற்றாமல்*
*பறந்து போனீர்*
*ஒருவன் நெடுந்தேரழிக்க ஒருவன்*
*மலர்க்கைதுணிக்க ஒருவன் பின்னைப்*
*பொருவன் என அறைகூவிப் பொன்றுவித்தான்*
*இதுகொண்டோபுகல்கின்றீரே"*

என அன்றிரவு தூது சென்ற கடோற்கசன் பாசறையில் நின்று கேட்குங்கேள்வியில் அபிமன்யுவின் வீரமும் அவனை எதிர்த்தோரின் முறைகேடும் ஒருங்கே பொலிவதைக் காணலாம்.

## இலக்குமணனும் வீமனும்

இராமாயணத்தில் இராமன் தம்பி இலக்குவன் ஆற்றிநின்ற போர் இராவனணையே வியப்பில் ஆழ்த்திவிடுகின்றது. அதனால் அவன்

*" இளையவன் தனக்கும் ஆற்றாது என்பெரும் சேனை"* என்கின்றான் அன்றியும் கார்த்த
வீரியார்ச்சுனன் போன்ற வீரரும்

*" அத்தாபதன் தம்பி பாதத்து ஆர்த்ததோர் துகளுக்*
*கொவ்வார் யாரவற் காற்றகிற்பார்"*

என வியந்துரைத்து உள்ளம் மறுகுகின்றான்.

மகாபாரதத்தில் வீமனது போர்வன்மை பலவிடங்களில் விதத்து பேசப்பட்டிருப்பதைக் காணமுடிகின்றது. இடும்பன், பகன், கீசகன் என்று ஆரம்பித்துப் போர்க்களத்தில் நூற்றுவரையும் கொல்லு வது வரை அவனுடைய வீரப்போர் பேசப்படுவதையறிந்து இன்புறுகின்றோம்.

## சீதையும், திரௌபதியும்

பெண்ணாசையால் வந்த அழிவை இராமாய ணமும், மண்ணாசையால் வந்த அழிவை மகாபாரதமும் கூறுவதாகப் பொதுவாகப் கூறுவது வழக்கம்.

கற்புடைமகளிர் உள்ளம் நொந்து சிந்திய கண்ணீரே இருபேரரசின் அழிவுக்கும் காரணமாயிற்று என்பது மறுக்கமுடியாத உண்மையாகும். யுத்தகளத்தில் நாள்தோறும் தனது தம்பியர் பலர் வீமனால் கொல்லப்பட்டமை கண்டு, துரியோதனன் கண்ணீர் சோரநின்று தனது பாட்டனும், கௌரவர் சேனைத் தலைவனுமாகிய வீட்டுமனிடம் முறையிடுகின்றான். அதற்குப்பதிலாக

***"மன்னவை தன்னில் அந்த மாசிலா வடமீன் அன்னாள் தன்னிரு கண்ணீர் இன்னம் இலைகொலோ தருவதம்மா"***

என்று வீட்டுமன் கூறும் வார்த்தைகளில் திரௌபதி சிந்திய கண்ணீரே துரியோதனனாதியரை அழித்துக் கொண்டிருக்கிற தென்ற உண்மை புலப்படுத்தப்படுவதைக் காண்கின்றோம். சீதையும், திரௌபதியும் அடைந்த சோதனையிலும் பார்க்க பெரிய சோதனையா நமக்கு வந்துவிட்டது என எண்ணிப் பெண்குலமே தமக்குறும் துயரங்களைச் சகித்துத் தாங்கிக் கொள்ள அவ்விரு காவிய நாயகிகளின் கற்பும், அவர்கள் அனுபவித்த துயரங்களும் காலாயமைகின்றன. இராமாயணத்திலேயே பெண்பாத்திரங்கள் அதிகம் இடம்பெறுகின்றன. பல்வேறு கோணத்திலும் நின்று பார்க்கக் கூடிய மாறுபாடான குணசித்திரங்களுடன் அப்பாத்திரங்கள் படைக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

கைகேயியின் தூய உள்ளத்திலும் நஞ்சுபாய்ச்சி, வரம் கேட்க வைக்கும் உள்ளமும் கோடிய கொடுமனக்கூனி,

தன் மகன் பரதன் நாடாளவும் இராமன் காடேகவும் வரம் வேண்டிய போது தனது கணவனின் வேண்டுதல்கள், நிந்தனைகள் உயிர் துடித்த நிலைகள் கண்டும் கலங்காது, கருமத்தைச் சாதித்துக் கொண்ட கைகேயி,

தனது மகன் இராமன் நாடுஇழக்கின்றான் என்பதைப் பொருட்படுத்தாது பரதன் அரசாள்வான் என்பது கேட்டு "மும்மையின் நிறைகுணத்தவன் நின்னிலும் நல்லன்" என மாற்றாள் மகனைப்பாராட்டிய பரந்த உள்ளங் கொண்ட கோசலை,

நாயகன் வனம் நண்ணல் உற்றான் என்றும் மேயமண்ணிழந்தான் என்றும் விம்மாது 'நின்பிரிவினும் சுடுமோ பெருங்காடு' என்று கூறி மரவுரி தாங்கிப் புறப்பட்ட சீதை,

'மன்னும் நகர்க்கே இவன் வந்திடில் வா அஃதின்றேல் முன்னம்முடி' எனக்கூறிச் சக்களத்தி மகனுடன் தன்மகனைக் காட்டுக்கு அனுப்பி வைக்கும் சுமித்திரை– போன்ற பெண்களை நாம் அயோத்தியா காண்டத்திலே தரிசிக்க முடிகின்றது. அசுரபலத்துக்கு ஒரு எடுத்துக்காட்டாக விளங்கிய தாடகை, தீய காமத்துக்கே ஒருவடிவம் சமைத்தது போன்ற சூர்ப்பணகை போன்றோர் அக்காவியத்தில் இடம் பெறுவதும் நோக்கத்தக்கது.

இராவணன் மனைவி மண்டோதரி மயனது மகள்; அழகுப்பாவை; தெய்வக் கற்பினள் மாற்றான் மனைவிமீது தன்கணவன் கொண்ட காதல் கண்டு மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் அவள் உள்ளம் துடிக்கின்றது. அவள் வீரமைந்தன் இந்திரசித்து இலக்குவன் கணையால் வீழ்ந்துவிட்டான். களத்தில் தன் மகனது தலையற்ற உடலையே காண்கின்றாள். அதன்மீது வீழ்ந்து புலம்புகிறாள். இன்றுமகன்; நாளை தந்தையா? என எண்ணிப்பார்க்கவே அவள் உள்ளம் நடுங்குகின்றது. இவ்வளவுக்கும் காரணம் அந்தச் சீதைதானே எனச் சீதைமீதும் வெறுப்பு வருகின்றது. ஆனால், அப்பாவியான – உத்தமியான– சீதையை வெறுக்கவும் அந்த நல்ல உள்ளத்தால் முடியவில்லை.

***"சீதையென்று அமுதால் செய்த நஞ்சினால் இலங்கை வேந்தன் நாளையித் தகையன் அன்றோ"*** எனக் கூறித் துடிக்கின்றாள். தன்குலத்தையே கருவறுப்பதை எண்ணி நஞ்சு என்றவள் சீதையின் உயர்வையும் உணர்ந்தவள் ஆதலின் 'அமுதாற் செய்த நஞ்சு' என்கின்றாள், இல்பொருள் உவமைக்குள்ள தனியாற்றலைக் கம்பன் படைப்பிலேதான் நாம் முழுமையாகக் காண முடிகின்றது.

சீதையின் திருமணத்திற்போலவே திரௌபதியின் திருமணத்திலும் வில் வளைத்து மாலைசூட்ட வேண்டிய நிகழ்ச்சி இடம் பெறுவதும் இருகாவியங்களில் காணப்படும் ஒற்றுமையாகும். சீதை சிறையெடுக்கப் படுகின்றாள். திரௌபதி துகிலுரியப்படுகின்றாள். அதன் காரணமாக இருவரும் கொடுந்துயர் அனுபவிக்கின்றனர். சீதையுற்ற துயர் அனுமன் காட்சிப்படலத்தில் விரித்துரைக்கப்படுகின்றது. ஆனால் அன்று விரித்த கூந்தலைப் பதின்மூன்றாண்டுகள் முடியாதிருந்து சபதம் நிறைவேறிய பின்னரே திரௌபதி கூந்தலை முடிகின்றாள். கற்பரசியர் இருவரும் சிந்திய கண்ணீரே யுத்தத்தில் சம்பந்தப்பட்டோருக்கு அழிவைக் கொடுத்த

தென்பது மறுக்கமுடியாத உண்மையாகும்.

தன் கணவன் குருடனென அறிந்து அவன் கட்புலனால் அடைய முடியாத இன்பத்தைத் தானும் அனுபவிக்க விரும்பாது ***"தோன்றா நயனத் துணைவனைப் போல் துணைக்கண் துகிலிற் சூழ்ந்திருந்த"*** பெருமைக்குரியவள் காந்தாரி. ஆயினும் அவள் உள்ளத்தில் பொறாமை புகுந்து விடுகிறது. தருமனைக் குந்தி தனக்குமுன் பெற்றுவிட்டாள் என நொந்து அவள் சிதைத்த கருவையே நூறுகலசங்களில் இட்டும் குறையை வேறோர் கலசத்தில் இட்டும் வியாசமுனிவன் நூற்றுவரும் சகோதரியாகிய துச்சளையு மாகத் தோன்றச் செய்தான். தாயிடம் தோற்றிய அப்பொறாமை உணர்வு துரியோதனனுள்ளத் தில் வேர்விட்டுத் தளைத்து மரமாகிப் பாரதப் போர்வரை இட்டுச் சென்று குலத்தொடும் அழிந்துபட வைக்கின்றது.

ைது அனுதாபத்துக்குரிய பாத்திரமாகக் குந்திபடைக்கப்பட்டிருக்கின்றாள். கன்னிப் பருவத்தில் பெற்ற மகனைக் கங்கையில் விடுவதும், கணவன் சாபம் பெறுவதும், அதனால் மந்திரத்துணை கொண்டு மக்களைப் பெறுவதும், கணவனிறக்கத் திருதராட்டிரன் அரண்மனையில் மக்களொடு தஞ்சமடைவதும், மக்களது வாழ்வும் தாழ்வும் கண்டு மகிழ்வதும் கலங்குவதுமாக அவள் வாழ்வு நிலைதளம்பிக் கொண்டிருக்கின்றது. கன்னன் மகனென அறிந்து மகிழ்வதும், இரண்டு கண்களில் ஒன்றைக் குத்திக் கெடுக்க முனைவது போலக் கன்னனிடம் வரம் வேண்டுவதும் போரில் அவன் குற்றுயிராய் வீழ எடுத்தணைத்துப் புலம்புவதும் கண்டு மனம் உருகுகின்றோம்

## சகோதரபாசம்

சகோதர பாசத்தையும், சகோதரர் கடமையையும் இவ்விரு காவியங்களும் எடுத்துரைப்பது போல வேறெந்த இலக்கியங்களும் அவ்வளவு விரிவாக எடுத்துரைக்கவில்லையென்றே கூறலாம். பரதன் நாடாள நீ காடேக வேண்டுமென்பது தந்தையின் கட்டளை என்றது கேட்டு

***"என்பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றதன்றோ"*** என்று கூறித் தம்பிக்கு இராச்சியத்தை மனமுவந்து கொடுக்கும் இராமனை முதலிற் காண்கின்றோம். அண்ணனுடன் காடுசென்று பதினான்காண்டுகள் தொண்டாற்றிப் போரிலும் துணை நின்ற இலக்குமணனது சகோதர பாசத்துக்கு இணையேது. தாயுரை கொண்டு தாதை உதவிய தரணிதன்னை ஏற்கமறுத்து இராமனை அழைத்து வரக் காடேகிப் பாதுகைகளைச் சுமந்துவந்து சிம்மாசனத்தில் வைத்துப் பதினான்காண்டு நந்திக்கிராமத்தில் தவம் புரிந்து, பதினான்காண்டு முடிவில் தமையன் வரக் காலந்தாழ்ந்தமையால் எரியிற்புகவும் துணிந்த பரதனின் சகோதரபாசச் சிறப்பை எவ்வாறு எடுத்துரைக்கமுடியும்? பரதனுடன் இணைபிரியாது வாழ்ந்து பாசத்திற்கே இலக்கணமாகின்றான் சத்துருக்கனன்.

இவ்வாறே இராவணனுடைய தம்பி கும்பகர்ணன் அண்ணனுக்குச், சீதையை விட்டுய்தியடையுமாறு பலபட எடுத்துக்கூறியும் அவன் ஏற்க மறுத்ததுகண்டு, தான் போருக்குச் செல்ல ஆயத்தமாகும்போது, " என்னையே வென்று விடுவார்களானால் உன்னை வெல்வது நிச்சயம். ஆதலின் நான் இறந்த பின்னரேனும் சீதையை விட்டுயிர்பிழை" எனக் கூறும் கூற்றில் அவன் சகோதர பாசத்தை கண்டு கண்கலங்குகின்றோம். தம்பி தனக்காக உயிர்விடத் தயாராய்ச் செல்வதறிந்து

***" அவ்வழி இராவணன் அனைத்து நாட்டமும் செவ்வழி நீரொடும் குருதி தேக்கி நிற்கின்றான்."*** பாசம் அவனைப் பாடாய்ப்படுத்து கின்றது.

***'தமையனருள் வாக்கிய பரிபாலனஞ் செய்தவர் தருமனுக்கிளைய நால்வர்"***

எனத் தருமனது தம்பியர் பாராட்டப்படுகின்றனர். தமது கருத்தை எடுத்துரைத்தாலுங்கூட ஈற்றில் தருமனது முடிவுக்கு நால்வரும் கட்டுப்படுவதைப் பற்பல சந்தர்ப்பங்கள் காட்டிநிற்கின்றன. திரௌபதி துகிலுரியப்படும் போது வீமன் கதைமேற் கைவைக்க, விஜயன் சிலைமேல் விழிவைக்கின்றான், நகுல சகாதேவரும் ஆயுதம் எடுக்கத் தயாராகின்றனர். ஆயினும் 'கட்டுண்டோம், பொறுத்திருப்போம், காலம் மாறும்' என்ற தருமன் வார்த்தை கேட்டு அடங்கி விடுகின்றனர். அந்தச் சூழ்நிலையிலும் தமையன் சொல்லுக்குக் கட்டுப்படும் அவர்கள் சகோதரபாசம் கண்டு வியந்து நிற்கின்றோம். துரியோதனது செயற்பாடுகளுக்கெல்லாம் ஒத்துப் போகும் தம்பிய ராகவே நூற்றுவரும் பொலிகின்றனர்.

இந்த எல்லையையும் கடந்து வேடனாகிய குகனையும், குரங்காகிய சுக்கிரீவனையும், அரக்க னாகிய விபீஷணனையும் சகோதரராக ஏற்றுப் 'புகலருங் கானம் தந்து 'புதல்வராற் பொலிந்தான் உந்தை' என்னும்

இராமனின் சகோதரபாசம் உலகளாவியதாக விரிந்து செல்வதையும் நாம் மனங்கொள்ள வேண்டியவர் களாகிறோம்.

## செஞ்சோற்றுக்கடன்

போர்க்களத்தில் கும்பகர்ணனை இராமன் பக்கம் அழைத்து வரச் சென்ற விபீடணன் "***எனக்கவன் தந்த செல்வத்திலங்கையும் அரசும் எல்லாம் உனக்குயான் தருவன் தந்துன் ஏவலின் இனிது நிற்பன்***" எனக் கூறியதற்கு மறுமொழியாக

"***நீர்க்கோல வாழ்வை நச்சி நெடிதுநாள் வளர்த்துப் பின்னை***
***போர்க் கோலஞ் செய்துவிட்டார்க்கு உயிர் கொடாதங்குப் போகேன்***"

என்றும் "***தம்பியர் இன்றி மாண்டு கிடப்பனோ தமையன் மண்மேல்***" என்றும் கூறும் கூற்றுக்கள் கும்பகர்ணனின் செஞ்சோற்றுக்கடன் தீர்க்கும் செய்ந் நன்றியுணர்வைப் புலப்படுத்துகின்றன.

தானே கன்னனது தாய் என உணர்த்திய குந்தி

"***வருக என்மதலாய் இளைஞர் ஐவரும் உன் மலரடி அன்பினால் வணங்கி***
***உரிமையால் மனமொத்து ஏவலேபுரிய ஒருதனிச் செய்யகோல் ஓச்சி***
***அரசெலாம் வந்துன் கடைத்தலை வணங்க ஆண்மையும் செல்வமும் விளங்கக்***
***குருகுலாதிபர்க்கும் குரிசிலாய் வாழ்வு கூர்வதே கடனெனக் குறித்தாள்***"

அதுகேட்ட கன்னன்

"***திடம்படுத்திடுவேல் இராசராசனுக்குச் செருமுனைச் சென்று செஞ்சோற்றுக் கடன் கழிப்பதுவே எனக்கினிப் புகழும் கருமம் தருமமும்***"

என்று கூறிப் பேரரசனாக வரும் வாய்ப்பை உதறியதோடு சொந்தத் தம்பியரோடு போராடவும் துணியும் நிலைகண்டு வியக்கின்றோம்.

செஞ்சோற்றுக்கடன் கழிக்கவே பெருவீரர் களாகவும், அறிஞர்களாகவும் விளங்கிய வீட்டுமன், துரோணர் போன்றோரும் துரியோதனனுக்காக வில்லேந்திக் குருஷேத்திரம் புகுகின்றனர்.

## தரும சங்கடங்கள்

வாழ்வில் ஏற்படும் தரும சங்கடங்களே எம்மைப் புடம் போடவல்லன. கதையில் இடம் பெறும் அத்தகைய சந்தர்ப்பங்கள் எமக்கும் இக்கட்டான வேளைகளில் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என வழிகாட்டி நிற்கின்றன.

கைகேயி வரம் வேண்டுகின்றாள். தசரதன் கலங்குகின்றான். பலபட இரக்கின்றான். ஈற்றில் புத்திரபாசமா– வாய்மையா என்ற நிலை ஏற்பட்ட போது வாய்மையைப் போற்றி வரம் கொடுத்து உயிரும் துறக்கின்றான்.

சகுனியின் துராலோசனைப்படி மண்டபம் ஒன்று அமைத்து மண்டபங்காண வருக எனப் பாண்டவரை அழைத்துச் சூதாட வைத்து நாடுநகர் கவரத் திட்டம் தீட்டுகிறான் துரியோதனன். மிகவன்மையாக அதனைக் கண்டிக்கின்றான் விதுரன். தம்பி விதுரனையே தூதாகச் சென்று பாண்டவரை அழைத்துவரப் பணிக்கின்றான் திருதராட்டிரன். அண்ணன் சொல் தட்டமுடியாத விதுரன் அநியாயத்துக்குத் துணை போகவேண்டியவனாகின் றான். ஆயினும் சூதுத்திட்டம் பற்றியும் தருமனுக்கு எடுத்துக்கூறித் தனது மனச்சுமையைத் தீர்த்துக் கொள்ளுகிறான். போவதா விடுவதா என்ற தர்மசங்கடம் தருமனுக்கு, " சூதாட்டத்தால் நாடுநகரை, மட்டுமே இழப்போம் ஆனால் அழைத்தவன் பெரியதந்தை. அழைக்க வந்தவன் சிறிய தந்தை. அவர்கள் வார்த்தையை மீறினால் தர்மத்தையே இழந்து விடுவோம். என்று கூறிச் செல்லத்துணிகின்றான் தருமன்.

தருமத்தைப் பணயம் வைத்து மறுசூதாடி இழந்தன யாவும் வென்றபின்னரும், குரவர் கட்டளைப் படி பன்னீராண்டு வனவாசமும் ஓராண்டு அஞ்ஞாதவாசமும் செய்யத் தருமன் முடிவு செய்வதும் நினைவு கூரத்தக்கதே.

வனவாசகாலத்தில் நச்சுப்பொய்கைக் கரையில் உயிரிழந்து கிடந்த தம்பியர் நால்வரில் ஒருவனை மட்டுமே உயிர்பெறச் செய்யலாம் என்ற போது, மல்லுக்கு வீமன், வில்லுக்கு விசயன் என்றோரை விடுத்துச் சிற்றன்னை மந்தரிக்கு ஒருமகன் பிழைத்திருக்க நகுலனை எழுப்பித் தரும்படி வேண்டும் தருமனது நடுநிலையும் எமக்கு வழிகாட்டவல்லதே.

தன்னை நம்பி வந்து தருமனது தலை விழக் கூறியதாகப் பாரதப் போரில் களப்பலி கொடுக்க ஏற்ற சுபவேளை குறித்துத்தர வேண்டிய துரியோதனனுக்கு அவ்வாறே நாள் வைத்துக் கொடுக்கும் சகாதேவனை யும், அவன் செயலறிந்து அவனைப் பாராட்டும் தருமனையும் நாம் சந்திக்க முடிகின்றது களப்பலியூட்டு

சருக்கத்தில்.

படுபாதகமான முறையில் அபிமன்னனைக் கொன்றவனை மறுநாட்பொழுது சாயுமுன் கொல்வதாக அருச்சுனன் சபதஞ் செய்தனமையையும் அஸ்திரம் பெறக் கைலாயம் சென்றமையையும் துரியோதனனுக்கு அறிவிக்காவிடில் யுத்ததர்மம் ஆகாதென நினைந்து கடோற்கசனைப் பதின்மூன்றாம் நாளிரவில் துரியோதனன் பாசறைக்குத் தூதனுப்பும் தருமன் செயல் உலகம் போற்றிக் கற்கவேண்டிய பாடமாகும்.

## கன்னனும் அனுமனும்

மகாபாரதத்தில் வரும் கன்னன் முரண்பட்ட ஒருபாத்திரமாகக் காட்சி தருகின்றான். வீரமும், தற்பெருமையும் கொண்டவனாகச் காணப்படுபவன் கொடைத்திறமும், நன்றியுணர்வும் உடையவனாகவும் மிளிர்கின்றான். தந்தையாகிய சூரியனின் எச்சரிக் கையையும் பொருட்படுத்தாது தனதுயிர் காக்கவல்ல கவசகுண்டலங்களை இந்திரனுக்குக் கொடுக்கின்றான். போர்க்களத்தில் தேர்த்தட்டில் குற்றுயிராய் வீழ்ந்து கிடந்த நிலையில் இதயத்தில் பாய்ந்த அம்பை இழுத்துப் பெருகிய இரத்தத்தை ஏந்திக் தான் செய்த புண்ணியமனைத்தையும் கிருஷ்ணனுக்குத் தாரை வார்த்துக் கொடுக்கின்றான். புண்ணியத்தை தாரை வார்த்துக் கொடுத்ததும் தேர்த்தட்டில், அதுவரை அருச்சுனனது கணைமாரியிலிருந்து அவனைக்காத்து நின்ற தருமதேவதையின் உருவம் மறைந்து விடுகின்றது. கன்னன் கொல்லப்படுகின்றான். தான் செய்த புண்ணியத்தைத் தானே தானம் செய்தான். அதைத்தானம் செய்த புண்ணியமும் ஏன் கன்னனைக் காக்கவில்லை என்ற கேள்விக்கு இலக்கணம் விடைகூறுகின்றது.

***"ஒவிலாது யான் செய் புண்ணியம் அனைத்தும் உதவினேன்***
***கொள்க நீ."*** என்றே தானம் செய்கின்றான் கன்னன்.

'செய்புண்ணியம்' என்பது வினைத்தொகை. அது செய்தபுண்ணியம், செய்கின்ற புண்ணியம், செய்யும் புண்ணியம் என விரிந்து பொருள்படுகின்றது. ஆதலின் தாரைவார்த்துக் கொடுத்த புண்ணியத்தையும் உளப்படுத்தி வினைத்தொகை அமைத்த வில்லியின் கவித்திறம் எண்ணி எண்ணி இன்புறற் பாலதாகும். கொடைக்கன்னன் போன்ற ஒரு பாத்திரம் இராமாயணத்தில்லை. ஆதலின் கன்னன் பாத்திரம் மகாபாரதத்துக்குத் தனிப்பெருமை சேர்த்து நிற்கும் பாத்திரமேயாகும்.

அவ்வாறே, ஆற்றல், சேவை பக்தி யாவும் ஒருரு வெடுத்தது போன்று பொலியும் அநுமன் பாத்திரம் இராமாயணத்துக்குத் தனிச் சிறப்பு நல்கி நிற்பதைக் கண்டு மகிழ்கின்றோம்.

இவ்விருகாவியங்களையும் முழுமையாகக் கற்றுணர்ந்து பயனடைய வேண்டியது தமிழறிந்தார் யாவரதும் தலையாய கடமையாகும். இவற்றை ஒப்பற்ற காவியங்களாக்கித் தமிழிலே தந்த கம்பநாட்டாழ் வாருக்கும், வில்லிபுத்தூராழ்வாருக்கும் தமிழுலகம் என்றும் கடமைப்பாடுடையதாகும்.

பண்டைத் தமிழ் மொழியைப் -படித்துப்
பக்குவம் செய்து வைத்தோன்
கண்டின் சுவையெல்லாம் - சொல்லில்
கனியக் காட்டிடுவோன்
எவரும் போற்றிடவே-தமிழில்
இராம கதை புனைந்தோன்
புவனம் உள்ளவும் - அழியாப்
புகழ் பரந்திடுவோன்

*-கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை-*

# கம்பனும் காளிதாசனும்




## சிறு ஒப்பியல் நோக்கு

– திரு. கே. கே. சோமசுந்தரம் –

ஆழமான ஒப்பியல் நோக்கோடு வரையப்பட்ட கட்டுரை அன்று இது. இது ஓர் அறிமுக ஒப்பியற் கட்டுரை எனக் கொள்க.

சொல்லற்கரிய கவித் திறன் வாய்ந்த பெருங் கவிகள் ஒவ்வொருவரும், தத்தம் நிலையிற் சிறந்தவர் தாம். பல்வேறிடங்களில் ஒருவரை ஒருவர் விஞ்சி நிற்பதும், அவர்களிடம் காணப்படும் பேதா பேதங்களும் பெரும்பாலும், அவரவர் காலம் சூழ்நிலை காரணமாக நிகழ்பவையே என்பது அறிஞர் துணிபு.

காலத்தில் காளிதாசன் கம்பனுக்கு, சுமார் 800 ஆண்டுகள் முந்தியவன். காளிதாசன் வட நாட்டவன் கம்பன் தென்னகத்தான். ஆரிய மொழியினைக் கையாண்டவன் முன்னோன். பின்னோன் என்றுமுள தென்தமிழில் எழுதிப் போந்தவன்.

எனினும் ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகள் வரை அகில இந்திய ரீதியில் கற்றோர் மொழியாகவும், பின்னர் கற்றோர் தமக்குள் தொடர்பு கொள்ளும் சாதனமுமாயிருந்த வடமொழி, இலக்கியம், தத்துவம் ஏனைப் பல்வகைச் சாத்திரங்களையும் துறைபோகக் கற்கும் பெரு வாய்ப்பினைக் கம்பனுக்கு நல்கியது. ஆதி கவியாகிய வால்மீகி, நாடகம், காவ்யம் ஆகிய இரண்டிலுமே தலைசிறந்த காளிதாசன், மற்று பவபூதி, மாகன், ஸ்ரீ ஹர்ஷன் ஆகியோரின் ஆக்கங்களில் 'ஊறித்' திளைத்தான் கம்பன்.

'தென் சொற் கடந்தான் வடநூற் கடற்கு எல்லை கண்டான்' என்ற கம்பனது வாக்கு அவனுக்கே பெரிதும் பொருந்தும் என்பது ஆய்வாளர் கருத்தாகும். தவிர, கவிதையிற் பெரியன் என்னாது 'கல்வியிற் பெரியன் கம்பன்' என்ற உலக வழக்கு மொழி கம்பனது கல்வி மேம்பாட்டினைச் சுட்டி நிற்குமென்பதையும் உற்று நோக்குக.

எனவே தாம் பெற்ற இன்பம் வையமும் பெறுக என்பதிற்கமைய கம்பன் வடமொழித் தேர்ச்சி மூலம் பெற்ற எண்ணங்களையும் எண்ணப்படிமங்களையும் ஆங்காங்கு தன் காவியத்தில் பெய்து வெளிக் கொணர்ந்திருக்கிறான். 'இத்தகைய செயல் ஒரு மகாகவிக்குத் தக்கதன்று. கம்பன் ஒரு இலக்கிய கள்வன்' எனப் பழிசுமத்தும் விமர்சகர்களும் உளர். உண்மையில் இது கம்பனுக்கு ஒரு இழுக்கன்று. மாறாக, அவனது அரும்பெரும் கவிதா விலாசத்தினைப் புலப்படுத்தும் அம்சமாகும்.

இது எங்ஙனம்? கம்பன் இயற்கையிலேயே 'உணர்வினில் வல்லோனாகிய' பெருங் கவிஞனாதலின் தனக்குக் காலத்தால் முற்பட்ட பெருங் கவிஞர்களிடமிருந்து பெற்ற சிந்தனைகளையும் படிமங்களையும், தான் மேற்கொண்ட பொருள் விளக்கத்திற்கும் சந்தர்ப்பத்திற்கும் ஏற்றவாறு, 'ரசவாதம்' செய்து உபயோகித்துத் தனதாக்கிக் கொண்டான். இது கம்பன் மட்டும் மேற் கொண்ட புறனடைச் செயலன்று.

'செகசிற்பியர்' போன்ற ஏனை உலக மகா கவிகளும் தமக்கு முற்பட்டவர்களிடமிருந்து கடன் வாங்கி அவற்றிற்கு மேலும் மெருகு ஊட்டிச் சிறப்புற வமைத்துத் தமதாக்கிக் கொண்டனர் என இலக்கியம் நயப்போர் சொல்வர். செகசிற்பியரின் கூற்றிலேயே இக் கருத்து பின் வருமாறு:

*' 'To suffer a sea charge*
*Into something rich and strange Tempest'*

***'கடலுறு சிப்பி வானின் துளிபெற்று***
***அபூர்வ உன்னத முத்தென வாதல் போல்'***

இக்கருத்தினை நன்னூலாரும் ஒரோவழி சுட்டுகிறார் எனக்கொள்ளலாம்

*"முன்னோர் நூலின் முடிபொருங்கொத்து*
*பின்னோர் வேண்டும் விகற்பம் கூறி.....*
*அழியாமரபினது வழி நூலாகும்".*

இவ்விடத்தில் பின்னோன் வேண்டும் விகற்பம்' என்பதனை நோக்குக. காலம், சூழ்நிலைக் கேற்ப நூலில் மாற்றம் செய்தல் என்பாம்.

காளிதாசனின் கருத்து, படிமம் ஆகியவற்றின் செல்வாக்கு, கம்பராமாயணத்தில் காணப்படும் பற்பலவிடங்களிற் சிலவற்றைச் சுட்டிக் காட்டி, கம்பன் இந்தக் கடன் வாங்கும் கைங்கரியத்தினை எங்ஙனம் 'ரசவாதம்' செய்து தன்மயப்படுத்தி, தனதாக்கிக் கொள்கிறான் என்பதை இனிமேல் சிறிது ஆராய்வாம்.

இந்த இரு மகாகவிகளாலும் கையாளப்பட்ட ஒத்த சந்தர்ப்பங்களை நுனித்து நோக்கின், பெரும்பாலான விடங்களிற் கம்பனே இவற்றைச் சிறப்பாகக் கையாண்டிருக்கிறான் என்பதை நாம் காணமுடிகிறது. இதற்கு இரு புலவர்களுக்கு மிடையே நிலவக் கூடிய தாரதம்மிய வேறுபாடு காரணமன்று. காலத்தால் முந்தியவனாகிய காளிதாசனின் கவியினைக் கம்பன் நன்கு சுவைத்துப் பருகினான். பருக வாய்ப்புக் கிட்டியிருந்தது, என்பது மட்டும் தான். காரணம் வேறில்லை.

காளிதாசனில் இரகுவம்சத்தில், அரக்கர்களால் துன்புறுத்தப் பட்ட தேவர்கள் விஷ்ணுவிடம் சென்றது முறையிட்டு அவரைத் துதிக்கின்றனர்.

नमो विश्वसृजे पूर्वम्
तदनु बिभ्रते ।
अथ विश्वस्य संहर्त्रे
तुभ्यं त्रेधा स्थितात्मने ॥

'முன்னர் அண்டத்தைச் சிருஷ்டித்தலும், காத்தலும், பின்னர் அதனை அழித்தலுமாகிய மூவகைத் தொழிலை நிரந்தரமாகப் புரிகின்ற நின்னை வணங்குகிறோம்.

விஷ்ணுவின் துதியாக காளிதாசனில் அமைந்த இப்பாடலின் கருத்தினை, கம்பன் கடவுளது பொது இலக்கணமாக அமைத்து என்றும் நீங்காத விளையாட்டினை உடையவர் யார்? அவரே எங்களது தலைவர் எனவிளம்பி தனது காவியத்திற்கு கடவுள் வாழ்த்தாகத் தந்திருக்கும் சமரசப் பான்மை சுவைத்தற் குரியது மட்டுமன்றி போற்றுதற்குரியதுமாம்.

***உலகம் யாவையும் தாமுள வாக்கலும்***
***நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா***
***அலகிலா விளையாட்டு உடையார் அவர்***
***தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே.***

காளிதாசன் 'நின்னை' என உருவக் கடவுளைப் பூசிக்கிறான். கம்பன் படர்க்கையில் கூறி அருவக் கடவுளை, எல்லாவற்றிற்கும் அதீதமாக நிற்கும் பரம் பொருளை நாமரூபமின்றி வரைவிலக்கணம் கூறி வணங்குகிறான்.

கம்பன் விஷ்ணு பக்தனாக இருந்தாலும் சமயப்பூசல்கள் நிறைந்த பிற்காலச் சோழர் காலச் சூழ்நிலைக் கேற்ப, விசிஷ்ட அத்வதக் கொள்கையை ஏற்ற சர்வசமய சமரசவாதியெனக் கொள்ளலாம்.

*இரகுவம்சத்தில், இன்னொரு சந்தர்ப்பம்:*

'மணம் முடித்த பின்னர்' சீதை இராமருடன் அயோத்திக்கு வருங்கால் அவளைப் பார்க்க விழைந்த மகளிர் தத்தம் சாளரங்களூடாகப் பார்த்தனர். அதனாற் சாளரங்களெல்லாம் குவளைமலர்களாக மாறின' என்ற அர்த்தத்தில் வரும் அடிகள் கம்பன் கவி வண்ணத்தில் மெருகு ஊட்டப்பட்டு விந்தை செய்கின்றன.

पुरमविशदयोध्यां मैथिलीदर्शनानां
कुवलयितगवाक्षां लोचनैरङ्गनानां ॥

விஸ்வாமித்திரருடன் இராமரும் இலட்சுமணனும் மிதிலை வீதி வழியாகசெல்கின்றனர். வீதியின் இருமரங்கிலுமுள்ள சாளரங்கள் வழியாக இம்மூவரையும் காண விழைந்த நங்கையர்களின் முகங்கள் ஒவ்வொன்றும் சந்திரனைப்போல் காட்சியளித்தன.

***'சாளரந்தோறும் தோன்றும்***
***சந்திர உதயம் கண்டார்'***

இம்மூவரும் சென்ற நேரம் பின்மாலைப் பொழுதாகலின் (அடுத்து சூரிய அஸ்தமனம் கூறப்படுகின்றது) சந்திரன் உதயமாதல்

மிகப்பொருத்தமான தொன்று. இது நயப்புக்குரியது. காளிதாசன் காவியத்தில் பகல் இரவு பற்றிய குறிப்போ எதுவுமில்லை. சந்தர்ப்பத்திற் கேற்றவாறு கம்பன் குவளையினை சந்திரனாக மாற்றிக் கற்பனை செய்கின்றான்.

இன்னும் கம்பராமாயணத்திற்கு உரை காண்போர், சற்றுத் தடுமாறுகிற சந்தர்ப்பம் ஒன்று. அதனையும் எடுத்துக் காட்டுவாம்.

***ஆடக மாலவரை அன்னது தன்னை***
***தேடரு மாமணி சீதை எனும் பொற்***
***சூடகந் தோள்வளை சூட்டிட நீட்டும்***
***ஏடவிழ் மாலையி தென்ன எடுத்தான்.***

தனக்கு முன்னால் பொன்மலை போலக் கிடக்கின்ற வில்லை இராமன் இலகுவாகத் தூக்கி விடுகிறான். இலகுவாகத் தூக்கினான் என்பது இரு புலவர்களுக்கும் ஏற்புடைக் கருத்து.

காளிதாசன் இதற்கு பின்வரும் உவமை கூறி விளக்குவான்.

शैलसारमपि नातियत्नतः पुष्पचापमिव पेशलं स्मरः ।

'பெரிய மலையின் கனத்தினையுடையதாக விருந்தும் மன்மதன் தனது மென்மையான புஷ்ப வில்லைத் தூக்கியது போல், இராமன் வில்லினை அதிசிரமமில்லாமல் கையில் எடுத்தான் என்பது பொருள். மன்மதன் புஷ்பவில்லை எடுத்தலை மட்டும் உபமானமாகக் கூறுவான் காளிதாசன். ஆனால் கம்பனோ, காளிதாசனுடைய இரகுவம்சத்தில் ஆறாவது சர்க்கத்தில் காணப்படும் ஒரு நிகழ்ச்சியினை மனதில் உள்வாங்கிக் கொண்டு, அதனால் உந்தப்பட்டு மிக்க சுவையான உவமையினைக் கையாளுகிறான். காளிதாசனில் வரும் சந்தர்ப்பம்.

*பின்வருமாறு :*

'அஜனுக்கு இந்துமதி மாலை சூட்டுகிறாள் மாலையினை ஏற்ற அஜன் மாலையினை மாலையாக எண்ணாமல் இந்துமதியின் கையாகவே எண்ணி, இந்து மதியேதன் கைகளால் தன்னை ஆலிங்கனம் செய்து கொண்டிருப்பதாக நினைக்கிறான்.

अमस्त कण्ठार्पित बाहु पाशम्
विदर्भराजावरजा वरेण्यः ।
तया स्रजा मङ्गलपुष्पमय्या
विशालवक्षःस्थललम्बया ॥

காளிதாசனின் இந்த எண்ணப்படிமத்தினை ரசவாதம் செய்து தனதாக்கிக் கொள்ளும் கம்பனின் கற்பனாசக்தி சொல்லுந்தரமன்று.

'இராமன் வில்லை முறித்ததன் பின்னர் அதனை அறிந்து சீதை, மிக்க மகிழ்வோடு இராமருக்கு மணமாலை சூட்ட விழைந்து 'ஏடவிழ் மாலையினை எங்ஙனம் லாகவமாக எடுப்பானோ அது போல, இராமன் பொன்மலை போற் கிடந்த வில்லினை இலகுவாகத் தூக்கினான்.'

இரண்டு வெவ்வேறு இடங்களில் காணப்படுகின்ற காளிதாசனின் இருவேறு கருத்துக்களின் சங்கமித்தலிலிருந்தே கம்பன் மேற்கூறிய எண்ணப்படிமம் பிறக்கின்றது. இதனை ஒருவர் நன்கு உணரின் கம்பனின் கவிதா விலாசத்தினை ஒருவாறு அவரால் உய்த்தறிய முடியும் என நினைக்கிறேன். கம்பராமாயண உரையாசிரியர்கள், இராமன். வில்லைத் தூக்குதலாகிய சம்பவத்தைக் கூறும் செய்யுளுக்கு உரை எழுதுங்கால், இராமன் வில்லை முறித்தான் பின்னர், சீதைக்கு தான் சூட்டுவதற்கு நீட்டும் ஏடவிழ் மாலையினை லாகவமாகத் தூக்குவது போல மலைபோன்ற வில்லை எடுத்தான் எனச் சொல்வர் இது இம்மியேனும் பொருத்தமற்ற தென்பதற்குக் காளிதாசனின் படிமங்களைக் கம்பன் செம்மையுற உபயோகித்ததிலிருந்தே விளங்கும்.

மேலும், பெண்ணே முதலில் ஆணுக்கு மலர்மாலை சூட்டி மணவாளனாக வரித்தல் இந்து மரபாகும். இது தவிர சூடகந் தோள்வளை சூட்டிட என்பதை தோள்வளைக்குச் சூட்டிட என்று 4ம் வேற்றுமைத் தொகையாக விரிக்க முடியாது. ஏனெனில் தொல்காப்பியர் காலந்தொட்டு கொள்ளற் பொருளில் (கோடற் பொருளில்) 4ம் வேற்றுமைத் தொகை வருதல் அரிது.

எனவே சீதையே மாலையினை எடுத்துச் சூட்ட

முற்படுவது போல என உவமானத்தைக் கொள்ளலே ஏற்புடைத்தாம்.

மேலும், கல்வியிற் பெரியனாகிய கம்பன், தன் நாடு, தான் வாழ்ந்த காலம், சூழ்நிலை ஆகியவற்றின் விழுமியங்கள், பண்பாடு முதலியனவற்றிற்கு ஏற்ப முன்னைப் புலவர்களிடமிருந்து தான் பெற்ற சிந்தனைத் துளிகளை மாற்றியமைத்து ரசவாதம் செய்வதில் வல்லவன் என்பதற்கு ஒரு அர்த்தம் பொதிந்த உதாரணம்.

असंशयं क्षत्रपरिग्रहक्षमा यदार्यमस्यामभिलाषि मे मनः।
सतां हि संदेहपदेषु वस्तुषु प्रमाणमन्तःकरणप्रवृत्तयः॥

சகுந்தலையை முதன் முதலாகக் கண்ணுற்ற துஷ்யந்தன் பின்வருமாறு தனக்குள் எண்ணுகிறான்.

"யான் உயர்ந்த உள்ளம் படைத்தவன். எனினும் என் மனம் இவள் பாற் செல்கின்றது. எனவே இவள் நிச்சயமாக க்ஷத்திரியன் ஒருவனால் வரிக்கப் படத்தகுந்தவள். (அதாவது அனுலோமத்திற்கு ஏற்றவள்). தர்மசங்கடமான விஷயங்களிலெல்லாம் நல்லவர்களின் அந்தக் கரணப் பிரவிருத்தியே, பிரமாணமாகும்" இது காளிதாசன் கூற்று.

துஷ்யந்தன் பலதாரங்களையுடையவன். அக்கால வழக்கிற்கேற்ப ஒரு குலத்திற்கு ஒரு நீதி பேசும் மனுநெறிப்படி துஷ்யந்தனின் மனம் கன்னிப் பெண்ணாகிய சகுந்தலை அரசவம்சத்தவன் ஒருவனாலே மணம் முடிக்கத் தகுந்தவள் என்ற முடிவுக்கு வருகிறது. கம்பனின் கருத்து இதில் எப்படியிருக்கிறது?

மிதிலைக் கன்னிமாடத்தில் சீதையைக் கண்டுபோகின்ற ஸ்ரீராமன் தன் இருப்பிடத்திலிருந்தவாறு பின் வருமாறு நடந்தேறிய விடயத்தினைப் பற்றி மனதில் தர்க்கிக்கின்றான்.

'என் மனம் நல்வழியினை விட்டு விலகி என்றுமே தீயவழியில் செல்லாது. இருந்தும் என் மனம் இன்று இவளை நாடியது.' பாகுபோல் மொழிப் பைந்தொடியாகிய அந்தப் பெண் நிச்சயமாக கன்னிமை கழியா நங்கையாகத் தான் இருக்க வேண்டும் என்று நினைக்கிறான்.

காளிதாசன் கவியில் சுவை பயக்கும் அர்தாந்த்ரந்யாசம் (வேற்றுப் பொருள் வைப்பணி) பொதிந்திருந்தும், கம்பனது பாடல் எல்லாத் தேயத்தர்க்கும், எக்காலத்துக்கும் பொருந்த கூடிய விழுமியம் ஒன்றினைப் பற்றிப் பிரஸ்தாபிப்பதால் கற்றோரின் இதயத்தினைக் கூடக் களிப்படையச் செய்கின்றது.

துஷ்யந்தன் போலல்லாது ஸ்ரீராமன் ஏகபத்தினி விரதவிருப்புடையவன். ஆதலின் இக்கருத்தினை வெளிப்படுத்த கம்பன் உபயோகிக்கும் சந்தர்ப்பம் மிகப் பொருத்தமானதாகும்.

***ஆகும் நல்வழி அவ்வழி என் மனம்***
***ஏகுமோ இதற் காகிய காரணம்***
***பாகுபோல் மொழிப் பைந்தொடி கன்னியே***
***ஆகும். வேறிதற்கு ஐயுறவில்லையே.***

என்பது கம்ப வாக்காகும்.

கம்பனின் ரசவாதத்திற்கு மேலுமோர் திருஷ்டாந்தம். இரகுவம்சம் 13வது சர்க்கத்தில், இராமன் சீதையை மீட்டுக் கொண்டு புஷ்பகவிமானத்தில் செல்வதைப் பற்றிக் கூறுமிடத்து காளிதாசன் சரயுநதிபற்றிக் குறிப்பிடுகிறான். சரயுவைச் சுட்டிக் காட்டி இராமன் சீதைக்குச் சொல்லும் கூற்றாக அமைந்துவிடுகிறது.

கோசல நாட்டு மன்னர்க்கெல்லாம் ஒரு பொதுச் செவிலித்தாயாக சரயு அமைந்துள்ளது. (அரசனாகிய) எனக்கும் தாய்போன்றது.

सामान्य धात्रीम् इव उत्तरकोशलानां ।
सेयं नदीया जननी इव

கம்பன் இக்கருத்தினை இராமாயணத் தொடக்கத்தில் வரும் ஆற்றுப் படலத்திலேயே புரட்சிகரமான கருத்துச் சிறப்புடன் கையாளுகிறான்.

***'சரயு என்பது தாய் முலை அன்னது, இவ்***
***உரவு நீர் நிலத்தோங்கு முயிர்க்கெலாம்'***

மன்னரை மட்டுமன்றி சகல உயிர்களையும் போஷிக்கும் சிறப்பினையுடையது என்று கூறிக் காளிதாசனின் காலம் போலல்லாது மக்கள் நலனில் தான் வாஞ்சையுடையவன் என்பதை நுட்பமாக

உணர்த்துகிறான்.

இரு கவிகளும் தாடகை வதத்தைப் பற்றிக் கூறுமிடத்து பின்னால்நிகழவிருக்கும் இராவண வதத்தை வாசகர்களுக்கு நினைவூட்டுவர். இரகுவம்சம்

बाणभिन्नहृदया निपेतुषी सा स्वकाननभुवं न केवलाम् ।
विष्टपत्रयपराजयस्थिरां रावणश्रियमपि व्यकम्पयत् ॥

*'தாடகை இராமனின் அம்பு பட்டு வீழ்ந்த போது தான் வாழ்ந்த கானகப் பிரதேசத்தினை மட்டுமன்றி மூவுலகத்தையும் வென்று உள்ளடக்கிய இராவணனின் ஆதிக்கத்தையே நடுங்கச் செய்தாள்.'*

மேலும் 10வது சர்க்கத்தில் இராமஜனனத்தைப் பற்றிப் பேசும் போது இராமன் பிறந்த அந்த நேரத்தில் இராட்சத ராஜலக்ஷ்மியின் கண்ணீர்த்துளிகள், இராவணனின் கீரிடத்திலிருந்த இரத்தினங்கள் சிதறியது போல், பூமியில் வீழ்ந்தன எனக் காளிதாசன் பின்னால் விளையும் அனர்த்தத்தை நினைவூட்டுவான்.

இவ்விரண்டு எண்ணப்படிமங்களையும் கம்பன் இணைத்து மிகுந்த கற்பனை உணர்வோடு சாதுரியமாக இராவணனின் கேட்டினை உணர்த்தும் ஒரு பயங்கர துர்ச்சகுனமாகத் தாடகை வதத்தினைக் காட்டிவிடுகிறான்.

*'முடியுடை அரக்கர்க்கு அந்நாள்*
*முந்தியுற் பாத மாக*
*படியிடை அற்று வீழ்ந்த*
*வெற்றியம் பதாகை ஒத்தாள்*

எனக் கம்பன் குறிப்பான்.

இராவணனுடைய தேர் மீது கட்டப்பட்ட வெற்றிக் கொடி அறுபட்டு வீழ்ந்தது போலத் தாடகை வீழ்ந்தாள்.

வால்மீகியிலிருந்து கம்பன் வேறுபட்டு, கதைப் போக்கினை மாற்றி அமைக்கும் சிற்சில இடங்களில் நாடக கவிஞன் காளிதாசனுடைய செல்வாக்கு பளிச்செனத் தெரிகின்றது.

*உதாரணமாக :* மானபங்கமுற்ற சூர்ப்பணகை, இராவணனிடம் தானே சென்று முறையிடுவதாகக் காளிதாசன் சித்திரிக்கின்றான்.

रावणं प्रति राक्षसाः
तेषां शूर्पणखैवैका दुष्प्रवृत्तिहराऽभवत्

சூர்ப்பணகை மட்டுமே துர்ச் செய்தியினை இராவணனுக்கு நேரில் தெரிவிப்பாள் ஆனால்,

வால்மீகியில் துயரச் செய்தியினை அகம்பனன் என்ற ஓர் அரக்கன் இராவணனிடம் சென்று அறிவிப்பதாகச் சொல்லப் படுகிறது.

கம்பன் காளிதாசனைப் பின்பற்றி, மானபங்க மடைந்த தன் தங்கை தன் முன்னால் வீழ்ந்து கதறுவதைக் கண்ட தசக்கிரீவன் இடிமேல் இடித்து யாவர் செயல்? என்று கேட்பதாக நாடகப் பாங்கில் அமைந்திருக்கின்றான்.

*'மேகத்து இடித்த உருமொத்து உரறி யாவர் செயல்' என்றான்.*

ராமபட்டாபிஷேகத்தின் போது சுக்கிரீவன் விபீஷணன் சாமரை வீசுவதாகவும் சத்துருக்கினன் வெண்குடை கவிப்பதாகவும் வால்மீகி கூறிச் செல்வர். காளிதாசன் ஸ்ரீராமன் இரதத்தில் ஏறி அயோத்திக்கு வருங்கால் பரதன் வெண்குடை கவித்தனன், இலட்சுமண சத்துருக்னர் கவரி வீசினர் எனக் காளிதாசன் விளம்புவான்.

सौमित्रिणा सावरजेन मन्दमाधूतबालव्यजनो रथस्थः ।
धृतातपत्रो भरतेन

கம்பனும் காளிதாசனை ஒட்டி, பட்டாபிஷேகத்தின் போது 'இருவரும் கவரி வீச' பரதன் வெண்குடை கவிக்க என்பான்.

கம்பரசிகர்களுக்கும் கம்பனுக்கும் இடையில் புகுந்து அவனை செவ்வனே விளங்கித் துய்ப்பதற்கு, சிலவேளைகளில் கம்பனது மேதாவிலாசமே தடையாக நிற்கிறது. இத்தகைய இடர்பாடுகளை நீக்க, காளிதாசனில் காணப்படும் ஒத்த சந்தர்ப்பங்கள் துணைபுரிகின்றன.

உதாரணமாக

கைகேயி சூழ்வினைப்படலத்தில் வரும் வரிகள்

இவை ...... மதியினில் மறுத்துடைப்பாள் போல் அளக வாள் நுதல் அரும் பெறல் திலகமும் அழித்தாள்.

தசரதனிடம் வரம் கேட்பதற்குத் தன்னை ஆயத்தம் செய்து கொள்ளும் கைகேயி தன்னை அலங்கோலப் படுத்திக் கொள்கிறாள். சந்திரனிலுள்ள மறுவினைத் துடைப்பாள் போல் தன் முகத்திலிருந்த திலகத்தை அழித்துத் தன் அழகினைச் சிதைத்தாள்.

சந்திரனின் மறுவினை நீக்கினால் சந்திரனின் ஒளி மேலும் பெருகி அது அழகுறும், அதுபோல் நெற்றியிலுள்ள திலகத்தை அழித்தால் கைகேயின் அழகு சிதைவுறாது மேலும் பொலிவுறும் ஆதலின் கைகேயி தன்னை அலங்கோலப் படுத்தினாள் என்பதற்குக் கம்பனது இந்த உவமை பொருந்தாது என கம்பரசிகர்கள் வாதிடுவர்.

இவ்விடத்தில் எமக்கு இடர் விளைவிப்பது கம்பனது வட மொழிப் புலமையே.

காளிதாசனுடைய சாகுந்தலத்தில் ஒரு கட்டம் : மரவுரி தரித்த அழகிய ஆச்சிரம நங்கையாகிய சகுந்தலையைக் கண்ணுற்று பின்வருமாறு தனக்குள் மொழிகிறான் துஷ்யந்த மன்னன்.

" சந்திரனின் மறு கருமையாக இருப்பினும் அது சந்திரனுடைய அழகை மேலும் கூட்டுகிறது. அழகுடையார்க்கு எப்பொருள் தான் மேலும் அழகை அளிக்காது?."

मलिनमपि हिमांशोर्लक्ष्म लक्ष्मीं तनोति
किमिव हि मधुराणां मण्डनं न आकृतीनां।

இதன் பிரகாரம் சந்திரனுடைய மறு அதற்கு மேலும் அழகினைத் தரும் ஆதாரமாக அமைகிறது. அதனை நீக்கி விட்டால் அதன் அழகு குறைந்து விடும் என்பது தொனிப் பொருள்.

இக்கருத்தினை ஒட்டியே தன்முகத்திற்கு மேலும் அழகினை ஊட்டிய அழகு திலகத்தினை ( Beauty Spot) அழித்துத் தன் அழகைச் சிதைத்தாள் என்று கம்பன் கூறுவது மிக்க பொருத்தமாக அமைகிறது.

மேலும் திலகத்தை அழித்தல் அமங்கலமான ஒரு செயல், பின்வரும் கேட்டிற்கு ஒரு அடையாளமாக இது நிற்கும். மறு, மதிக்கு அழகினை நல்குவது மட்டுமன்றி அது சந்திரனிடத்துக் காணப்படும் இயற்கையுமாம். சந்திரனுடைய மறு நீங்கி அழகு குறைதல் கேட்டிற்கு அறிகுறி.

இக்கட்டுரையை முடிக்கும் முன் கம்பனில் காணப்படும் செருகுகவிகள் இரண்டினைப்பற்றி குறிப்பிட வேண்டி இருக்கிறது செருகுகவிகள் இரண்டிற்கு ஊற்றாக அமைந்து கற்றோர் சிந்தையினை மயங்க வைத்திருக்கிறது. அயோத்தியா காண்ட தொடக்கத்தில் தசரதனைப் பற்றிய காளிதாசன் சுலோகம் ஒன்று. இருமொழி வல்லுனராகிய புலவர்களிற் சிலர் கம்பன் மீதுள்ள அபிமானத்தினால், காளிதாசனின் செல்வாக்கு கம்பனில் ஆங்காங்கு இழையோடுவதைக் கண்ணுற்று, காளிதாசனின் கவிதையின் மொழிப் பெயர்ப்பே என்று சொல்லக் கூடிய இடைச் செருகல்களைப் புகுத்தியிருக்கின்றனர். இங்ஙனம் போர்விழையாத போலிக்கவிஞர் ஒருவர் இரு கவிதைகளை எழுதி அயோத்தியா காண்டத் தொடக்கத்தில் சேர்த்திருக்கின்றார். இங்கு நாம் குறிப்பிடும் இடைச் செருகல்களிற்கு ஆதாரமாக அமைந்திருப்பது இரகு வம்சத்திலுள்ள பன்னிரண்டாம் சர்க்கத்திலுள்ள இரண்டாம் சுலோகம் அது பின்வருமாறு.

[illegible] कर्णमूलमपात्य रामे श्रीन्यस्यतामिति।
[illegible] पलितच्छद्मना जरा॥

***நரைத்த மயிர் என்ற போர்வையில் வயோதிபமானது "இராமனுக்கு ராஜ்ய பாரத்தை அளிப்பாயாக" என்று காதிற்குள் கழறியது.***

இதனைப் போலிப் புலவர் பின்வருமாறு எழுதிச்சேர்த்துள்ளார்.

***"மன்னனே அவனியை மகனுக்கீந்து நீ
பன்னரும் தவம்புரி பருவம் ஈதெனக்
கன்ன மூலத்திலே கழற வந்தென
மின்னெனக் கருமைபோய் வெளுத்ததோர்
மயிர்"***

***"தீங்கிழை இராவணன் செய்த தீமைதான்
ஆங்கொரு நரையதாய் அணுகிற்று"***

இவ் இரு இடைச்செருகல்களும் கடந்த பல நூற்றாண்டுகளாகக் கற்றோர் சிந்தை மயங்க வைத்திருக்கிறது. இந்த மயக்கத்தினை நீக்குமுகமாக பி.ஸ்ரீ.போன்ற இக்கால ஆராய்ச்சியாளர்கள் இக்கவிகள் இரண்டும் இடைச் செருகல்கள் என தக்க ஆதாரங்கள் காட்டி நிரூபித்திருக்கின்றனர்.

இரு மகா கவிகளிற்கிடையே இரசிகர்கள் சிலர் ஆழ்ந்த நோக்கின்றி தொடர்பினை ஏற்படுத்த எத்தனிக்கும் முயற்சிகள் கம்பரசனையையே ஊறுபடுத்துகின்றனவாக அமையும் என்பதற்கு இப்போலிகளே தக்க சான்று.

முடிவாக கம்பனை நாம் செவ்வனே துய்க்க வேண்டுமாயின் அவனது மேதாவிலாசத்தினை நன்கு தெரிந்து அவனது கவிதையில் காணப்படும் எண்ண விம்பங்களை ஆராய்ந்து உணரவேண்டுமாயின் கம்பனிற்கு முற்பட்ட புலவர்களின் கவிதைகளை யாம் கற்றலும் இன்றியமையாதது ஆகும். தனக்கு முன்னோர் தந்த சிந்தனைகளையும் எண்ணப்படிமங்களையும் எங்ஙனம் பெரும் சாதுர்யமாகவும் புலமை உணர்வோடும் உபயோகிக்கிறான் என்பதே கம்பனின் புலமையை மதிப்பிடும் அளவுகோலாகும்.

விருத்தப் பாவினிலே –கருத்தை
விளங்கச் செய்தளித்தோன்
திருத்தம் பெற்ற நடை– தமிழில்
தெரியக் காட்டி நின்றோன்

*–கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை–*

# கம்பனும் அவன் தோழர்களும்



## கவிஞர் - இ - முருகையன்

"'வாழும் கவிஞர்களின் உலகப பெருமன்றம்' ஒன்றை அமைக்க விரும்புகிறோம். இதில் ஒவ்வொரு மொழிக்கும் மூன்று பேராளர் வீதம் சேர்த்துக் கொள்ளப் படுவார்கள். தமிழ் மொழியின் பேராளர்களாக மூவரைத் தெரிவு செய்து அனுப்புமாறு கேட்டுக் கொள்ளுகிறோம்."

இப்படி ஒரு கடிதம் சுப்பிரமணிய பாரதிக்கு வந்தது என்று கற்பனை செய்து பார்ப்போம்.

பாரதி என்ன செய்திருப்பான்?

கண்ணை மூடிக்கொண்டு கம்பன், வள்ளுவன், இளங்கோ ஆகிய மூவரின் பெயர்களையும் பாரதி முன் மொழிந்திருப்பான். நாலு பேராளர்கள் அனுப்பலாம் என்று கேட்கப்பட்டிருந்தால் ஒரு வேளை அவன் தன்னுடைய பெயரையும் பட்டியலிலே சேர்த்திருத்தல் கூடும்.

ஒவ்வொரு மொழிக்கும் ஒவ்வொரு பேராளர் தான் நியமிக்கலாம் என்பது விதியானால், தமிழின் சார்பிலே யாரை அனுப்பலாம்?

சந்தேகம் என்ன? கம்பனைத் தான்.

அவ்வாறே வடமொழியின் சார்பிலே காளிதாசனும் ஆங்கிலத்தின் சார்பிலே ஷேக்ஸ்பியரும் அந்த உலகப் பெருமன்றில் இடம் பெறுவார்கள்.

கம்பனை மகாகவி என்றும் கவிச்சக்கரவர்த்தி என்றும் குறிப்பிடுவது நம்மவர் வழக்கம். அவ்வாறே காளிதாசனும் ஷேக்ஸ்பியரும் மகாகவிகளின் வரிசையைச் சேர்ந்தவர்கள்.

இந்த முப்பெருங் கவிஞரின் கலை நலத்திலே சில வியக்கத் தக்க ஒற்றுமைகள் உண்டு. பதச்சோறு போல மூன்று நான்கு இடங்களை இந்தக் கட்டுரையிலே தொட்டுக் காட்டுவோம். இவை வகைமாதிரியான எடுத்துக் காட்டுகளே தவிர முழுமையான ஆய்வு அல்ல. முழுமையான ஆய்வு பன்மொழிப் புலமையாளர்களால் விரிவாக மேற்கொள்ளப்பட வேண்டியது.

அவர்கள் அந்த ஆய்வைச் செய்து கொண்டு இருக்கட்டும். நாங்கள் முதலிலே காளிதாசனைச் சந்திப்போம். பின்னர் கம்பனிடம் வருவோம்.

## 2

காளிதாசன் நாடகாசிரியன் அவனுடைய நாடகங்கள் கவிதை தழுவி வருவன. ஒரு வகையிலே அவை கவிதை நாடகங்கள்.

மகாகவி காளிதாசனின் நாடகங்களில் ஒன்று 'அபிஞான சாகுந்தலம்'. சுருக்கமாக அதனைச் 'சாகுந்தலம்' என்றும் சொல்லுவதுண்டு. சாகுந்தலத்தின் தொடக்கத்திலே ஒரு தேரோட்டம் வருகிறது. தேர் படுவேகமாக ஒடுகிறது. அந்த வேகத்தை உணர்த்து வதாக ஒரு செய்யுளை அமைக்கிறான் காளிதாசன். கதாநாயகனின் கூற்றாக அந்தக் கவிதை அமைகிறது.

*"யதாலோகே ஸூக்ஷ்மம் வ்ரஜதி ஸஹஸா தத் விபுலதாம்*
*யதர்தே விச்சின்னம் பவதி க்ருதஸந்தானமிவ தத் |*
*ப்ரக்ருத்யா யத்வக்ரம் தததி ஸமரேகாம் நயநயோர்ந*
*மே தூரே கிஞ்சித் க்ஷணமபி ந பார்ஸ்வே ரதஜவாத் ||"*

தேரோட்டத்தின் வேகத்தினாலே நுண்ணியது பெரிதாகிறது; பகுதி பட்டுள்ளவைகள் தொடர்ச்சி பெற்று முழுமையான வரிசையாய்த் தெரிகின்றன. இயற்கை யிலே வளைகோடுகளாயுள்ளவை நேர்கோடுகளாய்க் காண்கின்றன; எந்தவொரு பொருளும் ஒரு நொடிப் பொழுதுக்கு எனினும் தூர உள்ளவையாய்த் தோன்ற வில்லை; கிட்ட உள்ளவையாயும் தெரியவில்லை.

இது காளிதாசனின் கற்பனை. வெறும் கற்பனை அன்று இக்காலத்துக் கடுகதி வண்டிகளிற் செல்லும் போது நாம் கண்கூடாகப் பெறக் கூடிய ஓர் அநுபவம்.

தூரத்திலுள்ள பொருள் கிட்ட வரும்பொழுது பெரிதாகத் தோற்றம் தருவது எல்லாருக்கும் தெரியும். மேலை நாட்டு ஓவியக் கலையிலே நோக்குநிலைத் தோற்றம் (பேர்ஸ்பெக்ற்றிவ்) என்னும் தத்துவம் பிரதான

இடத்தைப் பெறுகிறது. நவீன ஓவியர்கள் இதுபற்றி அதிகம் கவலைப்படுவதில்லை. ஆயினும் தொல்சீர் ஓவியர்கள் இந்த அம்சத்தில் நிரம்பிய அக்கறை கொண்டிருந்தனர்.

இக்காலத்திலே திரைப்படம், தொலைக்காட்சிப் படம் என்பவற்றைப் பார்க்கும் பழக்கம் சிறியவர்கள் தொடக்கம் முதியவர்கள் வரை எல்லாருக்கும் உண்டு. திரைப்படங்களிலே தூரத்தில் ஒரு வண்டி சிறியதொரு புள்ளியாகத் தெரிகிறது. இந்த வண்டி நம்மை நோக்கிக்கிட்டக் கிட்ட வரும்பொழுது, பெருத்துப் பெருத்து வந்து படக்காட்சித் திரை முழுவதையுமே நிரப்பி விடுகிறது. அண்மைக் காட்சிகளிலே (க்ளோசப்பிலே) முகங்களை மாத்திரம் பெரிதாகத் தெரியுமாறு காட்டுவது திரைப்படங்களில் அடிக்கடி கையாளப்படும் ஓர் உத்தியாகும். இந்த உத்தியின் அடிப்படையிலே கேத்திர கணித/ஒளியியற் கோட்பாடொன்று உண்டு. அந்தக் கோட்பாட்டைத் தனது உள்ளுணர்வினாலே கிரகித்துக் கொண்ட காளிதாசன், தேரோட்டத்துக்கு அதனைப் பிரயோகிக்கிறான். பிரயோகிப்பதனாலே நுண்ணியது பெரியதாகும் படக் காட்சியைச் சொல்லோ வியமாகக் காட்டுகிறான்.

அடுத்து, பிரிநிலைப் பட்டவைகள் முழுமைத் தோற்றம் காட்டுவது பேசப்படுகிறது. கொள்ளிக்கட்டை யொன்றைச் சுழற்றிப் பார்த்தால், புள்ளி வடிவிலுள்ள கொள்ளி, தொடர்ச்சியான ஒளிக் கோடாக அல்லது ஒளி வட்டமாகக் காட்சி தருகிறது. இந்தத் தோற்றப்பாடு காட்சி நிலைப்பாடு எனப்படும். நம் கண்ணிலே படும் ஒரு காட்சி, கணப்பொழுதிலே சடுதியாக நீங்கிவிட்டாலும் அந்தக் காட்சி அநுபவம் தொடர்ந்து சில கணங்களுக்கு (ஒரு நொடிப்பொழுதின் குறிப்பிட்டதொரு பின்னத்தளவு காலத்துக்கு) நமது புலக்காட்சியிலே நிலைத்து நிற்கிறது. இது 'பெ'சிஸ்ற்றன்ஸ் ஒஃவ் விஷன்' எனப்படும். சினிமாப் படத்திலே, ஆடாத (நிலைத்த) படங்களின் இடையீடு பட்ட கணநிலைக் காட்சிகள் தொடர்ந்து ஆடும் படங்களாகத் தெரிவதன் அடிப்படை இதுதான். 'க்ருத சம்தானம்' என்று காளிதாசன் இதைச் சொல்லு கிறான்.

வேகமாகச் சுழலும் மின் விசிறியின் சிறகுகள் தனித்தனியாக நமது கண்களுக்குப் புலப்படுவதில்லை. அவ்வாறுதான், வண்டி வேகமாக ஓடும்போது, சில்லி லுள்ள சிலைக்கம்புகள் தனித்தனியாகத் தெரிவதில்லை.

அடுத்து, இயல்பிலே வளைவுள்ள கோடுகள் வேகமாக அசையும்பொழுது நேர்கோடுகள் போன்று புலப்படுவது கூறப்படுகிறது.

நுண்ணியது பெரிதாதலும், பிரிநிலைப் பட்டது தொடர் நிலை பெறுவதும், வளைந்தது நேராவதும் வேகமான இயக்கத்தின்போது ஏற்படும் காட்சி அநுபவங்கள். இவற்றை நுணுக்கமாக எடுத்துக் கூறி உணர்த்துகிறான் காளிதாசன். அவனுடைய காட்சி நுட்பமும் சொல்லாற்றலும் இங்கு புலப்படுகின்றன.

காளிதாசன் விமானத்திலோ கடுகதித் தொடர் வண்டியிலோ ஏறியவன் அல்லன். ஒரு வேளை குதிரைச் சவாரி செய்திருக்கலாம். என்றாலும் 'படுவேகமான இயக்கம்' என்னும் அநுபவத்தைத் திறம்படப் படஞ் செய்யும் ஆற்றலை நாம் அவனிடம் காண்கிறோம்.

இனி நாம் கம்பனிடம் வருவோம். வேகமான இயக்கம் பற்றிய வருணனைகள் கம்பன் காவியத்திற் பல இடங்களில் வருகின்றன. இவை யாவற்றையும் தொகுத்து ஒப்பு நோக்கினாலே பெரும் பயன் விளையும். ஒரே ஓர் இடத்தை மாத்திரம் நாம் இங்கு உற்று நோக்கு வோம்.

மிதிலைக்காட்சிப் படலத்தில் வரும் ஒரு பாட்டே நம் கவனத்துக்கு உரியது. பாட்டு இது தான்

*"கொட்புறு கலினப் பாய்மா*
*குலால் மகன் முடுக்கி விட்ட*
*மட்கலத் திகிரி போல*
*வாளியின் வருவ மேலோர்*
*நட்பினில் இடையறாது*
*ஞானிகள் உணர்வின் ஒன்றாய்க்*
*கட்புலத்து இனைய என்று*
*தெரிவில தெரியக் கண்டார்"*

மிதிலை நகரின் வீதிகளூடாக, இராமனும் இலக்குவனும் கோமுனியாகிய கோசிகனும் போகி றார்கள். அந்த வீதியொன்றிலே படுவேகமான குதிரைச் சவாரி நடக்கிறது. அந்த வேகத்தை – வேகம்பற்றிய உணர்வை – நம்மீது தொற்ற வைத்து விடுவது கம்பனின் நோக்கம்.

குலால் மகன் என்பவன் குயவன். பானை, சட்டி முதலான மட்கலங்களை வனைவதற்குச் சக்கரம் பயன் படும். அதுதான் திகிரி. அந்தத் திகிரியை வேகமாகச் சுழற்றிக்கொண்டுதான் மட்கலங்களை வனைவார்கள். திகிரி சுழலும்பொழுது அதன் சிலைக்கம்புகள் தனித்தனி யாகப் புலப்படுவதில்லை. அள்ளியெறிந்து கொண்டு போகும் ஒரு வீச்சான வட்டப் பரப்பு மாத்திரமே தெரிகிறது. தனித்தனிக் காட்சிகள் நமது மூளையிலே தொடர்ந்து நிலைத்து நிற்பதனால் உண்டாகும் ஒரு தொடர்ச்சித் தோற்றமே அது. அந்தத் தொடர்ச்சியை அல்லது தொடரியைத் தான், அந்த ஸீக்குவென்ஸைத் தான் 'சம்தானம்' என்றான் காளிதாசன்.

குதிரையின் ஓட்டத்துக்கும் திகிரியின் சுழற்சிக்கும் ஒப்புமை காண்கிறான் கம்பன். குதிரை பாய்வது, அம்பு பாய்வது போல இருக்கிறது என்றும் சொல்லுகிறான், அவன். வாளியின் வருவ – அம்புபோல வருகின்றன.

கம்பன் அவ்வளவில் நிறுத்தவில்லை. வேறுமோர் உண்மையை நினைவு கூருகிறான். ஞானிகள் மெய்ப்பொருளைக் காணும் காட்சி மாசறு காட்சி எனப்படும். வள்ளுவன், காட்சி என்னுஞ் சொல்லை அடிக்கடி கையாண்டுள்ளான். ஞானம் என்னும் கருத்தில் அது வருகிறது. ஞானம் என்பது அறிவு. இது இரு வகைப்படும். ஒன்று சுட்டறிவு; மற்றது வாலறிவு–முற்றறிவு.

சுட்டறிவு என்பது பொருள்களை அது, இது, உது என்று வேறுபடுத்தி அறிவது. ஒற்றுமை வேற்றுமைகளைக் கண்டு, ஒன்றுடன் மற்றொன்றைச் சார்பு படுத்தி அறிவது. சுட்டறிவு – சார்பறிவு – நிலேற்றிவ் நொலெட்ஜ் அது தொடர்பியல் அறிவு.

பருப்பொருள்களை அதாவது தூலப் பொருள்களைக் கட்புலனால் நாம் கிரகித்துக் கொள்ளலாம். இவையிவை இன்ன இன்ன தன்மை உடையன என்று தெரிந்து கொள்ளலாம். 'கட்புலத்து இனைய என்று' தெரிந்து கொள்ளலாம். இப்படித் தெரிந்து கொள்வது சுட்டறிவு.

ஞானிகளின் அநுபவம் அவ்விதம் பிரிநிலைப்பட்டது அன்று. அது அனைத்தையும் ஒருங்கே முழுமையாக உணர்ந்து கொள்ளும் பேரறிவு. 'உணர்வின் ஒன்றாய்க்' காணும் முற்றறிவு.

குதிரை வேகமாக ஓடும்போது அதன் முன்னங்கால் எது, பின்னங்கால் எது, வால் எது, வயிறு எது என்று பிரித்துப் பிரித்துக் காண இயலாது முழுமையான ஒரு காட்சியே தெரியும்.

குதிரை ஓட்டத்தில் வைத்து, ஞானிகளின் உணர்வு முறையின் ஓர் அம்சத்தை நினைவூட்டுகிறான் கம்பன். கம்பனின் குதிரைச் சவாரி சக்கரத்தின் சுழற்சி போலவும் இருக்கிறது. அம்பின் பாய்ச்சல் போலவும் இருக்கிறது. ஞானிகளின் முற்றுணர்வு போலவும் இருக்கிறது.

தேரோட்டத்தைப்பற்றிப் பேச வந்த காளிதாசன் பவுதிகமான சில அவதானிப்புகளுடன் நிறுத்திக் கொண்டான். சிறியது பெரியதாய்த், தெரிவதும் பகுதிபட்டமுழுமையாய்த் தெரிவதும் வளைந்தது நேராய்த் தெரிவதும் காளிதாசனின் அவதானிப்புகள்.

கம்பனின் அவதானிப்புகள் பவுதிக நிலைக்கு அப்பாலும் செல்லுகின்றன. தூல நிலையிலிருந்து சூக்கும நிலைக்கு அவை தாவுகின்றன.

மட்கலத் திகிரியையும், வாளியையும் மட்டும் அல்லாமல், 'மேலோர் நட்பினில் இடையறாது ஞானிகள் உணர்வின் ஒன்றாய்' உணரும் உணர்வு நிலையையும் கம்பன் தொடர்பு படுத்துகிறான். குதிரையும், சக்கரமும், அம்பும், ஞானமும் கம்பன் காட்சியில் ஒன்றிணைகின்றன.

கடுக்தி என்னும் எண்ணக்கருவைக் காளிதாசனும் கம்பனும் கையாண்டுள்ள முறைமையை ஓர் உதாரணங்கொண்டு விளங்கிக் கொள்ள முயன்றோம்.

## 3

இனி நாம் ஷேக்ஸ்பியரிடம் போவோம்.

ஷேக்ஸ்பியரும் நாடகாசிரியன் தான். காளிதாசனைப் போல அவனும் கவிதை நாடகக் காரன்.

ஷேக்ஸ்பியரின் நாடகங்களில் ஒன்று 'அன்ற்றனி அன்ட் கிளியப்பெற்/றா' என்பது. அதிலே அன்ற்றனியின் வீரத்தை வருணிக்கும் இடங்கள் பல வருகின்றன. அவற்றுள் ஓர் இடத்திலே பின்வரும் குறிப்புரை காணப்படுகிறது. நாடகத்தின் தொடக்கத்தில் இது வருகிறது. அப்பகுதியின் தமிழாக்கத்தை இதோ தருகிறோம்.

*"சே, நம் தளபதியின் முற்றற் சிறு காமம்*
*எல்லை கடந்தே இழிகிறது. போர்க்களத்துப்*
*பேரணிகள் மீது பிரபை மிகு செவ்வாய்*
*போல ஒளிர்ந்த விழிகள், பொது நிறத்துத்*
*தோலில் திரும்பித் தொழும்பு புரிந்திறைஞ்சும்*
*நெஞ்ச வார்ப்பூட்டை நெருடித் தெறிக்க வைத்து*
*விம்மிப் புடைத்து வெகுளும் அவர் இதயம்*
*தன்னடக்கம் கெட்டது. சீ! தாழ்ந்த ஒரு குறத்தி*
*கொண்டிருக்கும் காமம் குளிர்த்தும் விசிறியாய்,*
*ஊதும் துருத்தியாய் உள்ளதடா........."*

அன்ற்றனி, ஒக்ற்றேவியஸ் சீசர், லெப்பிடஸ் என்போர் றோமப் பேரசை ஆண்ட மும்மூர்த்திகள். இந்த அன்ற்றனிதான் ஜூலியஸ் சீசர் நாடகத்தில் வரும் மாக் அன்ற்றனி. இவன் எகிப்திய அரசியாகிய கிளியப்பெற்/றா மீது தீராத மையல் பூண்டுள்ளான்.

பெருவீரனான அன்ற்றனி காமக் களியாட்டத்தில் ஈடுபட்டுத் திரிகிறானே என்ற இரங்கல் உணர்வினால், ஃபிலோ என்பவன் மேற்கண்டவாறு பேசுகிறான். இங்கு 'தாழ்ந்த ஒரு குறத்தி' என்று குறிக்கப்படுகிறவள் கிளியப்பெற்/றா.

அன்ற்றனியின் போர்த்திறனும் வீரமும் வியந்து பேசப்படுவதனையும் இங்கு நாம் அவதானிக்கலாம். போர்க் களத்தின் பேரணிகள்மீது பிரபை மிகுந்த செவ்வாய்க் கிரகம் போல அவனுடைய விழிகள் ஒளி வீசினவாம். மேற்குலகத்துப் புராண மரபுப்படி செவ்வாய் போரின் அதி தேவதை ஆகும்.

போர் நிகழ்ச்சியின்போது அன்ற்றனி சீற்றம் கொள்ளும்போது அவனுடைய இதயம் விம்மிப் புடைக்குமாம். அப்பொழுது அவன் மார்பில் அணிந்த கவசத்தின் பூட்டுகள் (ப'க்கிள்கள்) தெறித்து விழுமாம். அதனாலே தான்,

*"நெஞ்ச வார்ப்பூட்டை நெருடித் தெறிக்க வைத்து*
*விம்மிப் புடைத்து வெகுளும் அவர் இதயம்"*

என்று கூறப்பட்டுள்ளது. வீரத்தினால் மார்பகம் விரியும்போது அன்ற்றனியின் நெஞ்சக் கவசத்தின் பூட்டுகள் நொறுங்குகின்றன,

".... his captain's heart
Which in the scuffles of great fights hath burst
The buckles on his breast....."

என்பன ஷேக்ஸ்பியர் பயன்படுத்தும் சொற்கள். போர் என்றதும் பூரித்து விம்மும் மார்பகம் அன்ற்றனியின் மறத்திறலை உணர்த்தும் மெய்ப்பாடு ஆகிறது.

இனி நாம் கம்பனிடம் வருவோம். நாம் இப்பொழுது பரிசீலிக்கப்போகும் கட்டமும், வீரத்துடனும் காதலுடனும் (காமத்துடனும்) தொடர்புடையதுதான். இராமபிரான் சிவதனுசை ஒடித்தான். அவனுடைய ஆற்றலைக் காட்டுவது அந்தச் செய்கை.

"எடுத்தது கண்டனர்; இற்றது கேட்டார்" என்று மிகவுஞ் சுருக்கமாகவே, நறுக்குத் தெறித்தாற் போல இதனைக் கம்பன் சொல்லி முடித்து விடுகிறான்.

வில் முறிந்த செய்தி சீதையிடம் சொல்லப் படுகிறது. அவளது மெய்ப்பாடு எப்படி இருந்தது?

கம்பனே சொல்லட்டும்.

***"கோமுனி பின்வரு கொண்டல் என்ற பின்,***
***தாமரைக் கண்ணினான் என்ற தன்மையால்***
***ஆம் அவனே கொல் என்று ஐயம் நீங்கினாள்***
***வாம மேகலை இற வளர்ந்தது அல்குலே"***

சீதையின் மறுபலிப்பும் (றெஸ்போன்சும்) ஒரு பூரிப்புத்தான். அவளது அங்கம் பூரிக்கின்றது. அதனால் அவள் இடுப்பில் அணிந்த மேகலை என்னும் பூணாரம் பட்டென்று அறுந்து போய் விடுகிறது.

அன்ற்றனியின் பூரிப்பு மார்புக் கவசத்தின் பூட்டை நெருடித் தெறிக்க வைத்தது. அது வீரப் பூரிப்பு அவனுடைய வீரத்தை அந்த முறையில் உணர்த்தியவன் ஷேக்ஸ்பியர்.

சீதையின் பூரிப்பு இடுப்பிலணிந்த மேகலையை அறுந்து போகும்படி செய்தது. அது காதற் பூரிப்பு. அவளுடைய காதலை அந்த முறையில் உணர்த்தியவன் கம்பன்.

வீரமும் காதலும் கலை இலக்கியங்களின் உரிப்பொருள்களாக முதன்மை பெறுவது நெடுநாள் வழக்கு. இந்த வழக்குகளையும் ஒழுக்கங்களையும் வகுத்தும் தொகுத்தும் அகம் புறம் என இலக்கணங் கண்டனர் பழந்தமிழர். உலகத்துப் பழங் காப்பியங்கள் யாவும் வீரத்தையும் காதலையும் பாடத் தவறவில்லை. நவீன காலத்திற்கூட வன்செயலும் பாலியலும் கலை இலக்கியங்களில் முதன்மை பெறுதல் வெளிப்படை, வீரத்தில் வன்செயலும், காதலிற் பாலியலும் சம்பந்தப் பட்டிருத்தல் தெளிவு. இவ்வாறு கலையிலும் வாழ்க்கை யிலும் கூட முன்னிடம் பெறும் இந்த உணர்வுகளை வெளிப்படுத்தும் முறையில், கம்பனிடமும் ஷேக்ஸ்பியரி டமும் காணப்படும் ஒற்றுமை உற்று நோக்கத்தக்கது.

## 4

ஷேக்ஸ்பியரையும் கம்பனையும் ஒப்பிட்டுக் காண்பதற்கு வாய்ப்பான மற்றும் ஒரு சோடி உதா ரணத்தை இனிப் பார்க்கலாம். இதுவும் 'அன்ற்றனியும் கிளியப்பெற்/றாவும்' என்னும் நாடகத்தில் வரும் ஒரு கட்டத்துடன் தொடர்பு பட்டதுதான்.

எகிப்திய அரசி கிளியப்பெற்/றா பேரழகி. அவள் காமம் களியாட்டங்களிற் பெரிதும் ஈடுபாடு கொண் டவள்; சாகசக்காரி. அவளிடம் மையல்கொண்டு தன் வசமிழந்த மாக்அன்ற்றனி அவளே தஞ்சமெனக் கிடந்தான். அவளைப்பற்றிப் பின்வருமாறு கூறப் படுள்ளது.

*"Age cannot wither her nor custom stale her infinite variety....."*

இப்பகுதியின் தமிழாக்கம் பின்வருமாறு

***"காலத்தால் தேம்பாக் கவினாள்; அனந்த வகைப்***
***பல்சுவையோ நீண்ட பழக்கத்தாற் சாம்பாதே.***
***உண்ணிற் பசியை ஒழிக்கும் பிற பெண்கள்***
***ஊட்டித் தெவிட்ட, உவளோ நிறைவித்து***
***மீட்டும் பசியே விளைவிப்பாள்; வேசைமையும்***

*அன்னாளோ டொன்றின் அவளாகும். ஆகையினால்*
*தூய குருக்கள் தொழுவார்கள்–வாழ்த்திடுவார்."*

பரத்தைக்குரிய பண்புகள் கூட, அவளுக்குப் பொருந்தி வருவதனால், வணக்கத்திற்குரிய குருமார்கள் கூட அவளைத் தொழுவார்களாம்; வாழ்த்துவார்களாம். அந்தக் குணங்கள் அத்தனை இயல்பாக அவளுடைய ஆளுமையுடன் இசைந்து வருகின்றன.

இத்தனை சிறப்புத் தேர்ச்சிகளை உடைய அந்தச் சாகசக்காரி பகட்டும் ஆடம்பரமும் படைத்தவள். படாடோபமும் ஆட்சி மிடுக்கும் உள்ளவள். பரிவாரங் களும் எடுபிடிகளும் அவளைச் சுற்றியவாறே இருக்கும் சகல உபசாரங்களுடனும் சம்பிரமங்களுடனும் அவள் பவனி வருவாள். ஒரு சமயம் அவள் ஆற்று நீரில் மிதந்து கொண்டிருந்த தோணியொன்றில் அமர்ந்திருந்தாளாம். அந்தக் காட்சியை இனோபாபஸ் என்பவன் வாய்மொழி யாக ஷேக்ஸ்பியர் வருணிக்கிறான்.

*The barge she sat like a burnish'd throne Burned on water......"*

என்று அந்த வருணனை தொடங்குகிறது. தோணியின் அலங்காரமும் அரசியின் சோடனையும் அவளது காமக்களியாட்ட விருப்பங் கமழும் வகையிலே சொல்லப் படுகின்றன. அந்தத் தோணியின் பாய்கள் ஊதா நிறத்தில் இருந்தனவாம்; காதல் நோய்ப் பட்டவை போல, காற்றுகளும் அந்தப் பாயுடன் சரச சல்லாபம் செய்கின்றனவாம். வெள்ளியினாற் செய்த சவள்கள் ஆற்றுநீரிற் செய்யும் ஆடல்கள்கூட, வருடியும் தழுவியும் கிளுகிளுப்பினை உண்டுபண்ணும் செய்கைகளாகவே ஷேக்ஸ்பியரினாலே காட்டப்படுகின்றன. அவளுடைய தோற்றம் வீனஸ் என்னும் தேவதையின் ஓவியப் பொலிவைக் கூட வென்று விடுகின்றதாம். மிகவும் வளமுடைய கொழுமையான சொற்கள் கொண்டு, ஆங்கில மொழியின் ஆற்றல் முழுவதையும் திரட்டி எடுத்து உருட்டித் தருவதாக அந்த வருணனை அமைகிறது. ஷேக்ஸ்பியரின் மொழியாற்றல் அதன் உச்ச நிலையிலே பிரயோகம் ஆவதை நாம் இங்கு காண்கிறோம். அந்த வருணனையின் தமிழ் வடிவம் பின்வருவது.

*"அன்னாள் அமர்ந்த அழகு வள்ளம் தண்ணீர்மேற்*
*சிம்மாசனம் போல் வெயில் மின் எரிவிரிக்கும்*
*தங்கத் தகடாய்த் தகதகக்கும் பின்னணியம்*
*ஊதா நிறப்பாய் உயர்ந்து. மணங்கமழும்*
*காற்றுகளும் அப்பாயிற் காதல் நோய் கொண்டிருக்கும்*
*வெள்ளிச் சவள்கள் வெளிச்சத் தெளி நீரைக்*
*கிள்ளி வருடிக் கிளுகிளுக்கும். அவ்வழகி*
*தோற்றம் வருணிப்பின், சொற்கள் இரவலர்போல்*
*ஆற்றல் இழக்கும் அதனால் வறுமை உறும்.*
*மஞ்சத்தில் அந்த வனிதை படுத்திருந்தாள்*
*பொன்செய் சரிகைப் புதுப்பட்டு மெத்தையிட்டு*
*தெய்வத் திருமகளின் சித்திரத்தை வென்றபடி*
*உண்மை இயல்பை உயர்த்தும் புனைவுடனே;*
*கன்னங் குழிந்த இரு கந்தருவ மூர்த்திகள்போல்,*
*சின்னச் சிறுவர் இருவர் முறுவலுடன்*
*பல்வண்ணச் சாமரைகள் வீசி அருகு நின்றார்..."*

(தமிழ் மரபுக்கேற்பச் சிற்சில மாற்றங்கள் செய்யப் பட்டுள்ளன; ஆயினும் இந்தத் தமிழ் வடிவத்திலும் ஷேக்ஸ்பியரின் ஆக்கத் திறனையும் கற்பனைச் செழுமை யையும் நாம் ஓரளவு தரிசிக்கிறோம்.)

ஷேக்ஸ்பியர் முதலாம் எலிசபெத் மகாராணி காலத்தவன். அந்தக் காலத்திலே இங்கிலாந்து தனது சாம்ராச்சியத்தை விரித்து உலகின் பல பாகங்களையும் தன்னிடம் சேர்த்துக் கொண்டது. புதிய புதிய நாடுகள்; குடியேற்றங்கள்; வெற்றிகள்; விருதுகள்; வீறாப்புகள். பீடும் பெருமிதமும் மேட்டிமையும் கொண்டு கம்பீரமாய் நின்றது அந்த நாடு. அந்த மேட்டிமையின் பிரதிபலிப்பே போல, ஷேக்ஸ்பியர் தனது காலத்து மகோன்னதம் முழுவதையும் எகிப்திய அரசியின் கொலுவிருக்கையில் ஏற்றி வைத்துக் காட்டுகிறான் போலும்!

கம்பனும் இப்படித்தான். கம்பன் காலம் சோழப் பேராசர் காலம். சோழப் பெருமன்னரின் செல்வச் செழிப்பும் செருக்கும் எழுச்சியும் கண்டறிந்து திளைத்து உணர்ந்தவன் கம்பன். அந்தப் பொற்காலத்தின் மேம் பாடெல்லாம் பொலியும் வண்ணப் பாட்டுகள் பலவற்றைத் தன் காப்பியத்தில் அமைத்திருக்கிறான். ஷேக்ஸ்பியரின் வருணனைக்கு ஈடுசோடாக நிற்கக் கூடிய வருணனைகள் பலவற்றைக் கம்பன் காப்பியத்திலே நாம் காணுகிறோம்.

எடுத்துக்காட்டாக, அசோக வனத்துக்கு இராவணன் வரும் கட்டத்தைக் கூறலாம். சீதாபிராட்டி அந்த வனத்திலே சிறை வைக்கப்பட்டிருக்கிறாள். தன்னை ஏற்றுக்கொள்ளுமாறு சீதையை இரந்து கேட்கும் எண்ணத்துடன் இராவணன் வருகிறான். இரந்து கேட்க வரும்பொழுதும் எவ்வளவு அகம்பாவம்! எவ்வளவு கர்வம்?

பத்துப் பன்னிரண்டு பாட்டுகளிலே இராவணன் வருகை சொல்லப்படுகிறது. கம்பீரமான செழுஞ் சொற்கள்; நிறைவான வளவிய கற்பனை – தனது உச்சநிலை உயர் திறனை வெளிப்படுத்திப் பாடுகிறான் நமது புலவன்.

*"சிகர வண் குடுமி நெடுவரை எவையும்*
*ஒரு வழி திரண்டன சிவண*
*மகரிகை வயிர குண்டலம் அலம்பும்*
*திண்டிறல் தோள் புடை வயங்கச்*
*சகர வேலையின் நீர் தழுவிய கதிரில்*
*தலைதொறும் தலைதொறும் தயங்கும்*
*வகைய பொன் மகுடம் இளவெயில் எறிப்பக்*
*கங்குலும் பகல் பட வந்தான்."*

ஊர்வசி உடைவாள் ஏந்துகிறாள்; மேனகை தாம் பூலத் தட்டைத் தாங்கிக்கொண்டு வந்து வெற்றிலை மடித்துக் கொடுக்கிறாள். திலோத்தமை செருப்புகளை ஏந்திக் கொண்டு போகிறாள். யாருடைய செருப்பு? இராவணனுடைய செருப்பு. அவன் அணிந்துள்ள செருப்புகள் விலை உயர்ந்தவை. அவற்றுக்கு இடைவழியிலே பழுதொன்றும் ஏற்படப் போவதில்லை. எதற்கும், முன்னெச்சரிக்கையான ஓர் ஏற்பாடு. இடை வழியிலே தற்செயலாகச் செருப்புமாற்ற வேண்டி வந்தால், அதற்கென்றும் ஒரு சோடி இருக்கட்டுமே! அந்த 'ஸ்பெயர்' செருப்பை எடுத்துச் செல்கிறவள் யார்? இந்திரன் அவையின் நாட்டிய சுந்தரிகளில் ஒருத்தி – திலோத்தமை! எப்படி இருக்கிறது இராவணனின் நடப்பு? கம்பன் பாட்டின் நடப்பு இப்படிப்பட்டது. இதோ பாட்டு:

*"உருப்பசி உடைவாள் எடுத்தனள்*
*மேனகை வெள்ளடை உதவச்*
*செருப்பினைத் தாங்கித் திலோத்தமை செல்ல*
*அரம்பையர் குழாம் புடை சுற்றக்*
*கருப்புரம், சாந்தம், கலவையும் மலரும்*
*கலந்துமிழ் பரிமள கந்தம்*
*மருப்புடைப் பொருப்பேர் மாதிரக் களிற்றின்*
*வரிக்கை வண் மூக்கிடை மடுப்ப......"*

இராவண பரிவாரத்தின் வாசனைத் திரவியம் வீசும் நறுமணம், திக்குயானைகளின் மூக்குகளிலே போய் மோதுகின்றதாம். கம்பன் ஏறிச் செல்லும் கற்பனைக் குதிரை எவ்வளவு வேகமானது பாருங்கள். இல்லை அவன் ஏறியுள்ளது குதிரையில் அன்று விமானத்திலே தான் ஏறியிருக்கிறான். 'எண்ண விமானத்தில் ஏறிப் பறந்து, மனக்கண்ணின் துணை கொண்டு கண்ட புதுமைகளை அல்லவா அவள் எங்களுக்குச் செந்தமிழ்த் திருப்பாட்டாக வாரி வழங்குகிறான்!'

இன்னும் கேளுங்கள் :

*"நான நெய் விளக்கு நாலிரு கோடி*
*நங்கையர் அங்கையால் எடுப்ப,*
*மேனி வந்தெழுந்த மணியுடை அணியின்*
*விரிகதிர் இருளெலாம் விழுங்கக்*
*கான்முதல் தொடர்ந்த நூபுரம் சிலம்பக்*
*கிண்கிணி கலையொடும் கலிப்பப்*
*பால் நிறத்தன்னக் குழாம் படர்ந்தென்னப்*
*பற்பல மங்கையர் படர......"*

இந்தப் பிடியிலே இன்னும் பல பாட்டுகள்!

தன் காலத்துப் பேரரசின் பீடும் புகழும் சீருந்திரு வும் பொலிவும் வனப்பும் ஆகிய இவற்றையெல்லாம் அயோத்தியிலும் மிதிலையிலும் இலங்கையிலும் வைத்துக் காட்டியுள்ளான் கம்பன்.

முதலாம் எலிசபெத் காலத்துச் சிறப்பையும் செழிப்பையும் ஷேக்ஸ்பியர் உரோமா புரியிலும் எகிப்திலும் ஏற்றிக் காட்டினான்.

தனது சொந்த நாடாகிய காவிரி நாட்டைப் போலவே வடநாட்டிலுள்ள கங்கை நாடு இருக்கும் என்று வெளிவெளியாகவே உவமை கூறியவன் கம்பன்.

ஷேக்ஸ்பியரும் எகிப்திய நைல் நதியிலே தன் நாட்டின் தேம்ஸ் நதியைத்தான் கண்டானோ? யாருக்குத் தெரியும்? மகாகவிகள் அப்படியும் செய்வார்கள்.

## 5

நாம் நமது கவிச்சக்கரவர்த்தி என்று பெருமை கொள்ளும் கம்பன், வடமொழிக் காளிதாசனுடனும் ஆங்கில ஷேக்ஸ்பியருடனும் ஈடுசோடாக நின்று பிடிக்கக் கூடியவன். இங்கு, விரல் விட்டு எண்ணக் கூடிய மிகச் சில எடுத்துக்காட்டுகளை மாத்திரம் பார்த்தோம். பன்மொழித் திறன் வாய்ந்த ஆய்வாளர் குழு ஒன்று முயற்சி செய்யுமாயின் இன்னும் பல ஆழமான ஒப்புமை களையும் வேறுபாடுகளையும் நாம் கண்டு தெளியலாம்.

அவ்வளவு தூரம் ஏன்?

கம்பன் கவிதைகளிலேயே அவனது கலைக்கோட் பாடுகளை நாம் தேடிக் கண்டு கொள்ளலாம்.

கவிதைக் கலைபற்றி நேரடியாகவும் மறைமுக மாகவும் பல கருத்துகளை அவன் சொல்லியுள்ளான். "புவியினுக்கு அணியாய், ஆன்ற பொருள் தந்து, புலத்திற்றாகி..." என்று தொடங்கும் பாட்டும் பலரும் அறிந்ததே. இதனைப் பலரும் அடிக்கடி மேற்கோள் காட்டுவது உண்டு.

இது தவிர இன்னும் பல இடங்களிலே சொற் கலை வேந்தனாகிய கம்பன் தனது சொந்தக் கலையின் தன்மைகள்பற்றிக் குறிப்புரைகள் கொடுத்துள் ளான். அவற்றை எல்லாம் தேடித் தொகுத்தல் வேண்டும்.

கவிதைக் கலைபற்றி மட்டும் அன்றி, இசை, கூத்து, ஓவியம், சிற்பம் என்பன பற்றிய எண்ணங் களையும் கம்பன் பல இடங்களிலே வெளியிட்டுள்ளான். அவற்றையும் ஒன்று விடாமல் தேடித் தொகுத்தல் வேண்டும்.

பொதுவாக அழகுக் கலைகள் பற்றியும், அறிவுக் கலைகள்பற்றியும் கம்பன் கொண்டிருந்த கோட்பாடுகளை நாம் இனங்கண்டு வரையறுத்துக் கொள்ளலாம். இதன் வாயிலாக, அவன் அழகுக் கலைகள்பற்றிப் பொதுவாகக் கொண்டிருந்த எண்ணங்களினிடையே கவிதைபற்றிய அவனுடைய சிறப்புக் கொள்கைகள் எங்ஙனம் பொருந்தி வருகின்றன என்று பரிசீலிக்கலாம்.

கம்பனை இந்திய மரபுடனும் உலக மரபுடனும் பொருத்திப் பார்ப்பதற்கு முன்னர், அவனுடைய கவிதைச் சாதனைகளையே அடிப்படையாக வைத்து, அவனுடைய கவிதைக் கோட்பாடுகளை இனங்கண்டு கொள்ளுதல் வேண்டும். அது முதலாவது முன்–தேவை ஆகும்.

கம்பன் கவிதை இயல் இவ்வாறுதான் ஆரம்பமாகும்.

தமிழில் இது இல்லை, அது இல்லை; விமரிசன மரபு இல்லை; நாடக மரபு இல்லை; வரலாற்றுணர்வு இல்லை; அழகியல் ஆய்வு இல்லை என்றெல்லாம் அடிக்கடி அறிஞர்கள் எடுத்துக் கூறி வருகின்றனர்.

இந்த இல்லைப்பாட்டுகளைத் தவிர்த்துக் கொண்டு, எதையேனும் உண்டு பண்ணுவதற்கு நாம் முயன்றால் என்ன?

எத்திக்கும் போற்றும் இராமன் திருக்கதையைத்
தித்திக்கும் செந்தமிழில் செய்தளித்து– நித்தமும்
அம்புவியில் மக்கள் அமுதம் அருந்த வைத்த
கம்பன் கவியே கவி

–கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை–

# கம்பரும் கச்சியப்பரும்

கலாநிதி நா. சுப்பிரமணியம்

தமிழ்க் கவியாற்றலின் பேரெல்லைக்கும் சான்றாகத் திகழும் பேரிலக்கியம் கம்பனது இராமாவதாரம். இதற்கு நிகரான பிறிதொரு ஆக்கத்தைத் தமிழில் மட்டுமன்றிப் பிற இந்திய மொழிகளிலுங்கூடக் காட்டுவது சாத்தியமில்லை. எனவே கம்பனுக்கு நிகரான இன்னொரு தமிழ்க் கவிஞனையோ அன்றேற் பிற இந்திய மொழிக் கவிஞனையோ சிந்திப்பதும் சாத்தியமில்லை. எனினும் இலக்கியப் புனை திறன் தொடர்பான பொது அம்சங்களை இனங்காணும் நோக்கிற் சில பெருங் கவிஞர்களைக் கம்பனுடன் தொடர்புபடுத்தி ஒப்பு நோக்குதல் சாத்தியமே. இத்தகு ஒப்புநோக்கிலே மற்றெல்லாக் கவிஞர்களையும் விடக் கம்பனுடன் பல அம்சங்களிற் பொருந்தி நிற்பவர் என்று கொள்ளத்தக்க பெருங் கவிஞர் கச்சியப்ப சிவாச்சாரியார் ஆவர். இவ்விருவரதும் பொதுமைகளையும் தனித் தன்மைகளையும் இனங்காணமுயலும் ஒரு ஆரம்பநிலை முயற்சியாக இச்சிறு கட்டுரை அமைகிறது.

இருவரும் இந்தியக் பண்பாட்டுப் பாரம் பரியத்திலே ஆழமாகக் காலூன்றி நின்றவர்கள். அதன் இருபெரும் சமயங்களான வைணவம், சைவம் ஆகியவற்றின் நம்பிக்கைகளுக்கும் விழுமியங்களுக்கும் விளக்கம் தரும்வகையில் தத்தம் இலக்கிய ஆக்கங் கட்கான பொருண்மைகளைத் தேர்ந்து கொண்டவர்கள். அப்பொருண்மைகட்கான கதையம் சங்களை வடமொழி மூலங்களிலிருந்து தழுவிக் கொண்டவர்கள். கம்பனுக்கு வால்மீகியின் இராமாயணம் மூலக் கதையம்சத்தை வழங்கியது. கச்சியப்பரின் கந்தப்புராணத்துக்கான மூலம் பதினென் மஹா புராணங்களிலொன்றாகிய ஸ்காந்தம் ஆகும்.

இது தனது தொல் வடிவில் இன்று கிடைக்கவில்லை. இருவரும் தங்கள் பண்பாட்டுச் சூழலுக்கு ஏற்ப—தமிழ்ப் பண்பாட்டுச் சூழலுக்கேற்ப — கதையம்சங்களிற் புதியன புகுத்தியவர்கள். இராமன் வில்லை வளைப்பதற்கு முன்பே சீதையுடன் "கண்கலந்த" காதலும், முருகன் வள்ளியுடன் நிகழ்த்திய காதல் நாடகமும் தமிழ்ப் பண்பாட்டுச் சூழலுக்கு ஏற்ப இவர்கள் புகுத்திக்கொண்ட முக்கிய புதுமைகள் ஆகும்.

தத்தம் கதைப்பொருளை விரித்துரைப்பதற்கு இருவரும் காப்பியம் என்ற இலக்கிய வகையைத் தேர்ந்து கொண்டவர்கள். கம்பன் பெருங்காப்பிய அமைப்பைப் பேணிக் கொண்டான். கச்சியப்பர் புராணப் பண்புகலந்த காப்பிய அமைப்பை மேற்கொண்டார். இருவரும் பத்தாயிரத்துக்கும் மேற்பட்ட விருத்தப் பாக்களிற் கதையம்சங்களை வளர்த்துச் சென்று நிறைவு செய்தவர்கள். காண்டம், படலம் ஆகிய கட்டமைப்புக் கூறுகளைக் கைக்கொண்டவர்கள். இருவரது ஆக்கங்களும் ஆறு காண்டங்களில் அமைந்த பொருத்தமும் நோக்கத் தக்கது. வர்ணனை மரபுகளிலும் பொதுமைகள் உள.

இருவரும் காட்சிப் படுத்தும் கதைமாந்தருட் சிலரின் பண்புகள் வியக்கத்தக்க வகையில் ஒற்றுமை கொண்டுள்ளன. குறிப்பாக இராவணன்— சூரபதுமன், கும்பகர்ணன் – சிங்க முகாசுரன், சூர்ப்பணகை— அசமுகி, இந்திரசித்து— பானுகோபன் ஆகிய கதைமாந்தரில் இப்பொதுமை சிறப்புறப் புலப்படுகின்றது. இவர்களது செயன்முறைகள், சிந்தனைகள் என்பவற்றில் மட்டுமன்றிச் சொற்களூடாகப் புலப்படும் உணர்வோட்டங்களிலும் இப்பொதுமை நயத்தை அவதானிக்கலாம்.

*" வென்றிலன் என்றபோதும்*
*வேதம் உள்ளளவும் யானும்*
*நிற்றுளென் அன்றோ மற்று அவ்*
*இராமன்பேர் நிற்கு மாயின்*
*பொன்றுதல் ஒருகாலத்தும்*
*தவிருமோ பொதுமைத்தன்றோ*
*இன்றுளார் நாளை மாள்வர்*

***புகழுக்கும் இறுதியுண்டோ"–***

( இராமன் இந்திரசித்துவதை...10)

***" இன்னுமோரு ரூழிகால மிருக்கினு மிறப்பதல்லாற்***
***பின்னுமிங் கமர்வதுண்டோ பிறந்தவ***
***ரிறக்கைதின்ன***
***மின்னெனும் வாழ்க்கைவேண்டி விண்ணவர்க்***
***கஞ்சியிந்த***
***மன்னுயிர் சுமக்கிலேன்யான் மாயவன்றனையும்***
***வென்றேன்"***

– ( கந்தபுராணம் – பானுகோபன்வதை..... 28 )

என முறையே இராவணன் சூரபதுமன் ஆகியோர் கூற்றுக்களாக அமையும் பாடல்கள் மேற்படி பொதுமை நயத்திற்குச் சான்றுகளாக எடுத்துக் காட்டத் தக்கன.

இவ்வாறான பொதுமை நயங்கள், கம்பனை நினைக்கும் சந்தர்ப்பங்களிலெல்லாம் கூடவே கச்சியப்பரையும் நினைவுக்கு இட்டுவருவன. கம்பனுடன் இந்த அளவுக்குப் பொதுமை உடைய பிறிதொரு கவிஞனை நாம் சுட்டிக் காட்ட முடியாது என்பதை இலக்கியவியலார் ஒப்புக்கொள்வர். இப்பொதுமைக்கான காரணங்காண விழைவோர் கச்சியப்பரைக் காலத்தால் கம்பனுக்குப் பிற்பட்டவராகக் கொண்டு கம்பனை அடியொற்றியே அவர் தமது ஆக்கத்தைப் படைத்தார் என ஊகிப்பதுண்டு.

" கந்தபுராணம் கம்பனது இராமாவதாரத்தை அடியொற்றி இயற்றப்பட்டது. இதுவே ஒரு இலக்கிய கர்த்தா கம்பனுக்குச் செலுத்தக்கூடிய மாபெரும் வணக்கமும் வழிபாடும் ஆகும்" எனப் பேராசிரியர் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் கூறியுள்ளமை இத்தொடர்பில் நமது சிந்தனைக்குரியன.

இவ்வாறு கச்சியப்பர் பல அம்சங்களிற் கம்பனுடன் பொதுமை கொண்டவராகவும் அவரை அடியொற்றிச் செல்பவராகக் கருதப்படத் தக்கவராகவும் உள்ளார். எனினும் சில அடிப்படையான அம்சங்களில் அவரிலிருந்து வேறுபட்டு நிற்பவராகவும் திகழ்கிறார். கம்பனுடைய தளம், நோக்குநிலை என்பவற்றிலிருந்து கச்சியப்பரின் தளமும் நோக்கு நிலையும் வேறுபட்டன. இருவரும் தேர்ந்துகொண்ட வடமொழி மூல ங்களின் இலக்கிய இயல்புகளும் வேறுபட்டன. இவை அவர்களின் புனைதிறனை வேறுபடுத்தின. இவை தொடர்பாகச் சுருக்கமாக நோக்கலாம்.

இருவரதும் தளங்களை இனங்காண்பதற்கு ஏற்றவகையில் நிறைவான நம்பகமான வரலாற்றுச் சான்றுகள் கிடைத்தில. கிடைத்த சான்றுகளின்படி கம்பன் தமிழகத்திலே திருவழுந்தூரிற் பிறந்தவன் என்பதும் கச்சியப்பர் காஞ்சிபுரம் குமரக்கோட்டத்தில் அர்ச்சகராகத் திகழ்ந்தவர் என்பதும் தெரியவருகின்றன. கம்பன் உவச்சர் குலத்தவன் எனப்படுகிறான். கச்சியப்பர் பிராமணர் என்பது தெளிவு. கம்பன் வைணவனாக இருந்திருக்கலாம் என்பது அவனது ஆக்கம் காட்டும் ஊகம். கச்சியப்பர் சைவம் சார்ந்தவர் என்பதும் சிவாச்சாரியார் என்பதாற் புலனாகின்றது. கந்தபுராண உள்ளடக்கத்தின்படி அவர் சைவசித்தாந்த தத்துவ நெறியைப் பேணி நின்றவர் என்பது உறுதியாகிறது. கம்பன் வைணவத்தில் எந்தத் தத்துவ நெறியினன் என்பது விரிவான ஆய்விற் கண்டறியப்பட வேண்டியது. எனினும் அவன் வாழ்ந்த காலம் கி.பி. 12 ஆம் நூற்றாண்டெனப் பொதுவாகக் கருதப்படுவதால் கி.பி. 13 ஆம் நூற்றாண்டில் உருவான மத்துவ வேதாந்தத்திற்கு முற்பட்டவர் என்பது தெளிவாகின்றது. சமகாலத்தில் உருவாகத் தொடங்கியிருந்த இராமானுஜருடைய விசிட்டாத்துவைதம் இவனிற் செல்வாக்குச் செலுத்தியிருக்கலாம் எனக் கருத இடமுண்டு. கச்சியப்பர் கம்பனுக்கு ஏறத்தாழ இரு நூற்றாண்டுகள் பிற்பட வாழ்ந்தவர் எனப் பொதுவாக ஊகிக்கப்படுகிறார். சைவ சித்தாந்தத் தத்துவம் நிறைவான வளர்ச்சியைப் பெற்றிருந்த காலப்பகுதி அது என்பதும் கச்சியப்பர் அவ்வளர்ச்சி நிலையைப் பிரதிபலித்தவர் என்பதும் தெளிவு.

கம்பன் தனது காலப் பகுதியில் தென்னகத்திற் பேரரசு செலுத்திநின்ற சோழ மன்னர்களுடன் தொடர்பு கொண்டவனாக இருந்திருக்கலாம் என்பது ஊகத்தின் பாற்பட்டது. எனினும் ஜயங்கொண்டார், ஒட்டக்கூத்தர் முதலிய சமகால ' அரசவைக் கவிஞர் ' களைப்போல இவன் ' அதிகார முத்திரை குத்தப்பட்டவனாக' த் திகழ்ந்தமைக்குச் சான்றில்லை. திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலின் ஆதரவிலே வாழ்ந்தவன் என்பதே பொதுவாக ஒப்புக் கொள்ளப்படும் செய்தி. கச்சியப்பசிவாச்சாரியார் அர்ச்சகர் என்ற வகையில் ஆலய நிறுவனக் கடப்பாட்டுக்கு உட்பட்டவராகத் திகழ்ந்திருக்கக்கூடும் என்பது உய்த்துணரற்பாலது. கம்பனுக்கு எந்த நிறுவனக் கட்டுப்பாடும் இருந்ததாகத் தெரியவில்லை. அவன் ஒரு சுதந்திரக் கலைஞனாகத் திகழ்ந்திருக்கக்கூடும் என்பது ஊகம்.

இருவருமே தலைசிறந்த கல்வியாளர்கள்; தமது காலப்பகுதிவரை வளர்ந்திருந்த கலை, இலக்கியம், தத்துவம், சாஸ்திரம் முதலிய சகல துறைகளையும் கற்றுத் தெளிந்தவர்கள்; அத்துடன் உலகியல் அநுபவங்களும் இவர்களுக்கு நிறையவே இருந்தன. இவை இவர்களது ஆக்கங்கள்மூலம் உய்த்தறியப் படுவன. இந்த அறிவாற்றல்களுடன் இலக்கியம் படைக்க முற்பட்ட அவர்கள் காலூன்றி நின்ற தளங்கள் வேறுபட்டன. கம்பன் வைணவனாகக் கருதப்பட்டாலும், (இராமனைத் திருமாலின் அவதாரமாகத் தரிசித்தவன் என்ற நிலையிலும்) அவனது தளம் அச்சமய நிழலில் நின்று விலகியதாக – ஒரு பொதுவான மனிதநேயத் தளமாக– அமைந்தது. தனது தரிசனத்துக்கு உட்பட்ட அனைத்தையும் அதனதன் இயல்பான குணாம்சங் களுடன் தரிசிக்க இந்தப் பொதுத்தளம் அவனுக்கு மிகவும் வாய்ப்பாக அமைந்தது. கச்சியப்பர் தமது சமய தத்துவ சைவசித்தாந்தத் தளத்திலேயே காலூன்றி நின்றவர்; அதன் ஊடாகவே உலகை நோக்கியவர். இந்த அடிப்படை இவ்விருவரையும் தெளிவாக வேறு படுத்தியது.

இந்த வேறுபாடானது அவர்கள் தத்தம் ஆக்கங்களுக்கான மூலக் கதையைத் தேர்ந்துகொண்ட முறை, அதைக் காப்பிய வடிவிற் புனைவதில் மேற்கொண்ட அணுகு முறை என்பவற்றில் தெளிவாகப் புலப்பட்டு நிற்கிறது. கம்பன் ( வடமொழியில்) இதிஹாச– காவிய மரபினின்று தனது கதைப் பொருளைத் தேர்ந்து கொண்டவன். கச்சியப்பர் ( வடமொழிப்) புராண மரபிலிருந்து கதைப் பொருளைப் பெற்றவர். வடமொழி இலக்கிய அமைப்பியல் வரலாற்றிலே புராணம் என்பது இதிஹாசம், காவியம் என்பவற்றிக்கு முற்பட்டது. 'தொல்கதை' என்ற அதன் பொருண்மைக்கேற்பப் பல்வேறு கதைகளின் களஞ்சியமாக அமைவது அதன் பொதுவியல்பு. குறித்த ஒரு தெய்வத்தின் ஆற்றல், அருட்சிறப்பு என்பவற்றை முதன்மைப்படுத்திய கதையம்சத்திலே ' பாவம்– புண்ணியம்' என்ற கருத்தோட்டங்களை முன்வைத்து இத்தொல் கதைகள் பிணிக்கப்பட்டு அமைதல் புராண மரபின் பொதுநிலை. இவற்றில் மானிடம் சார்ந்த அரசர்கள், முனிவர்கள் முதலியவர்களின் வரலாறுகள் இடம்பெற்றாலும் அவர்களது குணநல வளர்ச்சிக்கு முதன்மை தரப்படுவதில்லை. இவ்வாறான தொல் கதைகள் மானிடஞ் சார்ந்த சமூகவிழுமியங்களுக்கு முதன்மை தந்து கதைமாந்தரின் குணநல வளர்ச்சிகளைச் சிறப்புறப் புனையும் வலுவான கதையமைப்பாகப் பரிணாமம் பெற்ற நிலையிலே இதிஹாசம் பிறந்தது. இத்தகு இதிஹாச நிலையின் அடுத்த கட்ட வளர்ச்சியே காவியம் ஆகும். குறித்த ஒரு மானிடத் தலைவனின் அல்லது ஒரு மரபுசால் தலைவர்களின் வாழ்க்கை அனுபவங்களை முதன்மைப்படுத்தி, அறம், ஒழுக்கம் என்பன சார்ந்த பாவிகப் பண்பொன்றைத் தொனிப் பொருளாகக் கொண்டு, இலக்கிய அழகியல் அம்சங்களைக் கவனத்திற்கொண்டு புனையும் நிலையிற் காவியம் உருவாயிற்று. சமயத் தளத்தில் நின்ற கச்சியப்பர் தெய்வ வரலாறு கூறும் புராண மரபிலிருந்து தனது கதைப் பொருளைத் தேர்ந்து கொண்டார். கந்தன் என்ற தெய்வத்தின் ஆற்றல், அருட்சிறப்பு என்பவற்றை எடுத்துக் கூறுவதனூடாக உலகை உய்விப்பது அவரது நோக்கம். பொது மனிதனாக மனித நேயத் தளத்தில் நின்ற கம்பன் மானிட அநுபவங்களை முதன்மைப்படுத்தி அமைந்த ' இதிஹாச –காவிய' மரபினின்று தனது கதைப்பொருளைத் தேர்ந்து கொண்டான். மானிட உளப் பாங்குகள், உணர்ச்சி முனைப்புக்கள் என்பவற்றின் ஊடாக ஒரு இலட்சிய வாழ்க்கையைப் படைத்துக் காட்டுவது அவனது நோக்கம். அவனுக்கு மூலமாயமைந்த வால்மீகி இராமாயணம் இதிஹாச மாகவும் காவியமாகவும் கருதப்படுவது, அதற்கு ஆதிகாவியம் என்ற பெயர் அமைந்துள்ளமை இத் தொடர்பிற் சுட்டத்தக்கது. இதிஹாச நிலையின் வளர்ச்சி காவிய நிலையின் தோற்றம் ஆகிய இரண்டையும் அது பிரதிபலிப்பதால் அது இவ்வாறு கொள்ளப்படுகிறது எனலாம். அதில் தலைமை பெற்றமையும் இராமன் ஒரு 'புருஷோத்தமன்' மட்டுமே. கம்பனது கருத்திலும் கைவண்ணத்திலும் இப் புருஷோத்தமன் ஒரு அவதார புருஷராக –திருமால் என்ற தெய்வத்தின் அம்சமாக– மற்றொரு பரிமாணத்தைப் பெற்றுக் கொண்டாலுங்கூட மானிட வாழ்க்கையின் உயர் விழுமியங்களையே அவன் இலட்சியப்படுத்தி நிற்கிறான். எனவே கதைப் பொருளைத் தேர்ந்த நிலையிலும் அதற்கான நோக்கு நிலையிலும் இருவரும் வேறுபட்டு நிற்பது தெளிவு.

கச்சியப்பர் கந்தன் கதைக்குக் காப்பிய வடிவம் தரும் முயற்சியில் அதனைச் சைவ சித்தாந்த தத்துவத்தினை உருவகம் ஆக்குகிறார். மலபந்தங்களால் அல்லற்படும் ஆன்மா இறையருளால் அவ்வல்லல் களினின்று கடைத்தேறுகிறது என்ற பொருண்மை அமையத் தக்கவகையிற் தேவர்கள், அசுரர்கள் (அவுணர்கள்), மனிதர்கள் ஆகிய கதாபாத்திரங்களின் குணநிலைகள் இயக்கப்படுகின்றன. சைவசித்தாந்தத் துக்குப் புறம்பான சமய தத்துவநெறிகள்– குறிப்பாக வைணவம், பூர்வமீமாம்சை, மாயாவாதம் ( சங்கரரது அத்வைதம்) என்பன– தீவிர கண்டனத்துக்கு உள்ளாகின்றன. இக்கண்டனங்களுக்கு வாய்ப்புத்

தரும்வகையில் மூலக் கதையம்சமும் துணைக் கதைகளும் வளர்த்துச் செல்லப்படுகின்றன. தவம், தருமம் என்பன உயர்நிலையில் வைத்துப் பேசப்படுகின்றன. கந்தனுக்கூடாகச் சிவபரத்துவமே இதில் நிறுவப்படுகிறது.

கம்பனுக்குத் தத்துவ ஞான அறிவு நிரம்ப இருந்தது. வேதங்கள், உபநிடதங்கள், சங்கரரது அத்வைதம் என்பனபற்றியெல்லாம் அவன் நிரம்பப் பேசுகிறான். ஆழ்வார்கள் புலப்படுத்தி நின்ற பக்தியனுபவத்திலும் திளைத்தவன் அவன். அவன் தனது காப்பிய உருவாக்கத்தில் இந்த சமய– தத்துவ அம்சங்களில் எவற்றையும் உருவகப் படுத்தவோ அன்றேல் முதன்மைப் படுத்தவோ முற்பட்டவனாகவே தெரியவில்லை. நுணுகி ஆராய்ந்தால் ஒருவேளை அவனது சமகாலத்தில் உருவாகத் தொடங்கிய (இராமானுஜரது) விசிட்டாத்வைதத்தின் சாயல் அல்லது செல்வாக்கு அவனிடம் இருப்பதாகக் கூடும். ஆனால் காப்பியக் கதையமைப்பு முன்னரே சுட்டியபடி ஒரு இயல்பானதும் இலட்சியத் தன்மை வாய்ந்ததுமான மானிட வாழ்க்கையையே சித்திரிக்கிறது. அநுபவங்களே முதன்மை பெறுகின்றன. கச்சியப்பரைப் போலக் கம்பன் தத்துவத்தை வாழ்க்கையாகப் புனையவில்லை: வாழ்க்கையையே தத்துவமாகக் கொள்ளும்படி புனைந்துள்ளான் எனலாம்.

இந்த அடிப்படையில் நோக்கும்போது காப்பியப் புனைவிலே கம்பனுக்கு இருந்த அகன்ற வாய்ப்புக் களையும் கச்சியப்பருக்கு இருந்திருக்கக்கூடிய கட்டுப்பாடுகள், தடைகள் என்பவற்றையும் நாம் உய்த்துணரமுடியும். கம்பனது கதைமாந்தர் தத்தம் தளங்களிலே நின்று தம்மை இனங்காட்டிக் கொள்ளமுடியும்; வாசகரோடு அவர்கள் நேரடியாக உரையாடமுடியும்; அவர்களது அநுபவத்திற் கலக்கமுடியும். ஆனால் கச்சியப்பர் இவ்வாறு செய்வது சிரமம். குறிப்பாகக் கம்பன் காட்டும் இராமனது குணநலன்களைக் கச்சியப்பர் கந்தக் கடவுளிடம் காட்டுவது சாத்தியமில்லை. அத்தெய்வத்தின் மேல்நிலையினின்று அதனை மானிட அநுபவ நிலைக்கு இட்டுவர முடியாது. இராமனுக்கும் சீதைக்கும் கண்கலந்த காதலையும் பிரிவில் அவர்கள் எய்திய துயரங்களையும் கந்தன், தெய்வயானை, வள்ளி என்போரிடம் கச்சியப்பர் உரியவாறு அமைத்துக் காட்டல் சாத்தியமற்றது. எனினும் கச்சியப்பர் வள்ளியம்மை திருமணப் படலத்தில் கந்தனைக் காதல் நாயகனாகக் – களவியற்றலைவனாக – காட்டமுற்பட்டுள்ளார். காப்பியத் தலைமைப் பாத்திரங்களிற் புனைந்துகாட்ட முடியாத பிரிவுத்துயர், விரகதாபம் என்பவற்றைத் துணைப் பாத்திரங்களான இந்திரன்– இந்திராணி ஆகியோரிடம் பொருத்திக் காட்டியுள்ளார். எதிர்நிலைப் பாத்திரங்களைப் பொறுத்தவரையிற் கச்சியப்பருக்கு இந்தச் சிரமம் ஏற்படவில்லை. அவை கம்பனது பாத்திரங்களுக்கு நிகராக நிற்கின்றன என்பதை முன்னர் கண்டோம். கச்சியப்பர் கம்பனை அடியொற்றியவர் எனத் தெ. பொ.மீனாட்சிசுந்தரனார் கூறியதை ஏற்றுக் கொண்டால் கச்சியப்பர் கம்பனை மிக நன்கு உணர்ந்து வழிப்பட்டு நின்றவர் என்பதை இப்பாத்திரங்கள் உறுதி செய்வன.

இவ்வாறு இங்கு இருவரையும் ஒப்புநோக்கும் முயற்சியானது இருவரில் யார் பெரியவர் என்று தீர்ப்பளிக்கும் முயற்சியல்ல. கம்பன் இந்தியக் கவிஞரில் நிகரற்றவன் என்பது தொடக்கத்திலேயே ஒப்புக் கொள்ளப்பட்ட விடயம். அதற்கு அவனுக்கிருந்த அடிப்படைகள் சில இங்கு தொட்டுக் காட்டப்பட்டன. இவை தனி நூலாக விரித்தெழுதப்படவேண்டிய பரப்புடையன. கம்பனைப்போலச் சுதந்திரக் கலைஞராக, வளமான கதையம்சத்திற் காப்பியம் படைக்கும் வாய்ப்புடையராகக் கச்சியப்பர் இருக்கவில்லை என்பதையும் நோக்கினோம். அவர் சமய– தத்துவ எல்லைக்குட்பட்டு நின்ற நிலை உலகியற் றளத்தில் நிற்போர் நோக்கிலே ஒரு கட்டுப்பாடாகவே தெரியும். இலக்கியம் உலகியல் அநுபவங்களின் பிழிவு என நோக்குபவர்களின் கண்ணோட்டத்திற் கம்பன் தொட்ட சிகரத்தைக் கச்சியப்பர் தொடத் தவறிவிட்டார் என்றே தெரியும். அதை மறுப்பதற்கில்லை. ஆனால் இலக்கியம் ஆன்மிக உணர்வுகளின் தேறல் எனப் பார்ப்போர்– குறிப்பாகச் சைவ நெறிநிற்போர்– கச்சியப்பர் நின்ற சமய தத்துவத்தளம் நியாயமானதே என்றும் அதில் நின்று அவர் சாதனை புரிந்துள்ளார் என்றும் கருதுவர்; குறிப்பாகக் கந்தபுராணத்தின் சூரபதுமன் வதைப்படலத்தில் இடம்பெறும் விஸ்வரூபக் காட்சியையும் அதை நோக்கிய சூரபதுமனின் 'உலைமெழுகான' நிலையையும் நினைந்து நினைந்து உருகுவர். இவை அவரவர்களது தளங்களையும் நோக்குநிலை, அநுபவம் என்பவற்றையும் பொறுத்த விடயங்கள்.

முடிவாக ஒன்று கூறலாம். கச்சியப்பரைக் கம்பனுக்குச் சம நிலையில் வைத்து நோக்கலாமா என்று கேட்பதில் பொருளில்லை. கம்பனின் உயர்நிலை முடிந்தமுடிபு. ஆனல் புனைதிறனில் அவனுக்கு அருகில் வேறு யாரையாவது வைக்க முற்பட்டால் அதில் முதலில் நிற்கத் தகுதியுடையவர் கச்சியப்பர் மட்டுமே என்பது என் துணிபு.

# தந்தையாய் நின்றாரும் தந்தையைக் கண்டானும்

திருமதி- மனோன்மணி சண்முகதாஸ் M.A

வடமொழியில் தோன்றிய இராமகதையைத் தமிழ்வடிவிலே தமிழ்மொழிக் காப்பியமாகத் தந்தவன் கம்பன். கம்பராமாயணம் என அவன் பெயருடன் இணைந்த அக்காப்பியம் சோழர் காலத்தில் பாடப்பட்டது. கம்பனின் கற்பனை ஆற்றலையும், கல்விச்சிறப்பையும் காட்டுவது கம்பராமாயணம். பாடல்களின் பண்ணமைப்பும், பாத்திரங்களின் தன்மையும் கம்பனின் செய்யுளாற்றலைப் புலப் படுத்தும். வடமொழி இராமகதையைத் தமிழிலே தந்தவர்களில் கம்பனுக்கு முன் வாழ்ந்த ஆழ்வார் ஒருவரும் இருக்கிறார். அவர் பெயர் குலசேகர ஆழ்வார் ஆகும். கண்ணனது அவதாரச் சிறப்புக்களிலே ஆழ்ந்துவிட்ட அன்பர்களே "ஆழ்வார்கள்" என அழைக்கப்பட்டனர். அவர்களது காலம் கி.பி. ஏழாம் நூற்றாண்டைச் சார்ந்தது. தமிழ் இலக்கியம் பக்தி யுணர்வென்னும் புதிய நெறி பெற்றுச் செழிக்க ஆழ்வார்களது பணியும் மேலானது. அந்த வகையிலே இராம அவதாரத்திலே ஆழ்ந்த குலசேகர ஆழ்வார் பாடிய பாடல்கள் கம்பன் காவியப் பாடல்களுக்கு முன்னோடியாக, வழிகாட்டியாக விளங்குகின்றன.

ஆழ்வார் இராம அவதாரத்திலே ஆழ்ந்து பாடியவர். இராமனைத் தன்மகனாகவே கண்டவர். கம்பன் இராமனைத் தெய்வ அவதாரமே என மதித்தவன். தசரதன் மைந்தன் எனினும் இராம அவதாரம் என்ற நிலையைக் கம்பன் மறக்கவில்லை. ஆனால் குலசேகர ஆழ்வாரோ இராம அவதாரத்திலே ஆழ்ந்து தானே தசரதனாய் மாறிவிடுகிறார். பக்தியின் முற்றிய நிலையிது. தெய்வ தரிசனத்தைக் கண்டு, தெய்வ நிலையைப் பணிந்து வணங்குவது ஒருவகை. தெய்வத்தின் உருவிலே ஆழ்ந்து தன்னை மறந்து அதனுடன் ஒன்றாய் இணைவது இன்னொருவகை. கண்ணனைத் தனது காதலனாகவே எண்ணிய கோதையின் வழி வந்தவரான ஆழ்வார் இராமனைத் தனது மகனாகவே எண்ணுகிறார். கம்பனோ இராமனைத் தெய்வமாகக் கண்டு தான் விலகி நின்றே பாடுகிறான். தானே தயரதனாகமாறி ஆழ்வார் பாட, கம்பனோ தயரதனை தன்னின் பிரித்து, வேறாகிப் பாடுகிறான். உணர்வின் உச்ச நிலையிலே ஆழ்வாரது பக்தி, மனித நிலையையும் மறந்து போய் விடுகிறது. புலவன் என்ற நிலையிலே கம்பன் இலக்கியத்திறம், உணர்வு நிலைமாறாமல் ஒழுங்கான மனித நிலையிலே நின்று பாடுவது. இதுவே இருவரிலும் காணும் வேற்றுமையெனலாம். உணர்வினை அறிவால் அடக்கிய கம்பன் ஆற்றலைச் செய்யுள்களிலே காணலாம். ஆனால் உணர்வின் வழிச் சென்று, உயர்நிலை நின்று ஆழ்வார் பாடுவது, அவரைப் பிரித்து நோக்க வைக்கிறது. பக்தியின் உச்சநிலையை ஆழ்வார் பாடல் காட்ட, கம்பன் பக்தியின் படிநிலையைப் பாடலிலே காட்டுகின்றான்.

அகமாக:

குலசேகரர் பாடிய ஸ்ரீராமாயணசாரமாகும் பெருமாள் திருமொழி. பத்துத்திருமொழிகள், ரங்க நாதனது சேவையிலே ஆழ்ந்து, அரங்கன் அடித்திறத்திலே ஈடுபட்டு, ரங்கநாத பக்தராய் உலகத் தாரோடு தாம் சேராமல் நின்று, திருவேங்கடமலையிலே பிறக்க விரும்பித் தன் விருப்பத்தைத் தெரிவித்து, ஆய்ச்சியராகி ஊடி அமலனை எள்கியுரைத்து, கண்ணனது பாலசேட்டைகளைக் காணப்பெறாத தேவகியாய் நின்று புலம்பி, காகுத்தனைத் தாலாட்டி, தனயன் கான்புகக் கண்ட தசரதனாய் மாறிப் புலம்புகிறார்; குலசேகர ஆழ்வார். இந்த ஒன்பது திருமொழிகளும், இறுதியாக இராமாயணக் கதைச் சுருக்கம் கூறுகின்ற 10 ம் திருமொழியும் சேர்ந்து "பெருமாள் திருமொழி" என்ற இலக்கிய வடிவாக இன்று கிடைக்கின்றன. நாலாயிரத்திவ்வியப் பிரபந்தத் தொகுப்பில் ஆழ்வார் பாடிய இத்திருமொழியும் இடம்பெற்றுப் பிற்கால இலக்கியமான கம்பராமாயணத் திற்குக் கருவையும் தந்ததெனினும் மிகையாகாது. 10 வது திருமொழியிலே ஆழ்வார் பாடிய இராமகதை

கம்பன் புலமைத்திறத்திலே கம்பராமாயணம் என்னும் காப்பியமாக உருவாகிற்று எனலாம். வடமொழிப் புலமையற்றவரும் கூட இராமன் கதையைத் தமிழிலே படிக்க வைத்த ஆழ்வார் பணியும் மிகப்பெரியது. பெருமாள் திருமொழியின் சாற்றுப்பாட்டு இதனை இன்னும் தெளிவுபடுத்தும்.

*" தில்லைநகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்*
*திறல் விளங்கு மாருதியோடமர்ந்தான் தன்னை*
*எல்லையில் சீர்த் தயரதன்றன் மகனாய்த் தோன்றிற்*
*றது முதலாத் தன்னுலகம் புக்கதீறாக்*
*கொல்லியலும் படைத்தானைக் கொற்ற வொள்வாள்*
*கோழியர் கோன் குடைக்குலசே கரன்சொற் செய்த*
*நல்லியல் தமிழ்மாலை பத்தும் வல்லார்*
*நலந்திகழ் நா ரணனடிக்கீழ் நண்ணுவாரே".*

பெ.தி. 10–11

இவ்விடத்துக் கம்பராமாயணம் இறுதிப்படலமாய் அமைந்த விடை கொடுத்த படலத்தின் இறுதிப் பாடலையும் நினைவு கூர்தல் நன்று. இப்பாடலை மிகைப் பாடல் வரிசையிலே அடக்குவர்.

*" இராவணன் தன்னை வீட்டி, இராமனாய் வந்து தோன்றி*
*தராதலம் முழுதும் காத்துத் தம்பியும் தானுமாகப்*
*பராபரம் ஆகிநின்ற பண்பினைப் பகருவார்கள்*
*நராபதி ஆகி பின்னும் நமனையும் வெல்லுவாரே"*

நாரணன் அடிக்கீழ் நண்ணுவார்க்கும், நமனை வெல்லுவார்க்கும் உள்ள வேறுபாடும் வெளிப்படையே. நாரணன் அடிசேர்தல், என்ற ஒன்றே சிந்தையாக மனிதப்பிறவி நிலையையும் மறந்தவர் குலசேகரர். மனிதப்பிறவியிலே மறவாது நின்ற கம்பன் புகழ்பாடிய கவிதையும் நமனை வெல்லும் ஆற்றலைப் பற்றியே பாடுகிறது.

ஆழ்வாரையும் கம்பனையும் பற்றி ஒப்பிட்டுச் சிந்திக்கும்போது இருவரது வேறுபட்ட நிலையும் கூர்மையாகவே தெரியும். அதனை ஒரு கருத்தமைவிலே காட்ட முனைவதே இக் கட்டுரையின் நோக்கமாகும். இராமன் கதையிலே தாயின் சொல்காக்கப் பிரிந்த தனயன் இராமன். அவன் பிரிவு பொறுக்காது தந்தை புலம்பும் நிலை கதையின் மிகச் சிறந்த இடம். வாழ்க்கை நடைமுறையில் இத்தகைய ஒரு நிலை எல்லோர்க்குமே வரக்கூடியது. காலம் மாறினாலும் பிரிவின் உணர்விலே வேறுபாடு வராது. ஆழ்வாரும் கம்பனும் தமது பாடல்களிலே அதனைப் பொதிந்துள்ளனர். ஆனாலதை எடுத்துக் கூறும் வகையிலே வேறுபட்டிருக்கின்றனர்.

ஆழ்வாரின் முதற்பாடல் தயரதனான அவர் உணர்வின் வெளிப்பாடு, பிரிவின் துயரால் மனம் துடிக்கும் நிலை. சொற்களிலே வடித்த கோலம் காணின்;

*" வன்றாளி னிணைவணங்கி வளநகரம்*
*தொழுதேத்த மன்னனாவான்*
*நின்றாயை அரியணைமே லிருந்தாயை*
*நெடுங்கானம் படரப்போக*
*வென்றாள் எம்மிராமாவோ உனைப்பயந்த*
*கைகேயி தன்சொற் கேட்டு*
*நன்றாக நானிலத்தை யாள்வித்தேன் நன்மகனே*
*உன்னை நானே:"*

பெ.தி. 9–1

மணிமுடி தரித்து அரசனாகவிருந்த மைந்தன் அரியணை மேலமரவிருந்தவன். பிரிந்து சென்று விட்டான். அவன் பிரிவு தயரதனை எப்படி உலுக்கிவிட்டது. ஆழ்வாரே தயரதனாகி நின்று புலம்புகிறார். மகனைக் காட்டிற்குப் போ என்று சொன்னவள் யார்? மனைவி கைகேயி, கணவன் சொல் காக்கக் காடு செல் என்று பணித்து விட்டாள். புதல்வனும் தந்தை சொல் காக்கப் புறப்பட்டுவிட்டான். சொல், தந்தை சொல்லாதது. இடாத கட்டளை. எனினும் தந்தை கொடுத்த வரமாக வந்தது. நெடுங்கானம் படரத் தாய் சொன்னாள். மைந்தன் ஏனென்று கேளாமலே போனான். தன் தந்தை சொன்னார் என்பதையே அவன்சிந்தையிற் கொண் டான். தாயிடமும் காரணம் கேட்கவில்லை. மைந்தன் தந்தைபாற் கொண்டிருந்த மதிப்பின் தன்மையது. அத்தகைய நன்மகன் இராமன். அவன் சென்று விட்டானே என்றுதான் ஏங்குகிறான் தயரதன். மணிமுடி மாநிலமாளும் மன்னன் பதவியைத் துச்சமாக்கித் தந்தையின் சொல்லுக்கே மதிப்புத்தந்த அந்த மகனைப் பிரிய யார்தான் மனம் வருந்தார். மகனின் இன்னொரு குணத்தையும் தயரதன் மறக்காமல் நினைக்கின்றான். கானம் செல் என்று கட்டளை இட்டவள் கைகேயி. இராமனைப் பயந்தவள் கோசலை. ஒரு மனைவியின் மணி வயிற்றிலே பிறந்தவன். இன்னொரு மனைவியின் சொல்லைத் தட்டாமல் சென்றுவிட்டான். தாய் வேறாக எண்ணாத தனயன் அதனாலே தயரதனும் உனைப்பயந்த கைகேயி என்று சொல்லிப் புலம்புகிறான்.

என் இராமாவோ; என்று அவன் அழைதததுப புலம்புவது மைந்தன் மீது கொண்ட தனித்துவமான இணைப்பைக் காட்டுகிறது. " என் இராமன்" என்று

ஆழ்வார் அங்கு சொன்னது, இராம அவதாரத்தையே. அவர் மறந்து, இராமனில் ஆழ்ந்து போனதைச் சொல்லுகிறது. நேரிழையும் இளங்கோவும் பின் போக எவ்வாறு நடந்தனை? என்று தயரதன் கேட்டு வருந்திப் புலம்புகிறான், " என்செய்கேன்" என்று பெருமூச்சு விடுகிறான். எதையும் தடுக்க முடியாத நிலை. இராமன் செலவு தயரதன் ஆற்றலாலும் தடுக்க முடியாது. எனினும் அவனுக்குப் புகழ் சேர்ப்பது. "தந்தை சொல் மிக்க மந்திரமில்லை" என்ற வார்த்தையை மெய்ப்பித்த வள்ளல் தனயனை யார் தான் பிரிய விரும்புவரோ?

இதே நிலையில் கம்பன் படைத்த தசரதன் புலம்பும் முதற்பாடலையும் சேர்த்து நோக்குவது நன்று.

*" கண்ணும் நீராய் உயிரும் ஒழுக கழியாநின்றேன்*
*என்னும் நீர் நான்மறையோர் எரிமுன் நின்மேல் சொரிய*
*மண்ணும் நீராய் வந்த புனலை மகனே*
*வினையேற்கு*
*உண்ணும் நீராய் உதவி உயர்கான் அடைவாய்*
*என்றான்"*

அயோத்தியா கா.ந.நீ.ப 55

இங்கே தசரதன் தன் தோற்றத்தைத் தானே விரித்துரைக்கின்றான். தன்னிலையை இராமன் அறிய விரும்புகிறான். தன் கண்ணீர் என்னும் புனலை உண்ணத்தந்த மகன் என்று தன்னிலைக்கு இரங்கிப் புலம்புகிறான். இராமன் பிரிவு தன் புகழ் காக்க என்பதை, கம்பன் கண்ட தசரதன் எண்ணிப் பார்க்கவில்லை. ஆழ்வாரான தயரதனோ அரிய ணையிலே அமர வேண்டிய உன்னைக் காட்டிற்கு அனுப்புகிறேனே என்று தான் எண்ணுகின்றான். மகனின் பெருமையான வாழ்வைக் குலைத்து விட்டதையே எண்ணி வெதும்புகிறான். ஆனால் கம்பனின் தசரதனோ இராமன் தன்னைப் பிரிந்தது தன் ஆவியைக் குலைப்பது என்று. தன்னிலை எண்ணியே வெம்புகிறான். ஆழ்வாரான தயரதன் மைந்தன் நலம், பெருமை, வாழ்வு பற்றியே எண்ணிக் கவலைப்பட, கம்பன் கண்ட தசரதன் தன் நிலையினை எண்ணியே நலிவான். " உயர்கான் அடைவான் என்றான்" என்ற கம்பன் பாடலடி அவன் தசரதனை, தனியனாகக் கண்டதை உணர்த்துகின்றது. " நன் மகனேயுன்னை நானே" என்ற அடி ஆழ்வாரே தசரதனாய் நிற்பதைப் புலப்படுத்தும், இது தானாகி நின்றவரையும் பிரிந்து நிற்பவனையும் தெளிவாக இனம் காட்டுகின்ற தல்லாவா?

இராமன் கோசலை குலமதலை என்பதை ஆழ்வார் மூன்றாவது பாடலிலே காட்டுகிறார். கோசலையின் மகனாகப் பிறந்த இராமன், கேகயர் கோன் மகளாகப் பெற்ற அரும்பாவி சொற்கேட்ட வருவினையேன் மகனாக இருப்பதையும் தயரதன் நினைக்கிறான். பிறப்பின் தன்மை பற்றி தந்தை நிலையிலே எண்ணிப்பார்க்க வேண்டிய தேவை தயரதனுக்கும் ஏற்பட்டுவிட்டது. ஒருத்தியே தலைவி யென்றிருப்பின் இந்நிலை ஏற்பட்டிருக்குமா? தாயின் வயிற்றிலே தோன்றி வளர்ந்து பிறந்த மைந்தன் தந்தையின் குணங்களைக் கொண்டு வளர்வது உலகியல்பு. கேகயன் மகளாகப் பிறந்த கைகேயியின் குணமானது மாறுபட்டதாக இருப்பதையும் தயரதன் எண்ணுகிறான். "பெண் என்பதால் அவள் குணம் மாறியதோ? பாவியாய் அவள் வளர்ந்தாளோ? நானும் வினையின் பாற்பட்டதால் எதையும் விளங்கும் ஆற்றலற்றேனே?" ........ தயரதன் மனம்மறுகி மாய்கின்றான்.

ஆழ்வார் பயன்படுத்தும் சொற்றொடர்களையும் ஒருசேரப் பார்க்கும்போது அவரது சிறப்பினையும் நன்கு உணரமுடிகிறது. வல்வினையேன் என் செய்கேன், வருவினையேன், என்மகனை இழந் திட்டேன் என்னும் சொற்றொடர்கள் அவன் ஆற்றாமையைப் புலப் படுத்துகின்ற அதே வேளையிலே அவனது கையறு நிலையையும் காட்ட உதவுகின்றன. "என்னையும் என் மெய்யுரையும் மெய்யாகக் கொண்டு வனம்புக்க வெந்தாய்" என்பது ஆழ்வாரது உணர்வின் உச்சநிலையாய் நிற்பது. என் பிழையைச் சரியாக்க நீ வனம் போகிறாய். உன் குணம் தாயின் குணம். தன் குழந்தை செய்த பிழையைக் களையத் தானே செயற் படும் இராமன் மைந்தனல்ல தாயாவான் என்கிறான் தயரதன். தந்தை தளர்வுறின் மைந்தன் தாங்குவது உலகியல் பன்றோ. இராமன் என்ற தெய்வீக நிலை முற்றாக மறைய தன்மகனே என்ற அன்புணர்வு பெருக, ஆழ்வாரே தயரதனாய் மாறி நிற்கும் அற்புதமான காட்சியிது, உன்னையே மகனாக ஏழ்பிறப்பிலும் நான் அடைய வேண்டும் என்ற தந்தை தயரதனின் புலம்பல் தனித்துவமான பக்தியுணர்வின் வெளிப்பாடாகப் பெருமாள் திருமொழியின் சிறப்பாக ஒளிருகின்றது.

கம்பன் காட்டும் தசரதன் இராமனைத் தெய்வநிலையிலே ஏற்றிவைத்து எண்ணுவதை அவதானிக்கலாம். பாடல்களின் முடிவில் வரும் "என்றான்" என்னும் சொல் கம்பன் தசரதனை அவ்வாறு காட்டுவதை நாமறியப் பெரிதும் உதவுகிறது.

இராமனைப் பிரிந்த தசரதன் நாடக மேடையிலே தோன்றுகிறான். அவனைப் பாடல்களைப் படிப்பவர் மனக்கண்ணிலே தோற்றுவிக்கிறான் கம்பன்.

" என்னை இம்மூப்பிடையே வெறுத்தாய் இனி நான் வாழ்நாள் வேண்டேன்". என்று புலம்பும் தசரதன் இராமன் பிரிவுக்குத்தானே காரணம் என்ற கருத்தை வெளிப்படுத்தவில்லை. இன்னும் புகழின் புகழே, அரசே தமியேன் புகழே, பொன்னே என தெய்வநிலையிலேயே தசரதன் இராமனை ஆராதிக்கின்றான். பின்வரும் கம்பனின் பாடலடிகள் இன்னும் அதை விளக்கும்.

***மெய் ஆர்தவமே செய்து உன்மிடல் மார்பு அரிதின் பெற்ற***
***செய்யாள் என்னும் பொன்னும் நிலமாது என்னுந் திருவும்***
***உய்யார்! உய்யார்! கெடுவேன் உன்னைப் பிரியின் வினையேன்***
***ஐயா கைகேயியை நேராகேனோ நான்? என்றான்.***

அ.யோ.கா.ந.நீ.ப. 64

கிருஷ்ண அவதாரத்தை இங்கே நினைக்க வைக்க செய்யாளும், திருவும் என்னும் சொற்கள் நிற்கின்றன. இங்கு புதல்வனைப் பிரிந்து புலம்பும் தசரதன் வாய் 'ராமா' என்றபெயரை ஒருமுறையேனும் உச்சரிக்கவில்லை. இராமனை இறையுருவாகவே காண்பதால் சாதாரணமகன் பெயர் கூறும் தந்தையாகத் தசரதனைக் காட்டவும் முடியவில்லை. ஆனால் தசரதனாகி நின்ற ஆழ்வார் வாயிலே சர்வசாதாரணமாக இராம என்ற பெயர் நடமாடுகிறது. புதல்வன் பெயர் சொல்லிப் புலம்பும் நெருக்கமான தந்தையாக, தசரதனாகியே ஆழ்வார் பாடியுள்ளார். தெய்வத்தை மகனாகப் பாவனை செய்து பாடிய கம்பனால் அது முடியவில்லைப் போலும்.

உணர்வுகளின் பகைப்புலவர்ணனை நிலையில் ஆழ்வாரும் கம்பனும் ஒன்றுபட்டுப் பாடியுள்ளனர். இராமனின் தோற்றம், குனிவில் லேந்தும் கோலம், மரவுரி தரித்த மாட்சி, கானம் போகும் காட்சி, இவற்றையெல்லாம் இருவரும் ஒரே நிலையிலே பாடலிற் பாடியுள்ளனர். எனினும் தெய்வ நிலையும், மனிதநிலையும், கம்பனிலும் ஆழ்வாரிலும் உணர்விலே கலந்து கிடந்ததையும் காண முடிகிறது. ஆழ்வாரும் கம்பனும் இராமன் கானம் செல்லும் காட்சியை மனதிலே காண்கின்றனர்.காட்டு வாழ்க்கை எப்படி இருக்கும் என்று எண்ணிப்பார்க்கும் ஆழ்வார் வாய் மொழி செவி நிறைத்து உணர்வை உருக்குவது.

***" மெல்லணைமேல் முன்றுயின்றாய் யின்றினிப்***
***போய் வியன் கான மரத்தின் நீழல்***
***கல்லணை மேல் கண்டுயிலக் கற்றனையோ***
***காகுத்தா கரிய கோவே."***

பெரிய திருமொழி 9–3

பார்புகழும் மாமன்னன் மூத்த புதல்வன் இராமன். மணிமுடிக்குரிய இளவரசன். சகல சுக போகங்களுடனும் வாழ்ந்தவன். அவன் காடு காணாதவன் அல்லன். இளமையிலே மணம் முடிக்கு முன்னர் தாடகை உயிர் முடித்தபோதும் காட்டைக் கண்டவன். ஆனால் அங்கு நீண்ட நாள் வாழ்வு நடத்திப் பழக்கமற்றவன். வேள்வி காக்கச் சென்ற செம்மல் அந்த வேலை முடிந்த பின் மீண்டும் நாட்டு வாழ்க்கைக்கே வந்துவிட்டான். அப்போது அவன் பணி, வீரன் என்ற நிலையில் விரும்பப்பட்டது. இப்போது அவன் காடு செல்ல வேண்டிய நாள் முடிசூடவேண்டிய நாளுக்கு முதல் நாள். அவன் மனம் நிறையப் பட்டமேற்கும் எண்ணம் மட்டுமே இருந்தது. இந் நிலையிலே கைகேயி கானம் போ என்று சொன்னாள். இராமன் மறுவார்த்தை பேசாது கிளம்பிவிடுகிறான். தன் அரசை, ஆடையணிகளைக் களைந்து உடனடியாக மரவுரி தரித்து விடுகிறான். அவன் கொண்ட புதிய கோலம் எல்லோருள்ளத்திலும் உருக்கமுண்டாக்கியது. தசரதன் நெஞ்சையும் உருக்கிப் புலம்ப வைக்கிறது. மெல்லணையிலே துயின்ற மைந்தன் இனிக் கல்லணையிலேயே துயில வேண்டும். மகனின் உறக்க நிலையை எண்ணும் தந்தை தயரதன் மனம் கலங்குகிறது. கானகத்திலே மரநீழலிலே கல்லணையிலே மைந்தன் துயிலும் காட்சியைக் கற்பனை செய்து மனம் பொறுக்காமல் கேட்கின்றான்." மகனே அவ்வாறு கண்துயில நீ கற்றிருக்கின்றாயோ?" துயிலும் மகனின் தோற்றம். கரிய மேனி வடிவைக்கண்ட தசரதன் மனம் கலங்குவதை ஆழ்வார்தானே அவனாகிக் காட்டுகிறார்.

அதே கரிய மேனியின் வண்ணத்தை கம்பனும் காட்டுகிறான். " கறுத்தாய் உருவம் மனமும் கண்ணும் செய்யாய்" மகனின் உருவம் மனக்கண்ணிலே தோற்றும் போது அந்தக்கரிய மேனிதான் முதலில் தெரிகிறது. இதன் பின் இராமனின் மனத்தையும் கண்ணையும் எண்ணும் கம்பன் நிலை தெய்வப் பண்பு காட்டும் நிலையாகி விடுகிறது. செய்ய வாயும் செய்ய மனதும் கொண்டவன் சிந்தையும், சொல்லும் செம்மையானவன். அவனது வாயோ பவள நிறம் கொண்டது. பலரையும் கவர்வது. அந்த வாயினின்றும் பிறக்கும் சொற்கள்

மனச் செம்மையை வெளிபபடுத்தும் அருள் வாக்குக் கொண்டு அனைவரையும் ஆட்கொள்ளும் அண்ணல் இராமனின் கரிய மேனி எழில் இருவரையுமே கவர்ந்து உள்ளது. எனினும் காட்டுக்குச் செல்லும் மகனின் உறக்க நிலைபற்றிக் கம்பன் காட்டும் தசரதன் எண்ணிப் பார்க்கவில்லை. தயரதனான ஆழ்வாரே கவலைப் படுகிறார். அங்கு தந்தையாக மட்டுமன்றி, தாயாகியும் நிற்கும் அவர் கோலம் வாய் மொழிப் பாடலாய் வெளிப்பட்டிருப்பதை நாம்காண முடியும்.

தசரதன் கைகேயியின் காதற் கணவன். கணவன் என்ற நிலையில் மனைவியராக மூவரைப் பெற்றிருந்தபோதும் கைகேயி பால் தனியான பிரேமை கொண்டிருந்தவன். அவள் அவனுக்கு இக்கட்டான வேளையிலே இனிய உதவி செய்தவள். அதனாலும் அவன் மனதிலே தனிநிலையும் கொண்டவள். ஆனால் இராமனைக் காடு செல்லப் பணித்த அவள் குணம் கணவன் அவளிடம் கொண்டிருந்த தனிமதிப்பையும் பிரேமையையும் குலைத்துவிட்டது. பெண்மையின் தாய்மைப் குணத்தைக் கைகேயி என்ன செய்து விட்டாள். தன்மகனையும் கோசலைமகனையும் பிரித்துப் பார்த்துவிட்டாளே. தயரதனான ஆழ்வார் நெஞ்சிலே இந்த எண்ணந்தான் தோற்றுகிறது.

*" பொன்பெற்றா ரெழில் வேதப்புதல்வனையும்*
*தம்பியையும் பூவைபோலும்*
*மின்பற்றா நுண்மருங்குல் மெல்லியலென்*
*மருகியையும் வனத்தில் போக்கி*
*நின்பற்றா நின்மகன்மேல் பழிவிளைத்திட்*
*டென்னையும் வானில் போக்க*
*என்பெற்றாய் கைகேசீ யிருநிலத்தி*
*னிதாக விருக்கின்றாயே*

பெருமாள் திருமொழி 9-8

இதுவரையில் நன்மையே செய்து வந்த காதல் மனைவி இப்போது செய்திருக்கும் காரியம் தயரதன் உள்ளத்தை உலுப்பி உணர்வை வாட்டுகிறது. எண்ணியெண்ணிப் பார்க்கின்றான். காரணங்களைப் பிரித்துப்பிரித்து நோக்குகிறான். உள்ளத்தில் அன்பினை நிறைத்து வைத்திருந்த கைகேயி ஏதாவது செய்யின் பயன் கருதியே செய்வாள் என்ற அவனது முன்னைய அநுபவம் கொண்டு மீண்டும் சிந்தனை செய்கிறான். வேதப்புதல்வனான இராமனையும் தம்பியையும் காடு செல்ல வைத்தவள் எண்ணமும் அவனுக்கு இப்போது விளங்குகிறது. ஒஹோ, இவள் தன் புதல்வனிடம் இவ்வளவு பற்று வைத்திருந்ததை நான் அறியா திருந்தேனே என மனம் மாய்கிறான். "காக்கைக்கும் தன் குஞ்சு பொன்குஞ்சு" என்பர். கைகேயியும் அப்படித்தான் கோசலையின் வயிற்றிலே பிறந்த இராமனையும், சுமித்திரை வயிற்றிலே பிறந்த இலக்குமனையும் சேர்த்தே காட்டுக்கு அனுப்பி விட்டாள். அதுமட்டுமன்றி என் மருகியையும் அல்லவா அனுப்பி விட்டாள். இராமனை இணைபிரியாத இலக்குவன் சேர்ந்து சென்று விட்டான். இராமன் பிரிவு காணாத சீதையும் உடன் சென்றுவிட்டாள். கைகேசி எனக்கு உன் எண்ணம் புரிந்தது. ஆனால் ஒன்றை நீயும் மறந்து விட்டாய். நின்மகன்மீது கொண்டிருந்த பற்றினால் அவன் நாடாள வேண்டுமென்று நினைத் தாய். அதன் விளைவு என்ன தெரியுமா? அவனுக்குப் பெரும் பழியைச் சூட்டிவிட்டாய். மூத்தவன் இருக்க இளையவன் முடிசூடினால் உலகம் தூற்றும். பரதன்மீதே பழிசாற்றும். இதை நீ மறந்துவிட்டாய். பரதன் மீது சூட்டிய பழி என்றும் மறையாது நின்று நிலைக்கப் போகிறது. இராமனையும் இலக்குவனையும் காட்டுக்கு அனுப்பி மணிமுடிசூடிய உன் மகன் பழியோடுதான் அரசு ஆளப்போகிறான். அதுமட்டுமல்ல என்னையும் நீ இழக்கப் போகிறாய். அன்று எனக்கு உயிர்தந்து என்னைக்காத்தாய். இன்று என் உயிரான ராமனைப் பிரிய வைத்து என்னை இழக்கப் போகின்றாய். பழியினை எண்ணிப் பாராமல் நீ மகிழ்ந்து இருக்கின்றாயே உனது தாய்மைக் குணத்தின் உண்மையான இயல்பை நானும் அறிந்துவிட்டேன். தயரதன் எண்ணத்தின் தெளிவு கைகேயியிலே முழுவெறுப்பாக மாறுகிறது. கோசலை யும் சுமித்திரையும்கூட மக்களைப் பிரிந்து சிந்தை நோகிறார்கள். அவர்களுக்கும் அத்தகைய பிரிவு ஏற்பட உண்மையில் நானே காரணம். கைகேயின் அன்பு உண்மையானது என்று மதிமயங்கிவிட்டேன். இனி மேலும் நான் உயிரோடு இருக்கலாமா? வானுலகத் தையே நானும் விரும்பிச் செல்கிறேன். தசரதன் குரல், அவன்மனத்தாபம், ஆற்றொணாத நிலை ஆழ்வார் சொற்களில் அற்புதமாய்த் தெரிகிறது.

கம்பன் கண்ட தசரதனும் கைகேயியின் குணத்தைக் குறை கூறுகிறான்.

தன் கையறுநிலையைக் கூறி, தசரதன் புலம்பும் காட்சி

*" கேட்டே இருந்தேன் எனினும்*
*கிளர்வான் இன்றே அடைய*
*மாட்டேன் ஆகில் அன்றோ*
*வன்கண் என்கண்? மைந்தா!*
*காட்டே உறைவாய் நீ! இக்*
*கைகேசியையும் கண்டு இந்*

***நாட்டே உறைவேன் என்றால்***
***நன்று என் நன்மை என்றான்.***

அயோத்தியா ந.நீ.ப. 63

கம்பனது கவிதை ஆழ்வார் பாடல் அமைப்பில் இருந்து வேறுபட்டது. இராமனைப் பிரிந்து புலம்பும் தயரதனைக் கம்பன் பார்த்துக்கொண்டிருக்கிறான். தயரதன் என்ற பாத்திரம் எப்படி அரங்கிலே தோன்றுகிறது என்பதையே கம்பன் காட்ட முயல்கிறான். கைகேயியின் செயலைக் கேட்டபின்னும் இறந்து போகாத நான் எப்படிப்பட்டவன்? என்னுடைய கண்வன் கண். ஏன் தெரியுமா? மகனே! நீ காட்டிலே வாழ, இங்கே கைகேயியைப் பார்த்துக்கொண்டிருக்கப் போகிறது. தீது செய்த அவளையே நானும் பார்த்துக்கொண்டிருக்கும் நிலை எப்படியிருக்கப் போகிறது. மனைவியே மாறுபட்டுவிட்டாள். கணவன் தசரதன் மனம் வேதனைப்படுகிறது. இந்தக் கொடியவளைப் பார்க்கவே நான் விரும்பவில்லை என்பதையே மறைமுகமாகச் சொல்லுகிறான். புத்திர பாசம், மனைவியின் அன்புநிலை மாற்றம் இரண்டும் அவனை வாட்டுகின்றன. தசரதனால் தனி நிலையிலே காதலிக்கப்பட்ட மனைவி கைகேயி, குணம் மாறியதை இப்போது தான் அவனும் காண்கிறான். இதுவரை அவன் கண்ணால் கண்ட கைகேயியின் தோற்றம் வேறு. இனிமேல் காணப் போவதும் வேறு. எதையுமே மாற்ற முடியாத, ஆற்றலற்ற அந்த மாமன்னன் தசரதன் மதி மயங்கிச் சோர்ந்தே விடுகிறான். மகனின் பிரிவு அவன் மனதைவாட்டி, அறிவைக் கெடுத்து இறப்பு ஒன்றையே எண்ணவைக்கிறது.

மைந்தன் பிரிவால் இறந்துவிட எண்ணும் தசரதனை ஆழ்வாரும் கம்பனும் ஒருங்கே எண்ண வைத்துள்ளனர். இராமன் கானம் சென்றபின் தசரதன் வாழ்ந்திருப்பதும் கஷ்டமே. பழிச்சொல் கொண்டு உயிர் வாழ்தல் யார்க்கும் பொருந்தாது. கைகேயி பழியைச் செய்தாள். ஆனால் தசரதன் பழிச்சொல்லால் உயிரையே துறக்க எண்ணுகின்றான். இராமா! நீ கானத்தினை விரும்பிச் சென்றது போல நானும் வானத்தை விரும்பிச் செல்லப்போகிறேன். நான் இவ்வுலகத்தில் வாழ்ந்திருப்பதனால் எதையுமே செய்யமுடியாது. உனது பெருமையை உலகறியச் செய்ய நானும் இறக்கத்தான் வேண்டும். நல்ல புதல்வனின் தற்காலிகப் பிரிவுகூடப் பொறுக்கமுடியாதது. பதினான்கு ஆண்டுகள் பொறுத்திருக்கத் தசரதனால் முடியுமா? தளர்ந்த வயது. பழியின் சுமைவேறு. முதுமையின் முடிவை அவன் வரவேற்கிறான். மனைவியர் தசரதன் மறைவால் அடையவிருக்கும் துயரநிலையையும் அவன் மனத்திலே கொள்ளான். இராமன் காடு செல்லும் காட்சியை எண்ணிப்பார்த்து உயிர் துறக்கத் துணிகிறான்.

கம்பன் காட்டும் தசரதன் கோசலையிடம் இராமன் திரும்பி வருவானா என்று கேட்கிறான். ஆழ்வாரான தசரதன் இறக்கவே எண்ணுகிறான். இந்த மாதிரி இராமனுக்காக உயிர்துறக்கவேண்டும் என்ற எண்ணம் கொண்ட தசரதனின் மனைவி ஒருத்தியுமிருந்தாள். தன் மைந்தனுக்கு அவள் சொன்ன வார்த்தையைக் கம்பன் பாட்டிலே சொல்கிறான்.

***" பின்னும் பகர்வாள், மகனே இவன் பின்செல்தம்பி***
***என்னும் படி அன்று அடியாரின் ஏவல்செய்தி***
***மன்னும் நகர்க்கே இவன் வந்திடின் வா அது அன்றேல்***
***முன்னும் முடி என்றனள், வார்விழிசோர நின்றாள்"***

அயோ. ந. நீ. ப. 147

இலக்குமணனின் தாய் சுமித்திரை. இராமன் பொருட்டுத் தன் மைந்தன் உயிரையும் தரத் தயாராக இருக்கிறாள். 'இராமன்' என்ற மகனுக்கு முன், இலக்குவன் அவளுக்கு இரண்டாவது மகனாகி விட்டான். தசரதன் மனைவியரில் இராமனைப் பிரியின் இறப்பே கதி என்று எண்ணும், தயரதனுடன் சிந்தனையில் ஒன்றாய் நின்ற சிறந்த மனைவி இவளே என்றால் மிகையாகாது.

மகனைப்பிரிந்த தசரதன் மாண்ட கோலம் கம்பன் சொற் சித்திரத்தில் நெஞ்சை அள்ளும் சோகக் காட்சியாகும். இராமன் காடு செல்லத் தேர் செலுத்திப் போனவன் சுமத்திரன். அவன் திரும்பும்போது சிலவேளை இராமனுடன் திரும்பக் கூடும் என்ற நப்பாசையுடன் தசரதன் காத்திருக்கிறான். மைந்தனைக் காணத் துடிக்கும் தந்தையின் நைந்த உள்ளம் ஆவலோடு காத்திருக்கிறது. இரண்டு பாடல்களில் கம்பன் செய்திருக்கும் சோகச் சித்திரம்; தசரதன் முடியும் காட்சி. இரு பாடல்களையும் ஒருங்கு சேரப்படிக்கின் நெஞ்சில் நீண்ட சோகமே வந்து குடிபுகும்.

***" இல்லை என்று உரைக்கலாற்றான்***
***ஏங்கினன் முனிவன் நின்றான்***
***வல்லவன் முகமே நம்பி***
***வந்திலன் என்னும் மாற்றம்***
***சொல்லலும் அரசன் சோர்ந்தான்***
***துயர் உறுமுனிவன் நான் இவ்***

*அல்லல் காண்கில்லேன் என்னா*
*ஆங்கு நின்று அகலப் போனான்"*

*"நாயகன் பின்னும் தன் தேர்ப்*
*பாகனை நோக்கி நம்பி*
*சேயனோ? அணியனோ? என்று*
*உரைத்தலும் தேர்வலானும்*
*வேய் உயர்கானம் தானும்*
*தம்பியும் மிதிலைப் பொன்னும்*
*போயினன் என்றான் என்ற*
*போழ்தத்தே ஆவி போனான்."*

அயோ.தை. ஆட்டு.ப. 58, 59

சுமந்திரன் முகத்தோற்றம் முடிவைச் சொல்லிற்று. என்றாலும் அவனது வாய் வார்த்தை வேறாகலாம் எனத்தசரதன் நம்பியிருக்கிறான். உடன் வராமல் சிலவேளை நின்றும் வரலாம் என மனத்திலே சிறு நம்பிக்கையுடன் கேட்கிறான். ' நம்பி சேயனோ? அணியனோ? கம்பனின் சொல்லாற்றல். தசரதன் ஆவலையும் மூன்றே மூன்று சொற்களில் அடக்கி விடுகிறது. ஆனால் நம்பி என்ற விளிப்பு. கம்பன் இராமனை உயர்நிலையில் கண்டதன் அறிவிப்பு. முதற்பாட்டிலும் ' நம்பி வந்திலன்' என்ற தொடர் இதனையே உறுதிப்படுத்தும். "எம்மிராமாவோ" என்ற ஆழ்வார் குரல் அடிநாதமாக அவர் உள்ளத்தில் இருந்து வந்தகுரல். " நம்பி" என்ற குரல் கம்பன் அறிவில் வெளிப்பட்ட அழைப்புக் குரல். தெய்வத்தை வார்த்தையிலே காட்டவேண்டும். நெருக்கமான குரலிலே அழைக்க முடியுமா? கம்பன் சற்றுத் தயங்கவே செய்கிறான்?. ஆனால் தந்தை ஆவி போம் நிலையிலே மகனைப் பெயர் சொல்லி விளிக்கவே செய்வான். இது உலகியல்பு. தெய்வநிலை மறந்து தானே தசரதனாய் நின்றவர்க்கு அது சாத்தியம். கம்பனுக்குக் கஷ்டமாகவே இருக்கிறது. பிரிவின் ஆழமும் அன்பு நிலையும் உறவின் வகையிலே புலப்படவேண்டும். ஒலிக்கும் குரலாலே வெளிப்பட வேண்டும். கவிஞனின் உணர்வு, கவிதையாற்றல் சொல்லில் வெளிப்படும்போது, கவிஞன் தானே சொல்பவன் ஆகிநின்றால் சிறப்பு. இதனை ஆழ்வார் பாடல் உணர்த்தும். எனினும் சேயனோ? அணியனோ? என்ற கேள்வி தசரதன் உள்ளத்து ஆவலை முழுமையாய் உணரப் பயன்பட்டது. அது கம்பன் சொல்லாற்றல். ஆழ்வார் உணர்வாற்றல் கம்பனை விஞ்சி நிற்பது. இராமன் கதை பாடிய இருவரையும் பார்க்கையில் இளமையும் முதுமையுமாயும் தோன்றுகிறது. ஆழ்வார் வயதும் அநுபவமும் அவரைத் தயரதனாக மாறவைக்க, கம்பன் வயதும் இளமையும் தனித்து நின்று காணவைத்ததோ தெரியவில்லை. இது வெறும் ஊகமாகவும் இருக்கலாம். என்றாலும் பாடல்கள் சான்று கொண்டு நோக்கின் பொருத்தம் போலவும் தோற்றுகிறது. கம்பன் காவியம் பாடும்படி பணிக்கப்பட்டவன். ஆழ்வாரோ உணர்வின் உந்தலாற் பாடத்தலைப்பட்டவர். முடிவாக:

ஆழ்வாரின் உணர்வின் உச்சநிலை. அனுபவிப்பு சொல்லிலே வெளிப்பட்ட அற்புதமான இடம். அதை இங்கே குறிப்பிட்டே ஆகவேண்டும். கம்பனைக் காட்டிலும் ஆழ்வாரைச் சிறப்புற வேறுபடுத்திக் காட்டுமிடமும் அதுவே.

*" வாபோகுவா இன்னம் வந்தொருகால்*
*கண்டுபோ மலரால் கூந்தல்*
*வேய் போலு மெழில்தோளி தன்பொருட்டாய் விடை*
*யோன்றன் வில்லைச் செற்றாய்*
*மாபோகு நெடுங்கானம் வல்வினையேன்*
*மனமுருக்கும் மகனே இன்று*
*நீபோக என்நெஞ்ச மிருபிளவாய்ப்*
*போகாதே நிற்கு மாறே:*

பெருமாள் திருமொழி 9–4

தாங்காத சோகத்தில் தயரதன் கேட்கிறான். இராமாவா! என் சொல் காக்கப் போகு: வா இராமா; இன்னுமொருக்கால் என்னைக் கண்டுவிட்டுப்போ. விடைகொடுக்க முடியாத தசரதன் உள்ளம் விரும்பிக் கேட்கிறான். நீண்ட காலம் நெடுநாள் பிரியப்போகும். மகன் விடை பெற்றுப்போக வேண்டும். போய், சிறிது தூரம் மீண்டும் வரவேண்டும். மீண்டும் கண்டு விடை பெற்று போக வேண்டும். மகனின் உள்ளமும் அப்படித் தான் விரும்பும். தந்தை தனயனின் உள்ளத்தையும் எண்ணிப்பார்க்கிறான். இராமனின் பிரிவு தசரதனுக்கு எப்படி வருத்தமானதோ அப்படித் தசரதனைப் பிரிவதும் இராமனுக்கு வருத்தமாக இருக்குமல்லவா? இந்த இனிய உறவின் உணர்வுநிலையை ஆழ்வார் மட்டுமே உணர்ந்தார். யாரும் காணாத அற்புத உணர்வு நிலை. அநுபவத்தால் மட்டுமே காணமுடியும் நிலை. கம்பன் அனுபவமற்றவன் போலும். ஆழ்வார் அனுபவித்தவர் போலும். அந்த இராமனின் எழில், தோற்றம், கரியமேனி, கார்முகில் வண்ணம், கானம் செல்லும் காட்சி. கண்டவர் கருத்தை உருக்கும் மனத்தைமறுகிட வைக்கும். தந்தையாய் நின்றவரும், தந்தையைக் கண்டவரும் சொற்களிலே வடித்துப் போன சோகச் சித்திரம். படிப்பவர் விழி களிலும், அடைக்கும் தாளற்று, அன்பு நீராய்ச் சொரியும் காட்சி காலந்தோறும் காணக்கூடியது. கம்பனையும் ஆழ்வாரையும் காலம் கடந்தும் வாழ வைப்பது.

# கம்ப மலர்

## கவியியல்

# கம்பன் விழா

 நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை 

செம் பொருளும் சொற்பெருக்கும் தெளிந்த ஞானம்
தேடுகின்ற இலக்கியமும் செறிந்ததாகும்
நம்பெரிய தமிழ்மொழிக்குப் பெருமை நாட்டி
நானிலத்தின் கவிஞருக்குள் தலைவன் என்று
அம்புவியின் பலமொழிகள் படித்தாராய்ந்த
அறிஞர்களில் பெரும்பாலோர் ஆமோதிக்கும்
கம்பனுடைத் திருநாளில் கலந்தோர்க்கெல்லாம்
கைகூப்பி வரவேற்போம் கடவுள் காக்கும்

கரையறியாக் காட்டாற்று வெள்ளம் போலக்
கவிபொழிந்து வான்மீகி உலகுக் கீந்த
திரையறியா ஓட்டத்தைத் தேக்கிக் காட்டித்
திறமிகுந்த கால்வாய்கள் செய்து பாய்ச்சித்
தரையறியா இலக்கியக்கா வனத்தைத் தந்தான்
தனிப் புலமைக் கம்பனெனும் கவிதைத் தச்சன்
உரையறியாப் பயனளிக்க உதவும் பாட்டை
உலகமெலாம் அனுபவிக்க உரைப்போர் வாரீர்.

வனத்திலுள்ள மலர் வகைகள் எல்லாம் கொய்து
வாசனைவேர் பச்சிலைகள், பலவும் கொய்து
கனத்த ஒரு பூப்பொதியாம் ராமன் காதை
வான்மீகி யெனும் தவசி கட்டோடீந்தான்
இனத்தையெல்லாம் ஆய்ந்தறிந்து இணைத்துக் கோத்து
இடைக்கிடந்த மாசுமறு யாவும் நீக்கி
தனித்த மணம் அறந்திகழும் மாலையாக்கித்
தரணிக்கே சூட்டி வைத்தான் கம்பன் தானே.

மால் கடிந்த தவமுனி வான்மீகி என்பான்
வனத்திடையே தான் கண்டு கொண்டு வந்த
பால் வடிந்து, முள்ளடர்ந்து, பருத்து நீண்டு,
பரிமளிக்கும் பலவின்கனி பாருக்கீந்தான்,

மேல்படிந்த பிசினகற்றி மெள்ளக் கீறி
மெதுவாகச் சுளை எடுத்துத் தேனும் வார்த்து
நூல் படிந்த மனத்தவர்க்கு விருந்து வைத்தான்
கம்பனென்ற தமிழ்த்தாயர் நோற்றமைந்தன்.

அன்னியர்கள் தமிழ்மொழியை அறிந்தோர் பார்த்தே
அதிசயித்து ஆசைகொள்ளும் கவியாம் கம்பன்
தன்னையிந்தத் தமிழுலகம் மறக்கலாமோ
சரியாகப் போற்றாத தவறே போலும்
என்ன விதம் எங்கிருந்தான் என்றும் கூட
ஏற்பதற்காம் சரித்திரங்கள் ஏனோ காணோம்
இன்னமும் நாம் இப்படியே இருக்கலாமோ?
இழிவன்றோ தமிழரெனும் இனத்துக் கெல்லாம்.

நிதிபடைத்தோர் கலைவளர்க்கும் நெறியைக் காட்டி
நீங்காத புகழினுக்கோர் நிலைய மாகி
மதி படைத்த புலமையுள்ளோர் எவரும் வாழ்த்த
மங்காத பெருவாழ்வு தமிழுக் கீந்து
துதிபடைத்த ராமகதை தோன்றச் செய்த
சோழவள வெண்ணெய் நல்லூர்ச் சடையன் பேரும்
கதி படைத்த சொல்வலவன் கம்பன் பேரும்
கடல் கடந்த நாடெல்லாம் பரவக் காண்போம்.

கம்பனுக்கோர் பெரு நிலையம் காண வேண்டும்
கவிதைகளை ஆதரிக்கும் கழகம் வேண்டும்
தம் பழைய பெருமைகளை மறந்த மக்கள்
தலைநிமிர முடியாது தரணி தன்னில்
வம்பளந்து வீண் கதைகள் பேசிப்பேசி
வாழ்வினெல்லாத்துறைகளிலும் வறியரானோம்
நம்பி மனத் தெளிவுடனே கடமை ஆற்றி
நமது மொழிக் கலைவளர்த்து நன்றே வாழ்வோம்

# கம்ப சூத்திரம்

பத்தாயிரம் கவிதை
முத்தாக அள்ளிவைத்த
சத்தான கம்பனுக்கு ஈடு- இன்னும்
வித்தாக வில்லை என்று பாடு!

சீதை நடையழகும்
ஸ்ரீராமன் தோளழகும்
போதை நிறைந்ததெனச் சொல்லி - எனைப்
போட்டான் மதுக்குடத்தில் அள்ளி!

அண்ணனொடு தம்பியர்கள்
நாலாகி ஐந்தாகி
ஆறேழு ஆனவிதம் கூறி - எனை
ஆளுகிறான் மூளைதனில் ஏறி !

தென்னிலங்கைச் சோலையிலே
சீதை அனுமனிடம்
சொன்னதொரு வாசகத்தைப் பார்த்து - நான்
துள்ளிவிட்டேன் மேனியெல்லாம் வேர்த்து!

கள்ளிருக்கும் கூந்தலினாள்
உள்ளிருப்பள் என்று சொல்லி
பள்ளமிடும் ராகவனின் அம்பு - அது
பாடலல்ல உண்மையென்று நம்பு!

காலமெனும் ஆழியிலும்
காற்று மழை ஊழியிலும்
சாகாது கம்பனவன் பாட்டு - அது
தலைமுறைக்கு எழுதிவைத்த சீட்டு !

கம்பனெனும் மாநதியில்
கால்நதிபோல் ஆவனென
நம்புகிறேன் பாட்டெழுதும் நானோ- அந்த
நாயகன் தான் என்ன நினைப் பானோ?



கவியரசு கண்ணதாசன்

# ✳ வாரம் ✳

அருட்கவி சி. வினாசித்தம்பி

(வாரம் என்னினிப் பகர்வது - கம்பன்)

பரம்பொருளாய்ப் பரந்த ஒரு பகவான் இந்தப்
பாரினிலேன் அவதாரம் செய்தா னென்று
சிரம்பயின்று தெளிவுகொள ஞானக் கம்பன்,
சிரேஷ்டமகா முனிமொழியாய்ச் சிறந்த பாட்டில்
வரம்பயின்று பெற்றெடுத்த தசரதற்கு
வாரமென்னி னிப்பகர்வ தென்றானன்றோ,
தரம்பயின்ற முனிவர் முத லானோர் பூண்ட
தவம்பயின்ற பயனவன்காண், என்ப தர்த்தம்.

* *

வாரமென்றால் வாரப்பா டென்னும் அன்பு,
மண்டலத்தை மனுநீதி நெறியிற் காக்க
பேரரசன் ஸ்ரீராமன் வந்த தாலே
பெருகிவரும் அன்பு நதி, செங்கோலோங்கும்,
சோரமுதற் பகைமடியும், வீர மக்கட்
சுதந்திரத்தின் அரசாட்சி எவர்க்கு முண்டாம்
ஈரமிகு சமுதாயம் உதயமாகும்
இப்பொருளும் கவிக்கம்பன் இணைத்து வைத்தான்

* *

இன்பமுயர் வாரமென்றால் தெய்வப்பாடல்,
எம்பெருமான் திருநாமம் ராம கீதம்,
என்புருகு மிசைநாதம் இருளகற்றும்,
இருக்குமுதல் மறைசுரக்கும் சுகம் பெருக்கும்
துன்பநிலை துடைத்துயர்ந்த வாழ்வுகாட்டும்
துவாத சாந் தத்துவெளி வீடுநல்கும்
என்பதனை வாரமென்னி னிப்பகர்வ (து)
என்றளித்தான் அருள்பழுத்த தெய்வக்கம்பன்.

* *

வாரமெனில் உரிமை என்ற பொருளுமுண்டு
மண்பெண் பொன் நம் சொத்தென்றுரிமைகொள்வோம்
தூரவெளிக் ககனத்தைக் காற்றைத் தங்கள்
சொந்தமென்று சொல்லுவார் யாருமுண்டோ
நாரணனாய் அகிலாண்டம் பூத்த ராமன்
நமக்குத்தான் சொந்தமெனச் சொல்லலாமோ,
ஆருக்கும் பொதுச் சொத்தாய்ப் பிறந்தான் என்னும்
அருங் கருத்தும் இதிலமைத்தார் கம்பனாழ்வார்.

* *

வாரமதைப் பங்கு என்னும் பொருளில் நோக்கின்
வந்த ஸ்ரீ ராமனிலே யெவர்க்கும் பங்கு,
பாரமைந்த சராசரங்கள் முனிவர் தேவர்,
பண்டிதர்கள் பாமரர்கள் பங்குக்காரர்
பேரமைந்த முனிவிசுவா மித்திரக்கும்
பெரும்பங்குண் டென்பதனை மறுக்கலாமோ,
வாரமென்னி னிப்பகர்வ துனங் கோணாது
வழங்குவதே நலமென்ப தின்னோர் வைப்பு,
வாரமென்றால் வேதசந்தஸ் என்பர் மேலோர்
மறைநான்கும் தினமோதிப் பொருள் நுகர்வோர்
வீரமகா தேவனாம் ராமன் நாமம்
விழைந்தொருகால் புகன்றிடினும் வினையகன்று
ஓரரிய உபநிடதத் துச்சி காண்பர்
உவந்தகழற் கதிபெறுவர் கலைக ளெல்லாம்
சேருமொரு நிலையுறுவர் அறிவாய், இன்னும்
தெளிந்திட என் னினிஎன்ப தந்த வாக்கு

* *

ஆகையால், இராமமூர்த்தி
அவதாரம் செய்தான் நித்தம்
சோகமில் லாதுநாங்கள்
சுகத்துடன் வாழ, முந்து
வேகநோய் தீர்ந்து ஞானம்
விளைதரு தவத்தோர் உய்ய
மாகலி காலமாந்தர்
மனுநெறி வடம்பிடிக்க,

* *

தந்தைதாய் குரவோர் மூத்தோர்
தகுமொழி மதித்துப் பேண
சிந்தையா லேனும் ஏனைத்
தெரிவையர் தமைத்தீண் டாத
சுந்தர விரதமோங்கத்
தோகையர் கற்பிலங்கத்
தந்திடு வாக்கைப் பேணும்
தராதரம் எவரும் காக்க,

* *

கொடியவர் குலமழிக்கக்
குணமிகு மனத்தரான
அடியவர் மகிழத் தம்மை
அண்டினோர்க் குதவிசெய்ய
முடிவிலா வஞ்சகத்தார்
முடிவுறு மாறு காட்ட
படிமிசை சகோதரத்தின்
பாசமும் பண்பும் நாட்ட

* *

மனிதரைப் போலே ஈசன்,
மனிதரை யாள்வான் வந்தான்
கனிதரு நல்லை வீதிக்
கம்பன்கோட் டத்துமர்ந்தான்
இனியொரு குறையுமுண்டோ.
எழுதமிழ் ஈழம் உய்யப்
புனிதராய் வாழ்வோம் கம்பன்
பொன்னடி வாரம்வாழி

## கற்றவர் மனமெலாம் களிக்க வைத்தார்.

*கவிமாமணி . பிரம்ம ஸ்ரீ . ந. வீரமணி ஐயர்.*

*தேனென இனித்திடும் தெள்ளு தமிழ்
தீஞ்சுவைப் பாகினை அள்ளியள்ளி
தாயென ஊட்டிய கம்ப வள்ளல்
தாளிணை போற்றி விழாவெடுத்து
தூய நற் கவிஞனின் காவியத்தை
துலங்கிடப் பதினைந் தாண்டுகளாய்
ஆய நற் றமிழினை ஆய்ந்து தந்த
அழகுறு கம்பனின் மலர் வாழி!*

*கம்பனின் காவியத் தேனமுதைக்
களித்து நம் காதுகள் மாந்திடவே
அம்புவி, மீதினில் அணியிலங்கை
அழகுறும் கம்பனின் கழகமது
நம் புவி யோங்கிட நலம் சிறக்க
நந் தமிழ் இலக்கியம் வாழவைத்து
கம்பனின் கவிநயம் எடுத்துரைத்தார்.
கற்றவர் மனமெல்லாம் களிக்க வைத்தார்.*





## கட்டுமானங்கள் வாழ்க.

– சு. வில்வரத்தினம் –

*கம்பனைக் கலந்தே உண்ணும்
கழகம் ஒன்றாரம் பித்தார்
என்னையும் பகிர்ந்தே உண்ணும்
இயல்பினர் அமுது கண்டால்
தம்முளோ பகிர்வார்? தாரை
தப்பட்டை முழங்கி ஊதி
அம்புவி முழுதும் உண்ண
அழைக்கிறார் பந்தி வாழ்க.*



# தமிழறியுந் திருமுருகா சுவையறிய இங்கேவா



**-மன்னவன் -**

தீங்கவி செவிகளாரத் தந்தவன் கம்ப நாடன்
ஈங்கவன் உரைத்த உத்தி சந்தங்கள் கண்டு நெஞ்சம்
தேங்கிட நிற்கி றோம் நாம் சண்முகா ஈசன் கையில்
மாங்கனி தோற்கும் கம்பன் மாக்கவிச் சுவைகாண்பாயே

பாருறு நிகழ்வைக் காட்டி பொருட்களின் அழகு காட்டும்
சீரது பிறிது தானே. சேற்றிடை வளரும் பச்சைத்
தேரைதா லாட்டும் அந்த மழலையைக் கண்ட பின்னும்
ஆருளர் கம்பன் தந்த சுவையன்றிப் பிறிதை நாட.

அள்ளியே வழங்கிக் கைதான் அதிகமாய் நீள நின்ற
வள்ளல் நம் தயர தன்தன் வாழ்நெறி கண்டு தானே
வெள்ளமும் பறவை நாற்கால் விலங்குகள் வேசிப் பெண்கள்
உள்ளமும் ஒருங்கே ஓடிக் கொண்டவாம் போதும் தானே.

தீதென உள்ள தெல்லாம் திரண்டுரு வாக நிற்பாள்
தீதெனத் தம்மை உண்ணத் தவறினள் முனிவர் சொன்னார்
மாதவள் கொடுமை கொண்ட மறவழித் தாட கைப்பெண்
போதுமே இந்த வார்த்தை பகழியை எடுப்பதற்கே

வில்லுக்குத் தீனி தேடி வந்தவ னல்ல ராமன்
அல்லுக்கு நிகராள் நெஞ்சில் அம்பினை விட்ட போது
சொல்லில் நற் சிலம்ப மாடும் கம்பனே சொன்ன தென்ன
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போன தன்றே

# ❖❖❖❖ நன்று கம்பனின் நற்கவி வாழ்கவே ❖❖❖❖

*நயினைக் கவிஞர் நா. க. சண்முகநாதபிள்ளை*

பேரறிவாம் ஊற்றான பைந்தமிழின் தீஞ்சுனையில்
கூரறிவால் சொல்பொருளைக்கூட்டுவித்து தேர்சுவையில்
கம்பக் கவிவேந்தன் கட்டுவித்தான் ( இ) ராம கதை
செம்பொருளின் தேடலதன் சீர்.

அவையடங்கி அவையடக்கி அவன் சொன்ன கவித்துவமோ!
ஆன்றவிந்த சான்றாண்மைச் சால்பதனின் தத்துவமோ!
குவையொருங்கு குவித்ததமிழ்ப் பண்பாட்டின் பெட்டகமோ !
குணங்குறிகள் இனங்கண்டு வனைந்தபல ஆளுமை யோ !
சுவைததும்பு சொற்சுவை தோய் அறவாக்கின் தனிப்பெருக்கோ !
சூக்குமத்தின் ஆக்குதிறன் தொழிற்பட்ட வெளிப்பாடோ!
நவையறு செந் தமிழ் குழைத்துக் கம்பனவன் தருவிருந்து!
நன்நடைகள் நல்குதற்கு அருமருந்தோ! என் சொல்வேன் !

இலக்கியம் படைத்த தொன்மை இயல்பினர் தம்முள் அந்தப்
புலத்தினில் புடமிட் டன்ன பொன்னென ஒளிர்ந்து தெய்வ
நலத்தொரு மண்ணில் வந்த இராமனை மனித னாக்கிக்
குலத்திடை மானு டத்தின் கொற்றமாய் வைத்தான் கம்பன்

கற்றவர் கம்பனைக் கற்றுக் கனிந்தனர்
பெற்றநற் பேறெலாம் பெரிதும் உவந்தனர்
நற்றவர் இராமனின் நாமம் நவின்றனர்
உற்றபே ரின்பத்தில் ஊறித் திளைத்தனர்

அன்பும் அறனும் அவ்வழி ஆற்றலும்
இன்பத் தமிழும் ஈகையும் வாய்மையும்
என்றும் இவ்வுல கிருந்தர சோச்சிட
நன்று கம்பனின் நற்கவி வாழ்கவே

கேட்க இனிப்பதும் கிளர்ச்சி தருவதும், செவிகள்
தோட்கச் செழுந்தமிழ் (த்) தரய்மை பயப்பதும், நெறியில்
நாட்டம் தருவதும் நமக்குள் ஒளிர்வதும், தெய்வ
ஊட்டம் அளிப்பதும் கம்பன் கவிதை யென்றோர்

# செவிக்குக் கனிதரும் கவிக்கொரு கம்பன்

**– ச. வே. பஞ்சாட்சரம் –**

செவிநுகரும் கனிகவிதை என்றான் - கோடி
செவிகளூடு தமிழ் மனங்கள் வென்றான்
கவிநடைக்குள் ராமவள்ளல்
கதைபடைத்துப் போனகம்பன்
புவியறிந்த பாவலர்க்குள் மூர்த்தி - அவன்
புகழுரைத்தோர் கழகமெய்துங் கீர்த்தி!

கன்னித்தமிழ்க் கதிரிரண்டு பேரே- அந்தக்
கதிகள் கம்ப திருவள்ளுவர் மாரே
முன்னும் தமிழ்ப் புலவர்மத்தி
மூவர் கவிதைச் சக்கரவர்த்தி
என்னும் புகழை எய்தி நின்றோர் ஆவர்- அவருள்
இணையிலாரக் கம்பநாட தேவர்!

மண்ணுண்ணிமாப் பிள்ளையாம்பேப் பாட்டை- நல்ல
ஊக்கவியாய் விளக்கிவிட்டான் சேட்டை
எண்ணி நூறு பாடல் பண்ணி
எடுக்க நின்றான் சோழன்கன்னி
வண்ணன் அம்பி காபதியைப் பெற்றான்- கொன்ற
மன்னன் சோழன் வஞ்சனையால் இற்றான்
தியிலா அநாதை கம்பன் தன்னை- தமிழின்
கதிபனாக்கி னானோர்வள்ளல்! பின்னை?
மதிசெவ்வள்ளல் சடையப்பனை
வாழ்வளித்த கொடையப்பனை
இதயகாவி யத்துளூலவு வித்தான் - புகழ்
எத்தனையோ எடுத்தடுக்கி வைத்தான்!

“கழகமொன்று கம்பனுக்கு வைப்போம்- கம்பன்
கவியிழையால் உள்ளங்கோடி தைப்போம் !”
விழைவுதந்த விளைவுகள் தாம்
விளங்கு கம்பன் கழகங்கள் ! ஆம்!
எழுக உலகத் தமிழர்நெஞ்சங் கோடி- தமிழ்
ஏற்றங்களை உழைத்திடுவோம் கூடி!

# கம்ப மாகவி வாழிய

கலாநிதி காரை, செ. சுந்தரம்பிள்ளை

1

கம்ப னாகிய அற்புத மாகவி
கரிய மாலின் அவதார மாகிய
எம்பிரான் ஸ்ரீ ராமனின் காதையை
இனிய காவிய மாக வடித்தனன்
தம்பிமாரை உயிரெனக் கொண்டவன்
தந்தை சொற்படி கானகம் சென்றவன்
அம்புவிக் கெலாம் மூலவித் தானவன்
யார் அவன் ? அண்ணல் ராமனே ! என்றனன்

2

எங்கே தர்மம் அழிந்திடு கின்றதோ
எங்கே தீமை மலிந்திடு கின்றதோ
அங்கே தர்மத்தைக் காத்திட வேண்டியும்
அதர்ம மென்பதைக் கொன்றிட வேண்டியும்
சங்கு சக்கர தாரி யுகந்தொறும்
தானே வந்தவதாரம் புரிவதை
எங்கும் எப்பொருள் மீதும் எஞ்ஞான்றும் நின் (று)
இயங்கும் ராம கதையூடாய்ச் செப்பினன்

3

கங்கை யாற்றங் கரையிலே வேடனைக்
காதலோடுயிர்த் தம்பியாய் ஏற்றதும்
பங்கமுற்ற குரக்கின வேந்தனை
பாசமோடு தன்பின்னவன் என்றதும்
எங்களுக்குள் ஒருவன் விபீடணன்
என்று பாசமோ டன்பு பொழிந்தும்
செங்கண் மாலினா லன்றிச் செகமிசை
செய்யவல்லவர் யார் எனச் செப்பினன்

4

தாரமொன் றெனும் சத்திய வந்தனன்
தரணி மீதுயிர் நேயம் படைத்தவன்
வீரமேயுரு வான வடிவினன்
வெற்றி யன்றி யறியாத மன்னவன்
ஈர மான உளத்தினன்; போரிலே
ராவணன் வெறுங்கையுடன் நிற்கையில்
தீரமோடு " நீ சென்றுவா" என்றவன்
தெய்வமாக் கதை தெய்வீகமாக்கினான்

5

'அரனென்'பவன் நீயோ உனக்குத்தான்
அகில மென்பதும் சொந்தமோ உந்தனை
இரந்து வாழவோ நான் தமிழ் கற்றுளேன்
என்று சோழனைக் கேட்ட துணிவினன்
பரம்பொருள் வடிவான ஒருவனை
பக்தருக்குளே நின்று நடமிடும்
பெரியனைப் புகழ் காவிய மாக்கிய
பெரியவன் கம்ப மாகவி வாழிக

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

# ❋▲❋❋▲❋❋▲❋ அலகில் விளையாட்டு ❋▲❋❋▲❋❋▲❋

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

சொல்லை வசைத்துச் சுவையை அதில்தேக்கி
எல்லை கடந்து விரிந்த வெளிக்கேவி
வையகம் எல்லாம் வலஞ்செய் திடவிடுத்த
ஐயா நீ செய்த அலகில் விளையாட் (டு) ஓர்
சாதனைதான்! உன்னால் நிமிர்ந்தோம் ! தமிழ்க்கவிதைப்
பாதை சமைத்து, பவனி வரும் வழியில்
தோரணங்கள் வீதியெல்லாம் தொங்கவிட்டு வாயில்தொறும்
பூரண கும்பங்கள் பொலிவாக வைத்தவன் நீ!

சூறா வளியைத் துணிந்து பிடித்தடக்கி
நூறா யிரஞ்சாளரத்துள் நுழைத்திழுத்து
மின்னற் கொடியால் விளக்கிப் புதியபல
வண்ணங் கலந்து மடக்கி ஒரு சீருக்குள்
பத்தா யிரம் வோல்ட் மின்சாரம் பாய்ச்சுகிற
வித்தை புரிந்தாய் - எவரே வியவாதார்!
தென்றலாய் மாறிச் சிகரம் தடவியெங்கள்
முன்றில் உலாவி முகாமொன் றமைத்தவனே !
சந்தனத்தேர் செய்து தமிழை அதிலிருத்தி
அந்தரத்துத் தேவர்வாய் ஊற அலங்கரித்தே
ஓசை விகற்பமெனும் ஒண்புரவி பூட்டியெங்கள்
வாசல் வரைசெலுத்திக் கொண்டுவந்த வல்லாள !

பத்து நூற் றாண்டு கழிந்தாலும் உன்பாட்டு
புத்தம் புதிதாய்ப் பொலிகிறது காண்கின்றேன் !
சுட்டும் பொருளுக்கும் அப்பாலுன் சொல், கம்ப,
எட்டிப் புதிதோர் இடத்தைத் தொடுகிறது. !
புலனைந்தும் பாட்டுப் புனலாடு கின்றன காண்
சலனங்கள் எல்லாம் தவிர்ந்து.

***சோ. பத்மநாதன்***

# ** தமிழினை ஆண்டவன் **

- முல்லை மணி -

அம்பு விக்கண் அருந்தமிழ் மேன்மையை
அழகைக் காவிய ஆற்றலைக் காட்டியே
உம்பரும் தொழுது ஏத்திடச் செய்து உயர்
உண்மை நீதி உணர்ந்திடச் செய்திடக்
கம்பன் என்றொரு மானிடன் தோன்றினன்
கன்னித் தாய்த் தமிழ் ஏற்றம் அடைந்தனள்
வம்பு கள்பல செய்துக விச்சக்ர
வர்த்தி யாகித் தமிழினை ஆண்டவன்

வள்ளு வன்தரு தர்ம விதைகளை
வார்த்து நீரை முளைத்திடச் செய்தெழில்
கொள்ளை இன்பப் பழங்களை ஈந்திடும்
கோடு யர்ந்தவி ருட்சம தாக்கியோன்
தெள்ளு நற்றமிழ்க் காப்பிய மாகிய
தீஞ்சுவை ராம காதையைத் தந்தவன்
அள்ளி அள்ளிச் சுவைக்கச் சுவைக்க நல்
அரும் பொருள் பொதி கவிதை சமைத்தவன்

தேங்கி நின்ற இலக்கிய ஆற்றினை
திசை திருப்பிப் பெருகிடச் செய்தவன்
ஓங்கித் தாழும் ஒலியினைக் கொண்டுமே
உணர்ச்சி பாவம் உணர்த்திய பாவலன்
வீங்கு நீர்சூழ் உலகின் வறுமையும்
வெண்மையும் என்றும் வேண்டிடா மானிடன்
மாந்தர் வையத்து வாழும் நெறிமுறை
வகுத்துக் காட்டிய கவிதையின் காவலன்

செந்த மிழ் மொழிக் கேது கதி எனச்
செப்பு வோர் கம்ப ராமா யணத்தையும்
பைந்த மிழ்ந்திருக் குறளையும் போற்றுவர்
பாரில் நல்லறம் என்றும் நிலைக்கவே

தந்தை சொல்மிக்க மந்திர மில்லையென்
தாரக மந்திர மோடு பிறன்மனை
எந்த வீரன் என்றாலுமே நோக்கிடின்
எய்துவன் கேடு என்றுமே காட்டியோன்

தேய்ந்து போன உவமை அணியினைச்
செப்ப மாக்கிப் புதுப்பொலி வூட்டியோன்
ஆய்ந்த சொற்கள் அடிமையாய்ச் சேவகம்
ஆற்றக் காவியச் சாறு பிழிந்தவன்
பாய்ந்து செல்லும் நதிக்கு உவமையாய்
பாவலர் கவிப் பாங்கினைக் காட்டியோன்
வேந்த னுக்குயிர் மக்கள் எனப்புது
வேத வாக்கியம் ஒன்றை உணர்த்தியோன்

காதை கள்சொரி கின்ற செவிநுகர்
கனிகள் என்றவன் தாடகை தன்னையே
பேதை என்று நினைத்திடும் ராமனை
பெருந்த கையெனப் புகழ்மொழி நாவலன்
சீதை கேள்வனின் வீரத்தைச் செப்பிட
திக்கெலாம் புகழ் ராவணன் மேனியில்
வேதனைத்துளை எள்ளிட இன்றியே
வெங்க ணையினால் செய்தவன் என்றவன்

மனித நேயமே கம்பனின் பேச்செலாம்
மனித நேயமே கம்பனின் மூச்செலாம்
மனித நேயமே கம்பன் கவிப்பொருள்
மனித நேயமே கம்பன் கவிச்சுவை
மனித ருக்குள் இலட்சிய மாகவே
மன்னன் மைந்தனாம் ராமனை ஆக்கியோன்
மனிதர் வாழ மனிதர் வளமுற
வாழும் நன்னெறி காட்டியோன் வாழிய !

# தரிசனம்

மஞ்சாகி நெடுவானில் இறைவன் வந்து
மழையாக வழிந்தோடிக் கழனிபுக்குச்
செஞ்சோழ மணிக்குள்ளே மறைந்தே ஏழை
சிறுமுறத்தில் அழகாகச் சிரிக்கக்கண்டேன்!
'அஞ்சாதீர் என் மக்காள்' என்றே ஓடி
அரவிந்த முகமாதர் உரலில் இட்டு
நெஞ்சார இசைபாடி இடித்த போது
இசையோடு இசையாக இசைந்தே போனேன்!

வட்டிலிலே கூழாகிக் குழைந்து நின்றான்
மதலையரின் பசிதீர்த்து மழலையானான்
தொட்டிலிலே அவரோடு துயிலப் போனான்
துயில் கூட்டும் ஆராரோப்பாட்டுமானான்
இட்டமுடன் வருவிருந்தை ஓம்பும்போதில்
இல்லறத்தின் நற்பயனாய் இனிமை செய்தான்
கட்டிலிலே துணைவரொடு கவிதை சொல்லும்
களிப்பினிலே களிப்பாகக் கலந்தே போனான்!

க. பொ. நடனசிகாமணி

# விண்ணப்பமொன்று........

கல்வயல்வே. குமாரசாமி

சோழச் சொகுசு அரசில்
வெண்ணெய் நல்லூர்ச் சடையன் கூழைக் குடித்தவனே!
எம் தமிழின் மாறாத ஊழைப் பழித்தவனே!
ஏழைப் புலவர்கள் கோழைத்தனமற்ற
கொள்கைப் பிரகடன ஏடாய்த்
தமிழ் மிடுக்கே ஏற்றமாய் ஏணியுமாய்
தேடா வடமொழியின் தேன்குடித்த வண்டாகிப்
பாடாவகை விருத்தப் பாட்டுள்
மது நுழைத்தாய்

* *

நேற்றைத் திறமைகளை,
இற்றை நிகழ்வுகளை
ஆற்றல் நிறை நாளை ஆற்றும் புதுமைகளைக்
காற்றாய்க் கிழிக்கும்படி
கவிதை தந்த பாவாணா!
உனக்குத் தலைசாய்த்தால் வெட்கமென்ன?
ஆணாய்க் கவிதை அரங்கில் நிமிர்வதற்கு
உன் ஆசி கொடுக்கும் ஓர் அற்புதக்
கற்பகக்கா வாணா!
அருவருக்க வாந்தி எடுப்போர்
வயிற்றுக் குறைபாட்டை ஏந்திச்
சிரிக்கின்ற எண்ணம் எமக்கில்லை.
பின்நுழைந்து சென்று
பிறரின் அடிவருடி
முன்நிமிர எண்ணா மொழிமிடுக்கு மிக்கவனே!
'மன்னவனும் நீயோ, எனக்கேட்ட மாவீரா!
ஒட்டரைப் பாட்டுக்கு உயிர் என்று ஊனையிட்ட
ஒட்டரைப் பாட்டால் உளிவைத்தே
ஒடென்றே ஒட்டத் துரத்திவிட்ட உன்னை
வணங்காமல் விட்டால்
எமக்கு விடிவு ஏது பாவேந்தா!
பாவேந்தும் மானுடத்தை எண்ண மறுத்த
மமதைகளைக் கூனிக் குறுக்க நினைக்கும்
ஒரு பாத்திரத்தில்
ஞானச் சுடர்கொழுவி நின்ற
மகா ஞானி நீ

நாவடக்கமாக நடித்து
நயவஞ்சரின் நாவடக்கிவைதத
நவகவிதைச் சித்தா!
நின்சேவடி நம் ஈழச் சிவந்த தரைமீது
பாவநடந்து ஓர் புதுப் பரணி பாடுதற்கு
ஈண்டு பிறந்து வர மீண்டும் உனை வேண்டுகிறேன்.

* *

அஞ்சாமல் உண்மைகளை அப்படியே சொல்வதற்கு
நெஞ்சத் துணிவும், நிறைவும்,
நடுநிலைமை
கொஞ்ச அணுப்பிரமாணமுமே- குன்றாத
பூரணமான புதுப்பாவலவன் நீ

* *

ஈழ விடிவுக்காய்
இருள்கிழிக்கும் பேரொளியாய்
ஆழமனதை உழுதே
அறவிழுதை மேழிமொழி பிடித்து
மிடுக்காய் விதைத்து
மணிக் காவியங்கள்
நாடு கடைத்தேற
அறுவடைகள் செய்யவல்ல சித்தன்
நினையன்றி
வேறொருவர் ஐயா அறியேன்
ஆதலினால் வேண்டுகிறேன்
போலிப் புதர்மண்டிப் போய் கிடக்கும்
எம் ஈழ வேலி நிரந்தரமாய்
விண்ணாட்டுக்கு அப்பாலுஞ்
சீல மலர்கள் மலரச்
சிவந்திருக்கும் நம்பூமி நல்ல பருவம் இப்போ
கவிக்கு விநாயகனே
பல்லாண்டு உரைக்கின்றேன்
பாவடிகள் சூட்டுகிறேன்
பூரணமான புதுப்பாவலனுனை
ஈண்டு பிறந்துவர
மீண்டும் இதோ வேண்டுகிறேன்.

# நனவாகும் கனவு

உருகியுருகி பெருகும்தமிழில் கவிதை நனைந்திடும்
உதயகாலப் பொழுதிலினிய சுரங்கள் விளைந்திடும்
கருகியெரியும் மனங்களெனது இசையில் விரிந்திடும்
கனவிலுருகும் இளையவிழிகள் அமுதம் சொரிந்திடும்.

அலைகளெனது இசையில்மயங்கிக் கரையில் ஒதுங்கிடும்
அதிகவேக முகில்கள்கூட அடங்கி வழிவிடும்
சிலைகளெனது குரலிலெழுந்து சதங்கை அணிந்திடும்
சிறகுவிரிக்கும் பறவைதனது உறவை நினைந்திடும்

குயில்களெனது குடிசைதனிலே மகிழ்ந்து கூவிடும்
குளங்கள்வழியும் வயல்கள்விளையும் குழந்தை பேசிடும்
மயில்களெனது இசையிலசைந்து பரதம் ஆடிடும்
மலர்கள்விரியும் பொழுதிலுலகின் மனங்கள் பாடிடும்.

பகைவனெறியும் கணைகளெனது இசையில் திரும்பிடும்
பசியிலெரியும் வயிறுமெனது குரலில் நிறைந்திடும்
சபைகளெனது மொழியில்மயங்கி உருகிக் கிடந்திடும்
தமிழர்தேசம் எனதுமொழியில் நிமிர்ந்து நடந்திடும்.

- கவிஞர் புதுவை இரத்தினதுரை

# கம்பன் ஒரு கதிரவன்

- மு. மேத்தா -

கம்பன் –
நிலமல்ல
அவனுடைய கவிச்சுவையில்
வறட்சிப் பிரதேச
வரைபடங்கள் கிடையாது

கங்கையுடன் மட்டும்
சங்கமித்துக் கொள்ளாமல்
கூவமாய்ச் சிலநேரம்
கூவுவதால்,
நீர் என்று கம்பனை
நினைத்தாலும் பொருந்தாது – அவன்
சிற்றினம் சேராத சிந்தனையாளன்

நெருப்போ சிலசமயம்
ஏழைகளின் அடுப்பை
எட்டியும் பார்க்காமல் - அவர்களது
குடிசைகளின் தலைமீது
குதிக்கிறது.
ஆதலினால்..... கம்பன்
நியாயந் தெரியாத நெருப்பல்ல.

அவனிடத்தில்
காற்றாக விசிறிவிடும்
கவிதைச் சுகம் உண்டு
என்பதெல்லாம் உண்மைதான்.
ஆனாலும்
அக்காற்றும்
தென்றலாய் வருகின்ற
தேவ வேளையில் தான்
மலர்களுக்குத்
தலை சீவி விடுகிறது
புயலாய் வருகிற பொல்லாத
வேளையிலோ......
மலர்களின் தலைகளே சீவப்படுகிறது.
கம்பன்
கவிநயங்கள் தெரியாத காற்றல்ல!

கம்பனை - வானமென்று
காட்டுவதும் ஏற்காது
வானம் -
வைரமழை விதையை
வைத்துக் கொண்டிருந்தாலும்
சில சமயம் -
பதுக்கல் புரிந்து நமைப்
பட்டினிக்கும் ஆளாகும்!

கதிரிடத்தில் ஒளியைக்
கடன் வாங்கிக் கொள்கிற
நிலவென்று கம்பனை
நினைக்க முடியாது - அவனோ
வார்த்தைக்கும் கற்பனைக்கும்
வளமான கருத்துக்கும்
எவரிடமும்
கை நீட்டத் தேவையற்ற கலைச்செல்வன்

கம்பன் கவிதையின் முன்
நட்சத்திர வானத்தை
நகர்த்தி நாம் வைத்தாலும் - அது
அட்சய பாத்திரமாய் ஆகிவிடாதா?
ஆயிரம் விளக்கேற்றும்
அழகான ராத்திரியும் – கதிரென்ற
ஒற்றை விளக்கின்
ஒளிக் கிணை யாகுமோ?

கம்பனே நீயொரு கதிரவன் தான்
கடல்விட்டு எழுந்து வரும்
கதிர் - நீயோ
கவிச் சுவையின்
கடலையே தூக்கிவந்த புதிர்.

வெச்சம் உன்னுடைய
வீட்டு விலாசம்!
பூமியை எழுப்பிப் புத்துயிர் கொடுக்கும்
பகல் - உன்னுடைய
பரிசளிப்பு.

விழிப்பறவை சிறகடிக்க
வியப்பூட்டிக் கொண்டிருக்கும்
ஒளிப்பறவை நீ
சூரியன் தான் நீ
உன்னைச்
சுற்றி வருகின்ற
பூமிகள் நாங்கள்
நீ கொடுத்த
தமிழின் போதை
தலைக்கேறிப் போனதால் தான்
தன்னையே சுற்றித்
தடுமாறிக் கொண்டபடி
உன்னையும் சுற்றி
உலா வருகின்றோம்!

# கம்பனுக்கு ஒரு கேள்வி

- வைரமுத்து

ராப்பகலாப் பாட்டெழுதி
ராசகவி ஆனவனே!
தமிழென்னும் கடலுக்குள்
தரைவரைக்கும் போனவனே!

சூத்திரம்போல் பாட்டெழுதும்
சுகக்கவியே! நான் உனக்கு
மனுஷப்பூ மாலையிட்டா
மரியாதை ஆகாது!

இந்திர லோகத்து
இளசுகளை தேவரெலாம்
மோகக் கிறுக்கெடுத்து
முந்நூறு முத்தமிட
முத்தமிடுங் கூத்துகளை
மூத்தநிலா பார்த்துவிட....

இட்ட முத்தத்து
எச்சில் கறையழிக்க
வட்டில் அமுதெடுத்து
வாய்கழுவ வாய்கழுவ...

வாய் கழுவும் அமுதமெலாம்
வாய்க்கால் வழியோடி....
கற்பக மரங்களுக்குக்
கால் கழுவக்கால் கழுவ....

கால் கழுவும் சுக வெறியில்
கற்பக மரம் பூக்க....
அந்தப் பூவையெல்லாம்
அரும் போட கிள்ளிவந்து
வான வில்லில் நார் கிழிச்சு
வகையாக மாலை கட்டி
சொல்லரசே நான் உனக்குச்
சூட்டிவிட வேணுமல்லோ!

....நான் உனக்கு
மனுஷப்பூ மாலையிட்டா
மரியாதை ஆகாது!
சொல்லுக்குள் வாக்கியத்தைச்
சுருக்கி வச்ச கவிப்புலவா!
உன்னை இதுவரைக்கும்
ஒரு கேள்வி கேட்கலையே

தினம் வடிச்ச கண்ணீரால்
நெஞ்சுக்குள் கடல் வளர்த்து
அசோக வனத்திருந்து
அழுதாளோ அவளை நீ
கண்ணாலும் பார்க்கலையே
கவி மட்டும் சொன்னாயே!

அம்பிகா பதிஅழுதது
அமரா வதிபுலம்பியது
காதுக்குள் அழுதாளோ
கவியேதும் பாடலியே!

அம்பிகா பதிஆழுக
அமரா வதிஅழுக
கம்பா! நீஆழுத
கணக்கெங்கே காட்டலியே!

ஊமை வெயிலுக்கே
உருகிவிட்ட வெண்ணெய்நீ
அக்கினி மழையில்நீ
அடடாவோ உருகலியே!

கடவுள் காதலைநீ
கதைகதையாய் பாடினையே!
மனுஷக் காதலைநீ
மரியாதை செய்யலியே!

இந்தக் கேள்வியை, ஒ!
எங்குபோய் நான்கேட்க?
பாடிவச்ச கவிஇல்லே
படிச்சவுக சொல்லுங்க.

---

நன்றி "திருத்தி எழுதிய தீர்ப்புகள்" கலைஞன் பதிப்பகம்

# வித்துவத்தை உணருங்கள்

ஜெ.கி. ஜெயசீலன்.

கம்பன்யா ரென்றால்
கவிதைப் பெருஞ் சுரங்கச்
செம்பொன் படைத்துலகைச்
சேவித்த பாவலவன்!

வையத்துத் தமிழ்க் கவிஞர்
வட்டிகுட்டி ஏதுமின்றி
வார்த்தைக் கடன் வாங்கும்
வளமான 'சொல் வங்கி' !

உள்ளார்ந்த ஞானத்தின்
ஒளிர் புலமைச் செருக்குடனே
உலகளந்து ஓடியதோர்
உயர் கவிதைப் பேராறாய்;
நாமெல்லாம்....,

அண்ணாந்து பார்த்து நிதம்
"ஆ" வென்றே அதிசயிக்க
விண்ணார்ந்து நிற்குமுயர்
விரிஞானக் கவியேறே!

உமிழ் நீரும் உனக்குள்ளே
தமிழ் நீராய் ஊறியதால்
அமிழ்தூறாங் கவிதைகளின்
அறுவடையோ மிகவுச்சம்!
வார்த்தைக்குள் வாழ்க்கையினை
வளைத்துத்தான் போட்டவனாய்,
ஆர்த்தெழுந்த கவிதைகளால்
ஆவேச நடனமிடும்;

கூர்த்தமதிச் சுரங்கம் நீ......
குடியிருந்த காட்சியினைப்
பார்த்திலை எனினும் உன்
பாட்டுக்குள் தெரிகின்றாய்!

எரிப்பதற்கு வந்தவரை
எதிர் கொண்டு நன்றாகச்
செரிப்பதற்குப் பழகியதுன்
செம்மாந்த காவியநூல்!

மூச்செடுத்து விடக்கூட
முட்டுப் படுபவரா
பேச்செடுத்து உன் மீது
பிழைகாண முயலுவது?

வானளந்த கம்பனது
வார்த்தைப் பெருங்கடலை
நானளந்தேன் என உளறும்
நாணல்களை என் செய்வேன்?

நிலவுக்குச் சேறெறிய
நினைப்பவரோ மேல் நாட்டு
வளவுக்கள் விளைந்தவையே
வளமான கவியென்றார்

ஆரியத்தைப் பாடினனாம்
ஆழ்ந்திருக்கும் கவியுள்ள
வீரியத்தைச் சுவைக்காத
விமர்ஸகரை நோகின்றேன்!

சூரியனைக் கைநீட்டிச்
சுட்டு விடத் தீக்குச்சி
காரியத்தில் இறங்குமெனில்
கலையுலகஞ் சிரிக்காதா?

அன்னவனைத் தங்களது
ஐந்தறிவால் அளக்க வரும்
சின்னவரை நினைத் தெனக்குச்
சிரிப்புத்தான் வருகிறது!

தீ நாக்கைக் கூடவொரு
பாநாக்கால் அனைத்தவனை
வீணாக்க நினைப்பவரே
'வித்துவத்தை' உணருங்கள்!

# கம்பனெனும் கற்பூர வாசம்

த.சிவசங்கர்

காலமென்னும் புற்றுநோய்க்
கரையானில்
கரைந்து கொண்டிருக்கும்
காசினியின் வாழ்க்கை.

விடிகாலைக் கனவுகளாய்
வியனுலகில்– எங்கள்
விற்பனங்கள்.

அழகை சாசுவதமாக்கி
அறியாமை உணர்வுகளில்
ஆழ்ந்தபடி ........
அன்பும்
அறிவும்
ஆழ்ந்த நித்திரையில்.

கொட்டும் நீர்வீழ்சியின்
கீழ்
குடை பிடித்தபடி
குளிப்பவர்கள் நாங்கள்.

அறுக்கப் போகும்
ஆட்டிற்குத்தான்
அழகு செய்வதும்
அமுது ஊட்டுவதும்.
இதயங்களைத் தொலைத்துவிட்டு
இயந்திரங்களின்
இயக்கத்தில்
இன்று எங்கள்
இருப்பு .

உண்மைச் சூரியனை
ஒளித்து வைத்து விட்டு
பொய் நிலவுக்கு
பூசை
புனஸ்காரம்.

பேடுகளின் கூவலிலே – இன்று
பிரபஞ்ச விடில்கள்.
சேவல்கள் கூவுவதற்கு
சித்தம் இல்லையெனச்



சூரியன் இங்கே
சும்மா இருக்கிறதாம்.

ஆராய்ச்சி
அறிவை
அகற்றி வைத்துவிட்டு
கோலோச்சுவோருக்கு
கொடி பிடிக்கும்
கூட்டம்.
உணர்வு எனும்நிலைதாண்டி
உருவகமாய்த் தமிழை
உயர்த்த நின்னக்கும்
உத்தி.

திராவிடம் இங்கே
இராவிடம் எல்லாம்
இருப்பெடுப்புச் செய்யும்
இயல்பு.

சரயு நதி ஓரம் – கதிர்
சாயும் இள நேரம்
சாக்கடையைத் தேடிச்
சலித் தெடுக்கும்
சம்பவங்கள்.

கம்பன்
கவிநயத்தை
கருத்தை – அவன்
காலத்தை
கவனிக்க மறந்து
கட்சி பிரிக்கின்ற
காலம்.

வேந்தர்களிடம்
வீரம் பேசிவிட்டு
வேளாளர்
வீட்டில்
விருந்து உண்டவனை

பந்தம்
பாசம் எல்லாம் கடந்து



பழந் தமிழ் ஒன்றையே
பற்றி நின்றவனை

சந்தத் தமிழ்ச் சுவைச்
சாற்றைப் பிழிவதற்கு
மைந்தனைக் கூட
மரிக்கக் கொடுத்தவனை

வாழும் காலத்து
வைபோகம்
வேண்டாமல்
வீழும் உடலின்
வெற்று சுகம்
விரும்பாமல்
வாழும் தமிழுக்கு
வார்த்தைகளால்
வளைகாப்புச் செய்தவனை

ஆரியச் சுரங்கத்தில்
அமிழ்ந்திருந்த வைரத்தை
தேடி எடுத்துப் பட்டை
தீட்டி – தமிழுக்குச்
சூட்டி மகிழ்ந்தவனை

காலச் சக்கரத்தின்
கடையாணி ஆனவனை
தமிழ்ப் பயிரின்
பீடை எனச் சொல்லும்
பேதைமையால் வாடுகிறேன்.

ஆதவனை மின்மினிகள்
அளக்க முயல்வது போல் ........
பூதலத்தை மூடக் – கறையான்
புற்று முனைவது போல்....
ஆழ்ந்திருக்கும் கவியுளம் காண்கிலார்
அரை குறைப் பிரசவ
அவதியில் துடிக்கிறார்.
ஆர்ப்பரிக்கிறார்.
அடங்குவார்,
அடக்குவோம்.

# கம்பனாம் காலக்கவி

த. ஜெயசீலன்

அழகான பாக்கள் அதிலே கனாக்கள்
அடி ஆழமுள்ள உனதாற்றில்
விளையாட எண்ணி விழிகள் பிதுங்கி
மிதவா தமிழ்ந்தேன் நினதேட்டில்
களமாடல், காதல், கடல் தாண்டி மோதல்
கருவாய் மிளிர்ந்த கவிமேட்டில்
பழமாக.... வாசம்.... பசிமீட்டி...., வாட்ட
பலியானேன்; கம்ப! உனதூற்றில்.



கவிதா விலாசக் கலை சாகரத்தின்
கரையே...? விரிந்த தொடுவானே
புவியாழமாறு... புனிதங் கலந்து
புது ஏடடித்த புகழோனே?
குவிவான கொற்றம் குறளொடு கோத்து
'குலம்' மீட்க வந்த குறியீடே....
செவிமூடறங்கள் சிதையாமல் ராமன்
செயலா லுணர்த்தும் 'திரு'... நீயே



வெடியுண்டுலைந்து, விதிமுள்ளு தைத்து
விசமேறு 'மார்க்க' விழி காத்தாய்
கடிவாளமிட்ட கவியாலே.... காற்றும்,
கடன் வாய்குமாறு கதை வார்த்தாய்.
நொடிபோல் விருத்தம்; நுழைந்தால் விருட்சம்
நுணுகப் 'பிறப்பின்' நுனிநூர்த்தாய்.
அடி, சீர், அசைக்குள்... அணுவைப் பிளக்கும்
அதி சக்தி வைத்தாய் அறந் தைத்தாய்?



உலகே வியந்தும் உவமைக் கலைந்தும்
உனதாசராக உவந்தாட
நிலவே துணிந்து நினைவைத் துறந்து
நினதே நிறத்தில்.... ஒளி காட்ட
தலையே கவிழ்ந்த தணலோன் மலைத்து
தமிழுன்னில் தாகம் தனை மாய்க்க
அலகில்.... அகன்ற அகிலம் வணங்க....
அட.... நான் 'வியத்தல்'.... சரிதானா?



முடிவே இலாத முழுசே.... அணுக்குள்
'முகம் பார்கில்' நீயும் முதலாவாய்.
வடிவாளும்.... வாயின், வசனம் உயிர்க்க
'வடிகட்டி' வார்த்தை வரம் ஈவாய்.
கொடியேற்றியிங்கு குவி 'ராஜ பாக்கள்'
குலையாது மின்னுங் குணஞ் சேர்ப்பாய்ர்.
மடியாய்; எமக்கு முடியாய்... துணைக்கு
வருவாய்; வசந்த.... வழி.... நீயே!



# வாழலாம் இன்னும் வலிமை இருக்கிறது

ச. மணிமாறன்

*ஆந்தை சிரிக்கிறது,*
*அலறும் சத்தம் மனதைக் கலைக்கிறது,*
*எலியொன்று*
*அங்கும் இங்குமாய்*
*பொந்து பார்த்து போகத் துடிக்கிறது,*
*பூனை மெல்ல அடி வைத்து*
*பதுங்கி வழி பார்க்க,*
*இரவுத் தாயின் எச்சரிக்கை விளக்காய்*
*மின்மினிகள் பறக்கும்.*
*வாழ்வின் தோற்றங்கள் மனதைக் கலைக்க*
*சோர்ந்த கவிஞன் – கம்பளிக்குள்*
*சுருண்டு கிடக்கின்றான்.*
*வானக் குடையின் நட்சத்திரப்*
*பொத்தல்களாய்*
*அவனது கந்தல் கிடக்கிறது,*
*காற்றுப் புகுந்து உடல் தடவ*
*மன வானில் ..........*
*சிந்தனை மேகங்கள்*
*தோன்றும், மறையும், சோர்வு தரும்,*
*சில துளிகள் பொழியும்.*
*'கிறீச்' என்ற சத்தம்,*
*மேகம் கலைகிறது.*
*எலியின் வால் பூனையின் வாயில்*
*துடிக்கிறது.*
*ஆந்தை குறுகுறுத்துப் பறக்கிறது.*
*பொந்துக்குள்.*
*வாலையிழந்தும் வாழும் துணிவோடு*
*எலியின் தேடல் தொடர்கிறது.*
*மேகம் மழை கொட்ட*
*கவிமனசு நனைகிறது.*
*சோர்வற்றுப் போக சுகம் காண விழைகிறது,*
*கம்பனைப் போல் விரிந்து*
*காலம் கடந்து நிற்கத்*
*தெம்போடு நெஞ்சில் தெளிவும் பிறக்கிறது.*
*வாழலாம் இன்னும்*
*வலிமை இருக்கிறது.*

# வெற்றி உனக்குத்தான்

– ச. முகுந்தன் –

இம்மா நிலத்தில் எழுந்திட்ட காவியங்கள்
தம்கா லூன்றித் தவழ உடல்புரட்ட
எம்மா இடர்ப்பட்டும் இயலாது போகையிலே
கம்பா! உன் காதை காலப் பிரதிமையோ

கற்றாழம் போனவரும் கரைகண்டு வந்தவரும்
சொற்றாளம் போடும் சுவைமுழும் உன்கவியை
முற்றாழம் கண்டமென முடித்துரைக்க முடித்துரைக்க முடிகிறதா?

"இத்தோடு முற்றிற்றை" இருமுறையாய் படித்தாலும்
முற்றிற்றா? காதை மூழ்கியவர் ஞானமது
முற்றிற்றே ஆகா!
முன்னிருந்த பிரமனவன்
சற்றே பொழுதில் சகமேழும் வென்றுவரப்
பொற்றேர்க் கவிவண்டி பொருத்திக் கொடுத்தானோ?

இற்றை வரைக்கும் இருக்கின்ற மாலுடைய
இலக்குமியை; மதியை; ஈகின்ற கற்பகத்தை
பெற்றெடுத்த பாற்கடலின் பிப்பு ரகசியத்தை
கற்றுனக்குச் சொன்னவரார்? கம்பா உன் காவியத்தில்
சொற்றொடுத்தா விட்டாய்? சுடர்கின்ற பிரபஞ்சம்
முற்றும் உரைத்து மூலம் உணர்த்திவிட்டு
மூங்கையான் பேசும் முழுப்பிதற்றல் என்றவனே!
தீங்கதனைக் கண்டும் திறவாத வாயரெல்லாம்
பாங்காய் எழுந்தநின் பாவாழம் கண்டுணர்ந்து
தாங்காமலே குமுற ; தம்மனதை தேற்றிவிட
மூங்கையான் என்று முடித்தெழுதி வைத்தாயோ?
காலம் "உரைத்து" கடந்துநின்றும் பாவுரைத்து
ஞாலதத்துவத்தின் நயம் உரைத்துச் சொன்ன பல
குறிப்புப் பொருள்களினை குறை அறிவுக் காரரவர்
வெறுப்பதிலுங் கூட வெற்றி உனக்குத்தான்.

*வான் நின்று இழிந்து, வரம்பு இகந்த*
*மா பூதத்தின் வைப்பு எங்கும்,*
*ஊனும் உயிரும் உணர்வும்போல்,*
*உள்ளும் புறத்தும் உளன் என்ப-*
*கூனும் சிறிய கோத்தாயும்*
*கொடுமை இழைப்ப, கோல் துறந்து,*
*கானும் கடலும் கடந்து, இமையோர்*
*இடுக்கண் தீர்த்த கழல் வேந்தன்.*

கடவுள் வாழ்த்து

# கம்பமலர்

## ஆக்கவியல்



# சாபவிமோசனம்



**'புதுமைப்பித்தன்'**

[இராமாயண பரிச்சயமுள்ளவர்களுக்கு இந்த கதை பிடிபடாமல் (பிடிக்காமல்கூட) இருக்கலாம். அதை நான் பொருட்படுத்தவில்லை]

சாலையிலே கற்சிலை. தளர்ந்து நொடிந்து போன தசைக் கூட்டத்திலும், வீரியத்தைத் துள்ள வைக்கும் மோகன வடிவம்; ஓர் பூர்வ சிற்பி பூலோகத்தில் இதற்காக வென்றே பிறந்து தன் கனவையெல்லாம் கல்லில் வடித்து வைத்தானோஎன்று தோன்றும். அவ்வளவு லாகிரியை ஊட்டுவது. ஆனால் அந்தப் பதுமையின் கண்களிலே ஒரு சோகம் – சொல்லில் அடைபடாத சோகம் – மிதந்து பார்க்கின்றவரின் வெறும் தசை ஆசையான காமத் தைக் கொன்று அவர்களையும் சோகத்தில் ஆழ்த்தியது. அது சிற்பியின் அபூர்வக் கனவு அன்று. சாபத்தின் விளைவு. அவள்தான் அகலிகை.

அந்தக் காட்டுப்பாதையில் கல்லில் அடித்து வைத்த சோகமாக, அவளது சோகத்தை பேதமற்ற கண்கொண்டு பார்க்கும் துறவி போன்ற இயற்கையின் மடியிலே கிடக்கிறாள். சூரியன் காய்கிறது. பனி பெய்கிறது.மழை பொழிகிறது. தூகும், தும்பும் குருவியும், கோட்டானும் குந்துகின்றன; பறக்கின்றன. தன் நினைவற்ற தபஸ்வியாக – கல்லாக கிடக்கிறாள்.

சற்றுத் தூரத்திலே ஒரு கறையான் புற்று, நிஷ்டையில் ஆழ்ந்து தன் நினைவகற்றித் தன் சோகத்தை மறந்து தவம் கிடக்கிறான் கோதமன். இயற்கை, அவனையும் அபேதமாகத்தான் போஷிக்கிறது.

இன்னும் சற்றுத் தூரத்திலே இந்த தம்பதிகளின் குடும்பக் கூடு கம்பமற்று வீழ்ந்தது போல, இவர்களுக்கு நிழல் கொடுத்த கூரையும் தம்பம் இற்று வீழ்ந்து பொடியாகிக் காற்றோடு கலந்து விட்டது. சுவரும் கரைந்தது. மிஞ்சியது திரடுதான், இவர்கள் மனசில் ஏறிய துன்பத்தின் வடுப்போலத் தென்பட்டது அது.

தூரத்திலே கங்கையின் சலசலப்பு. அன்னை கங்கை, இவர்களது எல்லையற்ற சோகத்தை அறிவாளோ என்னவோ!

இப்படியாக ஊழி பல கடந்தன, தம்பதிகளுக்கு. ஒரு நாள்......

முற்பகல் சூரிய ஒளி சற்றுக் கடுமைதான். என்றாலும் கொடிகளின் பசுமையும் நிழலும், இழைந்து வரும் காற்றும், உலகின் துன்பத்தை மறைக்க முயன்று நம்பிக்கையையும் வலுவையும் தரும் சமய தத்துவம்போல, இழைந்து மனசில் ஒரு குழுமையைக் கொடுத்தன.

ஆண் சிங்கம் போல, மிடுக்கு நடை நடந்து, எடுத்தகருமம் முற்றியதால் உண்ட மகிழ்ச்சியை மனசில், அசை போட்டுக் கொண்டு, நடந்து வருகிறான் விசுவாமித்திரன், மாரீசனும் சுவாகுவும் போன இடம் தெரியவில்லை. தாடகை என்ற கிழட்டுக் கொடுமை நசிந்து விட்டது. நிஷ்டையில் ஆழ்ந்தும்,. எரியோம்பியும் தர்ம விசாரத்தில் ஈடுபடிருப்பவர்களுக்கு நிம்மதியைத் தரும் சாதனமாகத் தன்னை ஆக்கிக் கொண்டதில் ஒரு திருப்தி. அடிக்கடிதிரும்பித் திரும்பிப்பார்த்துக் கொள்கிறான். பார்வையில் என்ன பரிவு! இரண்டு குழந்தைகள் ஓடிப்பிடித்துவிளையாடி வருகின்றன. அவர்கள் வேறு யாருமல்ல அவதார சிசுக்களான ராம லக்ஷ்மணர்களே. அரக்கர் நசிவை ஆரம்பித்து வைத்துவிட்டு, அதன் பொறுப்புத் தெரியாமல் ஓடிப்பிடித்து வருகிறார்கள்.

ஓட்டம் புழுதியைக் கிளப்புகிறது. முன்னால் ஓடி வருகிறான் லஷ்மணன். துரத்தி வருபவன் ராமன். புழுதிப்படலம் சிலையின்மீது படிகிறது.

என்ன உத்ஸாகமோ என்று உள்ளக் குதுகலிப்புடன் திரும்பிப் பார்க்கிறார் விசுவாமித்திரர். பார்த்தபடியே நிற்கிறார்.

புழுதிப்படலம் சிலையின்மீது படிகிறது.

எப்போதோ ஒரு நாள் நின்று கல்லான இதயம் சிலையுள் துடிக்கிறது.போன போன இடத்தில் நின்று இறுகிப்போன ரத்தம் ஓட ஆரம்பிக்கிறது. கல்லில் ஜீவ உஷ்ணம் பரவி உயிருள்ள தசைக் கோளமாகிறது. பிரக்ஞை வருகிறது.

கண்களை மூடித்திறக்கிறாள் அகலிகை. பிரக்ஞை தெரிகிறது. சாப விமோசனம்! சாப விமோசனம்!

தெய்வமே மாசுபட்ட இந்த தசைக் கூட்டம் பவித்திரம் அடைந்தது.

தனக்கு மறுபடியும் புதிய வாழ்வைக் கொடுக்க வந்த தெய்விக புருஷன் எவன்? அந்தக் குழந்தையா?

அவன் காலில் விழுந்து நமஸ்கரிக்கிறாள். ராமன் ஆச்சரியத்தால் ரிஷியைப் பார்க்கிறான்.

விசுவாமித்திரருக்குப் புரிந்து விட்டது. இவள் அகலிகை. அன்று இந்திரனுடைய மாய வேஷத்துக்கு ஏமாறிய பேதை. கணவன் மீதிருந்த அளவுக்குள் அடங்காத பாசத்தின் விளைவாக தன் உடம்பை மாய வேஷத்தால் ஏமாறி, மாசுபடுத்திக் கொண்டவள்; கோதமனின் மனைவி. அவ்வளவையும் ராமனிடம் சொல்கிறார். அதோ நிற்கும் புற்று இருக்கிறதே, அதில், வலைமுட்டையில் மோனத்தவங் கிடக்கும் பட்டுப்பூச்சி போலத், தன்னை மறந்த நிஷ்டையில் ஆழ்ந்து இருக்கிறான். அதோ அவனே எழுந்து விட்டானே.

நிஷ்டை துறந்த கண்கள் சாணை தீட்டிய கத்திபோல் சுருள்கின்றன. உடலிலே, காயகற்பம் செய்ததுபோல் வலு பின்னிப்பாய்கிறது. மிடுக்காக, பெண்ணின் கேவலத்திலிருந்து விடுவித்துக்கொள்ள முடியாதவனைப் போல தயங்கித் தயங்கி வருகிறான்.

மறுபடியும் இந்தத் துன்ப வலையா? சாப விமோசனத்துப் பிறகு வாழ்வு எப்படி என்பதை மனசு அப்பொழுது நினைக்கவில்லை. இப்பொழுதோ அது பிரமாண்டமான மதிலாக அவனது வாழ்வைச் சுற்றியே மண்டலிக்கிறது. அவள் மனமும் மிரளுகிறது.

ராமனுடைய கல்வி, தர்மக் கண்கொண்டு பார்த்தது. தெளிவின் ஒளி பூண்டது. ஆனால் அநுபவச் சாணையில் பட்டை பிடிக்காதது; வாழ்வின் சிக்கலின் ஒவ்வொரு நூலையும் பின்னலோடு பின்னல் ஓடியாமல் பார்த்த வசிஷ்டனுடைய போதனை. ஆனால் சிறுமையை அறியாதது புது வழியில் துணிந்து போக அறிவுக்குத் தெம்பு கொடுப்பது.

உலகத்தின் தன்மை என்ன, இப்படி, விபரீதமாக முறுக்கேறி உறுத்துகிறது! மனசுக்கும் கரண சுத்தியின் நிதானத்திற்கும் கட்டுப்படாமல் நிகழ்ந்த ஒரு காரியத்துக்காக பாத்திரத்தின் மீது தண்டனை? ''அம்மா!'' என்று சொல்லி அவள் காலில் விழுந்து வணங்குகிறான் ராமன்.

இரண்டு ரிஷிகளும், (ஒருவன் துணிச்சலையே அறிவாகக் கொண்டவன்; மற்றவன் பாசத்தையே தர்மத்தின் அடித்தளமாகக் கொண்டவன்) சிறுவனுடைய நினைவுக் கோணத்தில் எழுந்த கருத்துக்களைக் கண்டு குதுகலிக்கிறார்கள். எவ்வளவு லேசான, அன்பு மயமான, துணிச்சலான உண்மை!

''நெஞ்சினால் பிழை செய்யாதவளை நீ ஏற்றுக்கொள்வதுதான் பொருத்தம்'' என்றான் விசுவாமித்திரன் மெதுவாக.

குளுமை பூண்ட காற்றில் அவனது வாதக் கரகரப்பு ரஸபேதம் காட்டுகிறது.

கோதமனும், அவன் பத்தினியும், அந்தத் தம்பமற்றுத் திடரேறிப்போன மேடும் அவ்விடத்தை விட்டு அகலவில்லை. முன்பு உயிரற்றிருந்த இடத்தில் ஜீவகளை தவழ நிலைத்தது.

சாட்டையின் கொடுக்கைப் போலப் போக்கை மாற்றியமைக்க வந்த சக்திகள் அவ்விடம் விட்டுப் பெயர்ந்து விட்டன. மிதிலைக்குப் பொழுதுசாயும் பொழுதாவது போக வேண்டாமா? மணவினை, இரு கைகளை நீட்டி அழைக்கிறதே.

கோதமனுக்கு அவளிடம் முன்போல் மனக் களங்கமின்றிப் பேச நாவெழவில்லை. அவளை அன்று விலை மகள் என்று சுட்டது தன் நாக்கையே பொசுக்க வைத்தவிட்டதுபோல இருக்கிறது. என்ன பேசுவது? என்ன பேசுவது?

''என்ன வேண்டும்?'' என்றான் கோதமன். அறிவுத் திறன் எல்லாம் அந்த உணர்ச்சிச் சுழிப்பிலே அகன்று பொருளற்ற வார்த்தையை உந்தித்தள்ளியது.

''பசிக்கிறது'' என்றாள் அகலிகை, குழந்தை போல.

அருகிலிருந்த பழனத்தில் சென்று கனிவர்க்கங் களைச் சேகரித்து வந்தான் கோதமன். அன்று முதல் முதல் மணவினை நிகழ்ந்த புதிதில் அவனுடைய செயல்களில் துவண்ட ஆசையும் பரிவும் விரல்களின் இயக்கத்தில், தேக்கத்தில் காட்டின.

'அந்த மணவினை' உள்ளப் பரிவு பிறந்த பின்னர்ப் பூத்திருந்தாலும், ஏமாற்றின் அடிப்படையில் பிறந்தது தானே! பசுவை வலம் வந்து பறித்து வந்ததுதானே !' என்று கோதமனுடைய மனம்,திசைமாறித் தாவித் தன்னையே சுட்டுக்கொண்டது.

அகலிகை பசி தீர்ந்தாள்.

அவர்கள் மனசில் பூர்ணமான கனிவு இருந்தது. ஆனால் இருவரும் இரு விதமான மனக் கோட்டைகளுக் குள் இருந்து தவித்தார்கள்.

கோதமனுக்குத் தான் ஏற்றவளா என்பதே அகலிகையின் கவலை.

அகலிகைக்குத்தான் ஏற்றவனா என்பதே கோதமனின் கவலை.

சாலையோரத்தில் பூத்திருந்தமலர்கள் அவர்களைப் பார்துச் சிரித்தன.

## 2

அகலிகையின் விருப்பப்படி, ஆசைப்படி அயோத்தி வெளி மதில்களுக்குச் சற்று ஒதுங்கி, மனுஷ பரம்பரையின் நெடிபடாத தூரத்தில், சரயூ நதிக்கரையிலே ஒரு குடிசை கட்டிக்கொண்டு தர்ம விசாரம் செய்து கொண்டிருந்தான் கோதமன். இப்பொழுது கோதமனுக்கு அகலிகை மீது பரிபூர்ண நம்பிக்கை. இந்திரன் மடிமீது அவள் கிடந்தால் கூட அவன் சந்தேகிக்க மாட்டான். அவ்வளவு பரிசுத்த வதியாக நம்பினான் அவன். அவளது சிற்றுதவி இல்லாவிடின் தனது தர்ம விசாரம் தவிடு பொடியாகிவிடும் என்ற நிலை அவனுக்கு ஏற்பட்டது.

அகலிகை அவனை உள்ளத்தினால் அளக்க முடியாத ஓர் அன்பால் தழைக்க வைத்தாள். அவனை நினைத்து விட்டால், அவள் மனமும் அங்கங்களும் புது மணப் பெண்ணுடையன போலக் கனிந்துவிடும். ஆனால், அவள் மனசில் ஏறியகல் அகலவில்லை. தன்னைப் பிறர் சந்தேகிக்காதபடி, விசேஷமாகக் கூர்ந்து பார்க்கக் கூட இடங்கொடாதபடி நடக்க விரும்பினாள். அதனால் அவள் நடையில் இயற்கையின் தன்மை மறந்து இயல்பு மாறியது. தன்னைச் சூழ நிற்பவர்கள் யாவருமே இந்திரர்களாகத் தென்பட்டார்கள்; அகலிகைக்குப் பயம் நெஞ்சில் உறையேறிவிட்டது. அந்தக் காலத்திலிருந்த பேச்சும் விளையாட்டும் குடியோடிப்போயின. ஆயிரம் தடவை மனசுக்குள் திருப்பித் திருப்பிச் சொல்லிப் பாடம் பண்ணிக்கொண்டு, அந்த வார்த்தை சரிதானா என்பதை நாலு கோணத்திலிருந்தும் ஆராய்ந்து பார்த்துவிட்டுத் தான் எதையும் சொல்லுவாள். கோதமன் சாதாரணமாகச் சொல்லும் வார்த்தைகளுக்குக் கூட உள்ளர்த்தம் உண்டோ என்று பதைப்பாள்.

வாழ்வே அவளுக்கு நரகவேதனையாயிற்று.

அன்று மரீசி வந்தார். முன்னொருநாள் ததீசி வந்தார். மதங்கரும் வாரணாசி செல்லும்போது கோதமனைக் குசலம் விசாரிக்க எட்டிப்பார்த்தார். அவர்கள் மனசில் கனிவும் பரிவும் இருந்த போதிலும் அகலிகையின் உடம்பு குன்றிக் கிடந்தது. மனசும் கூம்பிக் கிடந்தது. அதிதி உபசாரங்கூட வழுவிவிடும்போல இருந்தது. ஏறிட்டுச் சாதாரணமாகப் பார்க்கிறவர் களையும் களங்கமற்ற கண்கொண்டு பார்க்கக் கூசியது. குடிசையில் ஒளிந்து கொண்டாள்.

கோதமனுடைய சித்தாந்தமே இப்பொழுது புதுவித விசாரணையில் திரும்பியது. தர்மத்தின் வேலிகள் யாவும் மனமறிந்து செய்பவர்களுக்கே சுயப்பிரக்ஞை இல்லாமல் வழு ஏற்பட்டு, அதனால் மனுஷவித்து முழுவதுமே நசிந்து விடும் என்றாலும், அது பாவம் அல்ல; மனலயிப்பும், சுயப்பிரக்ஞையுடன் கூடிய செயலீடுபாடுமே கறைப்படுத்துபவை. தனது இடிந்து போன குடிசையில் மறுபடியும் பிறர் கூட்டிவைத்த ஒரு தன்மையில் இருந்து கொண்டு புதிய கோணத்தில் தன் சிந்தனையைத் திருப்பி விட்டான் கோதமன். அவனுடைய மனசில் அகலிகை மாசு அற்றவளாகவே உலாவினாள்; தனக்கே அருகதை இல்லை; சாபத்தீயை எழுப்பிய கோபமே தன்னை மாசுபடுத்தி விட்டது என்று கருதினான்.

சீதையும் ராமனும் உல்லாசமாகச் சமயா சமயங்களில் அந்தத் திசையில் ரதமூர்ந்து வருவார்கள். அவதாரக் குழந்தை, கோதமனின் மனசில் லக்ஷ்ய வாலிபனாக உருவாகித் தோன்றினான். அவனது சிரிப்பும் விளையாட்டுமே தர்மசாஸ்திரத்தின் தூண்டா விளக்குகளாகச் சாயனம் (வியாக்கியானம்) பண்ணின. இந்த இளம் தம்பதிகளின் பந்தந் தான் என்ன? அது கோதமனுக்குத் தனது அந்தக்காலத்து வாழ்வை ஞாபகப் படுத்தும்.

அகலிகையின் மனப் பாரத்தை நீக்க வந்த மாடப்புறா சீதை அவளது பேச்சும், சிரிப்பும், தன் மீதுள்ளகறையைத் தேய்த்துக் கழுவுவன போல் இருந்தன அகலிகைக்கு. அவள் வந்த போதுதான் அகலிகையின் அதரங்கள் புன்சிரிப்பால் நெளியும். கண்களில் உல்லாசம் உதயவொளிகாட்டும்.

வசிஷ்டரின் கண்பார்வையிலே வளரும் ராஜ்ய லக்ஷியங்கள் அல்லவா? சரயூ நதியின் ஓரத்தில் ஒதுங்கி இரு தனி வேறு உலகங்களில் சஞ்சரிக்கும் ஜீவன்களிடையே பழைய கலகலப்பைத் தழைக்க வைத்து வந்தார்கள்.

அகலிகைக்கு வெளியே நடமாடி நாலு இடம் போவதற்குப் பிடிப்பற்று இருந்தது. சீதையின் நெருக்கமே அவளது மனச்சுமையை நீக்கிச் சற்றுத் தெம்பை அளித்தது.

பட்டாபிஷேக வைபவத்தின்போது அயோத்திக்கு வருவதாக ஒப்புக்கொண்டிருந்தாள். ஆனால் அரண்மனைக்குள் ஏற்பட்ட உணர்ச்சிச் சுழிப்புக்குத்தான் என்னவலிமை! ஒரே மூச்சில் தசரதன் உயிரை வாங்கி ராமனைக் காட்டுக்கு விரட்டி, பரதனை கண்ணீரும் கம்பலையுமாக நந்திக் கிராமத்தில் குடியேறி விட்டது.

மனுஷ அளவைகளுக்குள் எல்லாம் அடைபடாத அதீத சக்தி, ஏதோ உன்மத்த வேகத்தில் காயுருட்டிச் சொக்கட்டான் ஆடியதுபோல், நடந்து முடிந்து விட்டது.

வசிஷ்டர்தான் என்ன, சர்வ ஜாக்கிரதையோடு மனுஷ தர்மத்தின் வெற்றியாக ஒரு ராஜ்யத்தை ஸ்தாபிக்கக் கண்ணில் எண்ணெயூற்றி வளர்த்தார். அவருடைய கணக்குகள் யாவும் தவிடு பொடியாகி, நந்திக் கிராமத்தில் நின்றெரியும் மினுக்கு வெளிச்சமாயிற்று.

சரயூ நதிக் குடிசை மறுபடியும் தம்பமற்று விழுந்தது என்று சொல்ல வேண்டும். கோதமன் தர்ம விசாரமெல்லாம் இந்தப் பேய்க்காற்றில் சூறை போயிற்று. மனசில் நம்பிக்கை வறண்டு சூன்யமாயிற்று.

அகலிகைக்கோ? அவளது துன்பத்தை அளந்தால் வார்த்தைக்குள் அடைபடாது அவளுக்கும் புரியவில்லை. நைந்து ஓய்ந்துவிட்டாள். ராமன் காட்டுக்குப் போனான். அவன் தம்பியும் தொடர்ந்தான். சீதையும் போய்விட்டாள். முன்பு கற்சிலையாகிக் கிடந்தபோது மனசு இருண்டு கிடந்த மாதிரி ஆகிவிட்டது. ஆனால் மனப்பாரத்தின் பிரக்ஞை மட்டும் தாங்க முடியவில்லை.

கருக்கலில் கோதமர் ஜபதபதங்களை முடித்துக் கொண்டு கரையேறிக் குடிசைக்குள் நுழைந்தார்.

அவர் பாதங்களைக் கழுவுவதற்காகச் செம்பில் ஜலத்தை ஏந்தி நின்ற அகலிகையின் உதடு அசைந்தது.

"எனக்கு இங்கு இருப்புக் கொள்ளவில்லை. மிதிலைக்குப் போய் விடுவோமே"; "சரி புறப்படு சதானந்தனையும் பார்த்து வெகு நாட்களாயின" என்று வெளியே இறங்கினர் கோதமர்.

இருவரும் மிதிலை நோக்கி நடந்தார்கள். இருவர் மனசிலும் பளு குடியேறி அமர்ந்திருந்தது. கோதமர் சற்று நின்றார். பின் தொடர்ந்து நடந்துவந்த அகலிகையி னுடைய கையை எட்டிப்பிடித்துக் கொண்டார் நடந்தார். 'பயப்படாதே' என்றார்.

இருவரும் மிதிலை நோக்கி நடந்தார்கள்.

## 3

பொழுது புலர்ந்துவிட்டது. கங்கைக் கரைமேல் இருவரும் சென்று கொண்டிருக்கின்றார்கள்.

யாரோ ஆற்றக்குள் நின்று கணீரென்ற குரலில் காயத்திரியைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

ஜபம் முடியுமட்டும் தம்பதிகள் கரையில் எட்டிக் காத்து நின்றார்கள்.

"சதானந்தா!" என்று கூப்பிட்டார் கோதமர்.

"அப்பா.... ..... அம்மா!" என்று உள்ளத்தின் மலர்ச்சியைக் கொட்டிக் காலில் விழுந்து நமஸ்கரித்தார் சதானந்தர்.

அகலிகை அவனை மனசால் தழுவினாள். குழந்தை சதானந்தன் எவ்வளவு அன்னியனாகி விட்டான். தாடியும் மீசையும் வைத்துக் கொண்டு ரிஷி மாதிரி!

கோதமருக்கு மகனது தேஜஸ் மனசைக் குளுமையூட்டியது.

சதானந்தன் இருவரையும் தன் குடிசைக்கு அழைத்துச் சென்றான்.

சிரம பரிகாரம் செய்து கொள்வதற்கு வசதிசெய்து வைத்துவிட்டு, ஜனகனது தத்துவ விசார மண்டபத்துக் குப் புறப்படலானான்.

கோதமரும் உடன்வருவதாகப் புறப்பட்டார். மகனுக்கு அவரை அழைத்துச் செல்லுவதில் பிரியந்தான். நெடுந்தூரப் பிரயாணமாச்சே என்று ரத்தபந்தத்தின் பரிவால் நினைத்தான். ஊழிகாலம் நிஷ்டையில் கழித்தும் வாடாத தசைக் கூட்டமா, இந்த நடைக்குத் தளர்ந்து விடப் போகிறது? அவனுக்குப் பின் புறப்பட்டார். அவருடைய தத்துவ விசாரணையின் புதிய போக்கை நுகர ஆசைப்பட்டான் மகன்.

மிதிலையின் தெருக்கள் வழியாகச் செல்லும் போது, அயோத்தியில் பிறந்த மனத் தொய்வும் சோகமும் இங்கும் படர்ந்திருப்பதாகப் புலப்பட்டன. கோதமருக்கு அடங்கிவிட்ட பெருமூச்சு, காற்றினூடே கலந்து இழைந்தது.

ஜனங்கள் போகிறார்கள், வருகிறார்கள்; காரியங் களைக் கவனிக்கிறார்கள்; நிஷ்காம்ய சேவைபோல எல்லாம் நடக்கிறது; பிடிப்பு இல்லை; லயிப்பு இல்லை.

திருமஞ்சனக் குடம் ஏந்திச் செல்லும் அந்த யானையின் நடையில் விறுவிறுப்பு இல்லை; உடன் செல்லும் அர்ச்சகன் முகத்தில் அருளின் குதுகலிப்பு இல்லை.

இருவரும் அரசனுடைய பட்டிமண்டபத்துக்கள் நுழைந்தார்கள். சத்சங்கம் சேனா சமுத்திரமாக நிறைந்திருந்தது. இந்த அங்காடியில் ஆராய்ச்சி எப்படி நுழையும் என்று பிரமித்தார் கோதமர். அவர் நினைத்தது தவறுதான்.

ஜனகன் கண்களில் இவர்கள் உடனே தென்பட்டார்கள்

அவன் ஓடோடியும் வந்து முனிவருக்கு அர்க்கியம் முதலிய உபசாரங்கள் செய்வித்து அழைத்துச்சென்று அவரைத் தன் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டான்.

ஜனகனுடைய முகத்தில் சோகத்தின் சோபை இருந்தது. ஆனால் அவன் பேச்சில் தழுதழும்பு இல்லை; அவனுடைய சித்தம் நிதானம் இழக்கவில்லை என்பதைக் காட்டியது.

என்னத்தைப் பேசுவது என்று கோதமர் சற்றுத்தயங்கினார்.

''வசிட்டன் தான் கட்டிய ராஜ்யத்தில் உணர்ச்சிக்கு மதகு அமைக்கவில்லை'' என்றான் ஜனகன், மெதுவாகத் தாடியை நெருடிக் கொண்டு,

ஜனகனின் வாக்கு, வர்மத்தைத் தொட்டுவிட்டது.

''உணர்ச்சியின் சுழிப்பிலேதானே உண்மை பிறக்கும்'' என்றார் கோதமர்.

''துன்பமும் பிறக்கும், உணர்ச்சியைப் பயன்படுத்திக் கொள்ளத் தெரியாது போனால், ராஜ்யத்தைக் கட்ட ஆசைப்படும்போது அதற்கும் இடம் போட்டு வைக்க வேண்டும்; இல்லாவிட்டால் ராஜ்யம் இருக்காது'' என்றான் ஜனகன்.

''தங்களதோ?'' என்று சந்தேகத்தை எழுப்பினார் கோதமர்.

''நான் ஆளவில்லை ஆட்சியைப் புரிந்துகொள்ள முயலுகிறேன்''. என்றான் ஜனகன். இருவரும் சற்றுநேரம் மௌனமாக இருந்தார்கள்.

''தங்களது தர்ம விசாரணை எந்த மாதிரியிலோ?'' என்ற விநயமாகக் கேட்டான் ஜனகன்.

''இன்னம் ஆரம்பிக்கவே இல்லை; இனிமேல் தான் புரிந்து கொள்ள முயலவேண்டும், புதிர்கள் பல புலன்களையெல்லாம் கண்ணியிட்டுக் காட்டுகின்றன.'' என்ற சொல்லிக்கொண்டே எழுந்தார் கோதமர்.

மறுநாள் முதல் அவர் ஜனகன் மண்டபத்துக்குப் போகவில்லை. புத்தியிலே பல புதிர்கள் ஹிமாசலத்தைப் போல் ஓங்கி நின்றன. தனிமையை விரும்பினார், ஆனால் நாடிச் செல்லவில்லை. அகலிகை மனசு ஒடிந்து விடக்கூடாதே!

மறுநாள் ஜனகன், ''முனீசுவ்ரர்'' என்று ஆவலுடன் கேட்டான்.

''அவர் எங்கள் குடிசைக்கு எதிரே நிற்கும் அசோக மரத்தடியில்தான் பொழுதைக் கழிக்கிறார்'' என்றார் சதானந்தர்.

''நிஷ்டையிலா?''
''இல்லை; யோசனையில்''

''அலை அடங்கவில்லை'' என்று தனக்குள்ளே மெதுவாகச் சொல்லிக் கொண்டான் ஜனகன்.

அகலிகைக்கு நீராடுவதில் அபார மோகம். இங்கே கங்கைக் கரையருகே நிம்மதி இருக்கும் என்று தனியாக உதய காலத்திலேயே குடமெடுத்துச் சென்றுவிடுவாள்.

இரண்டொரு நாட்கள் தனியாக, நிம்மதியாகத் தனது மனசின் கொழுந்துகளைத் தன்னிச்சையோடு படரும்படி விட்டு, அதனால் சுமை நீங்கியதாக ஒரு திருப்தியுடன் குளித்து முழுகி விளையாடிவிட்டு நீர் மொண்டு வருவாள்.

இது நீடிக்கவில்லை.

குளித்துவிட்டுத் திரும்பி குனிந்த நோக்குடன், மனசை இழைய விட்டுக்கொண்டு நடந்து வந்து கொண்டிருந்தாள்.

எதிரே மெட்டிச் சப்தம் கேட்டது. ரிஷிபத்தினிகள் மாரே! அவர்களும் நீராடத்தான் வந்துகொண்டிருந் தார்கள். அவளைக் கண்டதும் பறைச்சியைக் கண்டது போல ஒடிவிலகி அவளை விறைத்துப் பார்த்து விட்டுச் சென்றார்கள்.

''அவள் தான் அகலிகை'' என்பது தூரத்தில் கேட்டது. கோதமனுக்கு அன்று அடிவயிற்றில் பற்றிக் கொண்டு பிறந்த சாபத் தீயை விட அதிகமாகச் சுட்டன அவ்வார்த்தைகள்.

அவள் மனசு ஒரேயடியாகச் சுடுகாடு மாதிரி வெந்து தகித்தது. சிந்தனை திரிந்தது. ''தெய்வமேசாப விமோசனம் கண்டாலும் பாப விமோசனம் கிடையாதா?'' என்று தேம்பினாள்.

யந்திரப்பாவைபோல் அன்று கோதமருக்கும் சதானந்தருக்கும் உணவு பரிமாறினாள். 'மகனும் அன்னியனாகிவிட்டான்; அன்னியரும் விரோதிகளாகி விட்டார்கள்; இங்கென்ன இருப்பு?' என்பதே, அகலிகையின் மனசு அடித்துச் கொண்ட பல்லவி.

கோதமர் இடையிடையே பிரக்ஞை பெற்றவர் போல் ஒரு கவளத்தை வாயிலிட்டு நினைவில் தோய்ந்திருந்தார்.

இவர்களது மன அவசத்தால் ஏற்பட்ட பளு சதானந்தனையும் மூச்சுத்திணற வைத்தது.

பளுவைக் குறைப்பதற்காக ''அத்திரி முனிவர் ஜனகனைப் பார்க்க வந்திருந்தார். அகத்தியரைப் பார்த்து விட்டு வருகிறார். மேருவுக்குப் பிரயாணம். ராமனும் சீதையும் அகத்தியரைத்தரிசித்தார்களாம். அவர்கள் இருவரையும், ''நல்ல இடம் பஞ்சவடி அங்கே தங்குங்கள்'' என்று அகத்தியர் சொன்னாராம். அங்கே இருப்பதாகத்தான் தெரிகிறது என்றான் சதானந்தன்.

''நாமும் தீர்த்தயாத்திரை செய்தால் என்ன?'' என்று அகலிகை மெதுவாகக் கேட்டாள்.

''புறப்படுவோமா?'' என்று கைகளை உதறிக்கொண்டு எழுந்தார் கோதமர்.

''இப்பொழுதேயா?'' என்றான் சதானந்தன்.

''எப்பொழுதானால் என்ன?'' என்று கூறிக் கொண்டே மூலையிலிருந்த தண்டு கமண்டலங்களை எடுத்துக்கொண்டு வாசலை நோக்கினார் கோதமர்.

அகலிகை பின் தொடர்ந்தாள்.

சதானந்தன் மனம் தகித்தது.

## 4

பொழுது சாய்ந்து, ரேகை மங்கிவிட்டது. இருவர் சரயூ நதிக்கரை யோரமாக அயோத்தியை நோக்கிவந்து கொண்டிருந்தார்கள்.

பதினான்கு வருஷங்கள் ஒடிக் காலவெள்ளத்தில் ஐக்கியமாகிவிட்டன. அவர்கள் பார்க்காத முனி புங்கவர் இல்லை; தரிசிக்காத க்ஷேத்திரம் இல்லை. ஆனால் மன நிம்மதி மட்டிலும் அவர்களுக்கு இல்லை.

வலுவற்றவனின் புத்திக்கு எட்டாது நிமிர்ந்து நிற்கும் சங்கரனுடைய சிந்தனைக் கோயில் போல, திடமற்ற வர்களின் கால்களுக்குள் அடைபடாத கைலயங்கிரியைப்பனிச் சிகரங்களின் மேல் நின்று தரிசித்தார்கள்.

தமது துன்பச் சுமையான நம்பிக்கை வறட்சியை உருவகப்படுத்தின பாலையைத் தாண்டினார்கள்.

தம் உள்ளம் போலக் கொழுந்துவிட்டுப் புகைமண்டிச் சாம்பலையும் புழுதியையும் கக்கும் எரிமலைகளை வலம் வந்து கடந்தார்கள்.

தமது மனம் போல ஓயாது அலைமோதிக் கொண்டு கிடக்கும் சமுத்திரத்தின் கரையை எட்டிப் பின்னிட்டுத் திரும்பினார்கள்.

தம் வாழ்வின் பாதை போன்ற மேடு பள்ளங் களைக் கடந்து வந்துவிட்டார்கள்.

'இன்னும் சில தினங்களில் ராமன் திரும்பி விடுவான். இனிமேலாவது வாழ்வின் உதயகாலம் பிறக்கும், என்ற ஆசைதான் அவர்களை இழுத்து வந்தது.

பதினான்கு வருஷங்களுக்கு முன் தாம் கட்டிய குடிசை இற்றுக் கிடந்த இடத்தை அடைந்தார்கள்.

இரவோடு இரவாக, குடியிருக்க வசதியாகக் கோதமர் அதைச் செப்பனிட்டார் . வேலை முடியும் போது உதய வெள்ளி சிரித்தது.

இருவரும் சரயூவில் நீராடித் திரும்பினார்கள்.

கணவனாருக்குப் பணிவிடை செய்வதில் முனைந்தாள் அகலிகை. இருவரது மனசும் ராமனும் சீதையும் வரும் நாளை முன்னோடி வரவேற்றன. இருந்தாலும் காலக்களத்தின் நியதியை மனசைக் கொண்டு தவிர, மற்றப்படி தாண்டி விடமுடியுமா?

ஒரு நாள் அதிகாலையில் அகலிகை நீராடச் சென்றிருந்தாள்.

அவளுக்குமுன், யாரோ ஒருத்தி விதவை குளித்து விட்டுத்திரும்பி வந்து கொண்டிருந்தாள். யார் என்று அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. ஆனால் எதிரே வந்தவள் அடையாளம் கண்டுகொண்டு விட்டாள். ஓடோடியும் வந்து அகலிகையின் காலில் சர்வாங்கமும் தரையில் பட விழுந்து நமஸ்கரித்தாள்.

தேவி கைகேயி! தன்னந்தனியாக, பரிசனங்களும் பரிவாரமும் இல்லாமல், துறவியாகிவிட்டாளே!

குடத்தை இறக்கி வைத்துவிட்டு அவளை இரு கைகளாலும் தூக்கி நிறுத்தினாள். அவளுக்குக் கைகேயியின் செயல் புரியவில்லை.

"தர்ம ஆவேசத்தில் பரதன் தன்னுடைய மனசில் எனக்கு இடம் கொடுக்க மறந்து விட்டான்" என்றாள் கைகேயி.

குரலில் கோபம் தெறிக்கவில்லை; மூர்த்தண்யம் துள்ளவில்லை. தான் நினைத்த கையேயி வேறு; பார்த்த கைகேயி வேறு. படர்வதற்குக் கொழுகொம்பற்றுத் தவிக்கும் மனசைத்தான் பார்த்தாள் அகலிகை.

இருவரும் தழுவிய கை மாறாமல், சரயூவை நோக்கி நடந்தார்கள்.

"பரதனுடைய தர்ம வைராக்கியத்துக்கு யார் காரணம்?" என்றாள் அகலிகை. அவளுடைய உதட்டின் கோணத்தில் அனுதாபம் கனிந்த புன்சிரிப்பு நெளிந்து மறைந்தது.

"குழைந்தை வைத்த நெருப்பு ஊரைச் சுட்டுவிட்டால் குழந்தையைக் கொன்று விடுவதா?" என்றாள் கைகேயி.

குழந்தைக்கும் நெருப்புக்கும் இடையில் வேலி போடுவது அவசியந்தான் என்று எண்ணினாள் அகலிகை. "ஆனால் எரிந்தது எரிந்ததுதானே?" என்று கேட்டாள்.

"எரிந்த இடத்தைச் சுத்தப்படுத்தாமல் சாம்பலை அப்படியே குவித்து வைத்துக் கொண்டு சுற்றி உட்கார்ந்திருந்தால் மட்டும் போதுமா?" என்றாள் கைகேயி.

"சாம்பலை அகற்றுகிறவன் இரண்டொரு நாட்களில் வந்துவிடுவானே" என்றாள் அகலிகை.

"ஆமாம்" என்றாள் கைகேயி. அவள் குரலில் பரம நிம்மதி தொனித்தது. ராமனை எதிர்பார்த்திருப்பது பரதனல்ல; கைகேயி.

மறுநாள் அவள் அகலிகையைச் சந்தித்த போது முகம் வெறிச்சோடியிருந்தது; மனசு நொடிந்து கிடந்தது.

"ஒற்றர்களை நாலு திசைகளிலும் விட்டு அனுப்பிப் பார்த்தாகிவிட்டது. ராமனைப்பற்றி ஒரு புலனும் தெரியவில்லை. இன்னும் நாற்பது நாழிகை நேரத்துக்குள் எப்படி வந்துவிடப் போகிறார்கள்? பரதன் பிராயோபவேசம் செய்யப் போகிறானாம் அக்கினி குண்டம் அமைக்க ஏற்பாடு செய்து வருகிறான்" என்றாள் கைகேயி.

பரதன் எரியில் தன்னை அவித்துக் கொள்வது தன் மீது சுமத்தப்பட்ட ராஜ்ய மோகத்திற்குத் தக்க பிராயச்சித்தம் என்று அவள் கருதுவதுபோல் இருந்தது பேச்சு.

சற்று நிதானித்து, "நானும் எரியில் விழுந்து விடுவேன்; ஆனால் தனியாக, அந்தரங்கமாக" என்றாள் கைகேயி. அவள் மனசு வைராக்கியத்தைத் தெறித்தது.

பதினான்கு வருஷங்கள் கழித்து மறுபடியும் அதே உணர்ச்சிச் சுழிப்பு. அயோத்திக்கு ஏற்பட்ட சாபத்தீ நீங்கவில்லையா?

அகலிகையின் மனசு அக்குத் தொக்கு இல்லாமல் ஓடியது. தனது காலின் பாபச் சாயை என்றே சந்தேகித்தாள்.

"வசிட்டரைக் கொண்டாவது அவனைத் தடை செய்யக் கூடாதோ?" என்றாள் அகலிகை.
"பரதன் தருமத்துக்குத்தான் கட்டுப்படுவான்; வசிட்டருக்குக்கட்டுப்படமாட்டான்" என்றாள் கைகேயி

"மனிதருக்குக் கட்டுப்படாத தர்மம், மனித வம்சத்திற்குச் சத்துரு" என்றுகொதித்தாள் அகலிகை.

தன்னுடைய கணவர் பேச்சுக்குப் பரதன் ஒரு வேளை கட்டுப்படக் கூடாதோ என்ற நைப்பாசை. மறுபடியும் அயோத்தியில் துன்பச் சக்கரம் சுழல ஆரம்பித்துவிடக் கூடாதே என்ற பீதி.

கோதமன் இணங்கினான். ஆனால் பேச்சில் பலன் கூட வில்லை. பரதனை உண்டு பலிகொள்ள அக்கினி தேவனே விரம்பவில்லை. அனுமான் வந்தான்; நெருப்பு அவிந்தது திசைகளின் சோகம், கரை உடைந்த குதூகல வெறியாயிற்று தர்மம் தலை சுற்றியாடியது.

வசிட்டனுக்கும் பதினான்கு வருஷங்கள் கழித்த பிறகாவது கனவு பலிக்கும் என்று மீசை மறைவில் சிரிப்புத்துள்ளாடியது.

இன்ப வெறியில் அங்கே நமக்கு என்ன வேலை என்று திரும்பிவிட்டான் கோதமன்.

சீதையும் ராமனும் தன்னைப் பார்க்க வருவார்கள் என்று அகலிகை உள்ளம் பூரித்தாள். வரவேற்பு ஆரவாரம் ஒடுங்கியதும் அவர்கள் இருவரும் பதிவாரம் இன்றி வந்தார்கள்.

ரதத்தை விட்டு இறங்கிய ராமனது நெற்றியில் அநுபவம் வாய்கால் வெட்டியிருந்தது. சீதையின் பொலிவு அனுபவத்தால் பூத்திருந்தது. இருவர் சிரிப்பின் வயமும் மோக லாகிரியை ஊட்டியது.

ராமனை அழைத்துக்கொண்டு கோதமன் வெளியே உலாவச் சென்றுவிட்டான். தன் கருப்பையில் கிடந்து வளர்ந்த குழந்தையால் சுரக்கும் ஒரு பரிவுடன் அகலிகை அவளை உள்ளே அழைத்துச் சென்றாள். இருவரும் புன்சிரிப்புடன் உட்கார்ந்திருந்தார்கள்.

ராவணன் தூக்கிச் சென்றது, துன்பம், மீட்பு எல்லாவற்றையும் துன்பக்கறை படியாமல் சொன்னாள் சீதை. ராமனுடன் சேர்ந்துவிட்ட பிறகு துன்பத்திற்கு, அவளிடம் இடம் ஏது?

அக்கினிப் பிரவேசத்தைச் சொன்னாள், அகலிகை துடித்து விட்டாள்.
"அவர் கேட்டாரா? நீ ஏன் செய்தாய்?" என்று கேட்டாள்.
'அவர் கேட்டார்; நான் செய்தேன்" என்றாள் சீதை அமைதியாக.
"அவன் கேட்டானா?" என்று கத்தினாள் அகலிகை; அவள் மனசில் கண்ணகி வெறி தாண்டவமாடியது. அகலிகைக்கு ஒரு நீதி, அவளுக்கு ஒரு நீதியா? ஏமாற்றா? கோதமன் சாபம் குடலோடு பிறந்த நியாயமா?
இருவரும் வெகு நேரம் மௌனமாக இருந்தனர்.
"உலகத்துக்கு நீருபிக்க வேண்டாமா?" என்று கூறி மெதுவாகச் சிரித்தாள் சீதை.

"உள்ளத்துக்குத் தெரிந்தால் போதாதா? உண்மையை உலகுக்கு நிரூபிக்க முடியுமா?" என்றாள் அகலிகை. வார்த்தை வறண்டது.

'நிரூபித்துவிட்டால் மட்டும் அது உண்மையாகி விடப்போகிறதா; உள்ளத்தைத் தொடவில்லையானால்? நிற்கட்டும்; உலகம் எது?" என்றாள் அகலிகை.

வெளியிலே பேச்சுக் குரல் கேட்டது. அவர்கள் திரும்பி விட்டார்கள்.

சீதை அரண்மனைக்குப் போவதற்காக வெளியே வந்தாள். அகலிகை வரவில்லை.

ராமன் மனதைச் சுட்டது; காலில் படிந்த தூசி அவளைச் சுட்டது.

ரதம் உருண்டது; உருளைகளின் சப்தமும் ஓய்ந்தது. கோதமன் நின்றபடியே யோசனையில் ஆழ்ந்தான். நிலை காணாது தவிக்கும் திரிசங்கு மண்டலம் அவள் கண்ணில் பட்டது.

புதிய யோசனை ஒன்று மனக்குகையில் மின்வெட்டிப்பாய்ந்து மடிந்தது. மனச்சுமையை நீக்கிப் பழைய பந்தத்தை வருவிக்க, குழந்தை ஒன்றை வரித்தால் என்ன? அதன் பசலை விரல்கள் அவள் மனசின் சுமையை இறக்கி விடாவா?

உள்ளே நுழைந்தான்

அகலிகைக்கு பிரக்ஞை மருண்ட நிலை. மறுபடியும் இந்திர நாடகம், மறக்க வேண்டிய இந்திர நாடகம், மனத்திரையில் நடந்து கொண்டிருந்தது. கோதமன் அவளைத் தழுவினான்.

கோதமன் உருவில் வந்த இந்திர வேடமாகப் பட்டது அவளுக்கு. அவன் நெஞ்சு கல்லாய் இறுகியது. என்ன நிம்மதி!

கோதமன் கைக்குள் சிக்கிக் கிடந்தது ஒரு
கற்சிலை. அகலிகை மீண்டும் கல்லானாள்.
மனச்சுமை மடிந்தது.

கைலயங்கிரியை நாடிஒற்றை மனித உருவம் பனிப்பாலைவனத்தின் வழியாக விரைந்து கொண்டிருந்தது. அதன் குதிக்காலில் விரக்தி வைரம் பாய்ந்து கிடந்தது.

அவன்தான் கோதமன்,
அவன் துறவியானான்.

ஆரியம் நன்குணர்ந்தோன்– தமிழின்
ஆழம் அளந்து கண்டேன்
மாரி மழைபோலத் – கவியின்
மழைமொழிந்திடுவோன்

–கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை–

# இராவணன் காதல்

தி. ஜானகிராமன்

மின்னலா இது?

அடுக்காகத் திரண்டு குவிந்த மேகத்தில் மின்னல் சிமிட்டிற்று.

மின்னலா அது? வெண்மேகத்திலா மின்னல்? ராவணன் உற்றுப் பார்த்தான்.

மின்னல் நடந்து வந்து கொண்டிருந்தது. பெண்தான் அவள். ஒளிப்பிழம்பாகத் திகழ்ந்தது அவள் உடல். இளந்தளிரின் தளதளப்பும் பசையும் ஒளிர்ந்த பச்சைச் சேலை, காற்றில் தாறுமாறாகப் பறந்து கொண்டிருந்தது. அதைச் சரிப்படுத்தக்கூட முடியாமல் அவள் நடந்து கொண்டிருந்தாள். வெட்டவெளிக்குக் கண் ஏது? உயிர் ஏது? நாணப்படத் தேவையில்லை.

ராவணன் வியப்பில் கண்ணை அகல விரித்துப் பார்த்தான். பூத்துக்குலுங்கும் பவழமல்லிச் செடி நடந்து போவது போல் இருந்தது. நல்ல உயரம்; உருண்டு திரண்ட புஜங்கள்; கழுத்திலிருந்து வழிந்த தோளிலிருந்து தலைப்பு நழுவிவிடும்போல் இருந்தது.

அவள் உயரந்தான் அவனை முதலில் கவர்ந்தது. வெறும் உயரம் அல்ல. உயரத்தின் அளவுக்கு அங்கங்களும் பூரித்திருந்தன. உச்சியிலிருந்து உள்ளங்கால் வரை உற்று நோக்கினான் அவன். கேசத்தின் சுருள், தோளின் சரிவு, கண்ணின் வளைவு, முழங்கையின் வளைவு, முதுகின் வளைவு, இடையின் வளைவு, முழங்காலின் குழைவு, உயர்ந்த பாதங்களின் சரிவு – ஒரே சரிவும் வளைவும் குழைவுமான உடல் அது. ஒளிமயமானதாய்ச் சரக்கில், தெரிந்த வளைவு குழைவுகளையெல்லாம் திரட்டி அவளைச் சமைத்து விட்டான் படைத்தவன். ஆதிகர்த்தாவின் மனோரதமாக உருக்கொண்டதுபோலப் பெண்மையின் லக்ஷ்யமாக அவள் ராவணனுக்குக் காட்சியளித்தாள். சௌந்தரியத்தைப் படைக்க முற்பட்டவனின் உச்சமான முயற்சி அவள். அழகைப் பற்றிய வரையில் அந்த வடிவந்தான் கடைசிச் சொல் என்று ராவணக்குத் தோன்றிற்று. வேதங்களுக்கும் எட்டாத மெய்ப்பொருளைப்போல, அவள் அழகும் சொல்லுக்கு எட்டாத உணர்வாகத்தான் இருந்தது.

பிரமித்துப் போய் அவளுடைய வாட்ட சாட்டமான ஆகிருதியைப் பார்த்துக் கொண்டு நின்றான் லங்கேசன்.

ஆஜானுபாகுவென்று ஆண்களைச் சொல்லும் சொல்லுக்கும் அவள் பொருந்தியவள் தான். வளர்த்தியும் வாளிப்பும் அரக்க இனமோ என்று ஐயத்தை எழுப்பின. ஆனால் அவளுடைய உடல் ஒளிமயமாக, படிகமயமாகப் பொலிவுற்றிருந்தது. பஞ்சபூதங்களில் தேஜஸே ஓங்கிநின்ற அந்த வடிவு, அப்சரஸ்களுக்கே உரித்தானது.

ராவணன் அயர்ந்து விட்டான்.

மகாவீரனுக்கே உரியவள் அவள். வீரமும் தைரியமும் நிறைந்த புருஷனுக்கு ஆண்மைக்கு எடுத்துக்காட்டான தீரனுக்கே அவள் உரியவள்.

ராவணன் மனக்கண்ணாடியில் தன்னை ஒருமுறை பார்த்துக் கொண்டான். மலை போன்ற தன் தோற்றத்தைப் பார்த்தான். தேவர்களைக் கதறக்

கதற அடித்த தன் வீரத்தையும் பார்த்தான். நெடுங் காலம் கிடந்த தவத்தின் பயனாக ஓங்கி நின்று, மூவுலகத்திற்கும் ஆதிக்கத்தை வாங்கிக் கொடுத்த தன் தேஜஸைக் கண்டான்.

மறுகணம் அவனுடைய கம்பீரமான ஆகிருதி அவளை இடைமறித்து நின்றது. மருண்டு விட்டாள் அவள்.

"பயப்படாதே, நீ யார்?"

"..............................."

"பயப்படாதே, சொல்லு யார் நீ?"

"புஞ்சிகஸ்தலை"

"அப்சரஸா?"

"ஆம்"

"உனக்குப் பிறகு பிரம்மா எந்த அழகையும் படைக்கவில்லையோ?"

"நீங்கள் யார்?"

"நான் யாரா! இந்தப் பூதவுடலுடன் பிரபஞ்ச வெளியில் சஞ்சரிக்கும் தவவலிமை யாருக்கு இருக்க முடியும் ராவணனைத் தவிர?"

"லங்காதிபதியா?"

திரிலோகாதிபதி... ஏன் ஓடுகிறாய். அப்படி நில்லு. எதற்கு ஓடுகிறாய் ஓடித் தான் என்ன பயன்?"

ஓடுவதில் பயன் இல்லைதான். அவள் நின்றுவிட்டாள். பயத்தால் நிமிர்த்த புருவங்களையும் மருளும் விழிகளையும் ஒன்றையொன்று பற்றிய உள்ளங்கைகளையும் நோக்கினான். வளைந்து குழைந்த கைகள், நீண்டுகூர்ந்த விரல்கள், கூம்பிய செம்மை பொலிந்த நகங்களின் வரிசை – ராவணன் நெருங்கினான்.

"எங்கே போகிறாய்?"

"பிரம்மாவிடம்."

"எதற்காக? உன்னைப்போலவே இன்னொரு அழகியைப் படைத்துவிட்டாரா என்று பார்ப்பதற்கா? கவலைப்படாதே. அவருடைய திறமையெல்லாம் உன்னுடன் முடிந்து விட்டது!"

"நான் போகவேண்டும்."

"ஏன் இப்படி மருளுகிறாய்? வீரப் பெண்ணின் தோற்றமும் வடிவமும் கொண்ட உனக்கு இந்த அச்சம் பொருந்தவில்லையே?"

"நான் போகவேண்டும்."

"எதற்காக?"

"பிரம்மாவைத் தரிசிக்கப் போகிறேன் வழிவிடுங்கள்."

"நீ அவரை தரிசிக்கப் போகிறாயா? அவர் உன்னைத் தரிசிக்கப் போகிறாரா?"

"என்ன உளறுகிறாய்...?" சாமானியமான காமுகனின் பேச்சு, அவளுக்கு இந்தத் துணிவைக் கொடுத்து விட்டது.

தான் பயிர் செய்த கொடியிலிருந்து திராக்ஷையை எடுத்துச் சுவைக்கவில்லையா? நாம் செய்த சமையலை நாமே தின்னவில்லையா? நம்முடைய சிருஷ்டி என்ற ஒன்றைச் சுவைக்காமல் ஒது க்கி விடுவதில்லையே நாம்!"

"ராவணேச்வரன் வாயிலிருந்தா இந்த அபத்தக்களஞ்சியம் எல்லாம் வெளிப்படுகிறது!"

உண்மைதான்; அவன் சுயபுத்தியுடன் பேசவில்லை. அவளுடைய கணைக்காலின் கரவைப் பார்த்துப் போதை கொண்டு நின்றான். உடல் தீப்பற்றி எரிந்தது. கண், மதங்கொண்டு மங்கிற்று. சித்தம் மயங்கிக் கிடந்தது.

"என் புத்தி கெட்டுத்தான் விட்டது. என்ன செய்வேன்!"

" என்னைப் போகவிடு."

"உன்னைப் போக விடவா வழிமறித்தேன்...? நான் உன்னை விட விரும்பினாலும் முடியாதுபோல் இருக்கிறதே! ஒரே சரீரத்தில் இவ்வளவு மென்மையையும் வன்மையையும் எப்படிச் சேர்த்து அமைக்க முடிந்தது? நம்முடைய பிதாமஹரான பிரம்மா பெரிய மாயாவி தான். மலரையும் தங்கத்தையும் சேர்த்துக் குழைக்க முடியுமா? ஆனால் அந்த அசாத்யமான கலை உன் அங்கங்களில் சாத்தியமாகி விட்டது. இந்தப் புதிர் என்னைக் குழப்புகிறது..."

அம்புபோல் அவன் திருஷ்டி துளைத்தது. அவள் மார்பகத்தை இழுத்துப் போர்த்துக் கொண்டாள்.

"பூஜைக்குப் போகும் என்னை ஏன் இப்படித் தொல்லை செய்ய வேண்டும்?"

"நீ போகத்தான் வேண்டுமா?"

"ஆமாம்"

"நீ என்னை ஆட்கொண்டு விட்டாய். என் காதல் கொழுகொம்பின்றித் தத்தளிக்கிறது!"

"விசித்திரமாக இருக்கிறதே!"

"என்ன?"

"உங்கள் காதல் விதையாகி, முளைவிட்டுக் கொடியாகி விட்டதா அதற்குள்?"

"நீ சொல்வது எனக்குப் புரிகிறது. காதல், மனங்களின் கலப்பு ஒற்றுமை என்று நீ சொல்லுகிறாய்."

"இருஉள்ளங்கள் ஒன்றையொன்று அறிந்துகொள்ளக் காலம் தேவை. இல்லாவிட்டால் காதல் என்ற சொல்லுக்கே அர்த்தமில்லை!"

"விசித்திரமாக இருக்கிறதே!"

"என்ன?"

"மனங்களின் ஒற்றுமைதான் காதல் என்றால் குறட்டை விட்டுத் தூங்கும் என் தம்பி கும்பகர்ணனைக்கூட நான் காதலிக்கலாம். ஆணும் பெண்ணுந் தான் காதலிக்க வேண்டும் என்று தேவையே இல்லை. இந்த மனஒற்றுமைக்காகத்தான் பிரம்மா ஆணையும் பெண்ணையும் படைத்தாரா?"

"விரும்பாத ஆணும் பெண்ணும் எப்படிச் சேர்ந்து வாழமுடியும்?"

"விரும்பினாலும்கூட ஏன் சேர்ந்து வாழவேண்டும்? ஆணும் பெண்ணுந்தான் சேர்ந்து வாழவேண்டுமா, என்ன? ஆணையும் பெண்ணையும் சரீர வேட்கைதானே பிணைத்துக் காதலன், காதலியாக ஆக்கிவைக்கிறது? காதல், உடலைப் பற்றியதாக இல்லாவிட்டால், ஆண் – பெண் என்ற வேற்றுமையையே உண்டாக்கியிருக்க வேண்டாமே... உடலற்ற பொதுவான ஓர் உருவத்தை, உடலும் – உயிரும் பிணைந்த ஓர் உருவத்தைப் படைத்துவிட்டு பிரம்மா திருப்தி அடைந்திருப்பார். அப்புறம் உன்னுடைய பெண்மைக்கும், மேடிட்டு நீண்ட கண்களுக்கும், கரவும் சரிவும் நிறைந்த எழில் உருவத்திற்கும், உன்னதமான நாசிக்கும், ஆணின் திரண்ட மார்பிற்கும், திரண்ட தோளுக்கும், வீரத் தோற்றத்திற்கும் என்ன அவசியம்? சொல்லுக்கு அப்பாற்பட்ட, உணர மட்டும் முடிகிற ஒரு வனப்பு வடிவத்தைக் கண்டு காதலிக்கக் காலமா வேண்டும்? உன் எழில் கண்டவுடன் என்னைக் கிறங்க அடித்துவிட்டது"

"அப்படியானால் காதலுக்கு அறிமுகமும் நட்பும் காலமும் அவசியமா? "

"இந்தக் காட்டுமிராண்டிப் பேச்சு காதைத் துளைக்கிறது... நான் உன்னைக் கண்டு மயங்கிவிடவில்லை. என்னைப் போகவிடு."

"என் தாபம் எழுந்து விட்டது. எண்ணத்திற்கு ஈடேறல் வேண்டும்..."

"என் எண்ணத்திற்குந்தான் ஈடேறல்

வேண்டும். வெறுப்பு ஈடேற வேண்டும்.''

''எல்லோருக்கும் ஈடேறல் கிடைப்பதில்லை!''

அவள் ஓடத் தொடங்கினாள், ஆனால் தேவர்களைக் கதறக் கதற அடித்தகை அவளைப் பற்றிவிட்டது. மறுகணம் வெட்டவெளியே அவள் ஆடையாகி விட்டது. ஜாதிக் குதிரையைப்போல் புஷ்டியும் வனப்பும் பூத்து நின்ற, அந்த நீண்டவுடல் அவனுடைய இரு கரங்களிலும் கிடந்தது. எல்லையில்லாத அந்த சௌந்தரியம் அவனை மெய்சிலிர்க்க அடித்தது. அந்த வனப்புடல் எதிர்த்துப் போராடுவதும் மழையையும் புயலையும் போல ஓர் அழகாகத்தான் பட்டது அவனுக்கு. தீயில் விழுந்ததுபோல் துடித்தாள். மூவுலகையும் வென்ற வீரம் அவளை மிஞ்சிவிட்டது!

புஞ்சிகஸ்தலை பிரம்மனிடம் போய்க் கதறி அழுதாள். ராவணன், பிரம்மன் முன் குற்றவாளியாக நின்றான். ஆனால் அவன் தலை குனியவில்லை. 'இரண்டாக ஒடிந்தாலும் ஒடிவேன்: இன்னொருவனை வணங்கேன்' என்ற இயல்பான அவன் அகந்தை தலை தூக்கி நின்றது.

''தாத்தா, எதற்குக் கூப்பிட்டனுப்பினீர்கள்?''

''தவம் செய்வது சாதாரண மனிதனுடைய சக்திக்கு அப்பாற்பட்டது. நீ செய்த தவம், தவங்களுக்கெல்லாம் சிறந்தது, பஞ்சாக்கினி மத்தியில் தவம் புரிந்து, கிடைத்தற்கரிய சித்தியெல்லாம் அடைந்திருக்கிறாய் நீ! மூவுலகின் ஆதிக்கமும் பெற்றுவிட்டாய். இவ்வளவு இணையற்ற தபஸ்விக்குப் புத்தி கெட்டுவிட்டதே என்று வேதனைப்பட்டுத்தான் உன்னை அழைத்தேன்.''

''என் புத்தி கெட்டுவிடவில்லையே......''

''இவ்வளவு தவம் செய்து பெற்ற வீரத்தைத் தனியே சென்ற ஓர் அபலையிடந்தான் காட்டமுடிந்ததா, உனக்கு?''

''புஞ்சிகஸ்தலை விஷயமா?''

''ஆமாம்''

''தாங்கள் அப்சரஸ்களை எதற்குப் படைத்திருக்கிறீர்கள்? தேவர்களின் போகப் பொருளாகத்தானே?''

''தேவர்களுக்கு மட்டுந்தான்''

''ஏனோ?''

''நல்வினையின் பயனாக தேவர்கள் ஆனவர்கள் அவர்கள்.''

''இந்த இன்பந்தான் அந்த நல்வினைக்கெல்லாம் பரிசா? அப்படியானால், என்தவவலியால் மூவுலகிற்கும் ஈசனாகிவிட்டேன் நான். எனக்கும் அவள் உரியவள்தான். பார்க்கப்போனால் எனக்குத்தான் அவள் உரியவள். இந்தத் தேவர்கள் எல்லோரும் பேடிகள். என்னைக் கண்ட மாத்திரத்தில் ஆடை பறக்க, கிலி பிடித்து ஓட்டமெடுக்கிற சூரர்கள்! வீர்யமும் தேஜஸும் அற்ற பேடிகள். நபும்சகன் ஆகிவிட்ட இந்திரனின் பெருங்குடி மக்கள்! 'மன்னனைப்போல் மக்கள்' என்ற முதுமொழியை மெய்யாக்க வந்தவர்கள். இவர்களுக்கு அப்சரஸ்கள் இல்லாமல்தான் குறைச்சலாகப் போய்விட்டது...!''

''தேவர்களைப்பற்றி அபிப்பிராயம் சொல்ல உன்னை அழைக்கவில்லை. நீ அவளைப் பலாத்காரம் செய்தது உண்மைதானே?''

''உண்மைதான்.''

''எதற்காக அந்த இழிசெயலைச் செய்தாய்?''

''எதற்காகவா! இதென்ன கேள்வி; மிகவும் நகைப்பிற்கு இடமான கேள்வியல்லவா இது? மேலும் அது இழி செயலா?''

''நீ செய்தது இழிசெயல் இல்லையா?''

''ஏன் தவறு? பிதாமஹரே, புஞ்சிகஸ்தலையின் இணையில்லாத எழில் என்னைப் பரவசப்படுத்தி விட்டது. ஒரு மகா வீரனை அடிமைப்படுத்தியது, உங்கள் சிருஷ்டிக் கலையின் உயர்வுக்கு மகத்தான சான்றில்லையா?''

"பெரும் தபஸ்வியின் போக்கு இதுதானா?"

"என் தவம் என்ன செய்யும்? தவம் சக்தியைக் கொடுக்கும். ஆண்மையை அளிக்கும். மனத்தைக்கூடப் பிடித்து நிறுத்துமா, என்ன?"

"புஞ்சிகஸ்தலை உன்னை விரும்பவில்லை, அல்லவா?"

"நான் அவளை விரும்பினேன். இந்தப் பிரபஞ்சத்தின் அழகெல்லாம் அவள் வனப்பில் வடிந்திருந்தது. நான் மயங்கினேன். பலாத்காரம் செய்தது உண்மைதான். ஆனால், இது தவறு என்று எப்படிச் சொல்லமுடியும்,"

"தவறில்லையா! மிகவும் நேரான செயலா?"

"எந்த நியாத்தைக் கொண்டு நீங்கள் தவறு என்று சொல்கிறீர்கள்? எனக்கு விளங்கவில்லை. நான் செய்தது மிகவும் இயற்கையான செயலாகும். இந்த அழகைக் கண்டு நான் எழுச்சி கொண்டது இயற்கைதான். நானாகக் கொண்ட எழுச்சி அல்ல அது. அந்த அழகே செய்தது தான். இயற்கையின் ரீதியில் அது நேரான செய்கைதான்."

"அவள் விருப்பத்திற்கு மாறாக அவளைத் தனதாக்கிக் கொண்டது நேரான செய்கையா?"

"பிதாமஹரே, அழகு அனுபவிப்பதற்காக ஏற்பட்டதுதான். தேவர்களுக்காக மட்டும் தனித்து அதை ஒதுக்க முடியாது. அழகு எல்லா ஜீவராசிகளுக்கும் உரியதான ஒரு பொதுச்சொத்து. புஞ்சிகஸ்தலை விஷயத்தில் தேவர்களுக்குள்ள உரிமை எனக்கும் உண்டு... அப்படி நான் செய்தது குற்றம் என்று கருதினால் சரீர அழகைப் படைத்த தாங்கள் அதைக் கண்டு மயங்கிவிடாமல் மனத்தை அடக்கும் தன்மையையும் படைத்திருக்கவேண்டும்."

"ஆகையால் நான் அவளைப் படைத்ததுதான் தவறு என்கிறாயா?".

"ஏறக்குறைய அப்படித்தான்... முதல் குற்றவாளி தாங்கள்தான்! என் தவம் என் மனத்தை அடக்கப் பயன்படவில்லை. என் தவத்தையும் மீறிய அழகைக் கண்டு நான் சஞ்சலிக்காமல் இருந்திருந்தால் இந்தத் தொல்லை வந்திராது."

"உன் தவம் எப்படிப் பயனளிக்கும்? மனத்தை அடக்குவது தவத்தின் பயன் அல்ல; மனத்தை அடக்குவது தான் தவம். பஞ்சாக்கினி மத்தியில் செய்த தவங்களைவிட, அரைநாழிகை நேரம் சஞ்சலங்களுக்கிடையே ஆட்டங் காணாமல் நிற்பது ஆயிரம் மடங்கு பெரிய தவமாகும். இயற்கை இயற்கை என்று நீ செய்வது நியாயம் என்று சொல்லிக்கொண்டாயே, அது வெறும் அபத்தக் கூற்று. நல்லது கெட்டது என்று பிரித்தெடுக்கும் சுயேச்சையுடன்தான் வாழ்வு கொடுக்கப் பட்டிருக்கிறது; இயற்கையை வெல்வதுதான் வாழ்வு."

"அந்த இயற்கையை வெல்ல என்தவம் உதவவில்லையே......"

"உன் தவம் மிகவும் தாழ்ந்த ரகத்தைச் சேர்ந்தது."

"அந்த மட்டமான தவத்தைக் கண்டு மகிழ்ந்துதானா தாங்கள் எனக்கு வரங்களெல்லாம் தந்தீர்கள்?"

"தொடங்கிய இடத்திலேயே நீ இன்னும் நின்றுகொண்டிருக்கிறாய்... மீண்டும் மீண்டும் பேசி என்ன பயன்? படைத்தவனே எல்லாவற்றையும் கொடுத்து விட்டால் படைக்கப்பட்டவனுக்கு என்ன வேலை இருக்கிறது? உன் விபரீத புத்தி உன்னைக் குதர்க்கவாதம் செய்யத் தூண்டுகிறது. பலாத்காரம் செய்ததை நியாயம் என்று மிருகந்தான் சொல்லும். நீ உயர்ந்த ஜீவனாகப் பிறந்த தன் நோக்கமே பாழ்த்து விட்டது. நீயோ உன் மனத்தைக் கட்டி நிறுத்த முடியவில்லை என்று சொல்லுகிறாய். இனி எந்தப் பெண்ணையாவது – உன்னை விரும்பாத பெண்ணை – பலாத்காரம் செய்யும் எண்ணத்துடன் நீ தொட்டால் உன் தலை நூறு துண்டாக வெடித்துவிடும்... நீ போகலாம்."

...இடிகுரலில் இந்தச் சாபம் எழுந்தது. குற்றவாளி சிரித்தான்.

"பிதாமஹரே, அவசரப்பட்டுச் சாபம் கொடுத்து விட்டீர்களே... மனத்தை அடக்கும் சக்தியை இயல்பாக ஏற்படுத்தா விட்டால் உம்முடைய சிருஷ்டி அலங்கோலமாகத்தானே முடியும்? என்ன செய்கிறது...? கலைஞர்களுக்குக் காரண காரிய ரீதியில் ஒன்றையும் செய்ய முடியாது.

ஆதிகலைஞரான நீரும் மூடராக இருப்பதில் என்ன ஆச்சரியம் என்று சிரித்துக் கொண்டே வெளியேறினான்.

அவன் திரும்பி இலங்கையை நோக்கிப் பயணமானான். வானவீதியில் மின்னல் வெட்டிற்று.

புஞ்சிகஸ்தலை அங்கே நின்று கொண்டிருந்தாள், வளைவும் குழைவுமாக. அவன் வேதனை எழுந்தது. உடல் தீப்பற்றி எரிந்தது.

"புஞ்சிகஸ்தலே!"

"மிருகமே, என்னைத் தொடாதே!"

"ஏன் ஒதுங்கி ஒடுகிறாய்? ஓடித்தான் என்ன பயன்?"

அவளைப் பற்றப்போனான் அவன். பளிச்சென்று தீ சுட்டாற்போல் கையை இழுத்துக் கொண்டான்.

புஞ்சிகஸ்தலை எக்களிப்புடன் சிரித்தாள். சிரித்துவிட்டு நடந்தாள். அவளுடைய பின்னழகைக் கண்டு, கால் ஒடிந்தவன் போல் நின்றான் லங்கேசன்.

---

*நன்றி : தாய். 20 - 3 - 83*

*அணியணியாக- அணிகள்*
*அடுக்கி வைத்திடுவான்*
*மணிமணியான - பொருள்கள்*
*வாரி வழங்கிடுவான்*

*–கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை–*

# ராமதர்மம்

## லா. சா. ராமாம்ருதம்

ஏதோ அந்தச் சமயத்தின் உள்ள நெகிழ்ச்சியில், அவளாக அளித்த வரத்தின் விளைவு. அந்தப் பிராமணர் இன்றுவரை கால்நடையாகவே பூதலத்தைச் சுற்றி வந்திருக்கும் தூரமும், நேரமும், தடவைகளும், அதனதன் லக்கம் தாண்டி, கணக்கும் தன்னில் மூழ்கி விட்டது.

தற்சமயம்– ஏன், எச்சமயமும் அவர் அறிந்த பூமி. அவன் பாதம்பட்ட பூமி. அயோத்தியிலிருந்து தண்ட காரண்யம், தண்டகாரண்யத்திலிருந்து இலங்கை வரை, ஜபித்து ஜபித்து ராமநாம நாமகோடி கோடி நாம கோடி கோடி ராமகோடி நாமகோடி நாமமும் மூச்சும் இரண்டறக் கலந்தபின், எது நாமம் எது ஸ்மரணை என தனக்கே தெரியாது, தனக்கே புரியாது, தன்னில் இருக்கும் தனி, நாமஸ்மரணையாகவே ஆகிவிட்ட நிலையில்,

இன்னமும் அலைந்து கொண்டிருக்கிறார் – ராம ராம ராம ராம ராம.....!

அவர் தான் அனுமன். சிரஞ்சீவி வரத்தால் யுகங்களைத் தாண்டி சஞ்சரித்துக் கொண்டிருக்கிறார். பிரம்மஞானங்களை ராம நாமத்தினாலேயே தெரிந்து கொண்ட பிராம்மணனாக.... வயதைக் கடந்த கிழவராக...

எதிர்ப்பட்ட ஒரு பாறாங்கல் மீது கிழவர் அமர்ந்தார். அசதிகூட, சொல்லும்படி இல்லை. வாய்க்கால் வழி பாசனநீர்போல் பாயும் எண்ண ஓட்டத்தின் சுவாரஸ்யம். கங்கையிலிருந்து காவிரி, தாமிரபரணி– ஜீவநதிகளின் ஜலம் வாய்க்கால்வழி பயிர்களுக்குப் பாயும் கிளுகிளுப்பில், குளு குளுவில், சலசலவில், ஜிலுஜிலுவில், தளதள நெளி நெளி இத்தனையும் சேர்ந்த கொலுஸில்தானே, தேவியின் தண்டை யோசையைக் காப்பாற்றித் தருகிறது.

அள்ளிச் சுற்றிப் போர்த்திக் கொண்ட சால்வைபோலும். வாடை கிளம்பி, சுழன்று வந்து, நெற்றியை ஒற்றிற்று. தந்தைக்கு மகன்மேல் பரிவு– வாயுவுக்குப் புத்ரனாக ஆஞ்சநேயன் மீது. " எனக்கு ஒதுக்கியிருக்கும் பணியால் எனக்கு வயதில்லை. உனக்கு வரத்தால் வயதில்லை. ஆனால் எவ்வளவு வயதாகி விட்டாய்!" –பெருமூச்செறிந்தது.

எங்கோ செடியினின்று கழன்று, மாருதவாக்கில், அந்தரத்தில் அலைந்து, புல்லிலும் முள்ளிலும் கல்லிலும் தரையிலும் புரண்டு உருண்டு, மறுபடியும் காற்றின் எற்றலில் தத்தித் தத்தி அலைந்து வந்த ஒரு,மலர் கிழவரின் கால் விரல்களுக்கிடையில் சிக்குண்டது.

நீலச் சங்கு புஷ்பம்.... ராமன் நிறம்!

பிராட்டியின் பாத மலர்கள் செந்தாமரை. நினைவின் இவ்வளவு தூரத்திலும் ஒளி கண்ணைப் பறித்தது. பாதமே இப்படியெனில் முகம் எப்படி? தேவி முகம் தான் பார்த்ததில்லை என்று சொல்வதற்கில்லை. ஆனாலும் அது அசோகவனத்தில் கண்ட முகம், அழுதமுகம், ஆர்யபுத்ரனுக்கு ஏங்கி ஏங்கிச் சுண்டிய முகம். அதைச் சுபமுகம் என்று சொல்வதெங்ஙனம்? ஆகையால், தானும் ஸௌமித்ரி போலத்தான், நேரில் சுய முகத்தை நிமிர்ந்து பார்க்க இஷ்டமுமில்லை. ஏன்?

" ராமா! "

கிழவர் திடுக்கிட்டு எழுந்து சுற்றுமுற்றும் நோக்கினார். நினைவின் எதிரொலிதான் என்று தெளிந்ததும் மீண்டும் அலர்ந்தார். அது அக்னி பகவானின் பழைய குரல்....

" ராமா, இவள் மாசற்றவள்...."

கோதண்டத்தின் மணி தானாகவே அலறிற்று. கபந்தங்கள் கூத்தாடும், அந்த யுத்த பயங்கரத்தில், உயிர்களைக் குடித்துக் குடித்து மாளாமல், காலதேவன்

வயிறு திணறும் அந்த நாசக்களத்தில், ' இன்றுபோய் நாளை வா' என்று சொல்லவல்ல, அமைதி காக்கும் சாந்தபிரான் வலது புருவம் வியப்பில் உயர்ந்தது. கோதண்டத்துக்குப் பயமா? ஆம் இது பயம்; வேறு பயம்; அக்னி தேவன் தரும் ப்ரமாணிக்கம் அல்லவா?

" இவளுடைய கற்பின் தகிப்பு என்னால் தாள வில்லை" – ஏந்தமுடியாத தழலை எப்படியோ அவனிடம் சேர்த்து விட்டான்.

அவர் பார்வை, கண்ணுக்கெட்டியவரை நீலமலரைத் தொடர்ந்தது. அப்படிப்பட்டவளை, பாவம் ஓரிடம் பழி ஓரிடமாக மீண்டும் கானகம் அனுப்பியதற்குப் பிராயச்சித்தமாக, இதோ, இப்படி அங்கப்ரதட்சணம் செய்து கொண்டிருக்கிறான்.

லீலா, அப்போது இழைத்த தவறுக்கு அப்போதே தண்டனை இல்லை. இழைக்கும் முன்னரே தவறும்– தீர்ப்பும் சேர்ந்து, தாமே பதிவாகிவிடும் ரகசிய ஏடுகள். மேல்வரும்வரை அந்த நியதியை வகுத்த ஆண்டவனுக்கும் எட்டாமல், அவனும் தவறுக்கும்– தீர்ப்புக்கும் விலக்கு இல்லை என்பதால் அவனுக்கும் அப்பாற்பட்டு, எந்தப் பேழையில் பூட்டிக் கொள்கின்றன? அந்தப் பேழையும் எங்கே? இதுதான் யாரையும் ஆளும் விதி.

– " அண்ணன் இல்லாத சமயத்தில் என்னைப் பெண்டாளப் பார்க்கிறாயா?"

அனுமன் செவிகளைப் பொத்திக் கொண்டார். உடல் குலுங்கிற்று.

இதற்கு அநுபவிக்கத்தான், வண்ணான், வண்ணாத்தி சாக்கில் வட்டியும் முதலும்போல் பிள்ளைத்தாச்சியாகப் பிராட்டி மீண்டும் கானகம்–

கொழுந்தனைச் சீறட்டும். அலுத்துக் கொள்ளட்டும். திட்டட்டும். ஆனால் இப்படி வக்ரமாக, இவ்வளவு ஈனபாஷை எப்படி ராஜரிஷி மகள் வாயில் வந்தது? அதுதான் விந்தை, திகைப்பு. வாயை எத்துணை முறையேனும் அலம்பல் வேண்டும்.

**அ**ன்றொரு நாள் மாலை–

வழக்கம்போல் கிஷ்கிந்தையிலிருந்து ராகவனைத் தரிசிக்க வந்திருந்தபோது

நந்தவனத்தில் அமைந்திருந்த வேனிற்பந்தலின் இதமான இருளில் இருவரும் அமர்ந்து அளவளாவிக் கொண்டிருக்கையில், எட்ட நந்தவனத்தின் மற்றொரு மூலையில், தேவி தோழிகளுடன் பந்து ஆடிக் கொண்டிருக்கையில், ராகவனுக்கு அன்று மனமிருந்த நிலை, ஏதோ பேச்சுவாக்கில்,

"ஆஞ்சனேயா, இவளைப்பற்றி நாம் ஏதறிவோம் உண்மையில், மண்ணிலே கிடைத்தாள் என்பதன்றி?"

வாய்விட்டு இவ்வாறு சொல்லவில்லை. பாஷையென்பது, வாய்ச்சொல்லுக்கு அடங்கியதல்ல. கண்ணோக்கு, வேறு சைகைகளுக்கும் கட்டுப்பட்டதல்ல. பாஷையென்பது இவைகளே அல்ல. வாய் தாண்டி, கண்தாண்டி சைகைதாண்டி மனம்தாண்டி மூலத்தின் தியானக் கடலில் அங்கும் அதற்குரிய தொடுவானம் விளிம்பைத் தொட்ட அமைதியில், கடலிலேயே எழுந்து, கடலிலேயே விழும் துள்ளு மீன்– எழுகையில் கேள்வி, விழுகையில் பதில்– பரஸ்பர நிலை. நெஞ்சோடு நெஞ்சு கிளத்தல் எனும் தாது பாஷை இருக்கிறது; இதனினும் நுண்ணிய அடுத்த நிலை தெரியும் வரை.

அனுமனின் அதரங்கள் அவரையும் அறியாமல், புன்னகையில் இளகிற்று.

யாவும் விதிக்கப்பட்டவை; ஆதலின், நிகழ்வதென்பது ஒரு முறை; ஒரே முறைதான். இன்னும் நெருக்கிச் சொல்லின், நிகழ்ந்தது நிகழ்ந்ததோடு சரி; மறுமுறை என்பது அதற்கில்லை. முதல்போலும் நிழல்கள், நீழல்கள், அவைகளின் ஆட்டம் உண்டேயன்றி, முதல் மீண்டும் வருவதில்லை. அது சன்னிதானமாகி விட்டது. அதன் முகூர்த்தத்தினின்று இனி அது இறங்கி வராது. அல்லேல் மகிமையேது, மானமேது, சத்யமேது? நேர்ந்தது சரித்திரம்; மற்றவை கதை.

ஆகவே அவரவர் பக்குவத்துக்கேற்பத் தியானமுமம் பக்தியும், கற்பனையும், ஞானமும், சாமர்த்தியமும், சமத்காரமும், காட்டியவையை வடித்தவர்களேயல்லாது, காவியர்கள் ராமாயண ரகசியங்களைப் பூராவும் என்ன கண்டார்கள்? கண்டவர்கள் ராமசரிதத்தில் பங்கு கொண்ட நாங்கள். விண்டதையே விண்டு கொண்டிருப்பவர் இவர். இந்தச் சிதைவே, காவியங்கள் இழைக்கும் முதல் பாபம். இதைச் சுற்றி நெய்த பாஷ்யங்கள், அர்த்தங்கள், அனர்த்தங்கள் இத்யாதி வடிகால்கள் மூலம் மறு பாவங்கள், பிற

பாபங்கள் இழைக்கப்படுகின்றன. கர்மாவை யாராலும் தடுக்க முடியாது.

ஆகவே, அன்று ராகவனும் அனுமனும்– ( இங்கு நான் என்று என்னைப் பாஷை பற்றாமையில் நேரும் பாபத்தில், தனிப்படக் குறிக்க அஞ்சுகிறேன்.) இருந்த அந்தரங்க நிலையை நூல்களில் காணமுடியாது. நூல் தாங்காத அத்துணை நுட்பம், இன்பம், சத்யம். தவிர, எல்லாமே எல்லார்க்குமல்ல. இதுதான் தியானத்தின் முதல் உபதேசம்;

'' வாயுபுத்ர, நான் விஷ்ணு, அவள் லஷ்மி, ராவணசம்ஹார நிமித்தம் ராமாவதாரம், ஈதெல்லாம் சுயநலம்; சொக்கட்டானில் சோழி குலுக்கல், வேணும்போது அவதாரம், மிச்சத்துக்கு நரன் எனப் பேசுவது நீசம். நேர்மையற்ற தர்க்கம்.

'' நான் கேட்கிறேன்– யார் அவதாரமில்லை? நீ யார் என்று எண்ணினாயா? நீ ஸாக்ஷாத் பரமேசுவரனின் அவதாரம் . முன் பின், நடுவற்று ஏற்கெனவே அழிவற்ற உனக்கு அவன் வழங்கியிருக்கும் சிரஞ்சீவி வரம் இந்த ஜன்மாவை நீ அலங்கரித்துக் கொண்டிருப்பதற்கு உன் காதில் தொங்கும் குண்டலம் ஒன்று தவிர, அதற்குத் தனிப் பலிதம் இல்லை என்றே சொல்வேன். நிமித்தமாகப் பிறந்தோ, அல்லது பிறந்த பின் நிமித்தத்தைத் தேடியோ முனைவதில் ஈடுபடும் எந்தப் பிறவியும் அவதாரமே.''

'' அசுரர்களை ஏமாற்றி, அவர்களும் சேர்ந்து கடைந்தெடுத்த அமிர்தத்தைக் குடித்துவிட்டு, மந்தர்களாகிய தேவர்களைக் காட்டிலும், சுயமுயற்சியில், விடாமுயற்சியில் பிறவியின் அர்த்தத்தைத் தேடும் மனித ஜன்மம் மாண்புடைத்து. நரனை நிரூபிக்கவே நான் வந்தேன்.

'' என் பிறவியின் நிமித்தம் ராவணஸம்ஹாரம் அல்ல, அது இடை வந்தது. அதற்கென்றே, அவன் குலத்தை வேருடன் அறுக்கவே அவள் தோன்றினாள். சீதை பிறக்க, லங்கை அழிய'' – நந்தவனத்தின் மற்றோரத்தினின்று சிரிப்புக் கொத்துக்களினிடையே, அந்தரத்தில் எழும்பி அங்கு நேரத்துக்கு மேல் சோம்பினாற் போல், நொடியிலும் நொடி கூட நின்ற பந்தின்மேல் ராகவனின் நாட்டம் லேசாய்ச் சாய்ந்தது.

ராமன் முகத்தில் சட்டென்று புன்னகை தவழ்ந்தது.

'' இதுபோல் கன்னி மாடத்தில் இவள் பந்தாடுகையில், சிவதனுசடியில் ஓடிவிட்ட பந்தையெடுக்க, வில்லை ஒருகையால் தூக்கியதைத் தற்செயலாகப் பார்த்துவிட்ட என் மாமனார் எப்படி அரண்டு போயிருப்பார் என்பதை நினைத்துக் கொண்டேன். 'கலப்பையில் தட்டுப்பட்ட பெட்டியில் நான் கண்டெடுத்தது பேயா, ராஷஸியா? இவளிடமிருந்து, முன்னால் நம்மைக் கழற்றிக் கொள்ள வேண்டும்.' என்கிற தீவிரப் பயம் அப்போதுதான் அவருக்குத் தோன்றியிருக்கும். ஆனால் இவளைச் சமாளிக்கத் தக்கனாய் ஆண் இருக்க வேணும் என்பதற்காகத்தான், வில்லை முறிக்கும் நிபந்தனையைக் கொணர்ந்தார். உண்மையில் அது சுயம்வரமா? நிபந்தனை வரம். ஒரு தினுசில் கட்டாய வரம்; விதி வரம்.''

''மாருதி இவள் மண். யாவும் விளைவதும் இவளில்தான். வளம்பெறுவதும் இவளில் தான் ஆனால் அத்தனையையும் விழுங்குபவளும் இவள்தான். இவள் பயங்கரி நான் கருவில் வளர்ந்து ஜனித்தேன். கர்ப்பவாஸமே அற்றவள். காலவரையே அற்ற வயதைக் கடந்து, இப்பிறவியில் எனக்குத் தாரம் சீதையென்று உருக்கொண்டிருக்கிறாள். இவள் எண்ணிலும் மிக, மிக மூத்தவள், இவள் உறவை என்னவென்று நிர்ணயிப்பது? நெருப்புக்குளியல் இவளுக்கு நிலாக்குளியல் மாதிரி, என் பலத்தை நான் ராவணனிடம் நிரூபிக்கவில்லை. இவளிடம்தான் இன்னமும் நிரூபித்துக் கொண்டிருக்கிறேன். இதுவே என் பாடு.''

ராகவன் குரலில் தொனித்தது கவலையா? விரக்தியா? அதையும் தாண்டிய விசனமா? பிறவியின் விசனம், பிறவி விசனம், பிறவியே விசனம் ஸத்ஸரிக் கமக பமகா–

ஸங்கீதக் கூடத்தில் இசைக்கும் ஏதோ ஒரு யாழ், சிந்தனாஸ்வரத்தை எடுத்துக் கொள்கிறது.

'' அவதாரமாம்! என்ன அவதாரம்? பலப்பரீட்சையில் தோளைத் தட்டிக் கொள்வதற்குத்தானா அவதாரம்? என் பிறவியின் எல்லைகள் என்னை அவ்வப்போது மட்டம் தட்டித் தான் வைத்திருந்தன. 'ஆயிரம் ராமர்களும் உனக்கு ஈடாவரோ? என்று, குஹன் பரதனைச் சிலாகித்தபோதே நான் மட்டுப்பட்டு விட்டேன். பெண்புத்தி பின்புத்தியில் மயங்கி, மானைத் தொடர்ந்து ஏமாந்தேன். அதன் விளைவாக, எத்தனையோ பேர் வினைகளுக்கு இடம் கொடுத்தேன்.''

" வாலியை நான் மறைந்து கொன்ற பழி, நான் மறைந்த பின்னரும் என்னைக் கருவறுத்துக் கொண்டிருக்கப் போகிறது. இவ்வுலகம் உள்ளளவும் அதில், தெய்வ நம்பிக்கைகளும் இதிஹாஸப் புராணங்கள் பேசப்படும் வரையிலும், துஷ்ட நிக்ரஹம் சிஷ்ட பரிபாலனம் என்று என் அவதார மஹிமைக்குள், வாதங்கள் என்னை ஒளித்து வைத்தாலும், மனிதப் பிறவியின் சுயநலம், அதனால் செய்த கொலை அது இல்லையென்று சொல்லமுடியுமா? ஸீதை மயக்கம் அப்பா ஸீதை மயக்கம்!"

ஸ்ரீராமன் தற்கேலியில் சிரித்தான்.

" மற்றும், வாலி அரசைப்பிடுங்கி சுக்ரீவனுக்குக் கொடுக்க நான் யார்? அதேபோல், ராவணன் இருக்கையிலேயே, 'இந்தா விபீஷணா லங்காபுரி ராஜ்யம்' என்று வாரி வழங்கி விட்டேன். இதுதான், கடைத் தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைத்தல். இதில் இன்னொரு வேடிக்கைபார். என் அரசே எனக்கில்லை. இன்னும்தான் அது எனக்குச் சொந்தமில்லை. என்ன விழிக்கிறாய்? இது பரத ராஜ்யம்தான். ராமராஜ்யமில்லை. ' என் மகன் நாடாளணும்; ராமன் காட்டுக்குப் போக வேண்டும்' என்று என் மாற்றாந்தாய் கேட்ட இரு வரங்களில்,வனவாசவரம் நிஜமானால், மற்ற வரம் பொய்யாகிவிடுமா? என் தம்பி நல்லவன். எனக்கு நாட்டைக் கொடுத்துவிட்டான் என்பதால்,நாடு எனக்கு சொந்தமாகிவிடுமா? அப்போது எனக்காக அவன் பாதுகாத்தான். இப்போது, அவன் தருமத்தில் நான். அவன் சிம்மாசனத்தில் உட்கார்ந்துகொண்டிருக்கிறேன்.

" ராஜதர்மத்தில் உனக்கு என்ன வரம் வேண்டும்?' என்று என் தந்தையே முன்வந்து கேட்ட அன்றே வரங்கள் கொடுக்கப்பட்டு விட்டன. விவரங்கள் அப்போதே தெரிவிக்கப்படவில்லை; அவ்வளவுதான். உண்மையில், அவை பிறகு வரங்களேயில்லை. என் தாய் என் தந்தையிடம் விட்டு வைத்திருந்த கடன்.

" சேதுபந்தனத்துக்கு அனுமதிக்கு மூன்று நாள் தவம் கிடந்தேனே. ஸமுத்ர ராஜன் மதித்தானா? வில்லைக் காட்டின பின்னர்தானே வழிக்கு வந்தான்!

ராவணஸம்ஹாரம் என்று பிரும்ம ஹத்தி இழைத்தேன். ராமேசுவரத்தில் லிங்கத்துக்குப் பூஜை செய்து விட்டால் தோஷம் போய்விடாது. பச்சாத்தாபத்துக்குப் பூஜை ஒரு வடிகால், அவ்வளவே. இந்த ராவண ஸம்ஹாரம் சுந்தர, நீயல்லால் சாத்தியமா?"

'அது காரணம் ராகவதரிசனம் எங்கள் பாக்கியம்' –அனுமனின் கைகள் ராமனின் பாதங்களைத் தேடின.

இரண்டு மைனாக்கள், ஒன்றையொன்று துரத்தி விளையாடும் வெறியில் பந்தலுள் நுழைந்து, அவர்கள், தலை மீது வட்டமிட்டுவிட்டு, மீண்டும் வெளியே பறந்து போயின.

" கிர்ச் கிர்ச் கிர்ச் கிர்ச்....."

'இந்த ராவண ஸம்ஹாரத்துக்கு அணிலியிருந்து ஆஞ்சனேயன்வரை போதாதென, எதிரியின் மர்மங்களை வெளியிட; எதிரியின் பாசறையிலிருந்து அவன் தம்பி.... என்ன பெருமை வேண்டியிருக்கிறது. செத்த பாம்பை அடித்து, வாகை சூடுவதில்? ராமா, ராவணனைஅழித்தது பெரிதல்ல. அதைவிட இந்திரஜித்தின் ஸம்ஹாரம் தான் மகத்தானது' இது என் வார்த்தையல்ல. அஹஸ்திய முனிவரின் வார்த்தைகள்.

" ஆம்; அவர் சரியாகத்தான் சொன்னார். இந்த ராவணன் ஏற்கனவே பல இடங்களில் அடிபட்டவன்தானே! அங்கதன் தொட்டிலில் பொம்மையாகத் தொங்கியவன் தானே? நினைத்தால், வாலி அவனை அப்பவே நசுக்கியிருக்க முடியாதா? ஸீதை இவனை ஒரு பார்வையாலேயே எரித்திருக்கமுடியாதா? ஏன் உன் முன் அவன் எம்மாத்திரம்? வாயுபுத்ர, உன் பெருந்தன்மையில், ராமாயணத்துக்காக அவனை விட்டு வைத்தாய். இப்போது உன்னை நான் வணங்குகிறேன்."

"ராமா... ராமா!"– கிழவர் செவிகளைப் பொத்திக் கொண்டார்.

மனிதப் பிறவியின் சுமை என்னென்று கண்டாயா? வெளியில் காட்டிக் கொள்ள முடியாத புழுக்கங்கள். இவைகளைத் தாங்கிக் கொள்ளத் தன்னைக் காட்டிலும் பெரும் பாரத்தை ஒண்டியாக இழுக்கும் எறும்பின் பலம் வேண்டியிருக்கிறது.

அனுமன் ஆறுதலாக அவர் பாதங்களைத் தொட்டு வருடினான். அது இல்லாமல் அவனால் முடியாது.

" ரகு வீரா, ஒன்று கேட்கிறேன். ராவண ஸம்ஹாரம் இல்லையெனில், உங்கள் பிறவியின்

நிமித்தம்தான் என்ன?.

" பிதுர்வாக்ய பரிபாலனம்" – வார்த்தைகள் அமைதியாகத்தான் வந்தன. ஆனால் அக்ஷரத்துக்கு அக்ஷரம் ஒரு முழுமை, உருண்டை வடிவம் பெற்று, என்ன அழுத்தம், தீர்மானம், கம்பீரம்!

" அப்பா!"

அனுமனுக்கு ரோமங்கள் குத்திட்டன.

தென்றலா? தசரதனின் ஆசிமூச்சா?

ததாஸ்து.

தரிசனம் என்று தனியாக இல்லை. நித்யத்துவத்தினின்று சொட்டென ஒரு தருணம் உதிர்ந்து தொட்டுவிட்டு நகர்கின்றதே, அதுதான் தரிசனம். ததாஸ்து.

அந்தக் காலப்ரமாணம் ஸீதையையும் கவ்விற்று. பந்தாட்டத்தின் நடுவில், திடீரென்று பந்தைத் தேடிக்கொண்டு தோழிகள் அனைவரும் மூலைக்கொருவராய்ப் போய்விட, தான் தனித்து நிற்பதை உணர்ந்தாள். இது பழக்கமான தனிமையில்லை. அவள் தனிமையாகவில்லை. வயிற்றில் திடீரென ஒரு முத்துப் பொறி வைத்தாற் போன்ற உணர்ச்சி.

" ஓ!"

மனம் சட்டென ஆர்யபுத்திரனை நாடிற்று. தனக்குத் திடீரெனப் புரிந்ததைக் கணவனிடம் சொல்லிக் கொள்ள ஓடிவந்தாள்.

பந்தலுள் தம்மை மறந்த இரண்டு சிலைகளைக் கண்டாள்.

---

*நன்றி : 'இதயம் பேசுகிறது' – 3.10.82.*

அயன் படைப்பினையும் – திருத்தி
அழகு செய்திடுவோன்
நயம் தெரிந்து கதை– நடத்தும்
நாடகக் கவிஞன்

*கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை–*

# அகலிகை

*மஹாகவி*

இந்திரன் இறங்கி வந்தான்
இமயத்தின் அடிவாரத்தே
சந்தனம் கமழும் மார்புச்
சால்வையில். சரிகை மீதில்,
பிந்திவந் தெறிக்கும் தேய்ந்த
பிறையின் செந்நிலவு பட்டுச்
சிந்திற்று, மிரண்டங்கே ஓர்
சிள் வண்டு வாய் மூடிற்றாம். –1

கற்களிற் படாத காலிற்
கழல்ஒலி கிளம்ப வில்லை
நிற்கவும் இல்லைத், தோள்கள்
நிமிர்ந்தவன் நடந்து சென்று
புற்றரை அடைந்த போது
பாதத்தைப் பொறுக்க வைத்தான்.
சிற்றாற்றின் அரவம் கேட்டுச்
செல்கின்றான் அதனை நாடி.–2

பாதையில், விடியும் போது
பகல் போல விரியப் போகும்
போதினைப் பிடுங்கிக் கைக்குள்
பொத்தினன், முகர்ந்து பார்த்தான்.
ஆதலும் வாழ்ந்தோர் நாளில்
அழிதலு மான இந்த
மேதினிச் சிறப்பைக் கண்டு
வெறுத்தாலும் கவர்ச்சி கொண்டான்–3

கையினில் நீரை அள்ளக்
குனிந்தவன் களைப்பைத் தீர்த்தான்
ஐய, எச் சுவையும் அற்றும்
தேவரின் அமுதை வென்றி
செய்ததைச் சிந்தித் தானோ,
சிரித்தனன் சிறிது. முன்னர்
கொய்த பூக் கீழே வீசிக்
குகைஒன்றைக் குறுகலுற்றான்.–4

முத்தினால் நிறைந்த வான
முடி, இந்த நிலத்தில் உள்ள
அத்தனை பட்டும் ஒவ்வா
அழகிய நிறமேலாடை
கத்தி, காற் செருப்புக், காப்புக்
கழற்றி ஓர் ஒதுக்குத் தேடி
வைத்துப் பின் திரும்பிப் பள்ள
வழியினைத் தொடரலானான்.–5

இருட்டிலும் நுழைய வல்ல
இந்திர நோக்கிலே, அம்
முரட்டுவான் மரங்கள் சூழ்ந்து
முதிர்ந்த காட்டிடை; நீர் ஓடும்
புறத்திலே, கமுகும் தெங்கும்
புலப்பட, இரண்டு கண்கள்
உருட்டினன் ஊன்றி நோக்கி
உள்ளதோர் குடிலும் கண்டான். –6

வேலியில் முள்ளில் லாத
வெண்டியை மெல்லத் தாண்டக்
கோழிகள் விழித்துக் கொண்டு
குசு குசுத்தன மாங்கொப்பில்,
ஓலையோ டிழைத்த தட்டி
ஒட்டையில் நாட்டம் வைத்து
மாலுண்ட வானக் காரன்
மறுகினான் நோக்கி நோக்கி.–7

அகலிகை தளிர்க்கை கொஞ்சம்
அசைந்ததும் அருகில் தூங்கும்
மிகுதியாய் நரைத்த நெஞ்சுக்
கோதமர் மேற்படர்ந்து
புக, இவர் விழித்துப் பார்த்துப்
பொழுதாயிற் றென்ப தெண்ணி
அகன்றதும், ஆனயாவும்
அவன் அங்கு நின்று கண்டான்–8

ஆதரவு அயலில் தேடி
அலைந்தகை விரல்கள் மீண்டு
பாதிமூடா மென் மார்பிற்
பதிந்தன, நெளிந்த வாயின்
மீதுபுன் முறுவல் மீண்டும்
விளைத்தனள், முயன்று பின்னர்
மாது குப்புறப் புரண்டு
மணையினை அணைக்க லானாள்–9

கோதமர் நடந்து சென்று
குந்திய கல்லின் மீது
சாதலே நிகர்க்க ஏதோ
தவம்புரிந் திருந்தார், வீட்டில்
காதலின் பிடிப்பிற் சிக்கிக்
கலங்கினாளது கால் மாட்டில்
நீதிகள் நினையா னாகி
நெடும் பிழை இழைப்பான் நின்றான்–10

காட்டுக்குள் அமைந்தும் அந்தக்
கடுந்தவ முனிவர் செய்த
வீட்டுக்குள் இன்று மட்டும்
விலங்குகள் நுழைந்த தில்லை
பாட்டுக்கோர் உருப்போல் வாளைப்
பச்சையாய்க் கண்ட போதை
ஈட்டிபோல் இதயத் தேற
இந்திரன் எதுசெய் தானோ? –11

துடித்தனள், எனினும் பாதித்
தூக்கத்துள், வலியோன் கைகள்
பிடித்தது பிடித்ததால் அப்
பிடிபிடி கொடுத்தாள், வந்த
அடுத்தவன் அழுத்த மாக
ஆசைகள் புதைக்கக், கண்கள்
எடுத்து நோக்காது சோர்ந்தும்,
உலகையே இழக்க லானாள்.–12

பித்தங்கொண்டவனைப் போலப்
பிதுங்கிய விழியிற், காதல்
அர்த்தங்கள் சிதறிப் பாய
அவள் உடல் தனதே ஆக்கி
முத்தங்கள் பறித்தான். அன்னாள்
முகம்முழு வதுமே, இன்பிற்
கத்துங்கால் மாது சற்றே
கண்ணிமை திறந்து போகப்–13

பார்த்ததும்; துவண்டு மேனி
படபடத்திட, மேலெல்லாம்
வேர்த்தது; வேர்த்த போதே
விறைத்தது; விறைப்பு மூச்சை
நூர்த்தது. நூர்ந்து போனாள்
நொடியிலே நொடிந்து கண்கள்
பார்த்ததே பார்த்த பாங்கிற்
பாவை, கல்லாகி விட்டாள்.–14

அந்தரத் தவர்கள் வேந்தன்
ஆயிரம் உளைவை நெஞ்சில்
தந்தவள் நிலையைக் கண்டு
தான்மிகக் குறுகிப் போனான்.
வந்தவர் முனிவர் நேர்ந்த
வகையினை அறிந்து கொண்டு,
தம்தொழில் பிறிதென் பார்போல்
தாடியை வருடி மீண்டார்.–15

நில்லாமல் நழுவி ஓடி
நீங்காத வாழ்விலே, தன்
பொல்லாமை நெடுக நோண்டப்
புண்ணுண்டான் தேவராசன்.
எல்லாம் போய்க் கல்லொன் றாக
எஞ்சிய பாழிடத்தே
நல்லார்கள் மிதிக்கத் தக்க
நாள்வரை கிடந்தாள் நங்கை.–16

# அயல் நாட்டுச் சீதை

**அப்துல் ரஃமான்**

இலக்குவன் : அண்ணா! இந்தக் கடல் நீரில் அண்ணியின் கண்ணீரை உங்களால் காண முடியவில்லையா? உள்ளத்தை உலுக்கும் இதன் ஓலத்தில் அண்ணியின் அழுகையை நீங்கள் கேட்கவில்லையா? நம் காலில் விழுந்து கெஞ்சிக் கதறும் அலைகளின் முறையீட்டை நீங்கள் உணர முடியவில்லையா?

இராமன் : கண்ணும் காதும் எனக்கு உண்டு.

இலக் : பின் ஏன் சும்மா இருக்கிறீர்கள்? மராமரத்தையும் வாலியின் உரத்தையும் துளைத்துச் சல்லடையாக்கிய உங்கள் கணை உறங்கி விட்டதா?

இரா : இதில் நான் தலையிட முடியாது; இது அயல் நாட்டுப் பிரச்சினை.

இலக் : உங்களை நம்பி வந்தவள்– உங்களோடு பிரிக்க முடியாத சம்பந்தம் உடையவள் அவளுடைய பிரச்சினையையா அயல் நாட்டுப் பிரச்சினை என்கிறீர்கள்?

இரா : நீ இறந்த காலத்தைப் பற்றிப் பேசுகிறாய். சீதை இப்போது இலங்கையின் பிரஜை

இலக் : இராமனுடைய வாயில் இராவணனுடைய வார்த்தை. இலங்கையின் பிரஜை என்பதற்கும் இராவணனுடைய பிரஜை என்பதற்கும் வேறுபாடு உண்டு அண்ணா! பிரஜையைப் பெண்டாள நினைப்பது தான் அரச பரிபாலனமோ? அயல்நாட்டுப் பிரச்சினை என்றே வைத்துக் கொள்வோம். கிஷ்கிந்தை விவகாரத்தில் நாம் தலையிடவில்லையா? அதுவும் அயல் நாட்டுப் பிரச்சினை தானே?

இரா : வாலி விவகாரத்தில் நான் நேரடியாகத் தலையிடவில்லை; மறைமுகமாக இருந்து தான் என் அம்பை ஏவினேன். உனக்கே தெரியும்.

இலக் : அந்த அம்புக்கு இப்போது நாணம் வந்து விட்டதா?

இரா : இப்போது நிலைமை வேறு. சிருங்கி பேரம், கிஷ்கிந்தை, விடணன் மூலமாக இலங்கை இவைகளெல்லாம் இப்போது என் தலைமையை ஏற்றிருக்கின்றன. இந்தப் பொதுநலக் குழுவுக்கு நான் தலைவன். சீதைக்காக நான் போரிட்டால் இந்தத் தலைமைப் பதவியின் மரியாதை என்னாவது?

இலக் : அண்ணா! நீங்களா இப்படிப் பேசுகிறீர்கள் ? அண்ணியின் மானத்தைப் புதைத்த சமாதி மேடையையா நீங்கள் சிம்மாசனமாக்க விரும்புகிறீர்கள்? அண்ணா! இராவணன் கொடுமைக்கு ஆளாகித் துடிக்கும் தங்கள் குலக்கொடியின் கண்ணீரைப் பார்த்து மிதிலை கொந்தளித்துக் கொண்டிருக் கிறது. அண்ணியைக் காப்பாற்றும் பொறுப்பை நாம் தட்டிக் கழிக்கிறோம் என்று அவர்கள் கோபப்படுகிறார்கள்.

இரா : இந்தப் பிரச்சினையில் நாம் உணர்ச்சி வசப்படக் கூடாது. இலங்கை இராவணனுடைய நாடு, அவனுடைய ஆதிபத்திய உரிமையை நாம் மதித்தாக வேண்டும்.

இலக் : அண்ணியின் மீது அவனுக்கேது ஆதி பத்திய உரிமை? யாராவது கொடுத் தார்களா? கொள்ளையனுக்கு அரசியலில் மட்டும் சிம்மாசனமா? கல்லாய்க் கிடந்த அகலிகைக்குத் கருணை காட்டினீர்கள்; அநியாயமாக நாடுவிட்டுத் துரத்தப்பட்ட சுக்கிரீவனுக்கு ஆதரவு காட்டினீர்கள்; நெருங்கிய உறவுடைய சீதையின் விஷயத்தில் மட்டும் ஏன் இந்தப் பாரபட்சம்?

இரா : அதுதான் இராவணனிடம் அனுமனைத் தூது அனுப்பினேனே போதாதா?

இலக் : அதனால் என்ன பயன் ஏற்பட்டது? அனுமன் வாலைச் சுட்டுக்கொண்டு வந்தான். அவ்வளவுதானே!

இரா : இல்லை. சீதையின் விஷயமாக அவர்கள் வட்டமாக உட்கார்ந்து பேசச் சம்மதித்திருக்கிறார்கள். இது வெற்றியில்லையா?

இலக் : யாருக்கு வெற்றி? என்ன பேச்சு வார்த்தை? இராவணனுடன் சீதை எப்படிச் சேர்ந்து வாழ வேண்டும் என்பதை ஆராய்வதற்கா பேச்சு? இதென்ன கேவலம். அண்ணியை எப்படி விடுவிப்பது என்பதுதான் இப்போதுள்ள பிரச்சினை.

இரா : இதற்கு அரசியல் தீர்வுதான் காண முடியும், வீடணனும் அதைத்தான் சொல்லுகின்றான்.

இலக்: இராவணனுக்கு எதிராக வீடணனும் கும்பகருணனும் இணைந்து போராடியிருந் தால் இந்த நிலை ஏற்பட்டிருக்காது.

இரா : அவர்கள் சேர்ந்து போராட மாட்டார்கள்; அவர்கள் வழி வெவ்வேறு. வீடணன் என்னுடைய உதவியை நாடி இங்கே வந்திருக்கிறான். கும்பகருணன் இராவணனை விட்டு விலக மாட்டான். 'செஞ்சோற்றுக் கடன்'. மறுபடியும் செல்கிறேன். இந்தப் பிரச்சினைக்கு அரசியல் தீர்வுதான் காணமுடியும்.

இலக் : விடுதலையும் அரசியல் தீர்வுதான். அண்ணா! வில்லை முறித்து அண்ணியைத் திருமணம் முடித்தீர்கள். அதன் பொருள் எனக்கு இப்போதுதான் விளங்குகிறது. இதோ! இப்போது கையில் பிடித்திருக்கிறீர்களே இந்த வில் வானவில்லைப் போல் அழகாக இருக்கிறது. சூரியவம்சமே! உனக்காக நான் கண்ணீர் வடிக்கிறேன். சந்திரனுக்குத்தான் களங்கம் உண்டு. சூரியனே! உன்னிடம் எப்படிக் களங்கம் வந்தது?

(பெருமூச்சு விட்டபடி இலக்குவன் தனியாக நடந்து போகிறான். ஒரு சிற்றணில் தனியாக சிறுசிறு கற்களை உருட்டிக் கடலில் போட்டுக் கொண்டிருக்கிறது. அதன் முதுகை அவன் பரிதாபத்தோடு தடவிக் கொடுக்கிறான்.)

இலக் : காற்றே! என் அண்ணியிடம் போய்ச் சொல். தேடித் தவிக்கும் அவள் கண்களில் துளிக் கண்ணீர் வழிய வேண்டாம்; கனற் பொறிகள் சிதறட்டும். அந்தக் கோப நெருப்பில் இராவணனும் அவன் பூட்டிய விலங்குகளும் எரிந்து சாம்பலாகட்டும்.

(நான் திடுக்கிட்டு விழித்தெழுகிறேன். பக்கத்தில் 'சிங்கள ராணுவத்தின் வெறியாட்டம்' என்று அலறிக் கொண்டு கிடத்தது செய்தித்தாள். அதற்கு மேல் ராமாயணம் விரிந்து கிடந்தது. காற்றில் யுத்த காண்டத்தின் பக்கங்கள் படபடத்துக் கொண்டிருந்தன).

---

*நன்றி : "கரைகளே நதியாவதில்லை" – திருமகள் நிலையம்.*

# கடற் பாலம்

பாலகுமாரன்

அவன் குனிந்து அந்த அணிலை எடுத்தான். சிவந்திருந்த அவனது இடது உள்ளங்கை மெல்லக் குவிய அதில் ஒடுங்கி அமர்ந்து கொண்டது அணில். முன் கால்களைத் தூக்கி அவனைக் கும்பிட்டது. வால் உயர்த்திற்று. புஸு புஸுவென்ற வால் ஈரமும் மணலுமாய் அழுக்கடைத்திருந்தது.

அவன் நெகிழ்ந்தான். அவன் கண்களில் நீர் திரண்டது, பளபளத்தது, சோர்வும், களைப்பும், வேதனையும் அவன் முகத்தில் தெரிந்தன. அத்தனையும் மீறி மெல்லச் சிரித்தான். உச்சி முகர்ந்தான். அவன் மூச்சுக் காற்றின் சூடு தாங்காமல் அணில் தன்னைக் குறுக்கிக் கொண்டது. மெல்ல தன் மார்பில் அணிலைப் பதித்துக் கொண்ட அவன் இதயத் துடிப்பு யார் பெயரையோ உச்சரித்துக் கொண்டிருந்தது. மறுபடியும் முகத்துக்கு நேரே அணிலைக் கொண்டு வந்து கருணையுடன் பார்த்தான்.

அணில் விழிகளை உருட்டித் தவித்தது. இறக்கி விடேன்... இன்னும் வேலை பாக்கியிருக்கிறதே என்பது போலக் கெஞ்சிற்று.

அவன் தன் வலக்கை விரல்களைப் பிரித்தான். நடு மூன்று விரல்களால் அணிலின் நெற்றியிலிருந்து வால்வரை ஒருமுறை வருடினான். அந்த ஸ்பரிசத்தில் அணில் மயங்கிற்று. உடம்பு முழுவதும் படர்ந்த சிலிர்ப்பு தாளாமல் அவன் இடது உள்ளங்கைக்குள் அலைந்தது.

மெல்லியதாய் மூன்று கோடுகள் அதன் முதுகில் தோன்ற ஆரம்பித்தன. அதன் சாம்பல் தேகத்தில் மூன்று கருங்கோடுகள் தெளிவாய்த் தெரிந்தன.

அப்பா! என்ன அழகு... மரத்திலிருந்த காக்கை கத்திற்று. கிளிகள் சந்தோஷமாய்ப் பறந்தன. மரங்கள் பூக்களை உதிர்த்தன. காற்று சுழன்று ' ஹ்ஹோம்' என்றது.

அணிலைக் கீழே தளர்த்தினான். துள்ளிக் குதித்து மறுபடியும் பாலத்துப் பக்கம் ஓடிற்று அணில், வாலை சமுத்திர ஜலத்தில் தோய்த்து மணலில் புரட்டி, கற்பாறைகள் தாண்டி ஓடி......

" ஒரு அல்பனுக்குப் போய் . பரிசு, இதுதான் கொடுமை, இங்கே, மிகப் பெரிய கொடுமை, பொறுக்க முடியாத கொடுமை"

மேகம் சிவக்கக் கத்திற்று ஒரு குரங்கு

மற்றவை அதைத் திரும்பிப் பார்த்தன.

அவன் காதில் எதுவும் விழவில்லை. ஒரு பாறையில் மல்லாந்து படுத்துக் கொண்டான். வானம் பார்த்தான். ' ஜானகி.... என் ஜானகி' என்று மனம் அரற்றிற்று.

" எவன் பெண்டாட்டிய எவனோ தூக்கிட்டுப் போனான்... உங்களுக்கு என்னய்யா.... உங்களுக்கு என்ன தலையெழுத்து..... இங்க பார். நான் பொறந்திருக்கேன். சரி..... எனக்கு வீடு கட்டிக்கறதுக்கு.... எங்க ஊருக்கு ஒரு கோட்டை செஞ்சுக்கறதுக்குன்னா பாறை தூக்கலாம், பரவாயில்லை, எவன் பொண்டாட்டியை எவனோ தூக்கிட்டுப் போனானாம் இங்க நாம பாறை தூக்கணுமாம். மாட்டேன்யா முடியாது. உங்களாலா னதைப் பாருங்க " கால் பக்கம் இறங்கிய கல்லை அந்த குரங்கு எட்டி உதைத்தது; சமுத்திரத்தில் உருட்டி விட்டது. " இதுதான் கடைசி கல்லு.... நான் தூக்கிறது. இனிமே, நம்மால முடியாது. எனக்கென்ன.... தலையெழுத்து.... பாறை தூக்கணும்னு. கீழே போடுங்கடா... மானங்கெட்ட பேமானிங்களா...." அடுத்த குரங்கின் கைப்பாறையையும் உருட்டி விட்டது.

மற்றவை திகைத்து நின்றன.

"என்ன தரப் போறான் உனக்கு... இல்ல.. என்ன வாரிக் குடுத்திடப் போறான். கீழ ஒண்ணு ஒடிச்சே பைத்தியம்.... அந்த மாதிரி முதுகுப் பட்டை வாங்கிக்க இத்தினி கஷ்டமா.... முதுகுல பட்டையா மூணு கோடு போட்டுட்டா வயிறு ரொம்பிடுமா. ஊரை விட்டு ஊர் வந்து பெண்டாட்டிய விட்டு புள்ளைக் குட்டிகளை விட்டு இப்படி வெய்யில்ல அலையறதுக்கு? எவனோ எவன் பொண்டாட்டியையோ தூக்கிட்டுப் போனான்றதுக்கு நாம பாலம் கட்டணுமா, தலையெழுத்தா?

"போங்கடா எல்லாரும். போய் முதுகில பட்டை வாங்கிக்கங்க. எனக்கு இருக்கிற முதுகு இருக்கட்டும் இது போதும்."

கற்கள் கைமாறுவது தடைப்பட்டது.

மற்றவை திகைத்து நின்றன. திகைத்ததில் ஒன்று சுதாரித்துக் கொண்டது. எதிர்த்த குரங்கைத் தாண்டிப் பாறையைச் சிரமப்பட்டுத் தூக்கிக் கடலில் எறிந்தது.

"பயம், கைல வில்லு வெச்சிக்கான்னு பயம், கூட கோவக்கார தம்பி இருக்கான்று பயம், என்னடா பண்ண முடியும். மிஞ்சிப்போனா அம்பு போட்டு அடிப்பான். சாவடிப்பான். சாவலாண்டா, இப்படி பாறை தூக்கறதை விட, வாலைத் தூக்கி கழுத்துல போட்டு சுருக்கு மாட்டிச் சாவலாம்.

"அப்படி என்னடா வில்லுக்குப் பயம். என்ன பெரிய வில்லு மறைஞ்சு கொன்னுட்டான் எங்காளை. ஒண்டிக்கு ஒண்டி நின்னிருந்தா நீ ஆம்பளை சிங்கம். காட்டிக் குடுத்தான் ஒரு பேமானி. அவன் பேச்சைக் கேட்டு புதர்ல ஒளிஞ்சுக்கோன்னே. அவன் இருந்திருந்தா... இந்நேரம் அவன் மட்டும் உசிரோட இருந்திருந்தா... ஒரு ஆள் வேலை வாங்க முடியுமா நம்மகிட்ட இப்படி? அடிமை முண்டங்களா.... போடுங்கடா பாறைய மானங்கெட்ட பசங்களா....." ஆத்திரமாகக் கத்திற்று.

மற்றவைகள் விக்கித்து நின்றன. துலசிக்குக் கண்ணில் ஜலம் கட்டிற்று. உடனே கண் மூடின. அடிபட்டு இறந்த தலைவனை நினைத்துக் கும்பிட்டன.

"அடி உதைக்குப் பயந்து மொத்தமா வித்துட்டாங்கடா நம்மளை. பாலம் கட்டறதுக்குக் கூலியாள் மாதிரிக் கொண்டாந்துட்டாங்க. கூலிப் பட்டாளம் தானடா நீங்க . உங்க ராஜாவுக்குப் பாலம் கட்டறியா.... படை எடுக்கறியா? இல்லியே.... எவன் பெண்டாட்டியை எவனோ கொண்டு போனான், அதுக்கு..... எங்களைப் போயி....."

"என்ன அங்கே கூச்சல்?" குரங்கின் இளவரசன் கர்ஜித்தான். கூட்டத்தைக் கலைத்துக் கொண்டு முன்னே வந்தான்.

"ம்ம்... வேலையாகட்டும்... என்ன குழப்பம் இங்கே?" மற்றவை விரைவாய்ப் பணியில் ஈடுபட, அது மட்டும் கைகட்டி நின்றிருந்தது......

"யார் நீ.... ஏன் கைகட்டி நின்றாய்.....?"

"ம்ம்... போ... போய்ப் பாறையெடு..."

"சர்தான் போய்யா, நேத்திக்குப் பட்டம் கட்டிக்கிட்டு இன்னிக்கு ஆட்டம் காமிக்கற உன்னை மாதிரி எத்தினியோ பேரைப் பார்த்திருக்கேன்."

"ஏய்.... இளவரசன் பிரம்பை ஓங்கினான்...."

குரங்கு சிலிர்த்தது. முறைத்தது. மற்றவை திகைத்து நின்றன. வேலை தடைப்பட்டது.

அவன் படுத்துக் கொண்ட பாறையினின்று எழுந்தான். உள்மனம் ஏதோ ஒரு வேதனையை உணர்ந்தது.

"மரியாதையாப் பாறையை எடு" இளவரசன் அதட்டினான். அவன் தலையில் புதிய கிரீடம் ஜொலித்தது. சற்று பெரிய கிரீடம். நழுவாமல் இருக்க, கொடிகளைப் பிணைத்து இறுகக் கட்டியிருந்தான்.

"எடுக்கலேன்னா என்ன செய்வ?"

சுரீரென்று பிரம்பு இறங்கிற்று.... குரங்கு வெறி கொண்டது. மூர்க்கமாய் இளவரசன் மீது மோதிற்று. இளவரசன் தடுமாறினான். மற்றவை தாங்கிக் கொண்டன.

குரங்கு இளவரசனைத் தாண்டிக் குதித்துப் பாலத்தின் ஆரம்பத்திற்கு வந்தது.

"சாமர்த்தியம் இருந்தா என்னைப் புடிச்சு வேலை வாங்கு பார்க்கலாம். வெளியே வாங்கடா மானம்கெட்ட

பசங்களா. பாறை தூக்கவா பொறந்தீங்க. எவன் பெண்டாட்டிய எவனோ தூக்கிட்டுப் போனான். உங்களுக்கு என்னடா...?

மூன்று நான்கு குரங்குகள் வெளியேறிய குரங்கோடு சேர்ந்து கொண்டன. மரத்தின் உயரே ஏறிக் கொண்டன.

வேலை முற்றிலும் நின்று போயிற்று.

" தம்பி ..... அங்கென்ன குழப்பம்...?" ஏன் வேலை நின்று போயிற்று....?" அவன் உட்கார்ந்த இடத்திலிருந்து எழுந்தான். கைகளைப் புருவ விளிம்பில் குவித்துக் கடலை நோக்கினான். பாலம் பாதி பூர்த்தியாகி விட்டது. இன்னும் பாதி... விரைவில் பூர்த்தியாவிடும்........

" இதோ பார்க்கிறேன் அண்ணலே...." தம்பி குனிந்து வணங்கிவிட்டு மணற்குன்றிலிருந்து இறங்கி, பாலத்தின் விளிம்பு நோக்கிப் போனான். எதிரே கிழக் கரடி வணங்கிற்று....

" என்ன பெரியவரே..... ஏன் வேலை நிற்கிறது....?

கிழம் மெல்லப் பேசிற்று.

" என்ன .....? தம்பி பல் கடித்தான். வில்லைத் தரையில் அடித்தான். பாறையில் வில் விளிம்பு பட்டு நெருப்புப் பொறி கிளம்பிற்று.

"தம்பீ.... " பின்னாலிருந்து கண்டிப்பாய் அண்ணல் குரல்கேட்டது. அண்ணல் மெல்லப் படியிறங்கி வந்தான். தம்பியின் தோளைப் பற்றிக் கொண்டு சாய்ந்தபடி நின்றான்.

கிழம் மறுபடியும் மெல்லிய குரலில் சேதி சொல்லிற்று.

" இளவரசன் எங்கிருக்கிறார்...."? சுட்டிக் காட்டிய திக்கில் இளவரசன் கோபத்தில் எகிறிக் கொண்டிருந்தான்.

"நமது தோழன் எங்கே?.... " அண்ணல் சொல்லை முடிக்கும் முன் கூட்டம் பிளந்தது. வாய் பொத்தியபடி ஒரு வானரம் எதிரே நின்றது. அதன் கண்களில் நிரந்தரச் சிரிப்பு, அமைதி, ஆழமான சுடர்.... சகலமும் தெரிந்த குறும்பு இருந்தது.

"நண்பரே...." அண்ணல் மறுபடி விளிக்க, குனிந்து வணங்கிற்று. "இடைஞ்சல்கள் அப்புறமாயின. வேலை தொடர்கிறது உத்தமனே.... "

எதை முக்கியமாகச் சொல்ல வேண்டுமோ அதை முதல் வார்த்தையில் சொல்லிற்று. எப்படிச் சொல்ல வேண்டுமோ அப்படிச் சொல்லிற்று. சொல்லின் செல்வனல்லவா இவன்.

அவன் சிரித்தான்.

இவன் தோழமை ஒரு பாக்கியம். இவன் பணிவு முழுமையான ஞானம்.

" அப்புறமானவை எங்கிருக்கின்றன...?" அண்ணல் கேட்க, சொல்லின் செல்வன் தலை குனிந்தான். திரும்பி மரங்கள் நோக்கி நடந்து அண்ணலுக்கு வழி காட்டினான். அவனுக்குத் தெரியும். இனி என்ன நடக்கும் என்பது தெரியும். அவர்கள் கூட்டமாய் மரங்களை நோக்கி நகர்ந்தார்கள்.

" ஆகவே, நண்பர்களே... என் வீடு, என் மனைவி, என் குழந்தை எனக்கு முக்கியம். எவன் பொருட்டும். எதன் பொருட்டும் எவருக்கும் நாம் அடிமை செய்யோம்."

" மதுவனத்தில் எல்லாத் தேன் குடமும் உடைச்சுத் தின்னமே.... அப்போ அது யார் வீடு என்று நாம கேக்கலையே....?"

" அது கூலி.... தேடிக் களைத்தற்குச் சன்மானம். இடம் காட்டியதற்கு .... இந்தத் திசையென்று நாம் கண்டுபிடித்தற்கான வெகுமதி அது உழைத்துச் சம்பாதித்த பொருள்."

"ஆ.... நீ மேற்குப் பக்கம் போய் வெறுமே தலை சொறிஞ்சுட்டுத்தான வந்த... இஷ்டத்துக்கு உடைச்சிச் சாப்பிட்டயில்ல.... தெற்குப் பக்கம் போய்த் தெரிஞ்சுக்கிட்டு வந்தது எங்க கோஷ்டி"

" இதுதான் பிரித்தாளும் சூழ்ச்சி. நம்மை நாலாய்ப் பிரித்து, நாலு பக்கம் அனுப்பிய போதே நான் கண்டித்தேன்..." " அப்பவே முடியாதுன் சொல்லியிருக்கனும்...."

" நடந்தவை நடந்தவையாய் இருக்கட்டும். இனி நடப்பவை நல்லவையாய் இருக்கட்டும்."

" எனக்கு நல்லபடியாப் படல. உதைபடப் போறோம்."

" இப்படி உயிர் வாழ்வதைவிட மரணமே மேல்."

"இதுல என்ன தப்பு? எனக்குப் புரியலையே... "

"நீயும் வானரம், நானும் வானரம் உன் மனைவியைத் தேட வேண்டுமா...? சொல்.... தேடுகிறேன். உயிர் கொடுத்து உதவுகிறேன். எவன் மனைவியை எவனோ தூக்கிக் கொண்டு போனான். என்பதற்காக.... "

" ஆள் வருது ஆள் வருது...." கூட வந்த மூன்று நான்கு குரங்குகளும் தாவி எழுந்து பாலம் நோக்கி ஓடின. பிரம்பு வீசிக் கொண்டு வந்த இளவரசனைத் தாண்டி, அடிபடாமல் குனிந்து ஓடிப்போய்ப் பாறைகள் தூக்கின.

"கோழைகள்.... " குரங்கு உறுமிற்று

கைகட்டி மறுபடியும் தைரியமாய் வருபவரை எதிர் கொண்டது.

இளவரசன் முன்னேறிப் பாய்ந்து இழுத்து வந்தான்.

தம்பி வில்லை ஓங்கினான்.

அண்ணல் தடுக்க அமைதியானார்கள்.

அண்ணல் கரம் கூப்பினான்.

குரங்கு கைகட்டி வானம் பார்த்தது.
" நண்பருக்கு என்ன வேதனை...?" மிருதுவாய்க் கேட்டான்.
குரங்கு பதில் சொல்லாது எங்கோ வெறித்தது.

"எல்லாக் கடின உழைப்புக்கும் பரிசு உண்டு. ஏன் கலக்கம்? எப்போது பரிசு என்பதே நண்பர் கேள்வி இல்லையா... பரிசற்று எந்த நல்விஷயமும் போவதில்லை நண்பரே. "

குரங்கு ஆத்திரத்தில் பல் கடித்தது. " யாருக்கு வேண்டும் உன் பரிசு"?

"பிறகு என்ன வேதனை நண்பருக்கு? "

"உன் மனைவியை நீ பிரிந்தது மட்டும்தான் விஷயமா? மற்றவர் வேதனையை நீ அறிவதுண்டா? எனக்கும் மனைவி உண்டு. பிள்ளைகள் கூட உண்டு. சகலமும் பிரிந்து, இந்தக் கடல் மண்ணில் உச்சி வெயிலில் எனக்கென்ன தலையெழுத்து?" கிறீச்சிட்டது.

" புரிகிறது, நண்பர் தன் இல்லம் போகலாம். உங்கள் மனைவிக்கு என் அன்பைச் சொல்லுங்கள். குழந்தைகளுக்கு என் ஆசிகள்."

"எனக்கு மட்டும்தானா மனைவியும், குழந்தைகளும்? அங்கே ஆயிரக்கணக்கானவர்... " கடல் நோக்கிக் குரங்கு கை நீட்டிற்று.

"அவர்கள் மனைவியர் பற்றி உங்களுக்கு என்ன கவலை? உங்கள் வேதனை உங்கள் மனைவியின் பிரிவு குறித்து மட்டும்தான் அல்லவா? பிறர் மனைவி பற்றியும் கவலை உண்டா? "

"அவர்கள் என் தோழர்கள். "

"அவர்கள் சகலருக்கும் தோழர்கள், நல்லவர்க்கு உதவி செய்பவர்கள். "

"நீ யார்? நீ யார்? உனக்கும் எங்களுக்கும் என்ன சம்பந்தம்? எனக்கு மட்டும் விடுதலை வழங்க, உன்னை அனுமதித்தது யார்? " குரங்கு ஆத்திரத்தில் அலறிற்று.

" உங்கள் தைரியத்துக்கு உங்களுக்குக் கிடைத்த பரிசு இது. உலகில் சகல விஷயத்திற்கும் பரிசு உண்டு. எந்தப் பரிசை எவ்விதமான பரிசை நாம் பூரணமாய் அநுபவிக்க முடியும் என்று ஆராய்வதும் நல்லது. நானும் உங்களைப் போலவே ஒரு கிரஹஸ்தன் உலகில் கூடி வாழாத உயிரினம் உண்டா? நிறமும் உருவமும் சற்று மாறுபட்டிருக்கலாம். உணவும் நீரும் உணரும் காற்றும் வசிக்கும் இடமும் சற்று வித்தியாசப்படலாம். அதன் பொருட்டு நம்மில் சில மாறுதல்கள் இருக்கலாம். வம்ச விருத்தியின் பொருட்டு, இணைதேடலும் கூட்டமாய்க் கூடி வாழ்தலும் நம் அனைவர்க்கும் பொது. இப்புவியில் சகல உயிரினத்திற்கும் உண்டான விதி. "

" அதனால்.... என்ன சொல்ல வருகிறாய் நீ....?"

" உன் துக்கமும் என் துக்கமும் பொது. உன் மகிழ்வும் என் சந்தோஷமும் ஒன்று."

"என் மனைவியை ஒருவன் தூக்கிக் கொண்டு போனால், நீ படையெடுத்து வருவாயா.... "

"நிச்சயம் வருவேன். அவஸ்யமானால், தவறிழைத்தவனை மறைந்தும் கொல்லுவேன்."

அண்ணல் உள்நோக்கம் புரிந்து கொண்டு பதில் சொன்னான்.

"ஹ.... நீ சுயநலக்காரன், உன் காரியம் முடிந்ததும், வெறும் நன்றி சொல்லி விட்டு உன் ஊருக்குப் போகிறவன்."

"இது என் காரியம் மட்டுமில்லை. உன் காரியமும் கூட. உலகில் வம்ச விருத்தியே தலையாய காரியம். இதன் பொருட்டே நீ ஆணாய் இருப்பதும், உன் மனைவி பெண்ணாய் இருப்பதும். இந்த விருத்தி, கருணையின்றி நடைபெறுதல் தகாது. உன் குழந்தை, உன் மனைவி என்கிறபோது நெஞ்சில் வரும் பாசம், நெகிழ்ச்சி உன் வம்சத்தை வலிமையாக்குகிறது. வீர்யம் கொள்ள வைக்கிறது. வளர்ச்சி ஏதுவாகிறது. எவர் பெற்றதோ என்கிற நிலை வளர்ச்சிக்கு எதிரி. இதனால் தான் மாற்றான் மனைவியிடம் நாம் தள்ளி நின்று பேசுகிறோம். இதில் ஒழுங்கீனம் வரக்கூடாது என்று தவிக்கிறோம். நல்ல சட்டங்கள் நாளைய தலைமுறையின் வலுவை முன்னிட்டு, இந்த உலகின் தொடர்புச் சங்கிலி அறுந்திடக்கூடாது என்கிற கருணையின் பொருட்டு."

"உன் வேதாந்தங்கள் எனக்கு அவஸ்யமில்லை"
"ஒரு அவஸ்யத்தைப் புரிந்து கொள்ளுங்கள் நண்பரே. நீங்கள் மட்டும் வீடு திரும்ப, இங்குள்ளவர்கள் தங்கள் மனைவிமார் மீது சந்தேகம் கொள்ளலாம். அது உங்கள் மனைவிமீது, உங்கள் மீது வெறுப்பாய்த் திரும்பலாம். உங்கள் இருப்பிட அமைதி குலைந்து விடும்."

"என்ன சொல்கிறாய் நீ...."

"ஒழுங்கீனத்தை ஒட்டுமொத்தமாய் எதிர்ப்பது நல்லது. மாட்டேன் என மறுத்தல், அதற்குத் துணை போவது போல ஆகும். உங்களைச் சிறை செய்துவிட்டு, உங்கள் நண்பர் நால்வரை ஊருக்கு அனுப்புகிறேன். அப்போது உங்கள் புத்தி என்னவெல்லாம் யோசிக்கும்? உங்கள் அருமை மனைவியின் ஒழுக்கத்தைப் பற்றியும் யோசிக்குமில்லையா? இது என் காரியம் மட்டுமில்லை. ஒரு ஒழுங்கீனத்தை எதிர்த்து, உயிரினப் பாதுகாப்பை முன்னிட்டும் செய்யும் காரியம்."

குரங்கு திகைத்தது. தீவிரமாய் யோசித்தது.
"நண்பரை விட்டுவிடுங்கள். அவர் யோசிக்கட்டும்" அண்ணல் சிரித்தான். "உங்கள் தைரியம் பாராட்டப்பட வேண்டிய விஷயம். உங்கள் செய்கை, பலருக்கு இனித் தெளிவைக் கொடுக்கும். நண்பர் ஒரு சிங்கம் போலத் தனித்துத் தைரியம் காட்டியவர். அவருக்குச் சிங்கத்தின் அங்கமொன்று பரிசாய் அளிக்கிறேன்." தம்பியின் வில் வாங்கி, அண்ணல் மெல்லக் குரங்கின் வாலை அழுத்தினான். "பரிசற்று எம்முயற்சியும் போவதில்லை நண்பரே" என்றான்.

வில் பட்ட குரங்கு சிலிர்த்தது.

வாலின் முடிவில் உரோமங்கள் கூடின. காக்கைகள் கத்தின. கிளிகள் பறந்தன. மரங்களினின்றும் இலைகள் உதிர்ந்தன. காற்று "ஹ் ஹோம்" என்று சுழன்றது. மற்றவை, தொடர்ந்து பாலம் கட்டத் துவங்கின.

எதிர்த்த குரங்கின் வால் சிங்க வாலாயிற்று.

ஆனால், அந்தச் சிங்கவால் குரங்கை மற்றக் குரங்குகள் இன்றுவரை சேர்த்துக் கொள்ளவேயில்லை.

என் பத்து வயதுப் பெண் கௌரி வழக்கம் போல இந்தச் சிறுகதையையும் பார்த்தாள். "நன்றாயிருக்கிறது" என்றாள். "உனக்கும் போன மாசம் பரிசு கொடுத்தாளே; அதை வச்சு எழுதினியா?" என்றாள். நான் சிரித்தேன்.

"ஆனா ஒரு சந்தேகம். நீ அணிலா? சிங்கவால் குரங்கா? என்று கேட்டாள்.

நான் மௌனமாய் இருந்தேன்.

---

*நன்றி 'கடற்பாலம்' நர்மதா வெளியீடு*

# கோசலை





'ரஞ்சகுமார்'

"குலம்! ........ மாடுகளுக்குக் கொஞ்சம் வைக்கல் இழுத்துப்போடு மேனே"

குலம் மல்லாந்து படுத்துக் கிடந்தான். ஓலைப்பாயில் தலையணைகூட இன்றித்தான் இவன் படுப்பான், முதுகு வலிக்குமா, இல்லையா? இவன் ஏன் ஒரு காட்டுப் பிறவிமாதிரி இருக்கிறான்!

அம்மா திண்ணைக் குந்தில் கால்நீட்டி உட்கார்ந்தவாறே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

" கொஞ்சம் வைக்கல் இழுத்துப் போடன் அப்பன்.... மாடுகள் கத்துதெல்லே.....!

குலம் நெற்றியில் முழங்கைகளை அழுந்தப் போட்டவாறு, கால்கலை ஆட்டியவாறு படுத்துக் கிடந்தான். அம்மா இவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். மார்பில் உரோமங்கள் படர்கிற வயது. முரட்டுத்தனமான உடல்வாகு. குரல்கூடக் கட்டைக்குரல், இவனுடைய அப்பா மாதிரி. நெற்றியில் தூக்கிப் போட்டிருந்த கைகளைப் பார்த்தாள். நரம்புகள் புடைத்துக்கொண்டு விம்மித் தெரிந்தன. உள்ளங்கைகள் முதலையின் முதுகு மாதிரி காய்த்துப் போயிருந்தன. விரல்கள் ஓயிலும் கிறிஸும் படிந்த பழுப்புநிறமாகத் தெரிந்தன. நகக் கண்களில் கறுப்பாக ஓயில் அழுக்குப் படிந்திருந்தது.

"குலம்!....... கொஞ்சம் வைக்கல்........"

அவசரமாகப் பாய்ந்து இடை வெட்டியவாறு மகன் சிடுசிடுத்தான்.

" நீயே இழுத்துப் போடன்..... எனக்கு ஒரே அலுப்பு."

அம்மா சற்றே வேதனையின் சாயல் படியச் சிரித்தாள்.

சீலன் இருந்தால் இப்படியா எல்லாம் இருக்கும்? அம்மா சொல்லாமலே வேலை எல்லாம் செய்து கொடுப்பான். மாடுகளுக்கு வேளாவேளைக்கு வைக்கோல் இழுத்துப் போடுவான். தண்ணீர் கொண்டு போய் வைப்பான். கோழிகளைக் கவனித்துக் கூடுகளில் அடைப்பான் சமயத்துக்கு தேங்காய் கூட அம்மாவுக்கு துருவிக் கொடுப்பான்.

எவ்வளவு அருமையான மகன்!

அவன் ஏன் அப்படிப் போனான்?

ஊரை நீங்கித் தூரே வயல்வெளிகள் பரந்திருக்கின்றன. இடையிடையே பனங்கூடல்களும் திடல்களும் தனித்துக் கிடக்கின்றன. மாலைநேரங்களில் அம்மா அவ்விடங்களில் புல் செதுக்கிக் கொண்டுவரப் போவாள். சைக்கிள் ஓட்ட முடியாது அவ்விடங்களில். சீலன் சைக்கிளில் சாய்ந்த படியே ரோட்டில் காத்து நிற்பான். அம்மா புல்லுக் கட்டுடன் திரும்பி வரும் நேரங்களை அவன் நன்கு அறிவான். அம்மாவின் உருவம் மிகத்தூரே மங்கலாகத் தெரியும் போதே ரோட்டை விட்டிறங்கி அம்மாவை நோக்கி விரைந்து போவான். பாரத்தை மாற்றிக்கொண்டு அம்மாவுக்கு முன்னே வீட்டுக்கு சைக்கிளில் பறப்பான்.

அம்மா வழியிலேயே துரவில் உடம்பைக் கழுவிக்கொள்ள முருகன் கோயில் மணி சிணுங்கி அழைக்கும். அம்மா உருகியவாறு கோயிலுக்குப் போவாள் பூசை முடிய நன்றாக இருள் சூழ்ந்து விடும். உள்ளங்கையில் பொத்தியபடி விபூதியும், சந்தனமுமாக திரும்பி வரும்போது, சீலன் வீட்டில் ' பளிச் சென விளக்கேற்றியிருப்பான்.

மேசைக்கு முன்னால் விளக்கொளியில் முகம் விகசித்துத் தெரியும்படிக்கு அவன் உட்கார்ந்திருப்பான். ஏதாவது படித்துக் கொண்டோ, எழுதிக்கொண்டோ இருப்பான். முன்னால் மென்குரலில் இசைத்தபடி ரேடியோ அவனை ரசிக்கும். பக்கத்திலே சைக்கிள்

முன்சில்லை ஒயிலாக ஒடித்துச் சாய்த்தபடி அவனைப் பார்த்து பளீரென ஒளிவீசிச் சிரிக்கும்.

மகள் அழகிய மொட்டு, மிகவும் சின்னவள்தான். ஆயினும் குசினியில் தேநீர் தயாரிக்க ஆயத்தமாகிக் கொண்டிருப்பாள். குலத்தை மட்டும் காணக் கிடைக்காது. அவன் வீட்டில் இருக்கும் நேரங்களை அம்மாவுக்கு அறுதியிட்டுக் கூறமுடியாது. அவன் தொழில் அப்படி!

மாடுகள் கழுத்துமணிகள் கிணுகிணுக்க புல்லை அரைக்கின்ற சத்தம் கேட்கும். கூடவே மாடுகள் பலத்து மூசி மூச்சுவிடுவதும் வாலைத் தூக்கி ஈக்களை விளாசி விரட்டுவதும், கேட்கும். சாணியின் மணத்துடன் பசும்புல்லின் வாசனை நாசியில் உறைக்கும். கோழிகள் எல்லாம் ஏற்கனவே கூடுகளில் அடைக்கப்பட்டிருக்கும். குறுகுறு வெனக் கொக்கரிக்கும். 'படபட' வெனச் சிறகுகளை உல்லாசமாக அடிப்பது கேட்கும்.

சுடச்சுட ஒரு கோப்பை தேநீர்..... கடுமையான உழைப்புக்குப் பின், தொழுகையின் பின். மோகனமான இரவின் பிறப்பு நேரத்தில்..... அருமையான தனது பிள்ளைகளுடன் அம்மா அருந்துவாள். அதுவல்லவோ வாழ்க்கை!

எல்லமே சீலனுடன் கூடவே சேர்ந்து அம்மாவிடம் பிரிவு சொல்லாமலே போயினவோ?

அம்மா அலுத்தபடியே வைக்கோல் போரை நோக்கிப் போனாள்.

ஒரே வயிற்றில் உதித்த பிள்ளைகள் ஏனோ இவ்வாறு வேறு வேறு குணம் கொண்டவர்களாய் ஆகிப் போனார்கள்? இரண்டு பேரையும் அம்மா ஒரே மாதிரித்தான் சீராட்டினாள். ஒரே மாதிரித்தான் உணவூட்டினாள். ஒரே பள்ளிக்கூடத்திலேதான், கொண்டுபோய்ச் சேர்த்து விட்டாள். புத்தகங்களைத் தூக்கிக்கொண்டு, எண்ணெய் பூசி படியச் சீவிய தலைகளுடன் அவர்கள் பள்ளிக்கூடம் போவதை வாசலில் நின்று பார்த்து ரசித்தாள்.

குலம் மட்டும் படிப்பை ஒரேயடியாகக் குழப்பினான். அண்ணனுடன் நெடுகலும் சண்டை போட்டான். அம்மாவுடன் கோபித்துக்கொண்டு சிலவேளை சாப்பிடாமலே போனான். ஆறாம் வகுப்புக்குமேல் அவனால் ஏறவே முடியவில்லை. அம்மா அறிவாள், அவனது இளையமகன் மிகவும் புத்திசாலி. ஆனாலும் ஏன் அவனால் படிக்க முடியவில்லை என அம்மாவுக்குப் புரியவில்லை.

சீலன் அமைதியாகப் படித்தான். அவன் மிகவும் அமைதியான மகன். இரைந்து கதைக்கத் தெரியாத வனாக இருந்தான். நடப்பது கூட மிகவும் மென்மை. ஒரு கம்பீரம் இருக்கத்தான் செய்தது. ஆயினும் புல்லுக்குக் கூட நோகாத நடை, கண்கள் பெரிதாக இருந்தன. உள்ளங்கைகள் மென்மையாகவும் குளிர்ச்சியாகவும் இருந்தன. நகங்கள் ரோஸ் நிறமாகவும் , நீளமாகவும் .... விரல்கள் கூட மெலிந்த நீளமாக நளினமாக இருந்த பெண்களைப் போல.

சீலன் ஒரு மோகனமான மாலை நேரம் பிறந்தான். பறவைகளின் கீச்சொலிகள் அடங்கிய பிறகு, மாடுகள் எல்லாம் மேய்ச்சல் நிலங்களிலிருந்து திரும்பி வந்துவிட்ட பிறகு, மென்மஞ்சட்கதிர்களை மண்ணெண் ணெய் விளக்குகள் உமிழ்ந்து கொண்டிருக்கும் நேரத்தில்...... அம்மாவின் இடது தொடையை சற்றே உரசியபடி, ஒரு வளர்பிறை நாளில் சீலன் பிறந்தான். புனர்பூச நட்சத்திரம், 'இவன் பெரிய காரியங்களைச் சாதிக்கப் பிறந்தவன்' என அவனது சாதகம் சொல்லிற்று.

குலம அத்த நட்சத்திரம். அது தான் அவனிடம் முரட்டுச் சுபாவங்கள் சேர்ந்து விட்டனவோ? அத்தம், அதமம் என்றார்கள் சாத்திரிமார்.

மத்தியான நேரம் கொடுமையானது. மௌன மானது. காற்றை வெயில் விரட்டிவிடும். ஒழுங்கைகளில் படிந்திருக்கிற புழுதியில் கச்சான் வறுக்கலாம் எனத் தோன்றும். பூவரச மரங்கள் கொடுவெயிலில் வாடித்துவளும். சனங்கள் வெளியில் தலை காட்டவே மாட்டாகள். சொறி பிடித்த நாய்கள் மட்டும் நாவைத் தொங்கப் போட்டபடி இளைத்தவாறு நிழல் தேடி ஒடித்திரியும். 'கர்ர்ர்' எனக் கடூரமாகக் கத்துகின்ற காக்கைகள் நீர் தேடிப் பறக்கும்.

குலம் ஒரு மத்தியான நேரம் பிறந்தான். பிறந்தவுடன் எட்டு இறாத்தல் நிறை காட்டினான். அம்மா இராஜவலியில் துவண்டாள். மயக்கம் தீர நெடு நேரமாயிற்று. காய்ச்சல் ஓய சில நாளாயிற்று.

என்னவோ அம்மாவுக்கு குலத்தைவிட சீலனை மிகவும் பிடித்தது. அவன் அவளை விட வளர்ந்து விட்ட பிறகும், மேலுதடு அரும்பிய பிறகும்...... அவனது கேசங்களை வருடுவதில் அம்மா இன்புற்றாள். ஒரு குழந்தையினது போல மிகவும் மிருதுவான தலைமயிர்.

குலத்துக்கு, மிகவும் முரட்டுத் தலைமயிர், சுருண்டு சுருண்டு இருக்கும். கண்கள் சிறுத்து உள் வாங்கி இடுங்கி இருந்தன. மேனியில் மண்ணெண் ணெய் நாற்றமும் ஒயில் நாற்றமும், வியர்வை வாடையும்

சதாகாலமும் வீசிற்று. அவன் தொழில் அப்படி! குலம் ஒரு மெக்கானிக் ஆகவேண்டி ஆயிற்று, அவனது மாமனைப் போல. நேரங்காலமற்ற வேலை. சில நாட்கள் சேர்ந்தாற் போல வராமல் இருக்க நேர்ந்தது. நேரத்துக்கு உண்ண முடியாமல் போயிற்று. தன்னைக் கவனிக்க நேரமில்லாமல் போயிற்று. அண்ணன் நிறையப் படிக்க வேண்டுமென நினைத்தானோ, என்னவோ? ஓய்வொழிச்சல் இல்லாமல் வேலை வேலை எனப் பறந்தான்.

நினைக்க நினைக்க அம்மாவுக்கு நெஞ்சைப் பிழக்கும்படி நெடுமூச்சு எறிந்தது.

சீலன் ஏன் அப்படிப் போனான்?

அம்மா மெல்ல மெல்ல போரிலிருந்து வைக்கோலைப் பிடுங்கி இழுந்தாள். நாய் அம்மாவிடம் ஓடி வந்தது. கால்களில், 'சில்லென' இருந்த ஈரமூக்கைத் தேய்த்தது. வாலைத்தூக்கி சுழற்றிச் சுழற்றி ஆட்டியது. அம்மா காலால் எட்டி உதைக்க நினைத்தாள்'.

நாயின் கண்களில் நன்றி வழிந்தது. அது சீலன் கொண்டு வந்த நாய். அம்மா அதை உதைப்பாளா? கால்களை மடக்கிக் கொண்டாள்.

'சொதசொத' வென்ற மாரி காலத்தின் சோம்பலான ஒருநாளில் சீலன் அதைத்தூக்கிக் கொண்டு வந்தான். வந்தபோது வெள்ளை நிறமாக இருந்தது. இப்போ பழுப்பு நிறமாக வளர்ந்து விட்டது.

மழைநீர் ஓடிக்கொண்டிருந்த தெருக்களில் மிகவும் நனைந்து போய் அனுங்கிய குரலில் கத்தியபடி நடுங்கிக் கொண்டிருந்தது. யாருக்கும் தோன்றாத இரக்கம் அவனுக்குள் சுரந்தது. தூக்கிக் கொண்டு வந்தான். ஓலைப் பெட்டியால் கவிழ்த்து மூடினான். பெரிய காரியவாதி போன்ற பாவனையுடன் அம்மாவுக்குச் சொன்னான்.

" வளர்ந்தாப் பிறகு நல்லது..... மரநாய் வராதம்மா.... கோழிகளுக்குக் காவலாயிருக்கும்."

தினமும் செங்காரிப் பசுவில் பால் கறந்து ஊட்டினான். அவனுக்குத் தெரியும், எந்தப் பசுவின் பால் ருசியும், கொழுப்பும் மிக்கதென்று.

அம்மா மாடுகளை நோக்கிப் போனாள். நாய் அம்மாவின் கால்களைத் தடுக்கப் பண்ணி விளையாடியபடி பின்னே ஓடியது.

வாலிபத்தில் துள்ளுகிறது நாய். கொழுப்பேறி உடல் பளபளக்கிறது. நன்றாகத் தான் கொழுத்து விட்டது. சீலன் கூட கொழு கொழு என்றுதான் இருந்தான். திரட்சியான கன்னங்களும், காந்தக் கண்களுமாக.... எவ்வளவு அழகனாக இருந்தான் இந்த அம்மாவின் மகன்!

அமைதியாக இருந்தான். ரேடியோவைக் கூட சத்தமாக முடுக்கி விடமாட்டான். அவனைச் சுற்றி மட்டுமே இசை இருக்கும். இரண்டாம் பேரைத் தொந்தரவு செய்ய அவன் விரும்புவதில்லை. அவன் படிக்கும்போது கூட ரேடியோ முன்னாலிருந்து ஏதாவது முணுமுணுத்துக் கொண்டிருக்கும். சைக்கிளைத் துடைக்கும் போதும் பாடியவாறு பார்த்துக் கொண்டிருக்கும். ஒவ்வொரு நாளும் உதயகாலத்தில் 'பளபள' மென மின்னுமாறு சைக்கிளைத் துடைப்பான். காற்று இருக்கிறதா எனக் கவனித்து திருப்தியுடன் தலையைக் குலுக்குவான். எதிலும் ஒரு ஒழுங்கு அவனிடம் இருந்தது.

அவன் போன பிறகு எல்லாமே ஒழுங்கற்றுப் போயிற்று. ரேடியோ அநேகமாக மௌனித்து விட்டது. அந்த வீடே ஜீவனற்றுப் போயிற்று. சைக்கிள் சீந்துவாரற்று தூசி படிந்துபோய், ரயர்கள் காற்று இறங்கி மெலிந்துவிட, சுவரோடு சாய்த்து வைக்கப்பட்டு விட்டது.

குலத்துக்கு சைக்கிள் அவசியமென்றில்லை. அவனுக்கு நேரத்துக்கு ஒரு வாகனம் காரோ, வானோ, மோட்டார் பைக்கோ..... காற்றைக் கிழித்துக்கொண்டு வருபவனென வந்து நிற்பான்.

சீலன் போன பிறகு இந்த வீட்டில் முரட்டுத்தனமும் மௌனமும், அம்மாவின் ஏக்கப் பெருமூச்சுகளும் மட்டுமே மிஞ்சிநிற்கின்றன. மகளோவெனில் மிகவும் சின்னவள். புரியாத பேதை அழகிய சிறு மொட்டு.

சீலன் ஏன் வீட்டை விட்டுப் போனான்?

அம்மா நன்றாகவே கவனித்தாள். சில நாட்களாக சீலன் சரியாகவே இல்லை. பரீட்சை வேறு நெருங்கிக் கொண்டிருந்தது.

எதையோ குறித்து தீவிரமாகச் சிந்தித்துக் கொண்டிருப்பதாகத் தோன்றியது: எதையோ குறித்து மிகவும் கவலை கொள்பவனாகவும் தெரிந்தது.

பரீட்சையை நினைத்துக் கலவரப் படுகிறானோ? ஏன்,நன்றாகத்தானே படித்தான்!

பிடிப்பில்லாதவன் போலக் காணப்பட்டான். அம்மாவை நிமிர்ந்து பார்ப்பதைத் தவிர்த்தான். வாய்க்குள் ஏதோ முனகிக் கொள்பவனாய் தலையை அடிக்கடி குலுக்கினான். இரவு நேரங்களில் நித்திரையைத் தொலைத்து விட்டான். புரண்டு புரண்டு படுக்கின்ற அரவங்கள் கேட்டன. காலை நேரங்களில் அவன் சைக்கிளைத் துடைப்பதில்லை. ரேடியோவை மீட்டுவதில்லை. ஆம்! ரேடியோவை அவன் மீட்டுவதாகத் தான் அம்மா இவ்வளவு காலமும் எண்ணினாள். ரேடியோவில் இருந்து அவனது இனிய சாரீரமே மிதந்து வருகிறது போல...... உலகின் இனிய வஸ்துகள்யாவும் அவனுக்காகவே படைக்கப்பட்டிருப்பதென...... அவன் தொட்டதெல்லாம் துலங்கும் என...... அவனுக்காக எங்கோ ஒரு அரிய நங்கை வளர்ந்து வருகிறாள் என..... அவர்கள் அம்மாவுக்கு அழகிய, மதலை குதம்பும் பேரக் குழந்தைகளைப் பெற்றுத் தருவார்கள் என.....

சீலனோ எனில், சில நாட்களாக ஏனோ தானோ என மாறி விட்டான். பரீட்சை எழுதப் போனான். மற்றப் பையன்களிடம் காணப்பட்ட ஆர்வமோ பரபரப்போ அவனிடம் காணப் படவில்லை. அம்மா அவனை ஏதும் கேட்கவில்லை. அவளது இனிய குழந்தையைத் தொந்தரவு செய்ய அவள் விரும்பவில்லை. எங்காவது காதல், கீதல்..... என்று ஏதாவது? அவனாகவே சொல்லட்டும் என விட்டு விட்டாள்.

பரீட்சை நடந்து கொண்டிருந்தது. சீலன் வரவர மிக வெளிறினான். முகத்தில் ததும்புகிற ஜீவகளை எங்கே போயிற்று. அம்மாவுக்கு ஒன்றுமே புரியவில்லை.

சீலன் அன்று வெகு சீக்கிரமே எழுந்தான். மிக நீண்ட நேரம் எங்கோ கவனமாக பல் துலக்கினான். தன்னுணர்வற்றவன் போல உலவினான். 'பளிச்' சென அம்மா பெருக்கி விட்டிருந்த முற்றத்தில் அவனது சீரான காலடிகள் பதிந்தன. அம்மா மிகவும் அதிசயப்பட்டாள்.

" நேரமாகுதெல்லே மேனே..."

சரியாகச் சாப்பிடத்தானும் இல்லை. சைக்கிளில் ஏறி உட்கார்ந்தான். வழமை போல் ஒரே தாவலில் ஏறிப் பறந்து விடவில்லை. மிக நிதானமாக ஏறி உட்கார்ந்தான். காற்றை அளப்பவனைப் போல் சுற்றிலும் பார்வை ஓட்டினான்.

" போயிட்டு வாறன் அம்மா"

"வடிவாக் கடவுளை நேர்ந்து கொண்டு போ....."

பிறகும் ஏன் நிற்கிறான்?

" நேரமாகு தெல்லே......"

" நான் போறன் ..... " மொட்டையாக முணுமுணுத்தான்.

மெல்ல மெல்ல ஒரு கிழவனைப் போல உழக்கிக்கொண்டு போனான். அம்மா அவன் பின்னாலேயே போனாள். தெருவில் இறங்கி நின்றுகொண்டு அவன் போவதைப் பார்த்தாள். முடுக்கால் திரும்பி மறையுமுன் 'சட்' என ஒரு தரம் திரும்பிப் பார்த்தான்.

அம்மா உள்ளே வந்தாள். சற்று நேரம் திண்ணையில் உட்கார்ந்தாள். பிறகு தலைக்கு எண்ணெய் பூசி சீவி முடிந்துகொள்ள நினைத்து எண்ணெய்ப் போத்தலைத் தேடினாள்.

வாசலில் யாரோ சைக்கிளில் வந்து நிற்பதைப் போல உணர்ந்தாள். எட்டிப் பார்த்தாள்.

சீலன்!

என்னவாயிற்று இன்று இவனுக்கு?

மீண்டும் சீலன் உள்ளே வந்தாள். எதையாவது மறந்துபோய் விட்டுவிட்டுப் போனானோ?

திண்ணையில் ஏறி அமர்ந்தான். முகம் செத்துப்போய் இருந்தது.

" ஏன் மேனே தலையிடிக்குதோ... "

" சாய் சாய்.... "

குனிந்து நிலத்தைக் கீறவாரம்பித்தான்.

" இரு கோப்பி போட்டுத் தாறன்..."

" ........ "

" இண்டைக்குப் பாடம் உனக்கு ஓடாதோ?"

அசிரத்தையாகத் தலையைக் குலுக்கினான்

" அப்ப ஏன் ஒரு மாதிரியாய் இருக்கிறாய்?"

" ....... "

" காசு ... கீசு ஏதாவது வேணுமோ? "

சிரித்தான். இந்த அம்மா எவ்வளவு அப்பாவி?

அம்மா அவசரமாகக் கோப்பி கொண்டு வந்து கொடுத்தாள். வாங்கினான். இல்லை, பறித்தான்! அவனது ஆவலும் பரபரப்பும் அம்மாவை வியப்பி லாழ்த்தின. வாங்கும் போது அம்மாவின் கைகளை அவன் விரல்கள் தீண்டின. என்றுமில்லாத அழுத்தம் அவ்விரல்களில் இருந்தது. உள்ளங்கைகள் பிசுபிசுத்து வியர்த்திருந்தன.

"தங்கச்சி எங்கை அம்மா.....? "

" ப்ச்... உங்கை தான் எங்கையாவது போயிருப்பாள்,"

" ........"

" ஏன் ?"

" சும்மா தான்"

" அவளைப் பார்த்துக் கொண்டு நில்லாமல் வெளிக்கிடு.... நேரம் போகுது...."

ஏதோ ஒரு உறுதியுடன் விருட்டென எழுந்தான். விறைத்து நின்று கொண்டான் சிறு நேரம். ஒரு நொடி அம்மாவின் கண்களைக் கூர்ந்து பார்த்தான். அவளது கண்களுக்குள் எதையோ தேடினான் போலும்.

" நான் .... போ–ற–ன் அம்மா! "

வெடுக்கெனத் திரும்பிச் சைக்கிளில் பாய்ந்து ஏறினான். வெகுவேகமாகப் போனான். ஏதோ ஒரு இனம்புரியாத சக்தி அவனை அம்மாவிடமிருந்து பிரித்து இழுத்துச் செல்கிறதென....

அம்மா கலவரத்துடன் தெருவுக்கு விரைந்தாள். சீலன் முடுக்கால் திரும்பி மறைந்து கொண்டிருந்தான். ஒரு தரம் திரும்பிப் பார்ப்பான் என எதிர்பார்த்தாள். அவன் பார்க்கவில்லை. ஆனால் ஹாண்டிலில் ஒரு சிறு பொலித்தீன் பாய்க் தொங்கிக் கொண்டிருப்பதை அம்மா அப்போதுதான் கவனித்தாள். சைக்கிள் சில்லு தெருநீளத்துக்கு பாம்பு ஊர்ந்து போன சுவடாகத் தடம் பதித்துத் தெரிந்தது.

அம்மாவுக்கு ஒன்றுமே புரியவில்லை, புருவங்களைச் சுருக்கினாள்.

மாலையில் யாவும் புரிந்தன. தயங்கித் தயங்கி ஒரு பையன் சீலனின் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு வந்தான். தலையைக் குனிந்து கொண்டே போய்ச் சுவருடன் சைக்கிளைச் சாத்தினான். அவனை எங்கோ பார்த்த ஞாபகம் காட்டிற்று அம்மாவுக்கு. அம்மாவின் முகத்தைப் பாராமல் எங்கோ வேண்டுமென்றே பார்வையைத் திரும்பினான்.

வெகு ஆயத்தமாக தொண்டையைச் செருமிச் சரிபண்ணிக் கொண்டான்.

" சீலன் ... இதை.... இஞ்சை கொண்டு வந்து விடச் சொன்னவர்...."

"ஆங்!.... சீலன் எங்கையப்பு .... "

" ......"

" ஐயோ ! என்ரை பிள்ளை......"

அந்தக் குரலின் அவலம் பையனைத் துரத்தியது. தலையைக் குனிந்தவனாய் விடுவிடென விரைந்து போனான்.

அம்மா பதைத்தாள் கிரீச்சிட்டாள்.

" சீலன் எங்கையப்பு ....."

பையன் பின்னே தட்டுத்தடுமாறி ஓடியபடி அம்மா கேட்டாள். அவன் பதில் சொல்ல முடியாமல் ஓடத் தொடங்கினான்.

" சீலன் எங்கையப்பு ....."

இலேசாக குளிர்ந்துபோய் தன்னைக் கடந்துபோன காற்றை, அம்மா கேட்டாள் அது மௌனமாகப் போனது.

இவ்வாறான எத்தனை அன்னையரின் சோகங்களை அது பார்த்திருக்கிறது. அது பேசாமல் போனது

" ஐயோ, என்ரை சீலன் எங்கை....."

சிவந்து மின்னிக் கொண்டிருந்த அந்திவானை அம்மா கேட்டாள்,

இவ்வாறான எத்தனை சீலன்கள் அதன் கீழ் உள்ளனர். அது பேசாமல் கண்ணை மூடிற்று.

" சீலன் எங்கை?"

அவளுக்குத் திருப்தியான பதிலைத் தர ஒருவரும் இல்லை,

" சீலன் எங்கை?"

அம்மாவின் பரிதாபமான அக்கேள்வி ஊர் மேல் ஓங்கி அடித்தது. அம்மாவைச் சுற்றி ஊர்ப்பெண்கள் ஒவ்வொருவராகக் கூடத் தொடங்கினார்கள்.

அவர்களுக்குப் புரிந்தது சீலன் எங்கே போனான் என்று! இவ்வாறான எத்தனை கதைகளை அவர்கள் அறிந்திருக்கின்றனர். அம்மாவை ஆதரவாக உள்ளே கூட்டிப் போயினர்.

பிறகு

அந்த எளிமையான சிறிய வீட்டின் ஆனத்த வாழ்வும் அவனுடன் கூடப் போய்விட்டதாய்.....

வெறுமை.

**மா**லை நேரங்களில் அம்மா ஊரை நீங்கித் தூரே இருக்கின்ற வயல்வெளிகளிலும், பனங்கூடல் களுக்குள் தனித்துக் கிடக்கின்ற திடல்களிலும் புல் செதுக்கிக் கொண்டு வரப் போவாள். முழுத் தூரமும் இளைத்து, இளைத்து முதுகொடியச் சுமந்து வந்தாள்.

அவள் பாரத்தை மாற்றிக்கொள்ள யாரும் இல்லை!

அவள் பாதி வழியில் வரும்போதே முருகன் கோயில் மணி சிணுங்கிக் கேட்கும். அவளால் வேளா வேளைக்குப் பூசை காணப்போக முடியவில்லை. அவள் போகும்போது கோயில் நிசப்தமாக இருளில் மூழ்கி இருக்கும். பூசை முடிந்த போனதின் தடங்களாக, சிந்திக் கிடக்கின்ற சில மலர்களும்.... மெல்லமெல்லக் காற்றில் கரைந்து கொண்டிருக்கின்ற கற்பூர வாசனையும் ... முணுக்கென எரிகின்ற ஒரு சிறு தூண்டாமணி விளக்கும்.... இழுத்துப் பூட்டிப்பட்டிருக்கிற சித்திர வேலைப் பாட்டுடன் கூடிய கனத்த கதவும்.....

அம்மா வாசலில் நின்று தனியே தொழுதாள். தனது அருமையான புதல்வனின் நலத்துக்காக அம்மா தினமும் தனியே நின்று உருகினாள்.

வீட்டுக்குத் திரும்பிவரும் நேரங்களில் மாடுகள் பின்புறத்தில் ஒன்றையொன்று கொம்புகளால் குத்தி விரட்டியபடி துள்ளித் திரியும். கண்ட இடத்திலெல்லாம் குளம்புகளால் உழக்கிய அடையாளங்களும்.... சாணியும்....

அம்மாவே ஒவ்வொன்றாக இழுத்து வந்து கட்டைகளில் கட்டிடவேண்டியிருந்தது.

கோழிகள் பூவரச மரங்களில் குடிபுகப்பழகின. அம்மா கற்களை எடுத்து வீசுவாள். " சூ" என விரட்டுவாள். நிசப்தமான முன்னிரவு அவற்றின் கொக்கரிப்புக்களாலும், சிறகடிப்புக்களாலும் நிம்மதி இழந்து தவிக்கும்.

அம்மாவே தனியாக, அவற்றைக் கூடுகளில் அடைக்கவேண்டி இருந்தது.

புகை படிந்துபோய் மங்கிய ஒளி சிந்தும் ஒரு சிறு விளக்கு, மேசையின் மீது சீலனின் புத்தகங்கள், ஒரு சைக்கிள் மௌனமாகிவிட்ட ஒரு ரேடியோ. அருகிலே மகள் அமர்ந்திருப்பாள். அழகிய சிறு மொட்டு. வயதுக்கு மீறிய குருட்டு யோசனைகள். கொட்டக் கொட்ட விழித்தபடி தனிமையில் உட்கார்ந்திருப்பாள். பாவம் !

அந்த அருமையான மாலைநேரத் தேநீர் அம்மாவுக்கு பிறகு கிடைக்கவேயில்லை.

அம்மா வரவர மெலிந்தாள். கண்களைச் சுற்றிக் கருவளையங்கள் தோன்றின. நடை வரவரத் தளர்ந்தாள். முன்புபோல உற்சாகமாக வேலைசெய்ய முடியவில்லை. அம்மா வயோதிபத்தை நோக்கி மெல்ல மெல்ல போய்க்கொண்டிருந்தாள்.

இரவு நேரங்களில் நித்திரையின்றி வாடுவாள். புரண்டு புரண்டு படுப்பாள். அலுத்துப்போய் எழுந்து உட்கார்வாள். ஏதோ ஏதோ விபரீத எண்ணங்கள் தோன்ற பெருமூச்சுகள் விடுவாள்.

குலத்தைப் பற்றிய அம்மாவுக்கு வரவர ஒன்றும் புரியவில்லை. எப்போதாவது மூன்று நான்கு நாட்களுக்கொருமுறை வருவான். அம்மா அரைத் தூக்கத்தில் அவஸ்தையுடன் புரளும்போது கன வேகத்தில் வந்த ஒரு வாகனம் வாசலில் நின்று ஒருதரம் உறுமி ஓயும். குலம் ' திமுதிமு' வென உள்ளே வருவான்.

அம்மாவுடன் ஒரு வார்த்தைகூடப் பேசாமலே.... அம்மா முகத்தைச் சரியாக ஏறிட்டுக்கூடப் பார்க்காமலே ...... கைகளில் பணத்தைத் திணிப்பான். சேட்டைக் கழற்றிக் கண்ட இடத்தில் எறிவான். ஓலைப்பாயை விரித்து, தலையணைகூட இன்றிப் படுப்பான். வலிய கரங்களை நெற்றியின் மீது அழுந்தப் போட்டபடி.... கால்களை ஆட்டியபடி .... மயிரரும்பும் மார்புகள் விம்மித் தணிய ஒரு நொடியில் தூங்கிப் போவான்.

இப்போ தூங்கிக் கொண்டிருக்கிறானே, அது மாதிரி ஒரு காட்டுப் பிறவி!

இப்போ,

குண்டுச் சத்தங்கள் அடிக்கடி கேட்கின்றன. குண்டுச் சத்தங்களைக் கேட்டவுடன் அம்மா நடுங்குவாள். கண்கள் பீதியால் விரியும், அடிவயிறு குலுங்கும்.

" அவர்கள்" அடிக்கடி ஊர்களைச் சுற்றி வளைத்தனர். கனரக வாகனங்களின் உறுமலைக் கேட்டவுடன் அம்மா பாதி உயிரற்றுப் போவாள். நீட்டிய துப்பாக்கிகளுடன் " மகன் எங்கே?" என உறுக்கியபடி அவர்கள் வரும்போது – துப்பாக்கிச் சனியன்களில் குத்திக் கொண்டு போகும் பாவனையில் பிள்ளைகளை அவர்கள் வளைத்துக் கூட்டிச் செல்லும்போது– அம்மா படும் சஞ்சலம் சொல்லி மாளாது.

" கடவுளே! ..... நான் சாக முதல் என்ரை பிள்ளையை ஒருக்கால் கண்ணிலை காட்டு.."

ஊரில் தினமும் இரவுநேரங்களில் குண்டுச் சத்தங்கள் கேட்கின்றன. அம்மாவின் காதுச் சவ்வுகள் கிழிந்து விடுமாற்போல் ' கிண்' என வலிக்கின்றன. நெஞ்சு நீரற்று வரண்டு போய் விடுகின்றது.

ஓ ! இந்த இரவுகள் மிகவும் கொடியன.

அம்மாவுக்கு மிகவும் பரிச்சயமான அந்த வயல் வெளிகளிலே, பனங் கூடல்களுக்குள் தனித்துக் கிடக்கும் திடல்களிலே ' பொடியன்கள்' குண்டு வெடிக்கவைத்துப் பழகுகின்றார்கள் என ஊர்ப் பெண்கள் அம்மாவிடம் சொல்லினர்.

சீலனும் அவர்களுள் ஒருவனாக இருக்கலாமோ? அம்மா பெரும் பீதியுடன் எண்ணினாள். ஆனால் சீலனைக் கண்டதாக ஒரு நாய்கூட அம்மாவிடம் சொல்லவில்லை.

அவன் எந்த ஊரில் குண்டு வெடிக்கவைத்துப் பழகிறானோ? அம்மா பிற ஊர்களை அதிகம் அறியாள். இந்தச் சிறு குடிசை வீடும்.... முருகன் கோயிலும்...புழுதி பறக்கின்ற ஒழுங்கைகளும்.... பனங்கூடல்களும்.... திடல்களும்...... மாடுகளும்... கோழிகளும் தான் அம்மாவின் உலகம். அவளது பிள்ளைகளே அவளீட்டிய ஈடற்ற செல்வம்.

## 2

இன்று அடிக்கடி குண்டுச் சத்தங்கள் கேட்கின்றன. ஒவ்வொரு சத்தத்திற்கும் சீலனின் நினைவு அம்மாவுக்குள் கனதியாக ஏறிற்று.

குலம்கூட நாலைந்து நாட்களாகவே வீட்டுக்கு வரவில்லை. இன்றாவது அவன் வருவான் என அம்மா மிகவும் ஆசைப்பட்டாள்.

இவன் என்ன பிள்ளை? வீட்டுக்கு வருவதே குறைவு. வந்தவுடன் விழுந்து படுக்கிறான்.

"அம்மா..... பசிக்கிது " என ஒரு வார்த்தை ! ம் ஹூம்.

பசி என ஒரு பிள்ளை கேட்டாலே தாயின் வயிறு நிறைந்து விடுமே. இது கூடப் புரியாத ஒரு காட்டுப் பிறவி.

எங்கேதான் இவன் சாப்பிடுகிறானோ?

இன்று குலம் கட்டாயம் வருவான் என எண்ணினாள் அம்மா. தூங்காமல் விழித்திருந்தாள். திண்ணைக் குந்தில் கால் நீட்டி உட்கார்ந்தாள்.

இன்று மங்கிய நிலவு வெளிச்சம் இருக்கிறது. சந்திரனின் முகம் ஒரு அழகிய பெண்ணின் நெற்றி போலத் தெரிகிறது. வெள்ளை மேகங்கள் வேகமாக வானில் திரிவதை அம்மா பார்த்துக்கொண்டிருந்தாள். பூவரசமிலைகள் மங்கிய நிலவொளியில் பளபளத்துத் தெரிகின்றன.

அம்மா மட்டும் தனித்திருந்தாள். விளக்கின் சிம்னி புகை படிந்திருந்தது. மகள் அமைதியாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். மாடுகள் மூச்சு விடும் சத்தத்தை, கோழிகள் குறுகுறுப்பதை நாய் மூச்சுவாங்க அங்கும் இங்கும் ஓடுவதை, நிலத்தைப் பிராண்டுவதை.... அம்மா பார்த்துக் கொண்டிருந்தாள்.

சிள்வண்டு ஒன்று கீரிச்சென குரலெடுத்து அலற ஆரம்பித்தது. நாய் காரணமற்றுப் பலமுறை குரைத்தது. நிலவைக் கண்டு அது குரைப்பதாக எண்ணினாள்.

செங்காரிப்பசு வேதனையான குரலில் கதறியது. ' எதுவோ அதைத் துன்புறுத்துவதாகத் தோன்றியது. அம்மாவால் எழுந்து பின்புறம் போக முடியவில்லை. ஆடாமல் அசையாமல் உட்கார்த்திருந்தாள்.

நடுநிசியின் மணத்தையும், உருவத்தையும், சத்தத்தையும் அம்மா உன்னிப்பாகக் கவனித்தாள். எங்கோ புல்லாந்தி மலர்ந்திருக்க வேண்டும். குரக்கன் பிட்டு வாசனை மூக்கைக் கமறச் செய்கிறது. புடையன் பாம்பு இரையெடுக்கின்ற போதும் இதே வாசனை! வேலி சரசரத்தது. உடலெங்கும் கபடான அழகுமிக்க முத்திரைகளைப் போர்த்தபடி கொடிய விஷமுடைய புடையன் பாம்பு, வழுவி வழுவி வேலிக்குள் ஊர்கிறதோ?.... அம்மாவுக்கு ஒரே பயம்!

குலம் எப்போது வருவான்? அவன் கட்டாயம் வரவேண்டும் என அம்மா முருகனை அடிக்கடி வேண்டினாள்.

அடிக்கடி குண்டுச் சத்தங்கள் கேட்கின்றன. நிலமும், காற்றும், வானும் அதிர்கின்றன. அடிவயிறு குலுங்கிறது.

சிறுவயதில், இருளைக் கண்டு பயந்து அம்மாக்கள் பக்கத்திலேயே ஒட்டியபடி படுத்திருந்த புதல்வர்கள் யாருமற்ற வயல்வெளிகளிலே, பிசாசுகளும் உலவத் தயங்கும் நடுநிசி வேளைகளிலே இவ்வாறு திரிய எப்படிப் பழகினர்? இந்தப் பயங்கர சத்தங்களை எவ்வாறு தாங்கிக் கொள்கின்றனர்? இந்த ஆபத்துக்களை எவ்வாறு சிரிப்புடன் ஏற்றுக் கொள்கின்றனர்? இவ்வளவு வேகத்தையும் வெஞ்சினத் தையும் அவர்களின் மனங்களில் விதைத்தது யார்?

"கடவுளே!...... எவளெவள் பெத்த பிள்ளை யளோ.... இப்பிடி வாய்க்கு வயித்துக்கில்லாமல்.."

குண்டு ஒன்று பிசிறடித்த சத்தத்துடன் வெடிக்கின்றது. கேட்டுப் பழக்கமில்லாத வித்தியாசமான வெடிப்பு, மிகவும் வெறுக்கத்தக்க, அருவருப்பான– சத்தம் அரை குறையில் பிரவசமான ஒரு உயிரற்ற முண்டத்தைப் போல.

அம்மாவுக்கு உடல் 'பட்'டென வியர்ந்தது. ஏதோ கெட்ட விஷயம் நடந்தேறியதாக உள்ளுணர்வு சொல்லிற்று.

எழுந்து மேசையை நோக்கிப் போனாள். நடுங்கும் கரங்களால் விளக்கைத் தூண்டினாள். இறங்கி முற்றத்துக்கு வந்தாள். சேலையை இழுத்துப் போர்த்திக்கொண்டு குண்டுச் சத்தம் வந்ததிசையில் பார்த்தாள். நாய் அம்மாவின் காலடியில் நின்றது. வாலைக் கால்களுக்கிடையில் நேராகத்தொங்கப் போட்டபடி செவிகளை வானோக்கி உயர்த்தி எதையோ உற்றுக் கேட்டது. மெல்ல உறுமிற்று. பிறகு வேதனையான குரலில் ஊளையிட்டது. வீட்டைச் சுற்றிச்சுற்றி வேகமாக ஓடியது. அம்மாவின் காலடியில் நிற்பதும்..... பிறகு ஓடுவதும்... கெட்ட சேதியொன்றை அம்மாவுக்கு உணர்த்த அது துடித்தது போலும்!

செங்காரிப்பசு மீண்டும் மீண்டும் கதறியது. சிள்வண்டின் பிலாக்கண ஓசை மிகைப்படக் கேட்கலாயிற்று. குரக்கன் பிட்டு வாசனை எங்கும் நீக்கமற நிறைந்தது.

அம்மா சோர்ந்துபோய், துடிக்கும் நெஞ்சுடன் முற்றத்தில் உட்கார்ந்தாள். நெஞ்சு மிக வரண்டு விட்டது. தொண்டைக் குழிக்குள் கனமான வஸ்து ஒன்று அடைத்துவிட்டது போலத் திமிறித்திமிறி மூச்சுவிட்டாள்.

சீலனை நினைத்து நினைத்து ஏங்கினாள். குலம் இன்றாவது வருவான் என்ற நம்பிக்கையும் பொய்த்தது. இரவு மிகவும் முற்றி அம்மாவைச் சுற்றிக் கனமாகப் படிந்தது, துன்பம் தரும் குரலில் ஏதோ சொல்லிற்று.

சற்றுத் தூரே போகும் ரோட்டில் ஒரு வாகனம் விரைந்து போகும் சத்தம். ஆபத்தான நோயாளியை யாரோ சிலர் அவசர அவசரமாகச் சுமந்துகொண்டு காப்பாற்ற ஓடிக் கொண்டிருப்பதாக.........

எங்கோ ஏதோ பிசகு நடந்துவிட்டது.

கோழி ஒன்று பரிதாபமாகக் குழறுகிறது. மரநாய் பிடித்திருக்க வேண்டும். தீனமாக அந்தச் சத்தம் மெல்ல மெல்லத் தேய்ந்து தேய்ந்து தூரே போய், மறைகிறது. நாய் துரத்திக்கொண்டு ஓடிப்போய் இயலாமையுடன் திரும்பி வருகிறது.

விழிகள் திறந்தபடியே இருக்க அம்மா கனவு கண்டாள்.

வயல் வெளியில் அம்மா நிற்கிறாள். சூரியன் பயங்கரமாகக் காய்ச்சுகிறான். மழையும் பெய்கிறது. வெம்மையாக அம்மா உடலைப் பொசுக்கிற்று மழைநீர். அம்மா ஓடுகிறாள். இழைத்து இழைத்து ஊருக்குள் நுழைகிறாள். ஒழுங்கைகளில் வெள்ளம் பாய்கிறது. ஒரு சிவப்பு நூல்போல இரத்த ஓடை ஒன்று வெள்ளத்தில் கலக்கிறது. அம்மா அதன்வழி போனாள். வெகுதூரம்..... வெ–கு–தூ–ர–ம்....... கடைசியில் வந்து சேர்ந்தாள். வீட்டு வாசலில் சீலன் தலையைக் கவிழ்ந்தபடி இருக்கிறான். கண்களிலிருந்து இரத்தம் தாரை தாரையாகக் கொட்டுகிறது! மழைநீரில் கலக்கிறது. விடெங்கும் இரத்தம். நாய் இரத்தத்தை நக்கி நக்கிக் குடிக்கிறது.

கனவில் இரத்தத்தை காண்பது கூடாதே! அம்மா வீரிட நினைத்தாள். இயலாமல் போயிற்று.

குலம் அன்று வரவேயில்லை. அம்மா முழு இரவும் தூங்காமல் விழித்திருந்தாள். அந்தக் கொடிய இரவின் ஒவ்வொரு வினாடியையும் வேதனையுடன் அனுபவித்தாள்.

கிழக்கு வானிலே விடிவெள்ளி காலித்தது. சந்திரனை அது மேற்கு நோக்கி விரட்டிற்று. காகங்கள் துன்பம் நிரம்பிய குரலில், விடிந்து கொண்டிருப்பதைப் பூமிக்குச் சொல்லின. கோழிகள் சிறடித்துக் கொக்கரித்தன, கூவின, முதல் நாள் இரவில் பறிபோன தங்களது தோழனுக்காக அவை அஞ்சலி செலுத்தின. மாடுகள் மடிநிறையப் பால் சுரந்து கனக்கின்ற வேதனை தாளாமல் கன்றுகளை அழைத்தன. செத்த வீட்டிற்கு தலையைக் குனிந்துகொண்டுவரும் ஒருவனைப் போல, சூரியன் மெல்ல மெல்ல உதயமாகினான்.

புரியாத பேதையான மகள் சோம்பல் முறித்தபடி எழுந்து வந்தாள். முற்றத்தில் நாடியில் கையூன்றி உறைந்து போய்விட்ட அம்மாவைப், புரியாத பார்வையால் அளந்தாள். அம்மாவின் ஜீவன் எங்கோ ஓடி ஒளிந்து விட்டது. சிறு காற்றுக்கூட அம்மாவின் பலகீனமான தேகத்தைப் பூமியில் புரட்டி விடும்.

மெல்ல எழுந்து திண்ணையில் கால் நீட்டி உட்கார்ந்தாள். யாராவது ஒரு வேலையற்ற பெண் அம்மாவைத்தேடி வரமாட்டாளா? கேவும் குரலில் அவளிடம் தன் துன்பங்களைக் கொட்டி அம்மா ஒரு பாட்டம் அழுது ஓயமாட்டாளா?

ஒருவரும் வரவில்லை. பதிலாக மகள் பள்ளிக்கூடம் போக வேண்டியிருந்தது. மாடுகளை அவிழ்த்து மேய்ச்சலுக்குத் துரத்த வேண்டியிருந்தது. கோழிகளைக் கவனித்துக் கொள்ள வேண்டியிருந்தது.

அம்மா யந்திரகதியில் அவற்றைச் செய்தாள். மூளை வேலை செய்து மரத்துப் போயிற்று. கண்கள் காந்தின. அம்மாவுக்கு உட்காய்ச்சல் கண்டுவிட்டது. நெருப்புக் காற்றுப்போல உஷ்ணமான மூச்சுக்கள் உதடுகளைப் பொசுக்கின. காரணமற்று சில தப்படிகள் நடப்பதும்..... பிறகு நெடுநேரம் ஒரேயிடத்தில் உட்கார்வதும் தூரே அர்த்தமற்றுப் பார்வைபதித்து பெருமூச்சுக்கள் எறிவதும்......

சூரியன் யாருக்கும் பிரிவு சொல்லாமல் மறைந்து போனது. இருளுடன் போரிட்டுத் தோற்றுப்போய் அழுது வடிகிறது நிலவு. காற்று சோர்வாக நடந்து போய்க் கொண்டிருந்தது. அம்மாவால் இவற்றைக் கவனிக்க முடியவில்லை.

சீலன் என்ன ஆனான்?

குலம் ஏன் நாலைந்து நாட்களாக வரவில்லை? அம்மா மனத்தில் கேள்விகள் மாறிமாறி எழுந்தன. ஒன்றை ஒன்று துரத்தின.

தொடர்ந்து மூன்றுநாட்களாக குண்டுச் சத்தங்கள் கேட்கவில்லை அச்சமூட்டும் பேரமைதி ஊர்மேல் கவிந்தது. மூன்று நாட்களும் அம்மாவால் ஒரு வாய் கூட உண்ணமுடியவில்லை. ஒரே விக்கல்!

நாலாவது இரவு வேகமாக வந்தது.

ஓ! இந்த இரவுகள் மிகவும் கொடியன.

அம்மா திண்ணைக் குந்தில் கால்நீட்டி உட்கார்ந்திருந்தாள். மரஇலைகள் நடுநடுங்கிக் கொண்டிருக்க, காற்று அவற்றைச் சீண்டிவிட்டுப் போய்க் கொண்டிருந்தது. நிலவு மேகங்களுக்கள் பயந்தபோய் ஒளித்துக்கொண்டு அடிக்கொருதரம் எட்டிப்பார்த்து, 'சடக்' எனத் தலையை உள்ளிழுத்துக் கொண்டிருந்தது. ஒழுங்கையில் யாரோ சுருட்டுப் பிடித்துக்கொண்டு போனான் போலும். 'குப் பென சுருட்டின் நாற்றம் வீசிற்று, நாய் சுருண்டுபோய் அம்மா பக்கத்தில் படுத்திருந்தது.

வாகனம் ஒன்று வருவதை அம்மா உணர்ந்தாள். அளவான வேகம். கண்களைக் கூசச் செய்யும் ஒளி வெள்ளத்தை உமிழ்ந்த படி வாசலில் நின்றது. 'ஹோர்ன்' , ஒலித்து, வந்துவிட்ட சேதி சொல்லிற்று.

அம்மா ஆசுவாசப் பெருமூச்சு விட்டாள்.

கடவுளுக்கு நன்றி! குலம் இன்று வீட்டுக்கு வந்திருக்கிறான்!

கதவுகளைத் திறந்து அறையுஞ் சத்தம். குலம் மட்டுமல்ல, வேறும் சிலர் வந்திருக்கவேண்டும், குசுகுசுவெனக் கதைக்கின்ற சத்தம். படலையை மெல்லத் தள்ளித் திறந்தனர். கூட்டமாக வந்தனர்.

யாரோ ஒருவனைக் கைத் தாங்களில் கூட்டிக்கொண்டு வந்தனர். அம்மா பயந்தவளாய் விருட்டென எழுந்தாள். விளக்கைத் தூக்கி உயரப்பிடித்தாள்.

குலம் சோர்ந்துபோய் வந்துகொண்டிருந்தான். அவனைத் தாங்கி அழைத்து வருகின்றனர். வலது கையை ஒருவன் மென்மையாகப் பற்றியபடி வந்தான். மணிக்கட்டுக்குக் கீழே இரத்தம் ஊறிப்போன ஒரு துணிப்பந்து!

ஐயோ! இந்த அம்மாவின் முரட்டுக் குழந்தைக்கு என்னவாயிற்று.

அம்மா அலற நினைத்தாள், முடியவில்லை. நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக்கொண்டது.

அம்மா அசைய நினைத்தாள், முடியவில்லை, பாதங்களை யாரோ ஆணியால் தரையுடன் சேர்ந்து அறைந்தது மாதிரி.

அவர்கள் ஒலைப்பாயை விரித்தனர். தலையணைகளைப் போட்டினர். குலம் பொறுக்க முடியாமல் முனகியபடி சரிந்தான். முகம் மிக வெளிறியிருந்தது. உதடுகள் காய்ந்து தோலுரிந்தி ருந்தன. மிகவும் தாகமாக இருந்தான். நாவால் உதடுகளை நீவினான்.

“ அம்மா.......”

தீனக்குரல் அம்மாவை அழைக்கிறது அம்மாவால் பதில் சொல்ல முடியவில்லை.

மகன் தாகத்தால் தவிக்கிறான். அம்மாவால் அசைய முடியவில்லை.

அவர்கள் கிட்ட வந்தனர். தலையைக் குனிந்தபடி அம்மாவைச் சூழ நின்றனர். ஒருவன் அம்மாவைக் தொட்டசைத்தான். அம்மா இமைக்க மறுக்கும் விழிகளால் அவர்களைப் பார்த்தாள்.

அவர்களை அம்மா அடையாளங் கண்டாள்! நடு நிசிகளில் ..... யாருமற்ற வெளிகளில்.... திரிகின்ற புதல்வர்கள் !!

ஒ குலமுமா இந்த அப்பாவி அம்மாவை இவ்வளவு காலமும் ஏமாற்றித் திரிந்தான்.

“ கோப்பி வச்சுக் குடுங்கோ.....”

அம்மாவின் தோள்களைக் குலுக்கியபடி ஒருவன் சொன்னான்.

அவளுடைய முரட்டு மகன், புரியமுடியாத புதல்வன் கையைத் காவு கொடுத்து வந்திருக்கிறான். ! தாகத்தால் தவிக்கிறான்.

கடவுளே அம்மாவுக்கு கொஞ்சம் பலமளிக்கமாட்டாயோ?

அம்மா எதுவோ கேட்க உன்னினாள். அர்த்தம் குலைந்த பல கீனமான ஒரு முனகல் மட்டுமே வந்தது.

அம்மா அசைய முயற்சித்தாள். பெரும் பிரயாசையுடன் கால்களைப் பெயர்த்தாள். உடல் முழுவதும் மரண வேதனை போலும் நோவெடுத்தது. ஓரடி எடுத்து வைத்தாள். ‘ மொளக் ’ கென ஏதோ சுளுக்கிச் கொண்டது. அம்மா பிருஷ்டம் அடிபடி மல்லாந்து விழுந்தாள்.

அவர்கள் அம்மாவைத் தூக்கினர். ஒலைப்பாயை விரித்தனர். தலையணைகளைப் போட்டனர். பாயில் அம்மாவை மெல்லச் சரித்தனர்.

ஊருக்குள் எப்படித்தான் விஷயம் பரவிற்றோ?

அவசர அவசரமாக மண்ணெண்ணெய் விளக்குகள் மீண்டும் ஏற்றப்பட்டன. ஒவ்வொருவராக ஊர்ப் பெண்கள் அம்மாவின் வீட்டு முற்றத்தில் கூடத் தொடங்கினர்.

“ கையிலையே வெடிச்சிடுத்தாம்....” ஒருத்தி பீதி கவ்விய குரலில் மற்றவரிகளிடம் குசுகுசுத்ததை, அம்மா கனவிற் கேட்பதைப் போலக் கேட்டாள்.

குலத்தைத் திரும்பிப் பார்த்தாள். அரை மயக்கத்தில் கிடந்தான். சொட்டுச் சொட்டாகக் கருஞ்சிகப்பு இரத்தம் தலையணையில் சிந்திக் கொண்டிருந்தது.

முத்து முத்தாக சூடான கண்ணீர் அம்மாவின் கன்னங்களை நனைத்தபடி சிந்தத் தொடங்கிற்று.

முதுகுப் பிடிப்புடன் ஒரு முதியபெண். அவள் வெகு வேகமாகக் கிழவியாகிக் கொண்டிருந்தாள். ஊரில் ஒருவருடனும் அவள் இப்போ பேசிச் சிரிப்பதில்லை.

ஒரு அழகிய சிறு மொட்டு, புரியாத பேதை, வாடிக்கொண்டிருக்கும் பூமரம். அவளது வயதுக்கு மீறின குருட்டு யோசனைகள். கவலைகள், ஏக்கங்கள், தாயின் வேலையில் பாதிக்குமேல் இதன் பிஞ்சுத் தோள்களில் பலவந்தமாக இறக்கிவைக்கப்பட்டது. பள்ளிக்கூடத்துக்கு ஒழுங்காகப் போவதில்லை. போகும் நாட்களிலும் பிந்தித்தான் போகும். ஒரு அழுக்கு யூனிபோமுடன், கலைந்தகேசத்துடன், வாடிய முகத்துடன் கண்களில் பிந்திவிட்டதின் கலவரமும் பயமும் தெறிக்க, மார்பில் புத்தகக் கட்டுக்களை அணைத்தபடி, புழுதி பறக்கும் ஒழுக்கைகள் வழியே ஓட்டமும் நடையுமாக விரையும்.

ஒரு முரட்டு இளைஞன். மணிக்கட்டுக்குக் கீழே அவனது ஒரு கரத்தைத் துணித்து விட்டார்கள். அவனிடம் அடிக்கடி அவன் தோழர்கள் வருகின்றனர். அவன் ஒரு அருமையான மெக்கானிக். மிகவும் மூளைசாலி. அவசியமானவன். ஒற்றைக் கையால் கடுமையாக உழைக்கக்கூடிய அசகாய சூரன். நாலைந்து நாட்களுக்கொரு முறை நடுநிசி நேரம் வீட்டுக்கு வருவான். அவன் முகத்தில் காணப்படும் கடுமையும் ஏதோ ஒரு வெறியும் காண்போரைப் பிரமிக்கச் செய்யும். அவன் ஒரு முசுடு. அதிகம் பேசமாட்டான். வீட்டுக்கு வந்தவுடன் அம்மாவுக்கு பணம் கொடுப்பான். உடனே வீட்டுக்கு வந்தவுடன் அம்மாவுக்குப் பணம் கொடுப்பான். உடனே ஓலைப்பாயை விரித்தபடி தலையணைகூட இன்றித் தூங்கிப்போவான்.

வீடு மிகவும் பழையது. ஒரு சிறு குடிசை. கூரை மிகவும் உக்கிப் போய்விட்டது. முற்றத்தில் எங்கணும் பூவரசமிலைகள் சருகாக குப்பையாகச் சேர்ந்திருக்கும்.

ஒரு நாய். அதைக் கவனிப்பாரில்லை. எலும் பெடுத்துத் தெரிய மெலிந்துவிட்டது. சொறி பிடித்து விட்டது. காதுகளில் உண்ணிகள் படையாகப் பெருகி விட்டன. காதுகள் கீழ்நோக்கி வளைந்து பாரத்தால் தொங்கிவிட்டன. வளவின் ஒரு மூளையில் மண்ணைத் தோண்டிவிட்டுச், சோம்பிப் படுத்திருக்கும். அது குரைப்பதோ, ஓடுவதோ கிடையாது. விரையில் இறந்துவிடும்.

அடிக்கடி இந்த வீட்டுக்கு மாட்டுத் தரகர்கள் வருகின்றனர். கதறக் கதற ஒரு பசுவையோ, கன்றையோ இழுத்துப் போகின்றனர். கால்களைப் பரப்பிக் கொண்டு போக மறுத்து அது கதறும், உதவிக்கு அம்மாவை அழைக்கும். தன் இனத்தை அழைக்கும். பரிதாபமான குரலில் மாடுகள் எல்லாம் சேர்ந்து அழும்.

இரவு நேரங்களில் அடிக்கடி குண்டுச் சத்தங்கள் கேட்கும். மரநாய்கள் கோழிகளைச் குழறக் குழற தொண்டையில் திருகியபடி இழுத்துப்போகும். உயிரை வாட்டும் அத்தீனமான ஓலம் மெல்ல மெல்லத் தேய்ந்து தூரே போய் மறையும்.

அம்மா இப்போ குண்டுச் சத்தங்களைச் சட்டை செய்வதில்லை. அவள் துன்பங்களுக்கும் இழப்புக் களுக்கும் பழக்கப்பட்டவள்.

குலத்தினதும் சீலனினதும் ஜாதகங்களைத் தூக்கிக்கொண்டு பெயர் பெற்ற சாத்திரிமார்களைத் தேடிப் போகிறாள்.

சீலன் புனர்பூச நட்சத்திரம் ராமன் கூடப் புனர்பூச நட்சத்திரம்

அவனும் காடுகளில் வசிக்க நேர்ந்தது! கடலைக் கடக்க நேர்ந்தது! அதர்மர்களுடன் நெடுகலும் போரிட்டுக் கொள்ள நேர்ந்தது!

வெல்ல முடியாது என்ற இறுமாப்பில் தென்னிலங்கையில் மமதை கொண்டிருந்தவர்களை அவனும் வென்றான்!

சாபத்தால் பீடிக்கப்பட்டவர்களுக்கு அவனும் விமோசனமளித்தான்.

அவனும் பேதங்களைக் கடந்தவன். குரங்கும் வேடனும் அவனது தோழர்கள்!

ஓ! ஆயினும் ராமன் பேரில் அன்பு கொண்டவர்கள் அவன் பிரிவால் துன்புற நேர்ந்தது.

தசரதன்!..... கோசலை!.... சீதை!.....

குலம் அத்த நட்சத்திரம், அத்தம் அதமம் என்றார்கள் சாத்திரிமார்.

அவன் ராஜத்துரோகமான காரியங்களில் ஈடுபடுவான் என்றும்......

மிகப் பெரிய கண்டங்களில் மாட்டிக்கொள்ள நேரும் என்றும்.......

மறியல் வீட்டுக்குப் போகின்ற பலன் கூட அவனுக்கு உண்டென்றும்......

கிரகங்கள் யாவும் நீசதிசை அடைந்திருக் கின்றன வென்றும்.........

# கம்ப மலர்

## பதிவியல்

# முன்பும் இனியும்





'நந்தி'

அகில இலங்கைக் கம்பன் கழகம் 1980 ஆம் ஆண்டில் பிறப்பதற்கு முன் ஒரு சிறிய சரித்திரம் உண்டு.

நமது நாட்டில் வள்ளுவருக்கு ஒரு கழகம் உண்டு, அதேபோல் கம்பனுக்கும் ஒரு கழகம் அமைப்பது அவசியம் என்ற கருத்தை முதன் முதலில் கூறியவர் நீதியரசர் கலாநிதி H.W. தம்பையா QC அவர்கள், 1964 இல். யாழ் கோட்டைக்குள் இருந்த அரசாங்க மனையில் அதற்கான ஒரு ஆலோசனைக் கூட்டம் ஏப்ரல் 16 ஆம் திகதி நடைபெற்றது. அதில் நீதியரசருடன் பங்கு பற்றியவர்கள் திரு. K.P. முத்தையா (விடிவெள்ளி) சொக்கன், இந்தக் கட்டுரையாளர். பின்பு 21.04.64 இல் அங்குரார்ப்பணக் கூட்டத்தில் ஒரு **இலங்கைக் கம்பன் கழகம்** உருவானது. வித்துவான் பொன். முத்துக் குமாரன் அதன் தலைவராகவும், திரு. க. சொக்கலிங்கம் (சொக்கன்) பொதுச் செயலாளராகவும் தெரிவு செய்யப் பட்டார்கள். ஒரு வித போஷகர்கள் என்ற தகைமையில் கலாநிதி தம்பையா பெருந்தலைவராகவும், டொக்டர். C. சிவஞான சுந்தரம் (நந்தி) பெருஞ்செயலாளராகவும் தெரிவு செய்யப்பட்டார்கள்.

கம்ப இராமாயண காவியத்தை மக்களிடையே அறிமுகம் செய்வது கழகத்தின் பொது நோக்கமாக இருந்தது; அதற்கான திட்டங்கள் பின்வருமாறு.

கம்பனுக்கு ஆண்டுதோறும் விழா எடுத்தல்.
பொதுமக்களிடையேயும் மாணவரிடையேயும் கம்பனை அறிமுகம் செய்தல்.
பாடபேதங்களை ஆராய்ந்து கம்பராமாயணப் பதிப்பொன்று வெளியிடுதல்.
கம்பராமாயணத்திற்கு நல்லதொரு விளக்கவுரை செய்தல்
இவற்றோடு மற்றைப் புலவர்களையும் அவர்களுடைய படைப்புக்களையும் பரப்புதல்.

கழகம் உடனடியாகச் செயலில் இறங்கியது. இரண்டு மாதங்களில் (27-06-64) **கம்பன்** என்ற 66 பக்க நூலை முத்திங்கள் கொண்டுவரும் நோக்குடன் அது வெளியிட்டது. வித்துவான் க.கி. நடராஜன், பண்டிதர் வ. நடராஜன் அதன் இதழாசிரியர்கள். பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை, பண்டிதை தங்கம்மா அப்பாக்குட்டி, நவாலியூர் திரு. சோ. நடராசன், திரு. வி. செல்வநாயகம் (பின்பு பேராசிரியர்) ஆகிய தமிழறிஞர்கள் கட்டுரைகள் எழுதியிருந்தார்கள். KAMBAN - THE KING OF POETS என்ற கட்டுரையில் நீதியரசர் H.W. தம்பையா, In South India the Kamban Society is doing yeoman's Work. It is nothing but fitting that in Ceylon Such a Society Should Flourish.

It is hoped that all lovers of literature, irrespective of caste, creed or race should join this Society and make it a Success. என்ற வேண்டுகோளை விடுத்திருந்தார்.

**கம்பன்** வெளியீடு அதன்பின் வெளிவரவில்லை. ஆனால் இலங்கைக் கம்பன் கழகம் மூன்று **கம்பன் விழா**க்களை நடத்தியது, 1964,1965.1966 ஆண்டுகளில். 1964 இல் நடைபெற்ற விழாவில் திருக்குறளைச் சிங்களத்தில் மொழிபெயர்த்தவர்களில் ஒருவரான திரு. சார்ல்ஸ் சில்வா பங்குபற்றினார். இரண்டாவது கம்பன் விழா இரு நாட்கள் (27,28.11.65) நடைபெற்றது. அண்ணாமலைப் பல்கலைக் கழக, திராவிட மொழியியற் துறைத் தலைவர் பேராசிரியர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் விசேஷ அதிதியாக வந்திருந்தார். அவருடன் நமது நாட்டு அறிஞர் ஆறு பேர் கருத்துரை வழங்கி னார்கள். பேராசிரியர் வி. செல்வநாயகம் தலைமை தாங்கினார். புலவர்மணி ஏ. பெரியதம்பிப்பிள்ளையின் தலைமையில் **விபுலானந்தக் கவிதைமலர்** வெளியிடப் பட்டது. நல்லூர் தேவஸ்தான வித்துவான், முத்தமிழ் மணி சி.எஸ்.எஸ் மணிபாகவதர் (பின்பு, ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாத தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள்) அவர்களுக்கு **இராமாயண ரசிகமணி** என்ற பட்டம் வழங்கப்பட்டது. மூவர் பாராட்டப்பட்டார்கள்;

இலய ஞான குபேர பூபதி, வி. தெட்சணாமூர்த்தி, கலாசோதி, எஸ். சண்முகநாதன் (சானா), திரு. எம். பி. பாலகிருஷ்ணன் ஆகியோர். மூன்றாவது கம்பன் விழா 1966 செப்றம்பர் 30 இல் ஆரம்பித்து மூன்று நாட்கள் நடைபெற்றது. இந்த விழாவில் மாதர் அரங்கும், மாணவர் அரங்கும் இடம் பெற்றன.

1967 ஆம் ஆண்டு திரு. கா. சி. குலரத்தினம் சொக்கன் அவர்களுடன் இணைச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அந்தவருடம் வித்துவான் பொன். முத்துக்குமாரன் பத்துக் கம்பராமாயண வகுப்புகளை நடத்தினார். ஒரு வகுப்புக்கு திரு. கே. லக்குமணன் விசேஷ விரிவுரையாளராக வந்திருந்தார். 1967 முடிவில் இலங்கை கம்பன் கழகத்தின் வாழ்வும் அமைதியாக முடிந்தது. ஆகவே அதன் வாழ்வு 3½ வருடங்கள் தான்.

இந்த வயதில் வறிய குடும்பங்களில் சில பிள்ளைகள் இறப்பது மருத்துவர் அநுபவம், காரணம் புதிய பிறப்பு; மற்றக் குழந்தை பிறந்ததும் மூத்ததுக்குப் பராமரிப்பும் கரிசனையும் குறையவே, அதன் வாழ்க்கைக்கு இடையூறுகள் வருவதுண்டு; சாவும் ஏற்படலாம். கம்பன் கழகத்திற்குச் சவாலாக வந்த புதிய பிறவி **சேக்கிழார் கழகம்**. பெரிய பதவியில் இருந்த திரு ஸ்ரீகாந்தா, சிவதொண்டன் சூழ்நிலையில் இதற்கு வித்திட அறிஞர்கள், முக்கியமாக சைவ சமயம் சார் பெரியோர் அதனை நாடினர், அதில் முக்கியமானோர் கம்பன் கழக ஆணிவேர்கள். 1968 இல் திரு. ஸ்ரீகாந்தாவைத் தலைவராகவும், திருவாளர்கள் கே.கே நடராஜா, சொக்கன் ஆகியோரை இணைச் செயலாளரா கவும் கொண்டு **சேக்கிழார் கழகம்** பிறந்தது. அது கருவில் உருவாகும் போதே போஷாக்கின்மையால் கம்பன் கழகம் இறந்தது. கம்பன் கழகம் தொடங்கிய காலத்திலேயே அதன் நிர்வாகத்தில் மிகவும் தொடர்பு கொண்ட அதன் பொருளாளர் திரு. K.P. முத்தையா காலமானார்; பெருஞ்செயலாளர் நந்தி; 1965 பிற்பகுதியில் பேராதனை சென்றார்; பெருந்தலைவர் நீதியரசர் தம்பையா 1966 தொடக்கம் உயர் நீதிமன்ற வழக்குகளுக்கு யாழ் வருவது குறைந்து பின்பு நின்றது. இவற்றையும் உப காரணங்களாக நான் கூறுவதுண்டு.

உண்மையில் அடிப்படையான பலவீனங்கள் வேறு. கழகத்திற்குத் தன்னை முழுமையாக அர்ப்பணித்த ஒருவர், செயல் ஆளுமை கொண்ட ஒருவர், கம்பராமாய ணத்தைச் சகல மக்களிடையே ஆய்வின் அடிப்படையில் புதிய கோணத்தில் கருத்து மிளிரக் கூறக்கூடிய ஒருவர் எம்மிடையே அப்போது இருக்கவில்லை. அதாவது, இத்தனை இயல்புகள் ஒருங்கே அமைந்த திரு. இ. ஜெயராஜ் போன்ற ஒருவர் இருக்கவில்லை. அத்துடன் பக்கபலமாக இலக்கிய ஞானமும் மேடையில் வாதாடும் வல்லமையும் கழக முகாமைத்துவத் திறனும் கொண்ட இளைஞர்–நடுத்தர வயதினர் இருக்கவில்லை. திரு. ஜெயராஜ் அவர்களுடன் சேர்ந்த திருவாளர். திருநந்தகுமார், குமாரதாசன், ரட்ணகுமார், சிவகுமார், இ. ரகுபரன், திருமுருகன் முதலியோரை மனதில் வைத்தே இதைக் குறிப்பிடுகிறேன்.

அந்தக் காலத்தில் கதாப்பிரசங்கம் மூலம் இராமாயணத்தை மக்களுக்கு அறிமுகம் செய்த மணி பாகவதர் அவர்களைக்கூட கழகத்தின் அங்கத்தவராகச் சேர்க்கவில்லை. இத்தகைய குறைபாடுகளினாலேயே பெரியோர்கள் தோற்றுவித்த மன்றங்கள், கழகங்கள் இறந்தன. ஆகவே, சொக்கன் யாழில் இருந்து உத்தியோக மாற்றம் பெற்றுப்போக, சேக்கிழார் கழகமும் தனது எட்டாவது வயதில், 1976 இல், நலிந்தது வியப்பில்லை.

புதிய, **அகில இலங்கைக் கம்பன் கழகம்** 1980 இல் தோன்றியது. இப்போது 15 ஆவது வருட வயது. இலக்கிய முயற்சியில் அர்த்தமுள்ள சரித்திரம். உங்கள் கையிலிருக்கும் நூல் அதனை நன்கு எடுத்துரைக்கும்.

அகில இலங்கைக் கம்பன் கழகம் அதன் குறிக்கோள் **"கம்பன் புகழ்பாடிக் கன்னித்தமிழ் வளர்ப்போம்"** என்பதாகும். கடந்த 15 வருடங்களாகக் கம்ப காவியத்தின் புகழ், அழகு, விழுமியங்களை அநேக பரிமாணங்களில் பேசி (பாடி) வாதாடி மக்களை விழிக்கச் செய்த பெருமை இந்தக் கழகத்தைச் சாரும். அத்துடன் தமிழுக்கு அப்பால் தமிழரை சான்றோர் என்றும் கலைஞர் என்றும் இனம் கண்டு பெருமைப்படுத்திய தாராள சேவையும் புரிந்திருக்கின்றது; சிகரம் வைத்தது போல் மகர யாழ் விருதை சர்வதேச விருதுகளுக்கு நிகராக அமைத்துள்ளது. மகர **யாழ் விருது**வின் தேவையையும் தாக்கத்தையும் காலம் தான் நிர்ணயிக்கும். இந்த வருடம் அதன் பண மதிப்பு ஒரு லட்சமாக உயர்த்தப்பட்டுள்ளது. தமிழரைப் பொறுத்தவரை இது ஒரு, வாசன், சாதனை. இந்தப் பணம் தமிழ் மொழியின் வளர்ப்புக்கு உபயோகித் திருக்க முடியுமா என்பது கட்டுரையாளர் மனத்தில் தோன்றும் கேள்வி. சாதனைகளைப் புரியும் கழகத்தினர் தரும் விடை சரியாக இருக்கும் என நம்பலாம்.

இனி, கம்பன் கழகத்தின் வளர்ச்சிக்கு ஆலோசனைகளை அதன் அமைப்பாளர் அவ்வப்போது கேட்பதுண்டு, அகில இலங்கைக் கம்பன் கழகம் கம்பனோடு ஒதுங்கவில்லை, அதன் செயற்பாடு ஒரு தமிழ்க் கழகம் என்ற நிலையில் விரிவடைந்துள்ளது.

உலகில் தமிழ் மக்களை இனம் காணும் ஒரே தனித்தன்மை தமிழ் மொழிதான். தமிழ் மொழியின் பேச்சு, எழுத்து இவற்றின் தரத்தில் தமிழனின் பண்பாட்டு உயர்வும், தமிழ் மொழியின் உபயோகப்பரவலில் தமிழனின் வியாபகமும் தங்கியுள்ளன. ஆகவே, கழகம் தமிழ் மொழியின் இன்றைய நிலையையும் வருங்காலத் தேவைகளையும் தகுதியோரைக் கொண்டு ஆய்வதற்கு வழி வகுத்தல் வேண்டும். இந்த ஆலோசனையைக் கவனிப்பது பயன் தரக்கூடியது. கழகத்தில் அதற்கான ஒரு அங்கம் இருக்கலாம். ஆழ்ந்த ஆய்வுக்கான பொருள்களையும் பிரச்சினைகளையும் தேவைகளையும் கண்டு கொள்வதற்கு முதற்கண் பரவலான சமூகவியல் அடிப்படையில் பல ஆய்வுகள் வேண்டப்படும். பலதரப்பட்ட மக்களிடையே நடத்தப்படும் இந்த ஆய்வுகள் பல கேள்விகளை எழுப்பும். சிலவற்றை இப்போதே, அநுபவ அறிவைக் கொண்டு, ஆய்வின் அனுமானமாகக் கேட்கமுடியும்:

* தமிழனின் பேச்சு மொழி வரவர பல ரகக் கொச்சை மொழியாக மாறுவதற்குக் காரணம் என்ன?
* கொச்சை உச்சரிப்புகளை எழுத்தில் மண் வாசனை என்ற அழகு சூட்டி இலக்கியத் தகைமை கொடுக்க முயல்வதில் காணக்கூடிய யதார்த்தம் எவ்வளவு? ஆபத்து எவ்வளவு? இந்த முறை புதிய சிறு கிளை மொழிகள் உருவாகவழி வகுக்குமா?
* தமிழ் நாட்டில் தமிழ் பேசப்படும் போது ஆங்கிலச் சொற்கள் அநியாயமாகக் கலப்பதன் விகிதம், காரணம், தாக்கம் என்ன? (ஆய்வு சம காலத்தில் தமிழ் நாட்டிலும் செய்ய வேண்டி வரும்).
* தற்காலத் தமிழ்ச் சிறுகதை, நாவல் முயற்சிகள் உலகத் தரத்தை அடையாததற்கு சொல் வறுமை காரணமா?
* சில (? பல) தமிழ்ச் சிறுகதைகள் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்படும் போது ஆங்கில உருவம் மூலப் படைப்பிலும் பார்க்க சொற்பொருத்தத்திலும் செறிவிலும் விஞ்சி இருப்பது ஏன்?
* கம்பன் போன்ற எழுத்தாளர் கையாண்ட சொற்பரப்பு எவ்வளவு? தற்காலத் தேவைக்கு ஆளக்கூடிய சொற்கள் எவை?
* தனித் தமிழின் எல்லைகள் எவை?
* தமிழில் நிர்வாக, விஞ்ஞான, வியாபார, சட்ட சொற்கள் தமிழ் பேசும் நாடுகளில் ஒன்றாக அமைப்பதற்கு வழி வகைகள் என்ன?

இப்படியான நடைமுறைக் கேள்விகளுக்குத் தகுந்த விடைகளை விரைவாகக் காண்பதற்குத் தகுதியான ஆய்வுகள் அவசியமாகிறது.

சில காலமாக இக் கட்டுரையாளருக்கு தமிழில் ஒரு தெசாரஸ் (THESAURUS) தேவை என்ற எண்ணம் உண்டு. தெசாரஸ் என்பது அகராதியோ நிகண்டோ அல்ல. தெசாரஸ் பொருளை வைத்து ஒத்த சொற்களைத் தருவது. ஒரு தெசாரஸின் உதவியுடன் ஒரு எழுத்தாளன் தனது சிந்தனைக்குத் தகுந்த சொல்லைத் தேர்ந்து எடுக்க முடியும். இந்தத் தேவையை உணர்ந்து 1852 ஆம் ஆண்டில் இங்கிலாந்து தேச மருத்துவர் டொக்டர் பீற்றர் மார்க்ரொஜே (ROGET) ஆங்கிலத்தில் THESAVRUS OF ENGLISH WORDS AND PHRASES என்ற நூலை வெளியிட்டார். புதுச் சொல்லாக்கத்திற்கு தெசாரஸின் உதவியை 1936 ஆம் ஆண்டிலேயே ('செந்தமிழ்ச் செல்வி'யில்) விபுலானந்த அடிகள் எடுத்துக் காட்டினார் என்பது குறிப்பிடத்தக்கது.

தமிழில் ஒரு தெசாரஸ் வெளிவருவதற்குக் கம்பன் கழகத்தின் செயல் திறன் பெரிதும் பயன் படும். அது அரிய ஆய்வாகவும் தமிழுக்கு ஒரு வரப்பிரசாத மாகவும் அமையும்.

மதிப்பு மிக்க அகில இலங்கைக் கம்பன் கழகம், அதன் ஓர் அங்கமாக ஆய்வு அமைப்பு ஒன்றைக் காண்பதன் மூலம் தமிழுக்குப் புதிய வாழ்வைக் காட்ட முடியும். இது பல்கலைக் கழகங்களும், அகில உலக தமிழ் விழாக்களும் சாதிக்காத பரிசோதனையாக, பரிபூரண வெற்றியாக அமையும்.

# கம்பன் கழகத்தின் கருவறை

திரு. ஆறு. திருமுருகன்

நாடறிந்த பேச்சாளர்களையும், நற்றமிழ்க் கவிஞர்களையும், ஆன்மீகப் பணியாளர்களையும் தமிழ் உலகுக்குத் தந்து பதினைந்து வயதில் சாதனை பல படைத்துள்ள கம்பன் கழகத்தின் வளர்ச்சி கண்டு வியக்காதவர்கள் இல்லை. வயதில் குறைந்தவர்கள் கழகம் அமைத்துள்ளார்கள் என்று அசண்டையாக நினைத்தவர்களை ஆச்சரியப்படுத்திய கழகம் தான் அகில இலங்கைக் கம்பன் கழகம். இக்கழகத்தின் கருவறை முதல் இன்றுவரை அதன் வளர்ச்சி பற்றிச் சிந்திப்பது நலம்.

1976ம் ஆண்டு யாழ். இந்துக் கல்லூரி விடுதிச்சாலை உணவு மண்டபத்தில் இலங்கைத் தமிழாசிரியர் சங்கம் வருடாவருடம் நடத்துகின்ற பேச்சுப் போட்டிக்கான கல்லூரித் தெரிவு நடக்கத் தொடங்குகின்றது. மேற்பிரிவு மாணவர்கள் இருவர் போட்டி. ஒருவர் இன்றைய கம்பன் கழகத்து பிதா மகராகப் போற்றப்படுகின்ற இ. ஜெயராஜ்; மற்றவர் கம்பன் கழகத் தலைவராக விளங்குகின்ற தி. திருநந்தகுமார். மத்திய பிரிவில் நானும் நண்பன் கருணாகரனும் போட்டியிடுகிறோம். மேற்பிரிவுக்குத் தலைப்பு – "பாரதியின் படைப்புக்கள்". இத்தலைப்பை விளக்கி கல்லூரியின் அரங்கத்துறைகளின் அரனாக விளங்கிய தேவன் (இ. மகாதேவா) ஆசிரியரின் சிம்மக்குரல் ஒலித்தது. இப் போட்டியில் சாது போல வந்து கன்னக் குழியால் சிரிப்பு வர முதலில் பேசினார் செல்வன் இ. ஜெயராஜ், இவர் கல்லூரி பேச்சவைக்குப் புதியவர் எனினும் இவரது கவர்ச்சியான பேச்சின் திறமையினை அன்றே நாங்கள் வியந்தோம். அடுத்தவர் கல்லூரியில் சின்ன வயதிலிருந்தே பிரபலமானவர். சாரணியத்தில் நிற்பார், சந்தியில் நின்று சனம் விலத்துவார். கடேட் படையில், மாணவர் முதல்வரில் ஒருவர், ஆசிரியர் பலரின் மானச தீட்சை பெற்ற மாணவனாய் அன்று விளங்கிய திருநந்தகுமார் பேசத் தொடங்கினார். சாப்பாட்டு மேசையில் குத்தினார். அவை அதிரப் பேசினார், மொத்தத்தில் நடுவர்கள் நந்தகுமாரையே முதலாவது இடத்திற்குத் தெரிவாக்கினர். எனினும் ஜெயராஜ் அவர்களைக் கூப்பிட்டுப் பாராட்டினார். ஆசிரியர் சிவராம லிங்கம் ஆங்கிலத்திலும் தமிழிலும் வார்த்தை சொல்லி வாழ்த்தினார். அன்று கல்லூரியில் களம் கண்ட பல அறிஞர்கள் கடமையில் இருந்தார்கள். வித்துவான் ஆறுமுகம், தேவன், சொக்கன், சிவராமலிங்கம், காரை சுந்தரம்பிள்ளை, பண்டிதர் என்று மேடையில் மேன்மை காட்டிய மேதாவிகள் ......பலர். இவர்கள் எல்லோருமாக முடிவு எடுத்துத் தெரிவு இடம்பெறும். பேச்சைப் பொறுத்தவரை தேவன் பொறுப்பு ஒரு காலத்தில் முக்கியமாக விளங்கியது.

கல்லூரியில் போட்டிக்குத் தேர்ந்தெடுத்த முதலிருவரும் வட்டாரப் போட்டிக்கு அடுத்த வாரம் பங்கு கொள்ளத் தயாரானார்கள். நல்லூர் வட்டாரப் போட்டி யாழ் வைத்தீஸ்வரா வித்தியாலயத்தில் ஒரு வாரத்தின் பின் நடைபெற்றது. அப்போட்டியில் பங்கு பற்றுவதற்குக் கல்லூரியில் தெரியப்பட்ட நாங்கள் சென்றோம். போட்டி தொடங்கியது. முதலிடம் மேற்பிரிவில் இ. ஜெயராஜுக்கு மாறியது. மறுநாளே மாவட்டப் போட்டி அதே பாடசாலையில் நடைபெற்றது. அங்கும் முதலிடம் இ. ஜெயராஜ், இரண்டாம் இடம் திருநந்தகுமார். மத்திய பிரிவில் யான் முதலிடம், கீழ்ப் பிரிவுப் போட்டியில் தலைப்பு குலுக்குதலில் பிரச்சினை ஏற்பட்டது. தேவன் ஆசிரியர், ஆசிரியர் சங்கத்தினரைப் பார்த்துச் சத்தம் எழுப்பியதும் அன்று இளம் ஆசிரியராக, சங்க உறுப்பினராக இருந்த திரு. மகேந்திரன் (இன்றைய கொக்குவில் இந்துக் கல்லூரியின் அதிபர்) அவர்களும் எங்களது அதிபர் P.S. குமாரசாமி அவர்களும் சமாளித்தவை இன்றும் பசுமையாக உள்ளன. இப்பேச்சுப் போட்டியில் வென்றவர்களைக் கல்லூரிப் பிரார்த்தனை மண்டபத்தில் பேச வைக்கும் பணியைத் திரு. சிவராமலிங்கம் ஆசிரியர் அவர்களும் திரு. முத்துக்குமாரசாமி ஆசிரியர் அவர்களும் இந்து மன்றத்தின் சார்பில் வெள்ளி

நாட்களில் ஒழுங்குபடுத்தினர். அச் சமயம் செல்வன். ஜெயராஜ் தனது இயல்பான திறனைக் காட்டிப் பேசினார். கல்லூரிப் பிரார்த்தனைக் கூடம் ஆரவாரமாகியது. P.S., ஜெயராஜுக்குப் புகழ் மாலை சூட்டினார். இந்துக் கல்லூரியின் அப்பிரார்த்தனை மண்டபமே இன்றைய கம்பன் கழகத்தின் கருவறை என்பது மிக உண்மையானதாகும். ஜெயராஜ் அன்று பெற்ற செல்வாக்கு ஓங்கத் தொடங்கியது. போட்டியிட்ட ஜெயராஜ் – நந்தன் உயிர் நண்பராயினர்.

அக்காலத்தில் கல்லூரியில் உயர்தர மாணவர் மன்றம் இரு பிரிவாகச் செயல்படும். பல்கலைக்கழக புகுமுக வகுப்பு ஒரு மன்றமாகவும் A/L முதலாம் வருடம் ஒரு பிரிவாகவும் இயங்கும். புகுமுக வகுப்பின் மாணவர் ஒன்றியத்தில் திருநந்தகுமார் முக்கிய பதவி. அடுத்த பிரிவில் ஒன்றியத் தலைவராக அதிக வாக்குகள் பெற்று ஜெயராஜ் தலைவரானார். ஜெயராஜின் தலைமைத்துவ ஆளுமை இங்கு தான் வளரத் தொடங்கியது. இக்காலத்தில் பட்டிமண்டபங்கள், மன்றக் கூட்ட வேளைகளில் ஒலிக்கத் தொடங்கின. அவ்வேளையில் பேசிய மாணவர்கள் தேவ ஜெகன், சிறிஸ்கந்தராஜா, லண்டனில் இருக்கும் சிவகுமார் போன்றவர்கள் ஞாபகத்திலுள்ளார்கள். இக்கால வேளை கல்லூரி உயர்தர விஞ்ஞான மன்றமும் சிறப்பாக இயங்கியது. இம்மன்றம் கையெழுத்துப் பிரதியாக வெளியிட்ட மலர் ஒன்றை அச்சில் ஏற்றி நூல் வடிவில் வெளியிடத்தீர்மானித்து அதற்கோர் விழா எடுத்தது. அவ்விழாவில் பல கலை நிகழ்ச்சிகள் ஏற்பாடாகின. கலை நிகழ்ச்சியில் அன்று பெரும் பரபரப்பை ஏற்படுத்திய வழக்காடு மன்றம் முதன்மையானது. இவ்வழக்காடு மன்றத்தின் ஒரணியில் தேவன் ஆசிரியரும் வித்துவான் ஆறுமுகமும் மறு அணியில் செல்வன் ஜெயராஜ், செல்வன் சிறிஸ்கந்தராஜா ஆகியோரும் பங்கு கொண்டனர். மிகச் சூடாக நடந்த வழக்காடு மன்றத்தின் நீதிபதியாக வித்துவான் வேலன் கடமையாற்றினார். தீர்ப்பு மாணவர் பக்கம். மண்டபத்தில் பெரும் ஆரவாரம். இந்துக் கல்லூரி வரலாற்றில் பந்தடிகள் தான் வருடா வருடம் ஆசிரியருக்கும் மாணவருக்குமிடையே நடைபெறுவது வழக்கம். இது மேடையில் மோதல்; பெரும் ஆரவாரம்; அன்று வென்ற மாணவரை எதிரில் பேசிய ஆசிரியர்கள் அரவணைத்தார்கள். முன்வரிசையில் இருந்து இந்நிகழ்ச்சியைப் பார்த்த பல கல்விமான்கள், பாராளுமன்ற உறுப்பினர்கள், கல்லூரியின் பிரபல்யமான அதிபர்கள் வென்ற மாணவர்களை வாயார வாழ்த்தினார்கள். இந்நாள் முதல் ஜெயராஜ் என்ற ஆற்றலாளனை மனமார வளர்க்கவேண்டும் என கல்லூரி ஆசான்கள் உற்சாக மூட்டத் தொடங்கினார்கள். அன்று குமாரசாமி மண்டபத்தில் கிடைத்த கைதட்டே ஜெயராஜுக்கு அன்றிட்ட உரம் எனலாம். அன்றைய தினமே ஜெயராஜைப் பற்றிய கதை அடிபடத் தொடங்கிவிட்டது.

பாராட்டுப் பெற்ற ஜெயராஜ் படித்த வகுப்பு 11 (E). இவ்வகுப்பில் இருந்தவர்கள் கம்பன் கழகச் செயலாளர் க. குமாரதாசன், லண்டனில் இருக்கும் சிவகுமார், மகாராசா, மாணிக்கம், சிறிஸ்கந்தராஜா என்போர் ஞாபகத்திலுள்ளோர்கள் இவர்களில் ஜெயராஜையும் குமாரதாசனையும் ஒரே சைக்கிலில் காணலாம். குமாரதாசன் கல்லூரிச் சாரணியத்தில் முதன்மை வகித்தவர்.

இக்கால கட்டத்தில் வித்துவான் ஆறுமுகம் ஆசிரியர் சிவராமலிங்கம், தேவன் தங்களைப் பேச அழைக்கும் இடங்களிற்கு ஜெயராஜ், திருநந்தகுமாரை அனுப்புவதும் அவர்களை ஊக்குவிப்பதுமாக இருந்தார்கள். தேவன் ஆசிரியர் வீட்டில் ஜெயராஜ் திருநந்தகுமாரை அடிக்கடி நான் சந்திக்கும் வாய்ப்புக் கிட்டியது. தேவன் ஆசிரியர் ''எப்படி ஐசே'' என்று தொடங்கி தங்கள் மேடை அனுபவங்களை ஞாபகமூட்டி நகைச்சுவையோடு இரை மீட்பார்.

இன்றைய கம்பன் கழகத்தின் முக்கிய உறுப்பினர்களாகிய ஜெயராஜ், குமாரதாசன், ஸ்ரீ இரத்தினகுமார், திருநந்தகுமார் அன்று கல்லூரியின் மதிய உணவு வேளைகளில் கூட்டுச் சேர்வார்கள், 11E வகுப்பு பெரும் ஆரவாரமாக இருக்கும். அவ்வகுப்பில் இன்றைய பொருளாளர் டாக்டர் இரத்தினகுமார் சினிமாப் பாடல்களைப் பாடக் கேட்கலாம். இரத்தினகுமார் இந்துக் கல்லூரி பிரார்த்தனை மண்டபத்தில் அக்காலத்தில் தினமும் தேவாரம் பாடும் மாணவர்களில் ஒருவர். இந்துமாமன்றத்திலும் முக்கிய அங்கத்தவர். இவரது இசையாற்றலைக் கண்டு ஜெயராஜ் தன் வகுப்பறைக்கு இழுத்து மத்தியான வேளைகளில் நடத்தும் இசையும் கூத்தும் 11E வகுப்பில் தினமும் கேட்கலாம். இவர்களோடு படித்தவர்களின் ஆரவாரம் கல்லூரியில் தனிமுத்திரை பொறித்தது.

க. பொ. த உயர்தரப் பரீட்சை நெருங்கியது. இந்த இலக்கிய ரசிக மாணவர்களின் பெறுபேற்றைப் பலர் எதிர்பார்த்தார்கள். உயிரியல் விஞ்ஞானத்துறை மாணவர்களாகிய அவர்கள் உயிரை இலக்கியத்தில் வைத்துவிட்டு உயிரியல் விஞ்ஞானத்தில்

படுதோல்வியைச் சந்தித்தார்கள். கூட்டாகத் திரிந்த நண்பர்கள் எல்லோரும் முற்றும் F எடுத்தார்கள். ஜெயராஜ் அவர்களை உங்கள் பெறுபேறு என்ன என்று கேட்டால் தங்கள் நண்பர்களின் பெறுபேறையும் சேர்த்து 32F என நகைச்சுவையாய்ச் சொல்லிச் சிரிப்பார். இதே மாணவர் கூட்டம் முதல் முறையில் ஏற்பட்ட தோல்வியை நிவர்த்தி செய்ய ஒரு ரியூட்டறியை நாடியது. அங்கும் இலக்கியம் பற்றிய சிந்தனையே எந்நேரமும். பாடசாலை விட்டு விலகியும் கல்லூரி வளவுக்குள் இவர்களின் நடமாட்டம் எந்நேரமும் இருந்தது. இரசாயனவியல் படிக்கப் போன தனியார் நிறுவனத்திலே ஒரு நாள் கம்பனுக்குக் கழகம் அமைப்போம் என ஜெயராஜ் தனது நண்பர்களைக் கேட்க ஒரே வாங்கில் இருந்த அதே நண்பர்கள் அதற்கென்ன என்று தலைவர்; திருநந்தகுமார் செயலாளர் குமாரதாசன்; பொருளாளராக அன்று மாணிக்க வாசகர் செயற்பட்டார். கழகத்தின் புரவலர்களாக ஆசிரியர் சிவராமலிங்கம், வித்துவான் வேலன், தேவன், வித்துவான் ஆறுமுகம் ஆகியவர்களை நியமித்து ஒரு கடிதத்தாளும் அடித்ததாக இன்றும் ஜெயராஜ் சுவைத்துச் சொல்வார். அன்று அமைத்த இக்கழக அமைப்பு நல்லை ஆதீனத்தில் முதற் கம்பன் விழாவை இனிதுற நடத்தியது. மிகச்சிரமப்பட்டுக் கம்பனுக்கு விழா எடுத்தார்கள். இவ்வேளை கல்லூரி வளவிற்குள் புகழ் பெற்று விளங்கிய ஜெயராஜ் கம்பன் கழகம் என்ற அமைப்பாளராகப் பிரகாசிக்கத் தொடங்கினார். மிக எழுச்சியாக இக் கழகம் வளரத் தொடங்கியது. இக் கழகத்தின் தூண்களில் ஒன்றாக மதிக்கப்பட்ட ஆசிரியர் தேவன் கடும் சுகயீனமுற்று மரணப்படுக்கையில் வைத்தியசாலையிலிருந்த போது கம்பன் கழக உறுப்பினர்கள் ஓடி வந்தார்கள். தேவன் அருகில் அவரைப் பராமரிக்க நானும் நின்றேன். ஆசிரியர் தேவனுக்கு அவசரமாக இரத்தம் கொடுக்க வேண்டும் என டாக்டர் ஜெகா பசுபதி கூறிய வேளை கண்கலங்க நின்ற ஜெயராஜ், குமாரதாசன் இரத்த வங்கியில் சென்று இரத்தம் கொடுத்தார்கள். இரு நாட்களில் தேவன் உயிர் பெற்றார். இம் மாணவர்கள் அன்று செய்த செயற்கரும் செய்கையை இந்துக் கல்லூரி ஆசிரியர்களும் அதையறிந்த ஒவ்வொருவரும் பாராட்டிப் போற்றினார்கள். ஜெயராஜ், குமாரதாசன் ஆகியோரின் பெரும் தன்மையை மனமார அன்று முதல் நான் மதிக்கத் தொடங்கினேன். மீண்டும் நடமாடத் தொடங்கிய தேவனை அவர் உயிரோடு இருக்கும் போது கௌரவிக்க வேண்டும் என 1982ம் ஆண்டு திரு. ஜெயராஜ் நன்றியோடு ஒரு பெரு விழா எடுத்தார். கம்பன் கழகத்தின் சார்பில் சொல்லின் செல்வன் என்ற பட்டத்தினை தேவன் ஆசிரியருக்கு வழங்கித் தேவன் தம்பதிகளைப் பாதம் தொட்டு வணங்கினார்கள். அந்த மகிழ்ச்சியை அனுபவித்த தேவன் உளமாரக் கழகத்தை வாழ்த்தினார். இவ்விழாவில் ஜெயராஜ் பேசும்போது தேவன் தேவனாகிக் கொண்டிருக்கிறார். அவர் எங்களுக்காக வாழவேண்டும் என்று மனம் நெகிழப் பேசினார். அதற்குப் பதில் சொன்ன தேவன் நல்ல வித்துக்கள் வளரத் தொடங்கிய பின் எனக்கு என்ன வேலை என்று நகைச்சுவையாகப் பதில் சொன்னார். விழா நடந்து ஓரிரு தினங்களிலே தேவன் காலமானார். கம்பன் கழக உறுப்பினர்கள் கண்ணீர் மல்கி மரண வீட்டை நடாத்தினார்கள். தேவனுக்குச் செய்த நன்றி மறவாக் காரியத்தைப் பல பெரியவர்களும் பாராட்டினர்.

ஆற்றலும் ஆளுமையும் மிக்க கம்பன் கழகம் யாழ் இந்துக்கல்லூரியில் கருவாகி கம்பன் விழாவோடு உயிராகி இன்று தமிழுக்கு ஒளியாகி விளங்குகிறது. இதனை வளர்த்த ஆசான்கள் என்றும் தமிழுலகு போற்றுதற்குரியவர்கள். நல்லை ஆதீன கர்த்தா., சுவாமி நாதத்தம்பிரான் சமாதியடைந்த போது நடைபெற்ற இரங்கலுரையில் வித்துவான் ஆறுமுகத்திற்குப் பேசக்கிடைத்த வாய்ப்பைத் தன் பிள்ளை பேசுவான் என அண்ணன் ஜெயராஜைப் பேச விட்டார். அங்கு பேசியவர்கள் எல்லாம் சொற்பொழிவின் தந்தை இறந்துவிட்டார் இனி மேடையிலே சமயம் பேச யாருண்டு எனப் பேசி ஓய; அண்ணன் ஜெயராஜ் தம்பிரான் சுவாமிகளின் ஆத்மா சாந்தி அடைவதென்றால் புதியதொரு தலைமுறை ஆன்மீகப் பணியாற்றுகின்ற போதே அவரது ஆத்மா உண்மையாகச் சாந்தி அடையும் என்று உருக்கமாகப் பேசினார். அன்று பேசிய பேச்சை வாழ்நாளில் தான் நிலைநாட்டியது மாத்திரமன்றி எங்களையும் அப்பணிக்கு ஆளாக்கிக் கம்பன் கழகத்தில் தமிழுக்கும் சமயத்திற்கும் இன்று ஒரு கலங்கரை விளக்காகியுள்ளார். இச் சமயத்தில் கருவறையாகிய யாழ்ப்பாணம் இந்துக்கல்லூரியை நன்றியோடு நினைவு கூருகிறோம்.

# புதுவைக் கம்பன் விழாவில்......

புதுச்சேரி கம்பன் கழகம் கம்பன் விழாவை 1988–மே. –13, 14 15 ஆம் திகதிகளில் நடத்தியது.

அகில இலங்கை கம்பன் கழகத்தின் தூதுக்குழு ஒன்று அமைப்பாளர் ஜெயராஜ் தலைமையில் இவ்விழாவிற்குச் சென்று, பங்கு பற்றியது.

புதுவைக் கம்பன் விழாச் செய்திகளை 'சஞ்சீவி' க்கென்று திரு. ரகுபரன் தொகுத்து, 4–6–88; 11–6–88; 18–6–88; 28–6–88 இதழ்களில் தந்தவற்றை, அவ்வாறே தருகிறோம்.

புதுச்சேரி கம்பன் விழாவிற்காக, பயணம் செய்கிறோம்.

சண்டிக்கட்டாக மடித்துக்கட்டிய சாரம், தோளில் துவாய்த்துண்டு, உரப்பைகளில் கட்டிய பெரிய பொதிகள், வாயிலே சுருட்டு அல்லது பீடி. இத்தகைய கோலம், உரையாடும்போது கொச்சையான வார்த்தைகள், முன் ஆசனத்தில் இருந்து பின் ஆசனத்தில் இருப்பவரைப் பார்த்துப் பேசுவதற்காக குறுக்கும் நெடுக்கும் நடை.

பயணத்தின் போது பயணிகள் பலர் நடந்து கொண்ட விதம் இது. இந்தப் பயணம் நடந்த வாகனம் ஒரு மினி பஸ் அல்லது ஒரு சாதாரண பஸ் என்றுதானே நினைக்கிறீர்கள். அதுதான் இல்லை. இந்தக் காட்சிகளெல்லாம் விமானத்தில்! கட்டுநாயக்காவில் இருந்து திருச்சி நோக்கிச் சென்ற விமானத்திலேயே இந்த அரிய அனுபவம்.

வழக்கமாக விமானப் பயணம் என்றால் பண்பான உடை, பண்பான பேச்சு, பண்பான பழக்கவழக்கங்களைக் கொண்டவர்களே பயணம் செய்வார்கள். இந்த எண்ணத்தோடு திருச்சி செல்லும் விமானத்தில் ஏறும் எவருக்கும் இன்று கிடைப்பது ஏமாற்றமே. தலைமன்னார் – இராமேஸ்வரம் கடற் போக்கு வரத்துத் தடைப்பட்ட பின் உள்ள நிலை இது. நல்ல காலம் விமானம் என்றபடியால் இந்தளவோடு நின்றார்கள். இல்லை என்றால் ஃபுட் போர்டிலும் தொங்குவார்கள் என்று உறுதியாக நம்பலாம். "புகைப்பிடிக்காதீர்கள்" என்ற அறிவிப்பைக் கண்ட பின்பும் புகைக்கிறார்கள்; பார்ப்பவர் நெஞ்சு புகையும்.

அவ்வியாபாரிகளின் இத்தகைய செயல்களால் விமானப் பணிப் பெண்கள்வேண்டா வெறுப்போடு நடந்து கொள்கிறார்கள். ஒரு விமானப்பணிப் பெண்ணுக்கு இருக்க வேண்டிய முகமலர்ச்சியை அவர்கள் வலிந்தே வரவழைக்க முயல்கிறார்கள்.

இத்தகைய வியாபாரிகளைப் பெரிய மூட்டை முடிச்சோடு கண்டு பழகியதனாலோ என்னவோ ஒரே ஒரு பொதியுடன் மாத்திரம் சென்ற எம்மை விமான நிலைய அதிகாரிகள் விசித்திரமாகப் பார்த்தார்கள். திருச்சியில் இறங்கியதும் மொய்த்துக்கொள்ளும் இந்திய வியாபாரிகளின் 'என்னா சார் ஒரே ஒரு சூட்கேசுதானா?' என்ற வியப்போடு கூடிய கேள்வி.

இந்த இடத்தில் திருச்சி விமான நிலையத்தைப் பற்றிச் சொல்லாமல் செல்லக் கூடாது.

விமானத்தை விட்டு இறங்கி விமான நிலையத்தை அடைந்தோம். ஒரு தகரக் கொட்டகைக்குள் எம்மை நிறுத்தி வைத்தார்கள். அங்கு வெளிச்சமும் இல்லை! காற்றோட்டமும் இல்லை. காத்திருந்தோம்; கஸ்டம்ஸ் அதிகாரிகளின் சோதனைக்காகக் காத்திருந்தோம். இரண்டு மணித்தியாலங்களுக்குப் பின்புதான் சோதனையே ஆரம்பித்தது. வியாபாரிகளின் ஒவ்வொரு மூட்டையாகச் சோதித்தார்கள்.

ஒருவரைச் சோதிக்கவே ஒரு மணித்தியாலம் தேவை என்ற நிலை. என்ன செய்வது நாமும் காத்திருக்க வேண்டியதுதானா? கம்பன் விழா அழைப்பிதழைக் காட்டினால் என்ன என்று ஒரு யோசனை உதித்தது. ஒரு

மூட்டையாகச் சோதித்தார்கள்.

ஒருவரைச் சோதிக்கவே ஒரு மணித்தியாலம் தேவை என்ற நிலை. என்ன செய்வது நாமும் காத்திருக்க வேண்டியதுதானா? கம்பன் விழா அழைப்பிதழைக் காட்டினால் என்ன என்று ஒரு யோசனை உதித்தது. ஒரு அதிகாரிக்கு அழைப்பைக் காட்டி விஷயத்தைக் கூறினோம். 'அப்படியா சார்? இதோ உங்களை உடனடியாக அனுப்புகிறோம்' என்று கூறி ஆகவேண்டிய ஒழுங்குகளைக் கவனித்தார். எமக்கு அந்தத் துன்பத்திலிருந்து விடுதலை. அப்போதுதான் புதுவைக் கம்பன் கழகத்தின் செல்வாக்கை முதன்முதலாக உணர்ந்தோம். புதுவை போய்ச் சேர்ந்ததும் அல்லவா அதன் முழுப்பெருமையும் புலப்பட்டது

திருச்சியில் இருந்து புறப்பட்டு விழாவுக்கு ஒருநாள் முன்னதாகவே புதுவையை அடைந்து விட்டோம். விழாவுக்கு வரும் விருந்தினர்களுக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த விடுதியில் எமக்கு இரண்டு அறைகள் ஒதுக்கப்பட்டன. அந்த விடுதி ஒரு ஒட்டலோ அல்லது சத்திரமோ அல்ல. புதுவை மாநிலத்தில் சட்டசபை உறுப்பினர்கள் தங்கும் விடுதியே அது. விழாவுக்கு வருகை தரும் விருந்தினர்களுக்காக அறைகளைக் காலி செய்துவிட்டு கிளம்பினார்கள் சட்டமன்ற உறுப்பினர்கள்.

கவிச்சக்கரவர்த்தி கம்பனின் விழாவுக்குப் புவிச் சக்கரவர்த்திகள் வழிவிட்டு ஒதுங்கினர்கள் போலும். புதுவைக் கம்பன் விழா புதுவை மாநில அரசின் பூரண ஆதரவோடு நடைபெறும் விழா. அதனால்தான் எம் . எல். ஏக்களின் விடுதியே எமக்கும் விடுதியாயிற்று.

புதுவைக்கு இங்கிருந்து போனது ஐவர் கொண்ட ஒரு குழு. அகில இலங்கை கம்பன் கழக அமைப்பாளர் திரு. இ. ஜெயராஜ், செயலாளர் க. குமாரதாசன், கழக உறுப்பினரும் மருத்துவக் கல்லூரி மாணவருமான திரு. கு. இரட்ணகுமார், இலங்கை கம்பன் கழகத்தின் மூதவையைச் சார்ந்தவரும் யாழ். பல்கலைக்கழகத் தமிழ்த்துறை சிரேஷ்ட விரிவுரையாளருமான கலாநிதி இ. பாலசுந்தரம்.

இந்த நால்வரோடு சஞ்சீவியின் சார்பில் நான். ஆக மொத்தம் ஐந்து பேர். அங்கே தமிழ்நாட்டில் திருச்சியில் தற்போது குடியிருக்கும் யாழ். இந்துக் கல்லூரி முன்னாள் உபஅதிபரும் கம்பன் கழகப் போசகருமாகிய திரு. க. சிவராமலிங்கம்பிள்ளையும் சேர்ந்துகொள்ள எல்லாமாக இலங்கையர் அறுவர் புதுச்சேரி கம்பன் விழாவில் கலந்து கொண்டோம். திரு. சிவராமலிங்கம் கால் நடக்க முடியாத நிலைமையிலும் விழாவைப் பார்க்கும் ஆர்வத்துடன் எம்முடன் சேர்ந்துகொண்டார்.

விழா விருந்தினர்க்கு உணவு வசதிகள் எல்லாம் ஒரு கல்யாண மண்டபத்திலே. ஆனந்தா கல்யாண மண்டபம் என்று பெயர். மூன்று தளங்களைக் கொண்டது. மிகப் பிரமாண்டமானது. பாண்டிச்சேரி அமைச்சர்களும் சட்டமன்ற உறுப்பினர்களும், மற்றும் புதுச்சேரி பிரமுகர்களும் போட்டி போட்டுக் கொண்டு ஒவ்வொரு வேளை விருந்தையும் பிரமாதப்படுத்தி விட்டார்கள். ஒருநாள் இரவு விருந்தைப் புதுச்சேரி முதலமைச்சரே வழங்கினார். விழா முடிந்து விருந்துக்கு வருபவர்களை வாசலில் நின்று அவரும் மனைவியுமாக வரவேற்று உபசரித்தார்கள். விழாமண்டபத்திலும் சரி வெளியிலும் சரி அவர் ஒரு சாதாரணத் தொண்டனைப்போல ஓடி ஆடி அலுவல்களைக் கவனித்துக் கொண்டார் விழாக்காலங்களில், தான் ஒரு முதலமைச்சர் என்பதையே மறந்து விடுவார் போலும்.

முதலமைச்சரைப்பற்றிச் சொன்னதில் சாப்பாட்டைப்பற்றிக்கூற மறந்துவிட்டேன். நேரத்திற்கு நேரம் விதவிதமான பண்டங்கள், அறுசுவையும் ஒரு இலையில் அமர்ந்திருக்கும். இட்லி, சோறு, ரசம், மோர், சாம்பார் இப்படிச் சிலவற்றைத் தவிர ஏனைய பலவற்றின் பெயர் என்ன என்பதே தெரியாது. இரண்டாம் முறையும் கேட்டுவேண்டிச் சாப்பிட வேண்டும் போல் இருக்கும். அத்தனை சுவை. ஆனால் என்ன பெயரைச் சொல்லிக் கேட்பது என்ற பிரச்சினையால் கேட்காமலே விட்டுவிட்டு வயிறெரிந்த சம்பவம் அநேகம். அந்த வயிறெரிச்சலை மீண்டும் ஏன் ஞாபகப்படுத்த வேண்டும்? விட்டு விடுவோம்.

புதுவை மானிலத்தைப்பற்றிச் சில செய்திகளைச் சொல்லியே ஆகவேண்டும். அது இந்திய மானிலங்களுள் ஒன்று. யூனியன் பிரதேசம். மிகச் சிறிய, அழகான, அமைதியான, சுத்தமான மாநிலம். இந்தியா ஆங்கிலேயர் ஆட்சியின் கீழ் இருந்த போது சில பகுதிகள் பிரெஞ்சு நாட்டின் ஆதிக்கத்தில் இருந்தன. அவற்றுள் ஒன்றே இந்தப் புதுவை. சுதந்திரப் போராட்ட காலத்தில் ஆங்லேயரின் கண்ணிற் படாமல் பாரதி மறைந்து வாழ்ந்ததும் இந்தப் புதுவையில் தான். தமிழ் பேசும் மக்கள் வாழும் அந்த மாநிலம் தமிழ் நாட்டோடு ஒப்பிடும் போது பல வழிகளிலும் வித்தியாசமானது. அது போலவே அந்த மாநில அரசியல்வாதிகளும். தமிழ் நாட்டு அரசியலின் அசிங்கங்கள் அங்கே இல்லை. இத்தகைய மாநிலத்தின் முதலமைச்சர்தான் எம். ஒ. எச். பாரூக். இருபது சதவீதம் மாத்திரமே முஸ்லீம்களைக் கொண்ட ஒரு பிரதேசம் தனது முதல்வராக ஒரு முஸ்லிமையே தேர்ந்

தெடுக்கின்றது என்றால் அப்பிரதேசத்தின் பரந்த மனப்பான்மை சொல்லாமலே தெரிய வேண்டியது.

பாண்டிச்சேரி, புதுச்சேரி, புதுவை எனப் பல பெயர்களில் வழங்கும் அந்த மாநிலக் கம்பன் கழகம் தனது கம்பன் விழாவை மே மாதம் 13,14,15 ஆம் திகதிகளில் காலையும், மாலையுமாகக் கோலாகலமாகக் கொண்டாடியது. காலை விழா ஒன்பது மணிக்கு. காலை உணவு சரியாக 7–30க்கு. அதை முடித்துக் கொண்டு காரில் ஏறினால் விழா மண்டபம்.

முதல் நாள் காலை விழாவைக் காண விழா மண்டபத்தை அடைந்தோம். புதுவைக் கம்பன் கழகச் செயலாளர் எம்மை முதலமைச்சருக்கு அறிமுகப் படுத்தினார். 'இலங்கையிலிருந்து வந்திருக்கிறீர்களா?' என்று கரம் பற்றி வரவேற்றார்.

'இவர்களோடு வந்த இவர்களின் ஆசிரியர்; நடக்க முடியாதவர்; அங்கு ஆசனத்தில் இருக்கிறார்' என்றார்; செயலாளர் அருணகிரி. உடனே ஆசிரியர் சிவராமலிங்கம் இருந்த இடத்திற்குத் தேடிப் போய் வரவேற்றார் முதல்வர். இதை அவரது எளிமைக்கு எடுத்துக்காட்டாகச் சொல்கிறேன்.

புதுவை முதலமைச்சர்தான் புதுவைக் கம்பன் கழகத்தின் போஷகர். எவர் முதல்வராக வந்தாலும் அவர்தான் போஷகர். எனவே இப்போது போஷகர் பாரூக் அவர்கள் தான்.

விழாவில் வரவேற்புரை ஆற்றுவது முதல்வர்தான். வரவேற்புரையின்போது எமக்கு (இலங்கையிலிருந்து சென்றவர்களுக்கு) வரவேற்புப் கூற மறந்து விட்டார். பின்புதான், அதை உணர்ந்து விழா நடந்து கொண்டிருக்கும் போது இடையில் ஒரு ஐந்து நிமிடங்கள் எங்களுக்கென்று தனியான வரவேற்புரை ஒன்றை நிகழ்த்தினார்.

அத்துடன் நிற்காது திரு. ஜெயராஜை மேடைக்கழைத்து ஒரு பொன்னாடையும் போர்த்திக் கௌரவித்தார். உரையாற்றும் போது தான் முதலில் மறந்ததற்கு மன்னிப்புக் கோரினார். 'இலங்கை மக்களுக்கு நாம் தாய் அவர்கள் சேய். தாய் தன் சேயை ஒரு போதும் கைவிடமாட்டாள்' என்று கூறினார். என்ன அர்த்தத்தில் கூறினாரோ நாம் அறியோம்.

முதல்வரின் வரவேற்புக்குப் பின் புதுவை மாநிலத் துணைநிலை ஆளுநர் திரு டி.பி. திவாரியின் தொடக்கவுரை சுமார் 45 நிமிடங்கள்; இராமாயணம் பற்றிய ஒரு ஆங்கிலப் பேச்சாக அது அமைந்தது.

அன்றைய விழாவில் முதல்வர், ஆளுநர் தவிர நான்கு அமைச்சர்களும் கலந்து கொண்டனர். அவர்களில் சிலரின் பேச்சில் சாடையான அரசியல் வாடை வீசியது. உதாரணத்திற்கு ஒன்று: கம்பன் தனது தாய் மொழியைத் தவிரப் பிற மொழிகளையும் கற்றதனால் தான் கம்பராமாயணம் பிறந்தது. எனவே நாமும் பிறமொழிகளை வெறுக்காது கற்க வேண்டும். இது இந்தித் திணிப்பை ஆதரிக்கும் நோக்கிலான பேச்சு.

இவ்வாறு அமைச்சர் சிலரின் பேச்சில் மறைமுகமாக அரசியல் கலந்திருந்தாலும் முதல்வர் ஆளுநரின் பேச்சுக்களில் அரசியல் மருந்துக்கும் கலக்கவில்லை. தனியே இலக்கியம்தான்.

விழாவில் மூன்று நூல்கள் வெளியிடப் பட்டன. ஒன்று கம்பன் விழாமலர். மற்றவை இரண்டு ஆராய்ச்சி நூல்கள். புதுவை அரசு கம்பன் புகழ்ப்பரிசு, என்ற பெயரில் கவிதா சுடர் நினைவுப்பரிசு, நீதிபதி மகாராஜன் நினைவுப்பரிசு என்ற இரண்டு பரிசுகளை வழங்கியது. இவை இரண்டும் வருடா வருடம் புதுவைக் கம்பன் விழாவில் வழங்கப்படுகிறதாம் புதுவையில் எல்லாமே கம்பன் மயம்! அரசு வழங்கும் பரிசுக்கும் கம்பன் பெயர்தான். நகரசபை மண்டபத்துக்கும் கம்பன்பெயர்தான். விழா நடந்தது புதுவை நகரமண்டபத்தில். 'கம்பன் கலை அரங்கம்' என்று அதற்கு பெயரிடப்பட்டிருந்தது.

புதுவையில் கம்பன் இத்தனை செல்வாக்கோடு இருப்பதற்குக் காரணம் புதுவைக் கம்பன் கழகம்தான். கம்பன் கழகம் என்று சொல்வதைவிட அதன் செயலாளர் திரு. அருணகிரி என்று சொல்லுவதே பொருத்தமாக இருக்கும்.

ஏனெனில் அந்தத் தனி மனிதனின் ஆணைக்கும் ஆளுமைக்கும் உட்பட்டே புதுவைக் கம்பன் கழகம் இயங்குகிறது. ஏன் புதுவையே இயங்குகிறது என்று கூடச் சொல்லலாம். அத்தனை செல்வாக்கான மனிதர் அவர்.

நாங்கள் புதுவை போய்ச்சேர்ந்ததும் முதலில் போய் இறங்கியது திரு அருணகிரி வீட்டில்தான். (அதன் பிறகுதான் எம்.எல். ஏ. விடுதி. போய் இறங்கும்போது அதிகாலை ஐந்து மணி ) வீடு பூட்டிக்கிடந்தது. கதவைத் தட்டினோம். ஒரு அம்மையார் வந்து கதவைத் திறந்தார். இன்னும் முகம்கூடக் கழுவவில்லை. இப்போது தான் படுக்கையிலிருந்து எழும்பியிருக்கிறார்.

கதவைத் திறந்துபார்த்தவர் ஜெயராஜை அடையாளம் கண்டுவிட்டார். அந்த அதிகாலை நித்திரைத் தூக்கத் தோடும் முகம்மலர்ந்து வரவேற்றார்.

உள்ளுக்குப் போய்அமர்ந்தோம். சிறிது நேரத்தில் காப்பியோடு வந்தார். அருணகிரி ஐயாவைத்தான்

காணவில்லை.

இன்னும் படுக்கையால் எழுப்பவில்லை போலும்; என்னுள் எண்ணிக் கொண்டேன்.

ஆனால் பின்னர் அந்த அம்மையார் அவர்தான் திரு அருணகிரியின் மனைவி கூறியதைக் கேட்டு வியந்துபோனேன்.

''ஐயா, சாமம் மூன்று மணிக்கே எழுந்து விழா அலுவல்களைக் கவனிக்க எங்கோ தூர இடத்திற்குப் போய்விட்டார். இப்போ வந்துவிடுவார்'' என்றார் அம்மையார்.

'அப்பப்பா! இரவிரவாகக் கம்பன் பணியா, அந்த உழைப்புத்தானே இத்தகைய சிறந்த விழாவாகப் புதுவைக் கம்பன் விழாவை மிளிரச்செய்கிறது.

அப்படியிருக்க எப்படி அந்தத் தொண்டனைப் பற்றிச் சொல்லாமல் வெறுமனே கண்டதை மாத்திரம் சொல்லுவது?

நாம் ஒரு அரைமணி நேரம் காத்திருக்க, வந்து விட்டார்.

நெடிதுயர்ந்து பருத்த ஆஜானுபாகுவான தோற்றம்; தேசிய உடை; கையிலே ஒரு தோளிற்பை; நெற்றியிலே அழியாத குங்குமப்பொட்டு; இவற்றோடு வந்தார். எங்களைக் கண்டதும் கரங்கூப்பி வணங்கி வரவேற்றார்.

வந்ததும் ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்து கொண்டார். அது அவருக்கே உரியது போலும். காலியாக இருந்தபோதும் வேறெவரும் அதில் அமர்ந்ததாகக் காணவில்லை.

வந்தவர், அமர்ந்தவர் எம்மோடு கதைத்துக் கொண்டே, ('கதைத்துக்கொண்டே' என்றால் தமிழ் நாட்டாருக்கெல்லாம் புதினமாக இருக்கிறது. பேசிக்கொண்டே' என்றால்தான் அவர்களுக்குப் புரியும்) இடையிடையே தொலைபேசி இலக்கங்களைச் சுழற்றுகிறார்; யார்யாரோடோ எல்லாம் பேசுகிறார்; உத்தரவு போடுகிறார்; அதைச்செய் இதைச்செய் என்று. சில வீடுகளில் இவர் பேசவேண்டியவர்களின் மனைவியோ மக்களோ ரிசீவரை எடுத்திருக்க வேண்டும். இன்னும் வீட்டுக்காரர் படுக்கையால் எழுந்திருக்கவில்லை என்று சொல்லியிருக்க வேண்டும். அவர்களுக்கெல்லாம் ''இதுதான் விழா நடத்துகிறலட்சணமோ'' என்று பேச்சு.

கம்பன் விழாவாவோ அல்லது தினமுமே இப்படித்தானோ என்னவோ தெரியவில்லை. அதிகாலையிலே அவரைத் தேடி ஆட்கள் வரத் தொடங்கி விட்டார்கள். வந்தவர்கள் மிகப்பௌவியமாகக் கைகட்டிக் கதைக்கிறார்கள். அவர் இடும் கட்டளைக்காகக் காத்து நிற்கிறார்கள்.

அவர் பேசுவது எழுதுவது செய்வது எல்லாமே கம்பன் பணிதான். அவர் மாத்திரமல்ல அவருடைய குடும்பமே கம்பன் பணியில் மகிழ்வோடு ஈடுபடுகிறது. அவர்மனைவி, மக்கள், சகோதரர், உறவினர் யாவரும் தம் வீட்டுக் கல்யாணம் என்றால் எப்படி நடந்து கொள்வார்களோ அப்படி நடந்து கொள்கிறார்கள். மிகவும் அன்பும் பண்பும் நிறைந்த குடும்பம் அந்தக் குடும்பம்.

நாம் அங்கிருந்து எம்.எல்.ஏ. விடுதிக்குப் போவதற்காக விடை பெறத் தயாரானோம். அப்போது அந்த அம்மையார் தன் கணவனுக்குப் பின்னால் தயங்கித் தயங்கி நிற்கிறார். எதையோ கேட்கத் துடிக்கிறார். எதையோ கேட்கத் துடிக்கிறார் என்று தெரிகிறது.

திரு அருணகிரி தன் மனைவிக்கு உதவியாக ''இவ என்னவோ கேக்கிறா, அதுக்கு மறுமொழி சொல்லிவிட்டுப் போங்க'' என்றார்.

'அந்தப்புள்ள சுகமாக இருக்கானா?'

அந்த அம்மா எந்தப் பிள்ளையை விசாரிக்கிறார்? எமக்கு ஒன்றும் விளங்கவில்லை. விழித்தோம்.

'அந்தப் பிரபாகரன்தான் எப்படியிருக்கான், சுகமா இருக்கானா? என்னா அழகான வீரமான புள்ளை. நீங்க அவனைப்பார்த்தீங்களா? அவனைப் பத்தின ஒரு சேதியும் தெரியலியே' என்று ஒரு தாய்மையின் ஏக்கத்தோடும் ஆர்வத்தோடும் கேட்டார் அந்த அம்மையார். தமிழகத் தாய்மாரின் குரலாகவே அது எங்கள் காதுகளில் ஒலித்தது.

என்ன பதிலைச் சொல்லுவது என்ற தெரியவில்லை. அவருடைய அன்பைக் கண்டு திகைத்து நின்றோமே தவிர வேறொன்றும் சொல்லவில்லை.

அருணகிரி அவர்களின் ஆளுமையை வீட்டில் வைத்துத்தான் இதுவரை கண்டோம்.விழா அன்றைக்குத்தான் மேடையிலே அவருடைய ஆட்சியைக் கண்டோம்.

விழா நடந்துகொண்டிருக்கும்போது ஒரு நிகழ்ச்சியில் அமைச்சர் ஒருவர் கலந்து கொள்ள வேண்டும். அவர் அவசர அவசரமாக மேடைப்படிகளில் ஏறினார். அருணகிரி நந்திகேஸ்வரரைப்போல நின்று மறித்தார். இது என்ன விழாவில் கலந்து கொள்ள வந்தரை மேடைக்கு ஏறவிடாமல் மறிக்கிறாரே என்று எண்ணிய போது அமைச்சர் தன் காற் செருப்புக்களைக் கழற்றுகிறார்.

இத்தகைய பேரறிஞரின் தலைமையில் தமிழகத்தின் பெரும் பேச்சாளராகிய புலவர் கீரனின் உரை அன்று நிகழ்ந்தது.

திரு. வ.சுப. மாணிக்கம் தனது தலைமை உரையில் தமிழ் இலக்கியப் பாரம்பரியத்தில் காலங்காலமாக ஏற்கப்பட்டு, போற்றப்பட்டு வந்த ஒரு விசயத்தைப் பல காரணங்கள் காட்டிப் பிழை என நிறுவினார். அவர் காட்டிய ஆதாரங்களால் நாமும் தடுமாறி விட்டோம். இதுவரை காலமும் நாம் இப்படிச் சிந்திக்காது இருந்தது விட்டோமே அறியாமையோடு இருந்து விட்டோமே. என்று எம் அறியாமையை எண்ணி வெக்கினோம். நாம் என பன்மையில் கூறுவது சபையில் உள்ள எல்லோரையும் தான். சபையின் நிசப்தத்தையும் முக உணர்ச்சியையும் கொண்டு சொல்லுகிறேன்.

தலைவரின் உரை முடிந்ததும் கீரன் பேசத் தொடங்கினார். பேச்சா இல்லை ஏச்சா அது? அத்தனை உக்கிரம். நமது இலக்கிய பாரம்பரியத்தை உணராதவர்களுக்கு உணர்த்துகிறேன் என்றுவிட்டு வ.சுப.மாணிக்கத்தின் பேச்சுக்கு மிகச்சரியான தெளிவான ஒரு பதிலை வழங்கினார். அவர் பேச்சினால் சபை மீண்டும் தலை நிமிர்ந்தது.

'இலக்கியத்திலுள்ள நயங்கள்; பாத்திரப் படைப்பின் சிறப்பு; அதன் கவியின்பம் இவற்றை எல்லாம் காலம் காலமாக மேடையிலே பேசி வந்திருக்கிறார்கள் நாமும் பேசி வந்துள்ளோம்.

'ஆனால் இப்படி இலக்கியத்தின் நல்ல விஷயங்களை மாத்திரம் எடுத்துக் கூறுவது என்று மட்டும் இருந்தவிடக்கூடாது. அதிலுள்ள பிழைகளையும் சுட்டிக்காட்ட வேண்டும். அப்போது தான் இலக்கியம் செம்மையான வழியில் செல்ல உதவியவராவோம்.

'எனவே இன்றைய இந்தக் கம்பன் விழாவிலே என்னுடைய உரை வித்தியாசமானதாக அமையப்போகிறது. நம் இலக்கிய மரபில் உள்ள பிழைளை இன்றைக்கு நான் சுட்டிக்காட்டப்போகிறேன்'

இந்தப் பீடிகையோடு தனது உரையை ஆரம்பித்தார். முதல் நாள் காலை விழாவுக்குத் தலைமை வகித்த திரு.வ. சுப. மாணிக்கம்.அவ்வாறு அவர் பிழையைச் சுட்டிக்காட்டிப் பேசிய பேச்சை இங்கு சுருக்கமாகத் தருகிறேன்.

இராமாயணக் கதையின்படி சீதையை இராவணன் கடத்தி இலங்கையில் அசோக வனத்திலே சிறைவைத்தான்.

இதனை அறிந்த இராமன், மனைவி சீதையை மீட்பதற்காக இராவணனோடு போர் தொடுத்தான். அந்தப் போரிலே இராவணன் மாண்டான்.

இதுவரையில் எல்லாம் சரி. ஆனால் நான் கூறுகிற பிழை எங்கே என்றால் அது சேதுபுராணத்திலே வருகிறது. இராவணனைக் கொன்றபடியினால் இராமனைப் பிரம்மஹத்தி தோஷம் பிடித்துக் கொண்டது; அந்தத் தோஷத்தை நீக்குவதற்காக சேதுக்கரையிலே சிவலிங்கம் அமைத்துச் சிவபூசை செய்து அந்தப் பிரம்மஹத்தி தோஷத்தை நீக்கினான். இது சேது புராணத்துச் செய்தி.

கதையின் படி இராவணன் பிழை செய்தவன். பிறனொருவன் மனைவி மேல் ஆசை கொண்டு அவளைக் கடத்திய முறை கேட்டைச்செய்தவன். அந்தப் பாதகத்தைச்செய்தவனைக் கொன்ற இராமனை ஏன் பிரமஹத்தி தோஷம் பீடிக்க வேண்டும். பிழை விட்டவனைத் தண்டித்தது பிழையா?

அது வேறொன்றும் இல்லை. பிராமணியத்தின் ஆதிக்கம். இராவணன். பிராமண வம்சத்திலே பிறந்தவன். இராவணனுடைய தகப்பன் விச்சிரவசு. விச்சிரவசுவின் தந்தை புலத்தியன்; புலத்தியன் பிரம்மனுடைய மகன். எனவே இராவணன் பிராமணன். பிராமணனாகிய இராவணனைக் கொன்றதற்காக பிராமணனிலும் கீழ்ப்பட்டவனான ராமனுக்கு பிரம்மகத்தி தோசம் வந்துவிட்டதென்று கதை புனைந்துள்ளார்கள். பிராமணன்பிழை செய்தால் அது பிழை இல்லையா? அல்லது குற்றம் செய்த பிராமணனைத் தண்டிக்கச் சத்திரியனுக்கு உரிமை இல்லையா? தண்டித்தால் அவனுக்குப் பிரம்மகத்தி தோசமா? இது என்ன அபத்தம்!

இப்படி ஒரு பிழையான வரலாற்றைத் தரும் இலக்கியங்களை என்ன செய்வது? அத்தகைய பிழைகளைத் தவிர்க்க வேண்டும். இந்த வரலாறு உண்மையாகும் என்றால் இந்த வரலாற்றுக்குரிய இராமேஸ்வரத்தலத்தை போற்றலாமா? இந்தக் கதையை அப்படியே ஏற்றுக்கொண்டு அந்தப் புண்ணியத்தலத்துக்கு மாசு கற்பிக்கலாமா?

இப்படியெல்லாம் நான் பேசினால் இனி மேல் யாரும் என்னைப் பேச அழைக்கப் பயப்படுவார்கள். அதுவும் எனக்குத் தெரியும். ஆனால் அதற்காக எனது மனத்திற்குச் சரியென்று பட்டதைச் சொல்லாமல் விடக் கூடாது அல்லவா?

வ. சுப. மாணிக்கத்தின் இந்த தலைமை உரையை அடுத்து கீரனின் பேச்சு, அன்றைக்குக் கீரன் உண்மையில் நக்கீரனாகவே விளங்கினார். கீரனின் பேச்சுத் தலைப்பு 'கம்பனின் இடை அழகு' என்பது. தனது தலைப்புக்கு வருவதற்கு முன்னர் வ. சுப. மாணிக்கம்

கம்பன் விழா மேடையில் செருப்போடு ஏறக்கூடாது என்பது சம்பிரதாயம். அதை அமைச்சர் மீறியதாலேயே அந்த வழிமறிப்பு.

யாராக இருந்தாலும், அமைச்சரென்றால் என்ன, அதிகாரியாக இருந்தால் என்ன, கம்பன் விழாவிற்கு வந்து விட்டால் கம்பன் கழகத்தின் சம்பிரதாயத்துக்குக் கட்டுப்பட்டே ஆகவேண்டும் என்பது திரு. அருணகிரியின் சித்தாந்தம்.

அந்தக் காட்சியைப் பார்த்த திரு. ஜெயராஜ் 'கம்பன் அடிப்பொடி சா. கணேசன் இன்னும் சாகவில்லை , உயிரோடு தான் இருக்கிறார்' என்றார்.

கம்பன் விழாவிலே கலந்து கொண்டவர்கள். சாதாரணமானவர்கள் அல்லர். முதலமைச்சர், ஆளுநர், அமைச்சர்கள் என்பவரோடு; ஓய்வொழிச்சல் இல்லாது விழாக்களிற் கலந்தும் பல்கலைக் கழகங்கள், கல்லூரிற் பணியாற்றியும் கொண்டிருக்கின்ற பேரறிஞர்கள்.

புலவர் கீரன் தமிழ் நாட்டின் சூறாவளிப் பேச்சாளர். ஒரு இடத்தில் நிலையாக இருக்க முடிவதில்லை. ஒவ்வொரு நாளும் எங்காவது ஒரு இடத்திலாயினும் பேச்சிருக்கும். அவ்வளவு மதிப்பு அவருடைய பேச்சுக்கு.

திரு. அ.ச. ஞானசம்பந்தன், ஆன்றவிந் தடங்கிய சான்றோன். பல்கலைக்கழகப் பேராசிரியர் பதவியும், சொற்பொழிவுகளும் அருடைய நேரத்தைப் பங்கு போட்டுக் கொள்ளுவன. அவரைப் பற்றி யாழ்ப்பாணத்துப் பெரியோர்களுக்குச் சொல்லத் தேவை இல்லை. பல முறை இங்கு வந்து சென்றவர்.

கிருபானந்தவாரியாருடைய நிலைமை சொல்லித் தெரிய வேண்டியதில்லை. விழாவில் பேசும் போது அவரே சொன்னார். 'வீட்டுச் சாப்பாடு சாப்பிடக்கூடாது என்று எனக்குப் பிராப்தம்' அப்படி வீட்டில் இருக்க முடியாத அளவுக்கு ஒரே பிரசங்கம் !

அடுத்து குன்றக்குடி அடிகளார். இருவரும் ஆதீனப் பணியும் பேச்சுமாக ஓய்வில்லாத பணியாளர்.

ஔவை நடராசன் தமிழக மாநில அரசில் செல்வாக்கான பதவியில் இருப்பவர். தமிழ் நாட்டுத் தமிழ், கல்வித் துறைகளில் பொறுப்புவாய்ந்த பதவியில் இருப்பதோடு பேர் போன பேச்சாளரும் கூட. இவர் போலவே சிலம்பொலி செல்லப்பனும்.

சுகி, சிவம், இளம்பிறை மணிமாறன், சுதா சேஷையன் , த. இராமலிங்கம் என்று ஏராளமானோர்; தமிழகத்தின் இளையதலை முறைப் பேச்சாளர்கள், ஆனால் பிசியான பேச்சாளர்கள்.

அமைச்சர்களிலிருந்து மேலே சொல்லப்பட்ட, சொல்லப்படாத அறிஞர்கள் எல்லோரும் தமிழ்நாடு, புதுச்சேரி என்ற பரந்த பிரதேசத்தின் ஒவ்வொரு திக்குகளில் வாழ்பவர்கள்; செல்வாக்கானவர்கள்; ஓய்வொழிச்சல் இல்லாதவர்கள். இவர்களை எல்லாம் ஒரு குறிப்பிட்ட மூன்று தினங்களுள் ஒரே மேடைக்கு அழைத்துப் பேச வைப்பதென்றால் அது சாதாரண விஷயம் அல்ல.

அந்த அசாதாரணமான காரியத்தை மிகச் சாதாரணமாகச் செய்ய அருணகிரியினாலேயே முடியும் என அங்கே எல்லோரும் பேசிக் கொள்ளுகிறார்கள்.

எந்தப் பெரிய அறிஞராக இருந்தாலும் அவரவர் தம் பாட்டுக்குத் தாம் தாம் விரும்பிய தலைப்புக்களில் பேச முடியாது இவர் கொடுக்கும் தலைப்பில் தான் பேசலாம். அப்படி அவர்கள் ஏதாவது தலைப்பில் பேச வேண்டுமென விரும்பினால் அது இவருக்குப் பிடித்துக் கொண்டால் தான் முடியும், இல்லையென்றால் முடியாது.

புதுவைக் கம்பன் விழாவைப் பற்றி எழுதுவதாகச் சொல்லிவிட்டு அருணகிரியைப் பற்றி அளந்து கொண்டிருக்கிறானே என்று எண்ணாதீர்கள்.

புதுவை விழாவின் பொலிவின் பெரும் பங்கு அவராலும் அவர் குடும்பத்தாராலும் வந்ததே.

எதை எழுதினாலும் எழுதாவிட்டாலும் அவர் எம்மை (இலங்கையரை) தம் வீட்டுக்கழைத்துத் தன் சார்பில் செய்த விருந்துபசாரத்தில் அவர் வீட்டுப் பெண்கள் நாமெல்லாம் பூரிக்கும்படியாகச் சமைத்துப்போட்ட 'பூரி' யைப் பற்றியாவது எழுதியே ஆக வேண்டும் என்று என் உள்ளம் சொல்லுகிறது.

எனினும் இதை இத்தோடு நிறுத்திவிட்டு இனி விழாவைப்பற்றி எழுதுகிறேன் முதல் நாள் காலை விழாவைப் பற்றி எழுதி அரைகுறையில் விட்டு விட்டேன்.

முதல் நாள் காலை விழாத் தலைவர் திரு.வ. சுப. மாணிக்கம். நிறைந்த கல்வியாளர் மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத்தின் முன்னால் துணைவேந்தர் , மேடையில் கம்பீரமாக வீற்றிருந்தார். தோற்றத்தில் அறிவின் மிடுக்கு!

முதல்வரும் ஆளுநரும் அருகிலிருந்து அவரோடு பேச அவர் கால்மேற் கால் போட்டபடி நிமிர்ந்து வீற்றிருந்து அவர்களோடு உரையாடினார்.

இருவரும் அவரிடம் சரிந்து காதைக் கொடுத்து கதை கேட்கிறார்கள். இவ்வாறு உயர் பீடத்தில் உள்ளவர்களும் பணிந்து போற்றும் அறிஞர் வ. சுப. மாணிக்கம்.

எழுப்பிய வினாவுக்கு ஒரு செம்மையான பதில் உரையை வழங்கினார். அதையும் இங்க தருகிறேன்

'இராமன் தன்னைப் பீடித்த பிரம்மகத்தி தோசத்தை நீக்குவதற்காக சிவபூஜை செய்தான். உண்மைதான். ஆனால் இராவணன் என்ற ஒரு பிரராமனனைக் கொன்றதற்காக அல்ல. பிராமணனைக் கொன்றதற்காகப் பிரமகத்தி தோசம் பீடிக்கும் என்றால் இராவணனின் சகோதரர்களான கரதூசணர்கள் பிராமணர்கள் இல்லையா? அல்லது இராவணனின் உறவுக்காரியான தாடகையை வதம் செய்தானே. அப்போது எல்லாம் இந்த பிரமகத்தி தோசத்துக்காக சிவபூசை செய்யவில்லையே?

அப்போது, எதற்காக இராவணசங்காரத்துக்குப் பின் சிவபூசை செய்தான் என்று கேட்டால், இராம இராவண யுத்தம் தனியே இராமன் என்ற சத்திரியனுக்கும் இராவணன் என்ற பிராமணனுக்கும் இடையில் மாத்திரம் நடந்த யுத்தம் அல்ல. அது ஒரு போர். இருபக்கத்திலும் பல்லாயிரக்கணக்கானவர்கள் கலந்துகொண்ட போர். அந்தப் போரில் இராவணன் என்ற கொடியவன் மாத்திரம் மடியவில்லை. எத்தனையோ நல்லவர்களும் ஒருபாவமும் அறியாதவர்களும் மாண்டிருப்பார்கள். அத்தகையவர்களைக் கொன்றதாலே ஏற்படக்கூடிய பாவத்துக்காகவே இராமன் சிவபூசை செய்தானே அன்றி இராவணன் என்ற பிராமணனைக் கொன்றதற்காக அல்ல.

இதேகாரணத்துக்காகத்தான் சூரசங்காரத் துக்குப் பிறகு முருகப் பெருமானையும் பிரம்மகத்தி தோசம் பீடித்தது. அதனை நீக்க முருகப்பெருமானும் சிவபூசை செய்தார்.

இந்த அருமையான மரபை – எங்கள் இலக்கிய பாரம்பரியத்தை – உணராதவர்கள் இன்றைக்காவது உணர்ந்து கொள்ளட்டும்."

– இது கீரன், வ. சுப மாணிக்கம் அவர்களின் பேச்சுக்குக் கொடுத்த பதிலின் சுருக்கம் மாத்திரமே. அவருடைய அந்த அனல் தெறிக்கும் பேச்சை தமிழில் என்னால் இதைத்தவிர தரமுடியவில்லை. வேண்டுமென்றால் நீங்கள் உரத்து சிங்கம் கர்ச்சிப்பது போல் கர்ச்சித்து வாசியுங்கள். சிலவேளை அவருடைய பேச்சின் தொனியாவது அதில் வரக்கூடும்.

இந்த பதிலடியைக் கொடுத்த பின்தான் கீரன் தன்னுடைய தலைப்பில் பேசினார். அவருடைய பேச்சின் தலைப்பு 'கம்பனில் இடையழகு' என்பது. இது என்ன தலைப்பு? கம்பன் பெண்களின் இடையை வர்ணித்த அழகையெல்லாம் தொகுத்துப்பேசியிருப்பாரா என்று எண்ணி விடாதீர்கள். அவர் பேசியது கம்பன் தன் காவியத்தின் இடையிலேபாடிய 'இரணியவதைப்படல'த் தைப் பற்றி.

மிகச் சுவையான, ஆழமான, அகலமான, எழிலான, நேர்த்தியான, கவர்ச்சியான உயர்ச்சியான, இன்பமான பேச்சு. இன்னும் என்ன என்ன நல்ல அடைமொழிகள் உங்களுக்குத் தெரியுமோ அவற்றை எல்லாம் போட்டுக் கொள்ளுங்கள்; அத்தனையும் பொருந்தும்.

இரண்டு பாத்திரங்கள் பேசினால் அந்தப் பாத்தி ரங்களாகவே மாறிப்பேசுகிறார். அந்தப்பாத்திரங்களுக்கு என்னென்ன உணர்ச்சி இருக்குமோ அந்த அந்த உணர்ச்சிகளை எல்லாம் வரவழைக்கிறார்.

இடையிடையே இலக்கணங்களை விளக்குகிறார். அடடா இலக்கணம் படித்தால் இவரிடமல்லவா படிக்க வேண்டும் என்று எண்ணத்தோன்றும். அத்தனை எளிமை. இலக்கியம் என்றாலும் அப்படி. அத்தனை இனிமைத் தத்துவங்கனை விளக்கினார். தத்துவம் கேட்டால் இவரிடமல்லவா கேட்க வேண்டும் எனத் தோன்றும். அத்தனை தெளிவு.

இன்னும் சொல்லுவேன். நீண்டு கொண்டு போகிறது கட்டுரை. சுருங்கச்சொல்லுவதானால் கீரனின் பேச்சைக் கேட்பதற்காக மட்டும் காசு செலவழித்துக் கொண்டு இந்தியாவுக்குச் செல்லலாம். அத்தனை சிறந்த பேச்சு.

இது இந்த அளவோடு நிற்கட்டும். வ. சுப. மாணிக்கம் கீரன் இருவருக்கும் இடையில் ஏற்பட்ட கருத்து மோதலால் இனிமேல் அவர்கள் இருவரும் கதைத்துக் கொள்ள மாட்டார்கள், பகைத்து விட்டார்கள் என்றுதான் நாம் எண்ணினோம். ஆனால் மேடையால் இறங்கிய பின்னர் இருவரும் எவ்வளவு சந்தோசமாக உரையாடினார்கள். சாப்பிடும்போது கூட அருகருகே இருந்து சிரித்துப் பேசிச் சாப்பிட்டார்களே ! இந்த நாகரிகம் எல்லோருக்கும் எளிதில் வராது. அவர்கள் சான்றோர்கள் என்பதற்கு அவர்களுடைய கல்வியல்ல, அவர்களுடைய அந்த நாகரிகமே சாட்சி.

அன்றைய காலை விழாமுடிந்து சாப்பிட்டு முடிந்ததும் எல்லா பெரியவர்களும் மண்டபத்தில் உட்கார்ந்து சிரித்துப் பேசிக்கொண்டிருந்தார்கள். அ. ச. ஞானசம்பந்தன் முதலான பெருமக்களிடம் எம்மை அறிமுகப்படுத்தி ஆசீர்வாதம் பெற்றுக் கொண்டோம்.

ஆசீர்வாதம் என்றதும் எனக்கு இரண்டு ஆசீர்வாதங்கள் ஞாபகத்திற்கு வருகின்றன. ஒன்று

காஞ்சிப் பெரியவரிடம் பெற்ற ஆசீர்வாதம். மற்றது ஒரு யானையிடம் பெற்றது. அதை முதலிற் கூறுகிறேன்.

தஞ்சைப் பெரிய கோயிலுக்கு ஒரு நாள் போயிருந்தோம். கோயில் வாசலிலே கோயில் யானை பட்டை பட்டையா பூசிய திருநீற்றோடு நின்றது. தமிழ்நாட்டுப் பெருங்கோயில்கள் எல்லாவற்றிலுமே அநேகமாக கோயில் யானை இருக்கிறது.

ஒவ்வொரு கோயிலுக்குப் போகும் போதும் ஜெயராஜ் எங்களை யானையிடம் ஆசீர்வதம் பெற்றுக்கொள்ளுமாறு வற்புறுத்துவார், 'நானும் குமாரதாசும் (கம்பன் கழகச் செயலாளர்) முன்பே பல முறை ஆசீர்வாதம் பெற்றுவிட்டோம். நீங்கள் இந்த முறை பெற்றுக்கொள்ளுங்கள் எனத்தூண்டுவார். இரட்ண குமார் 'மிருகமொன்றிடம் என்ன ஆசீர்வாதம் வேண்டிக் கிடக்கிறது' எனத் தட்டிக்கழித்தே வந்தார். எனக்கு அரைகுறை மனம்.

தஞ்சைப்பெரிய கோயில் யானையைக் கண்டதும் ஜெயராஜ்வழமைபோல் 'ஆசீர்வாதம் பெற்றுக் கொள்ளுங்கள்' என வற்புறுத்தினார். பலமுறை கேட்டு விட்டார். சரி ஒருக்கால் ஆசீர்வாதம் பெற்றுத்தான் பார்ப்போமே என்று பொக்கற்றைத் தடவினோம். பத்துப்பைசா யாரிடமும் இல்லை. ஒரு ஆசீர்வாதத்துக்கு யானையின் (தும்பிக்கை) கையில் பத்துப் பைசா வைக்க வேண்டும். என்னிடம் ஒரு 20 பைசா இருந்தது. மற்றதெல்லாம் அதிக தொகை. (அதிக தொகை என்றால் ஆயிரம் இரண்டாயிரமல்ல. 25 பைசா 50 பைசாதான்).

சரி ஒரு ஆசீர்வாதத்திற்கு 10 பைசாதானே. 20 பைசாவைப்போட்டு இருவருமே பெற்றுக்கொள்வோம் என்று 20 பைசாவை இரட்ணகுமாரிடம் கொடுத்தேன். அவர் அதை யானையின் கையில் வைத்து ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டார்.

யானையிடம் கணக்காக மீதிப் பத்துப் பைசாவுக்கு ஆசீர்வாதம் பெறுவதற்காக நான் போய் நின்று கொண்டேன்.ஆசீர்வதிப்பதற்காகத் தன் துதிக்கையை என் தலையில் வைக்கப்போகிறதே என்ற கூச்ச உணர்வோடு கண்மூடிக் கரம்கூப்பி பயபக்தியோடு நின்றேன்.

துதிக்கை தலையிற் படுவதாகக் காணோம். கண்ணைத்திறந்து பார்த்தேன். துதிக்கை என் முகத்திற்கு நேரே நிற்கிறது. இன்னுமொரு சில்லறைக்கு மீதிப் 10 பைசா பாக்கி இருக்கிறது என்ற கணக்கு அதற்குப் புரியாது என்பது அப்போதுதான் எனக்குப் புரிந்தது. பிறகு என்ன? இருந்த 25 பைசாவைப் போட்டு ஒரு ஆசீர்வாதத்தைப் பெற்றுவிட்டு 10 பைசாவுக்கும் 20 பைசாவுக்கும் பேதம் தெரியாத யானையிடம் ஆசீர்வாதம் பெறச் சொன்னவரைத் திட்டிக்கொண்டேன். வேறு என்னதான் செய்யமுடியும்?

இனி காஞ்சிப் பெரியவரின் ஆசீர்வதிப்பைப் பெற்ற அந்த தெய்வீக அனுபவத்தைக் கூறுகிறேன்.

புதுவைக் கம்பன் விழா முடிந்து சென்னை சென்று அங்கிருந்து, பெரியவரைத் தரிசிப்பதற்காக வென்றே காஞ்சிபுரம் போனோம். அங்கே எல்லோருக்கும் எளிதிற் கிட்டாத அந்தப் பெறற்கரும் பேறு எமக்குக் கிடைத்தது. அந்த நடமாடும் தெய்வத்தைத் தரிசித்தோம். வயது தொண்ணூற்றைந்தைத் தாண்டிய தளர்ந்த நிலையிலும் கன்னியாகுமரியிலிருந்து காஷ்மீர்வரை பரந்த அந்தப் பாரத பூமியை நிலம் தோய நடந்தே புனிதப்படுத்திய அந்தத் திருமென் மலர்ப்பாதங்களிற் பணியும் பேறு எமக்குக் கிட்டியது.

கரம் கூப்பிச் சிரம் தாழ்த்தி, மெய்சிலிர்க்க, கண் பனிக்க அவர் சன்னிதானத்தில் நிற்கும் நூற்றுக் கணக்கான அடியார்களுக்கிடையில் கையிலிருந்த சஞ்சிகையிற் பதித்திருந்த தன் திருபார்வையைவிலக்கி எம்மை நோக்கிய அந்த அருட்பார்வை, தளர்ந்து மெலிந்த தன் திருக்கரத்தை அபய ஹஸ்தமாய் உயர்த்தி 'இலங்கையிலே எல்லாத் துன்பமும் நீங்கி மக்கள் அனைவரும் சுபீட்சமாய் வாழவேணும்' எனத் திருவருளைப் பிரார்த்தித்து வழங்கிய ஆசீர்வாதம்! இவை எல்லாம் நம் முன்னைத் தவம் போலும்.

இந்தத் தெய்வீக அனுபவத்தை இப் போதைக்கு இத்துடன் நிறுத்திக்கொண்டு புதுவை விழாவிலே, எங்கள் ஜெயராஜின் உரையையும் அதனால் இலங்கைக்குக் கிடைத்த பெருமையையும் பற்றிக் கூறுகிறேன்.

புதுவைக் கம்பன் விழாவின் இரண்டாம் நாள் காலை நிகழ்ச்சியில் தமிழகத்தின் இன்றைய பிரபல பேச்சாளர்களுள் ஒருவரான சுகி. சிவம் அவர்களின் தனியுரை. அதற்குத் தலைமை ஏற்றவர் எங்கள் நாட்டு ஜெயராஜ்.

அவரை முதல்நாள் விழாவிலேயே கௌரவித் திருந்த போதிலும் அன்றைய விழாவில் விசேடமாக அறிமுகம் செய்து வைத்தனர். 'இலங்கையிலே மனிதர் வாழமுடியுமா? என்று நாம் சந்தேகிக்கும் இவ்வேளையில் இவ்வளவு பிரச்சினைகளுக்கு மத்தியிலும் தொடர்ந்து பல வருடங்களாகக் கம்பன் விழா நடத்தி கம்பனுக் கென்றொரு கோட்டமும் அமைத்து இதுவரை நாம் கூடச் செய்யாத ஒரு காரியத்தைச் சாதித்துள்ளார். திருச்சிப் பேராசிரியரின் மாணவனாகத் தன்னை நினைத்து

தோற்றத்திலும் அவர் போலவே மாறி வருகிறார்' என்றெல்லாம் பாராட்டினார்.

ஜெயராஜின் தலைமை உரை ஆரம்பித்தது. அன்றைய விழாவுக்குத் தலைமை தாங்கத் தனக்கு என்ன தகுதி என்பதற்கு சுவையான ஓர் காரணத்துடன் தன் பேச்சைத் தொடங்கினார்.

'தேவர்களுடன் பேசும் திருமால் இலங்கை அரக்கன்இராவணனை அழிக்கத் தசரதனுக்குப் புதல்வனாகப் பிறப்பதாய் வாக்களித்த காட்சியைக் கம்பனிலிருந்து எடுத்துக்காட்டி இலங்கையில் இராவணன் இருந்ததால் தான் அயோத்தியில் இராமன் பிறந்தான். அயோத்தியில் இராமன் பிறந்ததால் தான் இராமாயணம் பிறந்தது; இராமாயணம் பிறந்ததால் தான் கம்பனுக்கு மூலக்கதை கிடைத்தது; இதனால் தான் இன்று கம்பன் கழகங்களும் கம்பன் விழாக்களும் நடைபெறுகின்றன. மொத்தத்தில் இன்றைய கம்பன் விழாக்கள் அனைத்துக்கும் இலங்கையே மூலகாரணம் ஆனது. இலங்கையில் உள்ளவர்கள் தங்களை அழித்துக் கொண்டு உங்களுக்குக் காப்பியங்களைத் தருகின்றனர். இக்கூற்று அன்றைக்கும் இன்றைக்கும் பொருத்த மானதே.,

ஜெயராஜ் இப்படிப் பேசி முடிக்க சபை அக் கூற்றுக்குள் உள்ள மறை பொருளை உணர்ந்து மகிழ்ந்து ஆரவாரித்தது.

இவ்வாறு ஒரு முன்னுரையோடு ஆரம்பித்துப் பின் கம்பன் காப்பியத்தின் சிறப்புக்கள் பற்றி புதுக் கருத்துக்களை வெளியிட்டார். இவற்றைக் கேட்டு அறிஞர்கள் பலரும் வியந்தனர்.

இங்கு நடக்கும் கம்பன் விழாக்களில் அவருடைய கருத்துக்களைக் கேட்கலாம் என்றபடியால் அவற்றை விரிவுபடுத்துவதை தவிர்க்கிறேன்.

தன் பேச்சின் முடிவில் 'நாங்கள் இங்கு வந்ததிலிருந்து இலங்கையில் என்ன நடக்கிறதுஎன்று பலரும் விசாரிக்கிறார்கள். திருப்பித் திருப்பிச் சொல்லுமளவுக்கு அங்கு நடப்பவை மகிழ்ச்சியானவை அல்ல' என்று கூறிய ஜெயராஜ் 'எல்லார்க்கும் பொதுவாக அங்குள்ள நிலைமையை இந்த மேடையிலேயே சொல்லி விடுகிறேன்' என்று கூறி விட்டு, இலங்கைத் தமிழர் நிலையை மிக உருக்கமாக விளக்கினார். சபை கசிந்த கண்ணீரோடு கேட்டு உருகியது.

தலைமை உரைமுடித்து 'நாளும் உயர்க' என்ற தலைப்பில் சுகி. சிவத்தின் பேச்சு ஆரம்பித்தது. இலங்கைத் தமிழர் பற்றி ஜெயராஜ் கூறியதற்கு அவர் தன் பேச்சின் தொடக்கத்தில் ஒரு ஆறுதலைக் கூறினார். 'இராமாயணகாலத்திலே இலங்கைப் பிரச்சினையைத் தீர்க்க இங்கு ஆட்சியில் இல்லாத இராமன் தான் முன் வந்தான். இன்றும் அது போலவே நடக்கும் என நம்புவோம்' என்றார். ஆட்சியில் இல்லாத கருணா நிதியைத் தான் அவர் குறிப்பிடுகிறார் என்பதை உணர்ந்து கொண்டு சபை ஆரவாரித்தது.

காலை விழா முடிந்தது. ஜெயராஜின் முகத்தில் மகிழ்ச்சியைக் காணவில்லை. 'காலைப்பேச்சில் எனக்குத் திருப்தியில்லை.' என்று விசனப்பட்டார். அவரின் முழுமையான பேச்சாற்றலைப் பார்த்திருந்ததால் எமக்கும் அவர் தன் முழு ஆற்றலையும் காட்டவில்லை என்றே பட்டது. அந்த ஏக்கங்கள் எல்லாம் இரட்டிப்பான மகிழ்ச்சியாக மாலைப் பட்டிமண்டபத்தில் மாறியது. இங்கு நாம் காணாத அவருடைய ஆற்றலைக் கண்டு வியந்தோம்.

மாலையும் வந்தது. பட்டிமண்டபம் ஆரம்பிக்க வில்லை. மண்டபம் நிறைந்து வழிந்தது. அ. ச.ஞானசம்பந்தன், முதல்வர் பாரூக் முதலானோர்கூட வரப் பிந்தியதால் வெளியே பொருத்தப்பட்டிருந்த ரீ.வி.யில் நிகழ்ச்சிகளைப் பார்க்க வேண்டியதாற்று.

அன்றைய பட்டிமண்டபத் தலைப்பு 'கம்பன் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தவர் தந்தையரா? தாயரா? மைந்தரா? என்பது. நடுவர் திரு. சிலம்பொலி செல்லப்பன், ஜெயராஜ் மைந்தர் கட்சிக்காக வாதாடினார். அவர் கட்சிக்குத் தி. இராசகோபாலன் என்ற பேராசிரியர் தலைமை . பட்டிமண்டபத்தை நோக்கித் தீர்ப்பு வழங்க உதவுவதற்காக ஒரு நோக்கர் குழுவும் அமைக்கப்பட்டது. எங்கள் விரிவுரையாளர் கலாநிதி இ.பாலசுந்தரம், கம்பன் கழகச் செயலாளர்குமாரதாசன் இருவரும் அந்தக் குழுவில் அங்கம் வகித்தனர்.

பட்டிமண்டபம் ஆரம்பித்து ஒவ்வொரு கட்சிக்காரர்களும் வாதிட்டுக் கொண்டு வந்தனர். ஜெயராஜினுடைய முறை வருகிறது; அவர் எழும்புகிறார். எழும்பியவர் தடுமாறி விழப்பார்த்தார்; மேடையிலே சலசலப்பு. நாமும் பயந்து விட்டோம்.

நெடுநேரம் சப்பணம் கொட்டி இருந்ததால் வந்த கால்விறைப்பே அதற்குக் காரணம். ஒருவாறு விழாமற் சமாளித்துக் கொண்டு 'மைக்'குக்கு முன்னால் வந்து நிற்கிறார். எமக்கும் தொடக்கத்திலேயே இப்படி நடந்து விட்டதே என்று மனதில் படபடப்பு. ஆனால் ஜெயராஜ் துணிவுடன் 'நான் தவறுதலாக விழப்பார்த்தேன் என்று தானே நீங்கள் நினைக்கிறீர்கள். அப்படி அல்ல. இலங்கையில் தமிழர்கள் விழப் பார்க்கிறார்கள் என்பதை உணர்த்தவே அப்படிச் செய்தேன்' என்கிறார்.

சபையில் பலத்த கரகோஷம். சந்தர்ப்பத்திற்கு ஏற்ற அவரது சாதுர்யத்தைக் கண்டு வியந்தோம். தனது கட்சியை நியாயப் படுத்தி மிகத் திறைமையாகப் பேசினார். சபை அசந்து விட்டது.

வாதிட வேண்டியவர்கள் வாதிட்டாயிற்று. இனிக் கட்சித் தலைவர்கள் தொகுப்புரை நிகழ்த்திக் கொண்டிருக்கிறார்கள். புதுவைக் கம்பன் கழகச் செயலாளர் அருணகிரி மேடையிலே ஏறுகிறார். ஜெயராஜின் அணித்தலைவர் காதில் ஏதோ சொல்லுகிறார். சிறிது நேரத்தில் அவர்கள் அணித் தலைவர் தொகுப்புரை ஆற்ற அழைக்கப்படுகிறார். ஆனால் அவர் எழும்புகிறார் இல்லை. ஜெயராஜைப் பார்த்து நீங்க போங்கசார், என்றார். அருணகிரி அவர் காதில் என்ன சொல்லியிருப்பார் என்பதை அப்போது புரிந்து கொண்டேன். ஜெயராஜின் வாதத்திறமையில் மயங்கி ஜெயராஜையேஅவர் அணிக்கான தொகுப் புரையை நிகழ்த்தும்படி கேட்டதில் இலங்கையென்ற வகையில் நாம் எல்லோருமே பெருமைப்படலாம்.

அவருடைய முதல் வாதத்தைவிட தொகுப்புரை மேலும் பலமடங்கு சிறந்ததாக அமைந்து விட்டது. சுதா சேஷைய்யன் என்ற பேச்சாளர் தனது வாதத்தின் போது ஒரு கருத்தைச் சொல்லியிருந்தார். கைகேயி மந்தரையின் சூழ்ச்சியில் மயங்கித் தசரதனைக் கோபித்தாள். அணிகலங்களை எல்லாம் களைகிறாள். திலகத்தை அழிக்கிறாள். திலகத்தை அழிப்பதைக் கம்பன் பாடு கையில் 'மதியிலிருந்துமறுவை அழித்தது போல' அழித்தாள் என்ற உவமையைக் கையாளுகின்றான். மதியில் மறுவை அழித்தால், மதிக்கு அழகு கூடுமே அன்றிக்குறையாது. ஆனால் ஒரு பெண் தன் குங்குமத்தை அழித்தால் அழகு குறையும். எனவே இது பிழையான உவமானம் என்பதே அவர் கூறிய கருத்து.

தொகுப்புரையில் ஜெயராஜ் அதை மறுத்து, பாடல் ஆதாரங்களோடு கைகேயியை ஒரு ஞானியாகச் சித்திரித்துப் பேசினார்.

ஜெயராஜின் அந்தக் கருத்தைக்கேட்ட அ.ச.ஞானசம்பந்தன் கையை உதறிக் கொண்டு 'அட நானுந்தான் இவ்வளவு காலம் இந்த இராமாயணத்தைப் படிச்சிருக்யேன். இப்படி ஒரு கருத்து எனக்கு வந்ததே இல்லையே! என்ன அருமை ! என்ன அருமை! என்று வியந்து பாராட்டியது இப்போதும் என் கண்முன்னே நிற்கிறது.

அ.ச. ஞானசம்பந்தன் 'இந்தப்பயலை எங்கடா பிடிச்சே' என்று அருணகிரியை மனம் திறந்து பாராட்டினார். இந்தளவுக்கு அருமையாகப் பேசிய ஜெயராஜ் தனது தொகுப்புரையை முடிக்கும்போது, நடுவரைப் பார்த்து ஐயா இலங்கையிருக்கும் எங்களுக்கு நடுவர்கள் என்று யாரும் வந்தாலே பயமாக இருக்கிறது. நெடுங்காலம் உங்கள் தீர்ப்புக்களால் பாதிக்கப்பட்டு வந்துள்ளோம். இதிலாவது நீதியான தீர்ப்பை எதிர்பார்க்கிறோம்' என்று முடித்தார்.

இரு பொருள்பட அவர் பேசிய இப்பேச்சால் நடுவர் உட்பட மண்டபமே அதிர்ந்து சிரித்தது.

அருணகிரி ஜெயராஜைக் கட்டித்தழுவி 'ராதா கிருஷ்ணனை உன்குடும்பியிலே மட்டுமில்லே உன் பேச்சிலேயும் பிடிச்சு வச்சிட்டே தமிழ் நாட்டு நல்ல பேச்சாளர்களை விரல் விட்டு எண்ணினால் அதுக் குள்ளே நீயும் வருவே' என்று ஆனந்தம் பொங்கப் பாராட்டினார்.

அன்று இரவு உணவு அருந்திக்கொண்டிருந்த இடத்திற்கு அ.ச. ஞானசம்பந்தன் வருகிறார், வந்தவர் எங்கே போகப் போகிறார் என நாம் நினைக்க எம்முன்னால் வந்து நிற்கிறார். அவரைக் கண்டதும் நாம் அனைவரும் எழுந்து நிற்கிறோம். அவர் ஜெயராஜைப் பார்த்து 'நான் உன்னைப் பார்த்துப் பேசணும்னு தான் வந்தேன். எனக்கு அ.ச. ஞானசம்பந்தன் என்று பேரு' என்று ஏதோ சாதாரண மனிதர் போல் தன்னை அறிமுகப்படுத்துகிறார். தமிழ் வழங்குகிற எந்த ஒரு நாட்டிலும் அ.ச. ஞானசம்பந்தன் என்றபேர் வழங்கும். அத்தகைய பெரிய மனிதர் என்ன அடக்கமாக தன்னை அறிமுகப்படுத்துகிறார். எனக்குச் சிரிப்புத்தான் வந்தது.

அவருடன் ஒரு சில வார்த்தையாவது பேச முடியாதா? என்று ஏங்கிக் கொண்டிருக்கும் எங்களிடம் வந்து அந்த மனிதன் தன்னை அறிமுகப்படுத்துகிறாரே. இது எல்லாம் ஜெயராஜின் பேச்சால் வந்த பேறு தான். ஜெயராஜை வெகுவாகப் புகழ்ந்தார் நெடு நேரம் அன்போடு பேசினார். எல்லோரும் கேட்கும் சந்தோசங்களுக்கெல்லாம் அருமையாக விடை கூறுகிறார். அவருக்குத் தெரியாததோ?

அன்றைய பேச்சு தமிழகத்து அறிஞர்களையும் மக்களையும் வெகுவாகக் கவர்ந்து விட்டது. ஒட்டோ கிறாபிலே கையொப்பம் வைத்துத் தரும்படி ஜெயராஜைச் சுற்றி ஒரே கூட்டம். அவருக்குக் கிட்டே போக முடியாதவர்கள் எம்மிடம் வந்து அவரைப் பற்றி விசாரிக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் பதில் சொல்லி எங்களுக்கு அலுத்து விட்டது.

"இப்படி ஒரு மாணவனைப்பெற என்ன தவம் செய்தீர்கள்?" என்ற ரீதியில் ஆசிரியர் சிவராமலிங்கம் அவர்களுக்குப் பாராட்டு. அவர் பூரித்துப் போய் விட்டார்.

அங்கு நிறையப் பேருக்கு இலங்கைக் கம்பன்

கழகத்தைப் பற்றித்தெரிந்திருக்கிறது. ஜெயராஜையும், குமாரதாசனையும் முன்பே தெரிந்தவர்கள் நெடுநாள் பிரிந்திருந்த தம் சகோதரர்களைக் கண்டதுபோல நடந்து கொள்கிறார்கள்.

பேராசிரியர் ராதாகிருஷ்ணன் அவர்களின் வீட்டுக்குப் போனால் அவர் மனைவி தன் பிள்ளைகளிலும் மேலாகப் பாசத்தைபொழிகிறார்.இவர்கள்மேல்அன்பு பாராட்டு கிறவர்களைப்பற்றிச் சொல்லும்போது கட்டாயமாக கோடுர் ராஜகோபால் சாத்திரங்களைப் பற்றிச் சொல்ல வேண்டும். தமிழிலே சான்றோன் என்ற சொல்லுக்கு உதாரணமாக ஒருவரைக் காட்டவேண்டும் என்றால் எனக்குத் தெரிந்த மிகப் பொருத்தமானவர் கோடூர் ராஜகோபால் சாஸ்திரிகள் தான் என்று அடிக்கடி ஜெயராஜ் எனக்குச் சொன்னது நூற்றுக்கு நூறு உண்மை என்பதை அவரைக்கண்டு பழகிய போது உணர்ந்து கொண்டேன். தெய்வீகத் தோற்றத்தோடு பொலிந்த அந்தப் பிராமணத் தம்பதிகள் முன்பே பழக்கமான ஜெயராஜ் குமாரதாசனோடு எங்களையும் தங்கள் பிள்ளைகளாகவே போற்றினர். சென்னைவரை எங்களைத் தங்களோடு அழைத்துச்சென்று சொந்தக் குழந்தைகள் போல் பராமரித்ததை என்றும் மறக்க முடியாது. அவர் பாரியார் 'வாரம் ஒரு லெற்றர் சுகமாய் இருக்கிறோமென்று ஒரு வரியாவது எழுதிப் போடுங்கப்பா" என்று கண்ணீரோடு கூறியது அவர்கள் கம்பன் கழகப் பிள்ளைகளில் வைத்திருக்கும் பற்றைக்காட்டியது.

இவ்வளவுக்கும் அவர் சாதாரணமான ஒருவர்அல்ல. தமிழகத்தில் அவரைத் தெரியாத பெரியவர்களே கிடையாது. அந்த அளவுக்குப் பிரபலமானவர். தமிழகத்தின் இன்றைய தலைசிறந்த பாடகர் சேஷகோபாலனை உருவாக்கியதில் முக்கிய பங்கு இவருடையதே.

ஜெயராஜின் பேச்சினால் ஏற்பட்ட தொடர்புகள் தமிழகத்திற்கும், ஈழத்திற்கும் ஓர் நிரந்தர பாலமாக அமையும் என்பதில் ஐயமில்லை. அந்த அளவுக்கு அங்கே மதிக்கிறார்கள்.

ஜெயராஜ் பேசியதற்குப் பின் நடந்த விழாக் களுக்கு போகும்போது 'சில வேளைகளில் பிந்திச் சென்றால் மண்டபம் நிரம்பியிருக்கும். எம்மைக் கண்டதும் முன்னுக்கிருப்பவர்கள் எழுந்து ஆசனம் தருவார்கள். அறையிலே இருந்தால் கதவைத் தட்டுவார்கள், திறந்தால், ஜெயராஜைப் பார்த்து 'உங்கள் பேச்சு ரொம்பப் பிரமாதம்' என்று பாராட்டுவார்கள்.

புதுவையிலே முருகேசன் என்ற பிரபலமான வக்கீல் தனது கார்களில் ஒன்றை எமக்கென்றே சாரதியோடு தந்து விட்டார். இராமன் என்பவர் தேவைகளைக் கவனித்துக் கொள்ளவென்றே நியமிக்கப்பட்டார்.

தமிழகத்தின் ஏனைய கழகக்காரர்கள் ஜெயராஜிடம் வந்து 'நீங்கள் எங்கள் விழாவுக்கு அவசியம் வரணும்' என்று அழைப்புவிடுத்தார்கள்.

இறுதி நாள் விழாவும் முடிந்து வெளியில் நிற்கும் போது முதல்வர் பாரூக் வந்தார். அருணகிரி அவர்களைக் கூப்பிட்டு 'ஜெயராஜுக்கு புதுவைக் கம்பன் விழாக்களுக்கு நிரந்தர அழைப்புக் குடுத்திடுங்க' என்றார்.

அருணகிரி 'இனிமேல் நாங்க கூப்பிடாட்டிக்கும் மக்கள் விட மாட்டாங்க. இலங்கை ஜெயராஜ் இல்லையான்னு கேப்பாங்க. இனி ஜெயராஜ் இல்லாம புதுவைக் கம்பன் விழா இல்லை' என்றார் உறுதியாக, பின் ஜெயராஜைப் பார்த்து 'என்ன ஜெயராஜ் தவறாம அடுத்த வருசமும் வந்திடணும்' என்றார்.

சொல்லிவிட்டு அருணகிரி ஒரு மடித்த கவரை ஜெயராஜின் கையிலே திணித்தார்., அவர் போனதும் திறந்து பார்த்தோம். உள்ளே 1500 ரூபா இந்தியப் பணத்தில். வழக்கமாக இந்தியப் பேச்சாளர்களுக்குத் தான் நாம் பணம் கொடுத்துப் பேச்சுக்கு அழைப்போம். இன்று நிலைமை மாறியிருக்கிறது. உண்மையிலேயே என் மனம் அளவிலாப் பெருமை கொண்டது. அது எல்லாம் பெரிதல்ல. அவர்களுடைய அன்பும் பஸ் ஏறும் வரையும் புதுவைக் கம்பன் கழகப் பெரியவர்களெல்லாம் எம்மோடு வந்து எம்மை வழியனுப்பி வைத்த அக்கறையும் இளைஞர்கள் என்று எண்ணாமல் எம்மையெல்லாம் கௌரவித்த பெருந்தன்மையும், அவர்களுடைய சான்றாண்மையும் தான் பெரிது.

எல்லாவற்றிலும் மேலாக தமிழகத்திற்கும் ஈழத்திற்குமிடையில் ஒரு உறுதியான இலக்கியப்பாலம் இலங்கைக் கம்பன் கழகத்தால் கட்டப்பட்டு விட்டது என்பதே எமது பயணத்தில் எமக்குக் கிடைத்த பெரிய திருப்தி.

புதுவைக் கம்பன் விழா அனுபவங்களை நான்கு வாரங்களாகப் பகிர்ந்து கொள்ளும் வாய்ப்புக் கிட்டியது. சொன்னவை சில. அனுபவித்தவையோ பல. இன்னும் நிறைய விஷயங்கள் உள்ளன. ஆயிரக்கணக்கில் செலவழித்து நான் பெற்ற அனுபவங்கள் அத்தனையையும் இனாமாகத் தர மனம் வரவில்லை. எனவே இத்துடன் இத்தொடரை நிறைவு செய்கிறேன். புதுவைக் கம்பன் விழாவுக்கு வரமுடியாதவர்கள் இதனைப் படித்துக் திருப்திப்படுங்கள். கம்பன் வாழ்க! கம்பன் புகழ் வாழ்க!! கன்னித் தமிழ் வாழ்க!!!

*கம்பனின் மிகுந்த ஈடுபாடு கொண்ட பேராசிரியை சரோஜினி செல்லக்கிருஷ்ணன் அவர்கள் தமிழகத்தில் நடந்து வருகின்ற கம்பன் விழாக்களைப் பார்த்து கடந்த இருபது ஆண்டுகளுககு மேலாக அவைபற்றிய குறிப்புக்களை எழுதி வருகிறார். அவ்வாறு தான் எழுதிவைத்த முக்கிய குறிப்புக்களைத் தொகுத்துக் கம்பன் கருத்துக் களஞ்சியம் என்ற பெயரில் அண்மையில் வெளியிட்டிருக்கிறார். அந்நூலில் அகில இலங்கைக் கம்பன் கழகத்தின் சார்பில் புதுவைக் கம்பன் விழாவில் கலந்து கொண்டோரின் நிகழ்ச்சிகள், கருத்துக்கள் பற்றிய சிலவிபரங்களும் உள. அவற்றை இங்கே தொகுத்துத் தந்துள்ளோம்.*

# தெய்வம் தொழாள், கொழுநன் தொழுதெழுவாள்

"கம்பனில், இந்திரசித்தும் மண்டோதரியும் சந்திப்பதாகக் காட்சி ஏதும் இல்லை. காரணம் – கணவன் செயலை மனைவி எதிர்ப்பது மண்டோதரிக்கு இல்லை. ஆனாலும், சீதையின் அழகில் கணவன் வீழ்ந்து கிடக்கிறானே என்ற வருத்தம் முகத்தில் இருக்கத்தானே செய்யும். தன் அன்னை முக வாட்டத்தைக் கண்டு இந்திரசித்து வெகுண்டு இராவணனைக் கோபித்தால் என் செய்வது என மண்டோதரி, சீதை இலங்கை வந்த நாள் முதல் தன் மகன் இந்திரசித்தைச் சந்திப்பதைத் தவிர்த்து வந்தாள். ஏனெனில் தன் அருமைக் கணவன் இராவணனை இந்திரசித்து கோபிப்பதை மண்டோதரியால் தாங்கமுடியாது"

பக். 188

# ஏழிரண்டாண்டின் வா!

"கம்பன், கைகேயியை ஓர் உயர்ந்த தாயாகத் தன் காவியத்தில் காட்டுவான். கூனியிடம், "இராமனைப் பயந்த எற்கு இடருண்டோ" என்றெல்லாம் கேட்கக் கூடிய உயர்ந்த பாசநெஞ்சினளாகக் கைகேயி வாழ்கின்றாள். அத்தகைய கைகேயியைத் திடீரென ஒரே காட்சியில் கொடுமைக்காரியாக, நெஞ்சில் ஈரமில்லாதவளாக மாற்றக்கூடாது. அப்படி மாற்றினால் தான் படைத்த கைகேயி என்ற பாத்திரம் வீழ்ந்துவிடும் என்பதைக் கம்பன் நன்கு உணர்ந்திருந்தான். எனவேதான், தசரத மாமன்னன் ஆணையின்படி பதினான்கு ஆண்டுகள் காட்டுக்குப் போகவேண்டும் என்பதைக் கூறவந்த கைகேயி "இராமா, நீ ஏழிரண்டாண்டின் வா" என்று, என்றும் மாற்றமுடியாத கைகேயியின் தாயுள்ளம் "வா" என்பதையே சொல்லும்படி ஆயிற்று"

பக். 189

# நெற்றிக்குத் திலகம் களங்கமா?

கூனியின் சூழ்ச்சியினால் தூய சிந்தை திரிந்த கைகேயி தன் அலங்காரத்தை அழித்தவளாய் 'பூ உதிர்ந்தது ஓர் கொம்பு எனப் புவிமிசை புரண்டு கிடக்கின்றாள்". தன் நெற்றித்திலகத்தை அழிக்கின்றாள். இதனைக் கூற வந்த கம்பன், "மதியினில் மறுத்துடைப்பாள் போல் அளக வாள் நுதல் அரும்பெறல் திலகமும் அழித்தாள்" எனக் கைகேயி தன் பொட்டை அழித்தது நிலவானது தன் களங்கத்தை நீக்கியது போன்றது என்று கூறுவான். இது கம்பனது தடுமாற்றமோ அல்லது அவனது தவறோ அல்ல. கைகேயி தான் பெற்ற மகனை விட இராமன்மீது பற்றுகொண்ட ஞானி. ஆனால் அவள் ஞானத்தைத் தடை செய்தவை இரண்டு பற்றுக்கள் ஆகும். கணவன் தயரதன், மைந்தன் பரதன் ஆகிய இருவர்மீது கொண்ட பெருங் காதலே அத்தகைய தடைகள். ஆனால், கைகேயி எப்போது பொட்டை அழித்தாளோ அப்போதே அவளை தன் தாரமல்லள் எனத் தயரதன் துறந்தான். கைகேயியை தன் தாயல்லள் எனப் பரதன் துறந்தான். எனவே பற்றுகள் நீங்கிய ஞானமுகம் மேலும் பொலிவு பெற்று விளங்கியது என்பதை நிலாவின் களங்கம் நீங்கியது எனக் கம்பன் கூறினான். "இடரிலா முகத்தாள்" என்று குகனிடம் பரதன் கைகேயியினைத் திட்டியது இன்பமும் துன்பமும் இல்லாத சமநிலை என்ற சாந்தி பாவத்தைக் கைகேயி பெற்று விட்டாள் என்பதையே உணர்த்துகின்றது. ஞானம் கைவரப் பெற்றவர்கள் மோனம் என்னும் பெருநிலையில் மூழ்கி விடுவார்கள். அதைப் போன்றே ஞானம் பெற்ற கைகேயி பிறகு பேசவேயில்லை.

பக் 192

# மலர்க்கரம் விதிர்ப்புற்றான்

புதுவைக் கம்பன் விழா (13–5–89) பட்டிமண்டபத்தில் "கம்பன் காட்டும் நாடுகளில் வீர விருது பெறுதற்குத் தகுதியுடையது இலங்கையே" என்ற அணியில் தலைமையேற்றுப் பேசிய திரு இலங்கை ஜெயராஜ் அவர்கள் மிகவும் சிறப்பாக வாதாடினார்.

(மற்ற இரு அணிகள் "அயோத்தியே! கிட்கிந்தையே" என்பதாகும்)

"இலங்கையை வீழ்த்த அயோத்தியும் கிட்கிந்தையும் கூட்டுச் சேர்ந்ததிலிருந்து இலங்கையின் வீரம் புலப்படுகின்றது அல்லவா?

கிட்கிந்தை வீரன் வாலி தன் எதிரியின் பலத்தில் பாதி பலம் தனக்கு வரவேண்டுமென்று வரம் வாங்கியவன். அது வீரமா?

இலங்கைக் கும்பகருணன் உறங்குகின்றபோது உள்ளே புகுந்த அனுமன் அவன் விடும் மூச்சுக் காற்றினால் நடுங்கினான். இலங்கை தூங்கும்போது கூட தன் வீரத்தை உறங்கவிடுவதில்லை.

மேலும் இராமன் மிகக் கடுமையாக கும்பகருணனை எதிர்த்துப் போரிடுகின்றான். அவனது தளராத மாபெரும் வீரத்தைக் கண்டு அயோத்தி வீரன் இராமன் திகைக்கின்றான். இதனைக் கூற வந்த கம்பன் வள்ளலும் மலர்க்கரம் விதிர்ப்புற்றான் என்று கூறுவான். பெண்கள் கைகளைத்தான் மலர்க்கை என்று கூறுவார்கள். இந்த இடத்தில் இலங்கைக் கருணனின் தறுகண் பேராண்மைக்கு ஈடுகொடுக்க முடியாத பெண்மையின் மலர்க்கரம்போல் இராமனுடைய வீரம் ஆயிற்று என்பதைக் கூறும் கம்பன் சூத்திரம் இது" – என இலங்கை ஜெயராஜ் அவர்கள் வாதிட்டபோது அரங்கமே பெரும் கரவொலியில் மூழ்கியது.

பக். 201

# துருப்புச்சீட்டு

புதுவைக் கம்பன் விழா (13–5–89) பட்டிமண்டபத்தில் எதிரெதிர் அணிகளின் வாதங்கள் சூடேறி சுவையேறி உச்சக்கட்டத்தை எட்டும் நேரம். கம்பன் காட்டும் நாடுகளில் வீரவிருது பெறுதற்குத் தகுதியுடையது எது? அயோத்தியா? கிட்கிந்தையா? இலங்கையா? என்பது தலைப்பாகும்.

அயோத்தி அணியும், கிட்கிந்தை அணியும் தங்கள் அணிகளைத் தூக்கி நிறுத்தி வெல்லுவதற்குக் கடும் முயற்சிகளை தங்கள் வாதங்களால் மேற்கொள்ள முயன்றன.

இந்தச் சமயத்தில் இலங்கையிலிருந்து இலங்கைக்காக வாதிடவந்த அணித்தலைவர் திரு இலங்கை ஜெயராஜ் அவர்கள், " நான் இன்னும் துருப்புச் சீட்டே வைக்கவில்லையே! அதற்குள் ஏன் இலங்கையை கண்டு மிரளுகின்றீர்கள்?" என்று வினவிய அவர் தன் துருப்புச் சீட்டினை வைத்தார். அயோத்தி வீரர்களும் கிட்கிந்தை வீரர்களும் உண்மையில் அந்த நாட்டு சொந்தவீரர்கள் அல்லர். கம்பன் காவியத்தின்படி எல்லோரும் தேவர்கள். அவர்களுக்கு பிரஜா உரிமையே கிடையாது" – என்று சொன்னதுதான் தாமதம் அரங்கம் மட்டுமன்றி எதிர் அணியினர் கூட தம்மை மறந்து கரவொலி எழுப்பிவிட்டனர்.

# பேராசிரியர் இரா. இராதாகிருஷ்ணனின் திடீர் விஜயம்

கம்பனில் துறைபோகிய பேரறிஞர்கள் உலகின் எந்த முலையில் இருந்தாலும், அவர்கள் எப்பாடுபட்டேனும் புதுவை கம்பன் கழகம் தான் நடாத்தும் கம்பன் விழாவிற்கு அழைத்து, அவர்களின் ஆய்வுரையைக் கேட்டு, அவர்கட்குச் சிறப்புச் செய்யும். அந்த வகையில், இலங்கைத் திருநாட்டில் விளைந்த இரத்தினங்கள் சிலவற்றைக் கண்டெடுத்த கம்பவாணர், அவர்களை ஆண்டுதோறும், பலவித இன்னல்களுக்கு இடையேயும் தவறாது அழைத்து மகிழ்வார்.

11–5–90 அன்று நிகழ்ந்த புதுவைக் கம்பன் கழக வெள்ளி விழா உரைமன்றத்தில், "அரசியல் புரட்சி" என்ற தலைப்பில் பேச வந்திருந்த திரு. இலங்கை ஜெயராஜ் அவர்களைப் புதிய வகையில் அவைக்கு அறிமுகம் செய்து வைத்து, அனைவரையும் மனம் நெகிழ வைத்தது கம்பன் கழகம்.

பேராசிரியர் இரா. இராதாகிருஷ்ணன் மறைந்து விட்டார் என்று நாம் நினைத்திருந்தோம். ஆனால், அவர் இலங்கைத் திருநாட்டில் இன்னும் வாழ்ந்து வருகின்றார். இளமை மிகுந்து காணப்படுகின்றார். "என்ன காரணம்?" என்று கம்பவாணர் வினவியதற்கு; "புதுவைக் கம்பன் கழக வெள்ளி விழாக்காணும் பூரிப்பில் இளமை மீண்டது; உடல் பூரித்தது" என்றார். – இதோ! அவரே வருகின்றார் என்று கூறி; அவராகவே வாழ்ந்து வரும் திரு. இலங்கை ஜெயராஜ் அவர்களை மேடைக்கு அழைக்க, அவரும் வருகை தந்து, கம்பவாணர் கால்களைத் தொட்டு வணங்கியது காண்பரிய காட்சியாகும்.

பக் 214

# மக்கள் வாழ்ந்தால் மன்னன் வாழ்வான்

அயோத்தியும் இலங்கையும் செழிப்பில் ஒன்றுபட்டிருந்த. ஆனால் இலங்கையில் தர்மம் இல்லை. அதேசமயம் அயோத்தியும் முடிவில் குழம்பியது. காரணம் தயரதனின் பாசம். தயரதன் என்ற தனி ஒருவன் வாழ்வில் ஏற்பட்ட குழப்பங்கள் ஆட்சியைக் குழப்பி விட்டன. தத்துவம் பிறக்கும்போது தூய்மை யாகத்தான் பிறக்கிறது. ஆனால் அத் தத்துவம் பாழ்பட்டுப் போய்விடுகிறது. உடம்பு முழுவதும் போடப்படுகின்ற வாசனைப் பவுடர் நம் உடலைச் சார்ந்த சில நிமிடங்களில் தன் வாசனை என்ற தன்மையை இழப்பதுபோல் தத்துவங்கள் உருமாறிப் போகின்றன. எனவேதான் கம்பன், "காசில் கொற்றத்து இராமன் கதை" என்று கூறினான்.

தலைவர்கள், தாம் வாழ வேண்டும் என்று நினைக்கும் அளவிலேயே நாடு பாழ்பட்டுப் போய்விடுன்றது. ஆனால் இராமன் மக்கள் வாழ வேண்டும் என்று நினைத்த மாபெரும் தலைவன்.

இராம இலக்குவர் கல்வி கற்றுத் திரும்பும் போது எதிர்பட்ட மக்களைப் பார்த்து எது குறை? இடர் இலை? இனிது நும் மனையும்? என்று தங்களைப் பற்றி மக்கள் நலன்களை உசாவியதாகக் கம்பன் காட்டுகின்றான். மேலும், அதற்குக் குடிமக்கள் மிக்க மகிழ்ந்து "எங்கள் நலமிருக்கட்டும் இராமா! நீ தலைவனாக உள்ளபோது எங்களுக்கென்ன குறை?" என்று சொன்னதாகவும் கம்பன் காட்டுவான்.

தலைவன் மக்களைப்பற்றிக் கவலைப்பட்டால் மக்கள் தலைவனைப்பற்றிக் கவலைப்படுவர் என்பது கம்பனின் அரசியல். (புதுவை கம்பன் கழக வெள்ளிவிழா 11. 5. 90 உரை மன்றம் – அரசியற்புரட்சி – இலங்கை ஜெயராஜ்)

பக். 215

# தலைவரெல்லாம் தலைவரா?

"இன்றைய தலைவர்கள் அரசியலில், தம்மைச் சுற்றியிருப்பவர்களால்தான் மயங்கி வீழ்ச்சியடைகின்றனர். ஒரு தலைவன் சாதிப் போராட்டம் ஒன்றை நிகழ்த்தத் தொடங்கினால் அப் போராட்டத்தை வீழ்த்த மேல்சாதிக்காரன் அவனுக்கு நண்பனாவான். நாளாவட்டத்தில் சாதிப் போராட்டம் கைவிடப்படும். ஆனால் இராமன் இந்தச் சூழலுக்குச் சிறிதும் வசப்படாதவன். கங்கைக் கரையில் குகன் கொணர்ந்த மீனையும் தேனையும் உவந்து "இது எம்மனோர்க்கும் உரியது" என்று சொல்லி முனிவர்களையும் வசப்படுத்துகின்றான். முனிவர் இந்தத் தலைவனை மாற்ற முடியாது எனத் தீர்மானித்து அகன்றனர்.

மேலும், மீண்டும் அரசியலுக்கு வரப்போகின்ற தலைவன் குடும்பம் தூய்மையான குடும்பம் என்பது உலகிற்கு நிரூபணம் ஆகவேண்டும். எனவேதான் சீதையின் தீக்குளிப்பு நிகழ்த்தப்பட்டது.

60,000 மனைவியரோடு வாழ்ந்த தசரதன் குடும்பம் என்ற முட்டையிலிருந்து ஏகபத்தினி விரதனாகிய இராமனை வெளியே கம்பன் எடுத்தானே அதுதான் அரசியல் புரட்சி."

(புதுவை கம்பன் கழக வெள்ளிவிழா உரைமன்றம் அரசியல் புரட்சி என்ற தலைப்பில் திரு இலங்கை ஜெயராஜ் அவர்கள் 11–05–90 மாலையில் பேசியது)

பக். 216

# அவலத்தை யாரே வெல்லக் கண்டார்

புதுவைக் கம்பன் கழக வெள்ளிவிழாக் கவியரங்கம் திருமதி. சௌந்தர கைலாசம் அவர்கள் தலைமையில் நடந்தது. அக்கவியரங்கத்தின் இறுதியில் கம்பன் கழக செயலர் திரு. கம்பவாணர் அ. அருணகிரி அவர்கள், இலங்கையிலிருந்து வந்துள்ள இளம் கவிஞர் திரு பாரதிசீலன் அவர்கள் கவிதை வழங்க, கவியரங்கத் தலைவரைக் கேட்டுக் கொள்ள; அதன்படி அவ்விளைஞர் கவியரங்கினுள் நுழைந்து கவி பாடத் தொடங்கினார். இலங்கைத் திருநாட்டின் இப்போதைய அவலத்தையும், தமிழர் வாழ்வின் மரண கீதங்களையும் கவிமழையாய் அவர் வாய்பொழிந்தது அவர் கண்களிலோ கண்ணீர் அருவியாய்ப்பொழிந்தது. கம்பன் கழக வெள்ளி விழா ஆரவாரத்திலிருந்த கம்பன் கலையரங்க அவையில் ஒரே நிசப்தம். பலர் கண்களில் கண்ணீர். திருமதி சௌந்தரா சொல்ல முடியாத சோகத்தில் ஆழ; கம்பவாணர் கண்களில் கண்ணீர் முத்துக்கள் பெருக்கெடுக்க; அவையே சோகத்தில் மூழ்கியது. தன்னைப் பெற்றெடுத்துப், பாலூட்டிச் சீராட்டிய அருமைத் தாய் இறந்து ஐந்தே நாட்கள் ஆனாலும், சிறிது நிலைகுலையாது, வெள்ளிவிழா நிகழ்ச்சிகளைக் குறைவற நடத்துவதற்குத், தன் பந்தபாச உணர்வுகளை உள்ளுக்குள் அடக்கி வைத்திருந்த கம்பவாணரைக் கூட, இலங்கை பாரதி சீலன் கவிதை வாய்விட்டு அழ வைத்துவிட்டது. பத்தொன்பது ஆண்டுகளாகக் கம்பன் கழக நிகழ்ச்சிகளைக் குறிப்பெடுத்து வரும் என் குறிப்பேடுகூட, என்னையறியாது பொங்கி வந்த கண்ணீரால் நனைந்து, ஒரு வரி கூட எழுதமுடியாமல் செய்தது பெரிய விந்தையாகும். மீண்டும் கவியரங்க மேடை தன் பழைய நிலைக்கு வர வெகு நேரமாயிற்று.

பக். 226

# எது வீரம்?

புதுவைக் கம்பன் விழா (14–5–89) நிறைவு நாள் நிகழ்ச்சியாகவே மேல் முறையீடு ஞாயிறு இரவு நிகழ்ந்தது. அயோத்தி வீரர்களைவிட கிட்கிந்தை வீரர்களை விட இலங்கை வீரர்களே வீர விருது பெறத் தகுதியுடையவர் என்று பேசி இலங்கை அணி சார்பாக மேல் முறையீட்டுக்கு வந்த திரு இலங்கை ஜெயராஜ் அவர்கள் அசைக்க முடியாத வகையில் அதற்குரிய வாதங்களை வைத்து நடுவர் ஆயத்தையும் அவையோரையும் வியப்பில் ஆழ்த்தினார்.

இந்திரசித்தன் மரணத்திற்குப் பிறகு இராமன் "இது வீடணடன் தந்த வெற்றி" என்று கூறி இலங்கை வீரத்திற்கு விருதுவழங்கினான். மேலும் அயோத்தி வீரம் சோதனை வரும் காலத்தில் தளர்வுவரும் வீரம் "சீதையைப் பிரிந்ததால் உனது வீரம் பாழ்பட்டது" என இராமனை வாலி இகழ்வான். ஆனால் வாலியோ தனக்குப் பதிலாகத் தன் தம்பி அரசனாக இருக்கிறான் என்று அறிந்தவுடன் அவனுக்கு மரணதன்டனை அறிவித்தன. கிட்கிந்தை வீரம் சோதனை வரும்போது நிலை தடுமாறிய வீரம். அயோத்தி வீரர்கள் காண்டம் அயோத்தியா காண்டம் கிட்கிந்தை வீரர்கள் காண்டம் கிட்கிந்தா காண்டம். ஆனால் இலங்கை வீரர்கள் காண்டம் யுத்தகாண்டம். இதிலிருந்து வீரர்ள யார் என்பது தெரியவில்லையா என்று கேட்டதும் அரங்கமே கரவொலியால் அதிர்ந்தது.

பக். 204

# கடன் கொடுத்துக் கற்ற கம்பராமாயணம்

(புதுவைக் கம்பன் விழா (10–5–90) அன்று தனது வெள்ளி விழாவைச் சீரோடும் சிறப்போடும் கொண்டாடியது. 11–05–90 வெள்ளி காலை நிகழ்ந்த சிறப்புரைக்குத் தலைமை தாங்கிய இலங்கை செல்வி தங்கம்மா அப்பாக்குட்டி அவர்கள் அரிய கருத்துக்களை வழங்கினார்கள்.)

"கம்ப இராமாயணத்தில் இலங்கைக்கு ஒரு முக்கியமான இடம் உண்டு. அதேபோல் யாழ்ப்பாணத்திற்கும் கம்பராமாயணத்திற்கும் சிறப்பான தொடர்பு உண்டு. நாவலர் பெருமான் அவர்கள் மருமகன் வித்துவ சிரோன்மணி பொன்னம்பலப்பிள்ளை அவர்கள் கம்பனில் ஈடுபாடு கொண்டவர். இரவில் தினமும் தவறாது பலரையும் கூட்டிவைத்து கம்பனைக் கூறும் பழக்கமுடையவர். அவருக்கு ஒரு காலத்தில் வறுமை வந்தது. கடன் கொடுப்பவர்கள் மகிழ்ந்து கடன் கொடுப்பர். அக் கடனை அவர்கள் திரும்பப்பெறும் இடம் பிள்ளையவர்கள் இராமாயணம் சொல்லும் இடந்தான். ஏனெனில் வேறு எங்கும் அவரைக் காண முடியாது. என்ன வியப்பு என்றால் கடன் கேட்கப்போன கடன்காரர்கள் கம்பனைக் கேட்டுக்கேட்டு அவர்களுக்குக் கம்பனில் நல்ல புலமை வந்ததாகும் அவர் தெருவில் போகும்போதும் வரும்போதும், 'இராமாயணம் வருகிறது – இராமாயணம் போகிறது' என்று தான் ஊரார் கூறுவர்"

பக். 210

# கழகப் பாதையின் காலடிச்சுவடுகள்

| | | |
|---|---|---|
| 1980 மே 22 | – | அகில இலங்கைக் கம்பன் கழகம் அங்குராாபபணம் |
| 1980ஜுன்20 | – | நல்லைஆதீனத்தில் கழக அறிமுக விழா |
| 1980 ஜுலை | – | 9ஆம், 10ஆம் வகுப்பு மாணவர்கட்கான கம்பராமாயண வகுப்புகள் அவர்கள் பாடத்திட்டத்திற்கமைவாக யாழ். இந்துக் கல்லூரியில் ஆரம்பித்து வித்துவான் க.ந. வேலன் அவர்களால் நடத்தப்பட்டது. |
| | – | முதலாவது மாதாந்தக் கம்பன் விழா ஆயத்தம் செய்தல். |
| 1980 ஒகஸ்ட் 31 | – | திருகோணமலைக் கம்பன் கழகம் அங்குரார்ப்பணம். |
| 1980 செப்ரெம்பர் 14 | – | முதலாவது மாதாந்தக் கம்பன் விழா ஆதீனத்தில் நடாத்தப்பட்டது. ஆசிரியர் தேவன்– யாழ்ப்பாணம் அவர்கட்கு " சொல்லின் செல்வன்" எனும் பட்டமளித்துக் கௌரவிப்பு. |
| 1980 விஜயதசமி | – | யாழ் இந்துக் கல்லூரியின் பிரார்த்தனை மண்டபத்தில் கம்பராமாயண வகுப்புகளின் சார்பில் நவராத்திரி பூஜை. |
| 1980 நவம்பர் 16 | – | இரண்டாவது மாதாந்தக் கம்பன் விழா – நல்லை ஆதீனத்தில். வித்துவான் சி. ஆறுமுகம் அவர்கட்கு 'கவிச்செல்வர்' பட்டமளித்துக் கௌரவிப்பு. அவரின் 'திருக்கேதீச்சர நாதர் வண்டு விடுதூது' நூல் வெளியீடு. |
| | – | 5ஆம் உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டில் கலந்து கொள்ள விரும்பி அன்றைய தமிழ் நாடு முதலமைச்சர் எம். ஜி. ராமச்சந்திரனுக்குக் நேரடி கடிதம் எழுதல். |
| 1980 டிசம்பர் 27 | – | பார்வையாளர் அந்தஸ்தில், முதலமைச்சின் இரண்டாம் செயலாளர் கா. திரவியம் அவர்களிடமிருந்து 11 அழைப்பிதழ்கள் கிடைத்தல். |
| 1981 ஜனவரி 04 | – | அவசரமாக எழுவர் கொண்ட குழு தலைமன்னார் ஊடாக தமிழ்நாட்டுக்கான கன்னிப் பயணம் மேற் கொள்ளல். |
| | – | மதுரை காமராஜர் அரங்கில் அதிர்ஷ்டவசமாக பேசும் சந்தர்ப்பம் ஒன்று வாய்த்தல் |
| | – | அமைப்பாளர் இ. ஜெயராஜ் இலக்கியச் சுவையுடனும், நயமுடனும் பேசி பார்வையாளர் வரிசையிலிருந்த தமிழக முதலமைச்சர்எம். ஜி. ஆர் உள்ளிட்ட அனைவரினதும் பாராட்டைப் பெற்றமை. |
| | – | முதலமைச்சர் எம்.ஜி. ஆர். இன் உரையானது தவறாக அர்த்தம் பண்ணப்பட்டு, எமது அமைப்பாளரின் பேச்சுக்கு முதல்வர் பதில் கூறியதாக இலங்கையின் முக்கிய பத்திரிகைகளெல்லாம் தலைப்புச் செய்தி |

வெளியிட்டமை. இலங்கை அடங்கிலும் கம்பன் கழகம் அறிமுகமாக இச்சம்பவம் உதவியது.

- கம்பன் கழகங்களின் பிதாமகர், காரைக்குடி கம்பன் கழகச் செயலாளர் கம்பனடிப்பொடி எனும் நாமம் பூண்ட சா. கணேசன் ஐயாவினை தமிழ் மாநாட்டிற் சந்தித்தல், எமது கழகத்தை 43வது கம்பன் கழகமாகப் பதிவு செய்தல், அவர் தமது கம்பன் விழாவுக்கும் அழைப்பு விடுத்தல்.
- திருச்சி தேசியக் கல்லூரிப் பேராசிரியரும், திருச்சிராப்பள்ளிக் கம்பன் கழகச் செயலாளருமான பேராசிரியர் இரா. இராதாகிருஷ்ணன் அவர்களைச் சந்தித்தல். இலங்கை வருமாறு அழைப்பு விடுத்தல், தாய்நாடு மீளல்.

1981 மார்ச் – காரைக்குடிக் கம்பன் விழா அழைப்புக் கிடைத்தல்.

1981 மார்ச் 16 – தலைமன்னார் மூலம் தமிழ்நாட்டுக்கு ஜெயராஜ், குமாரதாசன், வசந்தன் ஆகிய மூவரும் பயணம். மார்ச் 18 முதல் 21 வரை காரைக்குடிக் கம்பன் விழாவில் கலந்து கொள்ளுதல். அதிர்ஷ்டவசமாக, மூன்றாம் நாள் மாலை விழாவில் பேச்சாளர் ஒருவரது இடத்தை நிரப்பும் வாய்ப்பு எமது அமைப்பாளர் ஜெயராஜுக்குக்கிடைத்தல். "இராமன் பற்றி சபரி" கூறுவதான பேச்சினால் அங்குள்ள அனைவரினதும் குறிப்பாக கம்பனடிப்பொடி ஐயாவினதும், இராதாகிருஷ்ணன் ஐயாவினதும் பாராட்டைப் பெறுதல்.

1981 மார்ச் 21 – நாட்டரசன் கோட்டை, கம்பன் சமாதியில் நடைபெற்ற நிறைவுநாள் விழாவிலும் கலந்து கொள்ளல்.

1981 மார்ச் 22 – பேராசிரியர் இரா. இராதாகிருஷ்ணன் அவர்களுடன் திருச்சி புறப்படல். அதற்கு முன்னர் கம்பனடிப்பொடி ஐயாவின் பாதுகைகளை அவரது ஞாபகமாக மிகுந்த சிரமத்தின் பின் பெறுதல்.

- பேராசிரியர் குடும்பத்தில் ஒருவராகச் சிலநாட்கள் கழித்த பின் நாடுதிரும்புதல்; அவரை இலங்கைக்கு வருமாறு அழைப்பு விடுத்தல்.

1981மே –03 – முதல் 5 மூன்றாவது கம்பன் விழா – 3நாட்கள் நடைபெறுதல். தருமையாதீனத் தமிழ்ப் பேராசிரியை வித்துவான். திருமதி ப. நீலா அவர்கள் சிறப்புப் பேச்சாளராகக் கலந்து கொள்ளுதல்.

1981 மே 22 – கழக அலுவலகத்தில் அன்பர்கள், அறிஞர்கள், ஆர்வலர்கள் சமூகமளிப்புடன் 1 ஒரு வருட நிறைவைக் கொண்டாடுதல்.

- பேராசிரியர் இரா. இராதாகிருஷ்ணனுடன் தொடர்பு கொண்டு அவரது இலங்கைப் பயணத்தை உறுதி செய்தல்.

1981 செப்ரெம்பர் 24 – பேராசிரியர் தலைமன்னாரூடாக யாழ் வந்தடைதல்.

1981 24 – 29 – 5 நாள் கம்பன் விழா, வரலாறு காணாத மக்கள் கூட்டம் நல்லை ஆதீனத்தில் குழுமி விழாவைச் சிறப்பித்தல். அன்றிரவே பேராசிரியர் தலைமன்னார் பயணமாகி 30ஆம் திகதி தமிழ்நாடு சென்றடைதல்.

1982 மார்ச் 17 – கழக அழைப்பில் பேராசிரியர் இராதாகிருஷ்ணன் அவர்களும் இராமேஸ்வரக் கம்பன் கழகத் தலைவர் கோடூர் இராஜகோபால் சாஸ்திரிகளும் தலைமன்னார் மூலம் வருகை.

| | | |
|---|---|---|
| 1982 மார்ச் 19 –21 | – | கொழும்பில் கம்பன் விழா. |
| 1982 மார்ச் 24 – 28 | – | யாழ்ப்பாணத்தில் கம்பன் விழா. |
| 1982 மார்ச் 30 | – | பேராசிரியருடன் நாமும் இந்தியா பயணம். |
| 1982 ஏப்ரல் 4 – 7 | – | காரைக்குடிக் கம்பன் விழாவில் கலந்துகொண்டமை. தாய் நாடு மீளல். |
| 1982மே 15, 16 | – | எம்முடன் இணைந்து திருகோணமலைக் கம்பன் கழகம் அங்கு கம்பன் விழாவை நடாத்தியது. |
| 1982 மே 22 | – | கழகத்தின் இரண்டாம் ஆண்டு நிறைவு – இராப் போசன விருந்து. |
| 1982 ஜுன் 27 | – | பேராசிரியர் அ. சண்முகதாஸ் அதிதிப் பேராசிரியராக நைஜீரியா, ஜப்பான் ஆகிய நாடுகட்கு செல்லவிருந்தமைக்கும், திரு. மு. பொ. வீரவாகு அவர்கள் அகில இலங்கைக்குமான சமாதான நீதிவானாக நியமனம் பெற்றமைக்குமான பாராட்டு விழா. |
| 1982 ஜுலை முதல்வாரம் | – | கம்பனடிப்பொடி அவர்கள் மறைவுச் செய்தி கிட்டுதல். |
| 1982 ஓகஸ்ற் 5 | – | இராமேஸ்வரக் கம்பன் விழாவுக்காக இந்தியா பயணம். |
| 1982 ஓகஸ்ற் 7,8 | – | இராமேஸ்வரக் கம்பன் விழா – இ. ஜெயராஜ், அ. குமரன் B.A. ஆகியோர் நிகழ்ச்சிகளில் பங்குகொண்டு சிறப்பித்தல். |
| 1982 ஓகஸ்ற் 18 | – | தாய்நாடு மீளல். |
| 1982 டிசம்பர் 08 | – | தேவன் – யாழ்ப்பாணம் அவர்களின் மறைவு. |
| 1982 டிசம்பர் 11 | – | அதனால் நடைபெறவிருந்த பாரதிவிழா ரத்துச் செய்யப்பட்டது. |
| 1983 பெப்ரவரி | – | எமது அழைப்பில் பேராசிரியர் இராதாகிருஷ்ணன் அவர்கள் மூன்றாம் தடவையாக யாழ். வருகைதரல். |
| | – | வடமராட்சி, திருமலையில் கம்பன் விழாக்கள். |
| 1983 பெப்ரவரி 23,24 | – | எமது கம்பன் விழா மிகச் சிறப்பாக நடைபெறுதல். |
| 1983 ஜுலை | – | சூழ்நிலைகளின் தாக்கத்தால் செயற்பாடுகளில் தேக்கநிலை. |
| 1983 செப்ரெம்பர் | – | பேராசிரியர் இரா. இராதாகிருஷ்ணன் மறைவு. |
| 1984 பெப்ரவரி | – | எமது ஆசான் வித்துவான் சி. ஆறுமுகம் மறைவு. |
| 1985 டிசம்பர் 21 | – | கழகக் கவிஞர் அரியாலையூர் வே. ஐயாத்துரை அவர்களது உடல்நலம் வேண்டிப் பிரார்த்தனைக் கூட்டமொன்றை நடாத்தல். |
| 1986 ஜனவரி | – | அன்றைய யாழ். மாநகரச் சபை ஆணையாளர் திரு. சீ.வீ. கே.சிவஞானம் |

அவர்களின் முயற்சியால் நல்லூர் முருகன் தேவஸ்தானத்துக்குச் சொந்தமான நிலம் எமது கழகத்திற்குக் கிடைத்தல்.

| | | |
|---|---|---|
| 1986 பெப்ரவரி 10 | – | யாழ். பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் அமரர் பேராசிரியர் சு. வித்தியானந்தன் தலைமையில் ஆணையாளர் சீ.வி.கே. சிவஞானம் அவர்களால் கம்பன் கோட்டத்திற்கான அடிக்கல் நாட்டப் படுதல். |
| 1986 ஒகஸ்ற் | – | கம்பன் கோட்ட கீழ்த்தளம் யாழ் வாழ் இலக்கிய ஆர்வலர்கள் உதவியால் நிறைவுபெறல். |
| 1986 ஒகஸ்ற் 1,2,3 | – | நீண்ட இடைவெளியின் பின் நல்லை ஆதீனத்தில் கம்பன் விழா. |
| 1986 செப்ரெம்பர் 6–8 | – | காரைநகரில் ஓர் கம்பன் கழகம் அங்குரார்ப்பணம் செய்து வைக்கப்படுதல் அங்கு கம்பன் விழா நடைபெறல். |
| 1987 ஜுலை 17,18,19 | – | நல்லை ஆதீனத்தில் எமது கம்பன் விழா. |
| 1987 ஒக்ரோபர் 24 | – | இந்திய அமைதிப்படை கம்பன் கோட்டத்தைத் தமது முகாம் ஆக்கியமை, சுமார் 6 மாதங்கள் அவர்களது பாவனையினால் பல ஆவணங்கள் , தொலைந்தும், சிதைந்தும் சேதமடைதல். கட்டடம் புகைமண்டிப் பொலிவிழந்தது. |
| 1988 மே | – | ஏற்கனவே காரைக்குடியில் அறிமுகமாயிருந்த பாண்டிச்சேரிக் கம்பன் கழகச் செயலர் 'கம்பவாணர்' புலவர் அ. அருணகிரி அவர்கள் அழைப்பில் ஜெயராஜ் உள்ளிட்ட ஐவர் குழு பாண்டிச்சேரிக் கம்பன் விழாவில் கலந்து கொள்ளுதல். ஜெயராஜ் நிகழ்ச்சிகளில் சிறப்பாகப் பேசி மூதறிஞர் பலரின் பாராட்டைப் பெறுதல். |
| 1988 | – | நாட்டின் சூழ்நிலையால் கம்பன்விழா நடைபெறவில்லை. |
| 1989 ஜனவரி | – | ஊரெழுவில் கம்பன் கழக அங்குரார்ப்பணம். |
| 1989 மே 14,15 | – | பாண்டிச்சேரிக் கம்பன் விழாவில் ஜெயராஜ் பங்கேற்றல். |
| 1989 | – | புனருத்தாரணம் செய்யப்பட்டு கம்பன் கோட்டத்தில் எமது அலுவலகம், இயங்கத் தொடங்குதல். |
| 1990 ஜனவரி 19 | – | அமரராகிய எமது கழகத்தின் போஷகர் திரு பொ. ச. குமாரசாமி அவர்கள் நினைவுப் பேருரை நிகழ்ச்சி |
| | – | யாழ் பல்கலைக்கழக அரங்கில் நடத்தப்பட்டமை. |
| 1990 மே | – | பாண்டிச்சேரி கம்பன் விழாவில் கழக அறிஞர் குழு பங்கேற்றல், |
| | – | கம்பன் கோட்ட மேற்தள வேலைகள் ஒருசில வள்ளல்கள் உதவியினால் முழுமையாக்கும் முயற்சி மேற்கொள்ளப்படல். |
| | – | மாரிகாலத்தின் முன்னர் கூரை அமைத்து ஓரளவு பூரணப் படுத்துதல். |
| | – | பத்தாவது ஆண்டு நிறைவை முன்னிட்டு சிறப்பு நிகழ்ச்சிகள் நடத்த ஏற்பாடுகளை மேற்கொள்ளுதல். |
| 1991 ஜனவரி 27 | – | ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் இசை ஆராதனை எமது மண்டபத்தில் முதல் நிகழ்ச்சியாக நடாத்தப்பட்டது. |

| | | |
|---|---|---|
| 1991 மார்ச் 03 | – | அமரர் பொ. ச. குமாரசாமி அவர்கள் நினைவுப் பேருரை –2. |
| 1991 ஏப்ரல் 14 | – | தமிழ்ப் புத்தாண்டு நிகழ்ச்சி – கவிதைப் பட்டி மண்டபம். |
| 1991 மே 19 | – | பாரம்பரிய இசை நாடகங்கள் கொண்ட நாடக அரங்கு. |
| 1991 ஜூலை 22 | – | கம்பன் கோட்ட நுழைவாயில் சித்திரக் கதவம் அமைத்து திறந்துவைக்கப்பட்டமை. |
| 1991 ஒகஸ்ற் 24 முதல் செப்ரெம்பர் 09 வரை | – | நல்லூர் முருகன் உற்சவகால இசையரங்கு 15 நாட்கள்கம்பன் கோட்டத்தில் நடத்தப் பட்டமை. |
| 1992 ஜனவரி 12 | – | ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள் இசையாராதனை, "இசைப் பேரறிஞர் " விருது அறிமுகப்படுத்தப் பட்டு நாதஸ்வரக் கலைஞர் கே. எம். பஞ்சாபிகேசன் அவர்களுக்கு வழங்கப்பட்டது. |
| 1992 பெப்ரவரி 14 – 17 | – | 5ஆண்டு இடைவெளியின் பின் மீண்டும் நல்லூரில் கம்பன் விழா. |
| 1992 செப்ரெம்பர் 30 | – | கலாநிதி சி. மௌனகுரு அவர்கள் கிழக்கிலங்கைப் பல்கலைக் கழகத்துக்கு நுண்கலைத்துறைத் தலைவராக நியமனம் பெற்றமையைக் கௌரவிக்கும் முகமாக தேநீர் விருந்து. |
| 1992 ஒக்ரோபர் 10 | – | எமது கழக ஆதரவில் நாட்டியக் கலைஞன் செல்வன் முருகையா அருள் மோகனின் பரதநாட்டிய அரங்கேற்றம். |
| 1992 டிசம்பர் 27 | – | அமரர் பொ. ச. குமாரசாமி அவர்கள் நினைவுப் பேருரை – 03. |
| 1993 ஜனவரி 31 | – | ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள் இசையாராதனை "இசைப் பேரறிஞர்" விருது சங்கீத பூஷணம் கே. ஆர். நடராசா அவர்கட்கு வழங்கப்பட்டகு. |
| 1993 பெப்ரவரி 28 | – | இலங்கை இளங்கலைஞர் மன்றத்தின் சார்பில், கலா மண்டபத்தை நிர்மாணிப்பதில் ஈடுபட்ட சங்கீத பூஷணம் பொன் சுந்தரலிங்கம் அவர்கள் பாராட்டிக் கௌரவிக்கப்படல். |
| 1993 மார்ச் | – | அமரர்கள் வித்துவான் சி. ஆறுமுகம், தேவன் – யாழ்ப்பாணம் நினைவு கவிதை, பேச்சுப் போட்டிகள் அறிமுகப்படுத்தப் பட்டு நடத்தப்படல். |
| 1993 ஏப்ரல் 2 – 6 | – | நல்லூர் வடக்கு வீதியில் பந்தலமைத்து 5 நாட்கள் கம்பன் விழா நடைபெறல். "மகரயாழ் விருது" அறிமுகப்படுத்தப் பட்டு Dr.ச. சிவகுமாரனுக்கு வழக்கப்பட்டது. "கம்ப களஞ்சியம்" நூல் வெளியிடப்பட்டது. மூதறிஞர் அறுவருக்கு நினைவுப் பரிசில்கள் வழங்குதலும் இவ்விழாவில் அறிமுகப்படுத்தப் பட்டு நடைமுறைப்படுத்தப்பட்டது. |
| 1994 ஜனவரி 31 | – | ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள் இசையாராதனை "இசைப் பேரறிஞர்" விருது சங்கீத பூஷணம் வீ.கே. குமாரசாமி அவர்களுக்கு வழங்கப்பட்டது. |

| | | |
|---|---|---|
| 1994 ஜூலை 20 – 24 | – | 5 நாட்கள் கம்பன் விழா – நல்லூர் வடக்கு வீதியில் மகரயாழ் விருது–அமரர் பேராசிரியர் அ. துரைராசாவுக்கு வழங்கப்பட்டதோடு, மூதறிஞர் அறுவர் கௌரவிக்கப்பட்டனர். 'அகலிகை' நூல் வெளியிடப்பட்டது. |
| 1994 டிசம்பர் | – | கொழும்பில் கம்பன் கழகம் ஒன்று அங்குரார்ப்பணம். |
| 1995 ஜனவரி | – | இவ்வாண்டு தியாகராஜ சுவாமிகள் இசையாராதனை நடாத்த முயற்சி. " இசைப் பேரறிஞர் – 1995" விருதுக்காக சங்கீத பூஷணம் ச. பாலசிங்கம் அவர்கள் தெரிவு. சில வசதியீனங்களால் விழா ஒத்திவைப்பு. |
| 1995 பெப்ரவரி ஏப்ரல் | – | கம்பன் கோட்ட மண்டபத்தின் முற்றுப் பெறாத கட்டமைப்பு வேலைகள் மீள ஆரம்பிக்கப்பட்டு முழுமை பெறல். |
| 1995 பெப்ரவரி | – | அமரர் வித்துவான் சி. குமாரசாமி ஞாபகார்த்த கட்டுரைப் போட்டி அறிமுகஞ் செய்யப்படல். |
| 1995 மார்ச் 17 | – | இவ்வாண்டு மகரயாழ் விருதுக்குரியவராக Dr. T.W. ஜெயகுலராஜா தெரிவுசெய்யப்படல். |
| 1995 ஏப்ரல் 1,2 | – – | வழமையான வித்துவான் சி. ஆறுமுகம் ஞாபகார்த்த கவிதைப் போட்டி, தேவன் யாழ்ப்பாணம் ஞாபகார்த்தப் பேச்சுப் போட்டி என்பனவற்றுடன் கட்டுரைப் போட்டியும் நடைபெறல். |
| 1995 மே 5 – 10 | – | கம்பன் விழா –1995 நல்லூர் வடக்கு வீதியில் இடம் பெறல் மகரயாழ் விருது, மூதறிஞர் அறுவர் கௌரவிப்பு, பேச்சு, கவிதை, கட்டுரைப் போட்டிகளில் வென்றோர் பரிசளிப்பு, "கம்ப மலர்" வெளியீடு என்பன நடைபெறல். |

அம்புவிக்கு வாய்ந்த அருட்கவி ஐயமின்றி
உம்பரமு தொந்த உயிர்க்கவி – கம்பனும்தன்
மந்திரச் சொல்லால் வனைந்த கவி
என்றேனும்
வெந்திடுமோ தீயால் விளம்பு.

–கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை–

உ

"முருகன் துணை"

பேராசிரியர்.
இரா. இராதாகிருஷ்ணன்.

12, ஞானதீக்கம் பள்ளி வீதி,
கல்லுக்குழி, திருச்சிராப்பள்ளி.
620020. 5.3.82.

அன்பு மக்கட்கு நல்லாசி.

இலங்கைப் பெரியோர்களுக்கு தொண்டர்களுக்கு
என் வந்தனம்.

அன்பு திரு, குடும்பத்தார்க்கு என் ஆழ்ந்த வருத்தம் தெரிவிக்க. அவர்கள் தெய்வமாகிக் காக்கின்றார்கள் என்று தேறுதல் பெற வேண்டும்.

= 17.3.82 கப்பலில் தலைமன்னார் வந்து சேர்வேன்.

= அன்பர் ஸ்ரீ ராஜகோபால சாஸ்திரிகள் உடன் வருகிறார்.

= 17.3.82... தலைமன்னாரில் எதிர் கொள்ளுதல் குறித்த தந்தி - இக்கடிதம் கண்டவுடன் அடிக்கவும்.

= 30.3.82 கப்பலில் திரும்புதல் வேண்டும்.

= ஸ்ரீவைத்தியநாதன் - ஸ்ரீமதி. வசந்தா --
என் ஆசிகளைச் சொல்ல வேணும்.
நாங்கள் அவர்கள் விருந்தினர் என்றுமே!

= கொழும்பு ஐயா அவர்களுக்கு என் அஞ்சலி உரைக்க.

நண்பர்கள் அனைவர்க்கும் என் அன்பு

= வருவதற்குப் பொருள் இங்கேயே "ஒழுங்கு" செய்து கொள்வேன்.

= நான் வருவதற்குள் வீணை வந்தால் கொணர்வேன்.

= இல்லாவிடின் - கம்பன் விழாவிற்கு வந்து நீங்கள் திரும்பும் போது கொண்டு போகலாம்.

= ஸ்ரீ சாஸ்திரிகள் உடன் வருவதால் இலங்கையில் சில இடங்கள் காண்பதற்கு ஒழுங்கு செய்ய வேணும்

= பொன்னாடை, மலர்முடி, ... முதலான ஆரவாரங்களை முற்றிலுமாக நீக்கிவிட வேண்டுகிறேன். என் சமநிலையை அவை கெடுக்கின்றன.

அன்பன்,

11/3/82

உ

முருகன் துணை

*ப. தயாபரன்,*
*மத்திய மகாவித்தியாலயவீதி,*
*நெல்லியடி,*
*கரவெட்டி*
*23-1-95*

**அகில இலங்கைக் கம்பன் கழகத்தை உருவாக்கிய ,**

*திரு.தி. திருநந்தகுமார்,*
*திரு. க. குமாரதாசன்,*
*திரு. கு. ஸ்ரீஇரத்தின குமார்,*
*திரு. இ. ஜெயராஜ்,*
*ஆகியோருக்கு!*

***பேரன்புடையீர்,***

**வணக்கம்**

21. 1. 95 உதயன் பத்திரிகையில் உங்கள் கழக அறிவித்தலைக்கண்டு ஆச்சரியமுற்றேன். நான் இக்கடிதத்தை எழுதுவதன் நோக்கம் இளையதலைமுறையினரை ஊக்கப்படுத்தி, மரபு பேணும் உங்கள் அணியில் சேர்ந்துள்ள இளைஞர்களின் மனதைப்பாதிக்கும் நோக்கம் அல்ல. அகில இலங்கைக் கம்பன் கழக இளைஞர்கள் நிர்வாகத்தை எதிர்பார்ப்வர்கள் அல்ல என்பதனையும் பூரணமாக நான் அறிவேன். நீங்கள் எல்லோரும் என்ன தான் காரணத்தைச் சொன்னாலும்என் மனதில்பட்ட ஒரு சில விடையங்களை உங்கள் பரிசீலனைக்குமுன்வைக்கிறேன்.

* எனது தனிப்பட்ட வேண்டுகோளாக புதிய நிர்வாக அமைப்பை ஏற்படுத்துவதையோ அல்லது ஜெயராஜ் அவர்கள் சொற்பொழிவு – பட்டிமண்டபங்களிருந்து ஒதுங்கிக் கொள்வதையோ மீள்பரிசீலனை செய்யுமாறு தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

* ஜெயராஜ் அவர்கள் இல்லாத கம்பன் கழகம், ஜெயராஜ்அவர்கள்இல்லாத பட்டிமண்டபத்தைப் பார்ப்பது போல் இருக்கும். மிகக்குறுகிய காலத்தில் தங்களோடு இணைந்துள்ள இளைஞர்களுக்கு மிகப்பாரமான பாரிய பொறுப்பு ஒன்றை அவர்கள் தலையில் சுமத்தியுள்ளீர்கள்.

* அந்த இளைஞர்களுக்குக் கல்விப்பொறுப்பு, குடும்பப்பொறுப்பு என இரு பெரும் பொறுப்புக்கள் உள்ளன. அந்த பொறுப்புக்குள் இருக்கும் போது 15 வருடமாக இயங்கிவந்த கம்பன் கழகத்தை அதேசம மட்டத்தில் இளைஞர்கள் இயக்குவார்களா என்பது சந்தேகமே.

* இந்த நிர்வாக மாற்றம் ஒரு இளங்கலைஞர் மன்றத்திற்கோ அல்லது இந்து சமயப் பேரவைக்கோ அல்லது சைவ பரிபாலன சபைக்கோ பொருந்தும். கம்பன் கழகத்தைப் பொறுத்தவரையில் மேற்கூறிய நிருவாகத்திடம் இருந்து இளைஞர் கைக்கு மாறும் போது இளைஞர்கள் போதிய அளவு தயார் நிலையில் இல்லாமையால் கம்பன்கழகத்தின் தராதரம் குறையும் என்பதில் சந்தேகமில்லை.

* அகில இலங்கைக் கம்பன் கழகத்தின் சேய்க்கழகமாகிய காரைநகர், ஊரெழு, வடமாராட்சி கம்பன்கழகங்களின் கம்பன் விழாக்களுக்கும் தாய்கழகத்தின் விழாக்களுக்கும் ஒருபாரிய வித்தியாசத்தை நாம் அறிவோம் .தாய்க்கழக விழாவின் தரத்துக்கு மேலே எந்தச் சேய்க்கழகத்தின் விழாவும் அமையவில்லை. ஆகவே பழையவர்கள் ஒதுங்கிக்கொண்டு புதியவர்களுக்கு இடமளிக்கும் போது தாய்க்கழகத்தின் இளைஞர்களின் விழா தாய்க்கழகத்தின் முன்னைய விழாக்களுக்குச் சமமாக அமையுமா?

* இந்த நிர்வாக மாற்றத்தில் பாதிப்பு அடைபவர் ஜெயராஜ் அவர்களே! அவருடன் நாங்கள் தொடர்பு கொண்ட காலத்திலே அவருடைய ஒவ்வொரு மூச்சும் கம்பனுக்கும் கம்பன் கழகத்திற்கும் என்பதை நாம் அறிவோம் . அவர் காலையில் எழுந்து நித்திரைக்குப் போகும் வரை அவருடை ய சிந்தனை கம்பனோடும் கம்பன் கழகத்தோடும் தான். இனி அவருடைய பொறுப்பை இன்னுமொருவர் ஏற்றால் அவர் என்ன செய்யப்போகின்றார்? சொற்பொழிவை நிறுத்தப்போகின்றாரா? பட்டிமண்டபத்தில் கலந்து கொள்வதை நிறுத்தப்போகின்றாரா?

* ஜெயராஜ் அவர்களுடைய முக மலர்ச்சியில் தானே கம்பன் கழகத்தின் வளர்ச்சி தங்கியிருந்தது. கழகத்தின் செயலாளர் , தலைவர் , பொருளாளர் ஆகியோர் உட்பட அனைவரும் எந்தக் காரியத்திற்கும் ஜெயராஜ் அவர்களின்

பெயரைப் பயன்படுத்தித்தானே கம்பன் கழகத்தின் நிர்வாக அமைப்பு வேலைகளைக் கவனித்தார்கள்.

* நான் கூறுவது உங்களுக்கு தவறாகத் தெரிந்தால் இவ்வாண்டு அகில இலங்கைக் கம்பன் விழா ஆரம்பமாவதற்கு 2மாத காலத்திற்கு முன்பு ஜெயராஜ் அவர்கள் நெல்லியடியில் தங்கி இருக்க, ஏனையோர் திட்டமிட்டு நிதி சேகரித்து கம்பன் விழாவை நடத்தட்டும். ஜெயராஜ் அவர்கள் பார்வையாளராக மட்டும் வருகை தருவார். அந்தச் சந்தர்ப்பத்தில் தான் ஜெயராஜ் அவர்களின் சிறப்பை உணர முடியும்.

* ஜெயராஜ் அவர்கள் போகாமல் இளைஞர்களால் கம்பன் விழாவிற்கு 5லட்ச ரூபாய் வரை நிதி சேகரிக்க முடியுமா? ஜெயராஜ் அவர்கள் இல்லாமல் கடந்த காலங்களில் கழகத் தலைவர், செயலாளர், பொருளாளர் ஆகியோர் நிதி சேகரித்தார்களா?

* ஒவ்வொரு இராமாயண, மகாபாரத தொடர் விரிவுரையின் பூர்த்தி நிகழ்வில் ஜெயராஜ்அவர்கள் சொற்பொழிவாற்றும் போது விரிவுரை மூலம் பெறப்படும் பணம் தனது சொந்தத் தேவைக்கு அல்லாமல் கழகத்தின் தமிழ்ப்பணிக்கு என்று கூறியிருக்கின்றார். கம்பன் கழகத்தோடு தன்னை விடுவித்துக் கொண்டதன் பின் அவரின் நிலைப்பாடு என்ன?

* மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவருக்கும் மரணம் நிச்சயம். ஜெயராஜ் அவர்களின் நிறைவுக்காலம் வரை அவர்தான் அகில இலங்கை கம்பன் கழகத்தின் அமைப்பாளர். அவரது இறுதி மூச்சு வரை அவரின் பணி கன்னித் தமிழ் வளர்ப்பது தான். அவர்விடும் மூச்சு ஒவ்வொன்றும் கம்பனுக்கும் கம்பன் கழகத்திற்கும்தான்!

* ஜெயராஜ் அவர்கள் நினைக்கின்றார்கள் தான் இருக்கும் போதே இளைஞர்கள் கம்பன் கழகத்தை இயக்குவதை தான் கண்டு களிப்புறவேண்டுமென்று. அவருடைய நினைப்புச் சரிதான். ஆனால் அதற்காக மிகக் குறுகியகால அவகாசத்துக்குள்ளே அதை நடைமுறைப்படுத்துவது மிகக் கஷ்டம். அடுத்த பக்கத்தில் நான் கூறிய விடயங்களைக் கவனித்து அதில் இளைஞர்கள் தன்நிறைவு அடைந்து ஜெயராஜ் அவர்களைப் போல ஒரு பிரசாந்தன் உருவாகுவானானால் முதலில் அதை வரவேற்பது நானாகத்தான் இருக்கும்.

அகில இலங்கைக் கம்பன் கழகத்திற்கு எதிர்கால நிர்வாக அமைப்பு ஜெயராஜ் அவர்களின் காலத்தின் பின் தேவைதான். அதற்குரிய பயிற்சிகளை இப்போதே அவர்கள் எடுக்க வேண்டும்.

## என் மனதில பட்ட சில பயிற்சி விபரம்

1. கம்பன் கழகத்தின் முதல் சொத்து நாவன்மை. கழக இளைஞர்கள் தனிச் சொற்பொழிவுகளை வடபிரதேசத்தின் பல இடங்களிலும் நடாத்த வேண்டும் . பிரசாந்தன் அவர்களுடைய சொற்பொழிவு வடமராட்சியில் இது வரை இரண்டு இடங்களில் மட்டும் நடைபெற்றது. இவர்களது தனிச் சொற்பொழிவின் சிறப்பை வட பிரதேசமக்கள் இனங்காண வேண்டும். இவர்கள் கட்டாயம் இராமாயணம், மகாபாரதம் போன்ற தொடர் விரிவுரைகளை நிகழ்த்த வேண்டும்.

2. பிரசாந்தன் நடுவராக இருக்க இளைஞர் அணி பட்டி மண்டபக் குழு ஒன்றுதயாராக வேண்டும். கணிசமான கட்டணத்துடன் வடபகுதி எங்கும் இவர்களுடைய நிகழ்வு நடைபெறவேண்டும்.

3. கழக மேல் மண்டபத்தில் மாதம் ஒருமுறை அல்லது ஒன்றை விட்ட ஒரு மாதம் ஒரு இலக்கிய, இசைநிகழ்வு இடம்பெற வேண்டும். அந்நிகழ்விற்கு நிகழ்ச்சி அமைப்பு , நிதிசேகரித்தல் உட்பட அனைத்தையும் இளைஞர்கள் பொறுப்பில் விட வேண்டும்.

4. கம்பன் கழகத்தின் ஆரம்பகாலத்தைப் போல வருடாவருடம் ஒரு நாள் ஒன்று கூடல் கூடவேண்டும்.இலக்கிய ஆவர்லர்கள், பேச்சாளர்கள் அனைவரும் பங்கேற்க வேண்டும்.

5. குறிப்பாக, கழக இளைஞர்கள் ஆளுமையுடன் செயல்பட்டுத் தங்களை நிலைநிறுத்திக்கொள்ள வேண்டும்.

6. பட்டி மண்டபங்களில் இளைஞர்கள் மற்றவர்களின் குறைகளை எடுத்துச் சொல்லுவதை முக்கிய நோக்கமாகக் கொள்ளாமல் தங்கள் தங்கள் செயற்பாடுகளில் தங்கள் தனித்திறமையை எடுத்துக்காட்டி ஒவ்வொருவரும் தங்கள் தனித்துவத்தை எடுத்துக்காட்ட வேண்டும்.

7. மனிதனாகப் பிறந்த எல்லோருடைய குணமும் ஒரு மாதிரி உடையன அல்ல. ஒரு சிலரிடம் சில குறைகள் இருக்கத்தான் செய்யும். இக்குறையைத் தவிர்த்து எங்களுடைய ஆளுமை மூலம் கழகத்திற்குத் தேவையான வற்றைச் சம்பந்தப்பட்டவர்களிடமிருந்து பெற முயற்சிக்க வேண்டும்.

8. ஜெயராஜ் அவர்களுடைய முகமலர்ச்சியில் விழாவிற்கு இலட்ச ரூபாய் சேர்ந்தால் எதிர்காலத்தில் இளைஞர்களுடைய முகமலர்ச்சியல் 10லட்சம் ரூபாய் சேர வேண்டும். சேருமா?

9. ஜெயராஜ் அவர்களைத் தேடி சகபேச்சாளர்கள் , நாதஸ்வர வித்துவான்கள், சங்கீத வித்துவான்கள், நிதியுதவி அளிப்போர்கள், இலக்கிய ஆர்வலர்கள் தினமும் கம்பன் கோட்டத்திற்கு வருகை தருகின்றார்கள். அதே போல் பிரசாந்தனைத் தேடி வர பிரசாந்தன் தன்னைத் தயார் செய்து கொள்ள வேண்டும்.
ஜெயராஜ் அவர்களிடமிருந்து சொற்பொழிவு மூலம் நாங்கள் பெற்றுக்கொள்ள வேண்டிய சமய, இலக்கியச் செய்திகள் இன்னும் ஏராளம் இருக்கின்றன. இசைக்கலைஞர்கள் சங்கீதக் கச்சேரிகளை 15 திருவிழாவில் ஒரு திருவிழாவிற்கு ஒருவர் என்ற வீதத்தில் நடத்தினாலும்அந்நிகழ்வுகள் மக்களைக் கவருவதில்லை. ஆனால் ஒரே ஜெயராஜ்தொடர்ந்து 45நாட்கள் மகாபாரதம், இராமாயணம் பேசினாலும் மக்கள் மத்தியில் அலுப்புத் தட்ட இடமில்லை.

* இன்று தமிழ் மக்களிடையே கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழ் வளர்க்கும் கழகமாகக் கம்பன் கழகம் ஒரு பிரமாண்டமான நிறுவனமாகக் காட்சி தருகிறது. இந்தக் கழகத்தில் எந்த விதமான தொய்வும் இல்லாமல் இப்போது உள்ள நிர்வாகத்துடன் இளைஞர்களும் சேர்ந்து தொடர்ந்து தமிழ்த் தொண்டு செய்ய வேண்டுமென்ற நோக்கத்தோடு இக் கடிதத்தை வரைந்தேன்.

* தற்சமயம் நிர்வாகம் மாறினாலும் உங்கள் சொற்பொழிவுத் துறை மாறக்கூடாது அதுவே என் விருப்பம். இக் கடிதத்தில் குறைகள் இருந்தால் மன்னியுங்கள்.
ஜெயராஜ் அவர்கள் தனது நிறைவுக் காலம் வரை இலக்கிய, சமய பேச்சாளராக இருக்க வேண்டும் என விரும்பும்

அன்புக்குரிய.
*ப.தயாபரன்.*
*(அமைப்பாளர், வடமராட்சிக் கம்பன் கழகம்)*

*ப.வே. இராமகிருஷ்ணன்,*
*கிழக்குப் பல்கலைக் கழகம்*
*வந்தாறுமூலை, செங்கலடி*
*28/02/95*

*அன்புள்ள ஜெயராசா அறிவது,*

உமது அன்பு வார்த்தைகளடங்கிய கடிதம் அண்மையில்தான் கிடைத்தது. நன்றி கூறும் அதே வேளையில் வேண்டிக் கொண்ட கட்டுரையை எழுதும் கால அவகாசம் போதாது எனக் கூறவும் வேண்டியிருக்கிறது. மன்னிக்க வேண்டும்.

மாணவர்கள் ஒன்று திரண்டு மட்டக்களப்பிலிருந்து மூலவளாகமாகிய வந்தாறு மூலைக்கு வந்து சேர்ந்து விட்டார்கள். ஒரு மாத காலமாகியும், குந்தியிருந்து எழுதுவதற்கு எனக்கென ஒரு மேசையில்லை. வீடு தேடிக் கொண்டிருக்கிறேன். மேலும் பலவித முட்டுக்கட்டைகளையும் அதிகார பீடத்தில் ஏறியவர்கள் போட்ட வண்ணமே இருக்கிறார்கள். ஒவ்வொரு கணமும் அற்பர்களோடு போராடிய வண்ணமே இருக்க வேண்டியிருக்கின்றது. ஆக்கப் பணிகள் யாவும் ஒத்திப் போட்ட நிலை.

எமது சமூகம் அதிகாரத்தையும் பயன்படுத்தத் தக்க பக்குவத்தை அடையவில்லை. ஆண்ட பரம்பரையென்பதை மறந்த நிலை. ஆளப்பட்டதுவே அண்மைக் காலமாகையால் களிம்பு பரவிய நிலை. விடுவிக்கப்பட வேண்டுமேயானால் துறவு பூண்டு உழவாரத்தைக் கையில் ஏந்த வேண்டும். அத்தகைய பக்குவத்தையே நாடி நிற்கின்றேன். "கற்றறிந்தவர்கள்" மன்னவனும் நீயோ....... எனும் நிறைவைப் பெற்றாலன்றி வழி காட்டும் பொறுப்பை ஏற்றலாகாது. வளர்ச்சி குன்றி குட்டையாகவே இருக்க நேரிடும். இதுவே மூல பிரச்சினை.

முன் பந்தியில் கூறப்படும் கருத்து ஏற்புடையதாகில், மலரின் பின் அட்டையில் ஒட்டிவிடவும்.

தம்பி உமது பணிகளை சில ஆண்டுகளாக அவதானித்த வண்ணமே இருக்கின்றேன். மிகவும் மெச்சத்தக்கவை. பராசக்தி கைவிட மாட்டாள்.

*நன்றி*

*அன்புள்ள*
**ப. வே. இராமகிருஷ்ணன்**

# கம்பன் கழக விழாக்களில் இடம்பெற்ற நிகழ்ச்சித் தலைப்புக்கள்.

கவியரங்கு

கம்பனைக் கையாண்ட பாத்திரங்கள்
அனுமான்
இராமன்
இராவணன்
இந்திரஜித்
வாலி

கவிஞர்களைக் கண்டொருநாள் கம்பன் கதைக்கின்றான்.
கம்பன் – வால்மீகி
கம்பன் – இளங்கோ
கம்பன் – பாரதி
கம்பன் – கண்ணதாசன்
கம்பன் – மகாகவி

கம்பனின் கவித்திறம் கண்டனம்

மூ அறம் காத்து நின்ற முறைமையைச் சொல்ல வந்தோம்
சொல் சொல்வதாக
இல் சொல்வதாக
வில் சொல்வதாக

கம்பன் தலைமையில் கவிஞர்கள் கூடி
நம் தமிழ்நாட்டின் நலிவுகள் சொல்வார்
கம்பன்
வள்ளுவன்
திருநாவுக்கரசர்
இளங்கோ
பாரதி
பாரதிதாசன்
கண்ணதாசன்

அறம் வெல்லும் என்ற கம்பன் அடியினை நினைக்க நெஞ்சில்
நகை வரும்
நாணம் தோன்றும்
வெகுளி பொங்கும்
வேதனை மிகுந்து நிற்கும்
சலிப்பே தோன்றும்
உரம் வரும்

தந்திரத்தால் கம்பனிலே தனியெழுத்தில் தலைப்பெடுத்து அந்தரங்கம் சொல்வோம் அதில்
நா ளை
வா ல
வு ம்
ரு ழ்
ம

தூதுக் கவியரங்கம்
வெம்பி விரக்தியுறல் விட்டு
விரைந்து போய்க்
கம்பனுக்குச் சொல் கவிதைத் தூது

– இ.போ.ச. பஸ்
– பதுங்கு குழி
– இடிந்த திரையரங்கு
– பெற்றோல் குப்பி
– தண்டவாளம்
– கற்பூரம்
– எரிந்த நூல் நிலையம்
– வெற்று மின் கம்பம்
– பொம்மர்
– வெடிக்காத 'ஷெல்'

தேர்வு நேர்காணல் கவியரங்கு
கம்பன் அரங்கில் கவிபாடும் உரிமையினை எங்களுக்குத் தாரும் இனி

வெம்பகை முடிக்கும் வீரர் பெருமையை
கம்பன் குறிகளால் காட்டிட முயலும் முயற்சி
எடுத்தது கண்டார் இற்றது கேட்டார்
ஆழநெடுந்திரை ஆறு கடந்திவர் போவாரோ
வெறுங்கையோடு இலங்கை புக்கான்
நன்மையும் தீமையன்றோ நாசம் வந்துற்றகாலை
கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றவன்
இன்றுபோய் போர்க்கு நாளை வா
வீரரை யார் வியவாதார்
இப்பித்தாய விலங்கின் ஒழுக்கினைப் பேசலாமோ?
கும்பிட்டு வாழ்கிலேன் யான்

ஏன் சிரித்தாய் என்னைப் பார்த்து

நவை மிகுந்த நானிலத்தின் நாற்றத்தை நல்மருந்தை
சுவைகுலுங்க சந்தத்தில் சொல்லுகிறோம் கேளீரோ

| | | |
|---|---|---|
| உறைப்பு | – | தன தானதந்த |
| புளிப்பு | – | தனத்தன தனத்தன |
| கசப்பு | – | தானதன தானதன தந்தான |
| உவர்ப்பு | – | தானதனத்தானா தனந்தான |
| துவர்ப்பு | – | தந்தானே தந்தானே |
| இனிப்பு | – | தந்தானே தான தனே |

காசில் ராமனைக் கண்டது பற்றிப் பேசாப்பொருட்கள் பேசினால்

| | |
|---|---|
| மிதிலைக் கொடி | மரவுரி |
| சிவதனுசு | கோதண்டம் |
| மாயமான் | பஞ்சவடி |
| பாதுகை | கங்கைப்படகு |

## விவாத அரங்கு

கம்பனும் தவறிழைத்தான்

## இளைஞர் விவாத அரங்கு

கம்பன் கவித்துவம் பெரிதும் வெளிப்படுவது
இன்பியற் காட்சிகளிலேயே!
துன்பியற் காட்சிகளிலேயே!

## நாடக அரங்கு

இன்று சந்திக்கும் இவர்கள்
விட்டணன் – இராவணன்
மண்டோதரி – சீதை
வாலி – சுக்கிரன்
இலட்சுமணன் – சத்துருக்கன்
இராமன் – சுர்ப்பனகை

படைத்தவனைச் சந்திக்கும் பாத்திரம்
சடையப்பர்
கூனி
கும்பகர்ணன்
இராவணன்
பரதன்
சத்துருக்கன்

கோல உரையாடல்
இவர்கள் சந்தித்தால்

| | | |
|---|---|---|
| கம்பன் | – | சடையப்பர் |
| | – | சோழன் |
| | – | பேராசிரியர் |
| | – | பெண் பிரதிநிதி |
| | – | கூனி |
| | – | கும்பகர்ணன் |
| | – | விடணன் |
| | – | வசிட்டர் |
| | – | விஸ்வாமித்திரர் |

இவர்கள் சந்தித்தால்
நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து

| | | |
|---|---|---|
| மணிவாசகர் | – | அப்பர் |
| | – | பாரதி |
| | – | அருணகிரிநாதர் |
| | – | திருவள்ளுவர் |
| | – | கம்பன் |

இசை நாடக அரங்கு

இன்று சந்திக்கும் இவர்கள்
இராவணன் – விபீஷணன்

